த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—525

# முதலாம் இராசேந்திர சோழன்



ஆசிரியர்

**ம. இராசசேகர தங்கமணி,** எம்.ஏ.,பி.டி.,

துணைப்பேராசிரியர், வரலாற்றுத்துறை,

அரசினர் கலைக்கல்லூரி, கரூர்,

திருச்சி மாவட்டம்.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதின்மூன்றாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத் தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக் கழகம் ஆண்டுதோறும் எடுத்து வரும் பெரு முயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல, தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் நாட்டுப் பாட நூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'முதலாம் இராசேந்திர சோழன்' என்ற இந்நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 525 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 560 நூல்கள் வெளிவந்துள்ளன. இந்நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை. ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெற வேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

## நூலாசிரியர் உரை

வரலாறு என்பது பழங்கால மன்னர்களின் கதைகளைத் தொடர்ச்சியாக ஒழுங்குபடுத்திக் கூறுவது என்ற நிலையினை நீக்கி, அவர்தம் அற, மறச் செய்திகளை அழகுடன் தொகுப்பதோடன்றி, வரலாற்றுச் சான்றுகளோடும் ஒரு சில உண்மைகளை வலியுறுத்த வேண்டு மென்னும் எண்ண எழுச்சியால், உலக வரலாற்றிலேயே கடல் கடந்த பல வெற்றிகளைப் பெற்றுக் குவித்ததோடன்றிக் கங்கை கடார வெற்றிகளையும், சீனம் காம்போசம் போன்ற பிற நாடுகளுடன் நட்புறவையும் கொண்டு, ஆட்சித் திறனோடு திகழ்ந்த மாமன்னன் முதலாம் இராசேந்திரனைப்பற்றி எழுதிய வரலாறே இந்நூல்.

சோழப் பேரரசின் பொற்காலத்தை உருவாக்கிய பெருமன்னர்களான இராசராசன், இராசேந்திரன் போன்ற பெருந்தகைகட்கு வலிமையான, விரிவான, உண்மையான வரலாற்றுச் செய்திகள் கிடைக்க வில்லை யெனினுங் கூட, அவர்கள் ஆற்றிய அரும்பெரும் பணிகள் அளவிடற் கரியன.

ஆயினுங்கூட, இன்றைய நிலையில் உண்மையான வரலாற்றைத் தெளிவு படுத்துவதற்குக் கலங்கரை விளக்கமாகத் திகழ்ந்தோங்கிச் செம்மாந்து நிற்கும் கல்வெட்டுகள், செப்புப் பட்டையங்கள், இலக்கண இலக்கிய நூல்கள் முதலியவற்றைக் கொண்டு யான் இவ்வரலாற்றினைக் கணித்துள்ளேன்.

இறுதியாக, இந்நூலைப் படைக்க எனக்கு வாய்ப்பளித்த தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தார்க்கும், இந்நூலின்கண் காணப்பெறும் படங்களை அளித்துதவிய தமிழ் நாட்டரசு தொல்லியல் துறையினர்க்கும் (Department of Archaeology, Government of Tamil Nadu) என் உளமார்ந்த நன்றி என்றென்றும் உரியதாகும்.

ம. இராசசேகர தங்கமணி

# பொருளடக்கம்

# 1. தமிழகமும் சோழரும்

தெவிட்டாத தெள்ளமுதாய்த் தித்திக்கும் தீந்தமிழைத் தாய்மொழியாகக் கொண்டு வாழும் மக்கள் நிலவிய நிலப் பரப்பே தமிழகம் என்று ஆன்ருேரால் வழங்கப்பெற்றது. இஃது உலகில் தொல்பெரும் நாடாகும். இங்குதான் முதன் முதலில் மக்கள் தோன்றினர் என்று வானநூல் வல்லுநரும், புவியியல் வல்லுநரும், தொல்லுயிர்நூல் வல்லுநரும் ஆராய்ந்து கூறு கின்றனர். தமிழகம் என்பது ஒரு காலத்தே தெற்கில் கடல் கொண்ட குமரிக் (இலெமுரியாக்) கண்டத்தின் தென் கோடியி லிருந்து விந்தியமலை வரையில் பரவிக் கிடந்த பெரு நிலப்பரப்பு என்று ஆராய்ச்சி யறிஞர்கள் குறித்துள்ளனர். ஒல்காப் பெரும் புலமைத் தொல்காப்பியர் காலத்தில் வடக்கில் வேங்கட மலை யும், தெற்கில் குமரியாறும், கிழக்கிலும், மேற்கிலும் கடல் களும் இதன் எல்லைகளாக இருந்தன. இதனை

‘ வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம் ’[1]

என்ற பனம்பாரனுர் பாடலாலும்,

‘ வேங்கடம் குமரித் தீம்புனல் பௌவமென்று
இந்நான் கெல்லை தமிழது வழக்கே ’

என்ற இசை நுணுக்கம் இயற்றிய சிகண்டியார் பாட்டினுலும் அறியலாம். தொல்காப்பியர் காலத்திற்குப் பின்னர் நேர்ந்த கடற் கோளால் பஃறுளியாறும், பலவாய மலைத் தொடர்களும், குமரி மலையும் கடலுள் அமிழ்ந்ததால் தமிழகத்தின் எல்லை குமரி ஆருயிற்று. இதனைப்

‘ பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள ’[2]

[1] தொல்காப்பியம்-எழுத்ததிகாரம்-சிறப்புப் பாயிரம்

[2] சிலப்பதிகாரம் — 2-11; 19-22.

என்ற செந்தமிழ் வித்தகர் இளங்கோவடிகளின் கூற்றால் அறியலாம்.

இவ்வெல்லைக்குள் வாழ்ந்த தமிழ்மக்கள் ஒரு காலத்தில் இந்தியப் பெருநிலப் பகுதி முழுவதும் பரவி யிருந்தனர்; இந்தியாவிற்கு வெளியிலும் சென்று தங்கள் நாகரிகத்தையும், பண்பாட்டையும் மற்றையோரிடத்து நிலைநிறுத்தினர்; கடல் கடந்து வாணிகம் செய்து, வெளி நாட்டினருடன் தொடர்பு கொண்டிருந்தனர்.

'ஆரியர்கள் இந்தியாவின்மேல் படையெடுப்பதற்கு மூவாயிரம் அல்லது நான்காயிரம் ஆண்டுகளுக்கு முன் திராவிட இனம், இந்திய நிலப்பரப்பு முழுவதிலும் பரவியிருந்ததோடல்லாமல், ஆசியா, பாரசீகம் ஆகிய பகுதிகளிலும் பரவியிருந்தது,' என்று டி. சி. குலாசட் பாதிரியார் (Rev. Fr. T. C. Closset. S J.) கூறுகின்றார். இக்கருத்தினை அறிஞர் எஃ. லினார்மென்ட் (F. Lenormant) அவர்களும், நம் நாட்டு வரலாற்றறிஞர்களான ஆர். சி. மசும்தார், எச். சி. இராய் சவுத்திரி, கே. தத்தா போன்றவர்களும் ஏற்றுக்கொள்கின்றனர். இத்திராவிட இனத்தவரே தமிழர்கள் என்பது வரலாற்று ஆசிரியர்கள் கருத்தாகும். ஒரு காலத்தில் திராவிடர்கள் பஞ்சாப், சிந்து, பலுசிஸ்தான் முதலிய பகுதிகளடங்கிய இந்தியா முழுவதும் வாழ்ந்திருந்து, படிப்படியாக மெசப்படோமியாவிலும் குடியேறினர் என்று இயம்புகின்றனர். பலுசிஸ்தானத்தில் வாழும் பிராகுவி மக்களால் இன்றும் திராவிட மொழி பேசப்படுவதொன்றே இக்கூற்றினை வலிவுடைய தாக்குகிறது, என்று மசும்தார், சவுத்திரி, தத்தா ஆகியோர் 'முற்போக்கு இந்திய வரலாறு' (An Advanced History of India) என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளனர்.

சிந்துவெளி நாகரிகம் திராவிடர்களின் நாகரிகம் என்று வணக்கத்திற்குரிய ஈராசுப் பாதிரியார், சர்ஜான் மார்சல் போன்ற அறிஞர்களால் சான்றுகளுடன் விளக்கப்பட்டிருத்தலால், தமிழர்கள் இற்றைக்கு ஏறத்தாழ 5000 ஆண்டுகட்கு முன்பே இந்தியா முழுவதும் வாழ்ந்து வந்தமை இனிது விளங்கும். முன்னொரு காலத்தில் இமயம் முதல் குமரிவரை தமிழ் மொழியே பரவியிருந்த தென்பது அறிஞர்கள் கருத்தாகும். இக்கருத்தினையே,

'சதுர்மறைஆ ரியம்வருமுன் சகமுழுதும் நினதானால்
முதுமொழிநீ அநாதியென மொழிகுவதும் வியப்பாமே'

என்று மனோன்மணீய ஆசிரியரான பேராசிரியர் சுந்தரம் பிள்ளையும் குறிப்பிடுகின்றார்.

தமிழ்நாடு நீண்ட, நெடிய, அழகிய கடற்கரை யுடையது. சோழ நாட்டுக் கடற்கரை, சோழமண்டலக்கரை யென்றும், பாண்டி நாட்டுக் கடற்கரை முத்துக்கரை யென்றும், சேர நாட்டுக் கடற்கரை மேல்கரை யென்றும் அழைக்கப் பெற்றன. தமிழகம் முக்கடலால் சூழப் பெற்றிருத்தலின், புலவர் பெரு மக்கள், 'இமிழ்கடல் வேலித் தமிழகம்' எனவும் 'இமிழ் கடல் வரைப்பின் தமிழகம்' எனவும் போற்றினர்.

பண்டைத் தமிழர்கள், 'அலைகடல் நடுவுள் பலகலம் செலுத்தி' உரோம், சீனம், பாரசீகம், ஈழம், மலைநாடு, சிறிய-ஆசியா, எகிப்து ஆகிய கடல் கடந்த நாடுகளுடன் வாணிபம் நடத்தினர் என்பது உலகறிந்த உண்மை. தமிழர் கப்பற் படையைச் செப்பம் செய்து சாவகம், புட்பகம், கடாரம், ஈழம் போன்ற நாடுகளை வென்று திக்கெட்டும் வெற்றிக் கொடி நாட்டிய மறக்குடி மக்கள் என்பதும், தமிழிலக்கியங்களால் அறியக் கிடக்கின்றன.

'கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன் தோன்றிய' இம் முது மக்கள் முதிர்ந்த நாகரிகமும், தனித்த கலாச்சாரமும், பண்பட்ட வாழ்க்கையும், கடல் கடந்த வாணிகச் சிறப்பும், 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற பரந்த கொள்கையும், விரிந்த மனப்பான்மையும் கொண்டு வீரப் பெருமக்களாக வாழ்ந்தனர் என்பது உள்ளங்கை நெல்லிக்கனியென இனிது விளங்கும்.

இத்தமிழகத்தைக் குடபுலம், குணபுலம், தென்புலம் [1] என்று மூன்று பகுதிகளாகப் பகுத்துத் தொன்மைக் காலம் முதல் ஆட்சி புரிந்து வந்தோர் சேர, சோழ, பாண்டியராவார். இம்மூன்று மண்டலங்களும் தலைகீழான ஆய்தவெழுத்தின் வடிவில் (ஃ) அமைந்திருந்தவை என்பது ஈண்டு நினைவிற் கொள்ளத் தக்க தாகும். மேற்கில் இருப்பதால் சேர நாடு குடபுலம் என்றும், அதற்குக் கிழக்கே அமைந்திருப்பதால் சோழ நாடு குணபுலம் என்றும், இவ்விரண்டற்கும் தெற்கில் அமைந்து கிடப்பதால் பாண்டிய நாடு தென்புலம் என்றும் வழங்கப்பட்டன. இத்தகைய தமிழகத்தை ஆசிரியர் தொல் காப்பியனார், 'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு' [2] என்று

[1] சிறுபாணாற்றுப்படை-47, 49, 63.

[2] தொல்காப்பியம்-பொருள்-செய்யுளியல்: சூத்திரம்-79.

சிறப்பித்துள்ளார். சேர, சோழ, பாண்டியர்களாகிய இம் மூவரும் முடி புனைந்து ஆட்சி செலுத்தியமையால் முடியுடை மூவேந்தர் என அழைக்கப் பெற்றனர்.

இம் மூன்று பிரிவுகளுள், சேர நாடு என்பது மேலைக் கடலுக்கும், மேலை மலைத் தொடருக்கும் இடையில் அமைந்த நிலப் பரப்பாகும். இது திருவாங்கூர் கொச்சி நாடுகளையும், மலையாள மாவட்டத்தையும் கொண்ட நிலப்பரப்பாகும். வஞ்சி மாநகர் சேர நாட்டின் தலைநகராகவும், முசிறியும், தொண்டியும் துறை முகங்களாகவும் விளங்கின. இது மலை நாடென்றும் அழைக்கப் பெற்றது. வில் சேரர்களின் கொடியாகவும், அரசியல் இலச்சினையாகவும் விளங்கியது. பனம் பூ இவர்களது அடையாள மாலையாகும். 'வேழமுடைத்து மலை நாடு' எனச் சேரநாடு ஆன்றோரால் போற்றப்பெற்றது. இந்நிலப்பரப்பில் ஆட்சி செலுத்தியவர் சேர மன்னர் ஆவர்.

பாண்டிய நாடு வெள்ளாற்றிற்கும் தென் குமரிக்கும் இடையே விரிந்து கிடந்த நிலப் பரப்பாகும். இது தற்போதுள்ள மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி ஆகிய மாவட்டங்களைக் கொண்டது. மதுரை பாண்டிய நாட்டின் தலைநகரமாகும். கொற்கையும், தொண்டியும் அதன் துறைமுகப் பட்டினங்கள். மீன் இவர்களின் இலச்சினையும், கொடியும் ஆகும். இவர்கள் வேப்பம் பூ மாலையை அடையாள மாலையாகக் கொண்டனர். 'பாண்டி நாடு முத்துடைத்து' எனச் சான்றோரால் போற்றப் பெற்றது. இப்பகுதியினைப் பாண்டிய மன்னர்கள் ஆண்டு வந்தனர். இவர்கள் சங்கம் வைத்துக் கண்ணும் கருத்துமாகத் தீந் தமிழைப் போற்றி வந்தனர்.

சோழர், முடியுடை மூவேந்தருள் நடுவண் வைத்துப் போற்றப்படுகின்றனர். சோழ நாடு வடக்கே வேங்கடம் முதல் தெற்கே புதுக்கோட்டைக்கு அண்மையிலுள்ள வெள்ளாறுவரையிலும் அமைந்துள்ள செழுமையான நிலப்பகுதி யாகும். சோணாட்டின் எல்லை காலத்துக்குக் காலம் மாறிக்கொண்டிருந்ததால் இதனை அறுதியிட்டு உறுதியாகக் கூற இயல வில்லை. இருப்பினும் தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ள வட வெள்ளாற்றுக்குத் தெற்கும், புதுக்கோட்டைச் சீமையில் பாயும் தென் வெள்ளாற்றுக்கு வடக்கும், மருவூரைச் சார்ந்த கோட்டைக் கரைக்குக் கிழக்கும், வங்கக் கடலுக்கு மேற்கும் ஆகிய எல்லைகட் குட்பட்ட நிலப் பரப்பே சோழ மண்டல மாகும். இதைக் கீழ்க் காணும் வெண்பாவால் அறியலாம்.

'கடல்கிழக்குத் தெற்குக் கரைபொரு வெள்ளாறு
குடதிசையிற் கோட்டைக் கரையாம்-வடதிசையில்
ஏணாட்டுப் பண்ணை யிருபத்து நாற்காதம்
சோணாட்டுக் கெல்லையெனச் சொல்'

இக் காலத்திய தஞ்சாவூர், திருச்சி மாவட்டங்களும், தென் ணர்க்காடு மாவட்டத்தில் உள்ள வெள்ளாற்றுக்குத் தென் பகுதியும், இச்சோழ மண்டலத்தில் அடங்கும்.

சோழ மன்னர்கள் உறையூர், காவிரிப்பூம்பட்டினம், திருவாரூர், பழையாறை, தஞ்சை, கங்கைகொண்ட சோழ புரம் ஆகிய நகரங்களிலிருந்து ஆட்சி செய்தனர். காவிரிப்பூம் பட்டினமும், நாகப்பட்டினமும் சோணாட்டுத் துறைமுகங் களாகும். உறையூர் பண்டைக் காலத்தில் 'உறந்தை' என்றும் கோழியூர் என்றும் அழைக்கப் பெற்றது. 'ஊரெனப் படுவது உறையூர்' என்று புலவர் பெருமக்களால் பாராட்டப் பெற்றதால் அதன் சிறப்பினை நாம் நன்குணரலாம். காவிரிப்பூம் பட்டினம் அழகிற் சிறந்த கடற்கரை நகரமாக விளங்கிய தாதலின் பூம்பட்டினம் எனவும், காவிரியாறு கடலுடன் புகு மிடத்தில் அமைந்த நகராதலின், 'காவிரி புகும் பட்டினம்' எனவும், பகைவர் எளிதிற் புகாராதலின் 'புகார்' எனவும், பூம்புகாரின்கண் வாழ்பவர் வேறு எங்கும் குடி பெயரப் புகார் என்பதால் 'புகார்' எனவும் வழங்குவதாயிற்று. இதனைப்

'பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய
பொதுவறு சிறப்பிற் புகாரே யாயினும்'

எனச் சிலப்பதிகார ஆசிரியர் கூறுகின்றார். அழகொடு விளங்கி யமையின் பூம்புகார் எனவும் அழைக்கப் பெற்றது. புலிக்கொடி சோழர்களின் கொடி. இதுவே அவர்களது அரசியல் இலச் சினையும் ஆகும். ஆத்திப்பூ சோழ மன்னர்கள் அணியும் அடை யாள மாலை யாகும். 'சோழர்' என்னும் சொல்லின் பெயர்க் காரணம்பற்றிப் பல்வேறுபட்ட கருத்துகள் நிலவுகின்றன. கர்னல் செரினி (Col. Gerini) அவர்கள் 'சோழ' என்னும் சொல்லை வடமொழியிலுள்ள காலா (கறுப்பு) என்ற சொல்லு டனும், ஆரியர்கள் இந்தியாவிற்கு வருமுன்னர் தென்இந்தி யாவில் வாழ்ந்து வந்த கருநிற மக்களைப் (Dasyus or Black-skimmed) பொதுவாகக் குறிப்பதற்குப் பயன்பட்ட 'கோலர்' என்னும் சொல்லுடனும் தொடர்புபடுத்துகின்றார். ஒரு சிலர் இச் சொல் 'சோளம்' என்னும் சொல்லின் அடிப்படையினை யுடைய தென்றும், வேறு சிலர் வடமொழியிலுள்ள 'சோரா' (திருடன்) என்னும் சொல்லினின்று பிறந்த தென்றும் கருது

கின்றனர். திராவிடமொழி யாராய்ச்சி வல்லுநர் திரு. ஞா. தேவநேயப் பாவாணர் அவர்கள் 'சோழர்' எனும் சொல் 'சொல்' என்ற சொல்லினின்றும் பிறந்ததாகக் குறிக்கின்றார். 'சொல்' என்றால் நெல் என்பது பொருள். பாவாணர் அவர்களின் கருத்து அறிஞர் பலரால் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. மாமன்னன் அசோகன் கல்வெட்டுகளிலும், சாளுக்கிய மன்னர்களின் தெலுங்குக் கல்வெட்டுகளிலும் 'சோழ' என்பது 'சோட' எனவும், இன்றைய தெலுங்கு மொழியில் 'சோள' எனவும் குறிக்கப் பெறுகின்றது. சீனப் பயணியான யுவான் சுவாங் சோழரைச் 'சொலிய' எனவும், தாலமி 'சோரை' எனவும் குறிப்பிட்டுள்ளனர். எனவே, 'சோழ' என்னும் சொல்லின் பெயர்க் காரணத்தை நாம் அறுதியிட்டு உறுதியாகக் கூறவியல வில்லை.

சோழர் குடியினர் 'ஞாயிறு' குலத்தினர் என்பது சங்கச் சான்றோர் கருத்து. தமிழணியாம் மணிமேகலையை இயற்றிய தண்டமிழ் ஆசான் சாத்தனாரும்

'செங்கதிர்ச் செல்வன் திருக்குலம் விளக்கும்
கஞ்ச வேட்கையிற் காந்தமன் வேண்ட'[1]

என்று சோழ குலத்தைக் குறிப்பிடுவதனால் இதனை நாம் தெள்ளிதின் உணரலாம். 'கம்ப இராமாயணமும், கலிங்கத்துப் பரணியும், ஒட்டக்கூத்தர் பாடிய உலாக்களும் இக் கருத்தை வலியுறுத்தும். ஞாயிற்றுக் குலத்தில் சோழன் என்ற ஒரு மன்னன் தோன்றினான் எனத் திருவாலங்காட்டுச் செப்பேடுகளும், நாகப்பட்டினச் செப்பேடுகளும், கன்னியாகுமரிக் கல்வெட்டும் குறிப்பிடுகின்றன. எனவே, சோழன் என்பது முன்னோன் ஒருவனின் இயற்பெயராய் அமைந்து, பின்னர் அவனது மரபிற் பிறந்தோர்க்குக் குடிப் பெயராய் வழங்கி வந்திருக்க வேண்டும். இதைக்

'குடிப்பெய ராவன கூறுங் காலைச்
சேரன் சோழன் பாண்டியன் என்றிப்
போல்வன பிறவும் பொருத்தங் கொளலே'

என்னும் பன்னிரு பாட்டியற் சூத்திரத்தாலும் அறியலாம்.

இச்சோழர் குடியினர் வளவன், செம்பியன், சென்னி, கிள்ளி, நேரியன், நேரிவெற்பன், பொன்னித் துறைவன், ஆரின் மாலையன், அபயன், கோழி வேந்தன், புலி யுயர்த்

[1] *மணிமேகலை - பதிகம்-வரிகள் - 9-10.*

தோன், சூரியன், புனனுடன், மால் என வேறு பெயர்களாலும் அழைக்கப்பட்டனர் என்பதைத் தமிழ் இலக்கியங்களால் அறிகிருேம். மண்ணைப் பொன்னுக்கும் பொன்னியாறு பாய்ந்து வளப்படுத்தும் சோழ வளநாட்டை ஆண்டதால் இவர்கள் 'வளவன்' என்றும், நிலத்தைக் கிள்ளிப் (தோண்டிப்) பண்படுத்திப் பயிர்த்தொழில் செய்து வந்தமையால் 'கிள்ளி' யென்றும், அறமுறை பிறழாது முறை செய்து, அறத்தின் திருவுருவாய் விளங்கிய சிபி மன்னனின் மரபினராதலால் 'செம்பியன்' என்றும் அழைக்கப் பெற்றனர். 'சென்னி' என்பது யாவருக்கும் தலையாயவன் என்ற பொருளில் வழங்கப் பெற்றிருக்க வேண்டும். சென்னி என்பதற்குத் தலை என்பது பொருள்.

சோணுடு சமவெளிப் பகுதி யாகும். இந்நாட்டில் ஆங் கொன்றும், ஈங்கொன்றுமாகச் சில குன்றுகள் காணப்படு கின்றன. பெருமலைத் தொடர்களையும், அடர்ந்த காடுகளையும் காண்பதரிது. வான் பொய்ப்பினும் தான் பொய்யாத காவிரி யாறும், கொள்ளிடமும், வெள்ளாறும், வெட்டாறும், அரசி லாறும், முடிகொண்டான் ஆறும், வடவாறும், வீர சோழன் ஆறும் பாய நீர் வளமும், நில வளமும் பெற்று விளங்குவதால் இந்நாடு வள நாடு எனப்பட்டது. எனவே தான் மூதறிஞர் ஔவைப் பிராட்டியும் 'மேதக்க - சோழ வளநாடு சோறு டைத்து' என்று கூறிச் சோணுட்டில் சோற்றுப் பஞ்சமில்லை என்பதைச் சுட்டிக் காட்டுகின்ருர். தமிழ் நாவலர் சரிதையில் 'தண்ணீரும் காவிரியே, தார்வேந்தன் சோழனே, மண்ணு வதும் சோழ மண்டலமே' என்று கூறப்பட்டிருப்பதால் சோணுட்டின் வளப்பத்தையும், செல்வச் செழிப்பையும் நாம் நன்கறியலாம்.

'பொன்னி யன்ன கங்கை' எனப் போற்றப் பெற்ற காவிரி, குடகு நாட்டிற் பிறந்து, பல நாடுகள் வழியாகப் பாய்ந்து வந்தாலும், சோழ நாட்டிற்குள் வரும்போது எண்ணற்ற கிளை யாறுகளை உண்டாக்கிச் சோழ நாட்டை வள நாடாக்குவதால் புலவர்கள் இதனைச் சோழ நாட்டிற்கே உரிமையுடையதாய்ப் பாராட்டுகின்றனர். தண்டமிழ்ச் சாத்தனுரும் மணிமேகலை யில்,

'பாடல்சால் சிறப்பிற் பரதத்து ஓங்கிய
கோடாச் செங்கோல் சோழர்தம் குலக்கொடி'

என்றும், தீந்தமிழ்க் காவலர் இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்

தில் 'சோழர்தம் தெய்வக் காவிரி' என்றும் போற்று கின்றனர்.

காவிரி பாய்ந்து வளப்படுத்துவதால் சோழ நாடு 'காவிரி நாடு', 'காவிரி புரக்கும் நாடு', 'காவிரி சூழ் நாடு', 'புனல் நாடு' என்றெல்லாம் ஆன்ரேரால் அழைக்கப் பெறு வதாயிற்று.

இத்தகைய நீர் வளமும், நில வளமும் பெற்றிருந்தமை யால் நாடெங்கணும் மாஞ் சோலைகளும், பூஞ் சோலைகளும், வாழைத் தோட்டங்களும், வெற்றிலைத் தோட்டங்களும், செந்நெல் வயல்களும், செழுங் கரும்புத் தோட்டங்களும், பச்சைப் படாம் விரிந்தாற் போன்றமைந்துள்ள வயற் பரப்பும், இயற்கைச் சூழலில் அமைந்த மருத நிலச் சிற்றூர்களும், கண்ணைக் கவர்ந்து, மனத்தைக் கவரச் செய்யும் காட்சி களாகும். விண்முட்டும் தென்னஞ் சோலைகளையும், கமுகு மரங் களையும் விஞ்சுகின்ற அளவிற்கு மேக மண்டலத்தை ஊடுருவி நிற்பன போலக் கோவில்களின் கோபுரங்கள் ஆங்காங்கே காட்சியளிக்கும் அழகும் சோழ நாட்டின் கண்கொள்ளாக் காட்சியாகும். கண்ணையும், கருத்தையும் கவரும் இக் கோயில்கள் கலைக் கருவூலங்களாகவும், ஆடற் பாடற் கலைகளின் நிலைக்களனாகவும் சிற்ப ஓவியக் கலையின் இருப்பிடமாகவும் விளங்குவது மகிழ்ச்சிக்குரிய ஒன்றாகும்.

சேர, சோழ, பாண்டியர் என்ற முடியுடைய மூவேந்தர் களும் தொன்று தொட்டு மேம்பட்டு வந்த பழங்குடிகளாவர்.

> 'வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
> பண்பிற் றலைப்பிரித லின்று'[1]

என்னும் குறளுரையில் 'பழங்குடி' என்பதற்குத் தமிழ்க் கடலும், வடசொற் கடலும் நிலைகண்டுணர்ந்த பரிமேழலகர் 'சேர, சோழ, பாண்டியர் என்றாற் போலப் படைப்புக் காலந் தொடங்கி மேம்பட்டு வருங்குடி'[2] என்று பொருளுரைக் கின்றார். எனவே, சோழர் எக்காலத்து ஆட்சியுரிமை பெற் றனர் என்றோ, எவ்வேந்தரால் இதன் ஆட்சி முதன் முதலில் தொடங்கப்பெற்றது என்றோ, எவராலும் அறிந்து கொள்ள இயலாத அத்துணைப் பழமை வாய்ந்த குடியினர் என்பது பெறப்படுகின்றது. எனவே, தமிழக மூவேந்தர்கள்

[1] திருக்குறள்-குடியுரிமை-5

[2] திருக்குறள் - குடிமை - 5 - பரிமேலழகர் உரைக் குறிப்பு

வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட காலத்தே சிறந்து விளங்கினர் என்பது தெளிவு.

இந்தியாவின் ஆதி இதிகாசங்களாகக் கருதப்படும் வான்மீகி இராமாயணம், வியாச பாரதம் போன்ற வடமொழிக் காவியங்களில் சோழர்களைப் பற்றிய குறிப்புகள் காணக் கிடைக்கின்றன.

கி. மு. ஐந்தாம் நூற்ருண்டில் இயற்றப் பெற்றதாகக் கருதப்படும் தொல்காப்பியத்தில் சோழர்களைப் பற்றிய செய்திகள் காணக் கிடைக்கின்றன.

சத்தான கருத்துரைத்த புத்த பகவானின் முற் பிறவிகளைப் பற்றிக் கூறும் சாதகக் கதையொன்றில்,[1] சோழரின் 'தமிலா' ராஜ்யம் அதன் தலைநகரான காவிரிப் பூம்பட்டினம் ஆகியவை பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

இந்திய நாட்டின் பெரும் பகுதியினை வென்று தன்னுட்சிக் குட்படுத்தியவனும், கி. மு. மூன்ரும் நூற்ருண்டில் ஆண்ட மாபெரு மன்னனுமான அசோகன் காலத்திய கல்வெட்டுகளில் இத் தமிழகம் அவன் ஆட்சிக்குட்படாமல் மூவேந்தர்க்கே உரிய தனி நாடாய் விளங்கிய செய்தி குறிக்கப் பெற்றுள்ளது.

கி. பி. முதல் நூற்ருண்டில் மேனுட்டிலிருந்து தமிழகம் வந்த யவன ஆசிரியனுன 'தாலமி' என்பவனது வரலாற்றுக் குறிப்பிலும், 'பிளினி'யின் குறிப்பிலும் சோழர் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

மேனுட்டு அறிஞன் ஒருவனுல் எழுதப்பட்ட 'பெரிப்ளூஸ்' என்னும் கடற் செலவு நூலிலும் சோழர் பற்றிய செய்திகள் குறிக்கப் பெற்றுள்ளன.

கிரேக்கர், உரோமர், சீனர், சிங்களர் போன்ற வெளி நாட்டினர் சோழருடன் வாணிபம் நடத்திய செய்தி நம் சங்க இலக்கியங்களிற் புலனுகின்றது. நம் நாட்டில் அதிக அளவில் கிடைக்கப் பெற்ற பழங்கால வேற்று நாட்டினர் நாணயங்களினின்றும் சோழரின் மேம்பட்ட கடல் வாணிகம் பற்றியும், சோழரின் தொன்மை பற்றியும் அறிகிருேம்.

[1] The Jatakas. Vol. V. Page-150.

மேற்கூறிய சான்றுகளால் சோழரின் தொன்மையும், சிறப்பும் விளங்கும். பழமை மிக்க சோழர் வலிமை மிக்க பெரும்படையை நிருவகித்து, வாளாண்மையால் பகைவரை வென்று, வேளாண்மையால் வளம் பெருக்கி, வாணிகம் போற்றி அறமுறை பிறழாது ஆட்சி நடத்தி, மக்களைக் காத்துத் தாய் மொழியாம் தமிழ் மொழிக்கு ஆக்கமும், ஊக்கமும் அளித்துச் சமயத் திருப்பணிகள் செய்து, கலைகளைக் கண்ணெனப் போற்றி வளர்த்து,

> ‘முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
> இறையென்று வைக்கப் படும்’[1]

என்ற வளமார்ந்த வள்ளுவனின் வாய்மொழிக்கு இலக்கியமாகத் திகழ்ந்தனர் என்பதை எண்ணுந் தொறும், எண்ணுந் தொறும் பெருமகிழ்ச்சி யடைகிறோம்.

[1] திருக்குறள்-388

## 2. சோழர் வரலாற்றுக்குரிய ஆதாரங்கள்

மக்களினத்தின் கதையைக் கற்பனை கலவாது, ஒழுங்கு படுத்திக் காலவரையறையின் அடிப்படையில் கூறுவது வரலாருகும். பழமையின் நாட்குறிப்பே வரலாற்று ஏடு. இப் பழமையினைக் கூறச் சான்றுகள் தேவைப்படுகின்றன; சான்றில்லையேல் வரலாற்று ஏடு கட்டுக்கதையாகி விடும். எனவே, வரலாற்ருசிரியன் உண்மை நிகழ்ச்சிகளை, வரலாற்று மூலங்களை விருப்பு, வெறுப்பின்றித் தொகுத்துக் காலவரையறையின் அடிப்படையில் முறைப்படுத்தி வரலாற்று ஏட்டினைப் படைக்கிருன்.

நம் நாட்டின் பண்டைய வரலாற்றினைத் தெளிவாக உருவாக்கப் போதிய ஆதாரங்கள் இல்லையென்பது யாவரும் அறிந்த உண்மை. உலகம் போற்றும் இலக்கியங்கள் பல படைத்த நம் முன்னேர் வரலாற்று நிகழ்ச்சிகளை முறையாகக் குறிக்க மறந்தனர். எனவேதான் 'இந்துக்கள் முறையான வரலாற்று நிகழ்ச்சிகளில் நாட்டம் செலுத்துவ தில்லை; நிகழ்ச்சிகளைக் கால வரையறையுடன் தொடர்ச்சியாக எழுதுவதில் கவனம் செலுத்துவ தில்லை' என்று முஸ்லீம் அறிஞர் அல்பிருனி நம் நாட்டு வரலாறு பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

இதனுல், நம் முன்னேர்களுக்கு வரலாற்றுணர்வே இல்லை என்று நாம் கூற இயலாது. மேலை நாடுகளைப் போல், நம் நாட்டில் பண்டைய வரலாற்றை உருவாக்கத் தேவையாக எழுதப் பெற்ற ஆதாரங்கள் மிகுந்த அளவில் கிடைக்கப் பெறவில்லை.

மேலை நாட்டு வரலாற்றினையும், நம் நாட்டு வரலாற்றினையும் ஆய்ந்தறிந்த மாமேதை பேரறிஞர் அண்ணு அவர்கள்

'ஒரு மன்னனுடைய மகன் யாரென்று சரித்திரப் புத்தகங் களைப் புரட்டினுல் வரகுண பாண்டியன் மகன் இரண்டாம் வர குண பாண்டியன் என்று போட்டு, 'இது இல்லை என்பாரும் உண்டு' என்று அடியிலே குறிப்புத் தரும் வகையில் குழப்ப மான வரலாற்றை வைத்திருக்கிருேம். நம்முடைய தமிழ்ப் பண்புக்கு ஏற்றபடி நம்முடைய அருமை, பெருமைகளை நாம் குறித்து வைக்கின்ற பழக்கத்தை நெடுங் காலமாக இழந்து விட்டோம். இன்றைய தினம் உரோம் நாட்டு வரலாற்றை நீங்கள் துருவிப் பார்க்க வேண்டு மென்ருல் ஜூலியஸ் சீசர் அணிந்து கொண்டிருந்த கால் செருப்பின் அளவிலே யிருந்து கிளியோபாட்ரா அணிந்திருந்த காதணி வரை வரலாற்றுக் குறிப்பு உண்டு. ஆனுல், தமிழகத்தின் வரலாற்றை நீங்கள் பார்க்க வேண்டுமானுல், இந்த மண்டலத்திலே ஆண்டு கொண் டிருந்த மன்னன் இன்னுருடைய மகன் என்று கூறுவதற்கு இரண்டு, மூன்று வரலாற்ருசிரியர்களும், நான்கைந்து தமிழ்ப் புலவர்களும், பத்துப் பதினைந்து திங்கள் சேர்ந்து உட் கார்ந்தாலும் ஆளுக்கொரு செய்தியைத்தான் தர முடியுமே தவிர, அத்துணைப் பேரும் ஒத்த கருத்தைத் தர முடியாத நிலை யிருக்கிறது. அதற்குக் காரணம் புலவர்களிடையே புலமைக் குறை என்ற அர்த்த மல்ல! நம்முடைய முன்னேர்களுடைய செயல்களைக் குறித்து வைப்பது இழுக்கு என்ற தவருன கருத் திலே குறித்து வைக்காமல் போய் விட்டார்கள்' என்று வருந் திக் குறிப்பிடுவதால் நம் முன்னேர்கள் வரலாற்று நிகழ்ச் சிகளை முறையாகக் குறிப்பிடாமை நமக்கொரு பெருங்குறையே யாகும்.

நம் முன்னேர் வரலாற்று ஆதாரங்களை முழுக்க முழுக்க முறையாகக் குறித்து வைக்க வில்லை யெனினும் தம் இலக்கி யங்களில் ஒரு சில வரலாற்று நிகழ்ச்சிகளை அங்கொன்றும், இங்கொன்றுமாகக் குறித்து வைக்கத் தவற வில்லை. இருப்பி னும் முறையான தமிழ் நாட்டு, தென்னுட்டு வரலாற்று நூல் கள் அதிக அளவில் வெளி வர வில்லை.

நம் தமிழக வரலாறு பெரும் பாலான வரலாற்று அறிஞர் களால் புறக்கணிக்கப் பட்டுள்ளது. மேலை நாட்டு வரலாற்று ஆசிரியர்கள் தங்கள் நூல்களில் தமிழ் இனத்திற்குத் தக்க இடம் தர வில்லை. அவர்கள் கண்ணுக்குப் பட்டிருப்பவை யெல்லாம் விந்திய சாத்பூரா மலைகளுக்கு வடபால் நிலவும் இந்திய நிலப் பரப்பும், அதில் வாழ்ந்த உயிரினங்களுமே யாகும்.

இந்திய வரலாற்றில் தென்னகம் புறக்கணிக்கப்பட்டுள்ள அவல நிலையினை வரலாற்றறிஞரான திரு. வின்சன்ட் ஸ்மித் அவர்கள் கீழ்க் கண்டவாறு குறிப்பிடுகின்றார். 'இற்றை நாள் வரை பெரும்பாலான பண்டைய இந்திய வரலாற்றறிஞர்கள் தென்னகம் என்ற ஒன்று இல்லை யென்றே கருதினர்.'

இந்நிலையைக் கண்ணுற்ற தமிழ் நாட்டு முன்னாள் ஆளுநர் மாண்புமிகு ஸ்ரீ. பிரகாசா அவர்களும், தென்னாட்டு வரலாற்று மேதை திரு. கே. கே. பிள்ளை அவர்களின் 'தென்னிந்திய வரலாறு' என்னும் நூலுக்குத் தந்துள்ள அணிந்துரையில் கீழ்க் கண்டவாறு கூறியுள்ளார். 'உண்மையில் என்னைப் போன்ற வட இந்தியாவைச் சார்ந்தவர்களுக்குத் தென்னாட்டைப்பற்றிப் போதிய அறிவு கிடையாது. மேலும், இதுகாறும் தோன்றிய இந்திய வரலாற்று நூல்கள் பெரும்பாலும் வட இந்தியாவைப்பற்றி மட்டுமே கூறியுள்ளன. தென்னாட்டில் தொன்று தொட்டே நிலவி வந்த பண்பாட்டையும், பண்டைய மக்களின் வீரச் செயல்களையும், கலைத் திறனையும் அவர் அறவே மறந்தனர் போலும்'. எனவே, தமிழ் நாட்டு வரலாற்றினையும், சோழர் வரலாற்றினையும் முறையாகத் தொகுத்தல் தமிழரின் தலையாய கடனாகும்.

சோழர் வரலாற்றின் மூலங்கள் பல வகைப்படும். அவற்றுள் கல்வெட்டுகள், செப்பேடுகள், பழம் பொருள் சின்னங்கள், புதை பொருள்கள், இலக்கியங்கள், நாணயங்கள், அயல் நாட்டினர் குறிப்புகள் போன்றவை குறிப்பிடத் தக்கனவாகும். இருப்பினும் சோழர் வரலாறுபற்றி அறிய உதவும் ஆதாரங்களை 1. இலக்கியச் சான்றுகள், 2. வெட்டெழுத்துகள், 3. நினைவுச் சின்னங்கள், 4. நாணயங்கள், 5. வெளி நாட்டினர் குறிப்புகள் என்று ஐந்து பெரும்பிரிவுகளாகப் பகுத்து அறிதல் நலம் பயக்கும்.

**இலக்கியம்**

சோழர் வரலாற்று மூலங்களுள் இலக்கியம் முக்கியமானதும், முதன்மையானதும் ஆகும். இறவாப் புகழ் பெற்ற இலக்கியங்கள் மக்களின் வாழ்க்கையை அடுத்தது காட்டும் பளிங்கு போல் படம்பிடித்துக் காட்டும் இயல்புடையவை. மக்கள் வாழ்வினை விளக்கும் இலக்கியத்திற்கும், அவ் வாழ்வினைப் பின்னணியாகக் கொண்டு எழுதப்படும் வரலாற்றுக்கும் நெருங்கிய தொடர்புண்டு. எனவேதான் 'பாவியத்தின் செய்முதற் பொருள்கள் பெரும்பான்மையும் வரலாற்று நிகழ்ச்சி

களே. ஆனல், அவற்றினை வகுத்தமைக்கும் முறையும், மாற்றி அமைத்துக் கொள்ளும் தன்மையும் மாறுபட்டவை' என்று மேலை நாட்டு வரலாற்றறிஞர் பௌரு (Bowra) குறிப்பிடு கின்றார்.

வரலாறும், இலக்கியமும் ஒன்றுக் கொன்று இணைந்தும், இழைந்தும் காணப்படுகின்றன. ஏனெனில், இரண்டும் மக்கள் வாழ்வினைக் கருப்பொருளாகக் கொண்டவை. இக்கருத்தினை ஆங்கில அறிஞர் கார்லைல் என்பார் 'வரலாறு என்பது உண்மையில் இலக்கியமே ஆகும். உண்மை நிகழ்ச்சிகள் நன் முறையில் விளக்கப்படுமானல் கற்பனைக் காவியத்தை விடச் சுவையும், சிறப்பும் மிக்கதாய் வரலாறு விளங்கும்' என்று மிக அழகாக வலியுறுத்துகிறார். எனவே, இலக்கிய மின்றி வரலாறு இல்லை; வரலாறு இன்றி இலக்கிய மில்லை என்ற கருத்துப் புலனா கிறது.

தமிழ் இலக்கியங்கள் சோழர் வரலாற்றிற்குப் பெரிதும் பயன்படுகின்றன. மேல் நாட்டு இலக்கியங்களைப் போல் நம் நாட்டு இலக்கியங்கள் முழுக்க, முழுக்க வரலாற்றிற்குப் பயன் படுவ தில்லை. ஏனெனில், தமிழ் இலக்கியங்கள் பெரிதும் சமயச் சார்புடையவை யாதலின் புறச் சமயத்தைச் சார்ந்த மன்னன் ஆட்சி பற்றியும், மக்கள் பற்றியும் உண்மையான நிகழ்ச்சிகள் உள்ளபடி கூறப்படுவ தில்லை. தமது சமயத்தைச் சார்ந்தவர் களைப்பற்றி மிகைபடக் கூறுதலும் நிகழ்வுறும்.

இலக்கியங்கள் அவை தோன்றிய காலத்து மக்களின் சமூக, அரசியல், பொருளாதார, சமய வாழ்க்கையை அறிய உதவும். ஆனல், காலவரையறையைத் தெளிவுறுத்த வேண்டு மெனின், வேறு பல சான்றுகளின் துணைகொண்டுதான் ஆய வேண்டும். வேறு சான்றுகள் கிடைக்காத போது இலக்கியச் சான்றுகள் பெரிதும் பயன்படுகின்றன. எனவே, தமிழிலக்கி யச் சான்றுகளில் வரலாற்றைச் சார்ந்த அதற்கு ஏற்புடைய செய்திகளை மட்டும் ஏற்றுக் கொள்ளுதல் வரலாற்றறிஞரின் கடனாகும்.

தமிழகத்தின் தங்க காலமாம் சங்க காலத்தில் தோன்றிய இலக்கியங்கள், சோழர் வரலாறு பற்றிய பல அரிய செய்தி களைக் கூறுகின்றன. ஆனல், இவைகளின் கால வரையறை இன்னும் அறுதியிட்டுக் கூறப்பட வில்லை.

தமிழ் மொழியிலுள்ள கலம்பகம், உலா, பரணி, கோவை, தல புராணங்கள், காப்பியம் போன்ற நூல்கள் வரலாற்றுக்குப் பேருதவி புரிகின்றன. தமிழகத்தில் இலக்கிய, இலக்கண நூல்கள் பெருகியது பிற்காலச் சோழர் காலத்திலாகும். சைவத் திருமுறைகளைத் தொகுத்த நம்பியாண்டார் நம்பி வாழ்ந் ததும் இக் காலமே. பன்னிரண்டாம் திருமுறையாகிய திருத் தொண்டர் புராணம் என்னும் வரலாற்றுச் சார்புடைய பெரு நூலும் இக் காலத்துத் தோன்றியதே. ஒன்பதாம் திருமுறை யைச் செய்தருளிய நாயன்மார்களும், திருவிசைப்பா முதலி யன அருளிச் செய்தோரும் வாழ்ந்ததும் இக் காலமே யாகும்.

'தென்னாட்டு வரலாறு சம்பந்தப்பட்ட வரை, சேக்கிழார் பெருமான் பெரும்பான்மையும் பிழைபடாது எழுதியுள்ளார்'[1] என்ற கருத்தை நாம் ஏற்றுக் கொள்வதில் தவறில்லை. ஏனெனில், சேக்கிழார் பெருமான் சோழப் பேரரசின் முதல மைச்சராக நற்பணி யாற்றியவர். இவர் ஒரு சிறந்த புலவர்; சிவநேசச் செல்வர்; தொண்டை நாட்டினர்; தமிழகம் முழு வதையும் அறிந்தவர்; கல்வெட்டு ஆராய்ச்சியாளர்; அரசி யலில் பங்கு பெற்றவர். இவர் பல்லவர் காலக் கல்வெட்டு களையும், சோழர் காலக் கல்வெட்டுகளையும், சாசனங் களையும், செப்பேடுகளையும் நன்கு ஆய்ந்த காரணத்தால் தமது நூலில் நிகழ்ச்சிகளை விரிவாகவும், தெளிவாகவும், பிழை படா மலும் எழுதி யுள்ளார்.

இவர் மற்றப் புராண ஆசிரியர்களைப் போலன்றி மக்கள் வாழ்க்கையினையும், அரசியல் நிகழ்ச்சிகளையும், சமய வளர்ச்சி யினையும் முறையாகக் கூறுகிறார். எனவே, 'சேக்கிழார் சிறந்த கல்வெட்டுப் புலவர்; வரலாற்றுக்கு மாறாக நூல் செய்யாத மாபெரும் புலவர்; அவருக் கிணையாக இத் துறையில் தமிழ்ப் புலவர் எவரும் இலர். ஆதலின், அவரது நூலைச் சான்றாகக் கொள்ளலாம்'[2] என்ற டாக்டர் மா. இராசமாணிக்கர் கருத்தை நாம் ஏற்றுக்கொள்வது நலம்.

பெரிய புராணம் மட்டுமன்றிக் கம்பரால் எழுதப்பட்ட கம்பராமாயணமும், ஒட்டக்கூத்தரால் இயற்றப்பட்ட மூவ ருலா, குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ், தக்கயாகப்பரணி, சயங் கொண்டார் பாடிய கலிங்கத்துப்பரணி ஆகிய நூல்களும் சோழர் வரலாற்று மூலங்களைத் தன்னகத்தே கொண்டுள்ளன.

[1] A Historical study of Sekkilar and his Historical Material.
'சோழர் வரலாறு' - பண்டாரகர் இராசமாணிக்கர் – பக்கம்-7.

[2] 'சோழர் வரலாறு' - பண்டாரகர் மா. இராசமாணிக்கர் பக்கம் – 7-8.

கலிங்கத்துப் பரணியில் கலிங்கப் படையெடுப்பு, சோழர் பரம்பரை, குலோத்துங்க சோழனின் சிறப்பு, படைத் தலைவனாகிய கருணாகரத் தொண்டைமானின் சிறப்புப் போன்ற சோழர் வரலாற்றுக்குத் துணை புரியும் இன்றியமையாத பல நிகழ்ச்சிகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

'திவ்ய சூரி சரிதம்', 'குரு பரம்பரை' என்பன போன்ற வைணவ நூல்களும் அக்கால வைணவ சமய வளர்ச்சி பற்றியும் தமிழ் வளர்ச்சி பற்றியும் அறிய உதவுகின்றன. புத்த மித்தரால் இயற்றப்பட்ட 'வீர சோழியம்', அமித சாகரரால் இயற்றப்பட்ட 'யாப்பருங் கலக் காரிகை' 'யாப்பருங் கல விருத்தி' ஆகிய இலக்கண நூல்களைக் கொண்டு சோழர் காலத் தமிழ் இலக்கண வளர்ச்சியையும் அறிந்து கொள்ளலாம்.

'மதுரைத் தல வரலாறு', 'திருவரங்கம் கோயில் உலகு' 'திருவையாறு தல புராணம்' போன்ற நூல்களின் மூலம் சோழர்களின் சமயப் பணியினை நாம் உணரலாம்.

தமிழ் இலக்கியங்களே யன்றி வடமொழி, தெலுங்கு, கன்னட இலக்கியங்களும் சோழர் பற்றிய செய்திகளைக் கூறுகின்றன. இவற்றுள் கன்னட மொழியில் உள்ள 'நவ சோழ சரிதம்' என்னும் நூலும், வட மொழியில் எழுதப் பெற்ற 'சோழ வம்ச சரிதமும்' குறிப்பிடத் தக்கவை. 'கொங்கு தேச ராஜாக்கள்' என்ற நூலும் சோழர் வரலாற்றுத் தொடர்புடையதாகும்.

தமிழகத்தின் மிகத் தொன்மையான இலக்கண நூலாகிய தொல்காப்பியமும் சோழர் பற்றிய ஒரு சில செய்திகளைக் கொண்டுள்ளது. எனவே, இலக்கியங்களைக் கொண்டு சோழர் காலத்திய இலக்கிய, இலக்கண வளர்ச்சியையும், மக்கள், சமூக, அரசியல், மத, பொருளாதார வாழ்க்கையினையும் அறிந்து கொள்கிறோம்.

**கல்வெட்டுகளும் செப்பேடுகளும்**

சோழ வரலாறு முழுக்க, முழுக்கக் கல்வெட்டுகளின் துணை கொண்டு இயற்றப் பெற்றுள்ளது என்று கூறுதல் மிகை யன்று. தமிழகத்தில் மிகப் பழங்காலம் தொட்டே கல்வெட்டு வழியாகப் பல அரிய குறிப்புகளை வெளியிட்டனர். கிறித்துப் பிறப்பதற்குப் பன்னூருண்டுகள் முற்பட்ட தொல்காப்பியத்தில் நடுகல் அமைக்கும் வழக்கம் பண்டைத் தமிழகத்தில் நிலவியது என்று குறிப்பதாலும் 'பெயர் பொறித்து நட்டனரே கல்லும்'

என்ற புறநானூற்று அடியாலும் கல்வெட்டு மூலம் பண்டைத் தமிழர் அரிய கருத்தினை வெளியிட்டனர் என்பது விளங்கும்.

கல்லின் மீதும், செப்புப் பட்டயத்தின் மீதும் எழுதிய எழுத்து அழியா தென்பதை உணர்ந்த நம் முன்னோர் கல் வெட்டுகளும், செப்புப் பட்டயங்களும் வெளியிட்டனர். எனவே, வெட்டெழுத்துகள் கல்வெட்டு, செப்பேடு என இரு வகைப்படும் என்பதை அறியலாம்.

தென்னகத்தில் ஆயிரக் கணக்கில் கல்வெட்டுகளும், சில செப்பேடுகளும் காணப்பெறுகின்றன. இவற்றுள் முதலாம் இராசேந்திரன் கால முதல் தோன்றிய வெட்டெழுத்துகள் வர லாற்று நிகழ்ச்சிகளைத் தெள்ளத் தெளிய ஒழுங்காக எடுத்துக் கூறுகின்றன. மன்னனின் வெற்றிகள், குடும்ப நிலை, நாட்டுப் பிரிவுகள், அறச் செயல்கள், சமயத் தொடர்பான செய்திகள், அரசியல் செய்திகள், ஆட்சிமுறை ஆகிய செய்திகளை வெட் டெழுத்தின் மூலம் தெளிவாக உணரலாம்.

மன்னன் கோயில் கட்டியமை, கோயில்களைப் புதுப்பித் தமை, கோயில்களுக்கு அளித்த நன்கொடைகள், பராமரிப்புச் செலவுகள் போன்ற செய்திகளையும் கல்வெட்டுகள் விரிவாகக் கூறுகின்றன. அறச் செயல்களைக் குறித்துப் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளின் தொடக்கத்தில் மன்னனின் மெய்க்கீர்த்தி யும், பின்னர், இன்னார், இன்ன அறத்தின் பொருட்டு இவ்வளவு பொருள் அளித்தார் என்பன போன்ற செய்திகளும் குறிக்கப் பெறும்.

விரிவான அளவிலான மெய்க்கீர்த்தி வெளியிடும் முறையை முதன் முதலில் மேற்கொண்டு, வெட்டெழுத்து வர லாற்றில் அரியதொரு புரட்சியைச் செய்தவன் முதலாம் இராச ராசனுவான்.

அவனுக்குப் பிறகு அவன் வழி வந்த சோழ மன்னர்களும், அச்சிறந்த செயலை மேற்கொண்டு ஒழுகுவா ராயினர். அவருக் குப்பின் பாண்டி மண்டலத்தை ஆட்சி புரிந்த பாண்டியரும் இம்முறையைப் பின்பற்றினர்.

பெருமன்னர்களாக விளங்கிய தமிழ் வேந்தர்களின் கல் வெட்டுகளில்தான் மெய்க்கீர்த்தி இடம் பெற்றுள்ளது. குறு நில மன்னர் முதலானோர் கல்வெட்டுகளில் மெய்க்கீர்த்தி இடம்பெறவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

முதல் இராசேந்திரனுக்கு முன்பு ஆட்சி செய்த மன்னர்கள் தம் இயற்பெயர்களோடு வீரச் செயல்களையும் அமைத்துப் பட்டயங்களைக் கல்வெட்டுகளில் இணைத்து வெளியிட்டனர் என்பதைத் 'தஞ்சை கொண்ட கோப்பரகேசரி வருமன்' என்றும், 'மதுரையும், ஈழமும் கொண்ட கோப்பர கேசரி' என்றும், 'பாண்டியனைச் சுரம் இறக்கின பெருமாள்' என்றும் தத்தம் கல்வெட்டுகளில் குறித்துள்ளதால் அறியலாம்.

தமிழ் நாட்டுக் கல்வெட்டுகள் பெரும்பாலும் தமிழ், வடமொழி (கிரந்தம்) ஆகிய இரண்டிலும் எழுதப்பட்டுள்ளன.

ஒவ்வொரு மன்னனின் மெய்க் கீர்த்தியும் வெவ்வேறு மங்கல மொழியால் தொடங்கப் பெற்றிருத்தலால், அம் மெய்க் கீர்த்தியின் தொடக்கத்திலுள்ள தொடர்மொழிகளைக் கண்ட அளவிலேயே, அக்கல்வெட்டு எவ் வேந்தனுடையது என்று தெளிவாக அறிந்து கொள்ளலாம். எடுத்துக்காட்டாக முதல் இராசராசனின் மெய்க்கீர்த்தி, 'திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்' என்றும், முதல் இராசேந்திரனின் மெய்க்கீர்த்தி, 'திருமன்னி வளர விருநில மடந்தையும்' என்றும் தொடங்குவதை நாம் அறியலாம்.

மன்னனுடைய ஆட்சி யாண்டுகள் மிகுந்து செல்லச் செல்ல, அவ்வாண்டுகளில் செய்யப் பெற்ற மெய்ப்புகழ்களும், வீரச் செயல்களும் அம்மன்னனுடைய மெய்க்கீர்த்திகளில் முறையாக இடம்பெறும். சில மன்னர்கட்கு ஒன்றுக்கு மேற்பட்ட மெய்க்கீர்த்திகளும் காணக் கிடைக்கின்றன. எனவே, இவை உண்மை வரலாற்று ஆராய்ச்சிக்குப் பெரிதும் பயன்படுகின்றன.

சில கல்வெட்டுகளில் அரசியல் தொடர்பான அனைத்துச் செய்திகளும் விளக்கமாகக் கூறப்பட்டிருக்கும். அவை வரி விதித்தல், நிலவரி, தொழில்வரி, ஊரவைகளின் முடிவுகள், அரசியல் முறைகள், குற்றவாளிகட்குக் கொடுக்கப்பட்ட தண்டனைகள், தொழில் முறைகள், அரசு அலுவலர்கள் நியமனம் போன்ற செய்திகளாகும்.

கோவில்களில் காணப்படும் சில கல்வெட்டுகள், ஊர் மக்களுடைய நிலம் விற்றல், வீடு விற்றல், மனை விற்றல், வாங்கல் போன்ற செய்திகளையும் குறிக்கின்றன.

கல்வெட்டுகளின்மூலம் அக்கால வடமொழி, தமிழ் மொழி-இவற்றின் வளர்ச்சி, நடை மாறுபாடு, சொல்வளம் போன்றவற்

றையும் அறியலாம். வட்டெழுத்து, பல்லவ கிரந்த எழுத்து, சோழர் காலத் தமிழ் எழுத்து ஆகிய இம்மூன்று தமிழ் எழுத்து களையும் கல்வெட்டுகளால் அறிந்து கொள்ள முடியும்.

இவ்விதம் கல்வெட்டுகள் வரலாற்றுக்குப் பல துறை களிலும் பேருதவி புரிகின்றன. சோழர் காலச் சமுதாய, கலை, மத, அரசியல், பொருளாதார வாழ்வு பற்றியும் கல்வெட்டுகள் கூறுகின்றன. முதல் பராந்தகன் காலத்துச் செதுக்கிய உத் திரமேரூர் கல்வெட்டிலிருந்து சோழர் காலத்திய ஆட்சிமுறை யைப் பற்றித் தெளிவாக அறிகிறோம்.

மேலும், சோழர் காலம் பற்றி அறிந்து கொள்ளத் தஞ்சைப் பெருவுடையார் கோயிற் சுவர்களில் காணப்பெறும் கல்வெட் டுகளும் நார்த்தா மலை, திருமலை, கன்னியா குமரி, மகேந்திர மலை, உதயபுரம், எண்ணூர், கங்கை கொண்ட சோழபுரம் ஆகிய இடங்களில் காணப்படும் கல்வெட்டுகளும் திருவாலங் காடு, கரந்தை, ஆனைமங்கலம், அன்பில், சாரால, திருக்களர் போன்ற இடங்களில் காணப்படும் செப்பேடுகளும் மிகவும் பயன் படுகின்றன. சோழர் காலச் செப்பேடுகள் சிலவற்றை ஈண்டு நாம் விவரமாக ஆய்வோம்.

### சுந்தர சோழன் செப்பேடுகள்

இஃது ஆறு செப்பேட்டுத் தொகுதிகளுள் மிக்க பழமை வாய்ந்தது. இது கி. பி. 967 முதல் கி. பி. 970 முடிய சோணாட் டின் மன்னனாக ஆட்சி புரிந்த சுந்தர சோழனெனும் இயற் பெயர் கொண்ட இரண்டாம் பராந்தக சோழனால் வெளியிடப் பட்டது. திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலுள்ள அன்பில் என்னும் ஊரினனான அநிருத்த பிரமாதிராசன் என்பான் சுந்தர சோழனிடம் அமைச்சனாகப் பணி புரிந்து வந்தான். அவ னுக்குத் திருவழுந்தூர் நாட்டிலுள்ள கருணாகர மங்கலம் என்னும் ஊரினை இறையிலியாக இம்மன்னன் வழங்கினான். இச் செப்பேடுகள், 'அன்பிற் செப்பேடுகள்' எனும் பெயரால் அழைக்கப் பெறுகின்றன இச் செப்பேடுகள் சுந்தர சோழனின் நான்காம் ஆட்சி யாண்டில் (கி. பி. 960) வெளியிடப்பட்டன.

### ஆனை மங்கலச் செப்பேடுகள் (The Large Leiden Plates)

முதலாம் இராச ராச சோழன், கடார வேந்தனாகிய மார விசயோத்துங்க வருமன் நாகப்பட்டினத்தில் 'சூடாமணி வரும விகாரம்' என்னும் புத்த விகாரைக் கட்டுவதற்குப் பேருதவி புரிந்ததுடன் 'ஆனைமங்கலம்' என்னும் கிராமத்தினையும் பள்ளிச்

சந்தமாக அளித்தான். அப் புத்த விகாரம் இராசேந்திரனது காலத்தில் முடிவுற்றதால், இவன் தன் தந்தையின் அறக் கட்டளையைச் செப்பேடுகளில் தீட்டியளித்துள்ளான். இதுவே ஆனைமங்கலச் செப்பேடு எனவும் 'லீடன் பட்டயங்கள்' எனவும் அழைக்கப் பெறுகின்றது. இக்காலை இச்செப்பேடுகள் ஆலந்து (Holland) நாட்டின் பொருட்காட்சி சாலையில் உள்ளமை யால் இவை லீடன் செப்பேடுகள் என அழைக்கப் பெறுகின் றன. இத்தொகுதியில் இருபத்தொன்று செப்பேடுகள் உள்ளன. முதலாம் குலோத்துங்கன் ஆட்சிக் காலத்தில் வெளியிடப் பெற்ற ஆனைமங்கல நிவந்தச் செப்பேடுகளும் இக்காலை ஆலந்து நாட்டின் பொருட்காட்சி சாலையில்தான் உள்ளன. இவ்விரண் டுக்கும் வேறுபாடு தெரிதற் பொருட்டு அளவில் பெரியனவான இராசராசனின் ஆனைமங்கலச் செப்பேடுகள் 'பெரிய லீடன் செப்பேடுகள்' என அழைக்கப் பெறுகின்றன. இச் செப்பேடு கள் சோழர் வரலாற்றின் சிறந்த ஆதாரங்களாகும்.

***திருவாலங்காட்டுச் செப்பேடுகள்***

இச்செப்பேடுகள் கி.பி. 1905-இல் கண்டு பிடிக்கப்பட்டன. இச்செப்பேடுகள் முதலாம் இராசேந்திர சோழனுல் வெளியிடப் பெற்றன வாகும். திருவாலங்காட்டில் எழுந்தருளி யிருக்கும் அம்மை நாச்சியாருக்கும், திருவாலங்காடுடைய மகா தேவர்க் கும் இம்மன்னன் இருபத்தைந்தரை வேலி நிலத்தினைத் தேவ தானமாக அளித்த செய்தியைக் கூறுகின்றன இச்செப்பேடுகள்.

இவற்றுள் முப்பத்தொன்று செப்பேடுகள் கோக்கப் பட் டுள்ளன. இவற்றில் வடமொழிப்பகுதி (பிரசஸ்தி) நூற்றுமுப்பத் தேழு பாடல்களிலும், தமிழ்ப் பகுதி ஐந்நூற்று இருபத்துநான்கு வரிகளிலும் எழுதப்பட்டுள்ளன. வட மொழிப் பாடல்களை இயற்றியவர் சங்கரர் மகனுன புலவர் நாராயணன் ஆவார். இவர் தலைசிறந்த வடமொழிப் புலவராகப் போற்றப்படுகிருர். காஞ்சியில் தோன்றிய ஆராவமுதரும், அவர் தம்பியராகிய அரங்கன், தாமோதரன் என்போரும், ஆராவமுதர் மகனுன புருடோத்தமனும் இத்தானச் செய்திகளைச் செப்பேட்டில் செதுக்கினர்.

இராசேந்திரனின் வெற்றிகளையும், சாதனைகளையும் இச் செப்பேடுகள் விரிவாகக் கூறுகின்றன. இவை முதல் இராசேந் திர சோழனின் ஆருவது ஆட்சி யாண்டில் (கி.பி. 1018) வெளி யிடப் பெற்றனவாகும். இச் செப்பேடுகள் சென்னை அருங்காட்சி யகத்தில் வைக்கப் பட்டுள்ளன.

**கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் செப்பேடுகள்**

இச்செப்பேடுகள் முதலாம் இராசேந்திர சோழனின் எட்டாமாட்சி யாண்டில் (கி. பி. 1020) வெளியிடப் பெற்ற செய்திகளைக் கொண்டனவாகும். கி. பி. 1949-இல் கரந்தைத் தமிழ்ச் சங்கத்திற்கு இச் செப்பேடுகள் கிடைத்தன. இவை இற்றைக்குத் தொள்ளாயிரத்து ஐம்பத்திரண்டு ஆண்டுகட்கு முற்பட்ட பழமை மிக்கன வாகும்.

இச்செப்பேடுகளின் மூலமாக இராசேந்திரன் ஆயிரத்தெண்பது சதுர்வேதி பட்டர்களுக்கு ஐம்பத்தோரூர்களைப் பிரம தேயமாக அளித்த செய்தியினை யறியலாம். சோழ மன்னரின் மரபு பற்றியும், இராசேந்திரனின் வெற்றிகள், வாழ்க்கை, அரசியல் பற்றிய செய்திகளையும் இச்செப்பேடுகள் விரித்துக் கூறுகின்றன.

தமிழகத்தில் காணப்பெறும் செப்பேடுகளுள் இவை அதிக தகடுகள் கொண்டனவாகவும், அதிக வரிகள் கொண்டனவாக-வும் உள்ளன. இவை ஐம்பத்தேழு தகடுகளில் எழுதப்பெற்று இரண்டாயிரத்து ஐந்நூறு வரிகளைக் கொண்டுள்ளன. இவற்றுள் முதல் மூன்று தகடுகள், பழைய கிரந்த எழுத்துகளில், எழுபத்தேழு வடமொழிச் செய்யுள்களாலான பிரசஸ்தி யாகும். பிரசஸ்தியென்பது மன்னர் மரபும் புகழ்ச்சி யுரையு மாகும்.

அடுத்த இருபத்திரண்டு ஏடுகளில் இராசேந்திரன் அறக்கொடை யளித்த ஐம்பத்தோரூர்களின் பெயர்களும், எல்லைகளும், நில அளவு, தரம், வருவாய் பற்றிய செய்திகளும் கூறப்பட்டுள்ளன. இவை தமிழெழுத்துப் பகுதி யாகும்.

மற்றைய முப்பது தகடுகள், தானம் பெற்ற பார்ப்பனரின் கோத்திரம், சூத்திரம், நிலப்பங்கு பற்றியும் தொழிலாளர், சாசனம் எழுதியவர், வெட்டியவர் ஆகியவரைப் பற்றியும் கூறுகின்றன.

எஞ்சியுள்ள இரண்டேடுகளும் இம் மூலச் சாசனத்திற்குப் பிரதியாகச் செய்யப்பெற்றவற்றுள் எஞ்சியனவாகக் கிடைத்துள்ளன. இவ்வேடுகளனைத்தும் ஒரு தடிப்பான உலோக வளையத்தில் கோக்கப்பட்டுள்ளன. இதன் முகப்பில் சோழரது இலச்சினை வட்ட வடிவமாகச் செதுக்கப்பட்டுள்ளது. இவை இப்பொழுது தஞ்சை மாவட்டத்தின்கண்ணுள்ள கருந்திட்டைக்குடித் (கரந்தைத்) தமிழ்ச் சங்கத்தில் வைக்கப்பட்டுள்ளன.

***சாராலச் செப்பேடுகள்***

இச் செப்பேடுகள் இராசகேசரி வீர ராசேந்திரனால் தமது ஏழாமாட்சி யாண்டில் (கி.பி.1070) வெளியிடப் பெற்றன வாகும். வீர ராசேந்திரன் முதலாம் இராசேந்திரனின் மூன்றும் மகனும், சோழப் பேரரசினைக் கி. பி. 1063 முதல் கி.பி. 1070 முடிய ஆட்சி செய்தவனும் ஆவான்.

சித்தூரிலுள்ள சாரால என்னும் ஊரில் இச் செப்பேடுகள் கிடைத்துள்ளமையின் 'சாராலச் செப்பேடுகள்' எனும் பெயர் பெறுகின்றன. இவை இம் மன்னனது பெருங்கொடை வழங்கிய செய்தியைச் செப்புகின்றன.

***சிறிய ஆனைமங்கலச் செப்பேடுகள்*** (The Smaller Leiden Plates)

இச் செப்பேடுகள் முதலாம் குலோத்துங்க சோழனின் இருபதாமாட்சி யாண்டில் (கி. பி. 1090) வெளியிடப்பட்டன. இவை இம் மன்னன், கடார வேந்தன் சோணாட்டில் கட்டிய 'இராச ராசப் பெரும் பள்ளிக்கும், இராசேந்திர சோழப் பெரும் பள்ளிக்கும் பள்ளிச் சந்த இறையிலியாக' ஆனைமங்கலத்தில் ஒரு பகுதியுடன் ஆமூர், நாணலூர், புத்தாக்குடி, மூஞ்சிக்குடி, சந்திரபாடி, உதய மார்த்தாண்ட நல்லூர் ஆகிய ஊர்களிலிருந்து விளையும் ஆயிரக் கணக்கான கலம் நெல்லை நிவந்தம் செய் துள்ள செய்தியைக் கூறுகின்றன.

மூன்றே ஏடுகள் கொண்ட இச் செப்பேடு லீடனில் உள்ளது. இதுவே, 'சிறிய லீடன் பட்டயங்கள்' என அழைக்கப்பெறு கிறது.

***திருக்களர் செப்பேடு***

இது முதலாம் இராசேந்திரன் காலத்தில் தனித் தமிழில் வெளியிடப் பெற்றதாகும்.

சோழர் கல்வெட்டுகள் சோணாட்டில் மட்டுமின்றிச் சேர, பாண்டிய நாடுகளிலும், பருமா, மலாயா, சுமத்திரா, சயாம், இலங்கை ஆகிய கடல் கடந்த நாடுகளிலும் காணப்படுகின்றன. சோழர் வரலாறு பற்றிய செய்திகள் அண்டை வமிசங்களான கீழைச் சாளுக்கியர், மேலைச் சாளுக்கியர், கீழைக் கங்கர், ஹொய்ச்சாலர், இராட்டிர கூடர் போன்றோர் நாடுகளின் கல் வெட்டுகளிலும் காணப்படுகின்றன.

மேற்கூறிய அண்டை வமிசங்களின் வெட்டெழுத்துச் செய்திகளையும், சம காலத்து வமிசங்களின் செய்திகளையும்,

சோணுட்டு வெட்டெழுத்துச் செய்திகளையும் ஒப்பிட்டுப் பார்க்கும் போதுதான் சோழர் பற்றிய உண்மைச் செய்தியை நாம் அறிய முடியும்.

இவ் வெட்டெழுத்துகளை-அழியா நினைவுச் சின்னங்களைப் பாதுகாத்து வரலாற்றுக்குப் பயன்படுத்த விழைந்த நம் அரசு, இவைகளைப் படியெழுத்துத் தென்னிந்திய வெட்டெழுத்து, கள்''[1] என்ற தலைப்பில் 20 பகுதிகள் வெளியிட்டுள்ளமை, மகிழ்ச்சிக்குரிய தொன்ருகும்; மேலும், ஒவ்வொரு ஆண்டும் தென்னிந்தியக் கல்வெட்டின் ஆண்டறிக்கை ஒன்றை வெளியிட்டு வருகிறது. இவைகளும் வரலாற்ருராய்ச்சி யாளருக்குப் பெரிதும் பயன்படுகின்றன.

இக் கல்வெட்டுகள் இல்லையேல் சோழ மன்னர்களின் பெருமையும், அக்கால மக்களின் சமூக, பொருளாதார, மத வாழ்வு, கல்வி நிலை, நாகரிகம், புலவர், புரவலர், அரசியல் தலைவர், தேர்தல் முறை, ஆட்சி முறை பற்றிய விவரங்களும், பல தூய தமிழ்ச் சொற்களும், இன்னும் எத்துணையோ அரிய செய்திகளும் வெளியாகாமல் மறைந்திருக்கும்.

***கோவில்கள்***

தமிழ்நாடு என்றும் தெய்வ மணங் கமழும் திரு நாடு. பழந் தமிழர், 'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டா' என்னும் முதுமொழியைப் பொன்னெனப் போற்றினர். எனவே, ஆண்டவனுக்குக் கோயில் அமைத்து வணங்கிப் போற்றினர். அதிலும் சிறப்பாகப் பிற்காலச் சோழ மன்னர்கள் காலத்தில் விண்ணை முட்டும் கோபுரங்கள் கொண்ட திருக்கோயில்கள் பல கட்டப் பட்டன.

கோயில்கள் பொது மக்களுக்கு அறிவைப் புகட்டும் இடங்களாகவும் திகழ்ந்தன. சோழர் காலத்திய கோயில்களுள் பல கற்கோயில்கள். அவைகளின் சுவர்களிலும், தூண்களிலும், தரையிலும் ஏராளமான கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இக் கல்வெட்டுகள் சிதையா வண்ணம் எண்ணெய் தடவி நன்கு பாதுகாக்கப்படுவதற்குரிய ஏற்பாடுகளைச் சோழ மன்னர்கள் மேற்கொண்டனர்.

கல்வெட்டுள்ள கோயில்கள் புதுப்பிக்கப்படுங்கால், அக்கல் வெட்டுகளைப் படியெடுத்துப் புதிதாக அமைக்கப்படும் கோயில்

[1] South Indian Inscriptions. 20 Volumes.
List of Inscriptions copied up to 1930.

களில் பொறித்தல் தமிழகத்தில் மரபாக இருந்தது. கற்கோயில் களில் மட்டுமன்றிச் செங்கல், சுண்ணும்பு முதலியவற்ருல் ஆகிய கோயில்களிலும் கல்வெட்டுகள் வெட்டப்பட்டிருந்தன. இக் கோயில் கல்வெட்டுகளைக் கொண்டு மன்னனின் போர்ச் செயல்கள், சாதனைகள், அறச்செயல்கள் போன்ற இன்னே ரன்ன செய்திகளை அறிந்து கொள்ளலாம் என்பதை நாம் முன்னரே கண்டோம்.

திருக்கோயில்களில் காணப்படும் சிற்பங்களைக் கொண்டு சோழர் காலத்திய சிற்பக்கலை வளர்ச்சியை நாம் தெள்ளிதின் அறியலாம். கங்கை கொண்ட சோழேச்சரத்தில் முதல் இராசேந்திரன் காலத்தில் செதுக்கப்பட்ட சிற்பங்கள், சிற்பக் கலையின் உயர்ச்சியையும், முதிர்ச்சியையும் குறிப்பதை நாம் எடுத்துக்காட்டாக இங்குக் குறிப்பிடலாம்.

தமிழகத்தில் கற்கோயில் அமைப்பதிலும், சிற்பங்கள் செதுக்குவதிலும், ஓவியங்கள் தீட்டுவதிலும், வழிகாட்டியாக அமைந்தவர்கள் பல்லவர்களே யென்ருலும்கூடப் பிற்காலச் சோழர் காலத்தில்தான் இக்கலைகள் முழுமை பெற்றுப் பெருமை பெற்றன என்பதை யாரும் மறுக்க முடியாது. சோழர் கால ஓவியங்களைக் கொண்டு அக்கால மக்களின் நடை, உடை, பாவனை, அணிகலன்கள் ஆகியவற்றைக் காணலாம். இவற்றி லிருந்து சோழர் கால ஓவிய வளர்ச்சியையும், வண்ணங்கள் தீட்டும் கலையையும் உணரலாம். தஞ்சைப் பெருவுடையார் கோயில் கருவறைச் சுவர்மீது காணப்படும் ஓவியங்களை நாம் இங்கே எடுத்துக்காட்டாகக் கூறலாம். இவ்வோவியங்கள் இன்றும் நம் கண்ணையும், கருத்தையும் கவர்வனவாக அமைந்துள்ளமை போற்றத் தகுந்த தாகும்.

கோயில் கட்டட அமைப்பை நன்கு ஆய்பவர்கள் சோழர் காலக் கட்டடக் கலை வளர்ச்சியை நன்கு உணர்வதோடு, இக் கலையைப் பல்லவர் காலக் கட்டடக் கலையுடன் ஒப்பிட்டு இதன் வளர்ச்சியைக் கணிப்பர். சோழர் காலத்திய நுண் கலைகளை முற்றும் ஆய்ந்து, அதன் அருமை, பெருமைகளை அறிந்தோர், சோழ மன்னர்களின் கலையுணர்ச்சியையும், கலையார்வத்தை யும் நன்கு அறியலாம். சோழர் கால மக்கள் எல்லா நலனும், வளனும் பெற்று வாழ்ந்த காரணத்தால்தான் கண்ணையும், கருத்தையும் கவரும் கவின்கலைகளைப் போற்றி வளர்க்க அவ காசம் கிடைத்தது என்பதை நாம் அறியலாம்.

எனவே, சோழர் கால வரலாற்றினை அறிந்து கொள்ளப் பேருதவி செய்யும் மூலங்களுள் கோயில்களே முக்கிய இடம் பெறுகின்றன. கோயில்கள்தான் என்றும் நின்று நிலைபெற்று அக்கால மன்னர்களின் செம்மையான ஆட்சியினை நமக்கு நினைவூட்டிக் கொண்டுள்ளன.

***நாணயங்கள்***

நாணயங்கள் ஒரு நாட்டின் வரலாற்றினை அறிந்து கொள்ளச் சிறந்த மூலங்களுள் ஒன்றாகும். சோழர், பல்லவர்களைப் போலவே பொன், வெள்ளி, செம்பு இவற்றால் ஆன நாணயங்களை வெளியிட்டனர். அவற்றுள் பல இப்பொழுது கிடைத்துள்ளன. சோழர் காலத்திய தங்க நாணயங்கள் சிலவற்றைதான் இன்று காண முடிகின்றது. வெள்ளி நாணயங்களும் அதிக அளவில் இன்று கிடைக்கவில்லை. செப்பு நாணயங்கள்தான் மிகுந்த அளவிலும் பல வடிவங்களிலும் காணப்படுகின்றன. எனவே, சோழர் காலத்தில் செப்பு நாணயங்களே அதிகமாகப் புழக்கத்திலிருந்ததை நாம் அறியலாம்.

எல்லா நாணயங்களிலும் சோழர்களின் முத்திரையான புலியும், அதன் பக்கத்தில் சேர, பாண்டிய சின்னங்களான வில்லும், மீனும் போடப்பட்டுள்ளன. இவற்றைச் சுற்றிலும் இவற்றை வெளியிட்ட மன்னனின் பெயர் எழுதப் பட்டுள்ளது. சில நாணயங்களில் இவையே பின்புறத்திலும் பொறிக்கப் பட்டுள்ளன.

பொற்காசுகளில் ஈழக் காசு என்ற ஒரு வகையும் இருந்தது. இதுபோன்ற ஈழக் காசுகள், முதலாம் இராசராசன் காலத்தில்தான் முதலில் வெளிவந்தன. இக் காசுகள் முதலாம் குலோத்துங்கன் காலம் வரையில் வெளியிடப்பட்டுப் புழக்கத்தில் இருந்தமை கல்வெட்டுகளால் இனிது விளங்குகின்றன. சோழ மன்னர்கள், ஈழ நாட்டினை வென்று அடிமைப் படுத்திய பின்பே ஈழக் காசுகளை வெளியிட்டனர் என்பதை நாம் இதனால் உறுதியாக அறிய முடிகின்றது. இக் காசின் ஒரு பக்கத்தில் ஒரு முரட்டு மனிதன், நிற்பது போலவும், மற்றொரு பக்கத்தில் அமர்ந்து இருப்பது போலவும் காணப்படுகின்றான்.

சோழர் காலத்தில் ஈழப் பொற்காசு மட்டுமன்றித் துளைப் பொன்னும் வெளியிடப்பட்டது. இதைக் காய்ச்சி, உருக்கி, வெட்டி நாணய மாக்கினும், மாற்றும் நிறையும், தூய்மையும் குன்றா என அதிகாரிகளால் ஆய்வு செய்யப்பட்டதற்கு அறிகுறியாகவே இப்பொன் துளையிடப்பட்டது.

முதலாம் இராசராசன் காலத்தில் 'இராசராசன் காசு' என்ற பெயரிலேயே காசுகள் வெளியிடப்பெற்றன. இவற்ருல் சோழர் காலப் பொருளாதார முன்னேற்றத்தையும், செல்வச் செழிப்பையும் நாம் நன்கு அறியலாம்.

முதலாம் இராசேந்திரன் 'இராசேந்திரன் மாடை' எனவும் 'இராசேந்திர சோழக் காசு' எனவும் பெயர் கொண்ட நாணயங்களை வெளியிட்டுள்ளான். எனவே, இக்காசுகளைக் கொண்டு இவைகளை வெளியிட்ட மன்னர்களையும், சோழர் காலக் கலை நுணுக்கங்களையும் நன்கு உணரலாம்.

சோழ நாட்டில் வெளியிடப்பட்ட நாணயங்களே யன்றி வெளிநாட்டு நாணயங்களும், நம் நாட்டில் காவிரிப்பூம் பட்டினத்திலும், மற்ற இடங்களிலும் காணப்படுவதால் சோழர்கள் வெளிநாட்டினருடன் கடல் வாணிகம் செய்ததை அறிந்து கொள்ளலாம்.

உரோம் நாட்டு நாணயங்கள் நம் நாட்டில் மிகுதியாகக் காணப்படுவதை இங்கு நாம் எடுத்துக்காட்டாகக் கொள்ள லாம். தஞ்சை மாவட்டத்தில் சீன நாட்டு நாணயங்கள் எண்ணிறந்த அளவில் அகழ்ந்தெடுக்கப்பட் டிருத்தலின் தமிழக, சீன, வாணிக. வளர்ச்சியை நாம் தெளிவாக அறிய லாம். 'திரைகட லோடியும் திரவியம் தேடு' என்ற முதுமொழிக் கிணங்கச் சோழர் காலத்தில் கடல் கடந்த வாணிகம் செழித் தோங்கியது என்பதை நாம் உணரலாம்.

**வெளிநாட்டினர் குறிப்புகள்**

'ஒரு நாட்டைப் பற்றியும், அதன் மக்களைப் பற்றியும் வெளிநாட்டுப் பார்வையாளர்கள் தரும் குறிப்புகள் அந்த நாட்டு வரலாற்ருசிரியர்கட்குச் சுவை பயப்பனவாக உள்ளன', என்று திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி அவர்கள் கூறுவதனுல் அந்நிய நாட்டினர் குறிப்பின் முக்கியத்துவத்தினை நாம் அறியலாம்.

சீனர், அராபியர், முஸ்லீம் வரலாற்றறிஞர்கள், ஐரோப் பியர் குறிப்புகளும் சோழர்களைப் பற்றிய பல அரிய சுவையான செய்திகளைக் கூறுகின்றன. ஐரோப்பியருள் மார்க்கோபோலோ குறிப்பிடத் தக்கவ ராவார்.

இவற்ருல் சோழர்களின் கடல் கடந்த வாணிகச் சிறப்புப் பற்றி நாம் அறியலாம். வெளிநாட்டு வரலாற்று நூல்களிலும்

சோழர் வரலாறு பற்றிய அரிய பல கருத்துகள் காணக்கிடக் கின்றன. இலங்கை வரலாற்று நூலான 'மகாவமிசம்' சோழர் களைப் பற்றிய பல அரிய செய்திகளைக் கூறுகின்றது. இந்நூல் ஈழ-சோழ உறவு பற்றியும், ஈழ-சோழப் போர்களைப் பற்றியும் கூறுவதோடு சோழ மன்னர்களின் ஆட்சிக் காலத்தைக் கணிப்ப திலும் உற்ற துணையாக, ஊன்று கோலாகப் பயன்படுகின்றது. முதல் இராசேந்திர சோழன், முதல் இராசராச சோழன் போன்ற சோழ மன்னர்களின் ஈழப்போர் பற்றிய புதுச் செய்தி களையும் மகாவமிசம் கூறுகின்றது.

யவன ஆசிரியரான தாலமியின் குறிப்புகளிலும், 'பெரிப் ளுஸ்' என்னும் கடற் செலவு நூலிலும் சோழர்களைப் பற்றிய சில செய்திகளை நாம் அறிந்து கொள்ளலாம்.

உள்நாட்டுச் சான்றுகளை விட வெளிநாட்டுச் சான்று களைக் கொள்வது என்றென்றும் நன்மை பயப்ப தாகும். ஏனெனில், அன்னிய நாட்டினர், உள்நாட்டினரை விடக் காய்தல் உவத்தலின்றித் தாங்கள் உணர்ந்தவற்றைக் கூறு மியல்பின ராவர்.

மேற்கூறியவற்ருல் வரலாறு என்னும் கட்டடம் இலக்கியம் என்ற மண்ணுலும், பழம்பொருட் சின்னம் என்ற செங்கல்லா லும், வெட்டெழுத்து என்னும் சாந்தாலும், வெளி நாட்டினர் குறிப்பு என்னும் மரத்தாலும் கட்டப்பெறுகிறது என்பதை அறியலாம். இவ்வரலாற்றுக் கட்டடத்தின் மீது கால வரை யறை என்ற சுண்ணும்பு அடிக்கப்பட்டுள்ளது. எனவே, இலக் கியமும், வெட்டெழுத்தும், பழம்பொருட் சின்னமும், வெளி நாட்டினர் குறிப்பும் ஒரு நாட்டின் வரலாற்றினை உருவாக்கு வதில்உறுதுணை புரிகின்றன வென்பதை யறியலாம்.

# 3. இராசேந்திரனின் முன்னோர்கள்

தமிழக வரலாற்றில் முதலாம் இராசேந்திரன், அரும் பெருஞ் செயல் புரிந்த பெருஞ்சோழ னெனினும், இவனைப்பற்றி ஆராயுமுன், இவனுடைய முன்னோர் அருஞ்செயல்களைப் பற்றிச் சிறிது காணு தொழியின், இவனுடைய சீரும், சிறப்பும், பேரும், புகழும் இனிது விளங்கா வாகலின், அவர்களைப் பற்றியும் ஈண்டுச் சிறிது ஆய்வோம்.

சோழரைப் பற்றிய வரலாற்றை நாம் இரு பெரும்பிரிவு களாகப் பிரிக்கலாம். அவை வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட சோழ மன்னர்கள், வரலாற்றுக் காலச் சோழ மன்னர்கள் ஆகும். இருப்பினும் சோழ மன்னர் வரலாற்றினைச் சங்க காலத் திற்கு முற்பட்ட சோழர், சங்க காலச் சோழர், இடைக் காலச் சோழர், பிற்காலச் சோழர் என்று நான்கு பிரிவினராகப் பகுத்துக் காணுதல் நலம் பயப்ப தாகும். பிற்காலச் சோழர் வரலாற்றினை விசயாலயன் காலம் முதல் ஆதிராசேந்திரன் காலம் முடிய ஆண்ட மன்னர்கள் என்றும், முதலாம் குலோத் துங்கன் ஆட்சிக்கால முதல் ஆண்ட மன்னர்கள் என்றும் இரு சிறு பிரிவுகளாகப் பகுத்தல் உண்டு.

## I. சங்க காலத்துக்கு முற்பட்ட சோழர்கள்

***மனு நீதிச் சோழன்***

சங்க காலத்துக்கு முற்பட்ட சோழ மன்னர்களுள் பெரும் புகழ் பெற்றவன் மனுநீதிச் சோழன் ஆவான். இவன் நீதி நெறி வழுவாது ஆட்சி செய்து, நீதியின் இருப்பிடமாகத் திகழ்ந்தவன். இவன் திருவாரூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தான்.

தன் ஒரே மகன் பசுவின் கன்றைத் தேரேற்றிக் கொன்ருன் என்பதனுல், அவனை அக்கன்றிறந்த இடத்தில் கிடத்தித் தேரேற்றிக் கொன்று முறை செலுத்தி,

'முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்'[1]

என்று வள்ளுவர் வகுத்த அரச நீதிக்கு எடுத்துக் காட்டாய் விளங்கியவன் மனுநீதிச் சோழனுவான். முத்தமிழ்க் காப்பிய மாம் சிலப்பதிகாரம்,

'வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி யுகுநீர் நெஞ்சுசுடத் தான்றன்
அரும்பெறற் புதல்வனை யாழியின் மடித்தோன்
பெரும்பெயர்ப் புகாரென் பதியே!'[2]

என்று இவனைப் பாராட்டுகின்றது. திருவாரூர் வீதி விடங்கப் பெருமான் கோயில் கல்வெட்டிலும் இந்நிகழ்ச்சி பற்றிய குறிப்புகள் காணக் கிடைக்கின்றன. சேக்கிழார் பெருமானும் தமது பெரிய புராணத்தில், மனுநீதிச் சோழன் வரலாற்றை விளக்கி வரைந்துள்ளார். பன்னிரண்டாம் நூற்ருண்டில் இவ் வரலாறு தமிழ் நாட்டின் மூலைமுடுக் கெல்லாம் பரவி யிருந்தது.

**சிபி**

சிபியும் அக்காலத்தில் கீர்த்தி பெற்ற சோழ மன்னனுவான். தன்னிடம் அடைக்கலம் புகுந்த புருவைக் காப்பாற்றத் தனது சதையை அரிந்து வைத்து, இறுதியில் தானே துலா ஏறி மனுவைப் போல நீதியை நிலைநாட்டப் பாடுபட்டான் சிபி என்பதை அறிகிரேும்.

'புறவு நிறைபுக்குப் பொன்னுலக மேத்தக்
குறைவி லுடம்பரிந்த கொற்றவன்'[3]

என்று நெஞ்சை யள்ளும் சிலப்பதிகாரம் புகழ்கின்றது.

காந்தன் என்னும் சோழன் காவிரியாற்றைச் சோழ நாட்டிற்குக் கொணர்ந்தான் என்பதை மணிமேகலை செப்புகின்றது.

இராமாயண காலத்தில் பறக்கும் கோட்டைகளை வைத்துக் கொண்டு மக்கட்கு ஊறு விளைவித்த அசுரர்களைக் கொன்ற

[1] திருக்குறள் – இறை மாட்சி-8.
[2] சிலப்பதிகாரம் – வழக்குரை காதை-வரி-53–56.
[3] சிலப்பதிகாரம் – வழக்குரை காதை-வரி-94–95.

சோழ மன்னனைப் பற்றிய குறிப்புகள் இலக்கியங்களில் காணப் படுகின்றன. சிலப்பதிகாரமும், புற நானூறும் இவனைத் 'தூங் கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன்' என்று புகழ் கின்றன.

புகார் நகரில் மிகச் சீரிய முறையில் இந்திர விழாவெடுத்த முசுகுந்தன் பற்றியும், பரசுராமன் காலத்தில் சோழ மன்னனாக ஆட்சி புரிந்த முசுகுந்தன் பற்றியும் இலக்கியங்களில் குறிப்பு கள் காணக் கிடக்கின்றன. மற்றும் சில சோழ மன்னர்களின் வரலாறு நமக்கு விளக்கமாகக் கிடைத்தில.

இது காறும் கூறியவற்றால் வரலாற்றுக் காலத்துக்கு முற் பட்ட காலத்தே சோழ மன்னர்கள் நல்லாட்சி செலுத்திய வரலாற்றினை அறிய முடிகிறது.

மனு, முசுகுந்தன், சிபி, காந்தன், தொடித்தோட் செம்பி யன் போன்ற மன்னர்கள் வரலாற்றுக் கால வரையறைகட்கு உட்படாதோராவர். அவருள்ளும் முசுகுந்தன், வரலாற்றுக்கு முற்றிலும் புறம்பான வாழ்க்கை வரலாற்றை உடையவனுவான்.

## 2. சங்க காலச் சோழர்

### கரிகாலன்

சங்க காலம் தமிழக வரலாற்றின் தங்க காலமாகும். சங்க காலச் சோழ மன்னர்களின் காலம் கி. பி. மூன்றும் நூற்ருண் டின் முற்பகுதி முடிய இருந்தது என வரலாற்றறிஞர்கள் கூறு கின்றனர்.

தமிழ் இலக்கியங்களில் கரிகாலன் என்னும் பெயரால் இரு மன்னர்கள் குறிப்பிடப்படுகின்றனர். அவர்களுள் கி. பி. முத லாம் நூற்ருண்டில் வாழ்ந்த கரிகாலனே திருமாவளவன் என் றும், கரிகாற் பெருவளத்தான் என்றும் புகழப்படுகின்ருன்.

கி. மு. முதலாம் நூற்ருண்டில் ஆட்சி செய்த மற்ருெரு கரிகாலன் பற்றியும் இலக்கியங்களில் குறிப்புகள் காணப்படு கின்றன.

நாம் இங்குக் கி. பி. முதலாம் நூற்ருண்டில் ஆட்சி செய்த கரிகாற் பெருவளத்தான் பற்றிச் சிறிது ஆய்வோம். சோழர் வரலாறு கூறத் தொடங்குவோர் இவனையே மையமாகக் கொள் வர்.

கரிகாலன் உருவப் பஃறேர் (பல்+தேர்) இளஞ்சேட் சென்னிக்கும் அழுந்தூர் வேள் மகளுக்கும் பிறந்தவன். இவன் நாங்கூர்வேள் மகளை மணந்தவன். இவனது இயற்பெயர் தெரிய வில்லை. கரிகாலன் என்பது காரணப் பெயராகும். அஃது ஆண் யானைகட்கு யமன், தீயினாற் கருகிய காலையுடையோன் எனப் பல பொருள் படும்.

இவன் இளமைக் காலத்தில் அரசுரிமை குறித்து நாட்டில் குழப்பங்க ளேற்பட்டன. அதன் விளைவாகப் பகைவர்கள் இவனைச் சிறையிலிட்டு, அச்சிறைக்குத் தீ மூட்டினர். அதிலிருந்து இவன் தப்பியபோது கால் கரிந்து போனதால் கரிகாலன் என அழைக்கப்பட்டான். இதனை 'இளமைப் பருவத்துப் பிறராற் சுடப்பட்டு உயிர்உய்ந்து போகிய கரிகாலன்' என்னும் தொடரால் அறியலாம்.

பட்டினப்பாலை, பொருநராற்றுப்படை, சிலப்பதிகாரம், கலிங்கத்துப் பரணி, எட்டுத் தொகையுள் உள்ள சில பாடல்கள், பெரிய புராணம் முதலிய நூல்கள் இவனுடைய பேராண்மையையும், வெற்றிகளையும் பலபடப் பாராட்டிக் 'கருவிலே திருவுடையான்' எனச் சிறப்பிக்கின்றன. ஆய கலைகள் அறுபத்து நான்கனிலும் வல்லவன் இவனென்று பாராட்டப் பெறுகின்றான்.

இவன் தன் மாமனாகிய இரும்பிடர்த் தலையார் என்பாரின் துணைகொண்டு பகைவரை அழித்து ஆட்சி யுரிமையினை மேற்கொண்டான். இவனது கன்னிப்போர், வெண்ணிப் போராகும். இவன் பெருவீரனாதலின் தன்னை எதிர்த்த பாண்டியனையும், சேரனையும், பதினொரு வேளிரையும், வெண்ணிப் பரந்தலையில் [1] நடந்த பெரும்போரில் வெற்றி கொண்டான்.

தனது படை வலிமையினால் வேங்கடம் வரையுள்ள நாடுகளை வென்று மாவீரனாய் விளங்கிய கரிகாலன், வடநாடு சென்று வெற்றி வாகை சூட விழைந்தான். எனவே, பெரும் படை கொண்டு சென்று வட வாரிய மன்னர்களை வென்று, இமயத்தில் புலி பொறித்தான். வச்சிர நாட்டு மன்னனின் முத்துப் பந்தரும், அவந்தி நாட்டு மன்னனின் வாயில் தோரணமும், மகதநாட்டு மன்னனின் பட்டி மண்டபமும் கொண்டு வட நாட்டினின்றும் பெருவெற்றி வீரனாகத் திரும்பியவன் கரிகாலன் என்று 'சிலப்பதிகாரம்' செப்புகின்றது.

[1] பொருநர் ஆற்றுப்படை – வரி-143–148.

வடநாடு சென்ற மாவீரன் கரிகாலன், கப்பற் படையை நன்முறையில் திருத்தி யமைத்து, ஈழத்தின் மீது படை யெடுத்து வென்று, பன்னீராயிரம் சிங்களவரைச் சோணாட்டுக் குக் கொணர்ந்து, காவிரிக்குக் கரை கட்டினான் என்பதால் இவனைப் 'பொன்னிக் கரைகண்ட பூபதி' என்று முத்தமிழ்ச் செல்வமாம் 'மூவருலா' சிறப்பிக்கின்றது.

கரிகாலன், மாவீரனாக விளங்கியதோடு நாட்டு மக்களைப் பாதுகாத்து, நல்லாட்சி நடத்தி, வாணிகத்தையும், வேளாண் மையையும் பெருக்கி நாட்டை வளப்படுத்தியதால் கரிகாற் பெருவளத்தான் என்றும், திருமாவளவன் என்றும் அழைக்கப் படுகிறான். இவன் காடு கொன்று நாடாக்கிக் குளம் தொட்டு வளம் பெருக்கியதாக இலக்கியங்கள் சான்று பகர்கின்றன.

இவன் அறமுறை பிறழாது ஆட்சி செய்து கலைகளைப் போற்றி வளர்த்துக் கற்றோர்களைப் போற்றிப் பெரும்புகழ் பெற்று விளங்கினான். 'பட்டினப் பாலை' என்னும் காவியத்தை இயற்றிய 'உருத்திரன் கண்ணனார்' என்னும் பெரும்புலவருக்கு இவன் பதினாறு லட்சம் பொன் பரிசளித்தான் என்பதை எண்ணுந்தோறும் தமிழ் நெஞ்சங்க ளெல்லாம் இன்ப ஊற்றுக் கேணியில் குதிக்கின்றன.

இவனது காலத்தில் காவிரிப்பூம் பட்டினம் எத்தகைய சீரும், சிறப்பும், பீடும், பெருமையும் பெற்று விளங்கிய தென் பதைச் சிலப்பதிகாரத்திலும், மணிமேகலையிலும் பரக்கக் காணலாம்.

இதுகாறும் கூறியவற்றால் கரிகாற் பெருவளத்தானாகிய திருமாவளவன் எங்ஙனம் சங்க காலத்தில் மாபெரும் மன்ன னாகத் திகழ்ந்து, வெற்றிகள் பல பெற்று, நல்லாட்சி நடத்திச் சோழரின் பெருமையை உச்ச நிலைக்குக் கொணர்ந்தான் என்ப தைக் கண்டோம்.

சோழர் குலக் கொழுந்தாகிய இவன் சோழப் பெருமன்னர் களுள் தலையாயவனாகப் போற்றப் பெறுவதனை ஈண்டு நாம் நினைவிற் கொள்ளுதல் வேண்டும்.

**கோப் பெருஞ் சோழன்**

இச் சோழன் உறையூரைத் தலை நகராகக் கொண்டு ஆண்ட மன்னனாவான். இவன் சிறந்த தமிழ்ப் புலவனாகத் திகழ்ந்ததால் பல புலவர் பெருமக்களை அன்புடன் ஆதரித்தான்.

இவனது காலத்தில் பொத்தியார் எனும் பெரும்புலவர், இவனது அவைக்களப் புலவராக விளங்கினர். இம்மன்னன் நல்லியல்பும் நற்பண்பும் வாய்க்கப் பெற்றவன். இவன் கண்ணகனர், கருவூர் பெருஞ்சதுக்கப் பூதனர், புல்லாற்றூர் எயிற்றியனர், பிசிராந்தையார் போன்ற பெரும்புலவர்களால் பாராட்டப் பெற்றவனவான்.

கோப்பெருஞ்சோழனும், பிசிராந்தையாரும், ஒருவருக் கொருவர் நேரில் கண்டு, பேசிப் பழக வில்லை யாயினும் உள்ளன்பு கொண்ட, உண்மையான நட்புக் கொண்டிருந்தனர் என்பது இங்குக் குறிப்பிடத் தக்க தாகும். கோப்பெருஞ்சோழ னுடைய மக்கள் தந்தையைப்போல் உயரிய பண்பு நலன்களைப் பெற்றிலர். இவர்கள் தந்தை உள்ள போதே நாட்டைக் கைப் பற்றி, ஆட்சி செய்யச் சூழ்ச்சி செய்து போர் செய்ய முற் பட்டனர். இதைக் கேள்வியுற்ற மன்னன், மக்கள் மீது சினங் கொண்டு, போர்க்கெழுந்த காலை, புல்லாற்றூர் எயிற்றியனரின் அறிவுரை கேட்டுத் தன் சினந் தணிந்து, ஆட்சிப் பொறுப்பினை மக்கட்கீந்து அரசுரிமையினின்றும் நீங்கி, வடக்கிருந்து உயிர் விடத் துணிந்தான்; தன் நண்பர்களுடன் வடக்கிருந்த போது, உள்ளன்பு பூண்ட பிசிராந்தையாரும் விரைவில் வருவார் என்று இவன் கூறினன். மன்னன் சொன்னவாறே எவ்வித முன்னறி விப்புமின்றிப் பிசிராந்தையாரும் அங்கு வந்து சேர்ந்தார்.

கோப்பெருஞ்சோழன், பிசிராந்தையார் நட்புத் தமிழகத் தில் உயர்ந்த நட்பிற்கு இலக்கியமாகவும், இலக்கணமாகவும் இன்றும் நின்று நிலவுகின்றது.

> 'புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
> நட்பாங் கிழமை தரும்.'[1]

என்னுங் குறட்பாவிற்கு, இவர்களது நட்பையே உரையா சிரியர் பரிமேலழகர் காட்டுகின்ருர் எனின், கோப்பெருஞ் சோழனின் பெருமையை என்னென்பது! கோப்பெருஞ்சோழ னின் வரலாற்றைப் புறநானூற்றில் சிறக்கக் காணலாம்.

***நலங்கிள்ளியும், நெடுங்கிள்ளியும்***

நலங்கிள்ளி பெருவீரனகத் திகழ்ந்தவன்; பாண்டியர்களை வென்றவன்; பெரிய கப்பற் படையும் கொண்டு பெருமன்ன னகத் திகழ்ந்தவன். கரிகாற் பெருவளத்தான் ஆட்சிக்குப் பின் சோழ மன்னர்கள் உறையூரையும், காவிரிப்பூம்பட்டினத்தை

[1] திருக்குறள்-நட்பு-5

யும் தலைநகர்களாகக் கொண்டு ஆட்சி புரிந்தனர். அவருள் நலங்கிள்ளி காவிரிப்பூம்பட்டினத்தையும், நெடுங்கிள்ளி உறை யூரையும் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தனர். இவர்களி டையே பகைமை ஏற்பட்டது; போரும் மூண்டது.

நலங்கிள்ளி நெடுங்கிள்ளியின் ஆவூர்க் கோட்டையை முற்றுகையிட்டான். பின்பு நெடுங்கிள்ளி ஆவூர்க் கோட்டை யிலிருந்து வெளியேறி உறையூர்க் கோட்டைக்குள் ஒளிந்து கொண்டான். நலங்கிள்ளியும் அவனை விடாது பின் தொடர்ந்து சென்று, உறையூரை முற்றுகையிட்டான். இதனைக் கண்டு மனம் வருந்திய கோவூர்கிழார் எனும் புலவர் இவர்களின் பகையை நீக்கி, நட்புச் செய்வித்தார். எனவே, மன்னர்கள் புலவர்களின் அறிவுரையை மதித்துப் பொன்னே போல் போற்றி நடந்தனர் என்பதும்,புலவர்கள் மன்னர்களின் நலனில் அக்கறை கொண்டிருந்தனர் என்பதும் புலப்படும்.

நலங்கிள்ளியைப் பற்றிப் பத்துப் பாக்கள் புறநானூற்றில் காணப்படுகின்றன. உறையூர் மதுக்கண்ணன், சாத்தனார், கோவூர் கிழார், ஆலத்தூர் கிழார், ஆகிய புலவர் பெருமக்கள் நலங்கிள்ளியின் நலன்களைப் பாராட்டி யுள்ளனர்.

**கிள்ளி வளவன்**

கிள்ளி வளவன் உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட சோழனாவான். இவனைப் புலவர் ஒன்பதின்மர் 18 பாக் களால் பாராட்டி யுள்ளனர். இப் பாடல்களால் இவன் மாவீரன், பெருமன்னன், சிறந்த புலவன், புலவரைப் போற்றிய புரவலன் என்பதை நாம் அறியலாம்.

இவன் சேர மன்னனுக் கெதிராக மேற்கொண்ட கருவூர் முற்றுகையும், மலைநாட்டுத் தலைவனான மலையமானுடன் செய்த போரும், பாண்டியர்களுடன் செய்த போரும், குறிப் பிடத் தக்கன வாகும். இவன் குளமுற்றம் என்ற ஊரில் இறந்து பட்டதால், குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் என்று அழைக்கப்படுகிறான்.

இவன் முத்தமிழைப் போற்றி வளர்த்துச் சிறந்த ஆட்சி முறையினை மேற்கொணடு, பெரும்புகழ் பெற்ற சோழ வேந்தனா வான். ஆலத்தூர் கிழார், வெள்ளைக்குடி நாகனார், மாறோக் கத்து நப்பசலையார், ஆவூர் மூலங்கிழார், கோவூர் கிழார், காடனார், ஆடுதுறை மாசாத்தனார், ஐயூர் முடவனார்,

நல்லிறையனார், எருக்காட்டூர் தாயங் கண்ணனார், நக்கீரர் போன்ற புலவர் பெருமக்கள் இவனைப் பெரிதும் பாராட்டி யுள்ளனர்.

**கோச் செங்கணான்**

சங்க காலத்தின் இறுதியில் சோழ நாட்டில் ஆட்சி புரிந்தவன் கோச் செங்கணான் ஆவன். அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவனாக இவன் சிறப்பிக்கப்பட்டான். இவன் சிவ பக்தன். ஆதலால், சிவபெருமானுக்கு எழில் மாடம் எழுபது கட்டினான்.

திருநாவுக்கரசர் முதலியோரும் இவனைப் புகழ்ந்துள்ளனர். திருமங்கையாழ்வார், இவன் திருமாலிடம் கொண்டிருந்த அன்பைப் பாராட்டிப் புகழ்கின்றார். பக்த சிரோன்மணியாக விளங்கிய இம்மன்னன் வீரம் செறிந்தவனாகவும் திகழ்ந்தான்.

கழுமலத்தில் இவனுக்கும் கணைக்காலிரும்பொறை என்னும் சேரமன்னனுக்கும் நிகழ்ந்த பெரும்போரில் இவன் வெற்றி பெற்றது குறிப்பிடத் தக்கது. பொய்கையார் என்னும் புலவர் தமது 'களவழி நாற்பது' என்னும் நூலில் இவ்வெற்றியைப் பாராட்டி யுள்ளார். இவனது ஆட்சிச் சிறப்பினை அக நானூற்றில் காணலாம். இவன் சங்க காலத்திற்குப் பிற்பட்டவன் என்றும் சிலர் கருதுகின்றனர்.

புறநானூறு, அகநானூறு, பத்துப்பாட்டு முதலிய சங்க நூல்களில் பேரவைக் கோப் பெருநற்கிள்ளி, பெருவிறற்கிள்ளி, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி முதலிய மன்னர்களைப் பற்றிய சுருக்கமான வரலாறுகள் காணப்படுகின்றன.

## இடைக் காலச் சோழர்கள்

வாழ்வும், தாழ்வும் மாறி மாறி வருவது உலக இயற்கை. சங்க காலத்தில் மங்காத புகழ் கொண்டு, ஆட்சி செய்து வந்த சோழ மன்னர்கள் இடைக் காலத்தில் வீழ்ச்சி யுற்றனர். ஏறத்தாழக் கி. பி. 300 முதல் கி. பி. 850 வரை சோழர்களின் வரலாற்றை இருண்ட காலமென்று கூறலாம். இந்த ஆறு நூற்றாண்டு காலத்தில் சோழர்களைப் பற்றிய செய்திகள் நமக்கு முறையாகக் கிடைக்க வில்லை.

கி.பி. நான்கு, ஐந்தாம் நூற்றாண்டுகளில், களப்பிரர் என்னும் வலிமை மிக்க கூட்டத்தினர் தமிழக மூவேந்தர்களை

வென்று அடிமைப்படுத்தினர். எனவே, இக்காலம் வரலாற்றில் களப்பிரர் இடையீடு (Kalabhra Interrugnum) என்று அழைக்கப் படுகிறது.

அச்சுத விக்கந்தன் என்பவன் களப்பிரர் தலைவனுவான். இக்காலத்தில் மங்காத தமிழும் சீர்மை குன்றியது. பல்லவர் கள் சோழ நாட்டைக் களப்பிரரிடமிருந்து மீட்டுத் தம் பேரரசை நிறுவினர். எனவே, இவர்களுடைய ஆட்சிக்காலத்தும் சோழர் கள் அருகிய நிலையில், திறை செலுத்தும் குறுநில மன்னர் களாகவும், அரசியல் தலைவராகவும் சிறுமை யுற்றனர் என்பது தேற்றம். கி. பி. 250 முதல் 850 முடிய சோழ நாட்டின் நிலை யைப் பற்றிய தெளிவான, முறையான வரலாற்றைக் கணிக்கப் போதுமான சான்றுகள் இல்லை.

சைவ, வைணவ, பௌத்தப் பெரியார்களால் பாடப்பட்ட பத்திப் பாக்களாலும் பல்லவர், சாளுக்கியர், பாண்டியர் முதலி யோர்களின் பட்டயங்களிலிருந்தும் கிடைத்துள்ள சொற்பமான ஆதாரங்களைக் கொண்டுதான், நாம் சோழர்களின் வரலாற்றை ஒரு சிறிது அறிய முடிகிறது. சேக்கிழார் பெருமான் இயற்றிய பெரிய புராணம் இக் காலத்திய சோழர்களைப் பற்றிய செய்தி களை விளக்கமாகத் தருகின்றது.

இக்காலப் பகுதியில் சோழ மன்னர்கள் உறையூர், பழை யாறை, திருவாரூர், கொடும்பாளூர் ஆகிய பகுதிகளில் வாழ்ந்து வந்தனர். இவற்றுள், பழையாறை ஆயிரந்தளி அரண்மனையில் நீண்ட காலம் வாழ்ந்தனர். எனினும் இவர்கள் குடத்திலிட்ட விளக்குப் போல் தான் விளங்கினர்.

அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவரும், ஐந்தாம் நூற்ருண்டில் வாழ்ந்து வந்தவரென்று எண்ணப்படுபவருமான தண்டியடிகள் தம் காலத்துச் சோழ மன்னனை நடுவனுக வைத்துத் தாம் இழந்த கண்களைச் சிவனருளால் பெற்ருர் என்ற செய்தி பெரிய புராணத்தில் கூறப்படுகின்றது.

நாயனுர் அறுபத்து மூவருள் ஒருவரான புகழ்ச் சோழரைப் பற்றிய செய்திகளையும் சேக்கிழார் பெருமான் குறிக்கின்ருர். புகழ்ச் சோழர் உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்தார். இவர் சிறந்த சிவநெறிச் செல்வராக விளங்கினுர். இவர் தமக்குத் திறை செலுத்த மறுத்த அதிகமானின் மீது போர் மேற்கொண்டார். இப்போரில் புகழ்ச் சோழர் வெற்றி பெற்ருர். இருப்பினும் இப்போரில் சிவனடியார் ஒருவரைத்

தாம் கொன்று விட்டதாக எண்ணித் தீயில் மூழ்கி இறந்தார் என்ற செய்தியைப் பெரிய புராணம் கூறுகின்றது.

அப்பரடிகள் என்று போற்றப்படும் திருநாவுக்கரசரும், தமிழ் ஞானசம்பந்தரும், ஏழாவது நூற்றுண்டில் வாழ்ந்த பெரு மக்களாவர். அப்பரடிகள் தம் காலத்தில் பழையாறையில் மணிமுடிச் சோழன் ஆட்சி செய்ததாகக் குறிப்பிடுகின்ருர். தமிழ் ஞானசம்பந்தர் தேவாரப் பதிகத்தில் மணிமுடிச் சோழ னின் மகளாகிய மங்கையர்க்கரசி பற்றிய குறிப்பும் காணப்படு கிறது.

கி. பி. எட்டாம் நூற்றுண்டில் வாழ்ந்த சுந்தர மூர்த்திகள் பாடிய பாக்களிலும், கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டின் முற்பகுதி யிலாண்ட மூன்ரும் நந்திவருமப் பல்லவன் காலத்தில் பாடப் பெற்ற நந்திக் கலம்பகத்திலும், சின்னமனூர்ச் செப்பேடுகளி லும், சோழ மன்னர்களைப் பற்றிய சில செய்திகள் குறிப்பிடப் படுகின்றன.

எனவே, மேற்கூறிய சான்றுகளால் வலிமை மிக்க களப்பிரர் காலத்திலும், பல்லவர்கள் காலத்திலும் ஏறத்தாழ ஐந்து நூற்றுண்டுகளாகச் சிற்றரசர்களாக விளங்கினரே யன்றி அழிந்துவிட வில்லை என்பதை உணரலாம்.

## பிற்காலச் சோழர் [கி. பி.846 - 1070]

தமிழக வரலாற்றில் பிற்காலச் சோழர் காலம் மிகவும் குறிப் பிடத் தக்க ஒன்ருகும். ஏறத்தாழக் கடந்த ஐந்து நூற்றுண்டு களாகப் புகழ் மங்கித் தாழ்ந்து கிடந்த சோழர்கள் மறுமலர்ச்சி பெற்று விழித்தெழுந்ததற்குப் பிற்காலச் சோழராட்சியே காரண மாகும்.

பாண்டியரையும், சோழரையும் தம்மடிமைப் படுத்தி ஆண்டு வந்த பல்லவர்களின் பேரரசு இக் காலத்தில் சரியத் தொடங்கிற்று. கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டின் முற்பகுதியில் மேலைச் சாளுக்கியர் பல்லவர்களை வடக்கிலிருந்து இடைவிடாது தாக்கினர். தெற்குப் பகுதியிலிருந்து பாண்டியர்கள் பல்லவர் களைத் தாக்கக் காத்திருந்தனர். இராட்டிர கூட மன்னர்களும் பல்லவர்களுடன் பகைமை பூண்டு, பல்லவர் பேரரசின் வட பகுதியைக் கைப்பற்றிக் கொண்டனர். இதனுல், சோழ நாட்டில் பல்லவராட்சி தளர்ச்சி யடைய ஆரம்பித்தது.

முத்தரையர் என்னும் மன்னர்கள் பல்லவர்களின் சிற்றரசர் களாகத் தஞ்சாவூர், திருச்சி, பழைய புதுக்கோட்டை சமஸ்தானம் ஆகிய நிலப்பகுதியை யாண்டு வந்தனர். இவர்கள் தஞ்சை, வல்லம்[1] செந்தலை (சந்திரலேகைச் சதுர்வேதி மங்கலம்)[2] ஆகியவற்றைத் தலைநகர்களாகக் கொண்டு ஆண்டு வந்தனர் என்பதைச் செந்தலைக் கல்வெட்டால் அறியலாம்.

கி.பி. எட்டாம் நூற்றுண்டில் பெரும்பிடுகு முத்தரையன் ஒரு புகழ் பெற்ற மன்னனுவான். இவன் 'தஞ்சைக் கோன்'[3], என்றும் 'தஞ்சை நற்புகழாளன்'[4] என்றும் கல்வெட்டு களால் புகழப் பட்டுள்ளான். மறக்குடியினரான முத்தரையர் வள்ளண்மை மிக்கவர் என்பதைப் 'பெருமுத்தரையர் பெரிது வந்தியும் கருணைச் சோறு' என்ற நாலடியார் பாடலால் உணரலாம்.[5] இவர்கள் பாண்டியர்களை வென்றதாகவும் செந் தலைக் கல்வெட்டுக் கூறுகின்றது.

பல்லவர்கள் ஒன்பதாம் நூற்றுண்டில் வலிமை குன்றியதால் சோழர்கள் தஞ்சையைக் கைப்பற்றக் காலம் கருதியிருந்தனர். இப்பொன்னுன வாய்ப்பைப் பயன்படுத்தி, முத்தரையரை வென்று, தஞ்சையைக் கைப்பற்றிச் சோழர்களின் இழந்த பெருமையை மீட்ட பெருமை விசயாலயனைச் சாரும்'.

இக்காலச் சோழர்கள் கால அடிப்படையில் பிற்காலச் சோழர்க ளென்றும், தஞ்சையைத் தலைநகராகக் கொண்டதனுல் தஞ்சைச் சோழ வமிச மென்றும், விசயாலயனுல் தோற்று விக்கப்பட்டதால் விசயாலய சோழ வமிச மென்றும் அழைக்கப் படுகின்றனர்.

இப்பிற்காலச் சோழர்கள் (Later Cholas) வரலாற்றுச் சோழர்கள் எனவும் பெருஞ்சோழர்கள் (Great Cholas) எனவும் ஏகாதிபத்தியச் சோழர்கள் (Imperial Cholas) எனவும் அழைக் கப்படுகின்றனர்.

*விசயாலய சோழன் [கி. பி. 846-881.]*

கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டின் இடைப் பகுதியில் பழையாறைப் பகுதியைச் சோழர்களும், தஞ்சைப் பகுதியை

[1] Epi. Ind. Vol. XIII pages. 142-143.
[2] Ins. No. 202 of 1926.
[3], [4] Epslaphia India. Vol. XIII. P. P. 142 of 144
[5] நாலடியார் - பா. 200.
[6] The Cholas. Vol I. Page-135.

முத்தரையர்களும் பல்லவப் பேரரசுக்குட்பட்ட குறுநில மன்னர்களாக ஆண்டு வந்தனர்.[1] சோழர் தலைவனான விசயாலய சோழன் தனது ஆதிக்கத்தினைத் தஞ்சையின்மீது செலுத்தப் பேரவாக் கொண்டான். அது போழ்து தஞ்சைப் பகுதியை விடேல்விடுகு முத்தரையன் குவாவன் சாத்தன் மகன் சாத்தன் பழியிலி (Sattan Paliyili- C. A. D 826 - C. 851)என்பான் ஆண்டு வந்தான்.

சாத்தன் பழியிலி தன் முன்னோர்களைப் போல் பெரும்பிடுகு, விடேல்விடுகு, மார்ப்பிடுகு போன்ற விருதுகளைச் சூட்டிக் கொள்ள வில்லை. ஆதலின், இவன் பல்லவரின் ஆதிக்கத்திலிருந்து விடுதலைபெற்றுத் தனித்தாண்டிருக்க வேண்டுமென்பதனை உய்த்துணரலாம். இக்கருத்தினை நார்த்தாமலைக் கல்வெட்டினாலும் அறியலாம்.

விசயாலயன் சாத்தன் பழியிலியை வென்று தஞ்சையைக் கைப்பற்றி, அதனைத் தனது தலைநகராக்கிச் சோழ அரசினை நிறுவினான்.

இவன் கடைச் சங்க காலத்தில் சோணாட்டினை யாண்ட கிள்ளிவளவன், கரிகாலன், செங்கணான், நல்லடி ஆகிய சோழர் மரபில் தோன்றியவன் என்பதை அன்பில்,[2] ஆனைமங்கலம்,[3] திருவாலங்காட்டுச் செப்பேடுகளும்,[4] கன்னியாகுமரிக் கல்வெட்டுகளும்[5] கூறுகின்றன.

இவன் கடைச்சங்கச் சோழரின் வழித்தோன்றல் என்பதை 'மூவருலா'[6] 'கலிங்கத்துப் பரணி'[7] ஆகிய நூல்களினாலும் அறியலாம்.

விசயாலயன் 'பரகேசரி' பட்டத்துடன் அரியணையேறியதாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன. இராசகேசரி, பரகேசரி என்ற பெயருடைய இருபெருஞ்சோழ மன்னர்கள் முற்காலத்தில்

[1] Epi. Ind. Vol. XIII. No. 10.
[2] Epi. Ind· Vol. XV. No. 5.
[3] Ibid. Vol. XXII No. 34.
[4] S. I. I. Vol. III.
[5] T. A. S. Vol. III. No. 34.
[6] விக்கிரம சோழனுலா, வரிகள் – 25-32.
குலோத்துங்க சோழனுலா, வரிகள் – 35-46.
இராசராச சோழனுலா. வரிகள் – 29-40
[7] கலிங்கத்துப்பரணி - பா. 197-200.

ஆட்சி புரிந்ததாகப் பண்டைச் செப்பேடுகள்[1] சான்று பகர்கின்றன. பண்டைக் கால மக்களிடையே இவ்விருவர் பெயர்களும் நல்ல செல்வாக்கினைப் பெற்றிருந்தன. பண்டைக் காலத்தில் வாழ்ந்த மக்கள் தங்கள் முன்னோர்களின் பெயரினைத் தங்கள் குழந்தைகட்குச் சூட்டி மகிழ்ந்தனர் ; அதில் பெருமையும் கொண்டனர். தம் முன்னோர்களின்மீது பெருமதிப்பு வைத்திருந்த பிற்காலச் சோழர்கள் தங்கள் பெயர்களுக்கு முன்னர் இராசகேசரி, பரகேசரி என்ற பட்டங்களை ஒருவர்பின் ஒருவராக மாறி மாறிப் புனைந்து கொள்வது வழக்கமாயிற்று. தந்தை 'இராசகேசரி' பட்டம் புனைந்து கொண்டால் மகன் 'பரகேசரி' பட்டத்தினைப் புனைந்து கொள்வான். இதனால், இம்மன்னனுக்குப்பின் இன்னவன் ஆண்டான் என்னும் முறைமையும், மரபு தொடர்ச்சியும் இனிது விளங்குகின்றன. இவை ஆராய்ச்சியாளர்கட்கும், வரலாறு கற்போருக்கும் பெருந்துணை புரிகின்றன.

இவன் நெடுந்தோற்றமும், உடற்கட்டும், மேனியழகும், ஆற்றலும், கலைப் பயிற்சியும், நிருவாகத் திறனும் ஒருங்கே பெற்றிருந்த மாவீரனுவன். வன்மை மிக்க முத்தரையர்களை வென்று, பல்லவர்க்கு அடங்கியிருந்த நிலையினின்றும் தன்னைப் பெருமளவில் உயர்த்திக் கொண்டு, தமிழக வரலாற்றின்கண் புகழ் மிக்கதொரு பேரரசர் பரம்பரையைத் தொடங்கி வைத்த விசயாலய சோழன் ஆற்றல் மறவனுகப் புகழ் பூத்துவிளங்கியமை போற்றுதற் குரிய தாகும்.

பரகேசரி விசயாலயன் ஏறத்தாழ 35 ஆண்டுகள் ஆண்டான்[2]. இவன் சோழப் பேரரசை உருவாக்கிய முதல்வனுகலின் தனது பேரரசை நிலைநாட்டப் பகைஞர்களுடன், இடைவிடாது போர் பல செய்ய வேண்டுவ தாயிற்று. 'விழுப்புண் படாத' நாள்களை வீண் நாள்களாகக் கருதிய மாவீரன் விசயாலயன். இவன் தனது மேனியில் தொண்ணூற்ருறு விழுப்புண்களைப் பெற்றிருந்தான். 'புண் கொண்ட வென்றிப் புரவலன்'[3] என மூவருலாவும் இவனைச் சிறப்பித்துள்ளது.

இவன் முத்தரையரை வென்ற வெற்றிச் சின்னமாகத் தஞ்சையில் 'நிசும்ப சூதனி' என்னும் பெயருடன் துர்க்கைக்கு

[1] கரந்தைச் செப்பேடு – வ. செ. 7 8.

[2] Annual Report on South Indian Epstaphy for 1908–09 Page 86 Ins. No, 447 of 1917.

[3] விக்கிரம சோழனுலா - 27-32.

ஒரு கோயில் அமைத்தான்.[1] வட புலத்திலிருந்த பல்லவர் கட்கும், தென்புலத்திருந்த பாண்டியர்கட்கும் தமிழகத்தில் தம் தம் ஆதிக்கத்தை நிறுவும் நோக்கத்தோடு கி. பி. 854-ஆம் ஆண்டில் நடைபெற்ற 'குடமூக்குப்' போரிலும்,[2] கி. பி. 862ஆம் ஆண்டில் நடைபெற்ற 'அரிசிலாற்றங்கரைப் போரி லும்'[3] விசயாலயன் பல்லவர்க்குத் துணை புரிந்திருக்க வேண்டு மென்று வரலாற்றறிஞர்கள் கருதுகின்றனர்.

கி. பி. 871இல் விசயாலயன் தன் மகன் முதலாம் ஆதித்த னுக்கு இளவரசு பட்டம் சூட்டினான்.[4] கி.பி. 880இல் திரும் புறம்பியத்தில்[5] பல்லவர்கட்கும், வரகுண பாண்டியனுக்கும் நிகழ்ந்த போரில் விசயாலயன் மகன் முதலாம் ஆதித்தன் பல்லவர்க்குத் துணை புரிந்தான். இரு திறத்தாரும் கடும்போர் புரிந்தனர். குருதியாறு ஓடிற்று. இக்குருதிப் பெருக்கைத் தாங்கிய இடம் இன்றும் 'உதிரப் பட்டி' என்னும் பெயரால் அழைக்கப்பெறுகிறது. ஆதித்தன் தன் பேராண்மையை நிலை நாட்டி, வெற்றி பெற்றுச் சோழர் புகழை நிறுவினான்.

சோழர் வரலாற்றில் மட்டுமன்றித் தமிழக வரலாற்றிலும் திருப்புறம்பியப் போர் ஒரு திருப்பு முனையாக அமைந்தது. இப் போர் தமிழக வரலாற்றில் ஒரு புதிய காலக் கட்டத்தை உரு வாக்கி, வரலாற்று முக்கியத்துவம் பெற்றுள்ளது. இப்போர் பாண்டியன் நெடுஞ்செழியன் வென்ற தலையாலங்கானப் போருடனும், கரிகாற் பெருவளத்தான் வென்ற வெண்ணிப் போருடனும், முகலாயப் பேரரசை நிறுவிய பாபர் மேற் கொண்ட முதலாம் பானிப்பட்டுப் போருடனும், ஆங்கிலப் பேரரசை இந்தியாவில் நிலை நாட்ட, இராபர்ட் கிளைவ் செய்த பிளாசிப் போருடனும், ஒப்புமை கூறத் தக்க முக்கியத்துவம் வாய்ந்த தாகும்.

இப் போரின் விளைவாகச் சோழர் முடி மன்னராகிச் சோழ மண்டலம் முழுமையும் தமது பேராண்மைக்கு உட்படுத்தி யாளும் பெருவாய்ப்பைப் பெற்றனர். சோழ நாட்டில்

[1] S. I. I. Vol. III No. 205 Verse-46. (திருவாலங்காட்டுச் செப்பேடு)

[2] சின்னமனூர்ச் செப்பேடு – S. I. I. Vol. III No. 206

[3] S. I. I. Vol II, Part 5. No. 98. Post Script. P. P. 154 and 155 Epi. Ind. Vol. XVIII. No. 2.

[4] Epi. Ind. Vol. XXVI. Page 233

[5] Udayendiram Plates of Prithivi pathi II. Verse 18, (S. I. I., Vol II. No. 76).

பாண்டிய மன்னர்களின் ஆதிக்கத்திற்குச் சாவு மணி அடிக்கப் பட்டது. பல்லவர்களின் வலிமையும் குன்றியது. கடந்த ஆறு நூற்றுண்டுகளாக, மங்கியதோர் நிலவாகக் காட்சி தந்த சோழ ராட்சி மீண்டும் செங்கதிர் பரப்பும் வெங்கதிரோன் போல் எழுச்சி பெற்றது. இருண்டு விட்ட வானத்தில் தோன்றி விட்ட விண்மீன்கள் விடிந்து விட்ட வானத்தில் மறைந்து விட்டது போல் பாண்டிய பல்லவராட்சி சோழ நாட்டில் மறைந்து விட்டது.

இவ்விதம் விசயாலயன் சோழர்களின் மறுமலர்ச்சிக்கு வித்திட்டான். இவனைப் பரகேசரி வருமன் விசயாலய சோழ தேவன் என்று திருவாலங்காட்டுச் செப்பேடு குறிப்பிடுகின்றது. சென்ற விடமெல்லாம் செருவென்று வெற்றி வீரனுகத் திகழ்ந்த தனுல் இவன் 'விசயாலயன்' என்ற பெயர் பெற்றிருக்க வேண்டும்.

**விசாயாலய சோழீசுவரம்**

திருச்சி மாவட்டத்திலுள்ள நார்த்தா மலையில் இரு கற்றளி கள் காணப்படுகின்றன. இவற்றுள் ஒன்று விசயாலய சோழனுல் கட்டப்பெற்று 'விசயாலய சோழீசுவரம்' எனப் பெயர் பெற்றது என்று வரலாற்றுப் பேரறிஞர்கள் பலர் கூறியுள்ளனர். ஆனுல், அண்மைக் கால ஆராய்ச்சியின்படி இது முத்தரையர் எனும் சிற்றரசர்களால் கட்டப்பட்டதாகத் தெரிகின்றது. முத்தரையர் பல்லவர்களின் கீழ்ச் சிற்றரசர்களாக ஆட்சி புரிந்ததை முன்பே கண்டோம்.

நார்த்தா மலையின்மீது இரண்டு குடைவரைக் கோயில்கள் காணப்பெறுகின்றன. அவற்றுள் ஒன்று பழியிலியீசுவரம் என அழைக்கப்படுகிறது. இது விடேல்விடுகு முத்தரையன் மகன் சாத்தன்பழியிலி என்பவனுல் குடையப் பெற்ற தென்று சாசனத்திற் குறிக்கப்பெற்றுள்ளது. இவன் முத்தரையன் என் பதை இவனது பெயரைக் கொண்டும், கல்வெட்டைக் கொண்டும் அறியலாம்.

பழியிலியீசுவரத்திற்கு எதிரே ஒரு கற்றளி உள்ளது. இது தான் விசயாலய சோழீசுவரம் என அழைக்கப்படுகிறது.[1] இக்கோயிலின் எதிரிலுள்ள பாறை ஒன்றில், மாறவருமன் சுந்தர பாண்டியனின் கல்வெட்டொன்று காணப்படுகிறது. பதின் மூன்ரும் நூற்றுண்டைச் சார்ந்த இக்கல்வெட்டு இக்கோயிலை

[1] Ins. of the Pudukkottai state No. 282.

'விசயால்ய சோழீசுவரம்' எனக் குறிக்கின்றது. இப்பாண்டியனது காலத்தில் இக்கோயிலுக்கு வழங்கப்பட்ட பெயரினையே இக்கல்வெட்டுக் குறிப்பதாகக் கொள்வதுதான் பொருத்தமுடைத்து. இது பிற்காலத்தைச் சார்ந்த கல்வெட்டு என்பது யாவரும் அறிந்ததே.

இக்கோயில் வாயிலின் இடப் பக்கத்திலுள்ள வாயிற் காப்போன் (துவார பாலகர்) சிலையின் அடியிலுள்ள கல்வெட்டு, 'செம்புடி என்னும் இளங்கோடரையனால் கட்டப்பட்ட இக் கற்றளி, பெரு மழையால் அழிக்கப்பட்டபின், மல்லன் விதுமன் என்னும் தென்னவன் தமிழடி யரையன் என்பவனால் புதுப்பிக்கப்பட்டது' என்று குறிக்கின்றது.

இக்கோயில் கட்டப்பெற்ற காலத்தில், இக்கோயிலிலேயே எழுந்த கல்வெட்டில் இது 'விசயாலய சோழீசுவரம்' எனக் குறிக்கப்பெற வில்லை. இக்கோயிலைக் கட்டிய செம்புடி இளங்கோடரையன் என்னும் முத்தரையன் பல்லவ மன்னனான இரண்டாம் நந்திவருமனின் காலத்தவன் என்பது ஆராய்ச்சியாளர் கூற்றாகும். மேலும், மல்லன், தமிழடி, அரையன் ஆகிய சிறப்புப் பெயர்கள் முத்தரையர்களைக் குறிப்பதே யாகு மென்பது பழியிலி ஈசுவரக் குடைவரைக் கல்வெட்டால் அறியலாம்.

மேற் கூறியவற்றால் இக்கோயில் இளங்கோடரையன் என்னும் முத்தரையனால் கட்டப்பெற்றுத் தென்னவன் தமிழடி அரையனால் புதுப்பிக்கப்பெற்றது என்றும், இதனை 'விசயாலய சோழீசுவரம்' என அழைப்பது அத்துணைப் பொருத்தமாகத் தெரிய வில்லை என்றும் அறியலாம்.

### *முதல் ஆதித்த சோழன்* (கி.பி. 871 - 890)

பரகேசரி விசயாலயன் மாண்டபின் இராசகேசரி என்ற பட்டத்துடன் கி.பி.871இல் முதலாம் ஆதித்த சோழன் அரியணையேறினான். இவனுக்குக் கோதண்டராமன் என்னும் சிறப்புப் பெயரும் உண்டு.[1] இவன் சேர மன்னனுடனும், கங்க மன்னனுடனும் நட்புக் கொண்டு, துணை வலியையும், படை வலியையும் பெருக்கிப் பல்லவ மன்னனான அபராசித வருமனை வென்று தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றினான். கொங்கு[2] மண்டலத்தை வென்று, அங்கிருந்து கொணர்ந்த பசும்பொன்னைக் கொண்டு, தில்லைச் 'சிற்றம்பல முகட்டை அழகு படுத்தினான்

[1] T. A S. Vol. III. No. 34. Verse 55.

[2] S. I. I. Vol. Vol. III. No. 205, Verse 49.

என்பதைச் 'சிற்றம்பல முகடு கொங்கிற் கனகம் அணிந்த ஆதித்தன்' என்று நம்பியாண்டார் நம்பி தமது திருத்தொண்டர் திருவந்தாதியில்[1] குறிப்பிட்டுள்ளதால் இனிது விளங்கும்.

பகைஞர்களை வென்று, தனது பேரரசினை விரிவு படுத்திய ஆதித்தின் சமயத் தொண்டிலும் நாட்டம் கொண்டான். காவிரி யாற்றின் இருமருங்கும் பல சிவாலயங்களைக் கற்றளியாக மாற்றிப் புகழ் பெற்றான்.[2] இவன் பல்லவர்களுடன் திருமண உறவு வைத்துக் கொண்டான்.

இவனுக்கு இரு மனைவியரும், இரு மக்களும் இருந்தனர். இவன் பராந்தகனுக்கு அரியணையை யளித்து கி.பி. 907இல் தொண்டைமானாற்றூரில் இறந்து பட்டதால்[3] 'தொண்டை மானாற்றூரில் துஞ்சிய தேவர்' என்றழைக்கப்படுகிறான்.

**முதல் பராந்தக சோழன்** (கி.பி.907 - 953)

முதலாம் பராந்தகன் பரகேசரி பட்டத்துடன் கி.பி.907இல் அரசுகட்டில் ஏறினான். இவன் ஏறத்தாழ அரை நூற்றாண்டு காலம் பகைவர்களுடன் போர் செய்து சோணாட்டின் எல்லைகளை விரிவுபடுத்தினான். இவன் கி. பி. 910இல் பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து இராசசிம்ம பாண்டியனை வென்று 'மதுரை கொண்ட கோப்பரகேசரி' என்னும் பட்டத்தினைப் பெற்றான்.[4] பாண்டிய மன்னன் இலங்கை வேந்தனும் ஐந்தாம் காசிபனிடம் அடைக்கலம் புகுந்தான். ஈழப் படையின் துணையுடன் மறு முறையும் முதலாம் பராந்தகனுடன் வெள்ளூரில்[5] போரிட்டுத் தோல்வி யடைந்து மறுபடியும் இலங்கைக்கு ஓடினான்.

ஈழ நாட்டில் பாண்டியன் அடைக்கலமாக வைத்துச் சென்ற மன்னர் முடியினைக் கவர வேண்டி முதலாம் பராந்தகன் ஈழப் படையெடுப்பை மேற்கொண்டான். ஈழ நாட்டின் வட பகுதி சோழ அரசுடன் இணைக்கப்பட்ட போதிலும் பராந்தகனால் முடியைக் கவர முடிய வில்லை. இவ்வெற்றியின் அறிகுறியாக முதலாம் பராந்தகன் 'மதுரையும், ஈழமும் கொண்ட கோப்

[1] திருத்தொண்டர் திருவந்தாதி - பாடல் - 65
[2] Ep. Ind. Vol. XV. No. 5.
[3] S. I. I. Vol. III No. 142.
[4] Ins. II of 1931; Ias. 157 of 1928.
[5] S. I. I. Vol. III. No. 99; Ins-231 of 1926.

பரகேசரி வருமன்"[1] என்னும் விருதினையும் பெற்று மதுரையில் முடிசூட்டிக் கொண்டான்.

சோழ மண்டலத்தையும், பாண்டிய மண்டலத்தையும் ஆண்டதால் இவன் 'இருமடிச்சோழன்' என்னும் பட்டத்தினை யும் பெற்றான். இவன் பாண்டிய மன்னனை வென்று மதுரையைச் சுட்டுப் பாழாக்கினமையின் 'மதுராந்தகன்' என்றும், சிங்கள வேந்தனைக் கொன்றமையின் 'சிங்களாந்தகன்' என்றும் பெயர் பூண்டான்.

இராட்டிர கூட மன்னனாகிய இரண்டாம் கிருட்டிண தேவன் தன் மகள் இளங்கோப்பிச்சியை முதல் ஆதித்த சோழனுக்கு மணம்செய்து கொடுத்தமையால் சோழரும், இராட்டிரகூடரும் நெருங்கிய உறவினாற் பிணிக்கப்பட்டிருந்தனர்.

பின், இராட்டிரகூட மன்னன் இரண்டாம் கிருட்டிண தேவனுடைய பேரனின் மகன் நான்காம் கோவிந்தனுக்குப் பராந்தகன் தன் மகள் வீரமா தேவியை மணம் செய்து கொடுத் தான். இராட்டிர கூட மன்னனாய் முடிசூடி அரசு செலுத்திய நான்காம் கோவிந்தன் அரசுமுறை பிறழ்ந்து அரசாளவே, அரசாங்க அலுவலர்களும், குறுநில மன்னர்களும், பொது மக்களும் வெறுக்கக் கூடிய நிலை ஒன்று ஏற்பட்டது.

அக்காலை உள்நாட்டில் குழப்பமும், கலகமும் உண்டாயின. இவ்வரிய வாய்ப்பினைப் பயன் படுத்தி நான்காம் கோவிந்தனின் சிறிய தந்தை மகன் மூன்றாம் கிருட்டிண தேவன் இவனை அரசு கட்டிலினின்றும் ஓட்டிவிட்டான். அரசிழந்த நான்காம் கோவிந்தன், தன் தேவியோடு தன் மாமனார் வீட்டிற்கு (தஞ்சை) வந்து தங்கியிருந்தான். இதன் காரணமாக மூன்றாம் கிருட்டின தேவனுக்கும், பராந்தகனுக்கும் பெரும்பகை மூண்டது.

பராந்தக சோழன் தன் மருமகன் மீண்டும் அரசுரிமை பெறும் பொருட்டுக் கி.பி. 939ஆம் ஆண்டிறுதியில் இராட்டிர கூட நாட்டில் பெரும்போர் நிகழ்த்தியும், தோல்வியுறவே மூன்றாம் கிருட்டிண தேவன் பராந்தகனுக்குப் பெரும்பகைவனா னான். இப்போரில் கங்க நாட்டு மன்னனும், மூன்றாம் கிருட்டிண தேவனின் தமக்கை கணவனுமான பூதுகன் என்பான் பெரும் படையுடன் சென்று மூன்றாம் கிருட்டிண தேவனுக்குப் பேருதவி புரிந்தான்.

[1] Ins-553 of 1920.

பின் சினந் தணியாத மூன்ரும் கிருட்டிண தேவன் பத்தாண்டு காலம் தன் படைகளைப் பெருக்கி வந்து 949இல் தக்கோலம்[1] என்னுமிடத்தில் (அரக்கோணத்திற்குக் கிழக்கே ஆறு கல் தொலைவு) பராந்தகனது பெரும் படையுடன் பெரும் போர் செய்து, வெற்றி கொண்டு, தொண்டை நாட்டின் சில பகுதிகளைத் தன்னுட்சியின் கீழ்க் கொணர்ந்தான். இப்போரிலும் மூன்ரும் கிருட்டிண தேவனுக்குப் பெரும் படையுடன் சென்று கங்க மன்னன் பூதுகன் உதவி புரிந்தான். சோழர் படையை நடத்திச் சென்றவன் பராந்தகன் மகன் இராசாதித்தனுவான். இவன் யானையின் மீதிருந்து போரிடும் காலை பூதுகனுல் எய்யப் பட்ட அம்பு ஒன்று இவனைக் கொன்றதால் 'யானைமீது துஞ்சிய தேவன்'[2] என அழைக்கப்பெற்ருன்.

முதல் பராந்தகன் சிவநேயச் செல்வனுயிருந்து திருவிடை மருதூர், திருவாடுதுறை ஆகிய ஊர்களிலிருந்த சிவன் கோயில் களைக் கற்றளியாக மாற்றினுன். தில்லைப் பொன்னம்பலத்தைப் பொன் வேய்ந்து,

> 'கோதிலாத் தேறல் குனிக்கும் திருமன்றம்
> காதலால் பொன்வேய்ந்த காவலன்'[3]

என்று ஒட்டக்கூத்தரால் பாராட்டப்பட்டான். இவன் தலை சிறந்த ஆட்சியாளன் என்பதை உத்திர மேரூர்க் கல்வெட்டால் அறியலாம்.

'சோழ சிகாமணி' 'சூர சிகாமணி', 'சமர கேசரி', 'விக்கிரம சிங்கன்', 'சுங்கிராம ராகவன்', 'சோழ குலப் பெருமானுர்', 'வீர நாராயணன்', 'வீர சோழன்', 'பண்டித வத்சலன்', 'குஞ்சர மல்லன்' போன்ற விருது பெயர்களும் இவனுக் குண்டு என்பதைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இவன் கி.பி. 953இல் இறந்தான். வடக்கே காளத்தியிலும், தெற்கே சுசிந்திரத்தும், மேற்கே கருவூருக்கு அருகில் சோழுரிலும் இவன் சாசனங்கள் காணக் கிடைத்தலால், இவன் காலத்தில் சோழப் பேரரசு பரந்து விரிந்ததாகத் திகழ்ந்தது என்பதை அறியலாம்.

**கண்டராதித்தன்** (கி. பி. 950-957)

'யானைமேல் துஞ்சிய தேவன்' இராசாதித்தனது இறப்பால் மனமுடைந்த பராந்தகன் கி. பி. 950இல்

[1] Ibid P. 117.

[2] S. I. I. Vol. III. Nos. 132 and 201.

[3] விக்கிரம சோழனுலா-வரிகள் 31, 32.

கண்டராதித்தனுக்கு இளவரசு பட்டம் கட்டினன். இவன் இராசகேசரி வருமன் பராந்தகன் கண்டராதித்தன் என்னும் பெயருடன் அரியணை யேறினன்.

இவன் அமிழ்தினும் இனிய தமிழ் மொழியினை உயிராகப் போற்றித் தமிழ்ப் புலமையில் தலை சிறந்து விளங்கினன். தில்லை கூத்தன் மீது செஞ்சொற் கவிமழை பொழிந்தான். இவை சைவத் திருமுறைகளுள் ஒன்றான ஒன்பதாம் திருமுறையில் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் ஒன்று,

> 'சீரான் மல்கு தில்லைச் செம்பொன் அம்பலத்து ஆடி தன்னைக்
> காரார் சோலைக் கோழி வேந்தன் தஞ்சையர் கோன் கலந்த
> ஆரா இன்சொல் கண்டரா தித்தன் அருந்தமிழ் மாலை வல்லார்
> பேராஉலகில் பெருமை யோடும் பேரின்பம் எய்து வாரே'[1]

சிவஞான கண்டராதித்தனைப் போற்றப்படும் இவன் எம்மதமும் சம்மதம் என்னும் பரந்த கொள்கையைப் பின் பற்றினன். இவன் தனது பெயரால் திருச்சி மாவட்டத்தில் திருமழபாடிக்கு அருகில் கொள்ளிடத்தின் வடகரையில் கண்ட ராதித்த சதுர்வேதி மங்கலம் என்ற ஊரை அமைத்து, ஆங்குத் திருமால் கோட்டம் ஒன்றையும் தோற்றுவித்தான்.

இவன் மழவரையன் மகள் செம்பியன் மாதேவியை[2] மணந்து கொண்டான். செம்பியன் மாதேவியும், சிவன்மீது மிகுந்த பற்றுடையவளாகத் திகழ்ந்தாள். இம்மாதேவியின் பெயரால் கண்டராதித்த சதுர்வேதி மங்கலத்திற்கு மேற்கே இரண்டு கல் தொலைவில் கொள்ளிடத்தின் வட கரையில் 'செம்பியன் மாதேவிக்குடி' என்ற ஓர் ஊரும் காணப்படுகிறது. இவனுக்கு 'வீர நாராயணி' என்னும் மற்றொரு மனைவியும் உண்டு.

அரசியல் துறையில் இவரது காலம் சிறப்புடைய தன்று. இவன் காலத்தில் வீர பாண்டியன் என்னும் மன்னன், பாண்டிய நாட்டில் தன்னுரிமை எய்தித் தனியாட்சி செலுத்தினன். தொண்டை மண்டலமும் திருமுனைப்பாடி நாடும் மூன்றும் கிருட்டிணனுக்கு உட்பட்டிருந்தன. கண்டராதித்தன் காலத்தில்

[1] திருவிசைப்பா–கோயிற் பதிகம்–பா. 10

[2] S. I. I. Vol. III. No. 141

சோழப் பேரரசு விரிவடையாது சுருங்கியமை ஈண்டுக் குறிப்பிடத்தக்க தாகும்.

கண்டராதித்தனுக்குச் செம்பியன் மாதேவிபால் மதுராந்தகன் என்னும் அருமந்த மகன் ஒருவன் பிறந்தான். இவனே உத்தம சோழன் என்று அழைக்கப் பெறுகிருன். இவன் சிறுவனுதலின் கி. பி. 954இல் கண்டராதித்தன், தன் தம்பியாகிய அரிஞ்சயனுக்கு இளவரசு பட்டம் கட்டினுன்.

*அரிஞ்சய சோழன்* (கி.பி. 956 - 957)

கண்டராதித்தனுக்குப்பின் அவன் தம்பி பரகேசரி அரிஞ்சயன் கி. பி. 954இல் ஆட்சியை மேற்கொண்டான். இவன் வைதும்ப மன்னனின் மகளாகிய கலியாணியை மணந்துகொண்டான். இவனுக்குப் பராந்தகன் என்னும் மகனும், அரிஞ்சிகைப் பிராட்டி என்னும் மகளும் இருந்தனர்.

இவன் வைதும்பருடனும், வாணர் குலத்துடனும் திருமண உறவு வைத்துக் கொண்டு இராட்டிர கூடர்களின் வலிமையைக் குறைத்தான்.[1] இவன் தொண்டை நாட்டைக் கைப்பற்றவும் முயற்சிகள் செய்தான். இவன் வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள ஆற்றூரில் இறந்ததால் 'ஆற்றூர் துஞ்சிய தேவர்'[2] என்று குறிப்பிடப்படுகின்ருன்.

*இரண்டாம் பராந்தகன்* (கி.பி. 957 - 970)

அரிஞ்சயனுக்குப் பின்னர் அவன் மகன் இரண்டாம் பராந்தகன் இராசகேசரி சுந்தர சோழன் என்னும் பெயருடன் கி. பி. 957இல் அரசு கட்டிலேறினுன். இவன் மிக்க அழகுடன் திகழ்ந்ததால் சுந்தர சோழனென்று அழைக்கப்பட்டான்.[3] இவன் தன் ஆட்சியின் தொடக்கக் காலத்திலேயே தன் மகன் கரிகாலன் என்றழைக்கப்படும் ஆதித்தனை ஆட்சியில் ஈடுபடுத்திஞன். இவன் பழையாறை நகரிலிருந்து ஆட்சி புரிந்தான்.

இவன் வீர பாண்டியன் என்னும் பாண்டிய மன்னனைக் கி.பி. 962இல் 'சேவூர்ப்' போரில் வென்று காட்டிற்கு விரட்டினுன். எனவே, இவன் 'மதுரை கொண்டான்'[4] என்றும் 'பாண்டியனைச் சுரம் இறக்கின பெருமாள்'[5] என்றும் அழைக்

[1] Ins 215 of 1911

[2] S.I.I. Vol. III Nos. 15, 16 and 17.

[3] Ep. Ind Vol. XV No. 5. Verse 26

[4] S. I. I. Vol. III Nos, 15, 116, 117, and 118.

[5] Ep. Ind ; Vol XII. No. 15 ; Ios. 302 of 1208.

கப் பெறுகின்ருன். இரண்டாம் முறையாகச் சோழப் பட்டத் திளவல் ஆதித்த கரிகாலன் தலைமையிலான படை, பாண்டியரை வென்று, வீரபாண்டியரைக் கொன்றதனுல் 'வீரபாண்டியன் தலை கொண்டான்' என்று சிறப்பிக்கப்படுகிருன். சுந்தர சோழன் இராட்டிர கூடரை வென்று தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றி ஆதித்த கரிகாலனை அப்பகுதிக்குப் பெயராளாக (பிரதிநிதி) நியமித்தான்.

இம்மன்னன் தமிழ்ப் புலவர்களைப் போற்றி ஆதரவளித்தான். வீரசோழிய உரையில் இவனைப் பற்றி இருபாக்கள் காணப்படுகின்றன. இவன் புறச் சமயங்களை வெறுக்க வில்லை. இவனது காலத்தில் நாட்டின் நலனைப் பெருக்க வட ஆர்க்காடு மாவட்டத்தில் சுந்தர சோழப் பேரேரி[1] என்னும் ஏரியை வெட்டினுன்.

இவனுக்கு ஆதித்த கரிகாலன், அருள் மொழித் தேவன் (முதல் இராச ராசன்) என்ற இரு மக்களும், குந்தவை என்னும் மகளும் இருந்தனர். இவன் தன் மகள் குந்தவையைக் கீழைச் சாளுக்கிய இளவரசனுன வல்லவரையர் வந்தியத் தேவனுக்கு மணமுடித்து வைத்தான். கி.பி. 969இல் ஆதித்த கரிகாலன் பகைஞர்களால் கொல்லப்படவே, சுந்தர சோழன் மனமுடைந்து காஞ்சி மாநகரில் கரிகாலனுல் அமைக்கப்பட்ட பொன்மாளிகையில் துஞ்சினுன். எனவே, தான் இவனைப் 'பொன் மாளிகை துஞ்சியத் தேவர்'[2] என்று கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

இவனுடைய அமைச்சனுகத் திகழ்ந்து புகழ் பெற்றவன் மழநாட்டில் அன்பில் என்னும் ஊரில் பிறந்த அநிருத்த பிரமாதிராசன் என்பவனுவான். இவனது தொண்டினைப் பாராட்டும் வகையில் மன்னன் இவனுக்குக் 'கருணுகர மங்கலம்' என்னும் ஊரை இறையிலியாக வழங்கிய செய்தி அன்பிற் செப்பேடுகளால் அறியப்படுகிறது.

**உத்தம சோழன்** (கி.பி. 970 - 985)

உத்தம சோழன் கண்டராதித்த சோழனின் மகன் என்பதை நாம் முன்னர்க் கண்டோம். சுந்தர சோழனுக்குப் பின்னர் அவன் இரண்டாம் மகன் இராசராசன் பட்டம் பெற வேண்டு மென்று மக்கள் விரும்பினர். இருப்பினும் தன் சிற்றப்பனுகிய உத்தம சோழனது உரிமையை மதித்துச் சிற்றப்பன்

[1] Ins. 264 of 1915.
[2] Ibid. Vol. II, No. 6. Idid. Vol. V. Nos. 723 and 980.

நாடாள விருப்பம் கொண்டுள்ளான் என்பதை அறிந்து, உத்தம சோழனுக்காக ஆட்சியினை விட்டுக்கொடுத்தான். எனவே, மதுராந்தகன் என்னும் உத்தம சோழன் பரகேசரி என்னும் பட்டம் புனைந்து, கி. பி. 970இல் ஆட்சி யுரிமை யேற்றிருத்தல் வேண்டும்.[1]

இவனது காலத்தில் சோணுட்டில் அமைதி நிலவியது. இவனுட்சிக்கு உட்பட்ட தொண்டை மண்டலமும், திருமுனைப் பாடி நாடும் எவ்வித இடையூறு மின்றிச் சீராக ஆளப்பட்டன.

இவன் தாய் செம்பியன் மாதேவி என்பதை இதற்கு முன்பே கண்டோம். தாயைப் போலவே உத்தம சோழனும் சிவநேயச் செல்வனுக விளங்கினுன். இவன் தாயும், மனைவி யரும் செய்த அறப்பணிகள் மிகப் பல வாகும். இவனது காலத் தில் நடுவில் பொறிக்கப்பட்டு ஓரத்தில் உத்தம சோழன் என்ற பெயர் பொறிக்கப்பட்ட பொற்காசுகள் புழக்கத்தில் இருந்தன. இவன் 985இல் இறந்தான். இவனுக்குப்பின் தான் வரலாற்றுப் புகழ் மிக்க முதல் இராசராசன் அரியணை யேறினுன்.

***மாமன்னன் முதலாம் இராசராசன்*** (கி.பி. 985 - 1012)

சுந்தர சோழன் என்னும் சிறப்புப் பெயர் பெற்ற இரண்டாம் பராந்தகனுக்கும், வானவன் மாதேவிக்கும் பிறந்தவனே முதலாம் இராசராசன்.[2] இவன் ஐப்பசித் திங்கள் சதய நாளிற் பிறந்தவனுவான்.[3] இவனது இயற்பெயர் அருண் மொழித் தேவன்[4] என்பதை முன்பே கண்டோம்.

தன் தந்தைக்குப் பின்னர் ஆட்சியைப் பெறும் முறைமை யும், தகுதியும், திறனும் இருந்தும் தன் சிற்றப்பனுக்காக ஆட்சியை விட்டுக்கொடுத்த தியாகச் செம்மல் இராசராசன் ஆவான். பல்லாண்டுகாலம் இளவரசனுக இருந்து அரசியல் அனுபவம் சிறக்கப் பெற்றவன் இராசராச னுவான்.

இப்பெரு மகன் கி.பி. 985 சூன் திங்கள் 25ஆம் நாள் இராசகேசரி என்னும் பட்டம் புனைந்து அரியணை யேறினுன்.[5] அரசியலில் பண்பட்ட அறிவும், பேராற்றலும் உயரிய சமயப்

[1] Ibid. No. 138.
[2] S. I. I. Vol. No. 863; Ibid, Vol. III. No. 205.
[3] Ibid. Vol. II. No 26.
[4] Ibid, Verse-61.
[5] Mysore Gazetteer, Vol. II, part-II, Page-943.

# சோழர் காலத் தமிழகம்



பற்றும் கொண்டு நல்லாட்சி செய்த இராசராசனது காலம் சோழர் வரலாற்றின் பொற்காலம் எனலாம்.

இராசராசனுக்கு உலகமாதேவியார், சோழமாதேவியார்,[1] இலாடமாதேவியார்[2] என மனைவியர் பலர் இருந்தனர். இவனுக்கு இராசேந்திரன் என்னும் மகனும், குந்தவை, மாதேவடிகள் என்னும் பெண்மக்களும் இருந்தனர்.

இராசராசனின் வெற்றி மேம்பாடுகளை இவனது மெய்க் கீர்த்தியால் தெளிவாக அறியலாம். இவன் தனது ஆட்சியாண்டு களில் முறையே நடைபெற்ற போர்களை முறையே வெளிவந்த கல்வெட்டுகளில் முறைப்படி விளக்கமாகக் குறித்திருக்கின்ற புதிய முறையிலான மெய்க்கீர்த்தியை வெளியிட்டான். இம் முறை, இவனுக்குப் பின்னுண்ட சோழ மன்னர்கட்கு வழிகாட்டி யாக அமைந்தது குறிப்பிடத் தக்கதாகும். இவனது பட்டயம் அல்லது கல்வெட்டுத் 'திருமகள் போல......' என்னும் அழகிய தொடக்கத்தை உடையது. இதைப் போன்று பிற்கால மன்னர் களும் தங்கள் கல்வெட்டுகளில் வேறொரு அழகிய தொடரைத் தொடக்கத்தில் வைத்துள்ளதால், இந்தக் கல்வெட்டு இன்னார் காலத்தது என்று எளிதாக அறியலாம்.

சோணாட்டின் அரியணையி லமர்ந்த இராசராசன் உள் நாட்டில் அமைதி நிறைந்த ஆட்சியை நிறுவிய பின்பு, தன் பகைஞர்களாகிய பாண்டியரையும், சேரரையும் வென்று தன் னடிப்படுத்திச் சோழப் பேரரசை விரிவுபடுத்தத் திட்ட மிட்டான். அப்போழுது சேர நாட்டினைப் பாஸ்கர ரவிவருமன் திருவடி (கி.பி. 964 - 1021) என்னும் மன்னனும் பாண்டி நாட்டினை அமரபுசங்கன் என்னும் மன்னனும் ஆண்டு வந்தனர்.

இராசராசன் தன் பெரும்படை கொண்டு, பாண்டியர்மீது பாய்ந்து, பெருவெற்றி பெற்றான். பின்பு தன் படைகளைச் சேரநாட்டிலுள்ள விழிஞம் என்ற இடத்தின்மீது செலுத்தி அதனைக் கைப்பற்றினான். வெற்றிப் படையான சோழப்படை பின்பு காந்தளூர்ச் சாலையில் சேரர்களை வென்று பெருவெற்றி பெற்றது. இவ்வெற்றியின் அறிகுறியாக இராசராசன் 'காந்த ளூர்ச்சாலை கலமறுத் தருளிய கோ'[3] எனும் விருதைப் பெற்றான்.

[1] S. I. I. Vol. II, Nos. 42 and 46.

[2] Ibid. pp. 467 and 472

[3] Ins. 395 of 1922.

காந்தளூர் என்பது யாண்டுள தென்பது பற்றி வரலாற்று சிரியர்களிடையே கருத்து வேறுபாடு நிலவியது. திரு. கோபி நாதராவ் (Gopinatha Rao) அவர்கள் திருவனந்தபுரத்தின் ஒரு பகுதியான 'வலிய சாலை'[1] என்ற இடமே காந்தளூர் எனக் கூறியுள்ளார்.

காந்தளூர், பூவார் (நெய்யாற்றங்கரை) அருகில் இருந்த ஊராகும் என்னும் கருத்தும் திருவாங்கூர் தொல்பொருள் வெளி யீட்டில் குறிக்கப்பட்டுள்ளது.[2]

காந்தளூர் என்னும் ஊர் திருவனந்தபுரத்திற்குத் தெற்கில் பத்துக்கல் தொலைவில் அமைந்துள்ளது என்பது தற்கால ஆராய்ச்சி யறிஞர்களால் ஏற்றுக் கொள்ளக் கூடிய கருத் தாகும்.

காந்தளூர்ச்சாலை கலமறுத்த பெருமையினை மாமன்னன் இராசராசன் மட்டுமன்றி, முதலாம் இராசேந்திரன்,[3] முதலாம் இராசாதிராசன்,[4] முதலாம் குலோத்துங்கன்[5] முதலான மன் னர்களும் பெறுகின்றனர். எனவே, இதனைப் பற்றி நாம் சிறிது விரிவாகக் காண்பது நலம் பயப்ப தாகும்.

இதனைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்ட அறிஞர்க ளிடையே ஒருமித்த கருத்து உருவாக வில்லை; மாறாக மாறுபட்ட கருத்துகள் மலிந்து காணப்படுகின்றன. ஈண்டுக் 'கலமறுத்த' என்னும் சொல் காணப்படுதலின் சேரர்களின் மரக்கலங்களை இராசராசன் அழித்துப் பெருவெற்றி கண்டான் எனச் சிலர் கருதுகின்றனர். சிலர் காந்தளூர்ச்சாலைப் போர் கடற்போரன்று எனவும், இஃது இராசராசன் நடத்திய நிலப்படைப் போர்தான் எனவும் செப்புகின்றனர். இராசராசப் பெருமன்னன், சேரர்கள் படைக்கலங்களைக் குவித்துள்ள இடமும், படைக்கலப் பயிற்சி யளிக்கின்ற இடமுமான (Military College with an arsenal attached) காந்தளூரின்மீது படையெடுத்து அவர்களின் படைக்கலங் களை யழித்துப் பெருமை கொண்டான் என இவர்கள் செப்பு கின்றனர்.

[1] T. A S. Vol. II. pp. 4 & 5.
[2] T. A. R. 1920-21. Page-65
[3] Ep. Rep 368/17.
[4] S. I III. p 56
[5] விக்கிரம சோழனுலா-பாடல்-24
கலிங்கத்துப்பரணி-370

மாமன்னன் இராசராசன் காந்தளூரில் மணிமண்டபம் ஒன்றனை அமைத்தான் என்னும் கருத்தும் முன்பு நிலவி வந்தது.[1] இது தற்கால அறிஞர்களால் ஏற்றுக்கொள்ளப்பட வில்லை.

இராசராசன், சேர நாட்டின் காந்தளூரில் கலம் ஒன்றைத் துண்டாக்கினுன் என்னும் கருத்தினையும் சில ஆராய்ச்சியாளர் கொண்டிருந்தனர்.[2] இதுவும் தற்காலத்தில் ஏற்றுக்கொள்ளப் பெற வில்லை.

கவிமணி தேசிகவிநாயகம்பிள்ளை அவர்கள் 'மன்னன் காந்தளூர் உணவு சாலையில் உணவு வழங்க வேண்டிய முறையினை நிருணயித்துத் திட்டம் செய்தான்' எனப் புதிதான விளக்கம் ஒன்றனைத் தந்தார். இவ்விளக்கம் பொருத்தமாகத் தோன்ற வில்லை. ஏனெனில், உணவுத் திட்டம் செய்யப்பட்ட முறையை இராசேந்திரனும், இராசாதிராசனும், முதலாம் குலோத்துங்கனும் மறுமுறையும் மாற்ற வேண்டிய தேவையில்லை.

'காந்தளூர் அறச்சாலையில் சோறு அடுவதை இராசராசன் நிறுத்தி விட்டான்' என்னும் கருத்தினையும் ஆய்வாளர் சிலர் கொண்டுள்ளனர்.[3] இக்கருத்தும் ஏற்றுக்கொள்ளத் தக்க தன்று. சோறிடுவதை நிறுத்தியதை 'அருளிய' எனக் குறிப்பிடுவது வழக்க மில்லை.

இதனைப் பற்றித் தெளிவாக நாம் ஆராய வேண்டுமெனின் 'சாலை', 'கலமறுத்த' என்னும் சொற்களின் மெய்ப்பொருளை நாம் ஆய்ந்து பார்க்க வேண்டும். 'சாலை' என்பது போக்கு வரத்துக்குப் பயன்படும் பெருஞ்சாலை (Road), உணவு வழங்கப் படுகின்ற அறச்சாலை, கடற்கரையில் கப்பல் நிற்கும் துறைமுகம், மாணவர் தங்கி உணவுண்டு கல்வி பயிலும் நிறுவனம் எனப் பல பொருள் படும். 'கலம்' என்பதற்கு 'உண்கலம்', கப்பல் (மரக்கலம்) எனப் பொருள் கொள்ளலாம்.

இவண் சாலை யென்பது மாணவர்களின் உண்டுறை இல்லம் எனப் பொருள் கொண்டு, மாணவர்கள் கல்வி கற்று வந்த பல்கலைக் கழகம் போன்ற ஒரு நிறுவனத்தின் தலைவருடன் இராசராசன் கருத்து மாறுபாடு கொண்டு, அதனைத் தாக்கித்

[1] S. I. I. I. P. 65
[2] S. I. I. II. P. 35, 37, 241-47.
[3] T. A. S. II. pp. 3 and 4

தன் படை வலியால் ஆங்குத் தன் மேலாதிக்கத்தினை நிலை நாட்டினான் எனக் கொள்ளுதல் பொருத்தமான தாகும்.

பண்டைக் காலத்தில் குருகுலக் கல்வி முறை பின்பற்றப் பட்டு வந்தது. மாணவர்களும் ஆசிரியர்களும் கல்விச் சாலை யிலேயே தங்கி யிருந்தனர். இதனை எண்ணாயிரம் வடமொழிக் கல்லூரியின் நடை முறைக்கு ஒப்பிடலாம். பல்கலைக்கழகம் போன்று அமைந்திருந்த அக்கல்வி நிறுவனத்தின் அறங்காவலர் அரசின் கட்டுப்பாடின்றித் தனித்தியங்கும் உரிமையினைப் பெற் றிருத்தல் கூடும். அச்சாலையின் நடவடிக்கைகளில் தலையிட்டுச் சில மாற்றங்களைச் செய்ய முயன்ற இராசராசனுக்கும் அறங் காவலருக்கும் விரோதம் ஏற்பட்டுப் பகை மூண்டிருக்கக் கூடும் எனவும் மன்னன் படை கொண்டு அச்சாலையில் வெற்றி கண்டான் எனவும் கொள்ளுதல் பொருத்தமாகத் தோன்றுகிறது. காந்தளூர்ச் சாலை ஒரு கல்வி நிறுவனமாக இருந்திருக்கலாம் என்று திரு. டி. என். சுப்பிரமணியம்[1] அவர்கள் குறிப்பதையும் ஈண்டு நாம் மனத்திற் கொள்ளுவது நலம்.

மேலும், காந்தளூர்ச் சாலை போன்ற மற்றொரு சாலை பார்த் திவ சேகரபுரம் என்னு மிடத்தில் ஆய்குல வேந்தன் கருநந்தடக் கன் என்பானால் நிறுவப்பட்டிருந்த தென்றும், அச்சாலையில் கல்வி கற்பித்த சட்டர்கள் (ஆசிரியர்) அரசியலில் பங்குகொள் வதற்குத் தேவையான அறிவும், பயிற்சியும் பெற்றிருத்தலோடு, சில கட்டுப்பாடுகட் குட்பட்டுப் படைக்கலப் பயிற்சியும் பெற்று, மாணவர்கட்குச் சுவடியின் வாயிலாகவும், நடைமுறை வாயிலா கவும், அரசியல் துறையிலும், போர்த் துறையிலும் பயிற்சி யளிக் கும் திறனும் பெற்றிருத்தல் வேண்டு மென்றும் பார்த்திவ சேகர புரத்துச் சாசனம் செப்புகிறது. எனவே, கல்விச் சாலையில் படைக் கலங்களும் வைக்கப்பட்டுப் பயிற்சியளிக்கப் பட்டன வென்பது புலனாகும்.

'காந்தளூர்ச் சாலை' என்பது ஊரின் முழுப் பெயராயிருப் பின் நாம் சாலை என்பதற்குப் பொருள் காண வேண்டுவ தில்லை. காந்தளூர்ச் சாலையிலுள்ள படைக்கலங்களை யழித்து வெற்றி கண்டான் இராசராசன் எனக் கொள்ளலாம்.

இராசராசன் காந்தளூரிலுள்ள சாலை யருகில் (Roadstead) அமைந்துள்ள சேரர் படைக்கலக் கல்லூரியைத் தாக்கி அங்கிருந்த படைக்கலங்களை அழித்துச் சேரரின் வலிமையினை

[1] S. I. Temple Inscriptions-Vol. III (2) I. P. 15. Tamil Portion.

யடக்கினுன் என்றோ, காந்தளூர்க் கல்வி நிறுவனத்தின் அறங் காவலருக் கெதிராகப் போர்தொடுத்து அச்சாலையைத் தன் வழிப்படுத்தினுன் என்றோ, கொள்வது பொருத்த மாகும்.

இவ்வெற்றியின் சின்னமாக இவன் 'காந்தளூர்ச் சாலை கல மறுத்தருளிய கோ' என்று புகழப்படுகிறுன். சேர நாட்டின்மீது மேற்கொண்ட படைக்குத் தலைமை பூண்டவன் பஞ்சவன் மாராயன் என்னும் பெயர் கொண்ட இராசேந்திர சோழனே ஆவான்.[1]

பாண்டியரை வென்று 'விழிஞம்' என்னும் துறைமுகத்தைக் கைப்பற்றியதால் இராசராசன் 'தென்ன பராக்கிரமன்' என்னும் விருது பெயர் பெற்றுன்.

பின்பு இராசராசன் குடகு என அழைக்கப் பெறும் குடமலை நாட்டின் மீது போர் தொடுத்து, உதகையை அழித்து, அந் நாட்டினையும் கைக்கொண்டான். இப் படையெடுப்பில் தலைமை பூண்ட தானைத் தலைவன் இராசேந்திரனுக இருக்க வேண்டு மென்று வரலாற்றறிஞர் சிலர் கருதுகின்றனர். மேற்குக் கடற் கரையிலுள்ள கொல்லம், கங்கபாடி, நூளம்பபாடி, தடிகை பாடி ஆகிய நாடுகளையும் வென்று பெரும்புகழ் பெற்றவன் இவனுவான்.

கிருஷ்ணு, கோதாவரி, ஆறுகட்கு இடைப்பட்ட கீழைச் சாளுக்கிய நாடு வேங்கிநாடு எனப்படும். இவன் வேங்கி நாட்டைக் கைப்பற்றிச் சத்திவருமனை மன்னனுக்கினுன். சத்தி வருமனின் இளவலான விமலாதித்தனுக்குத் தன் மகள் குந்தவையை மணம் செய்வித்தான். வட பெண்ணையாறு முதல் கிருஷ்ணையாறு வரையிலும் பரவியிருந்த சீட்புலி நாட்டை யும் இராசராசன் கைப்பற்றிப் பெரும்புகழ் பெற்றுன்.

இம்மன்னனின் தரைப் படையைப்போல் கடற் படையும், வலிமை மிக்கது என்பதை 'முந்நீர்ப் பழந்தீவு பன்னீராயிரம் கொண்டவன்' என்பதால் அறிகிறோம். எனவே, இவன் மாலத் தீவுகளை வென்றது குறிப்பிடத் தக்க வெற்றியாகும்.

மகேந்திர மலையில்[2] கிடைக்கப் பெற்ற கல்வெட் டொன்றில் 'விமலாதித்தன் என்னும் குலூத நாட்டு மன்னனை இராசேந் திரன் வென்று, மகேந்திரமலை உச்சியில் வெற்றித் தூண்

[1] 'சோழர் வரலாறு' - பண்டாரகர் மா. இராசமாணிக்கர் பக்கம்-55. வரிகள்-17-19.

[2] 396, 397 of 1896, Archaeological survey of India, 1911-12. PP. 171-172.

ஒன்றை நாட்டினன்' என்னும் செய்தி கூறப்பட்டுள்ளது. இது பற்றி இராசேந்திரன் ஆட்சிக் காலத்தில் சான்றுகள் காணப்பட வில்லை. எனவே, இவ் வெற்றி இராசராசன் காலத்தில் அவன் மகனான இராசேந்திரன் பெற்ற வெற்றியாக வரலாற்றறிஞர்கள் கருதுகின்றனர்.[1]

குலூத நாடு என்பது கலிங்க நாட்டின் பகுதி. எனவே, இராசராசன் கலிங்க நாட்டினை வென்றான் என்று கொள்ளலாம். இவன் தன் வலிமை மிக்க நிலப் படையின் துணை கொண்டும், கடற்படையின் துணை கொண்டும் கொண்ட பெரு வெற்றிகளை இவனது மெய்க்கீர்த்தி கீழ்க்கண்டவாறு குறிக்கின்றது.

'காந்தளூர்ச் சாலை கலமறுத் தருளி
வேங்கை நாடுங் கங்க பாடியுந்
தடிகை பாடியும் நுளம்ப பாடியுங்
குடமலை நாடுங் கொல்லமுங் கலிங்கமும்
முரட்டொழிற் சிங்கள ரீழமண் டலமுந்
திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்ட
... .... .... .... .... .... .... ....
கோராச கேசரி வர்மர்.'

இம் மன்னன் தமிழக மூவேந்தர் நாடுகளையும் ஆண்டமை யால் 'மும்முடிச் சோழன்' எனவும் சிவநேயச் செல்வனாக இருந்தமையால் 'சிவபாத சேகரன்' எனவும், சைவத்திரு முறைகளைத் தொகுத்தமையினால் 'திருமுறை கண்ட சோழன்' எனவும் சென்ற விட மெல்லாம் வெற்றி ஒன்றே கண்டவனாத லின் 'செயங் கொண்ட சோழ னெனவும் சிறப்பிக்கப் பெற்றான். இவை யன்றிச் சத்திரிய சிகாமணி, சிங்களாந்தகன், பெரிய பெருமாள், இரட்ட குல காலன், மும்மடிச் சோழன், கேரளாந்தகன், பாண்டிய குலாசனி, சோழேந்திர சிம்மன், சனநாதன், நிகரிலிச் சோழன், இராசேந்திர சிம்மன், சோழ மார்த்தாண்டன், இரவி குல மாணிக்கம், தெலுங்க குல காலன், நித்திய விநோதன், உய்யக் கொண்டான், இராசாசிரயன், இராச மார்த்தாண்டன் போன்ற பல விருது பெயர்களை இவன் பெற்று விளங்கினான்.

இராசராசன் சிறந்த சிவ பக்தன். ஆயினும் இவன் சமயப் பொறை மிக்கு விளங்கினான். இவனது பரந்த சமய மனப்பான் மையை, நாகப்பட்டினத்தில் கடார வேந்தனாகிய சூளா

[1] 'சோழர் வரலாறு' - பண்டாரகர் மா. இராச மாணிக்கர் பக்கம்-61. வரிகள்-1-16.

மணிவருமனால் கட்டப்பட்ட புத்த விகாரைக்குப்[1] பொருளுதவி யளித்ததாலும், ஆனை மங்கலம் என்னும் ஊரைப் பள்ளிச் சந்தமாக[2] அளித்தமையாலும், மைசூரில் இவன் கட்டிய விஷ்ணு கோயில்களாலும், அவைகட்கு அளித்துள்ள அறப் பணிக் கொடைகளாலும் அறியலாம். இவன் இசை, நடனம், நாடகம், ஓவியம் போன்ற நுண் கலைகளில் பெரும் ஈடுபாடு கொண்டவனாக விளங்கினான்.

இவன் தன் வெற்றிகட்குரிய சின்னமாகத் தஞ்சையில் தளிக்குள மென்னும் பெயரால் விளங்கிய சிறு கோயிலைத் தன் தமக்கை குந்தவைப் பிராட்டியின் எண்ணப்படி பெருங்கற்றளி யாக மாற்றி யமைத்த 'இராசராசேச்சுவரம்' என்னும் பெரு வுடையார் கோயில் தமிழகத்தின் கலைச் சிறப்பிற்கு மிகச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது. விண்ணை முட்டும் அளவிற்கு நீண்டுயர்ந்த இக்கோயில், தமிழ் நாட்டில் என்றும் நின்று இராசராசனின் புகழைப் பொன்றுது நிற்கச் செய்கிறது.

இக்கற் கோயில் 793 அடி நீளமும், 397 அடி அகலமும் கொண்டது; இதன்கண் வானளாவ அமைந்துள்ள நடு விமானம் மட்டும் 216 அடி உயரம் கொண்டது. அதன் உச்சி யில் அமைந்துள்ளதும் ஒற்றைக் கல்லால் ஆனதுமான விமானம் 80 டன் எடை யுள்ளது. விமானத்தின் மீதமைந்துள்ள செப்புக் கலசம் 3083 பலம் நிறை கொண்டது. அக் கலசம் 2926½ கழஞ்சு பசும் பொன்னால் மூடப் பட்டுள்ளது.

இக்கோயிலில் தீட்டப்பட்டுள்ள ஓவியங்கள் காண்போர் கண்ணையும், கருத்தையும் கவர்வனவாக உள்ளன. எண்ண எண்ண வியப்பைத் தரும் இவ்வண்ண வண்ண ஓவியங்கள் வெளி நாட்டாரும் போற்றும் வண்ணம் அமைந் துள்ளன.

இக்கோயிலில் காணப்படும் சிற்பங்களும், அற்புதமானவை யாகும். இப்பெருவுடையார் கோவிலின் சிறப்பையும், அழகை யும் வியந்து பாராட்டுகின்ற வரலாற்றறிஞர் பண்டாரகர் (Dr) வின்செட் ஸ்மித் 'இதைவிட நன்றாக நிருமாணிக்கப்பட்ட கோயில் தென்னிந்தியாவிலேயே இல்லை' என்று கூறுகிறார். இவன் வேறு பல கோயில்களையும் கட்டினான்.

[1] **Ep. Ind. Vol. XXII. No-34**

[2] ஆனைமங்கலம், 8943 கலம் நெல் வருவாயுள்ள 97 வேலி நிலத்தினைக் கொண்டது.

இராசராசன் கன்னல் பொருள் தரும் தமிழைக் கண்ணும் கருத்துமாகப் போற்றி, நம்பியாண்டார் நம்பியைக் கொண்டு, சைவத் திருமுறைகளைத் தொகுத்தான். கருவூர்த் தேவர் திருவிசைப்பா என்னும் இலக்கியத்தைப் படைத்தார். இராசராசேசுவர நாடகம், இராசராச விசயம் ஆகிய நாடகத் தமிழ் நூல்கள் இக்காலத்தில் தோன்றின. இவனது தமிழ்த் தொண்டு என்றென்றும் பாராட்டுதற் குரியது. இத்திருமுறைகளைக் கோயில் தோறும் ஓத, ஓதுவார்கள் நியமனம் செய்யப் பெற்றனர். தமிழ் நாட்டுக் கோயில்களில் தமிழ் மணம் கமழ்ந்தது; தமிழர்களின் நெஞ்ச மெல்லாம் குளிர்ந்தது. செந்தமிழைச் செழுந்தமிழாக்கிய சைவக் குரவர்களாகிய அப்பர், தமிழ் ஞானசம்பந்தர், சுந்தரர் முதலியவர்களின் உருவச் சிலைகள் கோயில்களில் எடுப்பிக்கப்பெற்றுப் பூசைகள் சிறப்புற நடந்தன.

இராசராசன் கடல் வாணிகத்தைப் பெருக்கினான்; சீன நாட்டிற்குத் தூதுக்குழு ஒன்றை அனுப்பினான். இதனால் சீன-சோழ நட்பு உருவாயிற்று.

இவன் தனது காலத்தில் சோழ நாடு முழுவதையும் அளந்து, நிலங்களுக்கு ஏற்றபடி வரி விதித்தமை போற்றத் தகுந்த தாகும்.[1] இம்மன்னனது ஆட்சிமுறை பல மேம்பட்ட அமிசங்களைக் கொண்டு விளங்கியது.

இவன் கி. பி. 1012இல் தன் மகன் முதல் இராசேந்திர சோழனுக்கு இளவரசு பட்டம் கட்டி அரசாட்சியில் ஈடுபடுத்தினான்[2]. பிற்காலச் சோழர்களுள், சோழர்தம் பெருமையினைப் பாரறியச் செய்து, உலகோர் பாராட்டும் வகையில் உயர்த்திய உரவோன் முதல் இராசராசனே யாவான். இவன் தனது பேரரசினை அமைதி நிலவும் நல்லரசாக ஆள்வதற் கேற்ற ஆற்றலும், ஆண்மையும் அரசியல் அறிவும் குறைவறப் பெற்று, இறையன்புக்கும், இறவாப் பெருங் குணங்களுக்கும் உறைவிடமாகத் திகழ்ந்த உத்தம னவான்.

பிற்காலச் சோழரின் புகழை உலகறிய உயர்த்திய பெருமைக் குரியவன் இராசராச னவான். எனவே, கெ. ஏ. நீலகண்ட சாஸ்திரி அவர்கள், ‘தென்னிந்தியாவில் பேரரசை யேற்படுத்திய மன்னர்களுள் இராசராசன் தலைசிறந்தவனாகப் போற்றப்படுகின்றான்’ என்று குறிப்பிடுவது மிகவும் பொருத்த முடையது.

[1] S. I. I. I. P. 65.
[2] S. I. I. II. P. 35, 37, 241-47.

# 4. இளமையும் முடிபுனைதலும்

சோணாட்டு மக்கள் செய்த தவங்கள் பலகோடி ஒரு பெரிய உரு மேவி யுற்றதென, இம்மண்ணில் முதலாம் இராசராச சோழனுக்கும் அவன் கோப்பெருந்தேவி வானவன் மாதேவிக்கும்[1] மார்கழித் திங்களில் நிலவு திருவாதிரையுடன்[2] கூடியிருந்த நன்னாளன்று மாதவ மகன் ஒருவன் தோன்றினான். ஆண்குழந்தை யின்மையால் வாடிக்கொண்டிருந்த சோழப் பெருமன்னனின் வாட்டத்தைப் போக்கி, நாட்டு மக்களிடையே மகிழ்ச்சிப் பெருக்கினை ஏற்படுத்திய இச்சோழர் குலத் தோன்றலே, பிற்காலத்தில் இராசேந்திர சோழன் எனும் பெயரில் அரசு கட்டிலேறிப் பகைவென்று, நாட்டில் நலம் பல விளைத்த நம்பி யாவன்.

இந்நற் செய்தி யறிந்த நாட்டு மக்கள் அனைவரும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்தனர். அன்று சோழப் பேரரசு எங்கணும் மக்கள் பெருவிழாக் கொண்டாடினர். குறிப்பாக அதிலும் சிறப்பாகப் பழையாறை நகரும், தஞ்சை மாநகரும் சிறந்த முறையில் அலங்கரிக்கப்பட்டன. கோயில்களில் இளவரசன் நலங்கருதிச் சிறப்பான பூசனைகள் நடைபெற்றன. அரச குடும்பத்தினரும், அமைச்சர் பெருமக்களும், அரசியல் அலுவலர்களும் இளவரசனைக் கண்டு உளம் பூரித்தனர் ; நல்வாழ்த்துக் கூறினர்.

விண்ணகத்து வெங்கதிரோன் மண்ணில் வந்து தோன்றியதோ! எனக் கண்டோர் வியக்கும் வண்ணம் அக்குழந்தை

[1] 'உடைய பிராட்டியார் தம்பிரான் அடிகள் வானவன் மாதேவியாரான திரிபுவனமாதேவியார்க்கு' (S. I. I. Vol. 5. No. 982)

[2] 'திருவொற்றியூருடைய மகாதேவர்க்கு உடையார்க்கு ஸ்ரீ இராசேந்திர சோழ தேவர் திருநாள் மார்கழித் திருவாதிரை ஞான்று நெய்யாடியருள வேண்டு(ம)மிசத்துக்குத் திருவொற்றியூர் திருமயானமும் மடமுடைய சதுரானன பண்டிதன் தேவர் பண்டாரத்து வைத்த காசு நூற்றைம்பது.

பேரழகு வாய்ந்ததாய் விளங்கிற்று. கண்ணுதற் பெருங் கடவுள் தன் நெற்றிக் கண்ணால் காணாத மற்றொரு காம வேளோ[1] என எண்ணும்படியாகப் பேரழகு வாய்ந் திருந்தது அக்குழந்தை.

சோழர்குலத் தோன்றலாய்த் தவ மணியாய் வந்துதித்த இச் சிவமணியின் நலங்கருதித் திருமுதுகுன்ற முடையார் கோயிலில், திங்கள் தோறும் திருவாதிரை நன்னாளில் சிறப்பான முறையில் வழிபாடு நடத்தவும், விழாக் கொண்டாடவும் நிலம் அளிக்கப் பட்டது. இச் செய்தியினை விருத்தாசலத்திலுள்ள (Vriddha-chalam, South Arcot District) கல்வெட்டொன்று விளம்பு கின்றது[2].

தன் சிறிய தந்தையான மதுராந்தக உத்தம சோழன்பால் தன் தந்தையினும் பேரன்பு பூண்டொழுகியவனாகலின், இராச ராசப் பெருமன்னன் தனக்குப் பிறந்த குழந்தையின் பேரழ கினைக் கண்டு மட்டிலா மகிழ்வு கொண்டான். அக் குழந்தை தன் பாட்டனாகிய சுந்தர சோழனைப் போல் பேரழகு மிக்கவனாகத் திகழ்ந்ததையும் இராசராசன் கண்டான். எனவே, தன் குல வழக்கப்படி முன்னோர்களின் பெயர்களுள் ஒன்றும், சிறிய தந்தையின் பெயருமான 'மதுராந்தகன்' என்னும் திருப் பெயரைத் தன் மகனுக்கு இட்டான்[3]. 'இவன் (மதுராந்தகன்) புன்சிரிப்பினாலும், வடிவழகினாலும் தாய் தந்தையர்க்கு மகிழ்ச் சியையும், பகைவர்களுக்குப் பேரச்சத்தையும் நாளும் கொடுத்துக்கொண்டு வளர்ந்து வந்தான்' என்று இவனை இவனது கரந்தைச் செப்பேடு பாராட்டுவதால் இவன் பேரழகு வாய்க்கப் பெற்றவன் என்பதனையும் தந்தையைப் போல் போர்க் கலையில் தேர்ச்சி பெற்றுப் பகைஞர்களை வென்று, பேரும் புகழும் பெறும் ஆற்றலினைப் பெற்றவன் என்பதனையும் நாம் உய்த் துணரலாம்.

மதுராந்தகன் பிறந்தகாலை சோழப் பேரரசு பல்கிப் பெருகி யிருந்தது. இராசராசனின் சீரிய தலைமையில் சோணாடு நன் முறையில் முன்னேறிக் கொண்டிருந்தது. அரசியல்துறை, சமூகத்துறை, சமயத்துறை, அறிவுத்துறை, போர்த்துறை ஆகியவற்றில் நல்ல வளர்ச்சியினைப் பெற்றிருந்தது. சோழப் பேரரசு முழுவதிலும் சமய வளர்ச்சியும், சமயப் பொறையும்

[1] A. S I I. Vol III No 205, Verse-85

[2] Ins. 54 of 1918

[3] (திருவாலங்காட்டுச் செப்பேடு) S. I. I. Vol. III, No-205, Verse-85

நாகரிகமும் பண்பாடும் மேலோங்கித் திகழ்ந்தன. உள்நாட்டில் அமைதி நிலவிற்று. வாணிகமும் விவசாயமும் சிறந்தோங்கின. அண்டை அரசுகளை ஆண்டுகொண் டிருந்த மன்னர்கள் சோழ ரின் வளர்ச்சி கண்டு அச்சமும் பொருமையும் கொண்டனர். சேரரும், பாண்டியரும், மேலைச் சாளுக்கியரும், ஈழத்தினரும் மற்று முள்ள பகைஞர்களும் சோழப் பேரரசின் வளர்ச்சியினைத் தடுத்து நிறுத்த முனைந்து நின்றனர். மாமன்னன் இராசராச னும் படைகொண்டு, பகைஞரைப் புறம் கண்டு வந்தான். இருப்பினும் மதுராந்தகன் உரிய பருவமெய்திப் போரில் பங்கு கொண்ட பின்பே இராசராசன் பெறற்கரிய வெற்றிகளைப் பெற முடிந்தது என்பதனையும் நாம் ஈண்டு நினைவிற் கொள்ள வேண்டும்.

சிவஞானச் செல்வியாம் செம்பியன் மாதேவியாராலும் இராசராசனின் தமக்கையாம் குந்தவை தேவியாராலும்,[1] கோப் பெருந்தேவி வானவன் மாதேவியாராலும், மற்றுமுள்ள அரச குலப் பெண்களாலும் கண்ணும் கருத்துமாகப் போற்றி வளர்க்கப் பெற்ற மதுராந்தகன் நாளொரு வண்ணமும், பொழுதொரு மேனியுமாக வளர்ந்து வந்தான். இவன் தந்தையாம் முத லாம் இராசராசனை இளமைப் பருவந்தொட்டு வளர்த்து வந்த செம்பியன் மாதேவியார், தந்தையினும் மேம்பட்ட வீர மும், வலிமையும், அறிவும், ஆற்றலும் பெற்றுத் திகழத் தக்க அறிகுறிகள் இவனிடம் காணப்பட்டதாக உணர்ந்தாள்.

இவனது ஒவ்வொரு செயலும், கனிவாயில் பிறந்து வரும் மழலை மொழியும் பெற்றோரையும் மற்றோரையும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தின பெற்றோர் அகங் களித்தனர். 'குழலினிது யாழினிது என்பதம் மக்கள் மழலைச்சொல் கேளா தவர்' என்ற வள்ளுவ ரின் வாய்மொழி அவனது பெற்றோர்க்கு மெய்மொழி யாயிற்று. தரணி போற்றும் தஞ்சைக்கோன் இராசராசன் தனது செல்வச் செருக்கை உலகிற் குணர்த்துவது போல், தன் செல்வனுக்கு விலை மதியா மணியையும், இரத்தினத்தையும் அணிகலன்களில் இழைத்து அணிந்து மகிழ்ந்தான். பெண்களோ, தங்கள் கண்ணினுக் கணியாகவுள்ள புதுமையான அணிகலன்களை மதுராந்தகனுக்கு அணிந்து களித்தனர்.

இவனுடைய தேன்மொழியிலும், அங்க அசைவுகளிலும், குறுகுறு நடையிலும், கூரிய விழிகளிலும், செந்தாமரை முகத்தினிலும் இன்பம் கண்டு உள்ளம் பூரித்த பெற்றோர்

[1] 639 of 1909; 463 of 1908

இவனது வளர்ச்சி கண்டும் வியப்புற்றனர். இவ்வாருக மதுராந்தகன் வளர்ந்து மழலைப் பருவங் கடந்து பலகலையும் கற்கும் நற்பருவம் வந்துற்ருன்.

'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்னும் பழமொழி உண்மையாம் என்பதை உலகுக்கு உணர்த்துமாறு போலப் 'பிற்காலத்து ஒளிமயமான எதிர்காலத்தை உருவாக்குவான்' என்பதன் அறிகுறிகள் இளமையிலேயே இவனிடம் காணப்பட்டன. இவன் 'கருவிலே திருவுடையவனுகக்' காணப்பெற்ருன்.

இவன் அரச குலத்திற்கேயுரிய யானை யேற்றம், பரியேற்றம், தேர் செலுத்தல், வாள் பயிற்சி, வில் பயிற்சி முதலிய கலைகளைக் கற்று வல்லவனுஞன். உடற் பயிற்சியினுலும், படைக்கலப் பயிற்சியினுலும் திண்டோளும், உடற்கட்டும் பெற்று வீர இளைஞுய்த் திகழ்ந்த மதுராந்தகன் இளஞ்சிங்கமெனத் தோற்ற மளித்தான்; வளைதடி எறிதலில் மிகுந்த தேர்ச்சியும் பெற்று விளங்கினுன்.

இதனேடமையாது இவன் மிகச் சிறந்த சைவாசாரியராகவும், மாணவரின் மன நிலையறிந்து கற்பிக்கும் பண்புள்ளவராகவும் விளங்கிய சர்வசிவ பண்டிதரிடத்து இலக்கிய நூல்கள், இலக்கண நூல்கள், அரசியல் தொடர்பான அற நூல்கள், போர்பற்றிய நூல்கள், சோழ மன்னர்களுடைய முறையான வரலாறுகள் முதலியவற்றைக் குறைவறக் கற்றதோடன்றிச் சைவ சமய நூல்களான தேவாரம், திருவாசகம் ஆகிய திருமுறை நூல்களையும், வேதங்கள், சாத்திரங்கள் ஆகியவற்றையும் முறையாகவே கசடறக் கற்றுத் தெளிந்தான்.

ஆன்றவிந்தடங்கிய சான்ரேரான காஷ்மகாரி ஆராவமுது புருஷோத்தமனை இராஜேந்திரசிம்மப் பேராசிரியரிடம் இவன் அற நூல்களைக் கற்றுத் தேர்ந்தான். புருஷோத்தமன் எனும் இப்பேராசிரியர் இராசேந்திரனுக்கு நண்பனுய், ஆசானுய், தத்துவ ஞானியாய் விளங்கினுர். புருஷோத்தமன் அவர்கள் இராசேந்திரனின் பேராசிரியராய் விளங்கினுர் என்பதையும், கரந்தைச் செப்பேட்டைத் தீட்டும் பணியினை யேற்றிருந்தார் என்பதையும்[1] கரந்தைச் செப்பேட்டுப் பகுதியா லறியலாம்.

சைவ சமயத்தின்கண் பேரார்வம் கொண்ட இவன் சைவ சமய நுணுக்கங்களைக் கற்றுத் தெளிவதில் பேரார்வம்

[1] கரந்தைச் செப்பேடு—எடு—30

கொண்டான். எனவே, இவன் சிவநெறியின் அறுவகைப் பிரிவுகளுள் ஒன்ருகிய காளாமுகத்தைச் சார்ந்த இலகுலீச பண்டிதரிடத்தும்[1] சைவ ஆகமங்களை ஐயந்திரிபறக் கற்று, இலக்கண நூலார் முதல் மாணுக்கனுக்கு உவமையாகச் சொல்லும் அன்னம்போல, ஆப்போல, நன்மாணுக்கனுய்த் திகழ்ந்து, சைவ சமயத்தில் பெரிதும் ஈடுபாடு கொண்டவனுய் விளங்கினுன். இவனது அறிவு வளர்ச்சியில் அக்கறை கொண்ட ஈசான பண்டிதரும் இவனுடைய மனங்கவர்ந்த குருவாக விளங்கினுர்.

'இளமையிற் கல்' என்னும் முதுமொழிக்கிணங்கக் கற்க வேண்டிய நூல்களைக் கற்றுப் போர்ப் பயிற்சியிலும் ஒப்பாருமின்றி மிக்காருமின்றிச் செம்மாந்து விளங்கினுன் என்பதனைக் கீழ்க் கண்ட இராசேந்திரனின் கரந்தைச் செப்பேட்டுப் பகுதியாலறியலாம். 'இவன் (மதுராந்தகன்) இளம் பருவத்திலேயே எல்லா வேதங்களையும், சாத்திரங்களையும் கற்றவனுகவும், குதிரையேற்றம், யானையேற்றம், தேரேறுதல் ஆகியவற்றில் மிக்க பயிற்சியுள்ளவனுகவும், வாட்போரின் நுட்பங்களை அறிந்தவனுகவும், எறிபடைக்கலங்களில் தேர்ச்சி பெற்றவனுகவும் விளங்கினுன்.'

பெருமன்னனுக்குத் தேவையான அத்துணைப் பண்பு நலன்களையும், பயிற்சிகளையும் மதுராந்தகன் தனது இளமைக் காலத்திலேயே அடையப் பெற்ருன். கல்வி கற்குங்கால் எதனையும் ஆய்ந்தறிந்து, சிந்தித்து, உண்மை கண்ட பின்பே ஏற்றுக் கொள்ளும் பண்பினைக்கொண்ட இவன் நுண்ணறிவும், கூர்த்த மதியும் வாய்க்கப் பெற்ருன். மன்னன் மகனுய் விளங்கிய போதிலும் இவன் ஆசிரியர்பால் அளவற்ற அன்பு கொண்டவனுக விளங்கினுன். இதனை இவன் தனது ஆட்சிக் காலத்தில் தன் ஆசிரியர்கட் களித்த 'ஆசாரிய போகத்'தால் அறியலாம்.

ஒருவன் தன் இளமைப் பருவத்தில் எய்திய சிறந்த பண்பும், பயிற்சியும் அவன் வாழ்நாள் முழுமையும் நிலைபெற்றுப் பயன்படும் என்பது உலகோர் அறிந்த பேருண்மையே யாகும்.

கி. பி. பதினேழாம் நூற்ருண்டில் இந்தியாவின் பெரும் பகுதியினை மொகலாயர்கள் ஒரு குடைக்கீழ் அரசாண்ட காலத்தில், இந்துப் பேரரசை இந்தியாவில் ஏற்படுத்த முயன்ற

[1] 271 of 1927

மராட்டிய சிங்கம் மாவீரன் சிவாஜி வீரத்தின் உலைக்களனாய், வெற்றியின் நிலைக்களனாய், பக்தியின் இருப்பிடமாய் விளங்கியதை மறக்கவோ, மறைக்கவோ, மழுப்பவோ முடியாது. இவ்வாறு இவன் விளங்கக் காரணம் யாது? சிவாஜியின் தாயான ஜிஜிபாயும், ஆசானான தாதாஜி கண்ட தேவரும் இவனை இளமையிலேயே கல்வி கேள்விகளிற் சிறந்தவனாகவும், அஞ்சாமையும், ஆற்றலும் உடையவனாகவும் வளர்த்ததுதான் காரணம் என்பதை வரலாற்று அறிஞர்கள் மறக்க முடியாது.

உலகப் பெருந்துறவியருள் ஒருவரான விவேகானந்தர், தன்னிளமைக் காலத்தில் தன் தாயாரிடத்து இராமாயணத்திலுள்ள இராமனது பொறையையும், மகாபாரதத்திலுள்ள தருமனது பொறையையும் கேட்டறிந்தமையாலேதான் உலகில் மிகப் பெரும் 'பொறுமைசாலி'யாக எத்தகைய இடுக்கண் வந்துற்ற போதும் நடுக்கம் ஒன்றுனு மின்றி விளங்கினார் என்பது நம் இந்தியப் பெருநாடு கண்ட உண்மை.

'குல விச்சை கல்லாமல் பாகம் படும்' எனவும், 'தந்தையறிவு மகனறிவு' எனவும் கூறும் முதுமொழிக்கு ஏற்ப இராசேந்திரன் தன் தந்தை இராசராசனைப் போல் சிவ நெறியே தனக்குரிய சமயமாகக் கொண்டு தன் வாழ்நாள் முழுமையும் சிவபெருமானிடத்தில் ஒப்பற்ற பக்தியுடையவனாய்த் திகழ்ந்தான்.

இவ்வண்ணம் மதுராந்தகன் சிவபக்திச் செல்வமுடையவனாய் விளங்கியமைக்குக் காரணம், இவனை இளமையில் வளர்த்தவர்களான இவன் தந்தையின் பாட்டியார் சிவஞான கண்டராதித்த சோழன் மனைவியாகிய செம்பியன் மாதேவியாரும், அத்தையாகிய இராசராச சோழன் தமக்கை குந்தவைப் பிராட்டியு மாவர். செம்பியன் மாதேவியார் 'கொண்டான் குறிப்பறிந் தொழுகும் பண்புடையார்' ஆதலின், தன் கணவனைப் போலவே சிவபக்தி, சமயப் பொறை முதலான உயர் குணங்கள் பலவும் அமையப் பெற்றவர். இவன் தந்தையும் இவர்களால் வளர்க்கப்பட்டவனே.

இத்தகைய நற்பண்புடையாரிடத்தே மதுராந்தகன் வளர்ந்து பிற்காலத்தில், 'மெய்யன்பு நெறிவழக்கினால் எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும் மன்னாத பிறப்பறுக்கும் தத்துவத்தின் வழியுணர மன்னிய சீர்ச்சங்கரன்றாள் மறவாமையே விதி பொருள்' என்று நன்குணர்ந்து, தான்

தனது கங்கை வெற்றிக்குப் பின்னர் 'கங்கை கொண்ட சோழ புரம்' என்ற ஒரு தலைநகரையே உண்டாக்கி, ஆங்கு ஈடும் எடுப்பு மற்ற சிவாலயம் ஒன்றை எடுப்பித்தமையால் இவனது சிவபக்தி எத்தகையதாய் இருத்தல் வேண்டும் என்பதை நாம் ஈண்டு நன்கறிதல் வேண்டும்.

இவன் சைவ சமய வளர்ச்சியில் மட்டுமன்றிச் செம்பியன் மாதேவியார், குந்தவைப் பிராட்டியார் ஆகியோரின் அன்பு கலந்த அறிவுரைகளை நாள்தோறும் கேட்டறிந்து அதன்படி ஒழுகி வந்தமையால் சிற்பம், ஓவியம், இசை முதலான கலை வளர்ச்சிகளிலும் பெரிதும் ஈடுபட்டதோடு சமயப்பொறை மிக்க வனாகவும் வாழ்ந்து வந்தான்.

இத்தகைய அருங்கலைகள் பலவும் கற்றுப் பல துறைகளில் வல்லவனாய் விளங்கிய மதுராந்தகன் தன்னிளமைக் காலத்தும், முடிசூடிச் சோழப் பேரரசின் பெருமன்னனாய் வாழ்ந்த காலத் தும், தமிழ் வல்ல பெரும்புலவர்களுடன் இலக்கியம், இலக் கணம்பற்றி உரையாடி மகிழ்ந்தான்; கற்று வல்ல பெரியோர் சூழலிலேயே இருப்பதை விரும்பினான். இவனது சிறந்த தமிழ்ப் புலமையையும் புலவரைப் போற்றும் பெருந்தன்மையையும் கண்டு களி பூத்த சோணாட்டு மக்கள், இவனுக்குப் 'பண் டித சோழன்' என்னும் சிறப்புப் பெயரை யளித்துப் பாராட்டி மகிழ்ந்தனர்.

இவ்வண்ணம் குலமுதல் சீலம் என்றும் குறைவிலா சைவ நன்னெறியிடத்து மாறா அன்பு வளர்ந்தெழ வளர்ந்து, வாய்மைப் பொருள் பெறு சைவ நீதிக் கலையுணர் பொலிவின் மிகுந்து, தக்கதோர் இளமைப் பருவ முற்றான்.

வீரமும், கடவுட் பற்றும் தன் இரு கண்களாகக் கொண்டு, 'சயங்கொண்டான்', 'சிவபாதசேகரன்' என்றெல்லாம் புகழ்ப் பெற்ற இராசராசனின் மகனான மதுராந்தகன் தந்தைக்கேற்ற தனயனாக விளங்கினான். 'தம்மின் தம்மக்கள் அறிவுடைமை' என்னும் வாக்கினுக் கேற்ப மதுராந்தகன் தந்தையினும் சிறந்த அறிவுடையவனாகத் திகழ்ந்தான்.

இத்தகைய பருவத்தில் தன் தந்தை இராசராசப் பெரு மன்னன் நிகழ்த்திய கங்கப் போர், கலிங்கப் போர், குந்தளப் போர் ஆகியவற்றிற் கலந்துகொண்டு, அவற்றை வெற்றியுடன் நடத்திப் புகழ் எய்திய மதுராந்தகனைக் கண்ட இராசராசப் பெருமன்னன் பேருவகை கொண்டான். தன் மகன்

பேராற்றலும், பெருவீரமும் படைத்தவனுய் விளங்கியமை யைக் கண்டு தக்கதோர் நன்னுளில் கி. பி. 1012 ஆம் ஆண்டு இவனுக்கு இளவரசு பட்டங்கட்டி[1], 'இராசேந்திரன்' என்னும் அபிடேகச் சிறப்புப் பெயரை வழங்கி, அரசாங்க அலுவல்களில் கலந்துகொண்டு பல துறைகளிலும் சிறந்த பயிற்சி பெற்று வரு மாறு செய்தனன். எனவே, இவனது ஆட்சியின் தொடக்கம் 27 - 3 - 1012-லிருந்து 7 - 7 - 1012-க்குள் ஒரு நாளாக இருந்திருக்க வேண்டு மென்று அறிஞர் கருதுகின்றனர். அன்று முதல் மதுராந்தகன் என்ற பெயர் மாறி இவன் தன் கால முழு மையும் 'இராசேந்திரன்' என்ற பெயருடன் விளங்கினன்.

இளவரசு பட்டம் கட்டப் பெற்ற நாளில் இராசேந்திரன் நிறைந்த அனுபவமும் தேர்ந்த அரசிய லறிவும் பெற்றிருந்த வனுதல் வேண்டும் என்பது உறுதி.

இராசேந்திரனுக்கு இளவரசு பட்டம் கட்டப் பெற்று இரண்டாண்டுகள் கழிந்த பின்னர், கி.பி. 1014இல் இவன் தந்தை இராசராசப் பெருமன்னன் இவனுக்கு முடி சூட்டி வைத்தனன்.

இராசராசன் தன் மகனுன இராசேந்திரனின் மூன்ரும் ஆட்சி ஆண்டில் ஒரு தேவதானம் அளித்தான் என்ற செய்தி திருமுக்கூடல் கல்வெட்டில் குறிக்கப்பெற்றிருத்தலானும், இரா சேந்திரனின் மூன்ரு மாட்சி யாண்டில் தந்தையும், தானும் இணைந்து ஆட்சி நடத்தியமைக்குத் தக்க சான்றுகள் கிடைத் துள்ளமை யாலும், இராசராசன் தன் வாழ்நாளிலேயே தன் ஒப் புயர்வற்ற மகனுகிய இராசேந்திர சோழனுக்கு முடி சூட்டித் தமிழக வரலாற்றில் காணப்படாத புதுமையான தந்தையும் தன யனும் இணைந்த ஆட்சியினை ஏற்படுத்தினுன் என்பதனை அறி யலாம்.

சோழ மன்னர்கள் தம் ஆட்சியைக் கைக்கொள்ளும் போது ஒருவர்பின் ஒருவராக மாறி மாறிப் புனைந்து கொண்டு வந்த இராசகேசரி, பரகேசரி என்னும் பட்டங்களுள் இவன் பரகேசரி என்னும் பட்டம் புனைந்து கொண்டான்.

மொகலாயப் பெருமன்னனுன ஔரங்கசீப்பைப் போலவும் இங்கிலாந்து நாட்டின்கண் விக்டோரியா அம்மையார்க்குப் பின் முடிசூட்டப்பெற்ற எட்வர்டு மன்னரைப் போலவும் நம்

[1] Ep. Ind. Vol. VIII. P, 269

இராசேந்திரனும் தான் முதியவனாக இருந்த காலை ஆட்சியுரிமை பெற்றான் என்பது நினைவிற் கொள்ளத் தக்கதாகும். ஔரங்கசீப் தனது நாற்பத்தொன்றாவது வயதில் அரசு பட்டம் பெற்றான். ஆனால், இராசேந்திரனோ ஔரங்கசீப்பைவிட முதிர்ந்த வயதில் ஆட்சிப் பட்டம் பெற்றான் என்பது நினைவு கூறத் தக்கதாகும்.

இராசேந்திரன் சோழப் பெருநாட்டின் மன்னனாக முடிசூட்டிக் கொண்ட பொழுது ஏறத்தாழ 50 வயது உடையவனாக இருந்தானாதல் வேண்டும் என்று பண்டாரகர் மா. இராசமாணிக்கர் அவர்கள் 'சோழ வரலாறு' எனும் தம் நூலில் குறிக்கின்றார்.[1]

இராசேந்திர சோழன் பட்ட மேற்றபோது அவனுக்கு ஏறத்தாழ நாற்பத்தைந்து வயதிருக்கலாம் என்று 'குலோத்துங்கன் மூவர்' என்னும் தமது நூலில் திரு. வ. பொன்னுசாமிப் பிள்ளை அவர்கள் குறிப்பிடுகின்றார். ஈண்டு நாம் இதுபற்றி ஆய்வோம்.

இராசராசன் தன் தந்தையான இரண்டாம் பராந்தக சோழன், தமையனான ஆதித்த சோழன், சிற்றப்பனான மதுராந்தக சோழன் ஆகிய மன்னர் பெருமக்கள் ஆட்சி புரிந்து இறந்த பின்னர் பட்டம் பெற்றான் என்பதை முன்பே கண்டோம். எனவே, அவன் பட்டம் பெற்ற காலத்தில் முதியவனாயிருத்தல் வேண்டும் என்பது உறுதி.

இங்கிலாந்து நாட்டை ஆண்ட விக்டோரியா பேரரசியார் வயது முதிர்ந்தவர். அவரது ஆட்சிக் காலத்திலேயே அவருக்கு வயது முதிர்ந்த மகன் ஒருவர் இருந்தார். தாயாருக்குப் பிறகு பட்டம் பெற்ற அவர் முதுமை யடைந் திருந்தார். அவரைப் போலவே நம் இராசேந்திரனும் பட்டம் பெற்ற போது ஏறத்தாழ ஐம்பது வயதுடையவனாக இருந்தான்..எனவேதான் இராசராசனது நான்காம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டில் (கி.பி. 988) இவன் 'இராசேந்திர சோழ தேவன்' எனக் குறிக்கப் பெற்றுள்ளான்.

இராசராசனது ஆட்சிக் காலம் ஏறத்தாழ முப்பது ஆண்டு காலம் நீடித்தது என்பதை வரலாறு உணர்த்துகின்றது. அக்காலத்தில் இராசேந்திரன் தந்தைக் குதவியாக நிருவாகத்தைக் கவனித்தும், படை நடத்திச் சென்றும் அரும்பணி யாற்றி வந்

[1] 'சோழர் வரலாறு' பண்டாரகர் மா. இராசமாணிக்கர் - பக்கம்-96 - வரிகள்-4-6.

தான். எனவே, இராசேந்திரன் அரியணை யேறிய போழ்து அவன் வயது வந்த இளைஞனா யிருந்ததையும், தன் தந்தை பட்டம் பெற்ற சில ஆண்டுகளுள் சோழர் படைத்தலைவனாய் அமர்த்தப்பட்டதையும், அவன் தந்தை முப்பதாண்டு காலம் ஆட்சி புரிந்ததையும் ஆய்ந்து பார்க்குங்கால் நம் இராசேந்திரன் அரியணை யேறிய போழ்து ஏறத்தாழ ஐம்பதாண்டு நிறைந்தவனாதல் வேண்டும் எனக் கொள்ள இடமுண்டு.

கி. பி. 1014 ஆம் ஆண்டில் சோழப் பேரரசின் தனிப்பெரும் மன்னனாக முடிசூட்டப் பெற்ற இராசேந்திரன், தன்னாட்டின் தலைநகரினைத் தஞ்சையினின்றும் மாற்றத் திட்ட மிட்டான்; எனவே, தில்லையம்பதியிலிருந்து தென்மேற்கே இருபது கல் தொலைவிலுள்ள இடமும், அரச குடும்பம் வாழ்ந்து வந்த பழையாறை நகருக் கருகிலுள்ள இடமுமான கங்கை கொண்ட சோழபுரத்தைத் தேர்ந் தெடுத்தான்; ஆங்குச் சிவனுக்கோர் கற்றளி யெடுக்கவும் திட்ட மிட்டான். இப்புதிய தலைநகர் கி. பி. 1022 ஆம் ஆண்டில் உருவாயிற்று.

கி. பி. 1014ஆம் ஆண்டிலிருந்து கி. பி. 1022ஆம் ஆண்டு முடிய இராசேந்திர சோழன் எங்கிருந்து ஆண்டு வந்தான் என்ற வினாவிற்குரிய விடையை நாம் ஆய்ந்து பார்த்தல் அவசிய மாகும்.

இராசேந்திரனின் கரந்தைச் செப்பேட்டின் மரபு புகழ்ச்சி யுரையுள் (பிரஸஸ்தி) காணப் பெறுகின்ற சில சொற்றொடர் களின் துணைகொண்டு இவன் இவ்விடைப்பட்ட காலத்தில் தில்லையம்பதி யெனப் போற்றப்பெறும் சிதம்பரத்தில் மாளிகை யமைத்துத் தங்கியிருந்தனன் என்பது புலப்படுகின்றது.

'நமக்கு யாண்டு எட்டாவது, நாள் நூற்றேழினால் நாம் பெரும்பற்றப் புலியூர் விட்ட வீட்டின் உள்ளால் மாளிகையின் கீழை மண்டபம் இராசேந்திர சோழ பிரமாதி ராஜனில் நாமுண்ணா விருந்து'[1] என்று கரந்தைச் செப்பேட்டின் நான்காவது தகட்டின் உரைநடைப் பகுதியில் குறிப்பிடப்பட் டுள்ளது. மேலும்,

'அரசர்க்குச் சூடாமணி போன்றவனும், வியாக்கிர அக்கிர காரத்தில் வாழ்ந்தவனுமான இராசேந்திரன் எல்லா வேதங் களிலும் கரைகண்டவர்களான அந்தணச் சிரேஷ்டர்களுக்கு

[1] கரந்தைச் செப்பேடு-உரைநடைப் பகுதி-ஏடு-4

அக்கிரகாரம் முழுவதையும் நீர்வார்த்துக் கொடுத்தான்'[1] என்று வடமொழிச் செய்யுள் அறுபத்தைந்தாவது பாடலில் (கரந்தைச் செப்பேடு) குறிப்பிட்டுள்ளதாலும் இராசேந்திரன் தங்கியிருந்த இடம் பெரும்பற்றப்புலியூ ரெனும் வியாக்கிர அக்கிரகாரமாகும் என்பது தெள்ளிதின் புலனாகும். பெரும்பற்றப் புலியூரென்பது சிதம்பரம் என்பது யாவரு மறிந்ததே.

சிதம்பரம் சிறந்த சிவத் தல மானதாலும், புதிய தலைநகரத்தில் நடைபெறுகின்ற வேலைகளைக் கண்காணித்து வருவதற்குச் சிதம்பரம் ஏற்ற இடமாதலாலும், அரச குடும்பம் வாழ்ந்து வருகின்ற பழையாறை நகருக்குச் சிதம்பரம் அருகிலுள்ளதாலும், இராசேந்திரன் கி.பி. 1014 - கி.பி. 1022 ஆம் ஆண்டுகட்கு இடைப்பட்ட காலத்தில் தங்கியிருந்தான் என்பது தெளிவாகிறது. மேலும், இராசேந்திரனின் பெயரால் சிதம்பரத்தில் மாளிகை யொன்றும் அமைக்கப்பட்டிருந்ததால் இக்கருத்து வலிவு பெறுகின்றது. இராசேந்திர சோழன் இவ்விடைக்காலத்தில் பெரும்பற்றப்புலியூரில் தங்கியிருந்தனன் என்ற கருத்தினைக் கரந்தைத் தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர் திரு. சி. கோவிந்தராசர் அவர்களும் தமது கட்டுரையில்[2] வலியுறுத்தியுள்ளார் என்பதும் அறியத் தக்க தாகும்.

இராசேந்திரன் தனது கங்கை வெற்றிக்குப் பின்னரே புதிய தலைநகரத்திற்குக் 'கங்கை கொண்ட சோழபுரம்' எனும் பெயரிட்டுக் கங்கை நீரால் தூய்மை செய்தான் என்பது கல்வெட்டால் அறியப்படுகின்றது.

போர்க் கலையில் தேர்ச்சியும், அரசியல் அறிவில் நல்ல முதிர்ச்சியும், நற்பண்புகளில் உயர்ச்சியும், அயர்ச்சியற்ற நன் முயற்சியும் போன்ற போற்றுதற்குரிய பல பண்பு நலன்களைப் பெற்றுத் திகழ்ந்த முதலாம் இராசேந்திரன் புகழ்க்கொடி நாட்டியதுடன், தன்னை ஈன்றெடுத்த தந்தைக்கும் புகழினைத் தேடித் தந்தான்; தந்தைக் கேற்ற தனயனாய்,

> 'மகன் தந்தைக்(கு) ஆற்றும் உதவி இவன்தந்தை
> என்நோற்றான் கொல்எனும் சொல்'[3]

[1] கரந்தைச் செப்பேடு – வடமொழிச் செய்யுள்–65

[2] கட்டுரைப் பொழில்-மணிவிழா மலர்-கரந்தைத் தமிழ்ச் சங்கம் - 1973 'கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் முதல் இராசேந்திர சோழன் செப்பேடுகள்'

[3] திருக்குறள் - மக்கட்பேறு - 10

என்னும் வளமார்ந்த வள்ளுவனின் வாய்மொழிக்குச் சிறந்த எடுத்துக்காட்டாய் விளங்கினன்.

இளமைக் கால முதலே பெற்றோரிடத்து அளவற்ற அன்பு கொண்டு 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' எனும் பொன் மொழியினை மனத்திற் கொண்டிருந்தான். இது தனது ஆட்சியின் பிற்காலத்தில் பெற்றோருக்குப் படிமம் எடுத்து நிவந்தம் விட்டமையான் இனிது பெறப்படும். இவன்,

'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு'[1]

என்னும் வண்டமிழ் வள்ளுவனின் வாய்மொழிக் கிலக்கணமாய்த் திகழ்ந்தான். தன்னை இளமைக் கால முதல் போற்றி வளர்த்து, உயர்ந்தோனாகத் திகழத் தக்க முறையில் உருவாக்கிய தவமணியாம் செம்பியன் மாதேவிக்குத் தனது ஆட்சிக் காலத்தின் எட்டாம் ஆண்டாகிய கி.பி. 1020இல் படிமம் ஒன்று எடுத்து, அதனை நாகப்பட்டினம் வட்டம் செம்பியன் மாதேவி என்னும் ஊரிலுள்ள திருக்கோயிலில் எழுந்தருளுவித்து[2] அதன் நாள் வழிபாட்டிற்குத் தேவையான நிவந்தமும் அளித்தான் என்பதனால் இவன் செய்ந்நன்றி மறவாச் செம்மல் என்பதனை யறியலாம்.

[1] திருக்குறள்-செய்ந்நன்றி அறிதல்-10
[2] Ins. 481 of 1925; M. E. R. for 1926, Page. 105

# 5. இராசேந்திரன் அரியணை யேறிய போது அரசியல் சூழல்

கி. பி. 1012இல் இராசேந்திரன் இளவரசு பட்டம் சூட்டப் பெற்றான்.[1] இவன் இளவரசனாக இருந்த போது தந்தைக்குப் பேருதவியாய்த் திகழ்ந்து, தந்தைக்கேற்ற தனயனாக விளங்கினான். ஆட்சியை மேற்கொண்டு திறமை மிக்க மன்னனாகத் திகழத் தேவையான ஆற்றலும், தகுதியும் இவன் பெற்றிருந்தான் என்பதை முன்னரே கண்டோம். 'சயங் கொண்ட சோழன்' என்று வரலாற்றில் போற்றப்பட்ட இராசராசன் கி.பி. 1014 ஆம் ஆண்டில் இறந்தவுடன், இராசேந்திரன் 'பரகேசரி' என்னும் பட்டம் புனைந்து சோழப் பேரரசின் மன்னனாக முடி சூட்டிக்கொண்டான்.

இராசராச சோழன் மாவீரனாகத் திகழ்ந்தமையால், அவன் இறக்கும்போழ்து பரந்து பட்டதொரு பேரரசினைத் தன் மகனிடம் விட்டுச் சென்றான். இராசேந்திரன் அரியணை யேறிய போது சோழப் பேரரசு தற்காலத்திய சென்னை மாநிலத்தையும், மைசூர் மாநிலத்தின் ஒரு பகுதியையும், ஈழ நாட்டின் வட பகுதியினையும் கொண்டதொரு பரந்து பட்ட பகுதியாகத் திகழ்ந்தது. இராசேந்திரனின் போர் நடவடிக்கைகளையும், வெற்றிகளையும் அறிந்து கொள்வதற்குமுன் அவன் அரியணை யேறிய போழ்து, சோழப் பேரரசைச் சூழ்ந்துள்ள அரசுகளின் நிலைபற்றி அறிந்துகொள்ளுதல் அவசிய மாகும்.

*பாண்டியர்*

பாண்டியர்கள் தமிழகத்தின் தென்கோடிப் பகுதியைப் பண்டுதொட்டு ஆண்டு வந்தனர். சங்க காலப் பாண்டியர்

[1] Ep. Indica. Vol. VIII. Page, 260

வரலாறு தெளிவாகக் கிடைக்க வில்லை. தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் வெற்றிகளைப்பற்றி நாம் சங்க நூல்களால் அறிகிறோம். அவன் பாண்டியர் புகழைப் பாரெங்கும் பரப்பினான்.

களப்பிரர், பல்லவர் எழுச்சியால் கி. பி. நான்காம் நூற்றாண்டில் விழ்ச்சியுறத் தொடங்கிய பாண்டிய அரசு கி. பி. ஏழாம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் மீண்டும் தலை தூக்கியது. பிந்திய பாண்டியர்களுள் இழந்த பெருமையை மீண்டும் நிலை நாட்டிய முதல் மன்னன் கடுங்கோன் (கி. பி. 596-620) ஆவான். பாண்டியர் ஏறத்தாழ மூன்று நூற்றாண்டு காலம் தமிழகத்தைச் சிறப்புடன் ஆண்டனர். வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட சோழருடன் இவர்கள் மணவினைத் தொடர்பும், நட்புரிமையும் பெற்றிருந்தனர். இந்நிலை விசயாலய சோழன் காலத்தில் மாறியது. இக்காலத்தில் பாண்டிய மன்னர்கள் சோழ மன்னரினும் மேம்பட்டு விளங்கினர். பாண்டியர்கள் சோனாட்டைக் கைப்பற்றும் நோக்கத்துடன் குடமூக்கு, அரிசிலாற்றங்கரை, திருப்புறம்பியம் முதலிய போர்களில் ஈடுபட்டனர். திருப்புறம்பியப் போரில் பாண்டியர் தோற்றனர். இதற்குப் பின்னர் சோழ - பாண்டியர் பகைமை வளர்ந்தது.

தொடர்ந்து நடைபெற்ற பாண்டியர், சோழர் ஆதிக்கப் போர், தமிழக வரலாற்றின் சுவையானதொரு நிகழ்ச்சியாகும். இரண்டாம் வரகுண பாண்டியர் (கி.பி. 862-880) காலம் வரை பாண்டியர்களின் பெருமை உயர்ந்திருந்தது. இவர்களுடைய புகழும், வெற்றியும் திருப்புறம்பியப் போருக்குப் பின் வீழ்ச்சியடையத் தொடங்கியது. விசயாலயனுக்குப் பின்பு ஆண்ட சோழ மன்னர், பாண்டியர்களைப் பலமுறை வென்று அடிமைப் படுத்தினர். பிற்காலச் சோழர் காலத்தில் சோழப் பேரரசு மீண்டும் தனது மேலாண்மையைத் தமிழகம் முழுவதும் நிறுவியது.

முதலாம் இராசராசன் பாண்டியர்களை இரு தடவை வென்று தன்னடிப்படுத்தினான். இவனால் தோற்கடிக்கப்பட்ட பாண்டிய மன்னன் 'அமர புயங்கன்' என்பது திருவாலங்காட்டுச் செப்பேட்டால் அறியப்படுகிறது. இராசராசன் காலத்தில் பாண்டிய நாட்டில் சிற்றரசர் சிலர் இருந்தனர் என்பதும், அமர புயங்கன் அவர்கட்குத் தலைவனா யிருத்தல் வேண்டும் என்பதும், அவர்களை இராசராசன் வென்றான் என்பதும், 'மலை நாட்டுச் சேரமானையும், பாண்டியர்களையும் எறிந்து கொன்ற

பண்டாரம்'[1] எனத் தஞ்சை இராசராசேச்சுரத்துச் சாசனங்களில் பன்முறையும் கூறப்பட்டிருத்தலின் விளங்கும்.

இராசராசனால் வென்றடக்கப்பட்ட பாண்டியச் சிற்றரசர்கள், இராசேந்திரன் அரியணை யேறிய போழ்து, சிறிது வலிமை பெற்றுச் சோழர்க்குத் திறை செலுத்தாது முரண்பட்டனர். இவர்கள் சோழ ஆட்சிக் கெதிராகப் புரட்சிக்கொடி யுயர்த்தவும் காலம் நோக்கி யிருந்தனர்; படை வலியைப் பெருக்கிக் கொண்டிருந்தனர்.

***சேரர்***

சோழ நாட்டிற்கு மேற்கே அமைந் துள்ளது சேர நாடு. இவர்கள் மலை நாடென அழைக்கப்படும் சேர நாட்டினைப் பண்டைக் கால முதல் ஆண்டு வந்தனர்.

பிற்காலச் சோழர் காலங்களில், சேர மன்னர்கள், சோழ மன்னர்க்குத் திறை செலுத்தும் குறுநில மன்னர்களாய் விளங்கினர் என்பது கல்வெட்டுகளால் புலனாகிறது. அக் கல்வெட்டுகளின் துணைகொண்டு ஆராய்ந்து பார்க்குங்கால், முதலாம் இராசராசன் ஆட்சிக் காலத்திலேயே சேர நாடும், பாண்டிய நாடும் சோழரது ஆட்சிக் குள்ளாகி விட்டது என்பது புலனாகிறது.

சேர மன்னனாகிய பாஸ்கர ரவிவருமன்[2] முதலாம் இராசராச சோழன் அனுப்பிய தூதுவனைப் பிடித்துச் சிறை வைத்தான். இதனால், இராசராசன் சேர நாட்டின்மீது படை யெடுத்துச் சேர நாட்டின் கடற்கரைப் பட்டினமாகிய காந்தளூர்ச் சாலையில் சேரர் மரக் கலங்களை யழித்துப் பெருவெற்றி பெற்றான்.[3] காந்தளூர்ச்சாலை என்பது தற்காலத்தில் திருவனந்தபுரத்தின் ஒரு பகுதி யாகும். இது 'வலியசாலை' எனவும் அழைக்கப்பெறுகிறது.[4]

இராசராசன் காந்தளூர்ச் சாலையை வென்ற பின்பு, உதகையை வென்று தீக்கிரை யாக்கினான். பின்பு விழிஞத்திலும் பெரும்போர் நிகழ்த்தி வெற்றி பெற்றான். இவ்வாறு கி. பி. 978 முதல் கி. பி. 1036 வரை ஆட்சி செய்த பெருமைக்குரியவனான பாஸ்கர ரவிவருமன் இராசராசனிடம் தோல்வி கண்

[1] S.IN. Vol. II. No. 59

[2] T. A. S. Vol. II. No. Page. 32.

[3] T. A. S. II. P. 4; Ins. 395 of 1922.

[4] T. A. S. Vol. II. P. P. 4 & 5.

டான். இருப்பினும் ஈழ மன்னனின் உதவி பெற்றுச் சோழ வேந்தனை வெல்லுந் தருணம் பார்த்திருந்தான்; சோழராட்சிக் கெதிராகக் கலகமும் செய்து வந்தான். எனவேதான் இராசேந்திரன் சேர நாட்டின்மீது படை யெடுக்க வேண்டிய தேவை யேற்பட்டது. சேர நாடு முன்பு இராசராசனுல் சோழ நாட்டுடன் இணைக்கப்பெற்று மலை மண்டலம் எனப் பெயரிடப் பெற்றிருந்தது என்பதையும் நாம் நினைவிற் கொள்ள வேண்டும்.

**ஈழம்**

இது தமிழகத்தின் தெற்கே அமைந்த, கடலால் சூழப் பெற்ற நாடு. இப்பழந்தீவில் சிங்களர் வாழ்ந்து வந்ததால் சிங்களத் தீவு என்று அழைக்கப் பெற்றது. இது தற்காலத்தில் ஸ்ரீலங்கா என அழைக்கப் பெறுகிறது.

சங்க காலச் சோழன் கரிகாலன், ஈழ நாட்டினை வென்றுன் என்று நாம் முன்பே கண்டோம். பிற்காலச் சோழர் காலத்தில் ஈழ-சோழப் போர் கடுமையாக நடைபெற்றது.

முதல் பராந்தக சோழனிடம் தோல்வி கண்ட இராச சிம்ம பாண்டியன் ஈழத்தில் அடைக்கலம் புகுந்தான்; தன் முடியினையும், அரச சின்னங்களையும் ஈழ நாட்டு மன்னனிடம் அடைக்கலப் பொருளாக வைத்தான். இம் முடியினைக் கைப் பற்றும் நோக்கத்துடன் முதலாம் பராந்தகன் ஈழ நாட்டின்மீது படையெடுத்து, வட பகுதியை வென்றுனுயினும் முடியைக் கவர இயல வில்லை என்பதை முன் பகுதியில் கண்டோம்.

இரண்டாம் பராந்தகன் என்னும் சுந்தர சோழன், ஈழத்தின்மீது படையெடுத்துத் தோல்வி கண்டு ஈழ மன்னனுடன் சமாதானம் செய்து கொண்டான். ஈழ மன்னர்கள் பாண்டிய மன்னர்க்குப் படையுதவி செய்து சோழரை வீழ்த்த முயன்று வந்தனர்.

முதலாம் இராசராசன் காலத்தில், இராசேந்திரன் தலைமையிலான சோழப் படை ஈழம் சென்று, வட பகுதியை வென்று, அதற்கு மும்முடிச் சோழ மண்டலமெனப்[1] பெயரிட்டு, அனுராதபுரத்தை அழித்துப் பொலனருவாவைப் புதிய தலைநகராக்கி மீண்டது. இப்போரில் தோல்வியுற்ற ஈழ வேந்தன் ஐந்தாம் மகிந்தன்,[2] காட்டிற்குள் ஓடி ஒளிந்து கொண்டான். இரா

[1] S. I. I. Vol. II. No. 92

[2] Ep. Zeylantia. Vol. III. No. I

சேந்திரன் மன்னர் முடியைக் கைப்பற்ற இயலாமல் தன்னுடு திரும்பினுன்.

காட்டில் ஒளிந்திருந்த மகிந்தன் சில ஆண்டுகள் கழித்துக் காட்டினின்றும் வெளியேறினுன்; பெரும்படை திரட்டினுன்; ஈழப் பகுதிகளைச் சோழர் ஆட்சியினின்றும் மீட்கத் தகுந்த காலத்தினை எதிர் நோக்கி யிருந்தான். இச்சமயத்தில்தான், சோணுட்டில் இராசராசன் ஆட்சி நீங்கி இராசேந்திரன் ஆட்சிப் பொறுப்பினை மேற்கொண்டான். இராசேந்திரனும் ஈழநாடு முழுவதையும் வெற்றிகொள்ள வேண்டு மென்று ஆவல் கொண்டிருந்தான்.

*சாளுக்கியர்*

தென்னிந்திய வரலாற்றில் தமக்கென ஒரு சிறந்த இடத்தைப் பெற்றவர் சாளுக்கியர் என்ற வீர மரபினர். தக்கணப் பகுதியில் மிக்க வலிமையுடள் ஆட்சி செலுத்திய இவர்கள் இரட்டர், சாளுக்கியர், வல்லவர் என்று சோழர் காலக் கல்வெட்டுகளில் குறிக்கப்பெறுகின்றனர்.

இவர்கள் இரட்ட மண்டலத்தை ஆண்டு வந்தனர். துங்கபத்திரை யாற்றுக்கு வடக்கிலும், நருமதை யாற்றுக்குத் தெற்கிலும், தக்கணத்தின் பெரும்பகுதி யளவும் படர்ந்திருந்த நாடே இரட்ட மண்டல மாகும். இஃது ஏழரை யிலக்கம் நில அளவுடையதால் 'இரட்டபாடி ஏழரை யிலக்கம் என்று தமிழ் நூல்களிலும், கல்வெட்டுகளிலும் குறிக்கப்பெறுகின்றது.

இந்நாட்டினைத் தொடக்கக் காலங்களில் சாதவாகன வேந்தர்கள் ஆண்டு வந்தனர். பின்னர் இராட்டிரகூட மன்னர்கள் இந்நாட்டினைக் கைப்பற்றி ஆட்சி செலுத்தினர். இவர்களையும் வென்று இரட்டபாடியின் பெரும்பகுதியினைக் கைப்பற்றி ஆட்சி புரிந்தவரே சாளுக்கியர் ஆவர்.

சாளுக்கியர் யாவர்? அவர்களது பூர்வீகம் யாது? என்பன போன்ற வினுக்கட்கு வரலாற்றறிஞர்க ளிடையே ஒருமித்த கருத்துக் காணப்பட வில்லை. இவர்கள் வட இந்திய அரச குலத்தினர் என்பது மட்டும் தெளிவு.

சாளுக்கியர் மூன்று பிரிவினராக ஆண்டனர் என்பதை வரலாறு உணர்த்துகிறது. இவர்களுள் முதல் பிரிவினர் வாதாபியைத் தலைநகராகக் கொண்ட மேலைச் சாளுக்கியர் ஆவர்.

இவர்கள் கி.பி. 547 முதல் கி.பி. 753 முடிய செங்கோல் செலுத்தினர். இவர்கள் பாதாமி (வாதாபி)யின் முந்திய சாளுக்கியர் எனவும் அழைக்கப் பெற்றனர். இரண்டாவது பிரிவினராகிய வேங்கியைத் தலைநகராகக் கொண்ட கீழைச் சாளுக்கியர் கி.பி. 615 முதல் கி.பி. 1076இல் சோழ-சாளுக்கிய அரசிணைவு ஏற்படும்வரை நல்லாட்சி புரிந்தனர். மூன்றாவது பிரிவினராகிய கல்யாணி நகரைச் சார்ந்த பிந்திய சாளுக்கியராட்சி கி.பி. 973 முதல் கி.பி. 1200 முடிய நீடித்தது. இம்மூவரே யன்றிக் குஜராத்தைச் சார்ந்த சோலங்கிகள் (சாளுக்கியர்) பத்தாம் நூற்றாண்டு முதல் பன்னிரெண்டாம் நூற்றாண்டுவரை ஆட்சி புரிந்தனர்.

***கல்யாணிச் சாளுக்கியர்***

இரண்டாம் தைலபன் என்னும் மன்னன் இராட்டிர கூட மன்னனான இரண்டாம் கர்(கரு)க்கரை கி.பி. 973இல் வென்று, அரியணையிலிருந்து வெளியேற்றி மேலைச் சாளுக்கியக் கிளையைத் தோற்றுவித்தான். இவர்கள் கி.பி. 973 முதல் 997 முடிய ஆட்சி புரிந்தனர். இவர்கள் தொடக்கத்தில் மால்கெட் அல்லது மான்ய கேதம் என்னும் நகரினைத் தலைநகராகக் கொண்டனர்.

பின்னர் கல்யாணி இவர்களால் தலைநகராகக் கொள்ளப் பட்டது. இது கலியாணபுர மெனவும் அழைக்கப்பெற்றது. இது நைசாம் மாநிலத்தில் பீடார் மாவட்டத்திலுள்ளதோர் அழகிய நகர மாகும். இது கி.பி. 978 முதல் கி.பி. 1127 வரை மேலைச் சாளுக்கியரின் தலைநகரமாக விளங்கியது.

தைலபன் காலத்தில் மேலைச் சாளுக்கியரின் புகழ் உச்ச நிலையி லிருந்தது. இவர்கள் பாதாமிச் சாளுக்கியரின் வழியினர் தானா? என்பது குறித்து வரலாற்றாசிரியர்க ளிடையே கருத்து வேறுபாடு நிலவுகிறது. இருப்பினும் மேலைச் சாளுக்கியர் கீழைச் சாளுக்கியர்களுடன் சம்பந்தப்பட்டவர்களாவர் என்பது மட்டும் உறுதி.

இந்நாட்டினைச் சத்தியாசிரயன் கி.பி. 997 முதல் 1008 முடிய ஆட்சி செய்தான். இவர்கள் காலத்தில் சோழ-சாளுக்கியப் போர் தொடர்ந்தது. சோழரின் மேலாண்மை வேங்கி நாட்டில் நிறுவப்பட்டது குறித்துப் பொறாமை கொண்ட சத்தியாசிரயன் வேங்கி நாட்டின்மீது போர் தொடுத்து, அந்நாட்டின் ஒரு பகுதியினைக் கைப்பற்றிக் கொண்டான்.

இதைக் கேள்வியுற்ற சோழ மன்னனான முதலாம் இராச ராசன், சத்தியாசிரயனுடன் போர் தொடுத்தான். இராசராசன்

சத்தியாசிரயனேடு நேருக்கு நேராகக் குதிரை மீதமர்ந்து போர் புரிந்து வெற்றி கண்ட நிகழ்ச்சியினைச் 'சத்தியாசிரயனை எறிந்து எழுந்தருளி வந்து ஸ்ரீ பாத புட்பமாக அட்டித் திருவடி தொழு தன பொற் பூ' என்னும் கரந்தைச் செப்பேட்டுத் தொடரால் அறியலாம். சோழர் வனவாசியையும், இராய்ச்சூரின் பெரும் பகுதியையும் கைப்பற்றினர்.

கிருஷ்ணு, துங்கபத்திரா ஆகிய பேராறுகட் கிடையில் அமைந்த இடைதுறை நாடு அல்லது 'எடத்தோர் இரண்டா யிரம்' எனக் குறிப்பிடப்படுகின்ற நாட்டையும், மைசூர் மாநிலத் தின் வடமேற்குப் பகுதியான 'வனவாசி' அல்லது 'வனவாசிப் பன்னீராயிரம்' எனக் கல்வெட்டுகளால் குறிக்கப்பெறும் பகுதி யினையும் 'மண்ணைக் கடக்கம்' என அழைக்கப் பெற்ற மானிய கேதம் பகுதியினையும் மேலைச் சாளுக்கியரே ஆண்டு வந்தனர்.

இராசராச சோழன் தன் மகனுகிய இராசேந்திரன் தலை மையில் ஒரு பெரும்படையை யனுப்பிச் சாளுக்கியருடன் போரிட ஆணை பிறப்பித்தான். சாளுக்கிய மன்னனுன சத்தியா சிரயனுக்கும், இராசேந்திரனுக்கும் பெரும்போர் நிகழ்ந்தது. முடிவில் இராசேந்திரன் வெற்றி பெற்றுன்.[1] இவ்வெற்றிகளை இராசேந்திரனின் மெய்க்கீர்த்தி விரித்துரைக்கின்றது. எனவே, இராசராச சோழன் காலத்தில் மேலைச் சாளுக்கியரின் வளர்ச்சி தடைப்பட்டது; சோழரின் உயர்ச்சி ஓங்கியது என அறியலாம்.

சத்தியா சிரயனுக்குப் பின் ஐந்தாம் விக்கிரமாதித்தர் கி.பி. 1009 முதல் கி. பி. 1014 முடியவும் ஆட்சி புரிந்தார். இரண் டாம் அய்யனுருக்குப் பின்னர் அரியணை யேறியவர் ஐந்தாம் விக்கிரமாதித்தரின் தம்பியான இரண்டாம் செயசிம்மர் அல்லது சகதேக மல்லர் ஆவார். இவர் கி.பி. 1015 முதல் கி.பி. 1042 வரை ஆட்சி புரிந்தார். இவர் பெல்லாரி, மைசூர் ஆகிய பகுதிகளை வென்று தமது பேரரசினை விரிவுபடுத்தினர். இவர் சோழர்களை வீழ்த்துவதையே தம் நோக்கமாகக் கொண்டார். தொடர்ந்து நடைபெற்ற சோழ-சாளுக்கியப் போரை இவர் ஒரு முடிவுக்குக் கொண்டு வருதல் வேண்டித் தம் படைகளைப் பெருக்கினர்; சோழப் பகுதியில் ஊடுருவல் செய்தார்; சோழர் களை வென்றதாகவும் கல்வெட்டுகளில் குறித்துக் கொண்டார். இராசேந்திரன் அரியணை யேறிய போழ்து சோழர்களின் வலிமை மிக்க பகைவுராக விளங்கியவர் கல்யாணிச் சாளுக்கியரே என்

[1] Ibid. II. Page 7; Ep. Ind. Vol. XXII. No. 34, Verse. 31

பதை வரலாறு சுட்டிக் காட்டுகிறது. கல்யாணிச் சாளுக்கியரின் வளர்ச்சி இராசேந்திரனுக்குப் பேரிடியான தொன்றுகும்.

**வேங்கியின் கீழைச் சாளுக்கியர்**

இம் மரபினைத் தோற்றுவித்தவர் விஷ்ணு வருத்தனர். இவர் வாதாபிச் சாளுக்கிய மன்னனான இரண்டாம் புலிகேசியின் உடன் பிறப்பாவார். இதனால், கீழைச் சாளுக்கியரும் மேலைச் சாளுக்கியரும் தாயத்தினராவர். இவர்களது தலைநகர் வேங்கி. கிருஷ்ணா, கோதாவரி ஆறுகட்கு இடைப்பட்ட பகுதி வேங்கி நாடாகும். இது வேங்கை நாடு என்றும் பெயர் பெறும். இவர்கள் தாய்மொழி தெலுங்கு. இவர்கள் வடமொழியினைப் பெரிதும் போற்றினர்.

விசயாலயன் காலத்திலிருந்து பிற்காலச் சோழர்கட்கும், மேலைச் சாளுக்கியர்கட்கும் அடிக்கடி போர் நிகழ்ந்தது. சோழர், மேலைச் சாளுக்கியரை வெல்லக் கருதிக் கீழைச் சாளுக்கியரைத் தமக்கு நட்பினராகவும், உறவினராகவும் கொண்டனர். இதனால், வலிமைமிக்க மேலைச் சாளுக்கியரும், சோழர் ஆதரவு பெற்ற கீழைச் சாளுக்கியரும் ஒன்று சேரும் வாய்ப்புத் தடைப்பட்டது. இது சோழரின் அரசியல் சூழ்ச்சியாகும். மேலைச் சாளுக்கியரும், கீழைச் சாளுக்கியரும் இணைந்திருப்பின் தமிழக வரலாற்றில் பல மாற்றங்கள் ஏற்பட்டிருக்கும் என்பது திண்ணம்.

கி. பி. 965இல் அரிஞ்சய சோழன், கீழைச் சாளுக்கிய மன்னன் விமனின் மகளாகிய வீமன் குந்தவையை மணந்து கொண்டான். (இவள் அரையன் ஆதித்தன் வீமன்மகள் ஆவள் என்னும் கருத்தும் வரலாற்றறிஞர் சிலரால் கூறப்படுகிறது.)

இரண்டாம் பராந்தக சோழன் தன் மகள் குந்தவையை வல்லவரையன் வந்தியத் தேவனுக்கு மணம் செய்வித்துக் கீழைச் சாளுக்கிய உறவை வலுப்படுத்தினான். (வல்லவரையன் வந்தியத்தேவன் கீழைச் சாளுக்கிய வமிசத்தினன் அல்லன் என்ற கருத்தும் அறிஞர் சிலரிடையே நிலவுகிறது.) இவர்கள் இராட்டிரகூடர்களுடன் இடைவிடாது போர் புரிந்து வந்தனர். இராட்டிரகூடர்களின் வலிமை குன்றியபின், சோழர் கீழைச் சாளுக்கியர்மீது தமது மேலாண்மையை நிறுவினர்.

முதலாம் இராசராசன் காலத்தில், கீழைச் சாளுக்கிய நாட்டில் பட்டத் தகராறு ஏற்பட்டு, உட்பூசல்கள் மலிந்தன.

எனவே, இராசராசன் கி. பி. 999இல் வேங்கியைக் கைப்பற்றி மூத்த கிளையினரை அதிகார பீடத்தில் அமர்த்தினான். சோழ, சாளுக்கிய உறவை வளர்க்க எண்ணிய இராசராசன் தன் மகள் குந்தவையை விமலாதித்தனுக்கு மணம் செய்வித்தான் என்பதை முன்னரே கண்டோம். இச் செயலால் கீழைச் சாளுக்கிய நாடு சோழ நாட்டின் சிறந்த உறுப்பாகவே விளங்கியது.

இராசேந்திர சோழன் அரசு கட்டிலேறிய போழ்தும் கீழைச் சாளுக்கியர் சோழரின் நட்பினராக இருந்து உறுதுணையாக, ஊன்றுகோலாக விளங்கினர் என்பது நோக்குதற் குரியது. வேங்கி நாட்டின் அரசியல் நிகழ்ச்சிகளினால், சோழர்கட்கும் மேலைச் சாளுக்கியர்கட்கும் நிலவிய பகைமை முற்றியது. கீழைச் சாளுக்கியரை மேலைச் சாளுக்கியர் தாக்குகின்ற காலை, சோழர் கீழைச் சாளுக்கியருக்குப் படை யுதவி யளித்தனர்.

**கலிங்கநாடு**

கோதாவரியாறு, மகாநதி ஆகிய இரண்டனுக்கும் இடையில் வங்கக் கடலைச் சார்ந்திருந்தது கலிங்க நாடு. இந்நாட்டினை ஆண்ட மன்னர்கள் கலிங்க மன்னர் எனப் பெயர் பெற்றனர். இது வடகலிங்கம், தென்கலிங்கம் என இருபிரிவினைக் கொண்டது. இங்கு நெய்யப்பட்ட நேர்த்தியான ஆடைகள் நாட்டின் பெயராலேயே 'கலிங்கம்' எனக் குறிக்கப்பெற்றன. கலிங்கர்கள் சோழர்கட்குக் கட்டுப்பட்டவர்களாகவும், நட்பினராகவும் வாழ்ந்தனர்; சில சமயங்களில் சோழருடன் பகைமை பூண்டனர். முதல் இராசராசன் கலிங்கரை வென்றான் என்பதை நாம் முன்பே கண்டோம்.

**மேலைக் கங்கர்கள்**

மேலைக் கங்கர் கி. பி. நான்காம் நூற்றாண்டின் இரண்டாம் பகுதியில் ஆட்சிக்கு வந்தனர். இவர்கள் மைசூர் சீமை முதலியன அடங்கிய கங்கபாடியை ஆண்ட அரச மரபினர்.

'பங்களர் கங்கர் பல்வேற் கட்டியர்'

என அப்பக்கத்து மன்னர் கூட்டத்தில் ஒருவராக இவரை இளங்கோவடிகள் தமது சிலப்பதிகாரத்தின்கண் குறிப்பிட்டுள்ளார்.

இவர்கள் தொடக்கக் காலத்தில், தங்கச் சுரங்கமுள்ள கோலாரைத் (குவலாளபுரம்) தலைநகராகக் கொண்டு ஆட்சி

புரிந்தனர். இது கொங்கு நாட்டின் அணித்தே உளது. இவ்வமிசத்தைக் கொங்கு மணிவருமன் எனப் புகழ்பெறும் முதலாம் மாதவர் (கி. பி. 400-435) தோற்றுவித்தார்.

அரிவருமன் காலத்தில் 'தலைக்காடு' தலைநகராக்கப் பட்டது. பெரும்பான்மையான கங்க மன்னர்கள் சமண சமயத்தை ஆதரித்தனர். இவர்கள் கன்னட, வடமொழி, இலக்கிய வளர்ச்சிக்குப் பேராதரவு தந்தனர்.

பல்லவருக்கும், பாண்டியருக்கும் கி.பி. 880இல் திருப்புறம்பி யத்தில் நடந்த போரில், கங்க மன்னனான பிருதிவிபதி, பல்லவர் பக்கம் நின்று, விசயாலய சோழனுக்கு ஆதரவாகப் போரிட்டு இறந்தான். இவர்கள் தமிழ் மொழியின்பால் பற்றுடையவர்கள். இவர்கள் பெரும்பாலும் சோழர்கட்குத் துணை புரிந்தனர்.

இராக்கச கங்கரின் காலத்தில் (கி. பி. 985-1024) சோழர் கி. பி. 1004இல் தலைக்காட்டுப் பகுதியினை வென்று கைப் பற்றினர். கங்கர்கள் சோழர்களின் தொடர்பால் 'உத்தம சோழ கங்கன்', 'கங்கன் அழகிய சோழன்' என்னும் பெயர்களைப் பெற்றனர் என்றும் அறிகிறோம்.

**கீழைக் கங்கர்கள்**

இவர்கள் எட்டாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் ஆட்சிக்கு வந்தனர். இவர்கள் கலிங்கத்தைத் தலைநகராகக் கொண்டு கஞ்சம் பகுதியினை ஆண்டு வந்தனர். இவர்களின் முந்தைய வரலாற்றினைத் தெளிவாக அறிந்துகொள்ள இயல வில்லை. இவர்கள் இந்து சமயத்தினைச் சார்ந்தவர்கள்.

கீழைக் கங்க மன்னர்களுள் ஐந்தாம் வச்சிரகஸ்தர் (வச்சிர ஹஸ்தர் கி.பி. 1038-'68) புகழ்பெற்றவர். இவர் காலத்தில் தான் கலிங்கர்கள், சோழ ஆதிக்கத்தினின்றும் விடுதலை பெற்றுத் தன்னாட்சி செலுத்தினர். இவர்கள் சோழருடன் திருமண உறவுகள் கொண்டனர். கீழைக் கங்கர்கள், கஜபதி என்ற விருதினைத் தங்கள் பெயருடன் இணைத்துக்கொண்டனர்.

**கொங்கு நாடு**

கொங்கு நாடு என்பது தற்காலத்திய சேலம், கோயம் புத்தூர், திருச்சி மாவட்டத்திலுள்ள கரூரைச் சுற்றிலுமுள்ள பகுதிகள், நீலகிரி ஆகிய மாவட்டங்க ளடங்கிய பெருநிலப்

பரப் பாகும். கரூர், கொங்கு நாட்டின் தலைநகர மாகும். இது மலைகள் நிறைந்த பகுதி. இது சோழ நாட்டின் மேற்புறத்தில் உள்ளது. இப்பகுதி விசயாலய சோழன் காலத்தில் கைப்பற்றப் பட்டது. அவன்பின் ஆண்ட ஆதித்த சோழனும் கொங்கு நாட்டில் சோழப் பேரரசை நிறுவிப் பல கோயில்களை அங்குக் கட்டினான்.

முதல் பராந்தகனும் கொங்கு நாட்டை வென்றான். அங்கிருந்து கொண்டுவந்த பொன்னைக்கொண்டு சிற்றம்பலம் பொன் வேய்ந்தான்.[1] தனது வெற்றியின் சின்னமாகக் கொங்கு நாட்டில் 'கொங்கு நாட்டுப் பராந்தகபுரம்' என்று ஓர் ஊருக்குப் பெயரிட்டான்.

மா மன்னன் முதலாம் இராசராசனும் கொங்கு நாட்டின் மீது படையெடுத்துக் குடகு, நீலகிரி ஆகிய பகுதிகளை வென்றான்; அவற்றைத் தன் ஆட்சிக் குட்படுத்தினான். அந் நாட்டை ஆளுவதன் பொருட்டுச் சோழ அரசப் பிரதிநிதிகளை அனுப்பினான். இவர்கள் கொங்கு-சோழப் பிரதிநிதிகள் என்று அழைக்கப் பெறுகின்றனர். இவர்கள் பிற்காலத்தில் சோழர் களினின்றும் பிரிந்து தன்னாட்சியை நிறுவிக் கொங்குச் சோழர் கள் என்ற புதிய மரபினைத் தோற்றுவித்தனர். சோழர் காலக் காசுகள் பல, கொங்கு நாட்டில் காணப்படுகின்றன.

### ஹொய்சாலர்

இவர்கள் மைசூர் மலைப் பகுதிகளில் முதன் முதலில் ஆட்சி புரிந்தனர். பின்னர் சமவெளிப் பகுதிகளிலும் தமது ஆட்சியினை விரிவுபடுத்தினர். இவர்கள் பத்தாம் நூற்றாண்டின் மத்தியப் பகுதியில் மிகுந்த செல்வாக்குடன் விளங்கினர். சோழர்களின் சிற்றரசனான அப்பிரமேயன் என்பவன் அண்டையிலுள்ள மலை நாட்டுப் பகுதிகளை வென்று பெரும்புகழ் பெற்றான். இவனை ஹொய்சாலர்கள் வென்று தமது புகழினை நிலைநாட்டினர். இவர்கள் கி. பி. 1006-க்குள் கொங்க வாலர்களையும் வென்றடக் கினார்கள்.

ஹொய்சாலர்கள் யாதவ இனத்தைச் சார்ந்தவர்கள். இவர்கள் தொடக்க காலத்தில் கல்யாணியின் பிந்திய சாளுக்கி யர்களின்கீழ்க் கப்பம் கட்டும் சிற்றரசர்களாக விளங்கினர். இவ்வமிசத்தைச் 'சாலர்' என்பவன் தோற்றுவித்தான். முதலாம்

[1] Ep. Ind. Vol. XXII. No. 34, Verse-17; S. I. I. Vol. III. No. 205. Verse-53

வினயாதித்தன் ஹொய்சாலர் வரலாற்றில் முதல் மன்னனுவான். இவன் ஹொய்சால அரசைக் கி.பி. 1006 முதல் 1022 வரை ஆண்டான். இவன் மைசூர் மாநிலத்திலுள்ள 'சோசவீரைத்' தலைநகராகக் கொண்டு, அதைச் சுற்றியுள்ள சிற்றரசை ஆண்டு வந்தான். இவன் மேலைச் சாளுக்கியரின் நம்பிக்கைக் குகந்த சிற்றரசனுக ஆண்டு வந்தான்.

ஹொய்சாலர்கள் பிற்காலத்தில் புகழ்பெற்றுத் தனியாட்சி நிறுவினர். இவர்களது ஆட்சி கி. பி. 1346 வரை நீடித்தது. இராசேந்திரன் சோனுட்டில் அரியணை யேறிய போது, ஹொய் சால மன்னன், முதலாம் வினயாதித்தன் வலிமை மிக்க மன்னனுகத் திகழ வில்லை.

**மாளவப் பரமாரர்கள்**

பரமாரர்கள் இராசபுத்திர மரபினைச் சார்ந்தவர்கள். கூர்ஜரப் பிரதிஹாரர்கள் வீழ்ச்சியினைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டு இவர்கள் தங்கள் ஆதிக்கத்தினை ஏற்படுத்தினர். உருபந்திரர் என்னும் மன்னர், இம் மரபினைக் கி.பி. ஒன்பதாம் நூற்ருண்டின் முதல் கால் பகுதியில் நிறுவினுர்.

முன்னைய பரமாரர்கள் இராட்டிரகூட மன்னர்கட்குக் கப்பம் கட்டும் சிற்றரசர்களாக ஆண்டனர். இவர்களின் தலைநகரம் 'தார்'. இம்மரபின் அடுத்த முக்கிய நகரமாக உச்சயினி விளங் கியது. இரண்டாம் 'வரிசிம்மர்' என்ற மன்னர் பிரதிஹாரரிட மிருந்து மாளவத்தைக் கைப்பற்றினுர்.

வரிசிம்மருக்குப்பின் இவர் மைந்தர் இரண்டாம் சீயாகா கி. பி. 948 முதல் கி. பி. 974 முடிய இம் மரபின் கீர்த்தி பெற்ற மன்னராக விளங்கினுர். இவர் தமது ஆட்சியின் முற்பகுதியில் பிரதிஹாரர்களிடமிருந்து தமது மரபினை விடுவித்தார். ஆட்சி யின் பிற்பகுதியில் இராட்டிரகூடத் தளையிலிருந்து தமது மரபினை விடுவித்துக் கொண்டார். எனவே, இவர் இம்மரபின் முதல் சுதந்திர மன்ன ராவார்.

இம்மரபின் தலைசிறந்த மன்னர் முதலாம் போஜர் ஆவார். இவர் கி. பி. 1010 முதல் கி. பி. 1055 முடிய ஆட்சி புரிந்தார். இவர் மாபெரும் வீரர்; வெற்றிகள் பல பெற்ற புகழாளர்; கலைகளையும், கல்வியையும் ஆதரித்த புரவலர்; தாமே சிறந்த அறிஞுராகவும் விளங்கியவர். இவர் தமது வலிமை மிகுந்த படையின் துணைகொண்டு இரண்டாம் செயசிம்மன் என்ற கல்யாணிச் சாளுக்கிய மன்னனையும், ஆதிநகர மன்னனையும்,

கொங்கண மன்னனையும் வென்றார். இவர் சாகம்பரிச் சாக மானர்களையும் வென்ற பெருமைக் குரியவர்; இராசேந்திரரின் சம காலத்தவர்; ஆதரவாளர்; சோழர்களின் கங்கைப் படை யெழுச்சின் போது பேருதவி புரிந்தவர்.

### பண்டில்கண்டின் சாந்தேலர்கள்

சாந்தேலர்களும் இராச புத்திர மரபினைச் சார்ந்தவர்கள். இவர்களும் பிரதிஹாரர்கள் வீழ்ச்சி யுற்ற போது ஏற்றம் பெற்றனர். இவர்கள் இந்துக்களாக மாறிய கோண்டு இனத்தவ ராவர். கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் முதல் கால் பகுதியில் நானுகா என்ற மன்னன் இம் மரபினைத் தோற்றுவித்தான்.

கி. பி. 954 முதல் 1002 வரை ஆட்சி செய்த டங்கா என்ற மன்னன் சாந்தேல மரபின் முதலாவது சுதந்திர மன்னன் ஆவான். இவன் முதலாம் 'யசோ வருமனின்' மகனாவான். இவன் பிரதிஹாரத் தளையிலிருந்து தனது மரபை விடுவித்துத் தனியாட்சி மேற்கொண்டான். இவன் பல போர்களில் வென்று 'மகா ராசாதி ராசர்' என்ற தோரணையான பட்டத்தை மேற்கொண்டான்.

இவனுக்குப்பின் இவன் மகனான கண்டா கி பி. 1002 முதல் 1019 முடிய ஆட்சி புரிந்தான். இவன் முதலாம் இராசேந்திரனின் சம காலத்தவனாக இருந்தான். இவனுக்குப் பின் ஆட்சி செய்த வித்தியாதரன், பரமார மன்னன் போசன், கலசூரி (Kalachuri) மன்னன் காங்கேயன் ஆகியோருடன் நட்புப் பூண்டான் என்பதையும் அறிகிறோம்.

### வங்க பீகாரின் பாலர்கள்

வங்கத்தில் கௌட மன்னனான சசாங்கனின் மறைவுக்குப் பின்னர் குழப்பமும், கொந்தளிப்பும், அமைதி யின்மையும் அரசோச்சின. இந்நிலையைப் பயன்படுத்தி முதலாம் கோபாலர் கி. பி. எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வங்கத்தில் புதிய தொரு ஆட்சியினை நிறுவினார். இது பால மரபினாட்சியென அழைக்கப் பெறுகின்றது.

பாலர் ஆட்சிக்கு வந்ததால் வங்கத்தில் முழு அமைதி நிலவியது. இவ்வமிசத்தின் தலைசிறந்த மன்னரான தேவபாலர் என்பவர் கி. பி. 815 முதல் 854 முடிய அரசோச்சினார். இவரது காலத்தில் பாலர்களின் புகழ் மேலோங்கியது; காம் போஜம், ஒரிசா, அஸ்ஸாம் ஆகியவற்றைத் தமது அரசுடன்

இணைத்துக் கொண்டனர். ஒன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் பாலர்களின் புகழ் மங்கியது. இவர்கள் மகதத்தையும், (தென் பீகார்) வங்கத்தையும் சிறிது காலம் இழந்திருந்தனர்.

இம்மரபின் இழந்த பெருமையினை மீண்டும் மீட்க, அரும்பாடுபட்டவர் முதலாம் மகிபாலராவார். இவர் கி. பி. 992 முதல் 1040 முடிய இம்மரபினைச் சிறப்புடன் ஆண்டார். இவர் ஆட்சியைக் கைப்பற்றிய போழ்து மகதம் (தெ. பீகார்) மட்டும் இவரது ஆட்சியி லடங்கி யிருந்தது. மற்றப் பகுதிகளைக் காம்போஜர்களும், சந்திரர்களும் ஆண்டு வந்தனர். இவர் தமது வலிமையினுல், இழந்த பகுதிகளை மீட்டார்; வட பிஹாரையும் அரிதின் முயன்று மீட்டார். எனவே, இவர் பாலர்களின் பேரரசை இரண்டாம் முறையாகத் தோற்றுவித்தவர் என்று கூறுதல் பொருந்தும்.

இவரது நாடு உத்தரலாட மெனவும் அழைக்கப்பெறுகிறது. இது பிகார், வங்காள மாநிலங்களில் கங்கை யாற்றின் தென் கரையில் தக்கணலாடத்திற் கருகில் அமைந்திருந்தது. இது தண்டபுத்தி நாட்டிற்கு வடக்கிலும், கிழக்கிலும் பரவியிருந்தது. பாலர்களின் இழந்த பெருமையினை மீட்ட மகிபாலர், பதினேராம் நூற்றுண்டின் முற்பகுதியில் பெரு மன்னராகத் திகழ்ந்தார். இவரது பரந்த பேரரசு, பல உள் நாடுகளைத் தன்னகத்தே கொண்டு விளங்கியது. இவ்விதம் இவரது மேலாதிக்கத்தை ஏற்று ஆட்சி புரிந்த சிற்றரசர்களைப் பற்றி ஈண்டுச் சிறிது ஆய்வோம்.

***தண்டபுத்தி***

ஒட்டர் தேசத்திற்கும், வங்காளத்திற்கும் நடுவில் சுவர்ண ரேகை ஆற்றின் இரு கரையிலும் பரவி யிருந்த நாடு, தண்டபுத்தியென வழங்கப் பெற்றது. இது வங்க மாநிலத்தில் மிதுனபுரி மாவட்டத்தின் தென் பகுதியினையும், தென் மேற்குப் பகுதியினையும் தன்னகத்தே கொண்டு நிலவிய நிலப்பரப் பாகும். முற்காலத்தில் வங்க நாட்டி லடங்கிய பர்த்துவான் மாவட்டம் வர்த்தமான புத்தியென அழைக்கப்பட்டதாகவும், அதன் ஆளுமைக் குட்பட்ட ஒரு சிறு நாடே தண்டபுத்தி என வழங்கப் பெற்றதாகவும் அறிகிறேம். இப் பகுதியினைத் தன்மபாலன் எனும் மன்னன் ஆண்டு வந்தான். இவனது பெயருக்கும், மகிபாலன் பெயருக்கும் உள்ள ஒற்றுமையைக் கருத்தில் கொண்டு இவன் மகிபாலனின் நெருங்கிய உறவினனுகவோ, அல்லது தாயகத்தினனுகவோ இருந்திருக்கக் கூடும் என்று

எண்ண இட முண்டு. ஏனெனில், அக் காலத்தில் மன்னரின் நெருங்கிய உறவினர்களே சிற்றரசர்களாகவும் அரசப் பெயராள ராகவும் (பிரதிநிதி) நியமிக்கப்படுதல் வழக்கமா யிருந்தது.

**தக்கண லாடம்**

இது தண்டபுத்தி நாட்டிற்கு வடக்கில் அமைந்த நாடாகும். இது பீகார், வங்காள மாநிலங்களில், புனித கங்கையின் தென் கரையி லமைந்த, கங்கைக்கரை நாடாகும். இது செழிப்பான பகுதி யாகும். இரணசூரன் என்ற மன்னன் தக்கண லாடத்தை ஆண்டு வந்தான். பண்டைக் காலத்தில் 'ராடா' என்ற ஒரு பகுதி வங்காளத்தில் இருந்தது; அதுவே கல்வெட்டுகளில் 'லாட தேசம்' எனும் பெயரால் குறிக்கப் பெற்றது. பின்னர் லாட என்பது 'லாடம்' என்று வழங்கப்பெற்றது.

**வங்காள தேசம்**

கிழக்கு வங்காளமே பண்டைக் காலத்தில் வங்காள தேச மென்று அழைக்கப் பெற்றது. வங்காள தேசம் கோவிந்த தச்சன் எனும் மன்னனுல் ஆளப்பட்டு வந்தது. மேலே கூறப் பட்ட தக்கண லாட மன்னனும், வங்க தேச மன்னனும், தண்ட புத்தி மன்னனும், உத்திரலாடப் பெருமன்னனுன மகிபால னுக்குக் கீழ்ப்படிந்த குறுநில மன்னர்களா யிருத்தல் வேண்டு மென்பதை இராசேந்திரன் மெய்க்கீர்த்தி உணர்த்துகிறது.

**சக்கரக் கோட்டம்**

இது மத்திய மாகாணத்தில் விசாகப்பட்டிணம் மாவட்டத் திற்கு வடமேற்கில் வத்ச நாட்டி லமைந்த நகர மாகும். இந்திராவதி யாற்றின் தென் கரையில் அமைந்துள்ள சக்கரக் கோட்டம், வத்ச நாட்டின் தலைநகரான இராசபுரத்திலிருந்து, எட்டுக்கல் தொலைவில் அமைந்திருந்தது. இது தற்காலத்தில் 'சித்திரகூடா' எனவும் சித்திரகோடா எனவும் அழைக்கப் பெறுகின்றது. இது பஸ்தர் மாநிலத்தின் நாகவம்ச முதல்வனுன மதுராந்தகனுல் கி. பி. 1065 இல் இராசபுரச் செப்பேட்டில் குறிப்பிடப்பட்டுள்ள 'சித்திர கோட்டயமே' என வரலாற்றறி ஞர்கள் கூறுகின்றனர்.

கி. பி. பதினேராம், பன்னிரண்டாம் நூற்றுண்டுகளில் சக்கரக் கோட்டத்தை நாக மரபினர் எனத் தங்களைக் கூறிக் கொண்ட மன்னர்க ளாண்டு வந்தனர். இவர்கள் நாக மரபின ராதலின் இவர்கள் ஆண்ட நாடும் மாசுண தேசம் எனப் பெயர் பெற்றது. மாசுண தேசம் என்பது பாம்புகள் நிறைந்த நாடு

எனப் பொருள்படும். மேலும், இராசபுரச் செப்பேட்டில் சிந்தக வத்து மன்னர்கள் தங்களை 'நாக வம்சோத் பவா' அதாவது நாக வம்சத்தில் பிறந்தவர்க ளென்றும் 'போகவதி புரவரேஸ் வரா' அதாவது நகரங்களில் தலை சிறந்து விளங்குபவர் என்றும் குறிக்கின்றனர். போகவதி அதிபதிகள் என்றும் குறிப்பிடு கின்றனர். மாசுணி தேசம் வேங்கி நாட்டின் வட மேற்குப் பகுதியி லமைந்த அண்டை நாடாகும்.

மதுரை மண்டலம், நாமணைக் கோணம், பஞ்சப்பள்ளி ஆகிய சிறு பகுதிகளும் வத்ஸநாட்டில் அமைந்த பகுதிக ளாகும். இவைகள் மாசுணி தேசத்தின் ஆளுமையின்கீழ் அமைந்திருந்த சிறுசிறு பகுதிக ளாகும். இராசபுரச் செப்பேடு மதுராந்தகன் என்பவனால் வெளியிடப் பெற்றிருத்தலின், அவன் ஆண்ட மதுரை மண்டலம் பெரிய மண்டலமாக விளங்கி யிருத்தல் வேண்டும். மேற் கூறிய பகுதிகளில் இராசேந்திரனது படை விரர்கள் தாக்குதல் நடத்தினர் என்பதை இராசேந்திரன் மெய்க் கீர்த்தியால் அறியலாம்.

**ஒட்டர தேசம்**

ஒட்டர தேச மென்பது தற்காலத்திய ஒரிசா மாநில மாகும். இராசேந்திரன் படை யெழுச்சியின்போது ஒட்டர தேசத்தை யும், கோசல நாட்டையும் இந்திர ரதன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். கோசல நாடு என்பது மகா கோசலமென அழைக்கப் பெறும் தென் கோசல நாடாகும். இந்நாட்டு மன்னன் பரமார மன்னனான போச மன்னனுடன் பகைமை பூண்டிருந்தனன்.

**சேதி கால-சூரிகள்**

கால சூரிகள், கூர்ஜரப் பிரதிஹாரப் பேரரசின் வீழ்ச்சியின் போது எழுச்சி பெற்றுத் தனியாட்சி நிறுவினர். இவர்கள் ஹைகயர்கள் என்றும் அழைக்கப்பட்டனர். சேதி கால சூரிகள் திரிபுரி அல்லது தகாலாவைச் சார்ந்தவர்களெனக் கருதப்படு கின்றனர். இவர்கள் திரிபுரியைச் சுற்றியிருந்த சிறு பகுதியினை ஆண்டு வந்தனர்.

முதலாம் கோக்கல்லர் என்னும் மன்னர் இம்மரபினைத் தோற்றுவித்தார். இவர் கி. பி. 875 முதல் கி. பி. 925 முடிய இவ்வரசினைத் திரிபுரையைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தார். கால சூரிகள் இராசேந்திரனிடம் பகைமை பாராட் டாது, நட்பு கொண்டிருந்தனர் என்பது குறிப்பிடத் தக்கது. கங்கேய விக்கிரமாதித்தன் கங்ரா பள்ளத்தாக்கிலுள்ள கீராவை

யும், கோசலை, உத்கலை போன்றவற்றையும், பிரதிகாரர்களையும், பாலர்களையும் வென்று புகழ் மிக்க வடநாட்டு மன்னனாகத் திகழ்ந்தான்.

### முஸ்லீம் படையெடுப்பு

இராசேந்திரன் சோணாட்டில் அரியணை யேறிய காலை, தென்னாட்டில் அமைதி நிலவியது. வடநாட்டில் முகமது கஜினி யின் படையெழுச்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது. முகமது என்ற துருக்கிய வீரன் கி. பி. 998 இல் கஜினி அரியணையில் ஏறினான். இவன் ஒவ்வொரு ஆண்டும் இந்துக்களின்மீது புனிதப்போர் (Jehade) நிகழ்த்துவதாக உறுதி பூண்டான். இவன் சமய வெறி கொண்டு, இந்தியாவின்மீது பதினேழு தடவைகள் படையெடுத்துப் பல இந்துக் கோயில்களைத் தரை மட்டமாக்கிப் பொன்னையும், மணியையும் கொள்ளையிட்டுச் சென்றான். வட இந்தியா சிறுசிறு அரசுகளாகப் பிளவுபட் டிருந்தமையின், ஒற்றுமை யுணர்வு ஏற்பட வில்லை. சோணாட்டில் இராசேந்திர சோழன் தனது புகழின் கொடுமுடியில் பாராண்ட போது, வட இந்தியாவிலோ அச்சமும், அமைதி யின்மையும், ஒற்றுமை யின்மையும், கொள்ளையும் மலிந்திருந்தன என்பதை நாம் மனத்திற் கொள்ள வேண்டும். முகமது கஜினியின் படை யெழுச்சி கி.பி. 1027 வரை வடநாட்டில் நீடித்தது. இம் முஸ்லீம் படையெழுச்சியின் அச்சுறுத்தலினால் வடநாடு நடுநடுங்கிக் கொண்டிருந்த வேளையில்தான் இராசேந்திரனது படை கங்கைப் பகுதிகளில் திக் விஜயம் செய்தது. பல் குழுவும் பாழ் செய்யும் உட்பகையும் மலிந்திருந்த வடநாடு, மாமூது கஜினியின் படை யெடுப்பினால் மணியிழந்த நாகம்போல் பெருந்துன்ப முற்றது. இராசேந்திரன் வட இந்தியப் படையெழுச்சியின் விளைவாக வட இந்தியாவின் அரசியல்நிலை மேலும் குழப்ப முடையதாக, வலி விழந்ததாகக் காணப்பட்டது.

# 6. இராசேந்திரனின் போர்கள்

இராசராசனது ஆட்சிக் காலத்திலேயே இராசேந்திரன் இளவரசனுக முடிசூடப் பெற்றுத் தந்தைக்கு உதவியாக இருந்து, பல போர்களில் படைத் தலைமை யேற்று, வெற்றிகள் பல பெற்று வெற்றி வீரனுகத் திகழ்ந்தான். 'புலிக்குப் பிறந்தது பூனை யாகுமா?' ஆகாது; ஆகாது. இராசேந்திரனும் தன் தந்தையைப்போல் பெருவீரனுகத் திகழ்ந்து, போர்க் களங்களில் புலியெனப் பாய்ந்தான்; தன் வாள் வலியும், தோள் வலியும் காட்டி ஊக்கத்துடன் போர் செய்து பகைஞர்களை அஞ்சி யோடச் செய்தான்.

இளமையிலேயே இவன் போர்ப் பயிற்சியில் நாட்டம் கொண்டு, நல்ல தேர்ச்சி பெற்முன் என்று முன்பே கண்டோம். இவன் இளவரசனுக இருந்த காலத்தில் மேற்கொண்ட போர் களே அல்லாமல், பேரரசனுக விளங்கிய காலத்து நடத்திய போர்களும், இவன் மைந்தன் இராசாதிராசன் இவன் காலத்தில் இளவரசனுகப் பதவி யேற்ற பின்பு நடத்திய போர்களும் பல வாகும்.

எனவே, இராசேந்திரன் காலத்துப் போர்ச் செயல்களை மூவகையாகப் பகுக்கலாம். அவை 1. இவன் இராசராசன் ஆட்சிக் காலத்தில் தலைமை யேற்று நடத்திய போர்கள், 2. மன்னனுக இருந்து நடத்தியவை, 3. இவன் காலத்தில் இவன் மகனுன இளவரசன் இராசாதிராசன் நடத்தியவை எனப்படும். எனவே, மேற்கூறிய மூன்று பகுதிகளில் அடங்கிய போர் பற்றிய செய்தியினை இங்குக் காண்போம்.

## I. இராசேந்திரன், இராசராசன் ஆட்சிக் காலத்தில் நடத்திய போர்கள்

### சேர, பாண்டியருடன் போர்

இராசராசன் சேர நாட்டின்மீது படையெடுக்கக் காரணம் யாது? என்பது தெளிவாகத் தெரிய வில்லை. இராசராசனால் சேர நாட்டிற்கு அனுப்பப்பட்ட சோழ நாட்டுத் தூதுவன், சேர மன்னனாகிய பாஸ்கர ரவி வருமனால் அவமதிக்கப்பெற்று, இழிவாக நடத்தப்பெற்று, உதகையில் சிறை வைக்கப்பெற்றான். தூதர்களை அவமதிப்பதும், சிறையிலிடுவதும் அரசராயினார்க்கு அடாத செயல்களாம். அன்றியும், அச் செயல்கள் அரச நீதிக்கு மாறுபட்டனவும் ஆகும். அற நெறியிற் பிறழாத சோழர் குடியிற் பிறந்த இராசராசன், இதனைச் செவியுற்றுப் பெருஞ்சினங் கொண்டான்; சோழப் படையைச் சேர நாட்டின் மீது செலுத்த ஆணையிட்டான். பஞ்சவன் மாராயன் என்ற இராசேந்திரன் படைத் தலைமை யேற்றுப் பாஸ்கர ரவி வருமனை ஒறுத்து, அவனது செருக் கடக்கக் கடிது சென்றான். சோழப் பெரும்படை பாண்டிய நாட்டின் வழியாகச் சேர நாட்டிற்குப் புறப்பட்டது.

அங்ஙனஞ் செல்லுங்கால் சேரனின் நண்பனான பாண்டிய மன்னன் அமரபுயங்கன் என்பான், சோழப் படைகளைத் தடுத்து நிறுத்தினான். சினங் கொண்ட இராசேந்திரன் தன் படையுடன் பாண்டியப் படையின்மீது வேங்கையெனப் பாய்ந்தான். பாண்டியப் படைகள் சோழப் படையின் தாக்குதலைத் தாங்கிக் கொள்ள இயல வில்லை; அச்சங் கொண்ட பாண்டிய வீரர் சிதறி ஓடினர்; சோழ வீரர் வெற்றி மடந்தையை மணந்தனர்.

பாண்டியனை வென்றடக்கிய இராசேந்திரன் காடும், மலையும் கடந்தான்; தன் படைகளுடன் சேர நாட்டினை யடைந்தான். மலை நாட்டின் கடற்கரைப் பட்டினமாகிய காந்தளூர்ச் சாலையின்மீது தன் படைகளை ஏவினான். கி.பி. 988 இல் சேரர்க்கும், சோழர்க்கும் கடும்போர் நிகழ்ந்தது; சேரர்கள் தோற்கடிக்கப்பட்டனர்; காந்தளூர்ச் சாலையிலுள்ள மரக் கலங்கள் மூழ்கடிக்கப்பட்டு அழிக்கப்பட்டன.

சிறைப்பட்ட தூதுவனை மீட்க உதகை நகர் நோக்கிப் புறப்படுமாறு வெற்றிப் படைக்கு இராசேந்திரன் ஆணை பிறப்பித்தான். தானைத் தலைவனின் கட்டளை யேற்றுச் சோழ வீரர்கள் சோர்வின்றிப் பதினெட்டுக் காடுகளையுங் கடந்து

கடிது சென்றனர்; காவல் மிகுந்த உதகையை யடைந்தனர்; மதில்களால் சூழப்பட்ட அந்நகரினை முற்றுகை யிட்டனர்.

சோழ - சேரப் போர் கடுமையாக நடைபெற்றது; சேர நாட்டின் செருக்களம் செங்கள மாயிற்று. வெற்றிப் பெரு மிதத்தில் மூழ்கிய சோழ வீரர்கள், தன்னாட்டுத் தூதுவனைப் பழித்த சேரர்களைப் பழிவாங்கினர்; சீற்றம் தாழாது சேரநாட்டு வீரரது அழகு நகராம் உதகையின் மதில்களை இடித்தனர்; கோட்டைக் கொத்தளங்களைத் தகர்த்தனர்; மாளிகைகளைத் தரைமட்ட மாக்கினர்; கோபுரங்களை உடைத்தனர். சிறைச் சாலைகள் தகர்க்கப்பட்டன; சோழத் தூதுவன் விடுவிக்கப் பட்டான். உதகை தீக்கிரை யாக்கப்பட்டுச் சூறையாடப் பட்டது. நாடும், நகரமும் இடுகாடாகக் காட்சி தந்தன. இத்துணை அழிவு வேலைகட்குப் பின்னும் சினந் தணியாத தானைத் தலைவன் தன் படைகளைத் தென் கடற் கோடியி லுள்ள விழிஞம் எனும் துறைமுகத்தின்மீது ஏவினான். சேரர் செயலிழந்தனர்; தோல்வி பெற்றனர்; விழிஞம் சோழ வீரர் களால் கைப்பற்றப்பட்டது. வெற்றி வாகை சூடிய சோழ வீரர்கள் பொன்னும், மணியும், மின்னும் வைரமும் கொண்ட பெருநிதிக் குவியலுடனும், வேழங்களுடனும் சோணாடு திரும் பினர்.

இராசேந்திர சோழனது ஆட்சி சேர நாட்டில் பரவி யிருந்தது என்பதனை நாகர்கோயிலுக் கருகில் உள்ள 'சோழ புரம்' என்னும் நகர் உணர்த்துகின்றது. தற்காலத்தில் இந் நகரம் அழிவுற்ற நிலையில் காணப்படுகிறது. இப்பகுதியில் காணப்பெறும் கல்வெட்டுகளால், சோழபுரமும் அதனை யடுத்த பகுதிகளும் இராசேந்திர சோழனின் ஆட்சிக் குட்பட்டிருந்ததை அறியலாம். எனவே, நம் இராசேந்திரன் தலைமை யேற்றுச் சேர நாட்டையும், பாண்டிய நாட்டையும் வென்றதால் இராசராசன் 'மலைநாட்டுச் சேரமானையும், பாண்டியர்களையும் எறிந்துகொண்ட பண்டாரம்' என்று சிறப்பிக்கப் பெறுகிறான்.

**கலிங்க நாட்டுப் போர்**

கலிங்க நாடு வீர மறவர்கள் நிறைந்த நாடு. இது 'குலூத நாடு' எனவும் அழைக்கப் பெற்றது. இந்நாட்டினை விமலா தித்தன் என்பான் ஆண்டு வந்தான். இந்நாட்டின்மீது இராசராசன் படை யெடுக்கக் காரணம் யாது? என்பது விளங்க வில்லை. ஒருவேளை இவர்கள் கீழைச் சாளுக்கிய மன்னனுன

விமலாதித்தனுக்கு இடையூறு செய்து சோழரின் பகைமையைச் சம்பாதித்திருக்கக் கூடும் என்று எண்ண இட முண்டு.

இராசேந்திரன் குலூத நாட்டின்மீது படையெடுத்து, விமலாதித்தனை வென்று, தன்னடிப்படுத்தினுன். கலிங்க வீரர்களை வென்றது இராசேந்திரனின் அரிய சாதனை யாகும்.

வெற்றி வாகை சூடிய இராசேந்திரன் தனது வெற்றியின் அடையாளமாக மகேந்திரமலை உச்சியில் வெற்றித் தூண் ஒன்றை நாட்டினுன். அம் மகேந்திர மலைக் கல்வெட்டில் 'விமலாதித்தன் என்னும் குலூத நாட்டு அரசனை இராசேந்திரன் வென்ருன்; வென்று மகேந்திரமலை உச்சியில் வெற்றித் தூண் ஒன்றை நாட்டினுன்' என்று குறிப்பிடப்பட்டுள்ளதால் இதனை அறியலாம். இக் கல்வெட்டுத் தமிழிலும், வடமொழியிலும் வரையப்பட்டுள்ளது. இதில் தேதி குறிக்கப் பெருமையின், இப்போர் நடைபெற்ற காலம் விளங்க வில்லை. இது இராசேந்திரன் இளவரசு பட்டம் பெற்ற பின்பு நடைபெற்றிருத்தல் வேண்டும் என்பது ஆராய்ச்சியாளரின் கருத்தாகும்.

### ஈழப் போர்

இராசேந்திரன் தன் தந்தையின் காலத்தில் தானைத் தலைவனுகப் படை நடத்திச் சென்று பெற்ற வெற்றிகளுள் ஈழ வெற்றி மிகவும் சிறப்புடைய தாகும். இராசேந்திரன் தன் தந்தைக்குத் துணையாக உள்நாட்டில் மட்டு மன்றிக் கடல் கடந்த நாட்டிலும் பகைஞுரை வென்று சோழ ஆதிக்கத்தை விரிவு படுத்தினுன் என்பது குறிப்பிடத் தக்க தாகும்.

ஈழ வேந்தன் ஐந்தாம் மகிந்தன் கி. பி. 981 முதல் ஈழ நாட்டினை ஆளும் உரிமை பெற்ருன். அவனது தலைநகரம் அனுராதபுரம். அவன் சோழர்களின் பகைஞுரான சேர, பாண்டியர்களுக்குப் படையுதவி யளித்தான். இதனுல், இராசராசன் தன் மகன் இராசேந்திரன் தலைமையில் ஒரு பெரும் படையை ஈழத்தின்மீது படையெடுக்கப் பணித்தான்.

முதலாம் இராசேந்திரன் கப்பற் படையைச் செப்பம் செய்தான்; தேர்ந்த கப்பற் படையுடன் ஈழம் நோக்கிப் புறப்பட்டான். தமிழகத்தையும், ஈழத்தையும் மரக்கலப் பாலத்தால் இணைப்பதுபோல் கப்பற்படை வரிசை வரிசையாய்ச் சென்றது. தானைத் தலைவன் தன் வலிமை மிக்க படைகளை ஈழத் தீவில் இறக்கினுன்.

அது போழ்து கி. பி. 991 இல் ஈழ நாட்டில் பெரும்அரசியல் குழப்பம் ஏற்பட்டு, ஈழ மன்னனுன ஐந்தாம் மகிந்தன் ஈழ மண்டலத்தின் தென்கிழக்கிலுள்ள உரோகண நாட்டிற்கு ஓடி விட்டான்.

இருப்பினும் நாட்டுரிமையில் வேட்கை கொண்ட ஈழப் படை, சோழப் படையுடன் மோதியது. சோழர்க்கும், ஈழர்க்கும் கடும்போர் நிகழ்ந்தது. சோழப் படையின் முன் நிற்கமாட்டாது, ஈழப்படை உலேந்து ஓடிற்று. சோழ வீரர்கள் வெற்றித் திருவை மணந்தனர்.

முரட்டொழில் சிங்களவர் மனம் புழுங்கிற்று. ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளாகப் புகழுடன் இலங்கிய இலங்கைத் தலேநகர் அநுராதபுரம் அழிவுற்றது; பொலனருவை புதிய தலேநகரானது; அந்நகர் 'சனநாத மங்கலம்' என்னும் பெயரும் பெற்றது.

ஈழ நாட்டின் வட பகுதி சோழ நாட்டுடன் இணைக்கப் பெற்று, 'மும்முடிச் சோழ மண்டல'மென்று பெயரிடப்பட்டது. ஈழ நாட்டில் சோழரின் புலிக் கொடி நாட்டப் பெற்றது; ஈழ வெற்றியின் சின்னமாக ஈழத்தில் சிவாலயம் ஒன்றும் அமைக்கப் பெற்றது. இது 'சிவ தேவாலயம்' எனும் பெயருடன் இன்றும் நின்று நிலவுகிறது.

இவ்விதமாக இராசேந்திர சோழன் சிங்களரை வென்று, ஈழத்தில் சோழர் புகழினை நிலேநாட்டித் தன்னுடு திரும்பினுன்.

**மேலேச் சாளுக்கியருடன் போர்**

இரண்டாம் தைலபனின் மகனுன சத்யா சிரயன் இரட்ட பாடி எழரை இலக்கத்தின் மன்னனுனுன். சோழருக்கும், மேலேச் சாளுக்கியருக்கும் நீண்ட நெடுங் காலமாகக் கடும்பகை மூண்டிருந்ததை நாம் முன்பே கண்டோம். இராசராசன் காலத்தில் இது பெருருக் கொண்டது. எனவே, இராசராசன் சத்யா சிரயன்மீது போர் மேற்கொண்டான்.

இப்போரில் இராசேந்திரன் தலேமை தாங்கிச் சென்ருன். ஒன்பது லட்சம் பெருவீரர்கள் கொண்ட சோழர் படை, சாளுக்கிய நாட்டின்மீது படை யெடுத்தது. சோழப் படை பல வெற்றிகள் பெற்றுப் பீசப்பூர் மாவட்டத்திலுள்ள 'தோனூர்' வரை முன்னேறிச் சென்றது. சாளுக்கியப் படையினர் சளேக்

காமல் போர் செய்த போதிலும் தோல்வியைத் தழுவினர். தொடர்ந்து வருகின்ற சாளுக்கியப் பகைமைக்கு, முற்றுப்புள்ளி வைக்க எண்ணிய இராசேந்திரன் வெஞ்சினம் கொண்டு சாளுக்கிய நாட்டைச் சூறையாடித் தீக்கிரை யாக்கிப் பாழ்படுத்தினான். பெருமதிப்புள்ள, அளவிறந்த பொருள்களைக் கவர்ந்து கொண்டு வெற்றிப் பெருமிதத்துடன் சோணாடு திரும்பினான். இப்போரில் சோழப் படையின் மாபெரும் வீரனான இராச மல்ல முத்தரையனின் இறப்பு ஈடு செய்ய இயலா பேரிழப் பாகும்.

இவ்விதமாகச் சோழர்களின் தீராப் பகைஞர்களான பிந்தைய மேலைச் சாளுக்கியர்களை இவன் வென்றடக்கினான். இப்போர் கி. பி. 1007 ஆம் ஆண்டிற்கு முன்பு நடை பெற்றிருத்தல் வேண்டும். இப்போர் நிகழ்ச்சி பற்றிய சுவையானதொரு குறிப்புத் திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உள்ள 'ஊற்றத்தூர்' கல்வெட்டில் காணப் பெறுகின்றது. இக் கல்வெட்டு இராசேந்திரனின் மூன்றாம் ஆட்சி யாண்டில் பொறிக்கப்பட்ட தாகும். மேலைச் சாளுக்கிய நாட்டில் சோழப் படைக்கும், மேலைச் சாளுக்கியப் படைக்கும் கடும்போர் நிகழ்ந்தது. சத்யா சிரயனே, யானைமீ தமர்ந்து அருஞ்சமர் புரிந்து வந்தான்; இராசேந்திரனே, ஊற்றத்தூர் சுருதிமான் நக்கன் சந்திரனான இராசமல்ல முத்தரையனுக்காகச் சத்யா சிரயன் அமர்ந்து போர் புரியும் யானையைக் குத்தி வீழ்த்த ஆணை பிறப்பித்தான்; அவ்வாணையைத் தலைமேற்கொண்டு யானையைக் குத்தி வீழ்த்தும் பணியில் ஈடுபட்ட இராசமல்ல முத்தரையன் வீழ்ந்துபட்டான். முத்தரையர் குலத் துதித்த இம் மாணிக்கத்தின் நலனுக்காக ஊற்றத்தூரிலுள்ள மகாதேவர் கோயிலுக்கு நிவந்தங்க ளளித்த செய்தி மேற்கூறிய கல்வெட்டில் காணப்படுகிறது.

மேற் கூறிய போர்பற்றிய செய்திகளைத் தார்வார் மாவட்டம் ஓ(ஹோ)ட்டூரில் கி. பி. 1007 ஆம் ஆண்டில் சத்யா சிரயன் ஆட்சிக் காலத்தில் வெளியிடப் பெற்ற கல்வெட்டா லறியலாம். இக் கல்வெட்டு இராசேந்திரனின் போர்த் திறனை விளக்குகின்றது. ஆனால், வெற்றி பெற்ற பகுதிகள் சோழ நாட்டுடன் இணைக்கப் பெற வில்லை என்பதும் நாம் நினைவிற் கொள்ளத் தக்க தாகும். சோழ மன்னரின் கல்வெட்டுகள் மேலைச் சாளுக்கிய நாட்டில் காணப் பெறுமையின் இக் கருத்து வலிவு பெறுகிறது.

இராசராசன் காலத்தில் இராசேந்திரன் பல போர்களில் தலைமை யேற்று வெற்றிகள் பல பெற்றுப் பெரும்புகழ் பெற்றான்.

இருப்பினும், அவையனைத்தையும் ஈண்டுக் குறிப்பிடுதல் இயலாதாதலின் அவன் சேரர், பாண்டியர், ஈழவர், கலிங்கர், மேலைச் சாளுக்கியர் ஆகியோருடன் செய்த போர்களை மட்டும் மேலே கண்டோம். இராசராசன் காலத்தில் சோழப் பேரரசு விரிவடையக் காரணமாக விளங்கியவன் இராசேந்திரனே யாவான் என்பதை எவரும் மறுக்க முடியாது.

இனி, அவன் ஆட்சிக் காலத்தில் மேற்கொண்ட போர்ச் செயல்களைக் காண்போம். அவன் 'ஹர்ஷ' மாவீரனைப்போல் இடை விடாதும், விட்டு விட்டும் போர் மேற்கொண்டான் (Incessant and intermittent warfare) என்பது நினைவிற் கொள்ளத் தக்கதாகும்.

## II. இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் மேற்கொண்ட போர்கள்

இராசேந்திரன் தன் தந்தையான இராசராசனது ஆட்சிக் காலத்திலேயே பல போர்களில் ஈடுபட்டுப் படைத் தலைமையேற்று, வெற்றிகள் பல பெற்றான் என்பதை முன்பே கண்டோம். எனவே, இராசேந்திரன் போர்க் கலையில் நல்ல தேர்ச்சி பெற்றுத் தனக்கு ஒப்பாரும், மிக்காருமின்றி மாவீரனாய்த் திகழ்ந்தான் என்பது வெள்ளிடைமலை.

இவனது போர்ச் செயல் பற்றித் தெளிவாக அறிந்து கொள்ள இவனது 'திருமன்னி வளர இருநில மடந்தையும்' எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தி பெரிதும் பயன்படுகிறது. இராசேந்திரனின் மெய்க்கீர்த்தி, இவனது மூன்றாம் ஆட்சி யாண்டில்தான் முதன் முதலாகக் காணப் பெறுகின்றது. இருப்பினும் இவனது ஐந்தாவது ஆட்சி யாண்டிலிருந்துதான் இவன் வெற்றிச் செய்திகள் மிகுதியாகக் குறிக்கப் பெற்றுள்ளன. ஒவ்வொரு ஆண்டும் தான் பெற்ற புதிய வெற்றிகளைச் சேர்த்து மெய்க்கீர்த்தி வெளியிடுதல் மரபாதலின், இராசேந்திரனின் மெய்க்கீர்த்தியில் இவனுடைய வீரச் செயல்களும், அருஞ் செயல்களும் இவனது பதின்மூன்றாம் ஆட்சி யாண்டுவரை விரிந்து கொண்டே செல்கிறது. இதற்குப் பின்னர் இவனது மெய்க்கீர்த்தி ஒரே நிலையில் அமைந் துள்ளது.

எனவே, இவன் தனது பதின்மூன்றாம் ஆட்சி யாண்டிற்குப் பின் குறிப்பிடத் தக்க பெரிய வெற்றிகள் பெற வில்லை என்ப

துறுதி. மேலும், இவனது பத்தொன்பதாம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டிலும் பதின்மூன்ருவ தாண்டு மெய்க்கீர்த்தியில் கூறப் பட்ட வெற்றிகளே திரும்பவும் கூறப்பட்டுள்ளன. புதிய வெற்றி கள் சேர்க்கப்பட வில்லை. எனவே, இவன் தன் ஆட்சின் முற்பகுதியில் மட்டுமே போர் நடவடிக்கைகளில் ஈடுபட்டான் என்பது புலனுகும்.

இவனது ஆருவது ஆட்சி யாண்டில் வெளியிடப்பட்டு வட திருவாலங்காட்டுக் கோயிலுக் களித்த நிவந்தங்களைக் கூறும் திருவாலங்காட்டுச் செப்பேடும், இவனுடைய வெற்றிகளைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. இச் செப்பேடு, இவனது புறநாட்டுப் படையெழுச்சிக ளனைத்தும் முடிவெய்தியபின் வரையப்பட்ட தாகும்.

இச் செப்பேடும் இவனது மெய்க்கீர்த்தியும் சில இடங்களில் மாறுபடுகின்றன. இருப்பினும் திருவாலங்காட்டுச் செப்பேட்டில் குறிக்கப்பெற்றுள்ள பல வெற்றிகள், மெய்க்கீர்த்தியில் கூறப் பட்டுள்ள வெற்றிகளை உறுதிப்படுத்தப் பயன்படுகின்றன. இவன் தன் முன்னோர் வரலாற்றினை நன்கு விளக்குவதால், இவனது திருவாலங்காட்டுச் செப்பேடு சோழர் வரலாற்றில் பெரிதும் முக்கியத்துவம் பெற்றுள்ளது. இவனுடைய வீரச்செயல் களையும், சாதனைகளையும் விளக்கிக் கூறும் கரந்தைச் செப் பேடும் பல வகையில் இராசேந்திரன் வரலாற்றினை உருவாக்கு தில் பெருந்துணை புரிகின்றன. இராசேந்திரனின் கல்வெட்டு கள் இவனது மூன்ருவது ஆட்சி யாண்டிலிருந்துதான் காணப் பெறுகின்றன.

எனவே, இவன் தன் ஆட்சியின் முதல் மூன்ருண்டுகள் வரையில், படை வீரர்களுக்குப் பயிற்சி யளித்துப் படை வலிமையைப் பெருக்கினுன் என்று கூறுதல் பொருந்தும். தன் தந்தையைப் போலவே தானும் புறநாடுகளை வெல்லுவதே குறிக்கோளாகக் கொண்ட இராசேந்திரன் படைப் பெருக் கத்தில் நாட்டம் செலுத்தினுன். இவனுடைய வெற்றிகளைத்,

'திருமன்னி வளர விருநில மடந்தையும்
போர்ச்சயப் பாவையுஞ் சீர்த்தனிச் செல்வியும்'

எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தி தொகுத் துரைக்கின்றது. இதுவே, இவனுடைய வெற்றிகள்பற்றி அறியச் சிறந்த ஆதார மாகப் பயன்படுகின்றது.

இவனது மூன்று மாண்டுக் கல்வெட்டுகளின் மூலம், இவன் இடைதுறைநாடு, வனவாசி, கொள்ளிப்பாக்கை, மண்ணைக் கடக்கம் ஆகிய நாடுகளை வெற்றி கொண்டதாக அறிகிறோம். கிருஷ்ணை, துங்கபத்திரை ஆகிய இரு பேராறுகளுக்கும் இடைப் பட்ட பகுதியே இடைதுறை நாடு எனப் பண்டைக் காலத்தில் அழைக்கப்பெற்றது. இஃது 'எடத்தோர் இரண்டாயிரம்' எனவும் அந்நாட்டுக் கல்வெட்டுகளில் குறிக்கப்பெற்றுள்ளன. இது தற்காலத்திய மைசூர் மாநிலத்திலுள்ள ரெய்ச்சூர் மாவட்ட மென ஆராய்ச்சியாளர் கணிக்கின்றனர். இப்பகுதி மேலைச் சாளுக்கியரால் ஆளப்பட்டு வந்தது. இந்நாடே, இராசேந் திரன் வென்றடக்கிய முதல் நாடென அவன் மெய்க்கீர்த்தி குறிக்கின்றது.

மைசூர் தனியரசின் வடமேற்குப் பகுதியைத் தன்னகத்தே கொண்டு, கங்கபாடிக்கு வடக்கிலும் நுளம்பாடிக்கு மேற்கிலும், இருந்த வனவாசிப் பன்னிராயிரம் என்ற நிலப் பகுதியே, வனவாசி யெனவும் பண்டு அழைக்கப் பெற்றது. வனவாசியில் கடம்ப ராதிக்கம் முன்பு செல்வாக்குப் பெற்றிருந்தது.

கொள்ளிப்பாக்கை என்பது ஐதராபாத்திலிருந்து வட கிழக்கில் 45 கல் தொலைவில் அமைந்துள்ள 'குல்பக்கு' ஆகும். இது பண்டைக் காலத்தில் ஒரு தலைநகரமாக அமைந் திருக்க வேண்டும். இந்நகரம் கல்வெட்டுகளில் 'கொள்ளிப்பாக்கை ஏழாயிரம்' எனக் குறிக்கப்பெற் றுள்ளதால், இதன் சிறப்பினை நாம் நன்குணரலாம். இந்நகரம் பாதுகாப்பு மிக்க மதில்களால் சூழப் பெற்றிருந்தது என்பதைச் 'சுள்ளிச் சூழ்மதில் கொள்ளிப் பாக்கை' என்ற கல்வெட்டுப் பகுதியால் அறியலாம். மேலைச் சாளுக்கிய மன்னனைப் புகழ்பெற்று விளங்கிய ஆறும் விக்கிர மாதித்தனின் மைந்தனை, மூன்றும் சோமேசுவரன் பிற்காலத் தில் இதனைத் தலைநகராகக் கொண்டு இதனைச் சூழ்ந்த பகுதி களைத் தன் தந்தையின் பிரதிநிதியாக ஆட்சி புரிந்தான்' என்பதை வரலாறு தெள்ளத் தெளிய எடுத்துக் காட்டுகிறது. 13ஆம் நூற்றாண்டில் ஆட்சி செய்த காகதித்தியர்களும் இந்நகரினை மாநிலத் தலைநகராகக் கொண்டிருந்தனர்.

'மண்ணைக் கடக்கம்' என்பது மானியகேத மாகும். இஃது இராட்டிரகூடர்களின் தலைநகராகவிருந்து பெரும்புகழ் பெற்றது. தற்காலத்தில் 'மால்கெட்' என அழைக்கப்படுவதும் இந்நகரந் தான். பின்னர் மேலைச் சாளுக்கியர்களும் இதனைத் தலை நகராகக்கொண்டனர். மாளவப் பரமாரர்களும், சோழர்களும்

இவர்களின் கொடும்பகைஞர்க ளாதலின், இவர்களால் அடிக்கடி தாக்குண்டனர். 'மத்தளத்திற்கு இரண்டு பக்கங்களும் அடி' என்பதுபோல் வடக்கிலிருந்து பரமாரர்களும் தெற்கிலிருந்து சோழர்களும் இவர்களை நெருக்கினர். எனவே, இவர்களது தலைநகரம் மானிய கேதத்திலிருந்து கல்யாணிக்கு மாற்றப்பட்டதை முன்பே கண்டோம். மண்ணைக் கடக்கத்தின் மண்ணும் இராசேந்திரனின் வெற்றிப் புகழ் பாடிற்று. மண்ணைக் கடக்கம் இராசேந்திரனால் வெல்லப்பட்டது என்பதனைத் திருவொற்றியூரிலுள்ள ஒரு மண்டபம் 'மண்ணை கொண்ட சோழன்' எனப் பெயர் பெற்றிருத்தலால் அறியலாம். மேலும், திருச்சி மாவட்டத்தில் காணப்படும் இராசேந்திரனின் மூன்றாமாட்சி யாண்டுக் கல்வெட்டில், மேலைச் சாளுக்கியப் போர் பற்றி ஒரு குறிப்புக் காணப்படுவதாலும் உறுதியாகிறது.

மேலைச் சாளுக்கிய நாட்டில் நிகழ்ந்த போரில் சத்யாசிரயன் அமர்ந்து போர் செய்த யானையைக் குத்தி வீழ்த்தும்படி, இராசேந்திரன் முத்தரையர் குலத் துதித்த சுருதிமான் நக்கன் சந்திரனை இராசமல்ல முத்தரையனுக்கு ஆணையிட்டான். மாவீரன் சுருதிமான் நக்கன் சந்திரன் யானையை வீழ்த்தும் முயற்சியில் ஈடுபட்ட போது கொல்லப்பட்டான் என்பதை முன்பகுதியில் கண்டோம். எனவே, இராசேந்திரன் மேலைச் சாளுக்கிய மன்னனை சத்யாசிரயனுடன் போரிட்டான் என்பது உறுதி யாகிறது. சத்யா சிரயன் கி. பி. 1008இல் இறந்துபட்டதால், இப்போர் கி. பி. 1008க்கு முன் நடைபெற்றிருத்தல் வேண்டும்.

அடுத்து மேலைச் சாளுக்கிய நாட்டின் நடுவில் அமைந்துள்ள மண்ணைக் கடக்கத்தைத் தாக்க வேண்டுமெனில், துங்கபத்திரை நதியைத் தாண்டிச் செல்லுதல் வேண்டும். இடைதுறை நாடு, வனவாசி, கொள்ளிப் பாக்கை, மண்ணைக் கடக்கம் ஆகிய நாடுகளை இராசேந்திரன் ஒரே படையெழுச்சியில் வென்றதாகக் கூறப்பட்டிருப்பது பொருத்தமாக இல்லை. ஏனெனில், மண்ணைக் கடக்கமும், வனவாசியும் ஒன்றுக் கொன்று தொலை தூரத்தில் அமைந்துள்ளன. இராசராசன் ஆட்சிக் காலத்தில் ஏறத்தாழக் கி.பி. 1004இல் இராசேந்திரன் சத்யாசிரயனுடன் போர் புரிந்ததாகக் கல்வெட்டுகளில் கூறப்பட்டுள்ளதையும், கி. பி. 1007ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட ஓட்டூர்க் கல்வெட்டில் சத்யா சிரயனும் இராசேந்திரனும் போர் புரிந்ததாகக் குறிக்கப் பெற்றுள்ள நிகழ்ச்சிகளையும், சத்யா சிரயன் கி. பி. 1008இல் காலமானான் என்ற செய்தியை

யும், நாம் ஒப்பிட்டுப் பார்க்கும் போது இராசராசன் ஆட்சிக் காலத்தில் அவன் மைந்தன் இராசேந்திரன் வடநாட்டில் பெற்ற வெற்றிகளே இவ்வாறு குறிக்கப் பெற்றுள்ளது என்பது புலனாகிறது. இவ்வெற்றியினை இவனது மெய்க்கீர்த்தி,

'நெடிதிய ஊழியு ளிடைதுறை நாடும்
தொடர்வன வேலிப் படர்வன வாசியும்
சுள்ளிச் சூழ்மதிற் கொள்ளிப் பாக்கையும்
நண்ணற் கருமுரண் மண்ணைக் கடக்கமும்'

என்று குறிக்கின்றது.

இவ்வெற்றியின் விளைவால் தீராப் பகைஞர்களான மேலைச் சாளுக்கியர் தோற்கடிக்கப்பட்டனர். இருப்பினும் சாளுக்கியர் களை முழுவதும் அடக்கி ஒடுக்கி விட்டதாகக் கூற வியலாது. சில காலம் கழித்து, வலிமை பெற்ற சத்யா சிரயன், மீண்டும் சோழர்களுடன் போரிட்டான். எனவே, மேலைச் சாளுக்கியர் தற்காலிகமாக அடக்கப் பெற்றனர் எனக் கூறலாம்.

### ஈழ நாட்டுடன் போர்

இராசராசன் காலத்தில், இராசேந்திரன் தலைமையிலான கப்பற்படையை ஈழத்திற்கு அனுப்பி வடபகுதியினை வென்று சோணாட்டுடன் இணைத்துக் கொண்டான் என்றும், அதுபோழ்து ஈழ வேந்தனான ஐந்தாம் மகிந்தன் ஈழத்தின் தென்கிழக்கிலுள்ள ரோகண நாட்டில் ஒளிந்து கொண்டான் என்றும், நாம் முன்னர் கண்டோம். பின்னர் ஐந்தாம் மகிந்தன் தான் கரந்திருந்த இடத்தினின்றும் வெளிப்பட்டான்; பெரும்படை திரட்டினான்; சோழர்கள்மீது போர் தொடுத்து ஈழ நாட்டை விடுவிக்க முயன்றான்; விடுதலை வேட்கையும், நாட்டுப் பற்றும் கொண்ட சிங்கள வீரர்களும் சோழராட்சிக் கெதிராகப் புரட்சிக் கொடி உயர்த்தினர்.

இதனைக் கேள்விப்பட்டான் இராசேந்திரன்; பெருஞ்சினங் கொண்டான்; கப்பற் படையைச் செப்பம் செய்தான்; நாகைத் துறைமுகத்திலிருந்து புலிக்கொடி தாங்கிய போர்க் கப்பல்கள் அணியணியாக ஈழம் நோக்கிப் புறப்பட்டன. சோழப் படை யினை ஈழத் தீவினில் இறக்கினான். ஈழத் தீவைச் சுற்றிலும் சோழரின் மரக் கலங்கள் நிறுத்தப்பட்டன. ஈழத்தீவு, கடலில் அமிழ்ந்துவிடு மென்றெண்ணும் அளவில் சோழப்படை பெரும் படையா யிருந்தது.

சோழர்களும், ஈழர்களும் கடும்போர் நிகழ்த்தினர்; காட்டரண் மிக்க ரோகணம் கைப்பற்றப் பெற்றது; மடை திறந்த வெள்ளம் போல் சோழர் படை ரோகணக் கோட்டைக்குள் நுழைந்தது; சிங்க ஏறுபோல் போர் செய்த சிங்களவர் சிதறி ஓடினர்; பல்லாயிரக்கணக்கான சிங்களவர் போரில் மாண்டனர்; எஞ்சியோர் காடுகளில் தஞ்சம் புகுந்தனர்.

வெற்றி பெற்ற சோழர், ஈழ வேந்தர் வாழையடி வாழையாகப் புனைந்து கொள்ளும் பெருமைக்குரிய முடியினையும், அன்னோர் தேவியரின் பேரெழில் வாய்ந்த, விலை மதிக்க வொண்ணு முடியினையும், அணிகலன்களையும், ஏறத்தாழ நூறுண்டுகட்கு முன்பு மூன்றும் இராச சிம்ம பாண்டியர் ஈழ வேந்தனிடம் அடைக்கலமாக வைத்துச் சென்ற பாண்டியர் முடியினையும், இந்திரன் ஆரத்தினையும் கைப்பற்றிக் கொண்டு மகிழ்ச்சிப் பெருக்குடன் சோணுடு வந்தடைந்தனர்.

முதலாம் பராந்தக சோழன் காலத்தில், இராச சிம்ம பாண்டியன் சோழர்களிடம் தோல்வி பெற்றுப் பாண்டி நாட்டையிழந்து, ஈழ வேந்தனும் நான்காம் தப்புலன்பால் தஞ்சம் புகுந்து, மன்னனுக்குரிய மணி முடியையும், இந்திரன் ஆரத்தையும் அடைக்கலமாக வைத்துவிட்டு வந்த செய்தியை முற்பகுதியில் கண்டோம். இம்மணி முடியினைக் கைப்பற்றும் நோக்கத்துடன் முதலாம் பராந்தகன் ஈழ நாட்டின் மீது படையெடுத்தும் முடியைக் கைப்பற்ற இயலாது வெறுங் கையுடன் திரும்பினுன். ஆனல், இராசேந்திரனே, ஒரு நூற்றுண்டுக்கு முன்பு வைக்கப் பெற்ற மணி முடியைக் கவர்ந்து,

> 'எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
> திண்ணிய ராகப் பெறின்'

என்ற பொய்யா மொழியின் பொன்னுன வாக்கினுக்கு இலக்கியமாகத் திகழ்ந்தான்.

தஞ்சை மாவட்டத்திலுள்ள கரந்தையில் காணப்படுகின்ற செப்பேடுகளிலும் இராசேந்திரனின் ஈழப் படையெழுச்சி பற்றிய குறிப்புகள் காணக் கிடைக்கின்றன. 'இராசேந்திரன் வலிமை மிக்க பெரும்படையுடன் ஈழம் சென்று, ஈழ மன்னனை வென்று, ஈழத்தினைக் கைப்பற்றி, மகிந்தனது மணி முடியினையும், அவன் தேவியையும், தேவியின் அழகிய முடியினையும், அவன் மகளையும், அவனது விலை மதிப்பிட முடியாத செல்வங்க ளனைத்தையும், வாகனங்களையும், அவனிடம் பாண்டிய

மன்னன் அடைக்கலமாக வைத்துச் சென்ற பாண்டியர் மணி முடியினையும், இந்திரன் ஆரத்தையும் கவர்ந்தான்; போரில் தோல்வி கண்டு, அன்பான மனைவியையும், பாச மிக்க மகளையும், மகனையும், தன் உடமைகளையும் பறிகொடுத்த ஈழவேந்தன், அச்ச மிகுதியால் இராசேந்திரனின் காலடியில் தஞ்சம் புகுந்தான்' எனக் கரந்தைச் செப்பேடு குறிக்கின்றது. இவ்வெற்றியினை இராசேந்திரனின் மெய்க் கீர்த்தி,

'பொருகட லீழத் தரசர்த முடியும்
முன்னவர் பக்கம் தென்னவர் வைத்த
சுந்தர முடியு மிந்திர னாரமும்
தெண்டிரை யீழ மண்டல முழுவதும்'

என்று குறிப்பிடுகின்றது.

மேற் கூறிய அகச் சான்றுகளே யன்றி, இராசேந்திரனின் இலங்கைப் படையெழுச்சி பற்றிய புறச் சான்றுகளும், காணக் கிடைக்கின்றன. இலங்கை வரலாற்று நூலான 'மகா வமிசம் கூறுகின்ற செய்திகளும் இராசேந்திரனின் இலங்கைப் படை யெழுச்சியை விரித்துரைக்கின்றது. 'ஐந்தாம் மகிந்தனின் 36ஆம் ஆட்சி யாண்டில் சோழப் படையினர் ஈழ நாட்டில் கொள்ளையிட்டுப் பொன்னும், மணியும் அணிகலன்களும், அரச அணிகலன்களும் விலை மதிப்பிட வொண்ணு வைரங் களும், உடைக்க முடியாத கத்தியும், ஆண்டவனின் பரிசு பொருள்களும், பல பொற்படிமங்களும், கவர்ந்து கொண்டனர் எனவும் போரில் அஞ்சி ஓடிக் காட்டில் மறைந்து கொண்ட அச்சிங்கள வேந்தனை உடன்பாடு செய்து கொள்வதற்கு அழைப்பதுபோல் அழைத்துப் பிடித்து வந்து, மன்னனையும் கைப்பற்றப் பட்ட பொருள்களையும் சோழ நாட்டிற்கு அனுப்பி வைத்தனர் எனவும், பல புத்த மடங்களைத் தரைமட்டமாக்கி விட்டு, இலங்கையின் செல்வங்க ளனைத்தையும் தம்முடன் கொண்டு சென்றனர் எனவும்..............மன்னர் மகிந்தர் சோழ நாட்டில் பன்னிரண்டாண்டு காலம் வாழ்ந்து தமது 48ஆவது அகவையில் காலமானர்' எனவும் மகாவமிசம் கூறுகின்றது. ஆனல், சோழர் கல்வெட்டுகளில் சோழப் படை மேற்கொண்ட கொள்ளை பற்றியும் இப்படையெழுச்சி பற்றிய விரிவான செய்திகளும், குறிக்கப்பெற வில்லை. தஞ்சை மாவட்டத்தி லுள்ள கோனேரி இராசபுரத்திலுள்ள கல்வெட்டொன்று மகிந்தன் சோணுட்டிற்குக் கொண்டு வரப்பட்ட பின்னர், சோழ வேந்தனுக்கு முற்றிலும் பணிந்தான் என்ற செய்தியைத் தெரிவிக்கின்றது. இராசேந்திரனது 'திருமன்னி வளர'

என்ற தொடக்கத்தைக் கொண்ட சில கல்வெட்டுகள் பொலந் நருவாப் பகுதியிலும், கொழும்பு தொல்பொருள் காட்சி சாலை யிலும் காணப்படுகின்றன. ஆனால், இவைகள் நன்னிலையி லின் றிச் சிதைந்து காணப்படுவதால் தெளிவாக அறிந்து கொள்ள இயல வில்லை.

ஈழ நாடு முழுவதிலும், சோழர் கலைப் பாணியில் கட்டப் பெற்ற பல விஷ்ணு, சிவன் கோயில்கள் காணப்படுகின்றன. மேற் கூறிய சின்னங்களால் இராசேந்திரன் ஈழத்தின் மீது படையெடுத்து, வெற்றி பெற்று, ஈழ நாடு முழுவதையும் தன்னாட்சிக் குட்படுத்திப் புலிக் கொடியைப் பறக்கச் செய்து ஆண்டான் என்பது தெளிவாக விளங்குகிறது. இப்போரின் விளைவாக ஈழநாடு முழுவதும் சோழ நாட்டுடன் இணைக்கப் பட்டது. சோழர் கலை ஈழத்தில் பரவியது. வெற்றிச் சின்ன மாக ஈழக்காசுகள் வெளியிடப் பெற்றன.

இராசேந்திரனின் ஈழப் படையெழுச்சி இவனது ஐந்தாம் ஆட்சி யாண்டுக் (கி.பி. 1017-1018) கல்வெட்டில் தான் முதன் முதல் குறிக்கப்படுகின்றது. இதே ஆண்டில் வெளியிடப்பெற்ற சில கல்வெட்டுகளில் இது பற்றிய குறிப்புகள் காணப் பெருமை யின், இப்படையெழுச்சி இவனது ஐந்தாம் ஆட்சி யாண்டின் இடைப் பகுதியில் நிகழ்ந் திருக்க வேண்டு மென்று எண்ண இடமுண்டு. இலங்கை வரலாற்று நூலான மகா வமிசமும் இப் படை யெழுச்சி, மகிந்தனின் 36வது ஆட்சி யாண்டாகிய கி. பி. 1017இல் முடிவுற்றது என்று குறிப்பிடுகின்றது. மேற் சான்றுகளால் இராசேந்திரனது ஈழப் படையெழுச்சி கி.பி. கூறிய 1017 ஆம் ஆண்டில் நிகழ்ந்ததாகக் கொள்வது சாலப் பொருந்தும்.

இராசேந்திரன் தன் ஈழப்படை யெழுச்சியின் முடிவில் மன்னர் மகிந்தர், அவர் தேவியார், மகன் ஆகியோரைச் சிறைப்படுத்திச் சோணாட்டிற்குக் கொணர்ந்தான். ஐந்தாம் மகிந்தனின் மகன் காசிபன் என்பான், ஈழ நாட்டு மக்களால் மறைவாக வளர்த்து வரப் பெற்றான். இவ்வாறு கரந்துறைந்த காசிபன், தன் தந்தையார் சோணாட்டிலிறந்து பட்ட செய்தி கேட்டு மறைவிடத்தி னின்றும் வெளிப் போந்து, நாட்டுப் பற்றும், விடுதலை வேட்கையும் மிக்க சிங்கள வீரர்களை ஒன்று திரட்டிச் சோழராட்சிக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தான். முரட்டொழில் சிங்களவர் ஏறத்தாழ ஆறு திங்கள் சோழ மறவர்களுடன் கடும் போர் புரிந்தனர்; எண்ணிறந்த சோழ வீரர்களைக் கொன்று

குவித்தனர்; சோழர் பிடியிலிருந்து உரோகணத்தை மீட்டனர்; உரோகணம் மீண்டும் கி. பி. 1029இல் தன்னாட்சி பெற்று விளங்கியது.

தன்னாட்சி பெற்ற தொன்னகரில் காசிபன் கி. பி. 1029இல் முதலாம் விக்கிரமபாகு எனும் பெயரில் முடி புனையப் பெற்றான். இவன் ஏறத்தாழப் பன்னிரண் டாண்டுகள் நல்லாட்சி செலுத்தினான். இவனது ஆட்சி கி.பி. 1041இல் முடிவுற்றது. ஐந்தாம் மகிந்தன் இராசேந்திரனின் ஆட்சிக் கால முற்பகுதியிலும், முதலாம் விக்கிரமபாகு இராசேந்திரனின் ஆட்சிக் காலப் பிற்பகுதியிலும், ஈழத்து வேந்தர்களாக ஆட்சி செலுத்தினர். எனவே, இருவரும் இராசேந்திர சோழனின் சம காலத்தவர் என்பது புலனாகும். இவர்களைப் பற்றிய செய்திகள் மகா வமிசத்தில் கூறப்பட்டுள்ளன. சேர, பாண்டிய நாடுகளில் குழப்ப மேற்பட்டதனால் அங்கு அமைதியையும், ஒழுங்கையும் நிலை நாட்டும் எண்ணத்துடன் இராசேந்திரன் இப்படையெழுச்சியினை மேற்கொண்டிருத்தல் வேண்டும்.

### சேர நாட்டுடன் போர்

சேர, பாண்டிய நாடுகளில் குழப்ப மேற்பட்டதனால், அங்கு அமைதியையும், ஒழுங்கையும் நிலை நாட்டும் எண்ணத்துடன் இராசேந்திரன் இப்படையெழுச்சியினை மேற் கொண்டிருத்தல் வேண்டும். இராசேந்திரன் கி. பி. 1018இல் சேர நாட்டின் மீது தன் படையைச் செலுத்தி, வெற்றி கொண்டதாக இவனது ஆறு, ஏழாம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டுகளால் அறிய முடிகின்றது.

சேர மன்னரை வென்று தன்னடிப் படுத்திய நம் இராசேந்திரன், அந்நாட்டு மன்னர்கள் பண்டைக் காலந் தொட்டு ஒருவர்பின் ஒருவராகப் புனைந்து கொண்ட, அழகு மிக்க மணி முடியினையும், கண்ணைப் பறிக்கும், ஒளி மிக்க மாலையையும் தன் வீரச் செயலின் சின்னமாகக் கவர்ந்து கொண்டான். சேரர் மணிமுடி, விலை மதிப்பிட இயலாத அளவிற்குப் பேரெழில் மிக்கதாகச் செய்யப்பட்டுச் சேரர் குலச் செல்வமாகப் போற்றப்பட்டமையின், பலருடைய பாராட்டுதலைப் பெற்ற தாகும். மேலும், இவன் கடலால் சூழப் பெற்றதும், சிறந்த அரண் கொண்டதுமான தொன்மை மிக்க தீவுக் கூட்டங்களையும் தன் கப்பற்படை வலிமையால் கைப்பற்றினான். பல்வகை அரண்களால் சூழப் பெற்ற சாந்திமத் தீவில் பரசுராமனால் வைக்கப் பெற்ற விலை யுயர்ந்த செம்பொன்

முடியிணையும் கி.பி. 1019இல் இவன் கவர்ந்து வந்ததால் மக்களால் பாராட்டப் பெற்ருன். சாந்திமத் தீவென்பது மேலைக் கடலில் சேரர்களின் ஆளுமையி லிருந்த மாலத் தீவுக ளாகும். சாந்திமத் தீவென்பது 'அண்ட்ரோத்' எனும் தீவென்று திரு. கா. ம. வேங்கடராமையா தமது 'கல்வெட்டுத் துணைவன்' எனும் நூலில் கூறுகின்ருர்.

இவ் வெற்றிகளை இவனது மெய்க்கீர்த்தி,

'எறிபடைக் கேரளன் முறைமையிற் சூடும்
குலதன மாகிய பலர்புகழ் முடியும்
செங்கதிர் மாலையும் சங்கதிர் வேலைத்
தொல்பெருங் காவற் பல்பழந் தீவும்
செருவிற் சினவி யிருபத் தொருகால்
அரசுகளை கட்ட பரசு ராமன்
மேவருஞ் சாந்திமத் தீவரண் கருதி
இருத்திய செம்பொற் றிருத்தகு முடியும்'

என்று விரித் துரைக்கின்றது.

*பாண்டியருடன் போர்*

அடுத்து, இராசேந்திரன் பாண்டிய நாட்டின்மீது படை யெடுத்துச் சென்ருன். சோழப் படையின் வருகையைக் கேட்ட அளவிலேயே, அவர்களைப் போர்க் களத்தில் சந்திக்க அஞ்சிப் புறங்காட்டி ஓடி மலைய மலையில் பாண்டியன் ஒளிந்து கொண்டான். எனவே, இராசேந்திரன் பாண்டிய நாட்டின் சிறப்புக்குக் காரணமாகிய வெண்முத்துகளை மிகுதியான அளவில் கவர்ந்து கொண்டு குலப்பற்று மிக்க பாண்டிய மக்களின் மனத்தை நிறைவு செய்யக் கருதித் தன் மகனைச் சோழ பாண்டியன் எனும் பெயரில் பாண்டிய நாட்டுப் பெயராளாக (பிரதிநிதி) நியமனம் செய்தான்.

இவ்வாறு முதல் சோழ-பாண்டிய பெயராளாக (பிரதிநிதி) நியமிக்கப்பட்டவன், இராசேந்திர சோழனின் மகனுகிய, சடைய வருமன் சுந்தர சோழ பாண்டிய னுவான்.

பின்னர் இராசேந்திர சோழன் தன் படையுடன் மேற்கு நோக்கிச் சென்ருன். பரசுராமன் சத்திரிய மன்னர் களுக்கு இன்னல்கள் இழைத்து வந்ததாகக் கேள்விப்பட்ட இராசேந்திரன் அவனை இப்பூவுலகில் காண இயல வில்லை யாதலின், அவனல் அமைக்கப்பெற்ற நாட்டினைக் கைப்பற்ற

உறுதி பூண்டான். எனவே, இவன் மலைய மலையைக் கடந்து சேர மன்னருடன் கடும்போர் நிகழ்த்தி, வெற்றி பெற்றுச் சோணாடு திரும்பினான்.

மேற்கூறிய செய்திகள் திருவாலங்காட்டுச் செப்பேடுகளில் மட்டும் காணப் பெறுகின்றன. இவனது பத்தா மாண்டில் வெளியிடப் பெற்ற ஒற்றைக் கல்வெட்டும் இவனது பாண்டியப் போர் பற்றிக் குறிக்கின்றது. இச்செய்திகள் இவனது மெய்க் கீர்த்தியிலும் காணப்பெற வில்லை.

இராசேந்திரன் சேர, பாண்டிய நாடுகளை வென்றடிமைப் படுத்தினான் என்று திருவாலங்காட்டுச் செப்பேடு கூறுவது பொருத்தமானதாகத் தெரிய வில்லை. ஏனெனில், இராசராசன் காலத்தே சேர நாடும், பாண்டிய நாடும் வெல்லப்பட்டுச் சோழ ராட்சியில் இணைக்கப்பட்டு, அவை முறையே மலை மண்டலம் எனவும், இராசராசப் பாண்டி மண்டலம் எனவும் பெயர் பெற்றதை, அந்நாடுகளில் காணப்பெறும் பல கல் வெட்டுகளா லறியலாம். இருப்பினும் புதுச்சேரிக் கருகி லுள்ள திருவாண்டார் கோயிலில் இவனால் பத்தாவது ஆட்சி யாண்டில் வெளியிடப்பட்ட கல்வெட்டில், 'பாரது நிகழப் பாண்டி மண்டலத்து மதுரையில் மாளிகை எடுப்பித்துத் தன் மகன் சோழ பாண்டியன் என்று அபிடேகஞ் செய்து தண்டாற் சாலைக் கல மறுத்த கோப்பர கேசரி' என்று குறிப்பிட்டுள்ளதால் மதுரை யம்பதியில், அரண்மனை யமைத்துத் தன் மகனை அரசப் பெயராளாக நியமித்துப் பாண்டி நாட்டை ஆட்சி புரியச் செய்தமை விளங்கும். இச்செயல் இராசேந்திரனின் அரசிய லறிவைப் பறை சாற்றுகின்றது.

இவ்வாறு பாண்டி நாட்டில் ஆட்சி செய்த சடைய வருமன் சுந்தர சோழ பாண்டியன், கி. பி. 1018ஆம் ஆண்டில் மதுரை யம்பதியில் அரசப் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டிருத்தல் வேண்டு மென்பதைத் திருநெல்வேலி மாவட்டத்தில் மன்னூர் கோயிலில் காணப் பெறுகின்ற கல்வெட்டால் அறியலாம். கி. பி. 1018இல் அரசப் பெயராளாக நியமிக்கப் பெற்ற சடைய வருமன் சுந்தர சோழ பாண்டியன் ஏறத்தாழ இருபத்து மூன்றாண்டுகள் ஆட்சி செலுத்தினா னென்றும் கி. பி. 1040இல் அவனது ஆட்சி முடிந்திருக்க வேண்டு மென்றும் கல்வெட்டு களால் அறியலாம் என்று கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி அவர்கள் கூறுகின்றார்.

பிற்காலச் சோழ மன்னர்கள் தங்கள் பெயர்களுக்கு முன்னல் இராசகேசரி, பரகேசரி என்னும் பட்டங்களை ஒருவர் பின் ஒருவராக மாறிமாறிப் புனைந்து கொண்டு ஆட்சி செலுத்தி யது போன்று கடைச் சங்க காலத்திற்குப் பின்னர், பாண்டி நாட்டை ஆட்சி செய்த பாண்டி மன்னர்கள், மாறவருமன், சடையவருமன் என்ற இரு பட்டங்களை, ஒருவர் பின் ஒருவராக மாறி மாறிப் புனைந்து கொண்டனர் என்பதைப் பாண்டி நாட்டுக் கல்வெட்டுகளும், செப்பேடுகளும் அறிவிக்கின்றன. எனவேதான், சுந்தர சோழன், பாண்டிய குல மரபுப்படி சடைய வருமன் என்ற பட்டத்தினைத் தனது பெயரின் முன் இணைத்துக் கொண்டான்.

### சேர நாட்டுடன் போர்

நம் இராசேந்திரன் தந்தையைப்போல் தானும் காந்தளூர்ச் சாலையைத் தாக்கிச் சேரர் படைக் கலங்களை யழித்துச் சேரர்களை வெற்றி கொண்டான். இவ்வாறு வெல்லப்பட்ட சேரநாட்டை யும் இராசேந்திரன், சடையவருமன் சுந்தர சோழ பாண்டி யனிடம் ஒப்படைத்து நிரந்தரமான ஆட்சி முறையினை ஏற் படுத்தினன். மேற்கூறியவற்ருல் அரசப் பெயராளாகப் பட்டம் சூட்டி அவ்விரு நாடுகளின் ஆட்சியினையும் அவனிடம் ஒப் படைத்தான் என்பது விளங்கும்.

சேர வேந்தனுகிய இராச சிங்கன் என்பான், பாண்டி நாட்டில் மன்னர் கோவிலில் ஒரு விண்ணகரம் அமைத்து அதற்கு 'இராசேந்திர சோழ விண்ணகரம்' எனப் பெயரிட் டிருத்தலானும், நாஞ்சில் நாட்டின்கண் உள்ள சுசீந்திரம் 'சுந்தர சோழ சதுர்வேதி மங்கலம்' என்று சேர நாட்டின் அரசப் பெயராளான சுந்தர சோழன் பெயரால் அமைந் துள்ளமையினுலும், விஷ்ணு வர்த்தனப் பேரரசனை சாளுக்கிய விசயாதித்திய விக்கியண்ணன் என்பான் சுந்தர சோழன் ஆட்சிக் காலத்தில் (கி. பி. 1029) நாகர்கோயிலுக் கருகில் உள்ள கோட்டாற்றில் இராசேந்திர சோழேச்சுரமுடைய மகா தேவர்க்கு ஒரு நந்தா விளக்கிற்கு நிவந்தம் அளித்ததாக அக்கோயில் கல்வெட்டில் கூறப்பட்டிருத்தலினுலும், சேர நாடு சோழர் ஆட்சிக் குட்பட்ட தென்பதும் அதற்குச் சடைய வருமன் சுந்தர சோழ பாண்டியன் அரசப் பிரதிநிதியாக நிய மிக்கப் பெற்ருன் என்பதும் உறுதி பெறுகின்றன.

மன்னர் கோயில் வெட்டெழுத்துச் சோழராட்சி பற்றிய பல நுணுக்கங்களை எடுத்தியம்புகின்றது. அரசப் பிரதிநிதியாக

நியமிக்கப்பட்டவன் தனது மாநிலத்தில் மன்னனுக்குரிய அனைத்து அதிகாரங்களையும் பெற்றானென்றும், அதிகாரப்பூர்வமான ஆணைகளைத் தன்னாட்சி ஆண்டில் வெளியிட உரிமை பெற்றிருந்தானென்றும், மைய ஆட்சிக்கும், மாநில ஆட்சிக்கும் நெருங்கிய தொடர்பிருந்ததென்றும், இராசேந்திரன் காஞ்சியில் ஒரு அரண்மனை அமைத்திருந்தானென்றும் அறியலாம்.

(நாகர் கோயிலுக் கண்மையிலுள்ள கோட்டாற்றுக் கல்வெட்டில் விஷ்ணு வர்த்தனன் நிவந்தம் அளித்ததாகக் கண்டோம். இவன் 'சர்வலோகாஸ்ரய ஸ்ரீ விஷ்ணுவர்த்தன மகாராஜா' என்று தன்னைப்பற்றிக் குறிப்பிட்டிருப்பது விந்தையாக உள்ளது. இக் கல்வெட்டுச் சுந்தர சோழ பாண்டியனின் பதினோராம் ஆட்சி யாண்டில் வெளி வந்த தாகும். சோழர்க்கும், கீழைச் சாளுக்கியருக்கும் முன்பே மணவினைத் தொடர்பிருந்ததைக் கண்டோம். எனவே, இவன் கோட்டாற்றில் வைக்கப் பெற்றிருந்த சோழர் நிலைப் படைக்குத் தலைவனாயிருந்திருத்தல் வேண்டுமென்று அறிஞர்கள் கருதுகின்றனர்.)

### சாளுக்கியருடன் போர்

தமிழக வரலாற்றில் சோழ-சாளுக்கியப் போர் ஒரு சுவையான அத்தியாயம் என்பது யாவரும் அறிந்ததே. இவர்களுக்கிடையேயான போர் நிகழ்ச்சிகள், வரலாற்று மாணவர்கட்குப் படிக்கப் படிக்க மகிழ்ச்சி யூட்டத் தக்க ஒன்றாகும். வலிமை மிக்கவனுக்கும் வலிமை குன்றியவனுக்கும் இடையில் நடைபெறும் போர் சுவை யற்றது. ஒத்த வலிமையுடைய இரு படைத் திறத்தார்க்கும் நிகழும் போரே, கற்பவர் நெஞ்சங்களில் நீங்கா இடம் பெறும் பான்மை யுடையது. சாளுக்கியர் நீண்ட காலமாகச் சோழர்களுடன், நெடும்பகை கொண்டிருந்தனர் என்பது, முன்பே கூறப்பட்டது. இங்கு நாம் ஒத்த பெருமையும், ஒத்த வலிவும் கொண்ட சோழ-சாளுக்கியர்களின் போர் பற்றி ஒரு சிறிது ஆய்வோம்.

இராசராசன் ஆட்சிக் காலத்தில், இராசேந்திரன் மேலைச் சாளுக்கிய மன்னனான சத்தியாசிரயனுடன் போரிட்டு, வெற்றி பெற்ற செய்தியை முன் பகுதியில் கண்டோம். சத்தியா சிரயனுக்கு மகப் பேறின்மையால், அவன் உடன் பிறப்பாகிய தசவருமனின் மகனான ஐந்தாம் விக்கிரமாதித்தியன், சத்தியாசிரயனுக்குப்பின் மேலைச் சாளுக்கிய நாட்டைக் கி.பி. 1008 முதல் 1012 முடிய ஆண்டு வந்தான்.

ஐந்தாம் விக்கிரமாதித்தியனுக்குப் பின் செயசிங்கன் கி.பி. 1012இல் அரியணை யேறினன். இவனுக்கு முதலாம் ஜகதேக மல்லன் என்ற பெயரும் உண்டு. இவன் ஆட்சிக்கு வந்தவுடன் படை வலிமையினைப் பெரிதும் பெருக்கினன்; செம்மையான போர்ப் பயிற்சி யளித்தான்; தன் தந்தையும், தமையனும் சோழர்களிடம் தோல்வியுற்றதனல், மாசு படிந்துவிட்ட வரலாற்றினைத் தூய்மை செய்ய, உறுதியெடுத்துக் கொண்டான். சோழர்களால் கைப்பற்றப்பெற்ற சாளுக்கியப் பகுதிகளை மீட்டாக வேண்டுமென்று வஞ்சினம் கொண்டான். மாளவப் பரமாரர்களைப் பழி வாங்கவும் கங்கணம் கட்டிக் கொண்டான்.

இவன் தன் பெரும்படையைச் சோழ நாட்டின்மீது செலுத்திச் சோழ நாட்டின் எல்லையிலுள்ள பல்லாரியையும், மைசூர் மாநிலத்தின் வட மேற்குப் பகுதியினையும் கைப்பற்றித் தன்னாட்டுடன் இணைத்துக் கொண்டான்; அப்பகுதிகளில் பல கல்வெட்டுகளையும் வெட்டுவித்தான்.

இவன் இராசேந்திரன் என்ற யானைக்குச் சிங்கம் போன்றவனென்றும் போசனுகிய தாமரைக்குத் தண்மதியம் போன்றவன் என்றும் தனது கி. பி. 1019 ஆம் ஆண்டு சாசனத்தில் குறித்துள்ளான். சேர, சோழ மன்னர்களைப் பன்முறைக் கடலில் மூழ்கடித்தவன் என்றும் பௌகாம்வே கல்வெட்டிலும், மிரேஜ் செப்பேட்டிலும் குறித்துள்ளான். பௌகாம்வே கல்வெட்டு கி.பி. 1017 இல் வரையப் பெற்றதாதலின், இங்குச் சோழன் என்று குறிக்கப் பெற்றவன், இராசேந்திரனே யாவான். மேற்கூறியவற்ருல் செயசிங்கன் சோழப் பேரரசின் எல்லைப்புறத்திலிருந்த சில பகுதிகளை மீட்டான் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி ஆகும்.

இராசேந்திரனது கரந்தைச் செப்பேடு 'மான்யகேடத்தை நான் பிடிக்காத வரையில் கிரிஹா விஹாரம் (பொழில் விளையாட்டு) செய்வ தில்லை' என்னும் தன் தந்தையினுடைய சூளுரையை நிறைவேற்றி வைப்பதற்காக, இராசேந்திரன் அப்பட்டணத்தைப் பிடிப்பதில் ஆர்வம் கொண்டான் எனக் கூறுவதால் இவன் மேலைச் சாளுக்கிய நாட்டின்மீது படையெடுக்கத் தருணம் நோக்கி யிருந்தான் என்பது புலனுகும்.

மேலும், செயசிங்கனின் போர் நடவடிக்கைகள், எரியும் நெருப்பினில் எண்ணெய்யை ஊற்றின. அதனல், இராசேந்திரன் கடுஞ்சினம் கொண்டான்; காஞ்சியிலிருந்து படை திரட்டிச்

சென்று, செயசிங்கனை முயங்கி என்னுமிடத்திலுள்ள போர்க் களத்தில் சந்தித்தான். கி.பி. 1020இல் இரு திறத்தாருக்கும் கடும் போர் நிகழ்ந்தது. மலையும், மலையும் மோதிக் கொள்வதுபோல் களிறும், களிறும் மோதிக் கொண்டன; போர் முரசங்கள் ஒலித் தன; எங்கணும் ஒரே ஆரவாரம்; போர் வீரர்களோ, விலங் கொடு விலங்காய் வெறி கொண்டு போரிட்டனர்; குருதியாறு பெருகிற்று; பிணமலைகள் குவிந்தன; கழுகுகள் வானில் வட்ட மிட்டன; குற்றுயிரும் குறை உயிருமாய்ப் பலர் ஓலமிட்டனர்; கையிழந்து, காலிழந்து தரையில் கிடந்த வீரர்களும் போர் செய்வதை நிறுத்தாது தன்னாலியன்ற அளவில் தாய்த்திரு நாட்டின் மானங் காக்கப் போரிட்டனர். இறுதியில் சோழ மறவர்கள் வெற்றி முரசு கொட்டினர். கைக்கோளப் படை யினரும், குஞ்சர மல்லர்களும், வில்லிகளும், குதிரை வீரர்களும் வெற்றிக் கூத்தாடினர்; விழுப்புண் பெற்ற திண்தோள் வீரர்கள் ஆடினர்! பாடினர்!! சோழ மன்னர் வாழ்க! சோழ மன்னர் வாழ்க!! என்ற வாழ்த்தொலி விண்ணும், மண்ணும் கலந்தன. மாவீரன் செயசிங்கன் தோல்வியைத் தழுவினான். அவன் அகந்தை அழிந்தது. சோழப் படையினர் மணித் திரளும் பொற் குவியலும் விலை மதிக்க வொண்ணாச் செல்வங்களும் கவர்ந்து கொண்டு சோணாடு திரும்பினர்.

இவனது முயங்கி வெற்றி, இவனது எட்டாம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டுகளால் நன்கு விளங்குகின்றது. இவனது எட்டாவது ஆட்சி யாண்டில் வெளியான சில கல்வெட்டு களில் இவ்வெற்றி குறிக்கப்பெற வில்லை யாதலின் எட்டா மாண் டின் இடைப் பகுதியில் அதாவது கி.பி. 1020இல் இப்போர் நடைபெற்றிருத்தல் வேண்டும்.

ஈண்டு முயங்கி எனக் குறிக்கப் பெற்ற இடம் பல்லாரி மாவட்டத்தில் 'ஹார்ப்பன ஹள்ளி' வட்டத்திலுள்ள சங்கி துருக்கமாக இருத்தல் வேண்டுமெனக் கல்வெட் டறிஞர்கள் கருதுகின்றனர். நைசாம் மாநிலத்திலுள்ள 'மாஸ்கி' என்ற இடமே முயங்கி யென்று முற்காலத்தில் அழைக்கப் பெற்றதாக, வேறு பல கல்வெட் டாராய்ச்சியாளர்கள் கருத்துத் தெரிவிக் கின்றனர். முயங்கி என்பது சில கல்வெட்டுகளில் 'முசங்கி' எனவும் குறிப்பிடப் பெற்றுள்ளது. 'முயங்கி' என்ற இடத்தை அடையாளங் கண்டு கொள்வதில் மாறுபட்ட கருத்துகள் நிலவிய போதிலும், முயங்கி மேலைச் சாளுக்கிய நாட்டில் அமைந்ததொரு நகரம் என்பதில் எவருக்கும் கருத்து வேறுபா டில்லை.

இப்போரில் வெற்றி பெற்ற இராசேந்திரன் இரட்டபாடி எழரை யிலக்கத்தைக் கைப்பற்றியதாகத் திருவாலங்காட்டுச் செப்பேடு கூறுகிறது. இரட்டபாடியைக் கைப்பற்றிய சோழப் படையினர் துங்கபத்திரையாற்றங் கரையில் அமைந்துள்ள தும், பல்லாரி மாவட்டத்தில் 'ஒசபேட்' வட்டத்தில் உள்ளது மான 'கம்பிலித் தோட்டத்தை' அழித்தனர். திருவாலங் காட்டுச் செப்பேடுகள்; இப்போர் நிகழ்ச்சிகளைக் காப்பிய நடையில் பத்துச் சுலோகங்களில் சித்திரிகின்றது. இருப்பி னும் இக்குறிப்புகள் இராசேந்திரனின் மெய்க்கீர்த்தியைப் போல் போர் நிகழ்ச்சிகளை விரிவாகக் கூற வில்லை.

> 'பயங்கொடு பழிமிக முயங்கியில் முதுகிட்
> டொளித்த சயசிங்க னளப்பரும் புகழொடு
> பீடிய லிரட்ட பாடி யேழரை
> யிலக்கமு நவநிதிக் குலப்பெரு மலைகளும்'

என்ற இராசேந்திரனின் மெய்க்கீர்த்தி, இவன் 'இரட்டபாடி எழரை யிலக்கம்' முழுமையும் கைப்பற்றினுன் என்று குறிப்பிடு கிறது. செயசிம்மனை வென்றதனுல் இராசேந்திரன் 'ஜயசிம்ஹ சரபன்' என்ற விருதினைப் பெற்றதாகக் கரந்தைச் செப்பேடு குறிப்பிடுகின்றது.

இராசேந்திரன் முயங்கியில் வெற்றி பெற்ருன் என்பது முழுக்க முழுக்க உண்மை; ஆனுல், இரட்டபாடி முழுமையும் கைப்பற்றினுன் என்பது மிகைபடக் கூறுவ தாகும். இவனது மெய்க்கீர்த்தியினை வரைந்த புலவர் இவ்வெற்றியைச் சிறிது மிகைபடக் கூறியுள்ளார் என்று நாம் எண்ணுவது பொருத்தமே.

முயங்கியில் தோல்வி யுற்ற செயசிங்கன் தோல்வியால் துவண்டுவிட வில்லை; மாருகத் தன் கடற் பெருஞ்சேனையினைத் தக்க முறையில் புதுப்பித்தான்; போர்ப் பயிற்சிக்கு முக்கியத் துவம் மிகத் தந்தான்; போர் வீரர்களின் எண்ணிக்கையை யுயர்த்திப் படைகளைப் பெருக்கினுன்; சோழ நாட்டு எல்லையில் ஊடுருவல் செய்தான். தேர்ந்த வீரர்களைக் கொண்ட சாளுக்கியர் சோழப் படையினை வென்று இழந்த பகுதி களை மீண்டும் கைப்பற்றிக் கொண்டனர். துங்கபத்திரைப் பேராறு வரையிலுள்ள தன் பகுதிகளை மீட்டுக் கொண்டு, செயசிங்கன், வலிமை மிக்க சோழ வீரர்களை விரட்டியடித்து எடத்துறை இரண்டாயிரம் நாட்டை மீண்டும் கைப்பற்றிக் கொண்டு தனது மேலாண்மையை நிறுவினுன் என்று கி.பி. 1024இல் வெளியிடப்பட்ட சாளுக்கியரின் 'மிராஜ்'

பட்டயம் கூறுவதாலும், கி.பி. 1024இல் மேலைச் சாளுக்கிய மன்னனுன செயசிங்கன் இடைதுறை நாட்டிலுள்ள 'மாடதூசுரு' என்ற ஊரை அந்தணன் ஒருவனுக்கு இறையிலியாகத் தந்தான் என மிராஜ் பட்டயங்கள் கூறுவதனுலும் அப்பகுதிகள் செயசிங்கனின் ஆளுமைக் குட்பட்ட தாயிருத்தல் வேண்டு மென்பது தெளிவு. எனவே, துங்கபத்திரைப் பேராற்றுக்கு வடக்கேயுள்ள பகுதிகள் மேலைச் சாளுக்கியர் வசமாயிற் றென்றும், துங்கபத்திரைக்குத் தெற்கேயுள்ள பகுதிகள் சோழர் ஆளுகைக் குட்பட்ட தென்றும் அறியலாம்.

சாளுக்கியக் கல்வெட்டுகளில் செயசிங்கன் சோழர்களை வென்றடக்கினு னெனவும், சோழர் கல்வெட்டுகளில் இரா சேந்திர சோழன் மேலைச் சாளுக்கியர்களை வென்று தன் னடிமைப் படுத்தினு னெனவும் கூறப்பட்டுள்ளமை விந்தை யாக உள்ளது. இவற்றுள் நாம் எவரது கல்வெட்டை ஏற்றுக் கொள்வது என்பது புதிராக உள்ளது. இருவரும் ஒத்த வலிமை கொண்டவர்கள் என்பது உண்மையே. எனவே, இவர்களுள் இருவரும் சிற்சில இடங்களில் தற்காலிக வெற்றி பெற்றனரே யன்றி, ஒருவரும் இறுதியான வெற்றி பெறவில்லை எனபதுறுதி. இதனுல், இவர்கள் அடிக்கடி பல போர்க்களங்களில் சந்தித்துப் போரிட்டனர் என்றும், தமக்குச் சாதகமாக முடிவு பெற்ற வெற்றிகளை மட்டுமே தங்கள் தங்கள் கல்வெட்டுகளில் குறித்துக் கொண்டு பெருமை கொண்டனர் என்றும் கருதலாமே தவிர இரு சாரருள் எவரும் இறுதி வெற்றி பெற்று மாற்ருரின் நாட்டினைத் தன்னுட்சியுடன் இணைத்துக் கொண்டதாக நாம் கூறுதல் இயலாது. இருப்பினும் இராசேந்திரன் காலத்தில் சோழர் கை ஓங்கிற்று. சாளுக்கியர் சோழரைக் கண்டஞ்சினர்.

அடுத்துச் சோழ - சாளுக்கியப் போர்கள் இருவேறிடங் களில் மையங் கொண்டிருந்தன என்பதை நாம் நினைவிற் கொள்ள வேண்டும். சோழர்கள் மேலைச் சாளுக்கியரை ஒடுக்குவதற்கு மேற்குப் பகுதியில் மான்யகேதத்தையும், கல்யாணியையும், ஒரு இலக்காகவும், கிழக்குப் பகுதியில் வேங்கியை மற்ருெரு இலக்காகவும் கொண்டு போரிட்டு வந்தனர்.

வேங்கியின் நிகழ்ச்சி பற்றிய குறிப்புகள் இராசேந்திர சோழனின் மெய்க்கீர்த்தியில் இடம் பெற வில்லை. இவனது மெய்க்கீர்த்தியில் முயங்கிப் போருக்குப் பின் கங்கைப் படை யெழுச்சியின் குறிப்புகள் இடம் பெறுகின்றனவே யொழிய

வேங்கிப் போர் நிகழ்ச்சிகள் குறிப்பிடப் பெற வில்லை. வேங்கி யைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செலுத்தியவர்கள் கீழைச் சாளுக்கிய ராவர். இவர்கள் சோழர்களிடம் நட்புரிமையும், திருமணத் தொடர்பும் கொண்டிருந்தனர். எனவே, மேலைச் சாளுக்கியரும், சோழரும் வேங்கியின் அரசியல் நிகழ்ச்சிகளில் தலையிட்டனர்.

கீழைச் சாளுக்கிய மன்னனான விமலாதித்தனுக்குப் பின்பு கி.பி. 1019இல் இவன் மகன் இராசராச நரேந்திரன் அரியணை யேற முயன்றான். செயசிம்மனே, இராசராச நரேந்திரன் அரியணை யேறுவதைத் தடுத்து நிறுத்தி, அவனுடைய தாயத்தாருள் ஒருவனான ஏழாம் விஷ்ணுவர்த்தன விசயாதித் தனை அரியணையில் ஏற்றத் தேவையான ஆதரவு தந்து உற்சாகப்படுத்தினான்.

அரியணையேறும் வாய்ப்பினை இழந்துவிட்ட இராசராச நரேந்திரன் தன் மாமனான இராசேந்திர சோழனின் உதவியை நாடினான். இராசேந்திரனும் தனது பெரும் படையைத் தொண்டை மண்டலத்து மாதண்ட நாயகரான அரையன் இராசராசன் தலைமையில் இராசராச நரேந்திரனுக்கு உதவி செய்ய அனுப்பி வைத்தான்.

அரையன் இராசராசன் சாளுக்கியர்களை வென்று தான் முன்பு பெற்றிருந்த விக்கிரம சோழன், சோழிய வரையன் போன்ற பட்டங்களுடன் நால்மடி பீமன், சோழ சக்கரன், சாமந்தா பாணன், வீர பூஷணம், எதிர்த்தவர் காலன், செய சிங்க குலகாலன் போன்ற பட்டங்களைப் புனைந்து கொண்டான் என்று கல்வெட்டுக் கூறுகின்றது. வேங்கியில் நடைபெற்ற சோழ சாளுக்கியப் போர்கள்பற்றி அனந்தப்பூர் மாவட்டத்தில் 'மதகசிரா' வட்டத்திலுள்ள 'கோட்டசீவரம்' என்னு மிடத்தில் தமிழிலும், கன்னடத்திலும் வரையப்பட்டுள்ள கல்வெட்டுகள் சில சுவையான நிகழ்ச்சிகளைக் குறிப்பிடுகின்றன. இப்போரில் வேங்கி நாட்டு மன்னன் வெல்லப்பட்டுச் செயசிங்கனின் குலம் அழிக்கப்பட்ட தென்று கூறப்பட்டுள்ளது.

'போயினான் போர்ச்சளுக்கி பொற்சே ழியவரசை
ஏவினான் கோச்சென்னி என்னவே-வாயினாற்
கொல்வேங்கை பின்தொடரக் கோள்வேங்கை சூழ்புறவில்
தொல்வேங்கை மண்டலமும் தோற்று'

எனும் பாடலால் சாளுக்கிய மன்னன் தோற்றேடினான் என்பது புலனாகும்.

இவைகளுள் இராசேந்திரனின் பத்தாம் ஆட்சி யாண்டின் போது வெளியிடப் பெற்ற கல்வெட்டு முக்கியத்துவம் உடைய தாகும். வீரத் திலகமான மாவீரன் அரையன் இராசராசன் தனது தலைநகர் நோக்கிப் படையுடன் வருகிறான் என்று கேள் விப்பட்ட மாத்திரத்தில் வேங்கி மன்னன் நாட்டை விட்டே ஓடி விட்டான் என்று ஒரு கல்வெட்டுக் கூறுகிறது. இவ்வாறு ஓட்டம் பிடித்த வேங்கி மன்னன் விசயாதித்தனாக இருக்கக் கூடு மென்றும், இந்நிகழ்ச்சியும், முயங்கிப் போர் நிகழ்ச்சியும் ஏறத்தாழ ஒரே காலத்தில் நிகழ்ந் திருக்க வேண்டு மென்றும், திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி அவர்கள் தமது 'சோழர்கள்' என்ற புத்தகத்தில் கருத்துத் தெரிவித்திருக்கிறார்.

அரையன் இராசராசனான சோழப் படைத் தலைவன் கலிங்க நாடு, ஒட்ட நாடு, தெலுங்க நாடு ஆகிய நாடுகளையும் வென்ற தாகக் கல்வெட்டுச் செய்யுள்கள் சான்று தருகின்றன. கலிங்க நாட்டு மன்னனும், ஒட்டநாட்டு மன்னனும், செயசிங்கனுட னும், விசயாதித்தனுடனும் சோழர்களுக் கெதிராக இணைந்து கொண்டனர். எனவே, வியத்தகு வீரனான அரையன் இராச ராசன் இக்கூட்டிணைவுப் படையையும் சமாளிக்க வேண்டிய இக்கட்டானதொரு சூழ்நிலையி லிருந்தான். இவர்களை வென்று, துரத்தி யடிக்க மேற்கொண்ட முயற்சியே சோழரின் கங்கைப் படையெழுச்சிக்கு வழி வகுத்துக் கங்கையின் புனித நீரைக் கொணர்ந்து இராசேந்திர சோழன் புதிதாக அமைத்த புதிய தலைநகரைத் தூய்மைப் படுத்துவதில் முடிவடைந்த தென்று வீர ராசேந்திரனது 'சாராளச் செப்பேடுகள்' குறிப்பிடு வதால் உணரலாம்.

மேற்கூறிய கல்வெட்டுகளால் சோழர் படைத்தலைவனான அரையன் இராசராசன் மேலைச் சாளுக்கிய மன்னனான செய சிம்மனை வென்றான் என்பதைத் திட்டவட்டமாக அறியலாம். ஆனால், செயசிம்மனின் 'குலேனூர்' கல்வெட்டோ சோழப் படையினை வென்று துரத்தி யடித்ததாகக் கூறுகின்றது. கி.பி. 1028 இல் வெளியான இக்கல்வெட்டில் சோழர், பரமார மன்னான போசன், சேதி நாட்டுத் திரிபுரி நகரத்திலிருந்து அரசு செலுத்திவந்த 'ஹைஹயர்' எனப் பெயர் பெற்ற கலசூரி வமிசத் தைச் சார்ந்த காங்கேய விக்கிரமாதித்தன் ஆகிய மூவரின் யானைப் படையினை அழித்துப் பெருவெற்றி பெற்றான் எனக்

குறிக்கப் பட்டுள்ளது. இக்கல்வெட்டுகளை யெல்லாம் ஆய்ந்து பார்க்குங் காலை சோழ-சாளுக்கியப் போர் சங்கிலித் தொடர் போல் தொடர்ந்த தென்றும், இருவரும் பல போர்களில் ஈடு பட்ட போதிலும் ஒருவர் மற்றவரை அழிக்க முடிய வில்லை யென்றும் எண்ண இட முண்டு. இவர்கள் தம் வலியுடன் துணை வலியும் கொண்டு ஒருவரை ஒருவர் அழிக்க நினைத்தும், இயலாது போயிற்று என்றும் மேலைச் சாளுக்கியர் உயர்ச்சி பெறுவதைச் சோழர் தடை செய்து நிறுத்தி வைத்தனர் என்றும் அறிய இட முண்டு. சாளுக்கியர் உயர்ச்சி பெற்று, வளர்ச்சி பெறுதலைச் சோழர் தடுத்து நிறுத்திய போதிலும், சாளுக்கியப் பேரரசினைத் தம்முள் இணைத்துக் கொள்ள இயல வில்லை என் பதும் புலனாகின்றது.

'இராசேந்திர சோழன் செய சிம்மனைத் தோற்கடித்த பொழுதிலும், செய சிம்மன் தன் இராச்சியத்தின் ஒரு பகுதியை யும் இழக்க வில்லை' என்று பேராசிரியர் த. கி. வெங்கடராமன் அவர்கள் 'சாளுக்கிய வமிசம்' எனும் கட்டுரையின்கண் குறிப் பிட்டுள்ளதை ஈண்டு நாம் எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

சோழர் சாளுக்கியரின் எல்லைப் பகுதியுள் ஊடுருவிச் சாளுக் கியப் பகுதியைக் கைப்பற்றுவதும், சாளுக்கியர் பின்பு அதனை மீட்டுக் கொள்ளுவதும் அடிக்கடி நிகழ்வுற்றன.

மேலைச் சாளுக்கியர் வலிமை பொருந்தியவர்களாக விளங் கிய போதிலும், முதலாம் இராசராசன், முதலாம் இராசேந் திரன், முதலாம் இராசாதிராசன் ஆகிய சோழப் பெருமன்னர் கள் காலத்தில் தோல்வியே கண்டனர். இவர்கள் காலத்தில் சாளுக்கியர் தலை தூக்க முடியாது அமிழ்ந்தனர். குறிப்பாக அதிலும் சிறப்பாக இராசேந்திரன் மேலைச் சாளுக்கியரை அடக்கி யொடுக்கினான் என்பது குறிப்பிடத் தக்க தாகும்.

**கங்கைப் படை யெழுச்சி**

இராசேந்திரனின் கங்கைப் படை யெழுச்சி, தமிழக வர லாற்றில் மட்டு மன்றி, இந்தியத் துணைக் கண்ட வரலாற்றிலும் பொன்னெழுத்துகளால் பொறிக்கப் பெறவேண்டிய மாபெரும் நிகழ்ச்சி யாகும். தென்னிந்தியப் பெருமன்னர்களை வென் றடக்கிய மாவீரன் இராசேந்திரன், வட நாட்டின்மீதும் படை யெடுத்து, ஆங்குத் தன் படை வன்மையைக் காட்டிப் பெரு வெற்றி யீட்டிப் புலிக்கொடி நாட்டிச் சோழரின் வீரத்தினை நிலை நிறுத்தித் தமிழர்களின் வழிகாட்டியாகத் திகழ்கிறான். வட

நாட்டிற்குத் தென்னுடு இணைத்த தன்று; சளைத்த தன்று என்ற மாபெரும் உண்மையினைச் செயல்படுத்திக் காட்டிய செயல் வீரன் இராசேந்திரன், தமிழர்களின் பாராட்டுதல்களுக் குரியவ னவான். இவ்வியத்தகு வெற்றிகள் பெற்ற இராசேந்திர சோழன் கங்கைப் படை யெழுச்சியினை மேற்கொண்ட செய்தி, இவனது பதினேராம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டுகளில் குறிக்கப் பெற்றுள் ளது. எனவே, இவன் படையினர் வடநாட்டில் புரிந்த போர் நிகழ்ச்சிகள் கி.பி. 1023 ஆம் ஆண்டிற்கு முன்னர் நிகழ்ந் திருக்க வேண்டும். இவனது வட நாட்டுப் படை யெழுச்சி முடிவு பெறுவதற்கு ஏறத் தாழ இரண்டாண்டுகள் சென்றிருத்தல் வேண்டு மெனக் கூறுதல் பொருத்தமான தாகும்.

இவனது வடநாட்டுப் படை யெழுச்சினை இராசேந்திரனது மெய்க்கீர்த்தி, திருவலங்காட்டுச் செப்பேடு, கன்னியாகுமரிக் கல்வெட்டுப் போன்றவை விரித்துரைக்கின்றன. ஒட்டக்கூத்தர் இயற்றிய 'மூவருலா' என்னும் நூலிலும், சேக்கிழார் இயற்றிய 'பெரிய புராணம்' என்னும் நூலிலும், செயங்கொண்டார் இயற்றிய 'கலிங்கத்துப் பரணி' என்னும் நூலிலும் இராசேந் திரனது கங்கைப் படையெழுச்சி குறிக்கப்பட் டுள்ளது. இரா சேந்திரனின் படைத் தலைவன் வடநாட்டில் வெற்றி கொண்ட மன்னர்களை ஒழுங்குபடுத்திக் கூறுவதில், திருவாலங்காட்டுச் செப்பேடும், இராசேந்திரனின் மெய்க்கீர்த்தியும் முரண்படு கின்றன. வடநாட்டுப் போர் நிகழ்ச்சிகள் முடிவு பெற்றவுடன் எழுதப் பெற்றது மெய்க்கீர்த்தி; இப்படை யெழுச்சி முடிவு பெற்றுச் சில ஆண்டுகள் கழித்து எழுதப்பெற்றது திருவாலங் காட்டுச் செப்பேடு. எனவே, நாம் இராசேந்திரனது மெய்க் கீர்த்தியில் கூறப்படுகின்ற முறையினை ஏற்றுக்கொள்வது நலம். இவ்வெற்றிகளை ஒழுங்குபடக் கூறுவதில் திருவாலங்காட்டுச் செப்பேடு இராசேந்திரனின் மெய்க்கீர்த்தியி னின்றும் மாறு பட்ட போதிலும், மற்ற நிகழ்ச்சிகளைத் தெளிவாகவும் நம்பத் தகுந்த வகையிலும் கூறுகின்றது.

'சோழ குல விளக்கான இம்மன்னன் இராசேந்திரன் தன் தவ வலியால் கங்கையைப் பூமிக்குக் கொணர்ந்த பகீரதனைப் பரிகசிப்பதைப் போலத் தன் தோள் வலியால் அந்நதியின் நீரை இவ்விடம் கொணர்ந்து நாட்டைப் புனித மாக்க முற் பட்டான்' என்று திருவாலங்காட்டுச் செப்பேடு குறிப்பிடுவ தாலும்,

'உடையார் ஸ்ரீ இராசேந்திர சோழ தேவர் உத்தரா பதத்தில் பூபதியாரை ஜயித்தருளி யுத்தோத்சவ விபவத்தால்

கங்கப் பரிகிரகம் பண்ணி யருளின கங்கை கொண்ட சோழ னென்னும் திருநாமத்தால் இத்திருமுற்றத்தில் வைத்து அருளின உத்தமாக்கிரம் கங்கை கொண்ட சோழனில்' என்று தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள எண்ணாயிரம் என்னும் ஊரிலுள்ள கல்வெட்டுக் குறிப்பிடுவதனாலும்,

'நித்தில நெடுங்கட லுத்தர லாடமும்
வெறிமலர்த் தீர்த்தத் தெறிபுனற் கங்கையும்'

என்று இராசேந்திரனின் மெய்க்கீர்த்தி குறிப்பிடுவதனாலும்,

'இராசேந்திர சோழ தேவர் கங்கை கொண்டு எழுந்தருளு கின்ற இடத்துத் திருவடி தொழுது, என்று திரைலோக்கிய மாதேவிச் சதுர்வேதி மங்கலத்திலுள்ள இவன் கோயிற் கல்வெட்டுக்[1] குறிப்பிடுவதனாலும்

'கங்கா நதியும் கடாரமும் கைக்கொண்டு
சிங்கா தனத்திருந்த செம்பியனும்'[2]

என்று பாவேந்தன் ஒட்டக்கூத்தன் 'மூவருலா'வில் குறிப்பிடுவ தாலும்,

'களிறு கங்கைநீ ருண்ண மண்ணையில்
காய்சினத் தொடே குலவு செம்பியன்
குளிறு தெண்டிரைக் குரைக டாரமுங்
கொண்டு மண்டிலங் குடையுள் வைத்ததும்'

என்று செயங் கொண்டார் கலிங்கத்துப் பரணியில்[3] குறிப்பிடுவ தாலும்,

'கங்கை நதியிடை வேயொடு பாகடர்
கம்ப நிகளம தாசல நீருன
வங்க மறிகடல் சூழெழு பார்வலம்
வந்த மனுகுல சோழனை மாகத
னங்க ணையரிள மாமுலை தோய்புய
மந்தி வெயினிகர் சோரியின் மூழ்குற
வெங்க ணழலுதி ராவதி ராவெதிர்
மின்கொ லெனவிணை வாளிக ளேவவே'[4]

[1]Annual Report on South Indian Epigraphy for the year ending 31st, March-1932, Para-13

[2] குலோத்துங்க சோழனுலா–வரிகள்-49, 50.

[3] கலிங்கத்துப் பரணி-பா. 189

[4] வில்லிபாரதம்·கன்ன பருவம்-66

என்று வில்லி பாரதத்தில் குறிக்கப்பட்டுள்ளதாலும் 'பூர்வ தேசமும், கங்கையும், கடாரமும் கொண்ட கோப்பர கேசரி வருமன்' என்ற கல்வெட்டுச் சான்றுலும் இவனது கங்கைப் படை எடுப்பைப்பற்றி அறியலாம்.

இவனுடைய படை வீரர்கள் கங்கைப் பகுதி வேந்தர்களை வென்று திரும்பி வருங்கால் வடநாட்டிலிருந்து ஒரு விநாயகர் படிமத்தைக் கொண்டு வந்தனர் என்பதாலும், அக்கற்படிமம் கும்பகோணத்திலுள்ள திருநாகேச்சுரரது கோயிலில் கங்கை விநாயகர் எனும் பெயரால் இராசேந்திரனால் பிரதிட்டை செய்யப்பட்டது என்பதாலும், இவனது கங்கைப் படையெழுச்சியும் கங்கை நீரைக் கொணர்ந்த செய்தியும் இனிது விளங்குகின்றன.

பண்டைக் காலத்துக் கங்கை, வைகை, காவிரி, கோதாவரி, நருமதை போன்ற பேராறுகள் புனிதமானவையாகப் போற்றப் பெற்று வந்தன. இவற்றுள் கங்கையாறு புனித ஆறுகளுள் தலையாயதாகும். இப்புனித நீரினைக் கொணர முற்படுங்கால் வட திசையிலுள்ள வேந்தர்களையும் போரில் வென்று தன் வீரத்தினை நிலைநாட்டி அதனைக் கொணர எண்ணுதல், வீரம் செறிந்த பழங்குடியில் தோன்றிய பெருமன்னரின் இயல்பாகும்.

எனவே, நம் இராசேந்திரனும் தான் புதிதாகக் கட்டுவித்த தலைநகரத்தைக் கங்கை நீரால் தூய்மைப் படுத்த விழைத்தது இயல் பாகும் என்று அறியலாம். எனவேதான், இவன் வடநாட்டுப் படை யெழுச்சியினை மேற்கொண்டான் என்று திருவாலங்காட்டுச் செப்பேடு[1] செப்புகின்றது.

இவன் அரியணை யேறிய பின்பு முதல் மூன்று ஆண்டு காலம் எவ்விதப் போர் நடவடிக்கைகளிலும் ஈடுபட வில்லை என்பது இவனது மெய்க்கீர்த்திப் பகுதியால் அறியப்படுதலின், இவன் மூன்றாண்டு காலம் தலைநகர் நிறுவும் பணியில் ஈடுபட்டு அது முற்றுப் பெற்றபோது, நகரினைத் தூய்மை யாக்கும் பொருட்டுக் கங்கைப் படை யெழுச்சியினை மேற்கொண்டான் என்று உறுதியாகக் கூறலாம்.

கங்கை நீரைக் கொண்டு வருவதோடு மறத் தமிழனின் பெருவீரத்தினை வட வேந்தர்களுக்கு உணர்த்தல் வேண்டும்

[1] S. I. I. Vol. III. No. 205, Verse. 66

என்பதே இவனது கங்கைப் படையெழுச்சியின் நோக்கமாக இருத்தல் வேண்டும்.

'கங்கை நீரைக் கொணர்தலே இப்படை யெழுச்சியின் தொடக்க கால நோக்கமாக இருந்த போதிலும் சோழப் பேரரசின் படைவலிமையினை வெளிப்படுத்துவதும், தனது ஆற்றலினை வட இந்தியப் பெருமன்னர்களிடம் உணர்த்துவதுமே இவன் உள் நோக்கமாக இருந்தன என்பதனை ஐயம் திரிபின்றி அறியலாம்'[1] என்று தென்னிந்திய வரலாற்று மேதை திரு. கே. ஏ. நீலகண்ட சாத்திரியார் தமது 'சோழர் வரலாறு' என்னும் நூலின்கண் குறிப்பிடுவதனாலும் இதனை நாம் நன்கு அறியலாம்.

கங்கை நீரைக் கொணரச் செல்லுங்கால் வட வேந்தர்கள் எதிர்ப்புத் தெரிவித்துத் தடை செய்யக்கூடும் என்பதனை முன் கூட்டியே அறிந்திருந்த இராசேந்திரன் அஞ்சா நெஞ்சமும், பெருவீரமும் கொண்ட தேர்ந்தெடுக்கப்பட்ட வீரர்களைக் கொண்ட பெரும்படையினை அணி வகுக்கச் செய்தான்; அப் பெரும் படையின் தலைவனாகப் புகழ் பூத்த ஒரு மாவீரன் படை நடத்திச் செல்லத் தகுந்த ஏற்பாடுகளையும் செய்தான். இவ் வரிய வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொண்டு வட வேந்தர்களை வென்று கங்கை நீரைக் கொணர்ந்து செயற்கருஞ் செயல்கள் செய்த சோழ மாதண்ட நாயகன் யார்? என்பது பற்றிய ஆதாரங்கள் இதுகாறும் நமக்குக் கிடைக்கப் பெற வில்லை. இருப்பினும், இப்பெரும்படையினைத் தலைமை யேற்று நடத்திச் சென்றவன் மாபெரும் வீரனான அரையன் இராசராசனே என்று நாம் கருத இட முண்டு. ஏனெனில், சோழர் படைத் தலைவருள் வீரத்தின் திருவுருவாய், வெற்றியின் பேருருவாய்த் திகழ்ந்து போர்க் களங்களில் வேங்கை யெனப் பகைவர்மீது பாய்ந்து, அவர்களைச் சிதறி ஓடச் செய்த மாவீரன் அரையன் இராச ராசனாவான். இவன் நால்மடி பீமன், எதிர்த்தவர் காலன், சயசிங்க குலகாலன், வீர பீமன், வீர பூஷணம் போன்ற பல தோரணையான பட்டங்களைப் பெற்ற சோழ மாதண்ட நாயகன் ஆவன் என்பதனையும் நாம் முன்பே கண்டோம்.

மேலும், மேலைச் சாளுக்கியப் போரின் தொடர்ச்சியே கங்கைப் படையெழுச்சி யாதலின் சாளுக்கிய நாட்டின்மீது படைத் தலைமை யேற்றுச் சென்ற அரையன் இராசராசனே

[1] 'Colas' K. A. Nilakanta Sastri.

இப் படையெழுச்சிக்கும் தலைமை தாங்கிச் சென்றிருத்தல் வேண்டுமெனக் கொள்ளுதல் இயல்பே. கலிங்க நாட்டு மன்னனும் ஒட்டர நாட்டு மன்னனும் செயசிம்மனுக்கு உதவி




படம்-1
முதலாம் இராசேந்திர சோழன் வடநாட்டுப் படையெழுச்சியில் வென்ற இடங்கள்

புரிந்ததால் இவர்களை வென்று அடக்க மேற்கொண்ட முயற்சியே கங்கைப் படை யெழுச்சிக்கு வழி வகுத்தது என்பதை முன்பே கண்டோம். எனவே, அரையன் இராச ராசன் மேலைச் சாளுக்கியப் படை யெழுச்சியைத் தொடர்ந்து கங்கை நோக்கிச் சென்றிருத்தல் வேண்டு மென்று கூறலாம்.

இராசேந்திரனது கங்கைப் படையெழுச்சி வேங்கி நாட்டிலிருந்து தொடங்கியிருத்தல் வேண்டும். வேங்கி நாடு சோழர்களின் நெருங்கிய நட்பு நாடு என்பதை நாம் முன்பே கண்டோம். இராசேந்திரன் தன் படைத் தலைவனையும், படை வீரர்களையும் 'வென்று வா! கங்கை நீரைக் கொண்டு வா!!' என நல்லாசி கூறி மகிழ்வுபடுத்தி வழியனுப்பினான். வேங்கை நாட்டு மக்களும் மிகுந்த ஆரவாரம் செய்து சோழ வீரர்களை மகிழ்வுபடுத்தி வட நாட்டிற்கு வழியனுப்பினர். வேங்கி நாட்டினின்றும் கங்கை நோக்கிச் சென்றது சோழப் படை. புலிக் கொடி தாங்கிய போர்க் களிற்றின்மீது தானைத் தலைவன் செம்மாந்து தலைநிமிர்ந்து சென்றான். அவனுக்குப் பின்னே நடமாடும் குன்றுகளென யானைப்படை தொடர்ந்தது. குஞ்சர மல்லர்கள் அஞ்சாது அணி வகுத்தனர். குதிரைப் படை காற்றினும் கடிது சென்றது. வில்லிகளும் கைக்கோளப் படையினரும் வாள் வீரர்களும் வீராவேசத்துடன் தொடர்ந்தனர்.

வேங்கி நாட்டிலிருந்து வேங்கையெனப் புறப்பட்ட சோழர் படைத் தலைவன் பெரும்படையுடன் சக்கரக் கோட்டத்தினுள் புகுந்து சென்ற, போது சக்கரக் கோட்டத்தை ஆண்டு வந்த நாக மன்னன் அப்படையினைத் தடுத்து நிறுத்த முயன்றான். எனவே, இரு திறத்தார்க்கும் பெரும்போர் மூண்டது; போரின் இறுதியில் சோழ வீரர்கள் வெற்றிவாகை சூடினர்.

சக்கரக் கோட்டம் பண்டைக் காலத்தில் சக்கரக் கோட்ட மண்டலமென அழைக்கப்பட்டது. இக்காலத்தில் இது சித்திரக் கோட்ட மெனவும் அழைக்கப் பெறுகிறது.[1] சக்கரக் கோட்ட மென்பது விசாகப் பட்டின மாவட்டத்திற்கு வடமேற்கே வத்ச அரசின்கீழ் இருந்த ஒரு நகர மாகும். இது பஸ்தரில் உள்ள தென்பது கண்டுபிடிக்கப் பட்டுள்ளது. பதினொன்று, பன்னிரண்டாம் நூற்றாண்டுகளில் நாக மரபினர் இதனை ஆண்டனர்.

**மதுரை மண்டலம்**

அடுத்துச் சோழர் படை மதுரை மண்டலத்தை நோக்கிப் பீடுநடை போட்டது. பெரும்போருக்குப்பின் மதுரை மண்டலம் அடி பணிந்தது; சோழ வீரர் பெருமை கொண்டனர்.

மதுரை மண்டல மென்பது வத்ச இராச்சியத்தில் இருந்திருத்தல் வேண்டும். இது பஸ்தாரின் ஒரு பகுதி யாகும். இது வேங்கி நாட்டிற்கு வடக்கே இருந்தது என்பது ஒருதலை.

[1] Ep. Ind; Vol. IX. PP. 178 and 179. Chitrakut.

ஈண்டு மதுரை மண்டல மென்பது யமுனைக் கரையின்கண் அமைந்துள்ள மதுரையும் அதனைச் சுற்றிய பகுதிகளுமாக இருத்தல் வேண்டும் என்று திரு. டி. என். சுப்பிரமணியன் அவர்கள் 'தென்னிந்திய கோயில் சாசனங்கள்' என்னும் நூலில் குறிப்பிடுகிறார்.[1] கி.பி. பதினொன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வட மதுரை சிறப்பு மிக்க நகரமாக விளங்கிற்று. ஆயர் குலத்துதித்த கார்மேக வண்ணனும் கண்ணன் பிறந்து, வளர்ந்து இன்பமாக விளையாடிய இடம் இதுதான் என்பதனைப் புராணங்கள் கூறுகின்றன. இம் மதுரா நகரின்மீது கஜினி முகம்மதும் தாக்குதல் நிகழ்த்தினான் என்பதனை வரலாறு உணர்த்துகின்றது.

ஹேமச் சந்திரர் **'துவயாச்சிரயம்'** என்னும் நூலின் கண் அன்ஹில் பாடக நகர மன்னனான துர்லபராசன் (கி.பி. 1010-1022) **நதூல நாட்டு** மன்னனான மகேந்திர ராசனுடைய தங்கையான துர்லப தேவியை மணந்த போது, ஏனைய மன்னர்களுடன் மதுரா மன்னனும் சுயம்வர மண்டபத்திற்கு வந்திருந்ததாகக் குறிப்பிட்டுள்ளார்.

'வடமது ரையிலொரு புடையிடை வனிதையர்
மெய்க்கவின் மைக்காவின்
வயிறற மணியுக வரிவளை யுடனணி
பொற்றொடி சிற்றுடை
கொடிமறு கடையவு மொளிபெற வருமுகில்
கொட்டுக சப்பாணி'
(குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ்)

எனவும்

'மருக்கமழும் வடமதுரை வளநகர்க்கும் பழையோரம்' எனவும் (குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ்)[2] குறிக்கப் பெற்றிருத்தலின் சோழராட்சி மதுரையில் நடைபெற்றதெனவும், மதுரை நகரம் சோழ மன்னர்க் குட்பட்டிருந்ததெனவும் அறிய இடமுண்டு.

எனவே, நம் இராசேந்திரன் வென்ற மதுரை மண்டலம் வத்ச அரசின் பகுதியாக இருந்தது என்று பலர் குறிப்பிட்ட போதிலும், இது யமுனைநதிக் கரையின்கண் அமைந்துள்ள மதுரையும் அதனைச் சூழ்ந்த பகுதியு மாகு மெனக் கூறுதல் தவறாகாது.

[1] தென்னிந்திய கோயில் சாசனங்கள்-பாகம்-2

[2] குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ்-சிறுதேர்ப் பருவம். பாடல்-95

சக்கரக் கோட்டத்தையும், மதுரை மண்டலத்தையும் வெற்றி கொண்ட சோழப் பெரும்படை வத்ச அரசின் பகுதிகளான நாமணைக் கோணம், பஞ்சப் பள்ளி ஆகியவற்றின்மீது பாய்ந்தது. சோழர்தம் கடுந்தாக்குதலுக்கு உள்ளான இவ்விரு பகுதிகளும் அடிபணிந்தன. சோழப் பெருவீரர்கள் வெற்றி முரசு கொட்டினர். இவ்வெற்றிகளை நம் இராசேந்திரனது மெய்க்கீர்த்தி,

'விக்கிரம் வீரர் சக்கர கோட்டமு
முதிர்பட வில்லை மதுரைமண் டலமும்
காமிடை வளை இய நாமணைக் கோணமும்
வெஞ்சின வீரர் பஞ்சப் பள்ளியும்
பாசடைப் பழன மாசுணி தேசமும்'

என நிரல்படக் கூறுகின்றது.

### சிந்து வெற்றி

சக்கரக் கோட்டம் என்பது விசாகப் பட்டின மாவட்டத்திற்கு வடமேற்கே மத்திய மாகாணத்தில் வத்ச அரசின் ஆட்சியின் கீழிருந்த ஒரு நகராகும். கி.பி. பதினொன்று, பன்னிரண்டாம் நூற்றாண்டுகளில் இது நாக மரபினரால் ஆளப்பட்டது. 'அன்னோர் நாகர் மரபினராதல் பற்றி அவர்கள் அரசாண்ட நாடும் மாசுண தேசம் என்று வழங்கப்பெற்று வந்தது. அதற்குச் சக்கரக் கோட்ட மண்டல மென்னும் வேறொரு பெயரும் உண்டு'[1] என்று திரு. டி. வி. சதாசிவப் பண்டாரத்தார் அவர்கள் குறிப்பிடுகின்றார்.

இருப்பினும், மாசுணி தேசமும் சக்கரக் கோட்ட மண்டலமும் ஒரே இடத்தைத் தான் குறிப்பனவா? என்பதில் நமக்கு ஐயம் ஏற்படலாம். ஏனெனில், இது போல் ஒரே இடத்தைக் குறிக்கும் இரு பெயர்களை மெய்க்கீர்த்தியில் குறிப்பது வழக்க மில்லை. எனவே, சக்கரக் கோட்ட மண்டலமும், மாசுணி தேசமும் இரு வேறு நாடுகளா யிருத்தல் வேண்டும்.

இக்கருத்தினையே, 'மெய்க்கீர்த்தியில் காணும் ஊர்ப் பெயர்களை அதே பொருளைத் தரக்கூடிய வேறு இரண்டு, மூன்று சொற்களால் மொழி பெயர்த்துக் கொடுப்ப தில்லை. இதே போல நடந்திருப்பதாக வேறு எடுத்துக்காட்டு எதுவும் காட்டமுடியாது. அதனால், மாசுணி தேசம் நாக நாடாக இருந்திருக்க

[1] பிற்காலச் சோழர் சரித்திரம். பக்கம்-155. வரி-27; பக்கம்-156. வரிகள்-1-3.

முடியாது. அதே பெயரைக் கொண்ட வேறு ஒரு பிரதேச மாகவே இருத்தல் வேண்டும்'' என்று திரு. டி. என். சுப்பிரமணி யன் அவர்கள் குறிப்பிடுகின்றார்.

இனி, நாம் மாசுணி தேசம் என்று குறிக்கப்பெறுவது யாண் டுளது? என்பது பற்றி ஆய்வோம்.

இந்திய நாட்டின்கண் மாசுணி தேசம் என்னும் பெயரால் ஒரே ஓர் இடமே சிந்துநதிக் கரைப் பகுதியில் உண்டு. அறிஞர் சிலரும் இம்முடிவுக்கே வந்துள்ளனர்.

அலெக்சாந்தரின் இந்தியப் படையெழுச்சியினை விரித்துக் கூறும் கிரேக்க வரலாற்றாசிரியரான 'டய டோரஸ்' என்பவர் அலெக்சாந்தர் சிந்து நதியில் படகில் பயணம் செய்த போது சிந்துக் கரையிலுள்ள ஸோத்ரே (சோத்திரி), மாசுணி (மாசணே) ஆகிய இரு வகுப்பினரின் சரணாகதியை ஏற்றுக் கொண்டதாகக் குறிப்பிடுகின்றார். எனவே, மாசுணி வகுப்பினர் ஆண்ட சிந்துநதிக் கரைப் பகுதியே மாசுணி தேச மாகும். இம் மாசுணி தேசம் தற்காலத்தில் பாக்கிஸ்தானில் அடங்கிய சிந்து மாகாணத்தில் உள்ளதோர் ஊராகும்.

இராசேந்திரனின் நண்பனான போசராசனும் சிந்து நாட் டில் முஸ்லிம்களை வென்றான் என்ற செய்தியினைக் 'கூர்ச்சர சாம்ராச்சியம்' (கே. எம். முன்ஷி) என்னும் நூலிலிருந்தும் 'பரமார சரித்திரம்' என்னும் நூலிலிருந்தும் அறிகிறோம்.

ஒட்டக்கூத்தரால் இயற்றப்பெற்ற 'மூவருலா' வரலாற்றுத் தொடர்பான செய்திகளைக் கூறும் நூல் என்பது யாவரு மறிந்த உண்மை யாகும். அவர்தம் 'இராசராச சோழனுலா' என்னும் நூலில்,

> 'கங்கையு நன்மதையுங் கௌதமியுங் காவிரியும்
> மங்கையுட னாடு மரபினோன்'
>
> (இருபத்திரண்டாம் கண்ணி)

என்ற பகுதிக்குப் பாட பேதமாகக் 'கங்கையும் சிந்துவு' மெனக் குறிக்கப் பெற்றிருத்தலின் இவன் சிந்துப் பகுதியினை வென்றிருத்தல் வேண்டு மென்று கருதலாம்.

[1] தென்னிந்திய கோயிற் சாசனங்கள்-பாகம்-2

இராசேந்திரன் சிந்துப் பகுதியை வென்றதால்தான் கங்கை, சிந்து, காவிரி, நருமதை ஆகிய புனித நதிகளில் நீராடினுன் என ஒட்டக்கூத்தர் குறிப்பிடுகின்ருர்.

போசராசனும் காங்கேயனும் இராசேந்திரனது சோழப் படையுடன் இணைந்து போரிட்டதாகக் கி.பி. 1028 ஆம் ஆண்டு செயசிங்கனது குலேனூர்க் கல்வெட்டு உணர்த்துகின்றது.[1]

சாந்தல மன்னனுன வித்தியாதரனுக்கு ஆதரவாக இராசேந்திர சோழன் படை, போசராசன் படை, காங்கேயன் படை முதலியன வடநாட்டில் கஜினி முகம்மதுவிற்கு எதிராகப் போரிட்டன என்ற செய்தியும் கல்வெட்டா லறியப்படுகின்றது.

தென்னிந்திய வரலாற்று மேதை திரு. கெ. கெ. பிள்ளை யவர் களும் 'அவனுக்கு (இராசேந்திரனுக்கு)ப் போசராசன் நட்பும், சேதிநாட்டு காளசூரி மன்னன் காங்கேய விக்கிரமாதித்தன் நட்பும் கிடைத்தன. அவர்களுடன் கூட்டுறவு பூண்டு இராசேந்திர சோழனும் வித்தியாதரனுக்கு உதவ விரைந் தான்'[2] எனத் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

முதலாம் இராசேந்திரனின் மகனுன முதலாம் இராசாதி ராசனுடைய 'திங்க ளேர்தரு' எனத் தொடங்கும் மெய்க் கீர்த்தியில்,

> 'வில்லவர் மீனவர் வேள்குலச் சாளுக்கியர்
> வல்லவர் கௌசலர் வங்கணர் கொங்கணர்
> சிந்துர ரையணர் சிங்களர் பங்களர்
> அந்திரர் முதலிய வரைசரிடு திறைகளும்'

என்று குறிக்கப் பெற்றுள்ளது.

இம்மெய்க் கீர்த்தியினைக் கொண்டு இவன் மேற்கூறிய வேந்தர்களிடமிருந்து திரையினைப் பெற்றுக்கொண்டான் என்பதைத் தான் அறிய முடிகின்றது. அம்மன்னர்களை இவன் வென்றதாகச் சான்று யாண்டு மில்லை.

இவன் தனியாட்சி செலுத்திய நாளிலிருந்தே இச்செய்தி இவனது மெய்க்கீர்த்தியில் குறிக்கப் பெற்றிருத்தலின், மேற் கூறிய வேந்தர்க ளனைவரும் இவன் தந்தையின் ஆட்சிக் காலத் திலேயே சோழர் மேலாதிக்கத்தினை ஏற்றுக்கொண்டிருத்தல் வேண்டும்.

[1] சோழமன்னன், காங்கேயன், போஜராஜன் ஆகியவர்களுடைய யானைப் படையைச் சாளுக்கியப் படைத் தலைவனுகிய குந்திகன் வென்ருன்.

[2] தமிழக வரலாறு, மக்களும் பண்பாடும்-பக்கம்–270, வரிகள்–3-7.

இராசாதிராசனுக்குத் திறை செலுத்திய நாடுகளுள் சிந்துவும் குறிக்கப் பெற்றிருத்தலினாலும், சிந்துப் பகுதியினை இவன் வென்றதாகச் சான்றுகள் இன்மையினாலும், இராசேந்திரன் தன் ஆட்சிக் காலத்தில் வென்ற மாசுணி தேசத்தினையே இவன் மெய்க்கீர்த்தி 'சிந்துரரையணர்' எனக் குறிக்கின்றது என்பதனை அறியலாம்.

திரு. டி. என். சுப்பிரமணியன் அவர்களும் 'இராசேந்திரன் வென்றதாகக் குறிப்பிட்டுள்ள மாசுணி தேசம் சிந்துப் பிரதேசமே எனக் கொள்ள இட முண்டு'[1] என்று குறிப்பிட்டுள்ளார்.

மேற்கூறிய சான்றுகளை நன்கு ஆய்ந்து பார்க்குங்கால் முதல் இராசேந்திரன் சிந்துநதிப் பகுதியினை வென்றிருத்தல் வேண்டுமெனத் துணிந்து கூறுதல் தவறாகாது.

*இராசேந்திரனும் முகமது கஜினியின் படையெடுப்பும்*

இராசேந்திர சோழன் தனது புதிய தலைநகரைக் கங்கை நீரினைக் கொண்டு தூய்மை செய்தல் வேண்டி, வடநாட்டின் மீது படையெடுத்தான் என்று இவனது படையெழுச்சியின் நோக்கத்தினைத் தெளிவாகத் திருவாலங்காட்டுச் செப்பேடு செப்புகிற தென்பதனை முன்பே கண்டோம்.

'காக்கை உட்காரப் பனம்பழம் விழுந்தது' எனும் பழமொழியினைப் போன்று இராசேந்திரனது படை வட நாடு சென்ற போழ்து ஆங்கு, முகமது கஜினியின் படையெழுச்சியும் நிகழ்வுற்றது. அப்பொழுது வட வேந்தர்கள் பல இன்னல்கட்குட்பட்டனர். வட நாடு கஜினியின் படையெடுப்பின் கொடுமையை அனுபவித்தது.

இக்காலை பரமார மன்னனான போசராசனும், சேதி நாட்டுக் காளச்சூரி மன்னனான காங்கேய விக்கிரமாதித்தனும், சாந்தல மன்னனான வித்தியாதரனும் இராசேந்திரனது படையுடன் கூட்டுச்சேர்ந்து முகமது கஜினியை எதிர்த்துப் போரிடும் பணியில் ஈடுபட்டனர். இந்நிகழ்ச்சி பற்றிய செய்திகளைத் திரு. டி. என். சுப்பிரமணியன் அவர்கள் 'தென்னாட்டுக் கோயில் சாசனங்கள்' எனும் நூலின்கண் விரிவாகக் கூறியுள்ளார்.

திரு. கெ. கெ. பிள்ளை யவர்களும் 'இராசேந்திரனின் வட நாட்டுத் திக்குவிசயத்தின்போது ஏற்பட்ட நிகழ்ச்சிகளைக்

[1] தென்னிந்திய கோயிற் சாசனங்கள்-பகுதி–III. பாகம்-2

கோவைப்பட இணைத்து நோக்கும்போது, போச ராசன், காங் கேயன், மற்றும் பல மன்னர்களுடன் கூடிக் கஜினி முகமதுவுடன் போரிட்டு, அவன் தொல்லையை ஒழித்துக் கட்டுவதற்காகவே அவனுடைய வடநாட்டு நண்பர்களின் வேண்டுகோளின்படி அவன் வட நாட்டுக்குப் படை திரட்டிச் சென்றான் என்று கருதத் தோன்றுகிறது[1] என்று குறிப்பிடுவதனாலும் இராசேந்திர னது படை முஸ்லிம் மன்னனான கஜினி முகமதுவைத் (Muhamad of Gazni) தோற்கடிப்பதில் பெரும்பங்கு வகித் திருக்க வேண்டு மென்பது பெறப்படுகின்றது.

இந்நிகழ்ச்சியினால் இராசேந்திரனது வடநாட்டுப் படை யெழுச்சி பல வகையில் முக்கியத்துவமும் சிறப்பும் கொண்ட நிகழ்ச்சியாகக் கருதப்படுவதில் வியப் பொன்று மில்லை.

ஈண்டு நாம் இராசேந்திரனது படை எங்ஙனம் வடநாட்டு வேந்தர்களுடன் கூட்டுச் சேர்ந்து, கஜினி முகமதுவிற் கெதி ராகப் போரிட்ட தென்பதனை விரிவாகக் காணலாம். முகமது கஜினி தாக்கிக் கொள்ளையிட்ட வட மதுரையை, இராசேந்திர னும் வெற்றி கொண்டுளதால் இவ்விரு மன்னர்களின் போர் களுக் கிடையே ஒரு தொடர்பு காண விழைவதில் வழுவேது மில்லை.[2]

சோழர் படை, வட நாட்டுப் படையெழுச்சியை மேற் கொண்ட போது, அங்கு முகமது கஜினியின் படையெழுச்சி நிகழ்ந்து கொண்டிருந்தது. பொன்னாசை மிக்க கஜினி முகமது வட நாட்டின் பல பகுதிகளில் படையெடுத்தான்; நகரங்களை யும், கோயில்களையும் கொள்ளையிட்டுச் சூறையாடினான். கி.பி. 1018-1019இல் கஜினி மதுராவைத் தாக்கிக் கோயிற் சிலை களை யெல்லாம் உடைத்துக் கையில் அகப்பட்ட ஏராளமான பொன்னையும், பொருளையும் அள்ளிக்கொண்டு சென்றான்.

பின்பு கஜினி கன்னோசியின்மீது படை யெடுத்தான். கூர்ச் சரப் பிராதிகார மன்னனான இராச்சியபாலன் கஜினியின் வருகையைக் கேள்விப்பட்டவுடன் தன் தலைநகரைவிட்டு ஓட் டம் பிடித்தான். கஜினி, தலைநகரில் நுழைந்தபோது வேந் தனைக் காண வில்லை. கஜினியின் படைவீரர்கள் தலைநகரைத் தரைமட்ட மாக்கினர். அளவிறந்த கொள்ளைப் பொருள்களைக்

[1] தமிழக வரலாறு-மக்களும் பண்பாடும். பக்கம்-260. வரிகள்-34-38; பக்கம் 261. வரிகள் 1-2.

[2] தமிழக வரலாறு-மக்களும் பண்பாடும். பக்கம்-260. வரிகள்-32-33.

கஜினி அள்ளிக்கொண்டு சென்ருன். இவ்விதம் கோழைத்தன மாக நடந்து கொண்ட இராச்சியபாலரைப் பழிவாங்க அண்டை அரசுகள் தீர்மானித்தன. காஞ்சார நகரினைத் தலைநகராகக் கொண்ட சாந்தல மன்னனுன வித்தியாதரன் இக்கூட்டிணைவுப் படைகளுக்குத் தலைமை வகித்தான். இராச்சியபாலன் கொல் லப் பட்டான். அவன் மகன் திரிலோசனபால் மன்னனுக்கப் பட்டான். இதனைக் கேள்விப்பட்ட கஜினி கடுஞ்சினங் கொண் டான். வித்தியாதரன்மீது போர் மேற்கொண்டான். எனவே, கி.பி. 1021-1022இல் கலஞ்சார நகரத்தினை முற்றுகையிட் டான். இத்தருணத்தில் பரமார மன்னனுன போசராசனும், சேதி நாட்டுக் கலச்சூரி மன்னனுன காங்கேய விக்கிரமாதித்த னும், வித்தியாதரனுக்குத் துணை நின்று முகம்மது கஜினியின் படையினை எதிர்த்துப் போரிட்டனர். இராசேந்திரனது பெரும் படையும் இக்கூட்டிணைவுப் படைகளுக்கு உதவி புரிந்திருத்தல் கூடும். இப்பெரும் படையின் தாக்குதலைக் கண்ட முகம்மது கஜினி பெருவியப்பில் ஆழ்ந்தான். இப்போரின் மூலம் முகம்மது கஜினியால் வித்தியாதரனைத் தண்டிக்க இயல வில்லை. இப் போரில் இரு திறத்தாரில் எவரும் வெற்றி பெற வில்லை. பலத்த எதிர்ப்பினைக் கண்ட முகம்மது கஜினி கங்கைக் கரை நோக்கித் தன் படையைச் செலுத்தாமல் கூர்ச்சர நாட்டின்மீது படை யெடுத்துச் சோமநாதபுரக் கோயிலைக் கொள்ளையடித்தான். முகம்மது கஜினி கலஞ்சார நகரத்தினின்றும் திரும்பிச் சென்ற அதே சமயத்தில்தான் இராசேந்திரனின் படைகளும் கங்கை நோக்கிச் சென்றன என்பது ஈண்டுக் குறிப்பிடத் தக்க தாகும்.

உதயப்பூர் பிரசஸ்தியின் மூலம் போசராசனும், காங்கேய னும், முஸ்லிம்களுக் கெதிராகப் போர் நிகழ்த்தினர் என்று அறிய முடிகின்றது. ‘முகமதியர்களை இந்தியாவிலிருந்து துரத்து வதைத் தருமமாகப் புனித கைங்கரியமாக இந்துஸ்தான் மன் னர்கள் அப்போது கருதினுர்கள். அவ்வாறே உச்சயினி, குவாலி யர், காலஞ்சார், கன்னேசி, தில்லி, அஜ்மீர் மன்னர்கள் ஒன்று சேர்ந்து தங்கள் படையைத் திரட்டிப் பஞ்சாபை நோக்கி முன் னேறினுர்கள்’ என்று திரு. பெரிஷ்தா குறிப்பிட்டுள்ளார். அக் காலை உச்சயினி மாளவ நாட்டின் தலைநகராய் விளங்கிற்று. எனவே, மாளவ நாட்டின் மன்னனுன போசனும், கஜினி முக மதுவுக்கு எதிராகப் போர் செய்தான். இவனுடன் இராசேந்திர னது படையும் முஸ்லீம் படையெடுப்பாளனுக் கெதிராகப் போரிட்டிருத்தல் வேண்டும்.

இராசேந்திர சோழனது படை வென்ற நாடுகளைப் போச ராசனும், காங்கேய விக்கிரமாதித்தனும் வென்றதாகக் கூறிக்

கொள்கின்றனர். போசராசனின் மேலாண்மை 'கௌட' நாட்டிலும் 'தட்சிண பாதத்திலும்' நிலை நாட்டப்பெற்ற தென்று திரு. மேருதுங்கா குறிப்பிடுவதனாலும், இந்திரரதன் இராசேந்திரனுக்கும், போச ராசனுக்கும் மாற்றான் என்று குறிப்பிடப் பெற்றிருத்தலானும், காங்கேய விக்கிரமாதித்தன் அங்க நாட்டினை வென்றதாகக் குறிப்பிட்டுள்ளதாலும், இராசேந்திரனுடைய படைகள் முயங்கிப் போரில் வெற்றி பெற்று இரட்டபாடியைக் கைப்பற்றிய போது, போசராசன் கொங்கணப் பகுதியை வென்று, வெற்றி விழாக் கொண்டாடினான் என்பதைப் போசனின் பனீஸ்வார, பெத்மா செப்பேடுகள் குறிப்பிடுவதனாலும், முதலாம் இராசேந்திரனின் கங்கைப் படையெழுச்சியின்போது காங்கேயன், போசன் போன்ற வட இந்திய இந்து மன்னர்கள் படை யுதவி யளித்திருத்தல் வேண்டு மென்றும், இவர்களின் கூட்டிணைவுப் படை வட இந்தியாவில் நிகழ்ந்த முஸ்லீம் படையெழுச்சிக்கு எதிராக வித்தியாதரனுடன் போரிட்டிருக்க வேண்டும் என்பதையும் குறிப்பால் உணர்த்துவதாகக் கொள்ளுதல் தவறில்லை.

மேற்கூறியவற்றால் போசனும், காங்கேயனும் இராசேந்திரனின் படையுடன் நட்புக் கொண்டிருத்தல் வேண்டும் என்பது விளங்கும். போச ராசன் சிந்துப் பகுதியை வென்றதாகக் குறிப்பிட்டுள்ளதால் இராசேந்திரன் வென்ற மாசுணி தேச மென்பது சிந்துப் பகுதியா யிருத்தல் வேண்டு மென்ற டி.என் சுப்பிரமணியன் அவர்களது கருத்து வலிவுடைய தாகிறது. வேறு சான்றுகள் கிடைக்கின்ற வரையில் இக்கருத்தினை நாம் ஏற்றுக் கொள்ளலாம்.

அடுத்துச் சோழப்படை ஒட்டர நாட்டையும் தென் கோசல நாட்டையும் கடந்து செல்ல வேண்டிய தாயிற்று. ஒட்டர நாடு காடுகள் செறிந்த பகுதி யாகும். அப்பொழுது ஒட்டர நாட்டையும், தென் கோசல நாட்டையும் இந்திரரதன் என்னும் மன்னன் ஆட்சி செய்து வந்தான். அவன் சோழ வமிச மன்னருள் ஒருவனாகக் கருதப்படுகிறான். ஒட்டர நாடு ஒட்ட விஷயம் எனவும் அழைக்கப் பெற்றது. ஒட்ட விஷயம் தற்காலத்தில் ஒரிஸ்ஸா மாநிலமென அழைக்கப் பெறுகின்றது.

உதயபுரக் கல்வெட்டில் தாரா நகரத்திலிருந்த போச ராசனின் பகைஞனெனக் குறிக்கப்பெற்றுள்ள இந்திரரதன் என்னும் மன்னன் இவனாகத்தான் இருத்தல் வேண்டுமென (Dr Kielborn) டாக்டர் கெல்பர்ன் குறிப்பிடுவது பொருத்தமாகத் தோன்றுகிறது.

கோசல நாடென்பது மகா நதியின் கரையோரத்தில் அமைந்திருந்தது.

சோழப் படையும் இந்திரரதனின் படையும் ஆதி நகர் என்னு மிடத்திலுள்ள போர்க் களத்தில் சந்தித்துப் போர் நிகழ்த்தின. இப்போரில் சோழப் படை வியத்தகு வெற்றியினைப் பெற்று ஒட்டர நாட்டையும், தென் கோசல நாட்டையும்[1] பிடித்துக் கொண்டது. சோழப் படை ஒட்டர தேசத்து மன்னனைக் கொன்று, அவன் தம்பியிடம் பன் மணிக் குவியலைத் திறை கொண்டது என்பதனைத் திருவாலங்காட்டுச் செப்பேடுகள் செப்புகின்றன.

பின்பு, சோழப் படை சொர்ணரேகை யாற்றின் கரையிலுள்ள தண்டபுத்தியின்மீதுதன் கவனத்தைச் செலுத்தியது. இது வங்காள மாநிலத்தில் மிதுனபுரி மாவட்டத்தின் தென் பகுதியிலும் தென்மேற்குப் பகுதியிலும் அமைந்துள்ள நாடாகும்.[2] இப்பகுதியினைத் தன்மபாலன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். சோழப் படை வீரர்கள் தன்மபாலனின் பெரும்படையைப் புறமுதுகிட்டோடச் செய்தனர். சோழ வீரர்கள் நீண்ட இடைவிடாத போர்களின் விளைவாகக் களைப்புற்ற போதிலும் கங்கைக் கரையை நெருங்கிவிட்டோம் என்ற பேரார்வத்தால் புத்துணர்ச்சியும், உற்சாகமும் பெற்றுத் தங்கள் புனிதப் பயணத்தைத் தொடங்கினர்.

தண்டபுத்தியை வென்ற களிப்பில், சோழ மறவர்கள் கங்கைப் பேராற்றின் தென் கரையி லமைந்துள்ள தக்கணலாடம் என்னும் பகுதியின்மீது படையைச் செலுத்தினர். தக்கணலாடத்தின் மன்னனான இரணசூரன் சோழப் படையினை எதிர்த்துப் போர் புரிந்து தோல்வியைத் தழுவினான்.

சோழ வீரர்கள் வெற்றிச் செருக்கினாலும், எல்லை யற்ற மகிழ்ச்சியினாலும், பேராரவாரம் செய்து கொண்டு வங்கத்தின் மீது படை யெடுத்தனர். வங்க வேந்தனாகிய கோவிந்த சந்தனும் தன் படையுடன் சோழப் படையை எதிர்த்து அயராது போரிட்ட போதிலும் தோல்வியால் துவண்டான்.

[1] இராசேந்திரன் பூர்வ தேசத்தை வென்றதாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன. அப்பூர்வதேசம் தென் கோசல நாட்டைடைச் சேர்ந்ததாக ஆராய்ச்சியறிஞர் கருதுகின்றனர்.

[2] Ep. Ind. Vol. XXII, PP. 153 and 154.

இவ்விதம் தனக்குக்கீழ் ஆட்சி புரிந்த குறுநில மன்னர்கள் பலரும் தோல்வியைத் தழுவிய செய்தி உத்தரலாட வேந்தனாகிய மகிபாலனின் காதுகளுக் கெட்டியது. மகிபாலனே, சீற்றம் மிகக் கொண்டான்; சிதறிக் கிடந்த வீரப் படையைத் திரட்டினான்; சோழப் படையை வெல்ல வேண்டும் அல்லது போரில் மடிய வேண்டு மென்று உறுதி யெடுத்துக் கொண்டான்.

இரு திறத்தாருக்கும் கடும்போர் நிகழ்ந்தது. வங்கச் சிங்கமான மகிபாலன் போர்க் களத்தில் முன்னணியில் நின்று வீரப் போர் புரிந்தான்; வங்க வீரர்களும், வெஞ்சினம் கொண்டு வீரம் பொங்கப் போரிட்டனர்; சோழ மறவர்களும் சோர்வடையாது போரிட்டனர்; போர் மும்முரமாக நடைபெற்றது; வீரர் பலர் கையிழந்து,காலிழந்து குருதி யாற்றில் மிதந்தனர்; சோழர் படை சிறிது சோர்வுற்றது; தானைத் தலைவனே, வீர மொழி கூறி மறப் படையை ஊக்கினான்; சோழ மறவர் ஊக்கம் கொண்டனர்; மீண்டும் புத்துயிர் பெற்றனர்; சோழ மறவர்கள் வெற்றி அல்லது வீர மரணம் என்ற இறுதி முடிவுடன் போரிட்டனர்; பகைவர்களைக் கொன்று குவித்தனர்; தம் வாள் வலியும், தோள் வலியும் விளங்கப் போரிட்டனர். வங்கப் படை பின்வாங்கத் தொடங்கிற்று; சோழப் படை வங்க வீரர்களைக் கடுமையாகத் தாக்கியவாறு முன்னேறிற்று; சோழச் சேனை ஆரவாரித்தது; உள்ளங் கிளர்ந்தெழுந்து ஊக்கத்துடன் தாக்கிற்று; செருக்களம் செங்கள மாயிற்று; கங்கை நீரைக் காண விழைந்த வீரர் செந்நீரைக் கண்டனர். தாக்குதலைத் தாங்க மாட்டாது வங்க வீரர்கள் நிலை குலைந்தனர்; குன்று முட்டிய குருவிபோல் வீறு குன்றி ஓடினர். மகிபாலனும் போர்க் களத்தைவிட்டு ஓடிவிட்டான். சோழப் படை வெற்றிப் படை யாயிற்று. சோழர் தானைத் தலைவன், மகிபாலனின் யானைகளையும், பெண்டிர் பண்டாரங்களையும் பற்றிக்கொண்டான். எங்கணும் ஆரவாரம்; எங்கணும் வீர முழக்கம். சோழ மறவர்கள் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினர்.

பல குடங்களில் கங்கை நீரினை நிரப்பினர்; தோல்வி யுற்ற வேந்தர்களின் தலைகளில் குடங்களை வைத்தனர்; தோல்வி பெற்ற வேந்தர்கள் கங்கை நீர் நிரம்பிய குடங்களுடன் நடந்தனர்;[1] பின்னால் கரிப்படையும். பரிப்படையும் வீரப் படையினரும் தொடர்ந்தனர்; எங்கணும் புலிக்கொடிகள் பட்டொளி வீசிப் பறந்தன. கங்கை நாட்டிலிருந்து காவிரி நாட்டிற்குப் பயணம் தொடங்கிற்று.

[1] Kanyakumari Inscription
T. A. S. Vol III. No. 34. verse-71.

இப்படை யெழுச்சியில் சோழர் படைத்தலைவன் வென்றடக்கிய வேந்தர்களின் பட்டியலை நிரல்படக் கூறுவதில் இராசேந்திரனது மெய்க்கீர்த்தியும் திருவாலங்காட்டுச் செப்பேடும் மாறுபடுகின்றன. திருவாலங்காட்டுச் செப்பேடு, சோழப் படை கங்கை சென்று திரும்பி வருகையில் உத்தரலாட வேந்தனாகிய மகிபாலனை வென்றதாகக் குறிக்கின்றது. இச்செப்பேடு கங்கைப் படையெழுச்சி முடிவுற்றுப் பல ஆண்டுகள் கழித்து வரையப் பெற்றதால் இக்கருத்தினை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டுவதில்லை. இப்படை யெழுச்சி நிகழ்ந்தபோது கங்கைப் பேராற்றில் நூற்றுக்கணக்கான போர் யானைகளை வரிசையாக நிறுத்திப் பாலமமைத்து, அதன்மீது தன் படைகளைச் செலுத்தி கங்கையைக் கடந்தான் என்று திருவாலங்காட்டுச் செப்பேடுகள் கூறுகின்றன.[1] இதனால், சோழர்களின் யானைப் படையின் எண்ணிக்கையினையும், வலிமையினையும் தெள்ளிதின் உணரலாம். கங்கை யாற்றின்கண் களிறுகள் நீருண்டன என்பதனைக் 'களிறு கங்கை நீருண்ண' என்று செயங்கொண்டான் குறிப்பிடுவதனாலும், 'கங்கை நதியிடை......மாகத' என்று வில்லிபுத்தூர் ஆழ்வார் குறிப்பிடுவதாலும் அறியலாம்.

தாரா நகரினைத் தலைநகராகக்கொண்டு ஆண்டு வந்த பரமார மன்னனான போசராசனும், சேதி நாட்டுத்திரிபுரி நகரத்திலிருந்து அரசு செலுத்திய காலசூரி வமிசத்தைச் சார்ந்த காங்கய விக்கிரமாதித்தனும், சாந்தல மன்னனான வித்தியாதரனும் சோழர்களிடம் நட்புக் கொண்டிருந்தனர். எனவேதான், சோழப் படை மேற்கூறிய நாட்டினர்மீது படை யெடுக்காமல் கங்கை நோக்கிச் சென்றது.

வடநாடு சென்று, வட வேந்தர்களைப் போரில் வென்று, சோழர் விரத்தினை ஆங்கு நிலைநாட்டிக் கங்கை நீரும், விநயகர் படிமமும் பெரும்பொருளும் கைக்கொண்டு வெற்றியுடன் திரும்பிய சோழர் படைத் தலைவனை, இராசேந்திர சோழன், கோதாவரியாற்றங் கரையில் கண்டு பெருமகிழ்ச்சி யுற்றான்;[2] அன்புடன் வரவேற்றான்.

இராசேந்திரன் தன் படைத் தலைவனிடமிருந்து, அருமந்த கங்கை நீரையும், பெரும்பொருளையும் பெற்றுக்கொண்டு படையுடன் சோழபுரம் நோக்கிப் புறப்பட்டான்.

[1] S. I. I. Vol. III. No. 205. Verse-112

[2] Ibid. Verses 118, 119 and 122

அவ்வாறு அவன் புறப்பட்ட காலை, வழியில் உள்ள கோயில்களை வணங்கி நிவந்தங்கள் அளித்தான் என்பதனைக் கல்வெட்டுகளினால்[1] அறிகிறோம்.

சோழப் படை கங்கையிலிருந்து தங்களது வெற்றியின் சின்னமாகக் கொணர்ந்த விநாயகர் படிமம் கும்பகோணத்தில் திருநாகேச்சுரரது கோயிலில் இறைவன் திருமுன்னர் வைக்கப்பெற்று இராசேந்திர சோழனால் பிரதிட்டை செய்யப் பெற்றது. இது கங்கை வெற்றியின் சின்னமாக நிலைநாட்டப் பட்டதால் கங்கை விநாயகர் என்று அழைக்கப் பெற்றது.

கங்கை விநாயகர் படிமம் அமைக்கப்பட்ட கல்லும் சிற்பத் திறனும் தமிழ் நாட்டினின்றும் வேறுபட்டிருத்தலின் இது வட நாட்டினின்றும் வெற்றிச் சின்னமாகக் கொண்டு வரப்பட்டது என்பது புலனாகும். பெருவெற்றி பெற்ற பெருமன்னர் தமது வெற்றியின் சின்னமாகக் கடவுட் படிமங்களையும், விநோதமான பொருள்களையும் கவர்ந்து வருதல் பண்டைய மர பாகும்.

கங்கை நீரைக் கொணர்ந்து, தனது புதிய தலைநகரைத் தூய்மை செய்து, மக்களை ஆங்குக் குடியேற்ற வேண்டுமென் பதற்காக இராசேந்திரன் கங்கைப் படையெழுச்சியினை மேற் கொண்டான் என்று திருவாலங்காட்டுச் செப்பேடு குறிப்பிடுவ தாக முன்பே கண்டோம்.

இப்படை யெழுச்சி வெறும் தீர்த்த யாத்திரை மட்டு மன்று; இஃது ஒரு திக்கு விசயமு மாகும். சோழ அரசின் பெருமையினை யும், தமிழ் அரசின் வலிமையினையும், தென்னாட்டின் வெற்றி யினையும் வட வாரிய மன்னர்கட்கு உணர்த்திய இம்மாபெரும் படையெழுச்சி தமிழக வரலாற்றில் மட்டு மன்றி, இந்திய வர லாற்றிலும் ஒரு குறிப்பிடத் தக்க வீர அத்தியாய மாகும்.

இராசேந்திரன் வட நாட்டுப் படையெழுச்சி, சமுத்திர குப்தனின் தென்னிந்தியப் படை யெழுச்சியுடனும், அலாவுதீன் கில்ஜியின் (Alaudin khilji) தென்னிந்தியப் படையெழுச்சியுட னும் கரிகாற் பெருவளத்தானின் இமயப் படையெழுச்சி யுடனும், சேரன் செங்குட்டுவனின் வடநாட்டுப் படையெழுச்சி யுடனும் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் வடநாட்டுப்

[1] Annual Report on South Indian Epistaphy For the year ending 31st March 1932, Para-13

படையெழுச்சியுடனும் ஒப்புமை நோக்கத் தக்க வரலாற்றுச் சிறப்புக் கொண்ட படையெழுச்சி யாகும்.

சமுத்திர குப்தன், கரிகாலன், செங்குட்டுவன், நெடுஞ் சேரலாதன் போன்ற பெருமன்னர்களைப் போல் இராசேந்திர னும் பிற நாடுகளை வென்று தன்னடிப் படுத்தித் தன்னாட்டுடன் இணைத்து ஆள வேண்டுமென எண்ணாது, தன் வீரத்தினையும், வெற்றியினையும் எட்டுத் திக்கிலும் நிலைநாட்ட வேண்டி வட நாட்டுப் படையெழுச்சியினை மேற்கொண்டான் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.

இராட்டிரகூடப் பெருமன்னர்களான துருவா, மூன்றும் கோவிந்தன், மூன்றும் இந்திரா போன்றோரும் வடநாட்டுப் படையெழுச்சியினை மேற்கொண்டு வெற்றி பெற்றனர். இருப்பி னும் இவற்றைவிட இராசேந்திரனின் வடநாட்டுப் படை யெழுச்சியே வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த தாகும்.

**விளைவுகள்**

இராசேந்திரனின் கங்கைப் படையெழுச்சியின் பயனாகத் தமிழர் நாகரிகம் வங்க மாநிலத்தில் பரவியது. (இங்ஙனம் 'திராவிடர் மொழியில் ஆரியப் படுத்தப்பட்ட போது, ஆரியர் நாகரிகப் பண்பாட்டில் திராவிடப் படுத்தப் பெற்றனர்' என்று கில்பெட்டுச் சிலேட்டர் குறிப்பிட்டுள்ளது. இஃது இராசேந்திர னது காலத்திற்கும் பொருந்தும் என்பதனை நாம் ஈண்டு உணர லாம்.)

இப்படை யெழுச்சியில் ஈடுபட்ட படைத்தலைவருள் ஒருவன் (கருநாடகன்) மேற்கு வங்கத்தில் தங்கிவிட்டான். அவன் வழியில் வந்த சாமந்த சேனன் என்பவனே கி.பி. 1050 இல் வங்கச்சேன மரபினைத் தோற்றுவித்தான் என்று அறிஞர் ஆர்.டி. பானர்ஜி குறிப்பிடுகின்றார்.[1] பாலர்களின் வீழ்ச்சிக்குப்பின் சேன மரபினை ஏற்படுத்திய சாமந்த சேனன் கி. பி. 1050 முதல் கி.பி. 1075 முடிய அரசாண்டு வந்தான்.

மிதிலையை யாண்ட கருநாடகரும் இங்ஙனம் சென்ற தென் னாட்டவரே யென்பது அறிஞர்கள் கருத் தாகும்.

கங்கைக்கரை நாடுகளில் வாழ்ந்து வந்த சிவ பிராமணர் பலரை இராசேந்திரன் அழைத்து வந்து சோழ நாட்டிலும்

[1] Palas of Bengal. PP. 73 and 79.

காஞ்சி மா நகரிலும் குடியேற்றினுன் என்று திரிலோசன சிவா சாரியாரது சித்தாந்த சாராவளியின் உரையில் குறிக்கப் பெற்றிருத்தலால் அறியலாம்.[1]

இப்படை யெழுச்சியால் தமிழகத்தில் நிலவிய சைவம், இந்தியாவின் வேறு பகுதிகளில் நிலவிய சைவத்துடன் தொடர்பு கொண்டது.

தென்னிந்தியாவின் மாபெரும் வெற்றி வீரனுன முதலாம் இராசேந்திர சோழனின் படையெழுச்சி வங்கத்தில் நிரந்தர மான அடையாளங்களை விட்டுச் சென்றதாக, 'வங்கப் பாலர் கள்' என்ற நூலில் திரு. ஆர். டி. பானர்ஜி அவர்கள் குறிப்பிடு கின்ருர்.

இப்படை யெழுச்சியின் விளைவால் சோழ மன்னரின் வீரம் வடநாட்டில் பரவியது. இந்தியா முழுவதும் தன் புகழ் பரப்பிய இராசேந்திரன் இந்திய வெற்றி வீரர்களுள் ஒருவனுகப் போற்றத் தகும் நிலையினை எய்தினுன்.

இவ் வியத்தகு வெற்றியின் விளைவாக முதலாம் இராசேந் திரன் கங்கை கொண்ட சோழ னென்னும் விருதினைப் பெற்ருன். அவன் அமைத்த புதிய நகரமும் கங்கை கொண்ட சோழபுர மெனப் பெற்றது. அவன் அமைத்த புதிய கோயிலும் கங்கை கொண்ட சோழேச்சுரம் எனப் பெயர் பெற்றது. இவ் வெற்றி யின் சின்னமாகத்தான் சோழ கங்க மென்னும் பேரேரி வெட்டப் பெற்ற தென்பதை 'நீர்மயமான வெற்றித்தூண்' ('ஜலமயமான சயத் தம்பம்')[2] எனத் திருவாலங்காட்டுச் செப்பேடு குறிப் பிடுவதால் அறியலாம்.

வரலாற்றறிஞர் திரு. வெங்கையா அவர்கள் இப்படை யெழுச்சியினை மிகவும் குறைத்து மதிப்பிடுகின்ருர்.[3] இருப்பினும் இப்படையெழுச்சி வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது; நிரந் தரமான விளைவுகளைக் கொண்டது. இதனைப் பற்றிச் சிறிது ஆய்வோம்.

இராசேந்திரன் தனது ஆட்சிக் காலத்தில் தன் மகனுன மும்முடிச் சோழனைச் சேர, பாண்டிய நாடுகளின் அரசப் பிரதி

[1] 'The Cholas'. Vol. I. P. 254 ; S I. I. III. Introduction. P. 22
[2] Ibid-V. 124
[3] A. S I. 1911-12. PP. 173-74.

நிதியாக நியமித்து மதுரை மாநகரின்கண் வீற்றிருந்து ஆட்சி புரியத் தக்க ஏற்பாடுகளைச் செய்திருந்தான் என்பதனை நாம் முன்பே கண்டோம்.

இதனைப் போன்றே தன் ஆண் மக்கள் பிறரையும் கங்கைக் கரைப் பகுதிகளில் அரசப் பிரதிநிதிகளாக நியமித்து நல்லாட்சி புரிய வகை செய்தான் என்பதனை முதலாம் இராசாதிராசன், இரண்டாம் இராசேந்திரன் ஆகியோரின் மெய்க்கீர்த்திப் பகுதியாலறியலாம்.

முதலாம் இராசேந்திரனின் ஆட்சிக் காலத்தின் ஏழாம் ஆண்டில் (கி. பி. 1018) முடி சூட்டப்பெற்ற அவன் மகனான முதலாம் இராசாதி ராசனின் மெய்க்கீர்த்தியில்,

'திங்களேர் தருதன் றெங்கல்வெண் குடைக்கீழ்
நிலமக ளிலவ மலர்மகட் புணர்ந்து
செங்கோ லோச்சிக் கருங்கலி கடிந்து
தன்சி றியதா தையுந்திருத் தமையனுங்
குறிகொ டன்னிளங் கோக்கிளையு நெறியுணர்
தன்றிருப் புதல்வர் தம்மையுந் துன்றெழில்
வானவன் வில்லவன் மீனவன் கங்க
னிலங்கையர்க் கிறைவன் பொலங்கழற் பல்லவன்
கன்னகுச் சியர்கா வலனெனப் பொன்னணி
சுடர்மணி மகுடஞ் சூட்டிப் படர்புக
ழாங்கவர்க் கவர்நா டருளிப் பாங்குற'

என்று குறிக்கப் பெற்றுள்ளது. இதனால், இவனது ஆட்சியின் தொடக்க காலத்திலேயே கன்யா குப்சம், இலங்கை, கங்கநாடு, சேரநாடு, பாண்டியநாடு ஆகிய நாடுகளுக்கு அரசப் பிரதிநிதிகளை அனுப்பி ஆட்சி புரியச் செய்தனன் என்பது விளங்குகின்றது. மேற்கூறிய மெய்கீர்த்தி இவனது இருபத்தேழாம் ஆட்சி யாண்டிலிருந்துதான் காணப்பெறுகின்றது.

முதலாம் இராசாதி ராசனின் தம்பியான இரண்டாம் இராசேந்திரனது மணிமங்கலத்தில் கிடைக்கப்பெறும் நான்காமாண்டுக் கல்வெட்டில் உள்ள மெய்க்கீர்த்தியிலும் இவன் அரசகுமாரர்களை நாட்டின் பல பகுதிகளில் அரசப் பிரதிநிதிகளாக அமர்த்தியமை தெளிவாகக் குறிக்கப் பெற்றுள்ளது.

## இரண்டாம் இராசேந்திர சோழன்

'திருமாது புவியெனும் பெருமாத ரிவர்தன்
மாதே வியர்க ளாக மீதொளிர்
வெண்குடை யுயர்த்துத் திண்கலி பெயர்த்துத்தன்
சிறிய தாதை யாகிய வெறுழ்வலிக்
கங்கை கொண்ட சோழனைப் பொங்கிகல்
இருமுடிச் சோழ னென்றும் பெருமுரட்
டன்றிருத் தம்பியர் தம்முள் வென்றிகொள்
மும்முடிச் சோழனைத் தெம்முனை யடுதிறல்
சோழ பாண்டிய னென்றுங் கோழிமன்
றெடுகழல் வீர சோழனைப் படிபுகழ்
கரிகால சோழ னென்றும் பொருதொழில்
வாள்வலித் தடக்கை மதுராந் தகனைச்
சோழ கங்க னென்றுந் தோள்வலி
மேவிகல் பராந்தக தேவனைச் சோழ
வயோத்திய ராச னென்றும்,
இருதயத் தன்பொடு கருதுகா தலருள்
இத்தலம் புகழிரா சேந்திர சோழனை
உத்தம சோழ னென்றுந் தொத்தணி
முகையவி ழங்கலன் முடிகொண்ட சோழனை
இகல்விச யாலய னென்றும் புகர்முகத்
தேழயர் களிற்றுச் சோழகே ரளனை
வார்சிலைச் சோழ கேரள னென்றுந்
திண்டிறற் கடாரங் கொண்ட சோழனைத்
தினகரன் குலத்துச் சிறப்பமர் சோழ
சனக ராச னென்றுங் கனைகடற்
படிகொண்ட பல்புகழ் முடிகொண்ட சோழனைச்
சுந்தர சோழ னென்றுஞ் செந்தமிழ்ப்
பிடிகளிற் றிரட்ட பாடி கொண்ட
சோழனைத் தொல்புவி யாளுமைச் சோழ
கன்னகுச் சியரா சனென்றும் பின்னுந்தன்
காதலர் காதலர் தம்முள் மேதகு
கதிராங் கனைகழல் மதுராந் தகனை
வெல்படைச் சோழ வல்லப னென்றும்
மானச் சிலைக்கையோ ரானைச்சே வகனை
திருபேந் திரசோ ழனென்றும் படுமணிச்
சுடர்மணி மகுடஞ் சூட்டிப் படிமிசை.'

இரண்டாம் இராசேந்திரனுக்குப் பின்னர் அரியணை யேறிய அவனுடையதம்பி வீரராசேந்திரனின், 'திருவளர் திரள்புரத்து' எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தியில் தானும் அரச குமாரர் களை நாட்டின் பல்வேறு பகுதிகளில் அரசப் பிரதிநிதிகளாக நியமித்தான் என்பதனைக் குறித்துள்ளான்.

இவனது 'வீரமே துணையாகவும்' எனத் தொடங்கும் மெய்க் கீர்த்தியில் 'கம்பிலி சுட்டுக் கரடிக் கல்லில் செயத்தம்பம் நாட் டித் தேவ நாதன் முதல்சா மந்தரைச் சக்கரக் கோட்டத்துத் துரத்தி யவர்கள் உரியதாரம் பிடித்துக் கொண்டு கன்னக் குச்சி மீட்டு எல்லை கெடாது நிலையிட்டு' எனக் குறிப்பிடப் பட்டுள்ள வற்றுள் இவன் மீண்டும் கன்யாகுப்சத்தினைத் தனது ஆட்சி யின்கீழ்க் கொண்டு வந்தான் என்பது குறிப்பிடத் தக்க தாகும்.

இராசேந்திரனைத் தவிர மேற்கூறப்பட்ட மூவரும் வடநாடு சென்று வெற்றி பெற்றதாகச் சான்றுகள் யாதும் கிடைத்தில. இருப்பினும் அவர்கள் தங்களுடைய அரச குமாரர்களை வடநாட் டின் பகுதிகளுக்கு அரசப் பிரதிநிதிகளாக அனுப்பி யிருந்தனர் என்பது மட்டும் அவர்களின் மெய்கீர்த்திப் பகுதிகளால் தெளி வாகிறது. மேலும், இராசேந்திரனுக்குப் பின்னர் அரசுபட்ட மெய்திய முதலாம் இராசாதிராசனின் மெய்க்கீர்த்தியில் கங்கைக் கரை நாட்டு வேந்தர்களிடம் திறை பெற்றுக் கொண்டதாகக் குறிப்பிட்டுள்ளான். இராசேந்திரன் தனது ஆட்சிக் காலத்தில் வட நாட்டுப் படை யெடுப்பினை மேற்கொண்டதாகக் கல் வெட்டுச் சான்றுகள் கிடைக்கப் பெருமையின் இவனுக்குத் திறை செலுத்திய வட வேந்தர்களின் ஆட்சிப் பகுதிகள் அனைத்தும் நம் இராசேந்திரனது ஆட்சிக் காலத்திலேயே சோழரின் மேலாண்மையினை ஏற்றுக்கொண்டு திறை செலுத்தின எனக் கொள்வதே பொறுத்த முடையது. இராசாதிராசன் தனியரசு செலுத்தத் தொடங்கிய கால முதலே இச் செய்தி இவனது மெய்க்கீர்த்திப் பகுதியில் காணப்படுதலின், மேலும் இக்கருத்து வலிவு பெறுகின்றது.

மேற்கூறியவற்றை நாம் ஆய்ந்து பார்க்குங்கால் இராசேந் திரனது வடநாட்டுப் படையெழுச்சி நிரந்தரமான விளைவுகளை ஏற்படுத்திய தென்பதை அறுதியிட்டுக் கூறலாம். (முகமது பின் காசிம் உடைய சிந்துப் படையெழுச்சி போன்று (Arab Conquest of Sind) இது விளைவுக ளற்ற வெற்றி என்றோ, கிரேக்க மாவீரன் அலெக்சாந்தரின் இந்தியப் படையெழுச்சி போன்று

பனித்துளி போன்ற நிலை யற்ற வெற்றி என்றே கூறுதல் இயலாது. திரு. வெங்கையா அவர்கள் நம் இராசேந்திரனின் கங்கைப் படையெழுச்சியினை ஒரு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சியாக ஏற்றுக்கொள்ள மறுப்பது பொருத்த முடைத் தன்று. எனவேதான், தென்னிந்திய வரலாற்றிஞர் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி யவர்கள், 'வெங்கையா அவர் கள் இராசேந்திரனின் வெட்டெழுத்துச் செய்தியின் வாய்மை யினை மிகவும் குறைத்து மதிப்பிட்டு இராசேந்திரனின் கங்கைப் படையெடுப்பை வெறும்தீர்த்த யாத்திரையே தவிர வேறொன்று மில்லை எனக் கருதுகின்றார்' என்று 'சோழர்கள்' என்ற தமது புத்தகத்தில் குறிக்கின்றார்.

திரு. ஆர். டி. பானர்ஜி, திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி போன்ற வரலாற்றுப் பேரறிஞர்கள், பலரும் இராசேந்திரனது கங்கைப் படையெழுச்சியின் வரலாற்றுச் சிறப்பினை வலியுறுத்து கின்றனர். வடநாடு நோக்கிச் சென்ற சோழர் படைத் தலைவர் களுள் ஒருவன் மேல்வங்காளத்தில் தங்கிவிட்டான் என்பதா லும், அவனது வழி வந்தோனே சேன மரபினைத் தோற்றுவித் தான் என்பதாலும், இராசேந்திரனுக்குப் பின்னர் சோழப் பெரு நாட்டினை ஆண்டு வந்த முதலாம் இராசாதிராசனும், இரண் டாம் இராசேந்திரனும் தொடர்ந்து தங்கள் அரசப் பிரதிநிதி களைக் கங்கைக்கரை நாடுகளுக்கு அனுப்பி ஆட்சி புரியச் செய்த னர் என்று கல்வெட்டுச் செய்தி உணர்த்துவதாலும், வீரராசேந் திரன் கன்யா குப்சத்தை மீட்டான் எனக் கல்வெட்டுச் சான்று பகர்வதாலும் இராசேந்திரனது கங்கைப் படையெழுச்சி இந்திய வரலாற்றின்கண் நிலையான விளைவுகளைக் கொண்டது என்ப தனை நாம் அறுதியிட்டு உறுதியாகக் கூறலாம்.

தமிழ் வேந்தனுன இராசேந்திரன் வடநாட்டின்கண் தன் பேராண்மையையும், வாளாண்மையையும் வெளிப்படுத்திப் புகழ்க் கொடியினைப் பட்டொளி வீசிப் பறக்க விட்டானே யன்றி அமிழ்தினும் இனிய தமிழ் மொழியினை ஆங்குப் பரப்ப மறந்து விட்டான். அன்று, இவன் ஆங்கு நம் செந்தமிழ் மொழியினைப் பரப்பி யிருப்பானேயாகில் இன்றும் வட நாட்டின்கண் நம் தமிழ்மொழி பொன்றாது நின்று நிலவி, இந்தியத் துணைக் கண்டத் தின் ஒரே நாட்டு மொழியாக (Only National Language) சிறந்து விளங்கி இருக்கு மென்பதில் சிறிதளவும் ஐய மில்லை. 'குமரியொடு வட இமயத்து ஒருமொழி வைத்து உலகாண்ட சேரலாதற்கு' எனச் செஞ்சொற் காவியமாம் சிலப்பதிகாரத்தில் செந்தமிழ் வித்தகர் இளங்கோ அடிகள் கூறி யுள்ளவாறு குமரி முதல் இமயம்

வரை நம் தமிழன்னேயே அரசு கட்டிலில் வீற்றிருப்பாள். ஆனால், நம் வேந்தனோ, 'கங்கை கொண்டான்' என்ற விருதினை ஏற்றுக் கொண்டதோடு அமைதி பெற்றான். நம் இராசேந்திரனைப் போலவே ஆங்கிலேயர்களும் பிற நாட்டை வென்றதோடு அமைதி கொண்டிருப்பின் ஆங்கிலம் இன்று உலக மொழியாக வளர்ந்திருக்குமா? என்பதனையும் நாம் சிறிது எண்ணிப் பார்க்க வேண்டும்.

கங்கை சென்று வெற்றியுடன் திரும்பிய சோழர் படைத் தலைவனைக் கோதாவரி யாற்றங் கரையில் வரவேற்ற இராசேந்திர சோழன், தானே படை நடத்திச் சென்று, ஒட்டர நாட்டையும் கலிங்க நாட்டையும் வென்று, அவ்வேந்தர்களைக் கடுமையாகத் தண்டித்தான்.

பின்பு வேங்கி நிகழ்ச்சிகளில் தலையிட்டு இராசராச நரேந்திரனை வேங்கி நாட்டு மன்னனாக முடி சூட்டுவித்தான். இதனால், இராசராச நரேந்திரனின் நெடுநாளைய எண்ணம் நிறைவேறியது.

முதலாம் இராசேந்திரன் தன் மகளாகிய அம்மங்கா தேவியை இராசராச நரேந்திரனுக்குத் திருமணம் செய்து கொடுத்துக் கீழைச் சாளுக்கியரின் உறவினை வலுப்படுத்தினான். இராசராச நரேந்திரன் வேங்கி நாட்டை ஏறத்தாழ நாற்பத்தோராண்டுகள் ஆட்சி புரிந்தான். இவனது ஆட்சிக் காலத்தில் இவன் பல இன்னல்களுக்கு உள்ளானான். இராசராச நரேந்திரனின் தாயத்தானும் வேங்கி அரியணைக்குப் போட்டியிட்ட பகைவனுமான விசயாதித்தன், போரில் தோல்வியைத் தழுவிய போதிலும், வேங்கி நாட்டின் அரியணையிலமரும் வாய்ப்பினை நழுவ விட வில்லை.

மேலைச் சாளுக்கியரின் துணை வலிமையைப் பயன்படுத்தி எவ்விதத்திலும் இராசராச நரேந்திரனைக் கவிழ்க்கத் திட்டமிட்டான்; தனது எண்ணம் நிறைவேற விடாமுயற்சியுடன் செயல்பட்டான்.

> 'கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
> குத்தொக்க சீர்த்த விடத்து'[1]

என்னும் தெள்ளு தமிழ்ப் பாவலனும் வள்ளுவரின் வாய் மொழிக் கிணங்கத் தனக்கு ஏற்பட்ட அரிய வாய்ப்பினைப் பயன்

[1] திருக்குறள்–490

படுத்தி மேலைச் சாளுக்கியரின் துணைவலி பெற்ருன்; இராசராச நரேந்திரனை அரியணையினின்றும் கீழே இறக்கினுன்; அவனை நாட்டை விட்டுத் துரத்திவிட்டுத் தானே மன்னனுக முடி புனைந்து கொண்டான். இவன் கி. பி. 1031 ஆம் ஆண்டு சூன் திங்கள் இருபத்தேழாம் நாள் விஷ்ணுவர்த்தன விசயாதித்தன் என்ற சிறப்புப் பெயருடன் வேங்கி அரியணை யேறினுன். பதவி யிழந்த பரிதாபத்துக்குரிய நரேந்திரன் மறுபடியும் தன் மாமனுன இராசேந்திரனிடம் தனக்கு உதவி செய்யும்படி கேட்டுக் கொண்டான். இராசேந்திரனும் தன் மருமகன் ஆட்சியைக் கைப்பற்றும் பொருட்டுப் பெரும்படை யுதவினுன். சோழப் பெரும்படை இராசராச பிரம்ம மகாராசா என்ற பார்ப்பனப் படைத் தலைவனின்கீழ் சோணுட்டினின்றும் புறப்பட்டது. இப்படைத் தலைவனுக் குதவிபுரிய உத்தம சோழ மிலாடுடை யான், உத்தம சோழகோன் என்ற இரு படை யதிகாரிகளும் வேங்கி நோக்கிப் புறப்பட்டனர். வேங்கிக் கருகில் உள்ள களி திந்தி என்னு மிடத்தில் சோழப் படைக்கும் விசயாதித்தன் படைக்கும் கடும்போர் நிகழ்ந்தது. காற்றின் வேகமும், கனலின் வெம்மையும் தோற்ருேடும் வகையில் இருதிறத்தாரும் அம்பு மாரி பொழிந்தனர்; எங்கணும் ஒரே ஆரவாரம். முன்னணி யில் நின்று முழுமூச்சுடன் போரிட்ட சோழப் படைத் தலைவனுன இராசராச பிரம்ம மகாராசர் மாற்ருனின் வேலால் குத்தப் பட்டிறந்தான். பின்னர், உத்தம சோழ மிலாடுடையானும், உத்தம சோழ கோனும் வீரப் போர் நிகழ்த்தி மாண்டனர். இருப்பினும் சோழர்படை சோர வில்லை. இறுதியில் வெற்றி மாலையைக் கழுத்தில் அணிந்தனர். போர்க் குறிக்காயம் பெற்றுப் போர்க் களத்தில் வீர இறப்பினைத் தழுவிய வீரர்கட்கு அஞ்சலி செலுத்தப்பட்டது. தனக்காக இறுதிவரை போரிட்டுப் போர்க் களத்தில் தமது உயிரை அர்ப்பணித்த இராசராச பிரம்ம மகா ராசர், உத்தம சோழ மிலாடுடையான், உத்தம சோழகோன் ஆகிய வீரர்கட்கு நினைவுச் சின்னமாக மூன்று கோயில்கள் அமைக்கப் பெற்றன. இராசராச நரேந்திரன் கி. பி. 1035 இல் மீண்டும் வேங்கி நாட்டு மன்னனுக முடி புனைந்து கொண்டான். இவ்விதமாகச் சோழப் படையின் உதவியினுல் இராசேந்திரன் விசயாதித்தனை வென்று பதவியைக் கைப்பற்றினுன்.

நம் இராசேந்திரன் கங்கைக்கரை நாடுகளை வென்று கங்கை நீரைக் கொணர்ந்ததன் நினைவாகக் கங்கை கொண்டான் எனப் பெயர் பூண்டான் என்பதனை நாம் முன்பே கண்டோம். தனது கங்கை வெற்றியின் அடையாளமாகவும், தான் கங்கை கொண் டான் எனப் பெயர் பூண்டதன் சின்னமாகவும், இராசேந்திரன்

தனது குலதெய்வமாம் நடராசப் பெருமானின் சடாமுடியிலும் கங்கையைச் சூட்டி மகிழ்ந்தான் என்ற ஒரு கருத்துச் சில ஆராய்ச்சியாள ரிடையே நிலவுகின்றது.

'இது இராசேந்திர சோழன் தனது கங்கைப் படையெழுச்சியின் அடையாளமாகப் புதுமையாகப் புகுத்தப்பட்ட தொன்று என்று கருதப்படுகிறது. தனது கங்கை வெற்றியின் அறிகுறியாகத் தனது குலதெய்வமாம் தில்லை நடராசப் பெருமானுக்கு நன்றி தெரிவிக்கும் முகத்தான் இவ்வெற்றிக்குப் பின் உருவாக்கப்பட்ட நடராசர் படிமங்களில் கங்கையைப் பூணுமாறு சிற்பிகளுக்குத் தகுந்த ஆணைகளை இராசேந்திரன் பிறப்பித்த தாகக் கூறப்படுகிறது. எனவே, நடராசர் கங்கை பூண்டார் ஆனர்' என்பதே அக்கருத்து.

அக்கருத்தினைப் பற்றிச் சிறிது விரிவாக ஆய்ந்து பார்த்தல் வேண்டுமென்று விரும்பிய நான் சென்னை, புதுக்கோட்டை, தஞ்சை ஆகிய இடங்களிலுள்ள அருங்காட்சி யகங்களுக்குச் சென்று ஆங்குள்ள நடராசர் படிமங்களைப் பார்த்து, ஆங்குள்ள அதிகாரிகளையும் சந்தித்து அதைப்பற்றிய செய்திகளைக் கேட்டறிந்தேன்.

ஏறத்தாழக் கி.பி. பதினோரும் நூற்றுண்டிற்குப் பின்பு உருவாக்கப்பட்ட அத்துணை நடராசர் படிமங்களிலும் கங்கை காட்சியளிக்கிறது. இராசேந்திரன் ஆட்சிக் காலத்திற்கு முன்பு உருவாக்கப்பட்டதாகக் கூறப்படுகின்ற பெரும்பாலான படிமங்களில் கங்கை காணப்பெற வில்லை.

எடுத்துக்காட்டாகச் சொல்ல வேண்டுமெனின் பதின்மூன்றும் நூற்றுண்டினதாகக் கருதப்படும், தஞ்சை மாவட்டம், புங்கனூரில் வெட்டி யெடுக்கப்பட்டுச் சென்னை அருங்காட்சி யகத்தில் வைக்கப்பட்டுள்ள நடராசர் படிமத்தில் கங்கை காட்சி தருகிறது.

தஞ்சை மாவட்டம், வேளாங்கண்ணியில் கிடைத்துள்ள பத்தாம் நூற்றுண்டினதாகக் கருதப்படுகின்ற நடராசர் படிமத்தில் கங்கை காணப்பட வில்லை. இதுவும் சென்னை அருங்காட்சியகத்தில் வைக்கப்பட் டுள்ளது.

மதுரை மாவட்டத்தின்கண் உள்ள பொருப்பு மேட்டுப்பட்டியில் தோண்டி யெடுக்கப்பட்ட, பத்தாம் நூற்றுண்டினதாகக் கருதப்படும் மாறுகால் நடராசர் படிமத்திலும் கங்கை காணப்பட வில்லை. இஃது இராசசேகரப் பாண்டியன் காலத்திய மாறு

கால் நடனமாடும் ஆடவல்லான் படிம மாகும். இப்படிமமும் சென்னை அருங்காட்சி யகத்தில் வைக்கப்பட்டுள்ளது.

புதுக்கோட்டை அருங்காட்சி யகத்தில் வைக்கப்பட்டுள்ள நடராசர் சிலைகளிலும் பதினொன்றும் நூற்றுண்டுக்குப்பின் உரு வாக்கப்பட்டதாகக் கருதப்படும் படிமங்களில் மட்டுமே கங்கை காட்சி யளிக்கின்றது.

தஞ்சைப் பெரிய கோயிலில் தற்போது வழிபாட்டிலிருக்கும் நடராசர் சிலையில் கங்கை காணப்படுகிறது. ஆனல், இதிலுள்ள கங்கையைக் கூர்ந்து நோக்குங்கால் இது பிற்காலத்தில் சேர்க்கப் பட்டதாகத் தெரிகிறது. ஏனெனில், இது படிமத்துடன் சேர்ந்து உருவாக்கப்பட்டதாகத் தெரிய வில்லை.

இராசராச சோழனின் ஆட்சிக் காலத்தினின்றும் இருபத் தொன்ப தாண்டுகளுக்கு முற்பட்டதான கல்வெட்டொன்று மத் திய மண்டபத்தில் ஆடவல்லார் படிமம் பிரதிட்டை செய்யப் பட்டதாகக் கூறுகிறது. இப்படிமம் இராசராசனின் அரசி சோழ மாதேவியால் அளிக்கப்பட்ட தாகும். இதில் ஒன்பது சடாமுடி இருந்ததாகவும் அதில் கங்கை இருந்ததாகவும் கல்வெட்டுக் குறிப்பிடுகின்றது. கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ள இப்படிமம் இப்பொழுது தஞ்சைக் கோயிலில் காணப்பெற வில்லை. இஃது என்ன வாயிற்று? என்பது தெரிய வில்லை. இப்பொழுது கோயி லில் காணப்பெறும் நடராசர் படிமத்தில் பத்துச் சடாமுடிகள் உள்ளன.

இராசராசன் காலத்திய திருவாலங்காட்டு நடராசர் படிமத் தில் சடாமுடியே காணப்பெற வில்லை யாதலின், கங்கை இருந் ததா? இல்லையா? என்பதில் ஒரு முடிவுக்கு நம்மால் வரமுடிய வில்லை.

பதினேராம் நூற்றுண்டிற்குப்பின் உருவாக்கப்பட்ட எல்லா நடராசர் படிமங்களிலும் கங்கை காணப்படுகிறது. இராசேந்திர னது ஆட்சிக் காலத்திற்கு முற்பட்ட காலத்தில் உருவாக்கப்பட் டுள்ள நடராசர் படிமங்கள் ஒரு சிலவற்றுள் கங்கை காணப்படு கிறது. எனவே, திரு. எஸ். ஆர். பாலசுப்ரமணியன் அவர்கள் தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டில் (**No. 42. S. I.I. Volume-II. page-170**) கூறி யுள்ளது போல் இராசேந்திரனது காலத்திற்கு முன்பே நடராசர் படிமத்தில் கங்கை சேர்க்கப்பட்டுள்ளது என் பது உண்மை யாகும். எனவே, இராசேந்திரனின் வெற்றியைக் குறிக்கத்தான் நடராசர் படிமங்களில் கங்கை சூட்டப் பெற்றுள் ளது என்பது ஏற்புடையதாகத் தெரிய வில்லை.

எப்படி இருப்பினும் இராசேந்திரன் கங்கைப் படையெழுச்சிக்கு முன்பு கங்கை பூண்ட நடராசர் படிமங்கள் அரிதாகக் காணப்படுகின்றன என்றும், இவனது கங்கை வெற்றிக்குப் பின் ஏறத் தாழ எல்லா நடராசர் படிமங்களிலும் கங்கை சூடப் பட்டுள்ள தென்றும், இது காலப்போக்கினல் கலையில் ஏற்பட்ட மாறுதலே யாகு மென்றும் எண்ணுதல் பொருத்த முடைய தாகும். இராசேந்திரனது ஆட்சியில் இவ்வழக்கம் (fashion) காட்டுத் தீப்போல் பரவிய தெனலாம். எனவே, இராசேந்திரனது ஆட்சிக் காலத்திற்குப்பின் உருவாக்கப்பட்ட ஏறத்தாழ அத்துணை ஆடவல்லான் படிமங்களிலும் கங்கை சூடப்பெற்றுள்ளதால் இது பெருவழக்காய் இருந்ததை நன்குணரலாம்.

இக்கருத்தினைத் திரு. எஸ். ஆர். பாலசுப்ரமணியம் அவர்களும் ஆதார மற்ற தென மறுக்கின்ருர்.

இராசேந்திரனது கங்கைப் படையெழுச்சி ஒரு மாபெரும் தீர்த்த யாத்திரையாகவும், வெற்றித் திருவுலாவாகவும் (திக்கு விசயம்) வரலாற் றறிஞர்களால் இந்நாள்வரை கருதப்பட்டு வந்தது.

இந்நாளில் இக்கொள்கை மாற்றப்பட வேண்டிய தொன்றுகும். ஏனெனில், முதலாம் இராசாதிராசன், இரண்டாம் இராசேந்திரன், வீர ராசேந்திரன் முதலான மன்னர்களின் மெய்க்கீர்த்திகளை ஆய்ந்து பார்க்குங்கால், முதலாம் இராசேந்திரன் தான் வென்ற வடநாட்டுப் பகுதிகளிலும் தன் அரசப் பிரதிநிதிகளை நியமித்து ஆட்சி புரியச் செய்தான் என்பது புலனுகும். வடநாட்டினை வென்று, அதனைத் தன் ஆளுகையின் கீழ்க் கொணர வேண்டு மென்பதே இராசேந்திரனின் வடநாட்டுப் படை யெழுச்சியின் உள்நோக்கமாக இருத்தல் வேண்டு மென்பது புலனுகும்.

## கடாரப் படையெழுச்சி

பெருவெற்றி வீரனுய்த் திகழ்ந்த இராசேந்திர சோழன், தனது தரைப் படையின் வன்மையினுல் பகை வென்று, தன் வாள் வலியையும், தோள் வலியையும் காட்டித் தனக்கு ஒப்பாரு மின்றி, மிக்காரு மின்றி, நானிலம் போற்ற வாழ்ந்தான். நிலப்படையின் ஆற்றலினுல் 'கங்கை கொண்டான்' என்ற விருதுப் பெயர் பெற்றுன் என்பதை முன்னரே கண்டோம். இராசேந்திரன் தன் முன்னேர்களின் வீரம் செறிந்த வர

லாற்றை நன்குணர்ந்தவ னுவான். சோழரின் முன்னேனை கரிகாற் பெருவளத்தான் கடல் கடந்து சென்று, ஈழநாட்டினே வென்று, சிங்களவர்களேச் சிறை செய்து, தமிழகம் கொண்டு வந்து, காவிரிக்கரை கட்டிப் 'பொன்னிக் கரை கண்ட பூபதி' எனப் போற்றப் பெற்றுன். அவன் கால்வழி வந்த இராச ராசனும், மரக்கல வலியால் முந்நீர்ப் பழந்தீவு பன்னீ ராயிரமும் வென்றுன். இத்துணைப் பெருமை மிக்க பெருமன்னர்களேத் தன் முன்னேராகக் கொண்ட இராசேந்திரனும், கடல் கடந்த நாடுகளே வென்று, புகழ்பெற விழைந்தான். எனவேதான், கப்பற் படையைச் செப்பம் செய்தான்; கடல் கடந்த பேரரசு களே வென்றுன். இவன் கடல் கடந்த வெற்றிகளேப் பற்றி ஈண்டு ஆய்வோம். திருமலேப் பாறைக் கல்வெட்டு இவனது கடாரப் படையெழுச்சி பற்றி விவரித்துக் கூறுகிறது.

இவனது கடல் கடந்த வெற்றிகளுள் கடார வெற்றி முதன்மையாகக் கருதப் பெறுகின்றது. இவனது கடார வெற்றி பற்றிய செய்திகளே இவனது பதின்மூன்றும் ஆட்சி யாண்டுக் கல் வெட்டுகளில் காணப்படும் மெய்க்கீர்த்திகளில் தெளிவாகக் காணலாம். திருவாலங்காட்டுச் செப்பேடுகளும் இவ்வெற்றி பற்றிய நிகழ்ச்சிகளே மிகமிகச் சுருக்கமாகக் குறித்துள்ளன. இவனது கடாரப் படையெழுச்சி கி.பி. 1025 ஆம் ஆண்டிற்கு முன்னரே நடைபெற்றிருத்தல் வேண்டு மென்பது அறிஞர் கருத் தாகும்.

இராசேந்திரனின் மெய்க்கீர்த்தியில் குறிக்கப் பெற்றுள்ள 'கடாரம்' என்னும் நாடு யாங்குள்ளது? என்ற வினு வரலாற்று அறிஞர்கட்கும், புவியியல் வல்லுநர்கட்கும் பெரும்புதிராக அமைந்துள்ளது. ஏனெனில், இராசேந்திரனது மெய்க்கீர்த்தி யில் 'பப்பாளம்' என்னு மிடத்தை வெற்றி கொண்டதாகக் குறிப் பிட்டுள்ள பகுதி பருமாவிலுள்ள 'தலேங்' பகுதியிலுள்ளதொரு துறைமுகப் பட்டினமென்று 'மகாவமிசம்' குறித்துள்ளது. எனவே, இராசேந்திரன் வென்ற கடாரம் பருமா நாட்டி லுள்ள 'பெகு' என்னும் பகுதி யாகும் என்று வரலாற் றறிஞர் திரு. வெங்கையா குறிப்பிடுகின்றுர்.

சில ஆண்டுகள் கழித்துப் பருமா நாட்டின் பழம்பொருள் பாதுகாப்புத் துறையினர், பெகு நாட்டை இராசேந்திரசோழன் கி.பி. 1025-1027 இல் வென்றதாகக் குறிக்கப்பட்டிருக்கும் இரு வெற்றித் தூண்கள் பெகுநாட்டில் காணக் கிடப்பதாக அறிவித் தனர். எனவே, ஆராய்ச்சி அறிஞர் பலர் இராசேந்திரனது

மெய்க்கீர்த்தியில் குறித்துள்ள கடார வெற்றி, பருமா வெற்றி தான் என்று உறுதி கொண்டனர்.

திருச்சிராப்பள்ளி மாவட்டக் கருப்பொருட் களஞ்சியத்திலும் (Trichirapoly District Gazetteer) கடாரம் என்பது கீழ்ப் பருமா எனக் குறிப்பிடப் பெற்றுள்ளது. திரு. கனகசபைப் பிள்ளையவர் களும் இக் கருத்தினையே வலியுறுத்துகின்றார்.

திரு. எம். எஸ். பூர்ணலிங்கம்பிள்ளை அவர்கள் 'தமிழ் இந்தியா' என்னும் நூலில், கடாரம் என்பது பருமாவிலுள்ள பகுதி என்று குறித்துள்ளார்.

திரு. அ. சிதம்பரனார் அவர்கள் 'முதலாம் இராசேந்திரன் பருமாவை வென்று செயித்துப் 'பெகு' என்னும் இடத்தில் ஒரு கற்றூணில் சாசனம் வெட்டுவித்துப் பெரிய கோர்ட்டுக்கு முன் னால் நாட்டியுள்ளான். அக்கற்றூண் இன்றும் நின்று நிலவு கிறது. அதற்கு அடுத்த ஆண்டில், அதாவது கி.பி. 1027 இல் திருவாரூருக்குக் கிழக்கே இரண்டு கல் தொலைவில் உள்ள 'கடாரங்கொண்டான்' என்னும் கிராமத்தை நிருமாணம் செய்து பருமா வெற்றியைக் கொண்டாடியுள்ளான்.' என்று கரந்தைத் தமிழ்ச் சங்கத் தமிழாராய்ச்சி மலரில் குறித்துள்ளார்.

இலக்கண விளக்கப் பரம்பரை திருவாரூர் சோமசுந்தர தேசிகர் அவர்கள் 'பருமா தேசத்திலுள்ள பெகு நாட்டிற்குக் கடார தேசமென்று பெயருண்டு' எனச் 'செந்தமிழ்' எனும் இதழில் குறிப்பிட்டுள்ளார்.

கல்வெட்டாராய்ச்சியறிஞரும், கரந்தைத் தமிழ்க் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியருமான திரு. சி. கோவிந்தராசன் அவர்கள் 'பருமாவிலுள்ள பெகு என்னும் பகுதியில் முதல் இராசேந்திரன் நாட்டிய வெற்றித் தூண்கள், தமிழ்க் கல்லெழுத்துக்களுடன் இருப்பதை அந்நாட்டுக் கல்வெட்டுத்துறை யதிகாரி 'டோசை யின் கோ' குறிப்பிட்டுள்ளதை அறிகிறோம். மற்றும் அங்கிருந்து தமிழ்நாட்டுக்குத் திரும்பியுள்ள அறிஞர் சிலரிடம் பெற்ற செய்திகளும், பருமாவை முதல் இராசேந்திரன் வென்ற வரலாற் றினை உறுதிப் படுத்துகின்றன. இவற்றால் கடாரம் என்பது பருமா விலுள்ள கடற்கரைப் பட்டினமும் அதைச் சார்ந்த பகுதிகளும் ஆகும் என்று குறிப்பிடும் கருத்து வலியுறுகின்றது. ஆனால், இது வரையில் வெளிவந்துள்ள சோழர் வரலாறுகளில் இராசேந் திரனுடைய கல்வெட்டு, செப்பேடுகளைக் கொண்டு ஆய்ந்த முடி

வாகக் கடாரம் என்பது மலேயாத் தீபகற்பத்திலுள்ள 'கெடா' என்னும் பகுதியே யென்று திட்டவட்டமாகக் கூறப்பட்டுள்ளது. பருமாவிலுள்ள முதல் இராசேந்திரன் அமைத்த வெற்றித்தூண் களில் உள்ள கல்வெட்டுச் செய்தியினை முழுமையாகப் பெறுவோ மானல், எது கடாரம் என்பதில் உள்ள ஐயம் நீங்குவதற்கு ஏது வாகும் என்று 'கல்வெட்டுக் கருத்தரங்கு' என்னும் வெளியீட் டில் 'தமிழ்க் கல்வெட் டாராய்ச்சியும் தமிழக வரலாறும்' என்னும் கட்டுரையில் எழுதியுள்ளனர்.

கடாரத்து மன்னனை வென்று ஸ்ரீ விசயம், பண்ணை, மலை யூர், மாயிருடிங்கம், இலங்காசோகம், பப்பாளம், போன்ற பகுதிகளைக் கைப்பற்றிக் கொண்டதாக இராசேந்திரன் மெய்க் கீர்த்தியில் கூறப்பட்டிருத்தலானும், இவை யனைத்தும் ஒரே படையெழுச்சியின் விளைவாகக் கைப்பற்றப்பட்ட பகுதிகளாகும் எனக் கூறப்பட்டிருத்தலானும், இவை யனைத்தும் மலேயாத் தீவின் பகுதிகளாதலாலும், கடாரம் என்பது மலேயாவிலுள்ள 'கெடா' எனத் தற்காலத்தில் வழங்கப் பெறும் பகுதிதான், என்பதை நாம் அறுதியிட்டுக் கூறலாம். வரலாற்றறிஞர் திரு. கே.ஏ. நீலகண்ட சாத்திரியவர்களும், இக்கருத்தினையே வலி யுறுத்துகின்றார். சுமத்திராவின் வடகிழக்குப் பகுதியில் உள்ள 'கொர்த்தி' என்ற இடமே கடாரமென்று டாக்டர் எஸ். கிருட் டிணசாமி அய்யங்கார் குறிப்பிடுகின்றார்.

'கீ--ட்டா' என்ற இடத்தில் இரு முறை தங்கியதாகச் சீனப் பயணி ஈத்சிங்கால் குறிக்கப் பெற்றதும், 'கீ--டோ' எனப் பிற் காலத்திய சீன நூல்களில் குறிக்கப் பெற்றதும், 'கடாஹா' என குறிக்கப் பெறுவதும், வேறுபட்டவை யல்ல. மலேயாத் தீபகற் பத்தில் உள்ளதும், தற்காலத்தில் 'கெடா' என அழைக்கப்பெற் றதும் இக்கடாரமே யாகும் [1] என்று திரு. 'கோடே' அவர்கள் கூறுவதாலும் இக்கருத்து வலிவுறும்.

'கடாரம்' என்னும் நாடு பெனங்கை யடுத்துள்ள 'கேடா' என்னுமிடமே என்பது பெரும்பாலான அறிஞர்கள் கருத்தாகும்.[2] கடாரமும் தமிழ்நாடும் நீண்ட நெடுங்காலமாய் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தது. கடாரம் வடமொழிச் செப்பேடு

[1] 'பிற்காலச் சோழர் சரித்திரம்'-சதாசிவப் பண்டாரத்தார்- பக்கம்-161. வரிகள்-20-21
'சோழர் வரலாறு'-பண்டாரகர் மா. இராசமாணிக்கர் பக்கம்-107-வரிகள் 8-9

[2] திரு. கெ. கெ. பிள்ளை 'தமிழக வரலாறு-மக்களும் பண்பாடும்'- பக்கம்-259. 14-19

களில் 'கடாஹம்' எனக் குறிப்பிடப் பெற்றுள்ளது.[1] பெரிய லெய்டன் செப்பேடுகளும் அதனைக் 'கடாகம்' எனக் குறிக்கின்றது.

கடாரம் என்ற சொல்லைச் செயங்கொண்டான் அவர்கள் தாம் பாடிய 'கலிங்கத்துப் பரணி'யில் பலமுறை குறித்துள்ளார். அவற்றுள், 'பரக்கு மோதக் கடாரம்'[2], 'குளிறு தெண்டிரைக் குரைகடாரம்'[3] ஆகியவை குறிப்பிடத் தக்கவை யாகும் பட்டினப் பாலையில் 'காழகம்'[4] எனக் குறிக்கப் பெறுவது கடாரமே என்பதை உரை யாசிரியர் நச்சினார்க்கினியர் கூற்றால் அறியலாம். இதனால், தமிழர்கள் சங்க காலத்திலிருந்தே நீண்ட நெடுங்காலமாகக் கடாரத்துடன் வாணிகம் செய்தனர் என்பது வெள்ளிடைமலை. சீன நூல்களில் கடாரம் 'கீ--டோ' என்னும் பெயரால் குறிக்கப் பெற்றுள்ளது. சீன நாட்டினரும் கடார நாட்டுடன் கடல் வாணிகம் செய்ததாகச் சீன நூல்கள் குறிப்பிடுகின்றன. மேற்கூறிய கருத்துகளால், கடார நாட்டுடன் தமிழர்களும் சீனர்களும், பண்டு தொட்டுக் கடல் வாணிகம் செய்து வந்தனர் என்பது புலனாகும். கடார மென்பது கடற்கரைப் பட்டின மென்பதும், அதன் வழியாகத்தான் இந்தியா, கீழ்த்திசை நாடுகளுடன் கடல் வாணிகம் புரிந்த தென்பதையும் அறியலாம். பன்னெடுங் காலமாகத் தமிழகம் சீன நாட்டுடன் வணிகத் தொடர்பினைக் கொண்டிருந்ததும் ஈண்டு அறியற்பாலது.

செயங்கொண்ட சோழனான இராசராசன் காலத்துச் சோழ நாடும் கடாரமும் நட்புரிமை பெற்றுத் திகழ்ந்ததைச் 'சூடாமணி விகாரைக்'[5] கட்ட இராசராசன் அனுமதி வழங்கி யிருத்தலினாலும், ஆனைமங்கல மென்னும் ஊரைப் 'பள்ளிச்சந்தமாக' வழங்கி யிருத்தலாலும் இனிது விளங்கும். ஏன்? இராசேந்திரனின் ஆட்சிக்காலத் தொடக்கத்திலும்கூட, இரு நாடுகளுக் கிடையே நட்பு நீடித்ததை அறியலாம். இவ்வாறிருக்க இராசேந்திரன் கடார நாட்டின்மீதும் படை யெடுப்பானேன்? என்ற வினா எழுவது இயற்கையே. ஆயினும், இதுபற்றிய காரணம் யாண்டும் குறிப்பிடப்பெற வில்லை யாயினும் இதற்கான காரணத்தை நாமே உய்த்துணரலாம்.

[1] Ep. Ind. Vol. XXII. No. 34

[2] *கலிங்கத்துப் பரணி. பா. 138*

[3] *கலிங்கத்துப் பரணி. 139*

[4] *பட்டினப்பாலை வரி. 191*

[5] Ex. Ind. Vol. XXII. No. 34

கடல் வாணிகம் பொருட்டுக் கடாரம் சென்று தங்கிய, எண்ணிலாத தமிழர்கட்குக்[1] கடார வேந்தன், இன்னல்கள் ஈந்து தொல்லைகள் பல தந்ததினுல், அவர்கள் நல்வாழ்வில் நாட்டம் கொண்டு, அவர்களின் வாட்டத்தினைப் போக்க இராசேந்திரன், திட்டமிட்டு இப்போரினை மேற்கொண்டு இருத்தல் வேண்டும்.

சோழப் பேரரசுடன் கடாரம் கொண்டிருந்த நட்புறவு நிலை குலைந்ததாலோ, வங்கக்கடல் முழுவதும் சோழப் பேரரசின் ஒரு பகுதியாக ஆக்கப்பட வேண்டுமென்ற பேராவலினுலோ, சோழ நாட்டிற்கும்சீன நாட்டிற்குமிடையே வளர்ந்து வந்த வாணிகத் தொடர்பினைத் துண்டிக்கக் கடாரம் முயன்றதாலோ, இராசேந்திரன் கடாரத்தின் மீது படை எடுத்திருக்க வேண்டும் என்பது அறிஞர் கருத்து. பெரும்பாலும் வணிக நோக்கத்தின் அடிப்படையில்தான் இப்போர் நிகழ்ச்சி, நடைபெற்றிருத்தல் வேண்டுமென்பது பலரும் ஒப்புக்கொள்ளக் கூடிய தாகும்.

ஈழத்தினை வென்று, கடல் கடந்த பேரரசினை நிறுவிச் சோழர்களது ஏகாதிபத்தியத்தை நிலைநிறுத்திய இராசேந்திர சோழன் தனது கடல் கடந்த பேரரசினை விரிவுபடுத்தும் நோக்கத்துடனே கடாரத்தின்மீது படையெடுத் திருக்க வேண்டுமென எண்ணுதல் பொருத்தமே. எனவேதான், இராசேந்திரனுக்குப் பின்பு ஆண்ட வீரராசேந்திரனும் கடாரப் படையெழுச்சியில் ஈடுபட்டான். இக்கருத்தினைப் பேராசிரியர் பண்டாரகர் திரு. என். சுப்பிரமணியன் அவர்கள் கீழ்க்கண்டவாறு வலியுறுத்திக் கூறுகிறுர்.

'தூரக் கிழக்கு நாடுகளில் தென்னிந்தியாப் பல்லாண்டு காலமாகக் கடல் கடந்து வாணிகம் செய்து வந்தமைக்குத் தடையாக இருந்து வந்த ஸ்ரீவிசய நாட்டின் தொல்லையை அடக்கவும், கடல் வழியினைச் சிக்கலின்றிச் செய்யவுமே, இப்படை யெடுப்பானது ஓரளவு நிகழ்த்தப்பட்டது. இதனைத் துருக்கியர்களின் தலையீட்டை முறியடித்து, இந்தியாவிற்குள் நுழைந்த, ஐரோப்பிய வாணிக நாடுகளின் செயலோடு ஒப்பிடலாம். ஆயினும், இராசேந்திரன் கடல் கடந்து தன் பேரரசை நிலைநாட்ட எண்ணினுன் என்று கூறுவதே சாலப் பொருந்தும். இதுவரை யாராலும் செய்ய வொண்ணுக் கங்கைப்படையெடுப்பை இவன் செய்தான் என்று கூறுவோமாஞல், கடல் கடந்து தன் பேரரசைப் பரப்ப

[1] A. R. E. 1892. P. 12

வும் அவனல் முடிந்தது என்றும் கூறலாம். கடலுக் கப்பாலுள்ள ஈழத்தை வென்று தன் ஆட்சியைக் கடல் கடந்த பேரரசாக்கிய சோழர்கள், ஸ்ரீவிசய நாட்டினுடைய எல்லைகளையும் எளிதாகத் தங்களது ஆட்சியுடன் சேர்த்துக் கொள்ள முடியும். இராசேந்திரன் இதன் நிமித்தம் தூண்டப்பட்டிருக்க முடியாது. பரந்த பேரரசினை ஏற்படுத்த வேண்டு மென்ற ஆவலே இதற்குக் காரண மாகும். இப்படை யெழுச்சி முடிந்தவுடன் கடல் கடந்த நாடுகளில் சோழ அரச குடும்பத்தினர் சிலர் அரசப் பிரதிநிதி யாக நியமிக்கப்பட்டனர். வீர ராசேந்திரனும் கடாரத்தினை இரண்டாம் தடவை வெற்றி கொண்டது ஈண்டுக் குறிப்பிடத் தக்க தாகும்.

'சோழர்கள் இந்நிலப் பகுதிகளைத் தங்கள் பேரரசுடன் இணைந்த மாநிலங்களாக ஆளுவதற்கு எவ்வித முயற்சியும் மேற் கொள்ள வில்லை' என்று திரு. நீலகண்ட சாஸ்திரியார் குறிப்பிடு கின்றார். ஆனல், இதற்கு மாருகக் கூறுவதற்கும் எவ்வித சான்று களும் இல்லை என்ப துறுதி.[1]

இராசேந்திரன் காவல் மிக்க கடாரத்தின்மீது போர் மேற்கொள்ள முடிவெடுத்தான்; கப்பற் படைத் தலைவனுகத் தானே பொறுப்பேற்ருன்; காலமும் நிலையுங் கருதித் தானே அக்கலங்களைக் கீழ்த்திசை நோக்கிச் செலுத்தினன். நாள்கள் உருண்டன; மரக்கலங்களும், நீரினைக் கிழித்துக் கொண்டு நெடிது சென்றன; ஸ்ரீவிசய நாடும் நெருங்கிவிட்டது; வீரர் களின் கண்களுக்கும் அது தென்பட்டது; வீரர்கள் வீறு கொண் டனர். இக்காலை சுமத்திரா என அழைக்கப் பெறுவதும் மேற்குக் கரையில் அமைந்த அந்நாட்டின் தலைநகரும் துறை முகமுமான ஸ்ரீ விசய நகரில் கரை யேறினர்.

ஸ்ரீ விசய நாட்டுக் கரையில் சோழ வீரர் இறங்கினர் என்ற செய்தி கேட்டான், அந்நாட்டு மன்னனை விசயோத்துங்க வருமன் சீறி எழுந்தான் சிங்காதனத்திலிருந்து; தன் ஆற்றல் மிகு படைத் தலைவர்களை அழைத்துப் பெரும்படை திரட்ட ஆணை பிறப்பித்தான்; தேர்ந் தெடுக்கப்பட்ட வீரர்கள் அணிவகுத்து நின்றனர்; வெஞ்சினம் கொண்ட வீரர்கள் வீராவேசம் கொண்டு சோழப் படையினைத் தாக்க முன்னேறினர்.

இருதிறத்தாரும் அணிவகுத்து நின்றனர்; வீரர்கள் இடை விடாது போர் செய்தனர். நீண்ட நாள்களாகப் போர்செய்து

[1] 'History of Tamil Nadu' - Dr. N. Subramanian.




படம். 2. முதல் இராசேந்திர சோழன் கடாரப் படையெழுச்சியில் வென்ற இடங்களைக் காட்டும் படம். (ஸ்ரீவிசய ராச்சியம்)

களைத்திருந்த சோழப் பெருவீரர்களும் புத்துணர்ச்சியுடன் போரிட்டனர். சோழப் படையின் பெருவீரம் கண்டு பகைவர்கள் நாற்றிசையிலும் சிதறி ஓடினர். சோழ மறவர்கள் ஸ்ரீவிசய நாட்டில் வெற்றிக்கொடி நாட்டினர். கடார நாட்டின் காவலனும் விசயோத்துங்க வருமன்[1] தோல்வியால் துவண்டுவிட்டான்.

இராசேந்திரன் விசயோத்துங்க வருமனை அடிமைப்படுத்தினான்; பட்டத்து யானையைக் கவர்ந்தான்; பெரும்பொருட் குவியலையும் கவர்ந்து கொண்டான்; வியத்தகு அழகு மிக்க வித்தியாதரத் தோரணத்தையும் கைப்பற்றிக் கொண்டான். விசயோத்துங்க வருமன் வெட்கித் தலைகுனிந்தான். கடற்படை வலிமை மிக்கிருந்தும் தோல்வி கண்டதை எண்ணி யெண்ணி அவன் உளம் நைந்தான்.

கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் கடார நாட்டிற்கு வாணிகத்தின் பொருட்டுச் சென்ற சுலைமான் என்னும் அராபியன் கடார நாட்டில் கப்பல் கட்டும் தொழில் சிறப்புடன் நடைபெற்றதென்பதைக் குறித்துள்ளான். கடார நாடு கப்பற் படை வலிமை மிக்கிருந்தது என்பது இதனால் புலனாகின்றது. வலிமை மிக்க இந்நாட்டினை வென்ற இராசேந்திர சோழனது கப்பற் படையின் மேம்பட்ட வலிமையினை இவ் வெற்றியினால் நாம் இனிது அறியலாம்.

'ஸ்ரீவிசயம்' என்பது 'ஸ்ரீவிஷயம்' எனவும் பண்டு அழைக்கப்பட்டது. இதனைச் சீனர் 'ஸ்ரீவிஜயம்' என்று குறிப்பிட்டுள்ளனர். ஸ்ரீவிஷயம் என்பது 'திருநாடு' எனப் பொருள்படும். இது இக்கால 'பாலம் பாங்'[2] என்னும் மா நில மாகும். ஸ்ரீவிசய நாட்டிற்கும் தமிழ் நாட்டிற்கும் கி. பி. எட்டாம் நூற்றாண்டு முதல் பதினாறும் நூற்றாண்டு முடிய வாணிகத் தொடர்பு வலிவடைந்திருந்ததைச் சீன நூல்கள் குறிப்பிடுகின்றன. கடார வேந்தனிடமிருந்து சோழர் கைப்பற்றிய முதல்நாடு ஸ்ரீவிசய மாகும் (ஸ்ரீவிஜயம்) என்பது ஈண்டு நினைவிற் கொள்ளத் தக்க தாகும்.

**விளைவுகள்**

இவ்வெற்றியின் பயனாகத் தமிழ்நாட்டு வணிகர்கள் எவ்வித இடையூறுமின்றிக் கடாரத்தில் வாணிகம் புரிந்து வந்தனர். மேலும், கி. பி. 1088 ஆம் தேதியிட்ட சிதைந்த கல்வெட்

[1] இவன் சூளாமணி வருமனின் பேரனும், மார விசயோத்துங்க வருமனின் மகனுமாவான்.

[2] 'The Cholas.' Vol. I. P. 259

டொன்று கடாரத்தில் காணக் கிடைத்தலின் தமிழ்நாட்டு வணிகர் கடாரத்தில் தங்கி, வாணிகம் செய்தமை உறுதி பெறு கின்றது. தமிழர் வாணிகமும் ஆங்குப் பெருகிற்று.

ஸ்ரீவிசய நாட்டு மன்னன் இராசேந்திரனின் மேலாண்மை யைத் தற்காலிகமாக ஏற்றுக் கொண்ட போதிலும், இப்படை யெழுச்சியினுல் நிலையான, நிரந்தரமான விளைவுகள் யாதும் ஏற்பட்டதாகத் தெரிய வில்லை. ஸ்ரீவிசய நாடு சோழ வேந்த னுக்கு முறையாகக் கப்பம் செலுத்தி யிருக்கக் கூடு மெனினும், இந்நாட்டினைச் சோழப் பெருநாட்டுடன் இணைத்துக் கொண்டு, ஆட்சி புரிய வேண்டுமென்ற எண்ணத்துடன் சோழர்கள் எவ் வித முயற்சியினையும் மேற்கொண்டதாகச் சான்றுகள் இல்லை யென்பதும் புலனுகின்றது.

இராசேந்திரனுக்குப் பின்னர் சோணுட்டினை ஆண்ட மன்னர்களுள் ஒருவனுன முதலாம் வீரராசேந்திரன் என்னும் மன்னன், கடார நாட்டினை வென்று[1] மீண்டும் கடார மன்னனி டம் ஒப்படைத்ததாகக் கல்வெட்டுச் செய்திகள் சான்று கூறுவத னுல்,இராசேந்திரனின் கடார வெற்றி ஒரு தற்காலிக வெற்றியே என்பது உறுதி. இக்கடல் கடந்த வெற்றியினுல் இராசேந்திர னுடைய வெற்றியும், புகழும் கடல் கடந்த நாடுகளில் பரவின.

இவ்வெற்றியின் காரணமாக இராசேந்திரன் இந்திய வர லாற்றில் தனக்கென ஒரு சிறந்த இடத்தைப் பெறுகிருன். இந்திய வரலாற்றில் கடல் கடந்து சென்று, வியத்தகு வெற்றி கள் பல பெற்ற வேந்தர்களுள் இராசேந்திரனே தலையாயவனு வான். 'முந்நீர்ப் பழந்தீவு பன்னீராயிரமும் கொண்டு' சிறப் பினைப் பெற்ற இவனுடைய தந்தையாம் இராசராசனை விட மேம்பட்ட புகழினை இவன் கடார வெற்றியால் பெற்ருன் எனக் கூறலாம்.

இராசேந்திரனின் கடார வெற்றியின் விளைவுகள் பற்றித் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி அவர்கள் 'சோழர்கள்' எனும் நூலில் 'அவனுடைய (இராசேந்திரனுடைய) வெட்டெழுத்து களில் கூறப்பட்ட செய்திகளை, அப்படியே வரலாற்றுச் சான்று களாக எடுத்துக் கொண்டாலும்கூட, அவனது ஸ்ரீ விசயப் படை யெழுச்சி ஸ்ரீவிசய நாட்டு மன்னனைத் தற்காலிகமாகச் சோழ னின் மேலாண்மையை ஏற்றுக் கொள்ள வைத்ததே யன்றி, நிலை யான விளைவுகளை ஏற்படுத்த வில்லை' என்று குறிப்பிடுகின்ருர்.

[1] 'தனகழ லடைந்த மன்னர்க்குக் கடாரம் எறிந்து கொடுத்தருளி'— வீரராசேந்திரனின் ஏழாமாட்சி யாண்டுக் கல்வெட்டு.

இவ்வெற்றிகளினால் தமிழர்களின் கட்டடக்கலை, வழிபாட்டு உருவங்கள், மதக் கோட்பாடுகள், சிற்பக்கலை போன்றவை கிழக்கிந்தியத் தீவுகளிலும் பருமா, மலாயா, சயாம், இந்தோ-சீனம் முதலிய நாடுகளிலும் பரவின. ஆங்குக் காணப்பெறும் கோயில்களைக்கொண்டும், விக்கிரகங்களைக்கொண்டும் இவற்றை நாம் தெளிவாக அறியலாம்.

பின்னர், இராசேந்திரனின் கப்பற்படை 'பண்ணை' என்னும் நகரில் தாக்குதல் நிகழ்த்திற்று. பண்ணைப் போரும் இராசேந்திர னுக்கு வெற்றியினை அளித்தது. பண்ணை என்பது சுமத்திராத் தீவின் கீழ்க்கரையிலுள்ள ஊராகும். அஃது இக்காலத்தில்'பனி' எனவும் 'பனை' எனவும் (Pani or Panei) இரண்டு பெயர்களால் அழைக்கப் பெறுகின்றது.

அடுத்துச் சோழப்படை மலையூரைத் தாக்கியது. மலையூரும் இராசேந்திரனுக்கு வெற்றிமாலை சூட்டியது. மலையூரில் 'மலையூ' என்னும் பெயரில் ஒரு நதி ஓடியதாக ஆராய்ச்சியாளர் குறிப்பிடுகின்றனர். மலையூர் சுமத்திராவின் கீழ்க்கரையில் அமைந்திருந்ததா? மேல் கரையில் அமைந்திருந்ததா? தென் பகுதியில் அமைந்திருந்ததா? என்பது பற்றி மாறுபட்ட கருத்து கள் நிலவி வருதலின் உண்மையைக் கண்டு கொள்ள முடிய வில்லை. இன்னும் சிலர் இது பாலம் பாங் மாநிலத்தில் இருந் திருத்தல் வேண்டு மென்று கூறுகின்றனர். இது மலேயாவின் ஒரு பகுதி என்று கே. ஏ. என். சாஸ்திரி குறிக்கிறார்.[1] கே. கே. பிள்ளை யவர்கள், இது ஸ்ரீவிஜயம் அல்லது பண்ணையாதல் வேண்டு மென்று குறிப்பிடுகின்றார்.[2]

மலையூர் என்பது மலாயாத் தீபகற்பத்தின் தென் கோடியி லும், பழைய சிங்கப்பூர் நீர்ச் சந்தியின் (strait) வடக்குக் கரையி லும் அமைந்திருந்ததாகக் கூறுதல் பொருத்தமான தாகும். ஆலந்து நாட்டினைச் சேர்ந்த ஆராய்ச்சியாளர் இது 'ஜம்பி'[3] (Jambi) என்னும் நாடு என்று அறுதியிட்டுக் கூறுகிறார்.

இவற்றின் பயனாக ஜாவாவிலும், சுமத்திராவிலும் தமிழ் நாட்டுப் பாணியில் சிவன் கோயில்கள் கட்டப்பெற்றன. சேர, சோழ, பாண்டியரின் பெயர்களை அங்குள்ள இனத்தினர்

[1] The Cholas. Vol. I. P. 262. Foot Note.

[2] தமிழக வரலாறு-'மக்களும் பண்பாடும்'-பக்கம்-259-வரிகள்-3-4

[3] Ibid. P. 623

சூட்டிக் கொண்டனர். இதனைத் திரு. எஸ். ஜே. குணசேகரன் அவர்கள் தமது 'தென்கிழக்கு ஆசியாவில் முந்தைய தமிழ் நாகரிகம்' என்னும் நூலின்கண் 'சுமத்திராவில் உள்ள சில இனப்பிரிவினர் பெயர்கள், தென்னிந்தியாவின் அதிலும் சிறப் பாகச்சோழ, பாண்டிய, மலையாளம் என்னும் தமிழருடைய பெயர்கள் ஐயத்திற்கிட மின்றிக் காணப்படுகின்றன' என்று குறிப்பிடுகின்ருர். ('In sumatra are found certain names of tribal subdivisions which are unmistakably south Indian, and specially Tamilian names such as Chola, Pondia and Malayala.' Early Tamil Cultural Influences in south East Asia. S. J. Gunasekaran) இக் கருத்தினையே தென்னிந்திய வரலாற்றறிஞர் பேராசிரியர் திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி அவர்களும் 'சுமத்திராக் காடு களில் உள்ள வேட்டையாடுகின்ற தியாக்ஸ் இனத்தினருள் சிலர் இன்றும் தம்மைப் பாண்டியர், சோழர், தேளாவி, மலை யாளி எனச் சொல்லிக் கொள்கின்றனர்' எனக் குறிப்பிடு கின்ருர். ('Some tribes among the head-hunting Dyabs in the wilds of sumatra still call themselves Pandya, Chola, Delavi, and Malayala.' Indian influence in the Far East. Professor K.A. Nilakanda Sastri)

பின்னர், இராசேந்திரன் தன் கடற்படை வலிமையால் ஸ்ரீ விசய நாட்டின் ஆட்சிக் குட்பட்ட மாயிருடிங்கம், இலங்கா சோகம் என்னும் இடங்களை வென்று ஆங்குத் தன் புலிக்கொடி ஒன்றையே ஓங்கிப் பறக்க விட்டான். மாயிருடிங்கம் என்பது ஆழ மிகுந்த கடலினைப் பாதுகாப்பாகக் கொண்ட மலேயாவின் மத்தியில் அமைந்த நகரமாகும். சௌ-ஜீ-குவா இதனை ஜி-லோ-டிங்[1] என்று குறிப்பிட்டுள்ளார். இது மலேயாவில் லீகாருக் கருகி லிருந்தது.

இலங்காசோகம் என்பது சீன நாட்டினரால் 'லிங்-யா-சென்-கியா' (Ling-Ya-Sen-kia) என அழைக்கப் பெற்றது. இது மலாயா நாட்டிலுள்ள 'கெடா'விற்குத் தெற்கில் அமைந்திருந் தது. வியத்தகு வெற்றிகள் பல பெற்ற இராசேந்திரனது கப்பற்படை, அடுத்து அதே 'கெடா' நாட்டிலுள்ள பப் பாளத்தைத் தாக்கித் தன்னடிப் படுத்தியது. இது 'பாப்பலமா' என்னும் பெயரால் குறிப்பிடப்பட்ட நாடு என்று மகாவமிசத்தில் குறிக்கப்பட்டுள்ளதாகத் திரு.வெங்கையா அவர்கள் எழுதுகிருர்.

Ibid. P. 260

ஈழ வேந்தனும் முதலாம் பராக்கிரமபாகு என்பான், தமிழ் நாட்டுத் தானைத் தலைவனும் ஆதிச்சன் என்பானை அருமண தேசத்திற்கு எதிராகப் படையுடன் அனுப்பிய போது, அவன் பாப்பாலமா என்ற இடத்தில் இறங்கினான் என்பதனை மகா வமிசம் குறிப்பிடுகின்றது. எனவே, இது கீழ்ப் பருமாவிலுள்ள தலைங் (Talaing) நாட்டினைச் சேர்ந்தது என்று வரலாற்றறிஞர் திரு. வெங்கையா அவர்கள் குறிப்பிடுகின்றார்.

பாவேந்தன் ஒட்டக்கூத்தனும் 'மாளுவம் சோணகம் பப்பளம்'[1] என்று குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழில் குறிப்பிட்டிருப்பதால் 'பப்பளம்' என்ற நாடு ஒன்று பண்டு இருந்ததை அறியலாம். 'பப்பளம்,' 'பப்பாளம்' இரண்டும் ஒன்றே என்பதும் தெளிவு. எனவே, 'பப்பளம்' என்பது கிரா பூசந்திக்கண்மையில் (Isthumus of Kra) அமைந்திருத்தல் வேண்டுமென்பது அறிஞர்தம் முடிவு.[2] இருப்பினும் இது பற்றி இறுதியாகத் தற்போது எதுவும் கூற இயலாது.

இலிம்பங்கம், வளைப்பந்தூர் ஆகிய இவ்விரு இடங்களும் எங்கிருந்தன? என்பது பற்றி எவருக்கும் தெளிவாகப் புலப்படவில்லை யாதலின் இது பற்றி அறுதியிட்டுக் கூறுதல் இயலாது.

அடுத்து இராசேந்திரனது வலிமை மிக்க படை, தலைத் தக்கோலத்தைத் தாக்கிப் பகைப் படையினை உலையச் செய்தது. அந்நகரம் பிடிபட்டதால் மலாயா நாட்டின் மேலைக்கரை முழுவதும் சோழர் ஆதிக்கம் பரவியது.

தக்கோலம் என்பது ஒரு காலத்தில் வாணிகப் புகழ்பெற்ற நகரமாக விளங்கிய தென்பதைக் கிரேக்க அறிஞரான தாலமி 'தகோலா' எனக் குறித்துள்ளதால் உறுதியாகிறது. 'தலைத் தக்கோலம்' என்பதும் 'தக்கோலா' என்பதும் ஒரே இடத்தைத் தான் குறிக்கின்றன என்பது திண்ணம். 'கிரா' பூசந்திக்குத் தெற்கே அமைந்துள்ளதும், மலாயாவின் மேல் கரையிலமைந்துள்ளதுமான 'தகோபா' மாவட்டத்தின் தலைநகராகிய தகோபா நகரமே பண்டு தக்கோலமென அழைக்கப்பட்டதென அறிஞர்கள் கருதுகின்றனர்.

இளங்கோவடிகளின் காப்பியமாம் சிலப்பதிகாரத்திற்கு உரை கண்ட அடியார்க்கு நல்லார், 'கிடாரவன்', 'தக்

[1] குலோத்துங்க சோழன் பிள்ளைத்தமிழ்-பாடல்-77
[2] The Cholas-Vol. I. P. 261

கோலி' 'அருமணன்' போன்ற அகில் வகைகளைத் [1] தமது உரை யில் குறிப்பிட்டுள்ளதால் பண்டை நாளில் தக்கோல நாட்டில் இருந்து அகில் தமிழ் நாட்டிற்கு இறக்குமதி செய்யப்பட்ட தென் பதும், தமிழ் நாட்டிற்கும், தக்கோல நாட்டிற்கும் பண்டு தொட்டுக் கடல் வாணிகம் வளர்ந்திருந்தது என்பதும் உள்ளங்கை நெல்லிக்கனி யாகும்.

சீன நாட்டு நூல்களில் தன்-மாலிங் (Tan-ma-ling) எனக் குறிக்கப் பெற்றுள்ள நாடும் இராசேந்திரன் மெய்க்கீர்த்தியில் 'மாதமாலிங்கம்' எனக் குறிக்கப் பெற்றுள்ளதும் ஒன்றே என்று கொள்ளுதல் நன்றே யாகும். இலங்கா சோகத்திற்கும், தமா லிங்கத்திற்கும் தரை வழியும், கடல் வழியும் இருந்தன என்றும், கடல் வழியே சென்ருல் ஆறு நாள் பயணம் மேற்கொள்ள வேண்டு மென்றும் சீன நூல் குறிக்கின்றது.

தன்மாலிங் என்பது மலாயாவின் கீழ்க் கரையில் உள்ள 'குவாண்டன்' என்னும் ஆறு கடலோடு கலக்கு மிடத்தில் அமைந்த தெமிலிங் (Temiling) அல்லது தெம்பலிங் (Tembeling) என்ற நாடு என்பதனை அறிஞர் செரினி (Gerni) குறிப்பிட்டுள் ளார். மாதமாலிங்கம், மலேயாத் தீபகற்பத்தில் 'பண்டன் விரி குடாவிற்கு' அண்மையி லிருந்ததாகத் திரு. கெ. கெ. பிள்ளை அவர்கள் கூறுகிருர். [2]

தக்கோல வெற்றிக்குப்பின் இராசேந்திரனின் கலங்கள் தமாலிங்கக் கரையில் இறங்கின. தமாலிங்கப் படையும், சோழரது படையும் போர் நிகழ்த்தின. இரு படைகளும் மலை யொடு மலை மோதுவதுபோல் கடும்போர் புரிந்தன. இருப்பினும் சோழரது படையின் வலிமை மிக்க தாக்குதலைத் தாங்க வியலாது தமாலிங்கப் படை பின் வாங்கத் தொடங்கிற்று. இறுதியில் சோழப் படை போற்றுதற்குரிய வெற்றியினைப் பெற்றது. தமாலிங்க நாடும் தமிழனது வெற்றிப் புகழ் பாடிற்று.

தமாலிங்க நாட்டினைத் தமதாகக் கொண்ட இராசேந்திரன் இலாமுரி தேசத்தை நோக்கித் தன் கப்பற் படையினைச் செலுத் தினுன். சோழர் படை இலாமுரி தேசத்தின் கடற் கரையில் இறங்கிற்று. இதைக் கேள்வியுற்ற இலாமுரி தேசப்படை சோழப் படையினை எதிர்த்து நின்று போரிட்டது. சோழப் படையினர்

[1] *சிலப்பதிகாரம் (மூன்ரும் பதிப்பு) ப. 378.*

[2] *தமிழக வரலாறு-'மக்களும் பண்பாடும்' பக்கம்-259-வரிகள்-9-11*

வீராவேசம் கொண்டனர். எதிரிகளைப் புறமுதுகிட்டு ஓடும்படி வன்மையாகத் தாக்கினர். இலாமுரி தேசமும் இராசேந்திர னுக்கு வெற்றிமாலை சூட்டியது.

இலாமுரிதேசம், சுமத்திராத் தீவின் வடபகுதியில் இருந்த நாடென்பதை அறுதியிட்டுக் கூறுவர். இதனையே இத்தாலி நாட்டுப் பயணியான மார்க்கோபோலோ லம்பிரி (Lambri) எனவும், அராபிய நாட்டுக்குப் புவியியல் வல்லுநர்கள் லாமுரி (Lamuri) எனவும், சீன நாட்டினர் லான்வூலி (Lon-wou-li) எனவும் குறிப்பிடுகின்றனர். இவ்விதம் பன்னாட்டினரால் குறிப் பிடப்பட்டுள்ள இலாமுரி தேசம் வணிகச் சிறப்பும், வளப்பமும் கொண்டதாகப் பண்டு விளங்கிய தென்பதை நாம் நினைவிற் கொள்ள வேண்டும். இலாமுரிதேசம் இப்போது 'லம்ரி'[1] என அழைக்கப் பெறுகிறது.

மேற்கூறப்பட்ட நாடுகளில் பெற்ற வெற்றிகள் பலவும் 'இராசேந்திரன் அலைகடல் நடுவுள் பலகலம் செலுத்தும் திற னுடையான்' என்பதைச் சுட்டிக் காட்டுகின்றன. இவ்வெற்றி கள் அனைத்தும் இராசேந்திரனது மெய்க்கீர்த்தியில் முறையாகக் குறிக்கப் பெற்றுள்ளன.

மேற்கூறப்பட்ட நாடுகள் அனைத்தும் மலாயா நாட்டையும், சுமத்திரா நாட்டையும் சார்ந்தும், சூழ்ந்து மிருந்த பகுதிகளாகு மென்பதையும், இவைகள் மாபெரும் நாடாகிய ஸ்ரீ விசய நாட் டின் ஆளுமைக் குட்பட்டுச் சங்கிராம விசயோத்துங்க வருமனால், ஆளப்பட்டு வந்த தென்பதையும், தெளிவாக அறியலாம். ஸ்ரீ விசய நாடு சுமத்திராவில் அமைந்து, சீரும் சிறப்பு மிக்க தாகப் பண்டு விளங்கியதை வரலாறு எடுத்துக் காட்டுகிறது. முதலாம் இராசராசன் காலத்திலும், சங்கிராம விசயோத்துங்க வருமனே கடார நாட்டின் மன்னனாகத் திகழ்ந்தான் என்பது ஈண்டு நினைவிற் கொள்ளத் தக்க தாகும். ஸ்ரீவிசய நாட்டின் மேலாதிக்கத்திற் குட்பட்ட நாடுகளாகச் 'சௌ-ஜு-குவா' குறிப் பிட்டுள்ள பதினைந்து நாடுகளும், இராசேந்திரன் வெற்றி பெற் றுள்ளதாக மெய்க்கீர்த்தியில் குறிப்பிட்டுள்ள நாடுகளும் ஏறத் தாழ ஒன்றாக இருத்தலின், இராசராசனுடைய வெற்றிகள் வர லாற்று அறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

கலம் பல செலுத்திக் கடல் கடந்து கடார நாட்டின் பல பகுதிகளை வென்று, ஆங்கு வெற்றிக் கொடி நாட்டிய இராசேந்

[1] தமிழக வரலாறு-'மக்களும் பண்பாடும்'-பக்கம்-259-வரிகள்-12-13

திரன், கடலலைகள் புகழ் பாடக் கரை காணு இன்பக் கடலில் மிதந்தவாறே தன் தாய்நாடு திரும்பினுன்.

சிங்கத் தமிழனும் இவன் தன் கடற்படையை வங்கக் கடலின்கண் செலுத்திஞன். அப்பொழுது வழியில் அமைந் துள்ள மாநக்கவாரத் தீவகம், பேரெழில் மிக்க சோலைகளைக் கொண்டு பூ மணமும், புகழ் மணமும் பரப்பியமை இவன் கண்ணையும், கருத்தையும் கவர்ந்தது.

'குயில்கூவிக் கொண்டிருக்கும் ; கோலம் மிகுந்த
மயிலாடிக் கொண்டிருக்கும் ; வாசம் உடைய நல்
காற்றுக் குளிர்ந்தடிக்கும் ; கண்ணுடி போன்றநீர்
ஊற்றுகள் உண்டு ; கனிமரங்கள் மிக்க உண்டு;
பூக்கள் மணங்கமழும் ; பூக்கள் தோறும் சென்றுதே
னீக்கள் இருந்தபடி இன்னிசைபா டிக்களிக்கும்'

என்னும் பாவேந்தன் பாரதிதாசனின் சஞ்சீவி பருவதத்தின் சாரலைப் போன்று எழில் குலுங்கும் தீவகமாகத் திகழ்ந்தது தான் மாநக்க வாரம். ஆங்குச் சோழப் படைகள் இறக்கப்பட்டன. அத்தீவகத்தில் தாக்குதல் தொடங்கப் பெற்றது. நக்க வாரமும் கங்கை கொண்டானுக்கு வெற்றி மாலையைச் சூட்டிப் பெருமை கொண்டது. இக்கால நிக்கோபர் தீவுகளே அக்கால மாநக்க வார மாகும். தென்னை மரங்கள் ஓங்கி உயர்ந்த சிறப்பினைப் பெற்ற இத்தீவகங்களினின்றும், நக்கவாரம் (தென்னம்) பிள்ளை கள் வெளிநாடுகட்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இத்துணைச் சிறப்பும், பேரெழிலும் வாய்ந்த நக்கவாரம் இராசேந்திரன் வச மாயிற்று.

தன்னைப் போற்றி வளர்த்த திருநாடு, தன் தாயை ஈன்ற திருநாடு, அலை கடலுக் கப்பாலும் பெரும்புகழ் பரப்பிப் பொன் ருது நின்று நிலவக் கடலிடைத் தீவுகட்குச் சென்று, பகை வென்று தன் ஆண்மையையும், ஆற்றலையும் ஆங்குப் பறை சாற்றினுன் நம் இராசேந்திரன். கடலலையையும் கடந்து, கடிது சென்றது இவனது மங்காப் புகழ். இவனது கடல் கடந்த வெற்றியினை 'மாவீரன் நெப்போலியனின்' கடல் கடந்த வெற்றியுடன் ஒப்பிடுவது சாலப் பொருந்தும்.

பார் புகழும் இராசேந்திரன் எண்ணிலா வெற்றிகள் பெற்ற போதிலும், அவனின் கங்கை வெற்றியும், கடார வெற்றியுமே இலக்கியங்களால் பலபடப் பாராட்டப் பெறுகின்றன. அவன் தனது நிலப்படை வலிமையால் வட வேந்தர்களை வென்று அதன் நினைவுச் சின்னமாகக் 'கங்கை கொண்டான்' என்னும்

சிறப்புப் பெயரினையும், தன் கடற்படையின் ஆற்றலினுல் அலை கடல் நடுவுள் பலகலஞ் செலுத்திக் கடாரம் வென்றதன் அறி குறியாகக் 'கடாரம் கொண்டான்' என்னும் வெற்றிப் பெயரினை யும் பெற்றுப் பெருமை கொண்டான். தமிழர் தம் வீரத்தின் விளைகளனுய், வெற்றியின் நிலைக்களனுய், போற்றப் பெறும் இவ்விரு வெற்றிகளும் இலக்கியங்களால் மிகவும் பாராட்டப்படு கின்றன.

'கங்கா நதியுங் கடாரமும் கைக்கொண்டு
சிங்கா தனத்திருந்த செம்பியர்கோன்'[1]

'கங்கா நதியுங் கடாரமும் கைக்கொண்டு
கங்கா புரிபுரந்த கற்பகம்'[2]

'களிறு கங்கைநீ ருண்ண மண்ணையில்
காய்சினத் தொடே கலவு செம்பியன்
குளிறு தெண்டிரைக் குரைகடாரமுங்
கொண்டு மண்டலங் குடையுள் வைத்ததும்'[3]

என்று பரணிக்கோர் செயங்கொண்டானுல் 'கலிங்கத்துப் பரணி' யிலும், பாவேந்தன் ஒட்டக்கூத்தனுல் 'மூவருலா' விலும் நம் இராசேந்திரன் பாராட்டப் பெறுகிருன். எனவே, இவை பெறற்கரிய வெற்றிகள் என்பது புலனுகும்.

இராசேந்திரன் வாளாண்மையும், தோளாண்மையும் கொண்டு, மாவீரனுகத் திகழ்ந்து, வெற்றிகள் பெற்றமையின், இவன் கிரேக்க மாவீரன் அலெக்சாந்தருடனும், கடல் கடந்த நாடுகளில் வியத்தகு வெற்றிகள் பெற்றமையின், பிரெஞ்சு நாட்டு மாவீரன் நெப்போலியனுடனும் ஒப்புமை நோக்கத் தக்கவனுவான்.

இராசேந்திரனுடைய கங்கை வெற்றியையும், கடார வெற் றியையும், தமிழ் மக்கள் என்றென்றும் மறவாது, நினைந்து-நினைந்து மகிழ்தற் பொருட்டுத் தமிழகத்தில் அமைந்த ஊரின் பெயர்கள் பலவாகும். இவை என்றென்றும் பொன்றுது நின்று நிலவித் தமிழனின் வழிவழி வந்த வீரத்தினை உலகினுக்கு உணர்த்திக் கொண்டிருக்கும் என்பதில் ஐயமில்லை. அவற்றுள் தென்னுர்க்காடு மாவட்டத்தில், விருத்தாசலம் வட்டத்தில் உள்ள 'கங்கை கொண்டான்' என்னும் ஊரும், திருநெல்வேலி மாவட் டத்தில் உள்ள 'கங்கை கொண்டான்' என்னும் ஊரும்,

[1] குலோத்துங்க சோழன் உலா-வரிகள்-49-50
[2] விக்கிரம சோழன் உலா-வரிகள்-34-36
[3] கலிங்கத்துப் பரணி-பா-189

இராமநாதபுரம் மாவட்டம் முதுகுளத்தூர் வட்டத்தில் அமைந்துள்ள 'கங்கை கொண்டான்' என்னும் ஊரும், இராசேந்திரனது கங்கை கொண்ட நிகழ்ச்சியினை மங்காது, மறையாது, வருங்கால மக்களுக்கு நினைவூட்டிக் கொண்டே யிருக்கும் என்ப துறுதி.

தஞ்சை மாவட்டத்தில் மாயவரம் வட்டத்தில் அமைந்துள்ள, 'கடாரம் கொண்டான்' என்னும் இடமும், தஞ்சை மாவட்டத்தின்கண் பண்டு தொட்டுத் தலை சிறந்த நகராய் விளங்கி வரும் திருவாரூருக் கருகில் அமைந்துள்ள 'கடாரம் கொண்டான்' என்ற ஊரும் தொண்டை நாட்டு மணவிற் கோட்டத்தில் 'கடாரங் கொண்ட சோழபுரம்' என்னும் ஊரும் கடலாண்ட கர்வலனும் இராசேந்திர சோழனின் கடார வெற்றியின் சின்னங்களாகச் சிறப்புடன் விளங்குகின்றன.

'இராசேந்திர னென்னும் மறத் தமிழன் ஒருவன் பிறந்தான்; ஆண்டான்; வியத்தகு வெற்றிகள் பல பெற்றான்; மாண்டான்; மண்ணோடு மண்ணாக ஆயினான்' என்பது பழங்கதையாய் ஆன போதிலும் அவனது பெயர் தாங்கி நிற்கும் ஊர்களும், இலக்கியங்களும் என்றும் அவனது பெரும் புகழினைப் பாடிக்கொண்டே யிருக்கும் என்பதில் நமக் கெல்லாம் அசைக்க முடியாத, உறுதியான நம்பிக்கை ஏற்பட் டுள்ளது.

இராசேந்திரனது மெய்க்கீர்த்தியினை நாம் ஆய்ந்து பார்க்குங்கால், கடாரப் படையெழுச்சிக்குப்பின், இவனது போர்ச் செயல்கள் ஓரளவு முடிவு பெற்றதாக அறிந்து கொள்ளலாம். கடாரப் படையெழுச்சி முடிவுற்ற பிறகு ஏறத்தாழ இருபது ஆண்டுகள் இராசேந்திரன் சோழ நாட்டரியணையில், செங்கோலோச்சினான். இவ்விருபதாண்டு காலமும் சோணாட்டில் குழப்பங்களின்றி, அமைதிக் காலமாக இருந்த தென்று பண்டாரகர் எஸ். கிருட்டினசாமி அய்யங்கார் போன்ற தற்கால அறிஞர்கள் கருதுகின்றனர். ஆனால், இராசேந்திரனின் மெய்க்கீர்த்தியினை நாம் ஆய்ந்து பார்க்குங்கால் அக்காலத்திலும் இடைவிடாது போர் நிகழ்ந்த வண்ணமா யிருந்ததை யறியலாம்.

கடாரப் படையெழுச்சிக்குப்பின் இவன் எந்த விதமான போர்களிலும் ஈடுபட வில்லை என்று நாம் கூற வியலாது. இராசேந்திரனின் பதின்மூன்றாம் ஆட்சி யாண்டுக் காலத்தில் அதாவது கி.பி. 1025 இல் இவனது கடாரப் படையெழுச்சி முற்றுப் பெற்றதாக அறியலாம். இப்படையெழுச்சிக்குப்பின் இவனது ஆட்சியில் ஓரளவு அமைதி நிலவியது. இருப்பினும் இவனால்

வென்றடக்கப்பட்டு, அடிமைப்படுத்தப்பட்ட சில அரசுகள், விடுதலை வேட்கையுற்றுத் தன்னுரிமையை நிலை நாட்டும் முயற்சியில் ஈடுபட்டு, ஒரு சில கலகங்கள் விளைவித்தன என்பது உண்மையே. அவற்றுள் பாண்டிய நாட்டிலும், மலை நாட்டிலும், ஈழத்திலும், மேலைச் சாளுக்கிய நாட்டிலும் எழுந்த கலகங்களை ஈண்டு எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

தமிழரசர் மூவருள், பழமை மிக்கவர், தமிழ் வளர்த்தவர் என்றெல்லாம் போற்றப்பெறும் பெருமைக்குரிய பாண்டியர் தனியாட்சி மேற்கொள்வதில் தணியா ஆர்வம் கொண்டு பன் முறை சோழருடன் போர் தொடுத்தனர். தமிழர்தம் பிடியில் சிக்கித் தம் உரிமையினை இழந்த ஈழத்தினரும் விடுதலை வேட்கை யுடன் சோழருடன் தளராது போர் செய்தனர். சோழர்களின் தீராப் பகைவர்களும், நாட்டுப் பற்று மிக்கோருமான மேலைச் சாளுக்கியரும் தமது விடுதலை உணர்ச்சியினை நிலைநாட்டும் பொருட்டுச் சோழருடன் அடிக்கடி போர் நிகழ்த்தி வந்தனர். மலைநாட்டு மக்களும் இவர்கட்குச் சளைத்தவர்கள் அல்லர். இவர் களது தனியுரிமைப் போர் சோழர் வரலாற்றில் முக்கியமான அத்தியாய மாகும்.

பன்னெடுங் காலமாகச் சோழர்களால் அடக்கி ஒடுக்கப் பட்ட இவர்கள் இராசேந்திரனின் இறுதிக் காலத்தில் புதுப் பொலிவும், புத்துணர்ச்சியும் கொண்டு கிளர்ந் தெழுந்தனர். எனவே, நாட்டின் பல்வேறு பகுதிகளில் குழப்பமும், கொந் தளிப்பும் விளைந்தன.

இக்கலகங்களையும், புரட்சிகளையும் அடக்கி ஒடுக்கும் பணி யினை மேற்கொண்டவன் இராசேந்திரனின் மகனான முதலாம் இராசாதிராச னாவான். இவன் இப்புரட்சிகளை அடக்கிய நிகழ்ச்சி களை இவனது மெய்க்கீர்த்தி விரிவாக, முறையாக எடுத்துக் கூறுகிறது. இவன் இவ்விதம் படை நடத்திச் சென்று கலகங்களை ஒடுக்கி அமைதியை நிலை நாட்டியதால், இராசேந்திரன் தனது இறுதிக் காலத்தில் போர் நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள வேண்டிய தேவை ஏற்பட வில்லை. தன் மகனின் ஆண்மை யும், ஆற்றலும் கண்டு இராசேந்திரன் எல்லை யற்ற மகிழ்ச்சி கொண்டான்.

இப்போர்ச் செயல்கள், இராசராசன் ஆட்சிக் காலத்தில் இராசேந்திரன் மேற்கொண்ட போர்ச் செயல்களுடன் ஒப்பிடத் தக்க தாகும். இது போன்ற போர்ச் செயல்களினால் தன்

தந்தையின் காலத்தே இராசாதிராசன் போர் மேற்கொண்டு, திறமான போர்ப் பயிற்சி பெற்றான் என்பதும் விளங்கும்.

தனக்குத் தன் தந்தையான இராசராசன் போர்ச் செயல்களிலும், அரசியல் துறைகளிலும் நற்பயிற்சி யளித்துத் தன்னை உருவாக்கியது போல், மாமன்னனான இராசேந்திரனும் தன் மகனான இராசாதிராசனைப் போர்க் கலையிலும், அரசியல் ஆட்சித் துறையிலும் ஈடுபடுத்தி, நற்பயிற்சி யளித்துச் சிறந்ததொரு எதிர்காலத்தினை, அவனுக்கு உருவாக்கித் தந்தான் எனக் கூறலாம். தன் வாழ்நாளிலேயே தன் மகன் போர் மேற்கொண்டு திக்கெட்டும் வெற்றி முரசு கொட்டி வருவதைக் கண்டு பூரிக்கும் மன்னர்கள் நற்பேறு பெற்றவ ராவர். அவ்விதம் நற்பேறு பெற்றவர்களுள் இராசேந்திர சோழனும் ஒருவ னாவான்.

அரசியல் திறனும் கூர்த்த மதியும் கொண்ட, இராசேந்திர சோழன் பாண்டியரையும், சேரரையும் வென்றதோ டமையாது அவர்கள் நாடுகளைச் சோணாட்டுடன் இணைத்துக் கொண்டான்; தன் மகனாகிய சடைய வருமன் சுந்தர சோழ பாண்டியனை மதுரை மாநகரின்கண் புதியதாக அமைக்கப்பட்ட அரண்மனையிலிருந்து கொண்டு அப்பகுதிகளை ஆட்சி செய்யத் தேவையான ஏற்பாடுகளைச் செய்திருந்தான். இவ்வேற்பாடு இராசேந்திரனின் போற்றத் தகுந்த அரசியல் அறிவிற்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும்.

இராசராசன் பாண்டிய நாட்டினையும், சேர நாட்டினையும் வென்று தன்னடிப் படுத்தினான். இவன் அவைகளைச் சோணாட்டுடன் இணைத்துக் கொண்டானே தவிர; ஆங்குத் தன் அரசப் பிரதிநிதிகளை நியமித்து ஆட்சி புரியத் தவறி விட்டான். எனவே தான், பாண்டிய நாட்டின்கண் மறுபடியும் கிளர்ச்சி ஏற்பட்டது. இதனைக் கண்ணுற்ற நம் இராசேந்திரன் தன் மகனை ஆங்குச் சோழப் பிரதிநிதியாக அனுப்பி நல்லாட்சி நிலவ வழி வகுத்தான். எனவே, இவன் தன் தந்தையினும் மேம்பட்ட அரசியல் திறன் கொண்டவன் என்பது தெற்றென விளங்கும்.

## இராசாதிராசன் நடத்திய போர்கள்

### பாண்டியருடன் போர்

சடைய வருமன் சுந்தர சோழ பாண்டியன் பாண்டியப் பகுதி யனைத்தையும் நன்முறையில் ஆட்சி செய்து வந்த காலை, மானாபரணன், வீரகேரளன் சுந்தர பாண்டியன் போன்ற மன்னர்

களும் பாண்டிய நாட்டினைச் சோழர்க் கடங்கிய சிற்றரசர் களாக ஆண்டு வந்தனர். நாட்டுப் பற்றும், வீரமும் மிக்க பாண்டியர்கள் தம் நாடுகளை அன்னிய ஆதிக்கத்தினின்றும் விடுவித்துத் தனியாட்சி செய்யத் தணியா ஆர்வம் கொண்டனர்; உள் நாட்டில் குழப்பம் விளைவித்து நாட்டின் அமைதியையும் ஒழுங்கையும் கெடுத்தனர்.

பாண்டியர்கள் புரட்சிக் கொடி யுயர்த்தியதைக் கண்ட சோணுட்டின் இளவரசனுகிய இராசாதிராசன் பெருஞ்சினம் கொண்டான்; வீர மிக்க சோழப் படையினைப் பாண்டிநாடு நோக்கிப் புறப்பட ஆணை பிறப்பித்தான். புலிக்கொடி யேந்திய சோழப்படை பாண்டி நாட்டை அடைந்தது; பாண்டியப் படையை எதிர்த்துநின்று கடும்போர் புரிந்தது. சோழப்படையின் தாக்குதலின்முன் எதிர்நிற்க மாட்டாது பாண்டியப்படை நிலைகுலைந்து ஓடிற்று.

பாண்டியர்க்கே உரிய பெருவீரத்துடன், தம் உடலில் கடைசி சொட்டுக் குருதி யுள்ளவரை, கடும்போர் புரிந்த, பாண்டிய வேந்தர்களாம் வீரகேரளனும், மானுபரணனும் போர்க் களத்திலேயே உயிரை விட்டு வீரமரணம் அடைந்தனர். போர்க் களத்தில் பெருவீரம் விளைவித்த பாண்டிய வேந்தனும் சுந்தர பாண்டியனே, தன் முடியையும், குடையையும், வாளையும், வீரத்தையும் போர்க்களத்தே போட்டுவிட்டு உயிர் பிழைத்தால் போதுமென்ற எண்ணத்துடனும், தலைவிரி கோலத்துடனும் ஓடி ஒளிந்தான்.[1] இவ்விதம் போர்க் களத்தினின்றும் ஓடி ஒளிந்த சுந்தர பாண்டியன் முல்லையூர் எனும் ஊரின்கண் தஞ்சம் புகுந்தான்.

இராசாதிராசன் பாண்டிய நாட்டின் குழப்பத்தினையும் புரட்சியினையும் எவ்வாண்டு அடக்கி வெற்றி பெற்றுன் என்பதை நாம் அறுதியிட்டு உறுதியுடன் கூறுதல் இயலாது.[2] இந்நிகழ்ச்சியினைக் குறிக்கும் கல்வெட்டுகள் சோழ நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் யாண்டும் காணப்பட வில்லை; இப்போர் நிகழ்ச்சிகளை நாம் இராசராசனின் மெய்க்கீர்த்தியைக் கொண்டு தான் அறிய முடிகிறது.

எனவே, பாண்டிய நாட்டின்கண் கலகம் விளைவித்த மூன்று பாண்டி வேந்தர்களையும் போரில் வென்று, அமைதியை ஏற்

[1] S. I. I. Vol. IV. No. 867
[2] S I. I Vol III. p. 56

படுத்தும் பணியில் இராசாதிராசன் வெற்றி பெற்ருன் என்பதை யும், பாண்டியநாட்டு மக்களின் விடுதலை வேட்கை அடக்கி யொடுக்கப்பட்ட தென்பதையும் அறியலாம். மேற்கூறிய நிகழ்ச்சியினை இராசாதிராசனின் மெய்க்கீர்த்தி,

'மன்னுபல் லூழியுட். டென்னவர் மூவருள்
மானு பரணன் பொன்முடி யானைப்
பருமணிப் பசுந்தலை பொருகளத் தரிந்து
வாரன வியகழல் வீரகே ரளனை
முனைவயிற் பிடித்துத் தனது வாரணக்
கதக்க ளிற்றினு லுதைப்பித் தருளி
அந்தமில் பெரும்புகழ்ச் சுந்தர பாண்டியன்
கொற்றவெண் குடையும் கற்றைவெண் கவரியும்
சிங்கா தனமும் வெங்களத் திழந்துதன்
முடிவிழத் தலைவிரித் தடிதளர்ந் தோடத்
தொல்லை முல்லையூர்த் துரத்தி யொல்கலில்'

என்று குறிக்கின்றது.

### மலைநாட்டுப் போர்

தன்மானமும், தன்னுட்சி வேட்கையும் கொண்ட பாண்டி யர்களைப் போலவே சேரநாட்டு மக்களும் விடுதலை வேட்கை கொண்டு சோழர் பிடியிலிருந்து தங்களை விடுவித்துக் கொள்ள எத்தனித்தனர். தங்களாலியன்ற படைகளை ஒருங்கிணைத்துச் சோழராட்சிக் கெதிராகப் புரட்சிக் கொடி யுயர்த்தினர்.

அக்காலை சேரநாடு சிறுசிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுப் பல குறுநில மன்னர்களால் ஆளப்பட்டு வந்தது. அவர்களுள் மிக்க புகழும், தக்க படையுங் கொண்டு, அக்காலை ஆட்சி புரிந் தவன் மூவர் திருவடியாகிய கண்டன் காரி வருமன் என்னும் மன்னனுவான். இவன் எலி நாட்டுக்கு அண்மையில் உள்ள இராமகுட நாட்டினை ஆண்டு வந்தான். இராமகுட நாட்டு மன்னர்கள் மூஷிக மரபினைச் சேர்ந்தவர்கள் என்று தங்களைக் கூறிக் கொண்டனர். சத்திரிய மன்னர் குலத்தினர் அனைவரை யும் கொன்று அழித்த பரசுராமரால் இவர்கள் முடி சூட்டப்பெற்ற தால் பெருமை சான்றவர்களாய்ப் போற்றப் படுகின்றனர்.[1]

சேர நாட்டில் சோழராட்சிக்கு எதிராகச் சேரர்கள் திரண் டெழுந்த செய்தியினைக் கேள்வியுற்ற இராசேந்திர சோழ

[1] T. A. S. Vol. II. pp. 87-113

தேவன், தன் மகனும் இளவரசனுமான இராசாதிராசனைச்சேர நாட்டின்மீது ஏவினன். இராசாதிராசனும், பெரும்படையைத் திரட்டிக் கொண்டு சேரநாடு நோக்கிச் சென்ருன். சோழர் படையினர் ஆறுகளையும், குன்றுகளையும், காடுகளையுங் கடந்து சென்ற போதிலும் களைப்புருது மன உறுதியும் உற்சாகமும் கொண்டு கடிது சென்றனர்.

சேரநாடு நோக்கிச் சென்ற சோழர்படை முதன் முதலில் வேணுட்டின்மீது தாக்குதல் நிகழ்த்தியது. வேணுட்டு மன்னன், கூபக நாட்டு மன்னனின் பேருதவியைப் பெற்றுச் சோழப் படையினை எதிர்த்து நின்ருன். சோழர் படையினை வெல்லும் பொருட்டு, வேணுட்டு மன்னன் மேற்கொண்ட முயற்சிகள் வீணுயின. இறுதியில் வேணுட்டு மன்னன் செருக்களத்தே மாண்டான்.[1]

அடுத்து வேணுட்டு மன்னனுக்குப் படையுதவி யளித்த கூபக நாட்டு மன்னனைப் பழிவாங்க இராசாதிராசன் உறுதி பூண்டான். கூபக நாடு என்பது தென்திருவாங்கூர் பகுதியினைக் கொண்ட நாடாகும். இராசாதிராசன் கூபக நாட்டின்மீது தாக்குதல் நடத்தினுன். சோழப்படையுடன் எதிர்த்துப் போர் செய்த கூபக நாட்டுப் படை பின்வாங்கி ஓடிற்று. கூபக நாட்டு மன்னனும் அச்சத்தினுல் வீரங் குலேந்து புறமுதுகு காட்டி ஓடி விட்டான்.[2]

'வேணுட் டரசைச் சேணுட் டொதுக்கிக்
கூவகத் தரசை சேவகந் தொலேத்து'

என்று இராசாதிராசனின் மெய்க்கீர்த்தியில் கூறப்பட்டுள்ள பகுதிக்கு 'வேணுட்டரசனைக் கொன்று அவனுக்கு உட்பட்டிருந்த கூவகத்தரசனை விடுவித்து' என்று சிலர் பொருள் கொள்கின்றனர். பண்டாரகர் மா. இராசமாணிக்கரும் 'சோழர் வரலாறு' என்னும் தம் நூலில், 'வழியில் வேள் நாட்டு அரசனைத் தாக்கிக் கொன்று, கூபக நாட்டு அரசனை விடுவித்தான்' என்று கூறியுள்ளார்.[3] இவ்விதம் பொருள் கொள்வது ஏற்புடைத் தாகாது. 'வேணுட்டு மன்னனைக் கொன்று கூபக மன்னனின் வீரங் கெடுத்து' எனப் பொருள் கொள்வதே சிறப் புடைய தாகும்.[4]

[1] 75 of 1895. M. E. R. 1913-II. 26
[2] S. I. I. Vol. V-No. 633
[3] சோழர் வரலாறு-பக்கம்-111
[4] The cholas. Vol. I. p. 270

இராமகுட நாட்டின் மன்னனுன மூவர் திருவடியான[1] கண்டன் காரி வருமனின் ஐம்பத் தொன்பதாம் ஆட்சி யாண்டுக் கல்வெட் டொன்று, எலிமலைக் கருகில் கண்டெடுக்கப்பட் டுள்ளது. இது கி. பி. பதினொன்ரும் நூற்ருண்டுக் கல்வெட்டா கும்.[2] இக்கல்வெட்டில் இராசேந்திர சோழ சமய சேனபதி என்பவனைப்பற்றிக் குறிக்கப் பெற்றிருத்தலின் இராசாதிராச னுடன் போரிட்ட இராமகுட நாட்டு மன்னன் காரி வருமனே எனக் கொள்ள இட முண்டு. இராசாதிராசனின் மெய்க்கீர்த்தி யில் இராமகுட நாட்டு மன்னனின் பெயர் குறிக்கப்பெற வில்லை.

வேணாட்டு மன்னனையும் கூபக நாட்டு மன்னனையும் தோல்வியுறச் செய்த இராசேந்திரன் இறுதியாகச் சேரநாட்டின் கடல் துறைப் பட்டினமான காந்தளூர்ச் சாலையின்மீது தாக்குதல் நடத்தினன்; காந்தளூர்ச் சாலையில் கல மறுத்தான்; தன் வீர மிக்க பாட்டனையும் தந்தையையும் போல் இவனும் காந்த ளூர்ச் சாலை கல மறுத்தருளிச் சோழர் வரலாற்றில் மங்காப் புகழ் பெற்ருன். இப்போர் நிகழ்ச்சியினை,

‘வேணாட் டரசைச் சேணாட் டொதுக்கி
மேவுபுக ழிராமகுட மூவர்கெட முனிந்து
மிடல்கெழு வில்லவன் குடர்மடிக் கொண்டுதன்
நாடுவிட் டோடிக் காடுபுக் கொளிப்ப
வஞ்சியம் புதுமலர் மலைந்தாங் கெஞ்சலில்
வேலைகெழு காந்தளூர்ச் சாலை கலமறுத்து’

என்ற இராசாதிராசனின் மெய்க்கீர்த்திப் பகுதியால் அறிய லாம்.

இதுகாறும் கூறியவற்ருல் உடையார் இராசேந்திர சோழ தேவனின் பிந்திய ஆட்சிக் காலத்தில் பாண்டிய, சேர நாட் டின் பகுதியினை, ஆட்சி புரிந்து வந்தவன் சடைய வருமன் சுந்தர சோழ பாண்டிய னென்றும், அவனது காலத்தில் ஏற் பட்ட கலகங்களை அடக்கி, ஒடுக்கி அமைதியினை நிலைநாட்டித் தன் தம்பிக்குப் பேருதவி புரிந்தவன் இராசாதிராசன் என்றும் அறியலாம்.

### ஈழநாட்டுப் போர்

மாமன்னர் முதலாம் இராசராசனும், முதலாம் இராசேந் திரனும் ஈழநாட்டின்மீது படை கொண்டு சென்று, பெரு

[1] M. E. R. 1930. p. 86. 523 of 1930
[2] Ins. 523 of 1930

வெற்றி பெற்றுத் திரும்பிய செய்தியை நாம் முன்பே கண்டோம். இராசேந்திரன் ஆட்சியின் தொடக்கக் காலத்தில் மேற்கொள்ளப் பட்ட ஈழப் படையெழுச்சியின் விளைவாக ஏறத்தாழப் பத்து ஆண்டுகள் ஈழநாடு முழுமையும் சோழராட்சிக்குட் பட்டிருந்தது. ஈழ வேந்தனும் ஐந்தாம் மகிந்தனின் மகனுகிய காசிபன் என்பான் கி.பி. 1029இல் உரோகண நாட்டைக் கைப்பற்றி விக்கிரம பாகு எனும் பெயருடன் ஆண்டு வந்தான். இவனது ஆட்சி கி.பி. 1014 வரையில் நீடித்தது.

இவன் ஈழநாடு முழுமையினையும் சோழர்களிடமிருந்து கைப்பற்ற வேண்டுமெனத் திட்டம் தீட்டி யிருந்தான்; சோழப் படையுடன் போர் மேற்கொண்டான். கி.பி. 1041இல் இவன் போரில் இறந்துபட்டான். இவன் இறந்துபட்டதால் இராசாதிராசன் இவனது அரசச் சின்னங்களைக் கவர்ந்து கொண்டான். சோழர் கல்வெட்டுகள் மேற்கூறிய செய்திகளைக் கூறுகின்றன.[1]

ஆனல், இலங்கை வரலாற்று நூலான மகாவமிசமோ, சோழராட்சியிலிருந்து ஈழம் முழுவதையும் மீட்கத் திட்டமிட்டிருந்த காசிபன் நோய்வாய்ப்பட் டிறந்தான் எனக் குறித்துள்ளது.

அஃது எங்ஙன மாயினும் கி.பி. 1014இல் விக்கிரமபாகு இறந்துபட்டான் என்பது மட்டும் உறுதி.

விக்கிரமபாகுவிற்குப்பின் கித்தி என்ற வேந்தன் உரோகண நாட்டினை எட்டே நாள்கள் ஆண்டான்.

கித்திக்குப்பின் மகாலான கித்தி எனும் வேந்தன் மூன்றுண்டு காலம் உரோகண நாட்டினை ஆண்டு வந்தான். விக்கிரம பாகுவைப் போலவே இவனும் ஈழநாட்டினைச் சோழராதிக்கத்தினின்றும் விடுவிக்க முடி வெடுத்தான். ஈழப் படையினை ஒன்று திரட்டிச் சோழப் படையினை எதிர்த்தான். இவனது கடும் எதிர்ப்பினுலும் சோழப் படையினை வெல்ல இயல வில்லை. போரில் படுதோல்வி எய்தினுன்; தன்மான மிக்கவனுதலின் அவமானத்தைத் தாங்கிக் கொள்ள வியலாது, தனது கையினுலேயே தன் கழுத்தினை யறுத்துக் கொண்டு கி.பி. 1044இல் இறந்து பட்டான்.[2]

[1] S. I. I. Vol. IV. No. 539

[2] E. P. Zeylanic. Vol. III. No. 1. A chronological Table of ceylon kings.

வெற்றி பெற்ற சோழர் படை அவனது அரச முடியினையும், விலை யுயர்ந்த அணிகலன்களையும், அரும்பொருள்களையும் கைப் பற்றிச் சோணாட்டிற்கு அனுப்பி விட்டன. மேற்கூறிய செய்தி களைப் பற்றிச் சோழ மன்னர்களின் கல்வெட்டுகளில் எவ்வித குறிப்புகளும் காணப்பட வில்லை யாயினும், மகாவமிசம் விளக்க மாகக் குறிப்பிடுகின்றன.

தந்தை ஈழத்தில் இறந்து பட்ட செய்தி கேட்ட விக்கம பண்டு துளுவ நாட்டினின்றும் புறப்பட்டு ஈழநாடு வந்தடைந் தான். இவன் கி.பி. 1044இல் உரோகண நாட்டின் வேந்தனாக முடி சூட்டிக் கொண்டான். இவன் தாய் வழியில் பாண்டியனை யும் தந்தை வழியில் ஈழத்தவனையும் முன்னோனாகக் கொண்ட வனாவான். இவன் ஈழ நாட்டில் வசிப்பதற்கு அஞ்சி துளுவ நாட்டில் வாழ்ந்து வந்தான்.

விக்கம பண்டு அயோத்தியை ஆண்டு வந்த சகதீபாலன் என்பவனுடன் செய்த போரில் இறந்துபட்டான். இலங்கை வேந்தனை வென்ற அவனையும் சோழர் கொன்றனர்.

விக்கம பண்டுவிற்குப் பின்பு அரியணை யேறிய பராக்கிரமன் என்ற மன்னனையும் சோழர் கொன்றனர்.

இராசேந்திர சோழனின் பிற்காலத்தில் ஏற்பட்ட இரண்டா வது ஈழப் படையெழுச்சி, இராசாதிராசனால் மேற்கொள்ளப் பெற்று இவ்வாறு முடிவெய்திற்று. ஈழ நாட்டினர் நாட்டுப்பற்றில் சிறந்தவர்க ளாயினும் ஒற்றுமை யின்மையின் காரணமாகச் சோழர் படையினை வென்று தன்னாட்சியினை நிறுவ முடிய வில்லை. இருப்பினும், ஈழத்தினர் சோழர்களுடன் தம் நாட்டினை விடு விக்கும் பணியில் தொடர்ந்து ஈடுபட்டனர் என்பது போற்றத் தகுந்த ஒன்றாகும்.

...............'பொருகட லிலங்கையர்
கோமான் விக்கிரம பாகுவின் மகுடமும்
முன்றனக் குடைந்த தென்றமிழ் மண்டல
முழுவது மிழந்த தழுகட லீழம்
புக்கவி லங்கே சனாகிய விக்கிரம
பாண்டியன் பருமணி மகுடமும் காண்டகு
தன்னவாக் கித்தன் கன்னகுச் சியினும்
ஆர்கலி யீழஞ் சீரிதென் றெண்ணி
உளங்கொளந் நாடுதன் னுறவொடும் புகுந்து
விளங்குமுடி கவித்த வீரசலா மேகன்

போர்க்களத் தஞ்சித் தன்கார்க்களி றிழிந்து
கவ்வையுற் ரேடக் காதலி யொடுந்தன்
றவ்வையைப் பிடித்துத் தாயைமூக் கரிய
ஆங்கவ மானம் நீங்குதற் காக
மீட்டும் வந்து வாட்டொழில் புரிந்து
வெங்களத் துலந்தவச் சிங்களத் தரசன்
பொன்னணி முடியுங் கன்னரன் வழிவந்
துரைக்கொ ளீழத் தரசனு கியசீ
வல்லவ மதன ராசன் மல்லொளித்
தடமணி முடியுங் கொண்டு'

### மேலைச் சாளுக்கியப் போர்

நீண்ட நெடுங்காலமாக நிகழ்ந்து வந்த சோழ-மேலைச் சாளுக்கியப் போர் இராசேந்திரனது இறுதிக் காலத்திலும் தொடர்ந்து நடைபெற்றது. சோழ-சாளுக்கியப் போர் தென்னிந்திய வரலாற்றில் சுவை மிக்கதொரு அத்தியாய மாகும்.

இராசேந்திரனது தொடக்கக் காலத்தில், சோழர்களை எதிர்த்துப் போர் செய்த சாளுக்கிய மன்னனான இரண்டாம் செயசிம்மன் கி.பி. 1042இல் இறந்துபட்டான்.

இரண்டாம் செயசிங்கனுக்குபின் அவன் மகனான முதலாம் சோமேசுவரன் மேலைச் சாளுக்கிய மன்னனாக முடி சூட்டப் பெற்றான். இவன் ஆகவ மல்லன், திரைலோக்கிய மல்லன் என்னும் பெயர்களாலும் அழைக்கப் பெறுகிறான்; குறிப்பாகச் சோழர் கல்வெட்டுகளில் இவன் 'ஆகவ மல்லன்' என்றே குறிக்கப் பெறுகிறான். 'ஆகவ மல்லன்' என்பதன் பொருள் 'பெருவீரன்' என்பதாகும். தனது சிறப்புப் பெயருக் கேற்ப ஆகவ மல்லன் வீரத்தினுக்கோர் எடுத்துக்காட்டாய் விளங்குகிறான். திரைலோக்கிய மல்லன் சோழனான மத யானைக்குச் சிங்கம், கலிங்க அரசனான கருமேகத்திற்குப் புயல், பாஞ்சால அரசனாகிய இருளுக்குச் சூரியன், மகத அரசனான ஆரண்யத்திற்கோர் தீ, மாளவ அரசனான மலைக்கோர் வச்சிராயுதம், கேரள அரசனாகிய பாம்புக்குக் கருடன், நேபாள அரசனான கடலுக்கு ஊழிக் கால நெருப்பு' எனக் கல்வெட்டுப் புகழ்ந்து கூறுகிறது. இதனால், ஆகவ மல்லனின் வீரத்தினை ஒருவாறு அறிலாம்.

மாவீரனான ஆகவ மல்லன் பட்ட மெய்தியவுடன் போச மன்னனின் தலைநகரான தாரா நகரத்தை முற்றுகையிட்டு வென்று, அம்மன்னனை நாட்டைவிட்டு விரட்டினான். சேதி

நாட்டை யழித்து அதன் மன்னனுன கருணனே (கர்ணனே)த் தோற்கடித்தான். இவன் துங்கபத்திரைக்குத் தெற்கே சோழ நாட்டின் உட்பகுதிகளில் ஊடுருவல் செய்ததோடு, சோழர் களின் அரசிருக்கைத் தானமான காஞ்சிபுரத்தையும் தாக்கி ஞன். இவன் கீழைச் சாளுக்கியரின் தலைநகரான வெங்கியைத் தாக்கிப் பிடித்துக் கொண்டான்.

ஆகவ மல்லனின் போர்ச் செயலைக் கேள்வியுற்ற இராசேந் திரன் அரிமாவென வெகுண் டெழுந்தான்; தன் மகனுகிய இராசாதிராசனிடம் பெரும்படையினை ஒப்படைத்து ஆகவ மல்ல னின் கொட்டத்தினை யடக்கப் பணித்தான். சோழர்படை அணி வகுத்து நின்றது. சோணுட்டின் மாவீரர்கள் மேலைச் சாளுக்கிய நாடு நோக்கி விரைந்தனர்.

இராசாதிராசன் வீராவேசங் கொண்டான்; போருடை தரித்தான்; கவச மணிந்தான்; படைக்கல னேந்திப் பட்டத்து யானைமீது அமர்ந்தான்; விரைந்து போர்க்களம் நோக்கிப் புறப்பட்டான்; ஆகவ மல்லனை வெல்லாது திரும்பேனெனச் சூளுரை செய்தான்; பரந்து நின்ற பெரும்படைகளின் முன்னணி யில் வந்து நின்ருன்; எதிரிகளின் இடையில் இடியென முழங்கி ஞன்; மின்னலெனத் தாக்கினுன். இலக்கு (இலட்சுமீச்)சுரம் என்னும் பட்டினம் தீக்கிரை யாக்கப்பட்டது.

இலக்கு (இலட்சுமீச்)சுரம் எனும் பட்டினம் கொப்பத்துக் கருகில் அமைந்ததும், ஆகவ மல்லனுக்குச் சொந்தமானதும், 'புலிக் கரை'யைச் சார்ந்ததுமான நகர மாகும். இந்நகரம் இரா சாதிராசனின் தாக்குதலால் உருக் குலைந்து தரைமட்ட மாயிற்று.

அடுத்துச் சோழப் படை நைசாம் மாநிலத்தின் சிக்கந்தரா பாத்திலிருந்து, நாற்பத்திரண்டு கல் தொலைவிலுள்ளதான 'கொள்ளிப் பாக்கையை' எரியூட்டியும், கம்பிலித் தோட்டத் தையும் அதிலுள்ள அரண்மனையையும் தரைமட்ட மாக்கினர். இவ்வெற்றிகளின் நினைவாக வெற்றித்தூண் ஒன்றையும் நிலை நாட்டினர்.

சாளுக்கியப் படைத் தலைவர்களான கண்டப் பையன், கங்காதரன் ஆகியோர் போர்க் களத்தில் கொல்லப்பட்டனர். ஆகவ மல்லனின் மக்களான விக்கிரமாதித்தனும், விசயாதித்த

[1] S. I. I. Vol. IV. No. 539. Vol. V. No. 465
*கொள்ளிப்பாக்கை. நைசாம் மாநிலத்திலுள்ள ஐதராபாத்திற்கு வட கிழக்கே 45 கல் தொலைவில் உள்ள 'குல்பாக்' ஆகும்.*

னும் படைத் தலைவனான சங்கமையனும் செருக்களத்தினின்றும் ஓடி மறைந்தனர். இராசாதிராசன் போர்க்களத்தில் தனக்குக் கிடைத்த கரிகளையும் பரிகளையும் விலையுயர்ந்த பொருள்களையும் கைக் கொண்டான்; சிறுதுறை, பெருந்துறை, தைவபீமகசி என்னும் முத்துறைகளிலும் (துங்கபத்திரை, கிருஷ்ணா, பீமா ஆறுகள்) போர் யானைகளை நீராட்டிச் சாளுக்கியரின் இலச்சினையாம் பன்றி குறிக்கப்பட்ட குன்றுகளின்மீது சோழரின் இலச்சினையாம் புலி பொறித்து மீண்டான்.

சோழர்களை வெல்வது அரிது என்று எண்ணிய ஆகவமல்லன் இராசாதிராசன்பால் தூதுவர் சிலரை அனுப்பி வைத்தான். சோழன் அத்தூதுவருள் ஒருவற்கு ஐங்குடுமி வைத்தும், மற்றவற்குப் பெண் உடை அணிவித்தும், அவர்கட்கு முறையே 'ஆகவ மல்லன்', 'ஆகவமல்லி' எனப் பெயரிட்டுச் சாளுக்கிய மன்னன்பால் அனுப்பி வைத்தனன்.

இக்காட்சியினைக் கண்ணுற்ற ஆகவ மல்லன் கடுஞ்சினம் கொண்டான். பெரும்படை திரட்டிச் சோழர்களைப் 'பூண்டி'ப் போர்க் களத்தே சந்தித்தான்; ஆயினும், தோல்வியால் துவண்டு போனான். இராசேந்திரன் சாளுக்கியத் தலைநகரான கலியாணபுரத்தைக் கைப்பற்றி, அங்கு வீராபிடேகம் செய்து கொண்டான். இதன் நினைவாக 'விசய ராசேந்திரன்'[1] என்னும் விருதினைப் பூண்டான். கலியாணபுரம் சூறையாடப்பட்டுப் பல அரிய பொருள்களும் கைப்பற்றப்பட்டன. அவற்றுள் 'வாயிற் காவலர்' சிலை குறிப்பிடத் தக்க தாகும்.

இவ்வாயிற் காவலர் சிலை முன்பு தாராசுரம் ஐராவதேச்சரர் கோயிலில் வைக்கப்பட்டிருந்தது. இக்காலை இது தஞ்சை இராசராசேச்சுரத்தில் உள்ளது. இச் சிலையின் பீடத்தின்கண் 'ஸ்வஸ்திஸ்ரீ உடையார் ஸ்ரீவிசய ராசேந்திர தேவர் கலியாணபுரம் எறிந்து கொண்டு வந்த துவார பாலகர்' எனப் பொறிக்கப் பட்டுள்ளதால் இதனை நாம் அறியலாம்.

இராசாதிராசனின் இருபத்து ஆருவது ஆட்சி யாண்டு வெளியிடப் பெற்ற கி. பி. 1044 தேதியிட்ட கல்வெட்டிலிருந்து இவன் ஆகவ மல்லனுடன் மேற்கொண்ட போர் நிகழ்ச்சிகளை அறிய முடிகின்றது. ஆகவ மல்லன் கி.பி. 1042இல் அரியணை யேறினான் என்பதை நாம் முன்னரே கண்டோம். எனவே, இராசாதிராச

[1] 172 of 1894; 244 of 1925

னின் மேலைச் சாளுக்கியப் போர் கி.பி. 1042-1043ஆம் ஆண்டுகளில் நிகழ்ந் திருத்தல் வேண்டுமென நாம் கருத இட முண்டு.

(இவ்விதம் இராசேந்திரனின் ஆட்சிக் கால இறுதியில் நடைபெற்ற சோழ-சாளுக்கியப் போராட்டம் இராசாதிராசனால் மேற்கொள்ளப்பட்ட தென்பதையும் இராசாதிராசன் பெருவெற்றி பெற்றான் என்பதையும் அறியலாம். இராசாதிராசன் இளவரசனாயிருந்த காலத்துப் படைத் தலைமை ஏற்றுப் பெற்ற வெற்றி இராசேந்திரனுக்குக் கிடைத்த வெற்றி எனக் கொள்ளுதல் முறையான தாகும்.)

'ஆகவ மல்லனு மஞ்சற் கேவுதன்
தாங்கரும் படையா லாங்கவன் சேனையுட்
கண்டப் பயனும் கங்கா தரனும்
வண்டமர் களிற்றெடு மடியத் திண்டிறல்
விருதர் விக்கியும் விசயா தித்தனுங்
கருமுரட் சாங்க மய்யனு முதலினர்
சமர பீருவொத் துடைய விரிசுடர்ப்
பொன்னோ டைக்கரி புரவியொடும் பிடித்துத்
தன்னு டையிற் சயங்கொண் டொன்னார்
கொள்ளிப் பாக்கை யுள்ளெரி மடுப்பித்து'

என்னும் இராசாதிராசனது மெய்க்கீர்த்திப் பகுதி இவனது மேலைச் சாளுக்கியப் போரை விளக்குகின்றது.

இராசாதிராசனின் மெய்க்கீர்த்தியில் கூறப்பட்டுள்ள செய்திகளை நாம் அப்படியே ஏற்றுக் கொண்டோமானால், ஆகவ மல்லனிடமிருந்து வெங்கி மீட்கப்பட்டுக் கீழைச் சாளுக்கிய இராசாதிராசனிடம் ஒப்படைக்கப் பட்டதாகவும், இராசராசன் தொடர்ந்து வேங்கி நாட்டினை அமைதியாக ஆண்டு வந்தான் என்றும் நாம் கருத இட முண்டு.

இராசாதிராசன் ஆகவ மல்லனுடன் செய்த போரில் இறுதி வெற்றி பெற்றதாகத் தெரிய வில்லை. கொள்ளிப்பாக்கையில் இராசாதிராசனைக் கடுமையாக எதிர்த்துப் போர் செய்த ஆகவ மல்லன் தனது பகுதியினை இழந்து விட வில்லை எனத் தெரிகிறது. அதே காலத்தில் ஆகவ மல்லன் வெங்கி நாட்டின்மீது தன் ஆதிக்கத்தினை நிலைநாட்டி யிருந்தான் என்பதைப் பல ஆதாரங்கள் உறுதி செய்கின்றன.

ஆகவ மல்லனின் ஆணைக் குட்பட்ட சிற்றரசனாகிய சோபன ராசா என்பான் கி.பி. 1044 இல் தன்னை 'வேங்கிப் புரவரேஸ்

வரா' எனக் கூறிக் கொண்டான். இவனுக்குப்பின் ஆண்ட மன்னர்களும் இப்பட்டத்தினைச் சூட்டிக் கொண்டனர். இதனால், வேங்கிப் பகுதியினை ஆகவ மல்லனே தன்னாட்சிக் குட்படுத்திய செய்தி புலனாகும்.

கி.பி. 1047 ஆம் தேதியிட்ட கல்வெட்டொன்று ஐதராபாத்து அருங்காட்சி யகத்தில் பாதுகாப்பாக வைக்கப் பட்டுள்ளது. அக்கல்வெட்டின் மூலம் ஆகவ மல்லன் வேங்கி நாட்டு மன்னனை யும் கலிங்கநாட்டு மன்னனையும் அடித்து நொறுக்கினான் என்று குறிக்கப் பெற்றுள்ளது.

ஆனால், கி.பி. 1047 ஆம் தேதியிட்ட திராக்சாராமா (Draksarama) வில் கிடைத்த இராசாதிராசனின் கல்வெட் டொன்று இவன் பீஸ்மேஸ்வரா கோயிலுக்கு நிவந்தங்கள் அளித்ததுபற்றிக் குறிக்கின்றது. எனவே, வேங்கி நாடு முழுமை யும் ஆகவ மல்லனின் ஆட்சிக் குட்பட்டிருக்குமா? என்பது கேள்விக் குரிய தாகின்றது.

இது குறித்துச் 'சாளுக்கிய இராசராசன் சோழர்களின் ஆதர வினை விட்டு மேலைச் சாளுக்கியருடனான பழைய விரோதத்தினை மறந்து, ஆகவ மல்லனுடன் உடன்பாடு செய்து கொண்டிருக்க வேண்டு' மென்று தென்னிந்திய வரலாற்று மேதை திரு. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி அவர்கள் குறிப்பிட்டிருப்பது நாம் ஒப்புக் கொள்ளக் கூடிய கருத்தாகிறது.

மேற்கூறிய கருத்து ஆகவ மல்லனின் பிரதானியான நாரா யண பட்டர் என்பான், சாளுக்கிய இராசராசனின் அரசவையில் இடம் பெற்றிருந்ததாலும், அவனுக்கு நந்தம் பூண்டி என்ற சிற்றூர் தானமாக அளிக்கப் பட்டிருத்தலாலும் வலிவு பெறுகின் றது. நாராயணனின் மகளான குப்பம்மா கி.பி. 1055-1056 இல் திராக்கிரமா (Drakrama) கோயிலுக்கு அறக் கொடை யளித்தலா லும் இஃது உறுதிப்படுகின்றது.

இராசேந்திரனுக்குப் பின்பு அரசோச்சிய சோழப் பெரு மன்னர்களின் கல்வெட்டுகளை நாம் ஆய்ந்து பார்க்குங்கால், இவர்கள் வேங்கி நாட்டின்மீது அக்கரை கொண்டு ஆர்வத் துடன் உதவி புரிந்ததாக எவ்வித ஆதாரமும் காணப்பட வில்லை. எனவே, இராசேந்திரனின் பின்னோர்கள் தம் முன்னோர்களைப் போல், வேங்கி நாட்டின் நடவடிக்கைகளில் நாட்டம் கொள்ளா திருந்தனர் என்பது புலனாகும்.

மாவீரனான இராசேந்திரன் தன் வாளாண்மையாலும், தோளாண்மையாலும் பகைவர்களை வென்று சோழப் பெரு நாட்டின் புலிக்கொடியினைப் பன்னெடுந் தூரம் பறக்கச் செய்தான். ஆற்றல் படைத்த படையின் துணை கொண்டு சேரநாடு, பாண்டியநாடு, மேலைச் சாளுக்கிய நாடு, கங்கைக் கரை நாடுகள் ஆகிய நாடுகளை வென்று சோழப் பெருநாட்டின் எல்லையினை விரிவுபடுத்தினான் என்றும், அலைகடல் நடுவுள் பலகலஞ் செலுத்தி ஈழம், கடாரம், சுமத்திரா, மாரக்கவாரம் போன்ற கடல் கடந்த நாடுகளிலும் தனது வெற்றிக் கொடியினை நாட்டிப் பெரும்புகழ் ஈட்டினான் என்றும் முன்பே கண்டோம்.

திக்கெட்டும் வெற்றி முரசு கொட்டிய வெற்றி வீரனும் நம் இராசேந்திரன் அண்டை நாடுகளுடன் சண்டையிட்டு அவற்றை வென்றதோடமையாது, பிற நாடுகளுடன் நட்புறவும் பூண்டிருந்தான் என்பது போற்றுதற்குரிய ஒன்றாகும். நம் இராசேந்திரனது அருமை பெருமையினைக் கேள்வியுற்ற காம்போச மன்னன் இவனுடன் நல்லுறவு கொள்ள விழைந்தான். தனக்குச் செய்த பேருதவியினை எண்ணிச் செய்ந்நன்றி மறவாத காம்போச மன்னன் தனது நட்பின் அடையாளமாக இராசேந்திரனுக்குத் தேரளித்து மகிழ்ந்தான். இவன் தேரளித்து நட்புறவு கொண்ட செய்தியினை இராசேந்திரனது கரந்தைச் செப்பேடும் தெளிவாகக் குறிக்கின்றது. இராசேந்திர சோழனின் துணை கொண்டே தான் நல்லாட்சி நடத்த முடியு மென்று எண்ணிய காம்போச மன்னன் இராசேந்திரனிடம் நட்புப் பூண்டதில் வியப்பொன்று மில்லை.

இக்காலை தாய்லாந்து என அழைக்கப்பெறும் சயாம் நாட்டிற்குக் கிழக்குள்ளதும், கம்போடியா என அழைக்கப் பெறுவதும் ஆகிய நாடே பண்டு கம்போசம் என வழங்கப் பெற்றது.

இராசேந்திரனது வெற்றிகள் அவனுடைய கீர்த்தியை உயர்த்தி, அயல் நாட்டு மன்னர்களுடைய மதிப்பையும், மரியாதையையும் தேடித் தந்தன. எனவேதான், வெளிநாட்டு மன்னர்கள் இவனுக்கு மரியாதை செலுத்தினர்.

நீண்ட நெடுங்காலமாகவே தமிழ்நாடும், சீன நாடும் நட்புறவு கொண்டிருந்தன என்பதனை வரலாறு தெள்ளத் தெளிய எடுத்துரைக்கின்றது. நம் சோழர்களும் பதினொன்று, பன்னிரண்டாம் நூற்றாண்டுகளில் சீனநாட்டுடன் நட்புப் பூண்டு,

தூது விடுத்தனர் என்பதனைச் சீனநூல்கள் எடுத்துரைக்கின்றன. நம் இராசேந்திரன் ஆட்சிக் காலத்திலும் கடல் வாணிகத்தின் பொருட்டுச் சீன மன்னனுக்குத் தூதுக் குழுக்கள் அனுப்பப்பட்டன. கி.பி. 1020, 1033 ஆம் ஆண்டுகளில் நம் மன்னன், தூதர்கள் மூலம் விலையுயர்ந்த பரிசு பொருள்களைச் சீன அரசவைக்கு அனுப்பினான். அவ்வாறே சீனத் தூதர்கள் சோணாட்டிற்கு வந்தனர். இதனால், சோழ நாட்டிற்கும், சீன நாட்டிற்கு மிடையே வாணிக உறவு சிறந்து விளங்கிய தென்பது புலனாகும்.

மேலும், தஞ்சை மாவட்டம், பட்டுக்கோட்டை வட்டம் விக்கிரம் கிராமத்தில் கண்டெடுக்கப்பட்டுள்ள இருபது சீன நாணயங்களாலும், தஞ்சை மாவட்டம், பட்டுக்கோட்டை வட்டம் ஒலயக் குன்னம் கிராமத்திலிருந்து கண்டெடுக்கப் பட்டுள்ள முந்நூற்று இருபத்து மூன்று சீன நாணயங்களாலும், தஞ்சை மாவட்டம் மன்னார்குடி வட்டம் தல்லிக்கோட்டைக் கிராமத்தில் கிடைத்துள்ள ஆயிரத்து எண்ணூற்று இருபத்திரண்டு சீன நாணயங்களாலும் இராசேந்திரன் காலத்தில் சோணாட்டிற்கும், சீன நாட்டிற்கும், நடைபெற்ற வாணிபத்தை நாம் நன்குணரலாம்.

மேற்கூறப்பட்ட நாணயங்கள் அனைத்தும் இராசேந்திரனது சமகாலத்தில், சீனாவில் ஆண்டுவந்த மன்னர்களால் வெளியிடப் பெற்றவை யாகும் என்பது குறிப்பிடத் தக்கதாகும். இந்நாணயங்கள் சென்னை அருங்காட்சி யகத்தில் வைக்கப்பட்டுள்ளன.

இதுகாறும் கூறியவற்றால் இராசேந்திரன் சீன நாட்டுடன் வாணிக உறவு கொண்டிருந்ததுடன் நட்புறவும் கொண்டு சோணாட்டின் புகழ் பரப்பினான் என்பது புலனாகும்.

இராசேந்திரன் கிழக்கிந்தியத் தீவுகளை யாண்ட மன்னர்களுடனும் நல்லுறவு கொண்டிருந்தான். எனவேதான், இராசராசனும் இராசேந்திரனும், அம்மன்னர்களது வேண்டுகோளுக்கிணங்க நாகப்பட்டினத்தில் புத்த விகாரைக் கட்டுவித்துத் தேவையான உதவிகளைப் புரிந்தனர்.

இவன் மாளவப் பரமார மன்னனான போச மன்னனுடனும், சேதி காலசூரி மன்னனுடனும் நட்புறவு கொண்டிருந்தான் என்பதனைக் குலேனூர்க் கல்வெட்டு உணர்த்துகின்றது.

எனவே, ஒரு நாட்டின்மீது பகைமை கொண்டு, போர் மேற்கொண்டு, அதனை அழித்து, அடிமை கொள்வதால் ஆகும் ஆக்கத்தினும், அந்நாட்டின்பால் அன்பு காட்டி, அணைத்துக் கொள்வதால் ஆகும் ஆக்கமே பெரிது எனும் பேருண்மையை அறிந்த நம் இராசேந்திரன் கடல் கடந்த நாடுகளாகிய சீனத் துடனும், காம்போசத்துடனும் நட்புறவு கொண்டதோடு வட நாட்டு மன்னர்களுடனும் நட்புறவு பூண்டான். இச்செயல் களால் இவன் ஆண்மை, ஆற்றல் கொண்டு விளங்கியதோடு, அன்பும், பரிவும் கொண்டு விளங்கினன் என்பதும் பெறப்படும்.

# 7. இராசேந்திரனின் குடும்பம்

சோழப் பெருநாட்டின் பெருமன்னனுகத் திகழ்ந்த முதலாம் இராசேந்திர சோழன், சோழப் பெருமன்னனுன முதலாம் இராசராசனுக்கும், வானவன் மாதேவி என வழங்கும் திரிபுவன மாதேவிக்கும் அருமந்த மகனுகத் தோன்றினுன் என்பதை நாம் முன்பே கண்டோம். இராசேந்திர சோழன் மாதேவடிகள், குந்தவை என்ற இரு தமக்கைகளைப் பெற்றிருந்தான். இவருள் மாதேவடிகள் மூத்த பெண்ணுகவும், குந்தவை இளைய பெண்ணுகவு மிருந்தனர்.

குந்தவை, கீழைச் சாளுக்கிய மன்னனுன விமலாதித்த னுக்கு மணஞ்செய்து கொடுக்கப்பட்டாள். எனவே, இராசேந் திரன் தன் மைத்துனனின் கீழைச் சாளுக்கிய நாட்டின் நிகழ்ச்சி களில் அக்கறை கொண்டிருந்தான்.

முதலாம் இராசேந்திர சோழன் தன் தந்தையைப் போன்று மனைவியர் பலரைப் பெற்றிருந்தான். 'ஒருவன் ஒருத்தி' என்ற கோட்பாடு பொதுவாக அக்கால மன்னர்களால் பின்பற்றப்பட வில்லை. இருப்பினும், சோழப் பெருமன்னர்கள் மொகலாயப் பெருமன்னர்களைப் போல் பெண்ணுசை கொண்டோர் எனக் கூறுதல் இயலாது.

முதலாம் இராசேந்திரனின் மனைவியருள் முக்கோக் கிழானடி கள்[1], அரிந்தவன் மாதேவி[2], திரிபுவன மாதேவி என அழைக் கப்பெறும் வானவன் மாதேவி[3], வீரமாதேவி[4], பஞ்சவன் மாதேவி[5] ஆகியோர் குறிப்பிடத் தக்கவ ராவர். இவருள் இவனு

[1] Ins. 73 of 1921

[2] Ins. 632 of 1909

[3] S. I. I. Vol. V. No. 639

[4] Ins. 260 of 1915

[5] Ins. 464 of 1918

டைய பட்டத்தரசியாக விளங்கியவள் யார்? என்பதனை அறிந்து கொள்ளத் தக்க சான்றுகள் கிடைக்கப்பெற வில்லை. இவளது பிறந்த நாள் ரேவதி யாகும்.

இவருள் வீரமாதேவி என்பாள் இராசேந்திரன்பால் பேரன்பு கொண்டவளாவாள் என்பதனை அவன் இறந்துபட்ட காலை அவன் பிரிவாற்றுமையினல் கணவனுடன் உடன்கட்டை யேறினுள் என்று பிரமதேசக் கல்வெட்டுக்[1] கூறுவதனுல் இனிது விளங்கும். சோழர் காலத்தில் உடன்கட்டை யேறும் வழக்கம் அருகிய நிலையில் காணப்பட்ட போதிலும் வீரமாதேவி உடன்கட்டை யேறிய நிகழ்ச்சி, அவள் கணவன் மாட்டுக்கொண்டிருந்த பெருங் காதலினை உலகிற்கு எடுத்துரைக்கின்றது.

> 'பெறுமவற்றுள் யாம்அறிவ(து) இல்லை அறி(வு)அறிந்த
> மக்கட்பே(று) அல்ல பிற'[2]

என்ற பொய்யில் புலவன் பொன்மொழிக் கேற்ப இராசேந்திரன் மக்கட் செல்வத்தினை நிரம்பப் பெற்றிருந்தான். இவனுடைய மக்கள் அறிவும் ஆற்றலும் நிரம்பப் பெற்றிருந்தனர். இவனுக்கு மூன்று ஆண் மக்களும் இரண்டு பெண் மக்களும் இருந்தனர் என்பதனைக் கல்வெட்டுச் சான்றுகளின் மூலம் அறுதியிட்டு உறுதியாகக் கூற இயலும்.

**ஆண்மக்கள்**

கன்னியா குமரிக் கல்வெட்டு, 'வேள்வியில் தோன்றும் முத்தியைப் போல் இராசேந்திர சோழனின் மூன்று புதல்வர்களும் சிறந்து விளங்கினர்,'[3] என்று குறிப்பிடுவதனுல் இவன் மூன்று ஆண்மக்களைப் பெற்றிருந்த செய்தி புலனுகின்றது.

இராசேந்திரனுக்கு வேறு ஆண் மக்கள் சிலரும் இருந்ததாகச் சில சான்றுகளின் துணை கொண்டு அறிய முடிகின்றது.[4]

முதலாம் இராசேந்திரனின் இறப்பிற்குப் பின்பு சோழப் பெருநாட்டினை ஆண்டு வந்த அவனுடைய மூன்று ஆண் மக்களைப் பற்றி யாவரும் அறிவர். அவருள் இவனுடைய மூத்த மகனுன முதலாம் இராசாதிராசன் கி.பி. 1018 முதல் கி.பி. 1054 முடிய சோழப் பெருநாட்டினை ஆட்சி புரிந்தான்.

[1] Ins. 79 of 1909
[2] திருக்குறள் 61
[3] T. A S Vol. III. No. 34. Verse-73
[4] S. I. I. Vol- V. Nos 644 and 647

முதலாம் இராசாதிராசனுக்குப்பின் இராசேந்திரனின் மற்றெரு மகனுன இரண்டாம் இராசேந்திர சோழன் கி. பி. 1051 முதல் கி.பி. 1063 முடிய சோணுட்டினை ஆண்டு வந்தான்.

வீரராசேந்திரன் என்பான் இரண்டாம் இராசேந்திரனுக்குப் பின்பு கி. பி. 1063 முதல் கி. பி. 1070 முடிய சோணுட்டினை ஆண்டு வந்தான்.

மதுரையில் இராசேந்திரனுல் புதியதாக அமைக்கப் பெற்ற அரண்மனையின்கண் விற்றிருந்து சேர, பாண்டிய நாடுகளின் அரசப் பிரதிநிதியாக ஆட்சி புரிந்து, சடைய வருமன் சுந்தர சோழ பாண்டியன் எனும் பெயர் பூண்டவனும் இராசேந்திரனின் மற்றெரு மகனுவான்[1] என்பது ஆராய்ச்சி யறிஞர்களின் முடிவாகும்.

இராசேந்திரனுக்குச் சுந்தர சோழன் என்றெரு மகன் இருந்தான். அவன் பாண்டிய நாட்டினை ஆண்டு வந்தான். அவன் சடைய வருமன் சுந்தர சோழ பாண்டியன் என்று பெயர் பெற்ருன். அவன் பிறகு சேர நாட்டையும் சேர்த்து ஆளும் உரிமை பெற்ருன்; அதனுல், 'சோழ கேரளன்' என்று பெயர் பெற்ருன் என்று 'கங்கை கொண்ட சோழன்' எனும் நூலின்கண் குறிக்கப் பெற்றிருத்தலினுலும் இக்கருத்து வலிமை பெறுகின்றது. இவன் 23 ஆண்டுகள் ஆட்சி புரிந்தான்.

அரச குமாரர் சிலர் வேறு சில மண்டலங்களின் ஆட்சித் தலைவர்களாக மன்னனுல் நியமிக்கப் பெற்றனர் என்பது கல் வெட்டுச் சான்றுகளால் உறுதிப்படுகின்றது. இராசேந்திரனின் மூத்த மகனுன இராசாதிராசனின் மெய்க்கீர்த்தியி லிருந்தும், இரண்டாம் இராசேந்திரனின் மெய்க்கீர்த்தியி லிருந்தும் இராசேந்திரனின் புதல்வருள் சிலர் வட நாட்டின் பகுதிகளில் அரசப் பிரதிநிதியாக்கப் பட்டதாக அறியலாம்.

தன் புதல்வர்களைத் தான் வென்ற நாடுகளின் அரசப் பிரதிநிதிகளாக அமர்த்தும் புதிய முறையினைச் சோழ மன்னர் களுள் முதன் முதலில் புகுத்தியவன் நம் இராசேந்திரனே யாவான் என்பது பெருமைக்குரிய ஒன்ருகும். இச்செயலால் இராசேந்திரனின் நுண்ணிய அரசியல் திறனை நாம் அறிய முடிகின்றது.

[1] Annual Report on South Indian Epighaphy of 1905. Part-II - Para-25

கரந்தைத் தமிழ்ச் சங்கத்தினர் வெளியிட்டுள்ள சிறப்பு மலரின்கண் இராசேந்திரனுக்கு ஆறு ஆண் மக்கள் இருந்த தாகக் குறிக்கப் பெற்றுள்ளது. அவர்களின் பெயர்களை ஈண்டுக் காண்போம்.

1. இராசாதிராசன் (கி.பி. 1042-1053)

2. இராசமகேந்திரன் (கி.பி. 1053-1056). இவன் விசய ராசேந்திரன் எனவும், இரண்டாம் இராசேந்திரன் எனவும் அழைக்கப்பெறுகிறான்.

3. விக்கிரம சோழ பாண்டியன்

4. பராக்கிரம சோழ பாண்டியன்

5. மும்முடிச் சோழன் - இவன் சோழ பாண்டியன், சுந்தர சோழ பாண்டியன் போன்ற பெயர்களாலும் குறிக்கப் பெறு கின்றான்.

6. வீரராசேந்திரன் (கி. பி. 1062–1070). இவன் வீர சோழ தேவன், இராசகேசரி வருமன், மூன்றும் கரிகாலன் எனப் பல பெயர்களால் அழைக்கப் பெற்றுள்ளான்.

முதலாம் இராசேந்திரனின் மகனான இரண்டாம் இராசேந் திரன், 'திருமாது புவி யெனும்' என்ற தொடக்கத்தினை உடைய மெய்க்கீர்த்தியில் அவனது ஆட்சிக் காலத்தின்கண் அரசப் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டிருந்த அவன் தம்பிகளைப் பற்றிய குறிப்புக் காணப்படுகின்றது. அவற்றுள் அவனுடைய தம்பிகள் நால்வரைப் பற்றிக் குறிக்கப் பட்டுள்ளது.

'தன்திருத் தம்பியர் தம்முள் வென்றிகொள்
மும்முடிச் சோழனைத் தெம்முனை யடுதிறல்
சோழ பாண்டிய னென்றுங் கோழிமன்
தொடுகழல் வீர சோழனைப் படிபுகழ்
கரிகால சோழ னென்றும் பொருதொழில்
வாள்வலித் தடக்கை மதுராந் தகனைச்
சோழ கங்க னென்றுந் தோள்வலி
மேவிகல் பராந்தக தேவனைச் சோழ
வயோத்திய ராச னென்றும்'

மேற் கூறப்பட்டுள்ள மெய்க்கீர்த்தியினைக் கொண்டு மும் முடிச் சோழன், வீரசோழன், மதுராந்தகன், பராந்தக தேவன்

ஆகிய நால்வரும் இரண்டாம் இராசேந்திரனின் தம்பிகள் ஆவர் என்பதனைத் தெள்ளிதின் உணரலாம்.

திருவல்லம், திருமழபாடி என்னும் ஊர்களிலுள்ள கல்வெட்டுகளை[1] ஆய்ந்து பார்க்குங்கால், மும்முடிச் சோழன் என்பான் இரண்டாம் இராசேந்திரனுக்குத் தம்பியும் வீரராசேந்திரனுக்குத் தமையனும் ஆவன் என்பது திட்டவட்டமாகப் புலப்படுகிறது. எனவே, மதுரை மாநகரின்கண் வீற்றிருந்து பாண்டி நாட்டையும் சேர நாட்டையும் ஆண்டு வந்த மும்முடிச் சோழனே சோழ நாட்டில் இளவரசு பட்டம் பெற்ற பொழுது இராச மகேந்திரன் எனப் பெயர் பெற்றான் என அறிஞர்கள் கருதுகின்றனர்.[2]

### பெண்மக்கள்

இராசேந்திரனுக்கு இரண்டு பெண் மக்கள் இருந்தனர். பிரானார் என்றழைக்கப்படும் அருண்மொழிநங்கை ஒரு பெண்; அம்மங்கைதேவி ஒரு பெண்.

### அருள்மொழி நங்கை

திருச்சி மாவட்டத்தில் திருச்சியிலிருந்து கிழக்கே முப்பத்தொரு கல் தொலைவில் கொள்ளிடத்தின் வடகரையிலமைந்ததும் அப்பரின் பாடல் பெற்ற புண்ணியத் தலமுமான திருமழபாடிக் கோயிலுக்கு அருண்மொழி நங்கை, இராசாதிராசன் ஆட்சிக் காலத்தின் முற்பகுதியில் விலை யுயர்ந்த முத்துக் குடையினை அளித்து நிவந்தமும் அளித்துள்ளாள் என்பது கல்வெட்டினால்[3] புலனாகின்றது. எனவே, தந்தையைப் போலவே மகளும் சிறந்த சிவபக்தி உடையவளாய் இருந்தாள் என்பது போற்றுதற்குரியதாகும். இவ்வம்மையாரும் தன் தந்தையைப் போன்றே திருக்கோயில்களுக்கு அறக்கொடை யளிக்கும் அறவுள்ளம் கொண்டவராகவே காணப்பட்டார்.

### அம்மங்கைதேவி

இராசேந்திரனின் மற்றொரு மகளான அம்மங்கைதேவி என்பாள் முதலாம் இராசராசனின் மகளான குந்தவைக்கும் கீழைச் சாளுக்கிய மன்னனான விமலாதித்தனுக்கும் மகனாகப் பிறந்த இராசராச நரேந்திரன் என்னும் இளவர

[1] S. I. I. Vol. V. Nos. 489 and 647
[2] T. V. சதாசிவ பண்டாரத்தார். 'பிற்காலச் சோழர் சரித்திரம்'– பக்கம்-214, வரிகள்-14–16
[3] S. I. I. Vol. V. No. 635, Ins. 71 of 1920

சனை மணந்து கொண்டாள்.[1] இவள் வேங்கை நாட்டில் தன் கணவனுடன் வாழ்ந்து வந்தாள். இவர்களுக்குத் தோன்றிய மகனே சோழரின் மகள்வழி உரிமையினைக் கொண்டு, சோழப் பெருநாட்டினைக் கி.பி. 1070 முதல் கி.பி. 1120 முடிய ஆண்ட பெருமன்னனுன முதலாம் குலோத்துங்க சோழனு வான்.

அம்மங்கைதேவி முதற் குலோத்துங்கன் காலம் முதல் மூன்ரும் குலோத்துங்கன் காலம் வரையில் ஏறத்தாழ எண்பது ஆண்டுகள் வரை வாழ்ந்தார் என்பது குறிப்பிடத் தக்க தாகும். இவர் அம்மங்கை ஆழ்வார் என்று கல்வெட்டுகளால் குறிக்கப் பெறுகின்ருர். சிவபக்தியிலும், தெய்வத் தொண்டிலும் இவ் வம்மையார் மிகவும் ஈடுபாடு கொண்டவ ரென்பதால் அம்மங்கை யாழ்வார் என அழைக்கப் மெற்றன ரெனலாம். முதலாம் இராச ராசனின் தமக்கை, இராசேந்திரனைச் சீராட்டிப் பாராட்டி வளர்த்தவள் என்பதனை முன்பே கண்டோம். இவர் 'ஆழ்வார் பராந்தகன் குந்தவை' எனும் பெயரால் க்ல்வெட்டுகளில் குறிக்கப் பெற்றனர் என்பதும் ஈண்டுக் குறிப்பிடத் தக்க தாகும். இவர் சிவநேயச் செல்வியராக விளங்கியமையின் இப்பெயர் பெற்றனர்.

எனவே, இராசேந்திரனின் அருமந்த செல்வியாம் அம் மங்கைதேவி, வாழையடி வாழையாகச் சீரிய சிவப்பணி யாற்றிய செம்பியன் மாதேவி, குந்தவை போன்ற அரசியரைப் போன்று சிவன் கழலேத்தும் செல்வியாகத் திகழ்ந்து, சிவனருள் பெற்று விளங்கினுள் என்பது போற்றுதற்குரிய தொன்ருகும். சிவப் பணி புரிந்து சிறப்புடன் ஆண்ட இராசேந்திரனின் மகளாகப் பிறந்த இவளும் தந்தைக்கேற்ற மகளாய்த் தோன்றித் தனது சிவ பத்தியால் தந்தைக்குப் பெருமையினைத் தேடித் தந்தாள் எனக் கூறுதல் பொருந்தும்.

அரச குடும்பம் சிறந்திருந்தால்தான் அரசனும் ஆட்சிப் பொறுப்பினை நன்கு ஏற்று நடத்த முடியும். அன்பும் பண்பும் ஒருங்கே அமையப் பெற்ற மனைவியரையும், அன்பு, அறிவு, ஆற்றல், கீழ்ப்படிதல் போன்ற இன்னேரன்ன அரும்பெருங் குணங்களைக் கொண்ட நன் மக்களையும் பெற்ற நம் வேந்தன் நற்பேறு பெற்றவனுவன் என்பதில் சிறி தளவும் ஐய மில்லை.

[1] 'முதற் குலோத்துங்க சோழன்'- T. V. சதாசிவப் பண்டாரத்தார்- பக்கம்-14

அரச குடும்பம் பெரும்பாலும் பழையாறை ஆயிரந்தளி அரண்மனையில் இருந்தது போலும்! பழையாறை அக்காலை 'முடிகொண்ட சோழபுரம்' என அழைக்கப் பெற்றது. இந்நகர் இப்பொழுது அழிந்த நிலையில் காணப்படுகின்றது. இராசேந்திரன் பழையாறை நகரி லிருந்துகொண்டு அறக் கொடைகள் அளித்துள்ளான் என்பதனைக் கூழம்பந்தல் கங்கை கொண்ட சோழீச்சுரர் கோயில் கல்வெட்டொன்று உணர்த்துவதால் இவன் பழையாறை அரண்மனையில் அடிக்கடி தங்கி யிருத்தல் வேண்டு மென்று எண்ண இட முண்டு.

காஞ்சியிலுள்ள அரண்மனையிலும் சில சமயங்களில் இராசேந்திரன் தங்கி யிருத்தல் வேண்டு மென்று கல்வெட்டுகள் உணர்த்துகின்றன.

இராசேந்திரன் சில காலம் தில்லையம்பதியின் கண்ணுள்ள தனது மாளிகையில் தங்கி யிருந்தனன் என்பதனைச் செப்பேட்டுச் சான்றுகளா லறியலாம். இதனைப் 'பெரும்பற்றப் புலியூர் விட்ட விட்டின் உள்ளால் மாளிகையின் கீழை மண்டபம் பிரமாதிராஜனில்' என்றும்[2] 'வியாக்கிரா அக்கிரகாரத்தில் வாழ்ந்தவனான இராசேந்திரன்' என்றும்[2] கரந்தைச் செப்பேட்டுப் பகுதிகளில் குறிக்கப் பெற்றுள்ளதா லறிய லாகும்.

இராசேந்திரனின் தந்தையான முதலாம் இராசராச சோழன் கி.பி.1014 ஆம் ஆண்டு சிவனடி சேர்ந்தான். இராசேந்திரனின் தாயான திருபுவன மாதேவியார் கி.பி. 1020 ஆம் ஆண்டு இறைவனடி எய்தி யிருக்க வேண்டு மென்ற கருத்தினைத் திரு. சி. கோவிந்தராசர் அவர்கள் குறிப்பிடுகின்றார். இதனை 'அவ்வெட்டாவது யாண்டிலேயே தன் தாயின் பெயரால் பிரம்மதேய நிலதானம் செய்திருப்பதால் இவன் தாய் திருபுவன மாதேவி அவ்வாண்டில் இறந்ததனால் உண்டான துன்பத்தையே குறிக்கின்றது எனலாம்' என்று தனது கட்டுரையில்[3] குறிப்பிடுவதால் அறியலாம்.

[1] கரந்தைச் செப்பேடு, உரைநடைப் பகுதி-ஏடு-4
[2] கரந்தைச் செப்பேடு, வடமொழிச் செய்யுள்-65
[3] கட்டுரைப் பொழில், மணிவிழா மலர், கரந்தைத் தமிழ்ச் சங்கம் பக்கம்-357, வரிகள்-11-14

# 8. இராசேந்திரனின் சிறப்புப் பெயர்கள்

சோழப் பெருநாட்டினை முப்பது மூன்ருண்டு காலம் செம்மையாக ஆட்சி செய்து, மக்களைக் காத்தோம்பி, நற்புகழ் பெற்ற நம் இராசேந்திரன் தமிழக வரலாற்றில் தனக்கென ஒரு சிறந்த இடத்தைப் பெற்றுள்ளான். அக்காலத்தில் பெருமன்னர்கள் தோரணையான பல பட்டங்களையும் சிறப்புப் பெயர்களையும் ஏற்றுக் கொள்ளுதல் வழக்கமாகும். பொதுவாகச் சோழப் பெருமன்னர்கள் தங்களது வெற்றியின் அடையாளமாகப் பல சிறப்புப் பெயர்களைப் பெற்றிருந்தனர் என்பதை நாம் முன்பே கண்டோம். குறிப்பாக அதிலும் சிறப்பாக இராசேந்திரனின் தந்தையான முதலாம் இராசராசன் இருபத்திரண்டுக்கும் மேற்பட்ட சிறப்புப் பெயர்களைக் கொண்டு விளங்கினுன் என்பதனை முன் பகுதியில் கண்டோம்.

நம் இராசேந்திரனும் தனது போர்த் திறமையின் காரணமாகவும் செயற்கரிய செய்ததன் விளைவாகவும் தன் முன்னேர்களைப் போன்று பல சிறப்புப் பெயர்களைப் பெற்றிருந்தான்.[1] ஈண்டு இவனுடைய சிறப்புப் பெயர்களுள் சிலவற்றை ஆராய்வோம்.

இராசேந்திரன் பூண்டிருந்த சிறப்புப் பெயர்களுள் 1. கங்கை கொண்ட சோழன், 2. கடாரங் கொண்டான், 3. பூர்வ தேசமும் கங்கையும் கடாரமும் கொண்ட அய்யன், 4. உத்தம சோழன், 5. விக்கிரம சோழன், 6. அதிசய சோழன், 7. பண்டித சோழன், 8. சயசிம்ம சிம்ம சரபன், 9. மலை நாடு கொண்டான், 10. சோழேந்திரசிம்மன், 11. முடி கொண்ட சோழன், 12. வீர ராசேந்திரன் முதலியன குறிப்பிடத் தக்கவை யாகும்.

[1] S. I. I. Vol. III No-205

இச்சிறப்புப் பெயர்களை இவன் எங்ஙனம் பெற்றான்? என்பதனைச் சிறிது ஆராய்வோம்.

**கங்கை கொண்ட சோழன்**

கங்கை கொண்ட சோழன் என்ற இச்சிறப்புப் பெயரினை நம் வேந்தன் ஏறத்தாழக் கி.பி. 1023 ஆம் ஆண்டில் பெற்றிருத்தல் வேண்டுமென்று எண்ண இடமுண்டு. கங்கைக் கரையிலுள்ள நாடுகளின்மீது படையெடுத்துச் சென்று, அங்குள்ள வேந்தர்களை வென்று, கங்கை நீரைக் கொணர்ந்து, தன் புதிய தலைநகரத்தைத் தூய்மை செய்தான் என்பதனை நாம் முன்பே கண்டோம். இவ்வெற்றியின் விளைவாகவே இவன் 'கங்கை கொண்ட சோழன்' எனும் விருதினைப் பெற்று, அதன் நினைவாகக் 'கங்கை கொண்ட சோழபுரம்' எனும் நகரினையும் 'கங்கை கொண்ட சோளேச்சரம்' எனும் கோயிலினையும் அமைத்தான். இப்பெருமகன் பல ஊர்களில் 'கங்கை கொண்டான்' என்னும் பெயரில் மண்டபங்களை அமைத்துள்ளான். திருநெல்வேலி மாவட்டத்தில் 'கங்கை கொண்டான்' என்ற ஊரொன்று இன்றும் காணப்படுகின்றது. தமிழ்நாட்டில் கங்கை கொண்டான் எனும் பெயரில் மேலும் பல ஊர்கள் காணப்படுகின்றன.

**கடாரம் கொண்டான்**

தனது கப்பற் படையினைச் செப்பம் செய்து, நீலக் கடலினைக் கடந்து சென்று, கடார வேந்தனை வென்று, புலிக்கொடியினை ஆங்கு ஓங்கிப் பறக்கச் செய்ததன் நினைவாக இவன் கடாரங் கொண்டான் எனச் சிறப்பிக்கப் பெறுகின்றான். இவ்வெற்றியின் நினைவுச் சின்னமாகத் திருவாரூருக்குக் கிழக்கே இரண்டு கல் தொலைவில் 'கடாரங் கொண்டான்' எனும் பெயரால் ஒரு சிற்றூரை அமைத்தான். தொண்டை நாட்டு மணவிரக் கோட்டத்தில் கடாரங் கொண்ட சோழபுரம் ஒன்று இருந்ததென்று சாசனம் கூறுகின்றது. நம் வேந்தன் இச்சிறப்புப் பெயரினை ஏறத்தாழக் கி.பி. 1025 ஆம் ஆண்டில் பெற்றிருக்க வேண்டுமென்பது அறிஞர்கள் கருத்தாகும்.

**பூர்வ தேசமும் கங்கையும் கடாரமும் கொண்ட அய்யன்**

இவன் மைக்கேல் குன்றுக்குக் கிழக்கிலமைந்த 'பூர்வ ராட்டிரா' எனும் நாட்டினை வென்றான். இது ஏறத்தாழத் தென் கோசல நாட்டிற்குச் சரியாக உள்ள பகுதியாகும். இவ்வெற்றியின் நினைவாகவும், கங்கை, கடார வெற்றியின் நினைவாகவும் இவன் இச்சிறப்புப் பெயரினைப் பெற்றான். கூழம்பந்தல் கங்கை

கொண்ட சோளேச்சரம் கோயில் கல்வெட்டிலும் இவன் இவ் விதம் குறிக்கப் பெறுகிறுன் என்பதனை ஈண்டு எடுத்துக்காட் டாகக் கூறலாம். கல்வெட்டுகள் பலவற்றுள் இவன் 'பூர்வ தேச முங் கங்கையுங் கடாரமும் கொண்ட அய்யன்' என்று குறிக்கப் பெற்றுள்ளான்.

### உத்தம சோழன்

நம் இராசேந்திரன் உத்தம சோழன் எனும் சிறப்புப் பெய ரிணைப் பெற்றிருந்தான் என்று திருவாலங்காட்டுச் செப்பேடு குறிக்கின்றது. மாராயன் அருண் மொழியான உத்தம சோழ பிரம மாராயன், உத்தம சோழப் பல்லவரையன், உத்தம சோழ மிலாடுடையான் போன்ற அரசியல் அலுவலர்கள் இவனது ஆட்சிக் காலத்தில் பெரும்பணி யாற்றியமையாலும் இவன் உத்தம சோழன் எனப் பெயர் பெற்றுன் என்பது உறுதி பெறு கிறது.

### விக்கிரம சோழன்

இவன் விக்கிரம சோழன் எனும் சிறப்புப் பெயரிணைப் பெற்றிருந்த செய்தி, திருவாலங் காட்டுச் செப்பேட்டால் அறியப் படுகிறது.[1] சயங்கொண்ட சோழ மண்டலத்துக் காலியூர்க் கோட் டத்துப் பாகூர் நாட்டி லமைந்திருந்த கங்கை கொண்ட சோழ புரம் எனும் ஊர், இவனது இருபத்திரண்டாம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டிலும், இராசாதிராசனின் இருபத்திரண்டாம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டிலும் 'விக்கிரம சோழபுரம்' எனக் குறிக்கப் பெற்றிருத்தலின் இவனுக்கு விக்கிரம சோழன் எனும் பெயர் விளங்கிய தென்பது உறுதியாகின்றது. இவன் இச்சிறப்புப் பெயரிணைக் கி.பி. 1024 கி.பி.-1034 ஆம் ஆண்டுகளுக்குள் பெற்றிருக்க வேண்டு மென்பதனை அறியலாம். தற்காலத்தில் கூழம்பந்தலென வழங்கப்பட்ட ஊர் இவனது பன்னிரண்டாம் ஆட்சி யாண்டில் கங்கை கொண்ட சோழபுர மெனவும், இவனது இருபத்திரண்டாம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டில் விக்கிரம சோழ புரம் எனவும் குறிக்கப் பெற்றுள்ளமையால் இதனை அறியலாம்.

### அதிசய சோழன்

இராசேந்திரனது இருபத்தொன்பதாம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டுகள் இரண்டு, உக்கல் சிவன் கோயிலில் காணப்படு கின்றன. அவைகளில் குமாரகாலன் வாசுதேவன் என்ற அதிசய சோழ மூவேந்த வேளார் என்ற அதிகாரி கோயில்

[1] S. I. I, Vol. III, Verses-90, 104 and 113

ஒன்று கட்டியதாகக் குறிக்கப் பெற்றிருத்தலின், இவ்வதிகாரியின் பட்டத்தைக் கொண்டு இவன் அதிசய சோழன் எனும் விருதினைப் பெற்றிருத்தல் கூடு மென்று கருத இட முண்டு.

**பண்டித சோழன்**

தமிழ் மொழியிலும் வடமொழியிலும் நல்ல தேர்ச்சி பெற்றும், கற்றோரைப் பேணிப் பாதுகாத்தும், விளங்கியமைபற்றி இராசேந்திரன் பண்டித சோழன் என அறிஞர்களால் போற்றப் பட்டான். இவன் பண்டித சோழனென அழைக்கப் பெற்றமையின் இவன் கல்வி கேள்விகளிற் சிறந்தவன் என்பதனை அறியலாம். கல்வெட்டுகளில் இவன் பண்டித சோழ னென்றுங் குறிக்கப் பட்டுள்ளான்.

**சயசிம்ம சிம்ம சரபன்**

நம் இராசேந்திரன் மேலைச் சாளுக்கிய மன்னனான ஜய சிம்மனை வென்றதனால் 'ஜயசிம்ஹ சிம்ஹ சரபன்' எனும் விருதுப் பெயரினைப் பெற்றான் என்பதனை இவனது கரந்தைச் செப்பேட்டினால் அறியலாம்.

**மலைநாடு கொண்டான்**

இவன் மலைநாடாகிய சேர நாட்டினை வென்றமையால் 'மலைநாடு கொண்டான்' என்ற விருதினைப் பெற்றான் எனக் கொள்ளுதல் தவறாகாது.

**சோழேந்திர சிம்மன்**

போர்க் களத்தில் ஆண் சிங்கமெனப் பகைஞர்மீது பாய்ந்து பெருவெற்றி பெற்ற சோழனாதலின் இவன் சோழேந்திர சிம்மனெனப் பெயர் பெற்றிருத்தல் வேண்டும்.

'சோழேந்திர சிம்மன்' எனும் விருதினை இவன் பெற்றிருந்த செய்தி, திருவாலங்காட்டுச் செப்பேட்டா லறியலாம்.

**முடிகொண்ட சோழன்**

இவன் ஈழநாட்டின்மீது படை கொண்டு சென்று, ஈழ வேந்தனை வென்று, அவனது முடியினையும் அவன் அரசியாரது அழகிய முடியினையும், பாண்டிய மன்னர் ஈழத்தில் அடக்கப் படுத்தி யிருந்த பாண்டியர் முடியினையும் கைப்பற்றியதனால் முடி கொண்ட சோழன் எனப் பெயர் பெற்றான். முதலாம் பராந்தகனும், முதலாம் இராசராசனும் ஈழம் நோக்கிச் சென்றும் கைப்

பற்ற வியலாத பாண்டியர் முடியினைக் கைப்பற்றியமையின் இவன் முடிகொண்டான் எனச் சிறப்பிக்கப் பெறுதல் போற்று தற்குரியதே.

சோழ வேந்தர்கள் முடிசூட்டிக் கொண்ட பழய பெரும் நகரங்களுள் ஒன்றுனதும், அரச குடும்பத்தினர் பலர் அக்காலை வாழ்ந்து வந்ததும், சோழர் சிற்றரசர்களாய் அடங்கிக் கிடந்த துமான பழையாறை நகர் இவனது ஆட்சிக் காலத்தில் இவன் முடிகொண்டதன் நினைவாக 'முடிகொண்ட சோழ புரம்'[1] என அழைக்கப் பெற்றது. மேலும், இந்நகரின் தென் பகுதியில் ஓடும் ஆறும் இவனுல் வெட்டப் பெற்று 'முடி கொண்ட சோழப் பேராறு'[2] எனப்பட்டது. நெல்லை நாட்டின் வழியாகப் பாயும் பொருநை யாறும் முடிகொண்ட சோழப் பேராறு என்று அக்காலத்துச் சாசனங்களில் குறிக்கப் பெற்றுள் ளது. தமிழகத்தின்கண் இச்சிறப்புப் பெயரினைக் கொண்ட பல ஊர்கள் காணப்படுகின்றன. அவற்றுள் சிதம்பர வட்டத்தி லுள்ள முடிகொண்ட நல்லூர், மாயவர வட்டத்திலுள்ள முடி கொண்ட நல்லூர், சிவகங்கை வட்டத்திலுள்ள முடிகுண்டம், கோவை மாவட்டத்தில் கொள்ளக்கால் வட்டத்திலுள்ள முடி குண்டம், இவ்வூரிலுள்ள முடிகொண்ட சோளேச்சரம் ஆகியவை குறிப்பிடத் தக்கன வாகும்.

**வீரராசேந்திரன் அல்லது வீரசோழன்[3]**

போர்க் களத்தில் பெருவீரத்துடன் போர்செய்து, வீரத்தின் இருப்பிடமாகத் திகழ்ந்தமையின் வீரசோழன் என்னும் சிறப்புப் பெயரினை இவன் பெற்றிருத்தல் வேண்டும். வீரசோழன் அனுக்கன் ஆய்ப்பாடி மலபாடி என்ற அதிகாரி திருநாம நல்லூர் சிவன் கோயிலுக்கு நிவந்தங்கள் அளித்துள்ளதால் இவனது பட்டப் பெயரினைக் கொண்டு நம் இராசேந்திரனும் வீரசோழன் எனும் சிறப்புப் பெயரினைப் பெற்றுன் எனக் கொள்ளலாம்.

இவனுடைய தாய் தந்தையர் இவனுக்கு 'மதுராந்தகன் எனும் பெயரினைச் சூட்டியதும், இவன் பட்டம் பெற்றகாலை இரா சேந்திரன் எனும் சிறப்புப் பெயர் இவனுக்கு இடப்பட்டதும் முன்பே கூறப்பட்டுள்ளது.

[1] Ins. 271 of 1927

[2] 'முதற் குலோத்துங்க சோழன்'-T. V. சதாசிவ பண்டாரத்தார்-பக்கம்-21

[3] 61 of 1914

சோழ வேந்தர்கள் ஒருவர்பின் ஒருவராக மாறி மாறிப் புனைந்து கொண்ட இராசகேசரி, பரகேசரி என்னும் பட்டங்களுள் இவன் பரகேசரி என்னும் பட்டத்தினைப் புனைந்து கொண்டதோடு 'திரிபுவனச் சக்கரவர்த்தி' என்றும் 'கோனேரின்மை கொண்டான்' என்றும் தனது கல்வெட்டின் தொடக்கத்தில் மிகத் தோரணையாகக் கூறிக்கொண்டான்.

### மகிபால குல காலன்

நம் இராசேந்திரன் மகிபால குல காலன் எனும் விருதுப் பெயரினையும் பெற்றிருத்தல் வேண்டு மென்பதனைக் கல்வெட்டுச் செய்தியா லறியலாம். வடார்க்காடு மாவட்டம் வந்தவாசி வட்டத்தில் கூழம்பந்தல் என்ற சிற்றூரின்கண்ணுள்ள கங்கை கொண்ட சோழீச்சுரர் கோயிலில் காணப்படும் கல்வெட்டினால் 'மகிபால குல காலன்' எனும் பெயர் கொண்ட அதிகாரி ஒருவர் ஓலை எழுதுவோனாகப் பணியாற்றினார் என்ற செய்தியினையறிகிறோம். இக்கல்வெட்டு நம் இராசேந்திரனின் பன்னிரண்டாம் ஆட்சி யாண்டில் வெளியிடப்பட்டது. அரசியல் துறையில் போற்றத் தகுந்த முறையில் நற்பணி யாற்றும் அதிகாரிகளுக்கு மன்னன் தனது சிறப்புப் பெயரினை இட்டுப் பாராட்டி, ஊக்குவித்தல் அக்கால வழக்கா யிருந்தது. எனவே, நம் இராசேந்திரனும் ஓலை எழுதுவோனுக்குத் தனது சிறப்புப் பெயராகிய 'மகிபால குல காலன்' என்பதனை இட்டிருந்தான். நம் இராசேந்திரன் வங்க நாட்டு வேந்தனான மகிபாலனை வென்றடக்கியதன் நினைவாக 'மகிபால குல காலன்' என்ற விருதுப் பெயரினைப் பெற்றிருத்தல் வேண்டும். இதைப் போன்று தன்னிடம் தோல்வி கண்ட மன்னனின் பெயரினை இணைத்து விருதுப் பெயர் கொள்வது வழக்க மென்பதை நம் இராசேந்திரன், சயசிம்மனை வென்று 'சயசிம்ம சிம்ம சரபன்' என்று விருதுப் பெயர் பூண்டதா லறியலாம்.

### மண்ணை கொண்ட சோழன்

நம் இராசேந்திரன் மண்ணைக் கடக்கத்தினை வென்று, தன்னடிப்படுத்தினான் என்பதனைப் 'போர்ச் செயல்கள்' என்னும் பகுதியில் கண்டோம். மண்ணைக்கடக்கம் என்பது 'மான்ய கேதம்' என்றும் 'மால்கெட்' என்றும் அழைக்கப் பெறுகின்றது. இப்படையெழுச்சியின் போது இராசேந்திரனே படைத் தலைமையேற்றுப் படை நடத்திச் சென்றது குறிப்பிடத் தக்க தாகும். இப்போரில் மான்ய கேதம் தாக்கப்பட்டுச் சூறையாடப்பட்டது. இராசேந்திரன் ஒரே சமயத்தில் வனவாசியின் (ஒரு காலத்தில்

கடம்பர்களின் தலைநகராய் விளங்கியது) மீதும், மான்ய கேதத்தின்மீதும் தாக்குதல் நிகழ்த்திய செய்தி இவனது படை வலிமையினை உலகிற்கு எடுத்தியம்புகின்றது. இப்படையெழுச்சியின் நினைவாக இவன் 'மண்ணை கொண்ட சோழன்' எனும் விருதுப் பெயரினைப் பெற்றான். மண்ணை கொண்டான் எனும் விருதுப் பெயர் பொன்றாது நின்று நிலவும் பொருட்டு இவன் திருவொற்றியூரின்கண்ணுள்ள மண்டபத்திற்கு 'மண்ணை கொண்ட சோழன்' என்று பெயரிட்டான்.[1]

மேற்கூறியவற்றால் வியத்தகு வெற்றிகள் பல பெற்ற நம் வேந்தன் தனது பெரும்படையின் வலிமையும் தனது வெற்றியும் இவ்வுலகின்கண் என்றென்றும் மங்காது மறையாது இருத்தற் பொருட்டு எண்ணிறந்த விருதுப் பெயர்களைப் பெற்றான். ஏறத்தாழ எல்லா வழிகளிலும் தன் தந்தையைப் பின்பற்றிய நம் வேந்தன், சிறப்புப் பெயர் சூட்டிக் கொள்வதிலும் தன் தந்தையினைப் பின்பற்றி, ஏராளமான தோரணையான பட்டங்களைச் சூட்டிக் கொண்டான். இவற்றுள் இவன் கங்கைக்கரை வேந்தர்களை வென்று 'கங்கை கொண்டான்' எனக் கொண்ட விருதுப் பெயரைத் தனது வாழ் நாளில் தனக்குக் கிடைத்த கிடைத்தற்கரிய மாபெரும் பேறு என எண்ணினான். இவன் படைத்த இவ்வெற்றி தமிழனுக்கும் தமிழ் நாட்டிற்கும் கிடைத்த வெற்றி என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. ஈண்டு நாம் இவ்வெற்றி வேந்தன் கங்கை கொண்ட சோழன் என்னும் விருதுப் பெயரினைப் பெற்றதற்குக் காரணம் யாது என்பதனைச் சிறிது ஆய்வோம்.

இராசேந்திரன் கங்கைப் பகுதியினை வென்று கங்கை கொண்டான் என்ற விருதுப் பெயரினைச் சூட்டிக் கொண்டது அவனது வெற்றிச் சிறப்பினை உணர்த்துவதோடு அவனது இறையன்பையும் உலகிற்கெடுத்துக் காட்டுகிறது. இதில் ஒரு பெருந்தத்துவமே அடங்கியுள்ளதனை இதைப் பற்றி ஆழ்ந்து ஆராய்வோர் அறியலாம்.

பொதுவாகப் பெருமன்னர்கள் தங்களது வியத்தகு வெற்றியின் நினைவாகத் தாங்கள் வென்ற நாட்டின் பெயரைக்கொண்டு பெயர் சூட்டிக் கொள்ளுதல் மரபு. 'மதுரையும் ஈழமும் கொண்டான்', 'கடாரங் கொண்டான்' போன்ற பட்டங்களை ஈண்டு நாம் இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

[1] 103 of 1912

இராசேந்திரன் வங்க நாட்டினை வென்றதால் 'வங்கம் கொண்டான்' என்றோ, 'கங்கை நாடு கொண்டான்' என்றோ, பெயர் பெறுதலே முறையானது. ஆனால், இவனோ, 'கங்கை கொண்டான்' எனும் பெயர் கொண்டான். பொதுவாகக் 'கங்கை கொண்டான்' என்றோ, 'காவிரி கொண்டான்' என்றோ, 'வைகை கொண்டான்' என்றோ, 'அரபிக்கடல் கொண்டான்' என்றோ, 'இமயம் கொண்டான்' என்றோ, நதி, கடல், மலை இவை களைக் கொண்டான் என்றோ, மன்னர்கள் கூறிக் கொண்டதாக வரலாற்றில் சான்றுகள் உள்ளதாகத் தெரிய வில்லை.

ஆனால், நம் இராசேந்திரன் மட்டும் புதுமையான முறையில் 'கங்கை கொண்டான்' என்ற விருதுப் பெயரினைப் பெறக் காரணம் யாது?

பொதுவாகச் சோழ மன்னர்கள் சிவநேயச் செல்வர்களாக விளங்கினர் என்பது வரலாறு கண்ட உண்மை யாகும். அதிலும் சிறப்பாகச் 'சிவபாத சேகரன்' எனப் போற்றப்பட்ட முதலாம் இராசராசன் சைவ சமயத்திற்கு அளப்பரிய தொண்டு செய் தான்; திருமுறைகளைத் திருக்கோயில்களில் ஓதச் செய்தான்; மக்கள் மத்தியிலே திருமுறைகளைப் பரவச் செய்தான்; 'திரு முறைகண்ட சோழ' னெனவும் அழைக்கப்பட்டான்.

திருமுறை கண்ட சோழனின் மகனான இராசேந்திரனும் இளமைக் காலந் தொட்டே சைவ நெறியில் வளர்க்கப்பட்டுத் தில்லைக் கூத்தன்பால் எல்லை யில்லாக் காதல் கொண்டான். திருமுறைகளையும் சாத்திரங்களையும் கற்றுத் தேர்ந்தான். பக்திப் பாக்கள் மீது பத்தி கொண்டு கங்கைவார் சடையானைப் பரவினான். இவன் திருமுறைகளைக் கற்குந் தோறும் தென்னா டுடைய சிவனைப் பற்றியும், அவன் சடாமுடியில் கொண்டுள்ள கங்கையைப் பற்றியும் விவரிக்கும் பாடல்களைப் படித்து இன்புற் றிருக்க வேண்டும். சிவபெருமான் கங்கை பூண்டா னென்றும், கங்கை கொண்டா னென்றும் புலவர் பெருமக்களால் சிறப்பித்துப் பாடியுள்ளமை இராசேந்திரனது மனத்திலே நீங்கா இடம் பெற்றிருத்தல் வேண்டும். ஈண்டு நாம் இராசேந்திரனது காலத் திற்கு முன்பு எழுந்த இலக்கியங்களில் எவ்விதம் சிவபெருமா னுடைய கங்கை பற்றிப் பல்வேறு இடங்களில் கூறப்பட்டுள்ள து என்பதைக் காணுதல் நல்லது.

எடுத்துக்காட்டாகச் சம்பந்தர் தேவாரத்தினுள் பல இடங்களிலும்[1] நாவுக்கரசர் தேவாரத்துள் பல இடங்களிலும்,[2] சுந்தரர் தேவாரத்துள் பல இடங்களிலும்,[3] மணிவாசகப் பெருமான் தேவாரத்துள் பல இடங்களிலும்[4] மற்றும் தமிழிலக்கியத்தில் பல இடங்களிலும் சிவனது சடாமுடியிலுள்ள கங்கையைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. மேற்கூறியவற்றை இராசேந்திரன் படித்திருந்தா னுதலால் சிவ

X

[1] 'கங்கைசேர் சடைமுடியிர் (திருவேணுபுரம்)
கங்கை சடைமேலே பாய நின்றான் (திருக்கழுக்குன்றம்)
சடைமேல் திங்கள் கங்கைதனைக் கரந்த
கறை கண்டன் (திருப்புகலி)
கங்கையொடு திங்கள் சூடி (திருச்சோழபுரம்)

எனச் சம்பந்தர், தம் தேவாரத்தினுள் பலவிடத்தும்

[2] கங்கைவார் சடையான் (கோயில்பெரிய திருத்தாண்டகம்)
அலையார்ந்த புனற்கங்கைச் சடையான் (திருமழபாடி)
புனற்கங்கை நிமிர்சடைமேல் ஏற்றவன் (திருவேகம்பம்)
புரிசடை முடியின் மேலோர் பொருபுனற் கங்கை வைத்து
நீர்த்ததும் புலாவு கங்கை நெடுமுடி நிலாவ வைத்தாய்
(திருவண்ணாமலை)

என்று நாவுக்கரசர், தம் தேவாரத்தினுள் பல இடத்தும்

[3] கங்கா நாயகன் (திருக்கழிப்பாலை)
சடைக் கங்கையான் (திருப்புறம்பியம்)
கங்கை மணவாளா (திருவாலங்காடு)
கங்கை தங்கிய சடையுடைக் கரும்பே (திருவொற்றியூர்)
சடைக்கண் கங்கையைத் தாழவைத்தானை (திருவாழ்கொளிப்புத்தூர்)
பாதியோர் பெண்ணை வைத்தாய் படருஞ் சடைக்
கங்கை வைத்தாய் (திருக்கோளிலி)
கங்கையுந் திங்களும் சூடுசடை
(தொண்டை நாட்டு—திருக்கச்சியநேகதங்காவதம்)
சடைமேற் கங்கை வெள்ளம் தரித்ததென்னே
(மலைநாட்டு—திருவஞ்சைக்களம்)

என்று சுந்தரர், தம் தேவாரத்தினுள் பல இடத்தும் கூறியுள்ளனர்.

[4] சடையிடைக் கங்கை தரித்தாய் போற்றி (போற்றித் திருவகவல்)
சடையுளே கங்கை வைத்த சங்கரா போற்றி போற்றி
(திருச்சதகம்—64)
கங்கை இரைப்ப அராஇரைக்கும் கற்றைச் சடைமுடியான்
(திருப்பொற் சுண்ணம்—14)
மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி
சலமுகத்தால் அவன்சடையில் பாயுமது என்னேடி (திருச்சாழல்—7)

என்று மணிவாசகர், தம் திருவாசகத்தினுள் பல இடங்களிலும் பாடியுள்ளார்.

பெருமானைப் போன்று தானும் 'கங்கை கொண்டான்' எனும் பெயரினைப் பெற விழைந் திருத்தல் வேண்டும்.

தன் தந்தை தஞ்சையின்கண் அமைத்த பெருவுடையார் கோயிலின் தீர்த்தம் சிவகங்கைக் குளமாகும். இதனைக் காணும் போதெல்லாம், எண்ணும் போதெல்லாம் தானும் ஒரு கோயி லமைத்து, உண்மையான கங்கை நீரையே கொணர்ந்து கங்கைக் குளம் அமைக்க வேண்டு மென்ற ஆர்வம் அவன் உள்ளத்தில் கிளர்ந் தெழுந் திருத்தல் வேண்டும்.

அடுத்துப் பகீரதன் தனது தவத்தின் வலிமையால் ஆகாய கங்கையைப் பூமிக்குக் கொண்டு வந்த செய்தியினை அறிந்திருத் தல் வேண்டும். எனவேதான், தன் ஆண்மையும் ஆற்றலும் துணைகொண்டு, கங்கை நீரினைக் கொணர்ந்து, தன் குல தெய் வமாம் அம்பலவாணனைப் போல் தானும் 'கங்கை கொண் டான்' ஆக வேண்டு மென்று உறுதி கொண்டிருத்தல் வேண்டும். தவ வலியால் கங்கையினைக் கொணர்தலைக் காட்டிலும் தன் படை வலியால் கங்கையைக் கொணர்தலே பெருமன்னனுனை தனக்குச் சிறப்புடைத்து என எண்ணிப் படை மேற்கொண்டான் கங்கை நோக்கி. எனவேதான், திருவாலங்காட்டுச் செப்பேடும் இவனது கங்கை வெற்றியினைப் 'பகீரதன் தவம் பெரிதா? என் கை வலி பெரிதா? என்று மாமன்னன் இராசேந்திரன் ஏளன மாகச் சிரித்தான்' எனச் செப்புகின்றது. இவனது கரந்தைச் செப்பேடும் 'கங்கை நீரைத் தன் நாட்டுக்கு அழைத்து வந்து விட்டான்' எனக் கூறுகின்றது.

எனவே, 'கங்கை கொண்டானுன' சிவ பெருமானைப் போல் தானும் 'கங்கை கொண்டானுக' வேண்டு மென்பதே இராசேந்தினது நெடு நாளைய விருப்பம். அதுவே, அவனது வாழ்வின் குறிக்கோளாக இருந்தது எனக் கூறுதல் பொருந்தும். திரு.ஆர். நாகசாமி அவர்களும் 'இராசேந்திரன் கங்கைப் படை யெழுச்சியினைத் தனது வாழ் நாளிலேயே பெரிய நிகழ்ச்சியாகப் போற்றினுன்'[1] எனக் கூறுகின்றுர்.

தன் குல தெய்வமாம் தில்லைக் கூத்தனைப் போல் தானும் 'கங்கை கொண்டானுக' ஆனதுடன் தனது வெற்றிக்குப் பெருந் துணை புரிந்தருளிய சிவபெருமானுக்குத் தனது நன்றியறிதலைத் தெரிவிக்கும் பொருட்டுக் 'கங்கை கொண்ட சோளீச்சரம்' என்னும் சிவாலயத்தை எழுப்பினுன்; அதனுல், தனது நீண்ட நாள் விருப்பத்தை நிறைவேற்றினுன்.

[1] Gangaikondacholapuram-R. Nagasamy-Page-58

# 9. இறுதிக் காலம்

சோழர் குலப் பெருமையினையும் பேராண்மையினையும் பாரறியச் செய்தவன் விசயாலய சோழர் குலத் துதித்த முதலாம் இராசராச சோழனென்னும் உரவோனுவான். இத்தகு பெருமை மிக்கவனின் அருமந்த மகனுகத் தோன்றிய இராசேந்திர சோழனே, தந்தையினும் மேம்பட்ட தனயனுக விளங்கிக் களம் பல கொண்டு, வெற்றி பல கண்டு, சோழர்தம் புகழினையும் பெருமையினையும் உச்சக் கட்டத்தில் கொண்டுவந்து நிறுத்திய ஆற்றல் மறவனுக விளங்கினுன்; நல்லாட்சி நடத்துவதிலும் வல்லவனுகவே காணப்பட்டான்.

இராசராசனும், இராசேந்திரனும் சோழர் குல வரலாற்றின் இரு கண்க ளாகும். தந்தையும் மகனும் சேர்ந்து சோழர் குலத்திற்குப் பெருமையினைச் சேர்த்தமை வரலாற்றின் அரிய நிகழ்ச்சிகளுள் ஒன்ருகும். இவ்விருவரது ஆட்சிச் சிறப்பினைப் பல்லவ வரலாற்றில் மகேந்திர வருமன், நரசிம்ம வருமன் ஆட்சியுடனும் குப்தர் வரலாற்றில் முதலாம் சந்திரகுப்தர், சமுத்திர குப்தர் ஆட்சியுடனும், கிரேக்க நாட்டு வரலாற்றில் பிலிப், அலெக்சாந்தர் ஆட்சியுடனும் ஒப்புமை கூறலாம்.

இராசராசன் இவ்வுலகினை விட்டுப் பிரிந்த காலை, சோழப் பெருநாடு பாண்டி மண்டலம், சேர மண்டலம், தொண்டை மண்டலம், கங்க மண்டலம், கொங்கு மண்டலம், கலிங்கம், இலங்கையின் வடபகுதி, நுளம்ப பாடி ஆகிய பகுதிகள் அடங்கியதாக இருந்தது.

இத்துணைப் பெரிய பேரரசினை இராச ராசன் ஆண்டு கொண்டிருந்ததற்குப் பெருந்துணை புரிந்தவன் இராசேந்திரனே யாவன் என்பதையும் நாம் முன்பே கண்டோம். இப்பரந்த

பேரரசின் எல்லைகளை மேலும் மேலும் விரிவு படுத்துவதில் நாட்டங்கொண்ட இராசேந்திரன் இடைவிடாது போர் நிகழ்ச்சிகளில் ஈடுபட்டுப் பகைவரை வென்றுன்; சோழர்தம் புலிக் கொடியை ஆங்கு நாட்டினுன் என்பதையும் நாம் முற் பகுதிகளில் கண்டோம்.

எனவே, இராச ராச சோழனின் இறுதிக் காலத்திய சோழப் பேரரசினைக் காட்டிலும் இராசேந்திர சோழனது இறுதிக் காலத்திய சோழப் பேரரசு பரந்து விரிந்த ஒன்ருகக் காட்சியளித்தது என்பதனை ஈண்டு நாம் நினைவிற் கொள்ளவேண்டும். இராசேந்திரனது காலம் சோழர் வரலாற்றின் சீர்மிகு காலமாகும் என்பதனை எவரும் மறுக்க இயலாது.

எனவேதான், தென்னிந்திய வரலாற்று மேதையான திரு. கே. ஏ. நீலகண்ட சாத்திரியார் அவர்களும் தமது 'சோழர்கள்' எனும் நூலின்கண் 'முதலாம் இராசேந்திரனது ஆட்சியின் இறுதிக் காலம் விசயாலய சோழர் குல வரலாற்றின் ஒளிர்மிகு கால மாகும். சோழப் பேரரசின் பரப்பளவும் இவன் காலத்தில் பரந்து விரிந்து கிடந்தது; நிலப் படையின் வன்மையும், கடற் படையின் வன்மையும் புகழின் உச்ச நிலையில் ஓங்கி விளங்கின,' என்று குறிப்பிட்டு இராசேந்திரனது காலத்திய சோழப் பேரரசின் பெருமையை அருமையாக உணர்த்துகின்ருர்.

இம்மன்னனது காலத்தில் சோழப் பெருநாடு சென்னை மாநிலம், மைசூர் மாநிலம், ஒரிசா மாநிலத்தின் தென்பகுதி நைசாம் அரசின் பெரும்பகுதி, இலங்கை ஆகிய நாடுகளடங்கிய பெருநிலப் பரப்பாக மிளிர்ந்தது.

இம்மன்னனது காலத்தில் சோழரது மேலாதிக்கம் இந்தியத் துணைக் கண்டத்தில் மட்டுமன்றி ஈழம், கடாரம், நக்கவாரம், கிழக் கிந்தியத் தீவுகள் போன்ற கடல் கடந்த நாடுகளிலும் பட்டொளி வீசிப் பறந்தது என்பது தமிழக வரலாறு சாற்றும் பறை யாகும். பேராசிரியர் பண்டாரகர் என்.. சுப்ரமணியன் அவர்கள் தமது 'தமிழ்நாட்டு வரலாறு' எனும் நூலின்கண் 'இம் மாமன்னனது ஆட்சியின் இறுதிக் காலத்தில் சோழப் பேரரசு பரப்பளவிலும், பெருமையிலும் உச்ச நிலையினை அடைந்தது; இதனுடன் ஒப்புமை கூறத் தக்கதொரு பேரரசு தமிழ் நாட்டின்கண் இதற்கு முன்பும் இல்லை; பின்பும் இல்லை என்று வியந்து பாராட்டு மளவிற்கு இராசேந்திரனது பேரரசு பரந்து விரிந்து கிடந்த தென்ருல், அப்பேரரசின் பெருமையினை நாம் எவ்விதம் அளந் துரைக்க முடியும்?

வீரத்திலும், வெற்றியிலும் தனக்கு ஒப்பாரும், மிக்காரு மின்றித் தமிழக வரலாற்றில் தனிச் சிறப்பிணைப் பெற்றுள்ள இராசேந்திரன் வடநாடு சென்று பகை வென்ற வீர மறவர்கள் வரிசையின் (கரிகால் சோழன், ஆரியப்படை கடந்த நெடுஞ் செழியன், சேரன் செங்குட்டுவன், இராட்டிரகூட மன்னர் களான துருவா, மூன்றும் கோவிந்தன், மூன்றும் இந்திரா போன்ற மன்னர்களும் வடநாட்டுப் படை யெழுச்சியிணை மேற் கொண்டனர்) முன்னணியில் நின்று அணி செய்தான்.

எழில் மிகுந்த சோழ நாட்டின் ஈடு, இணை யற்ற பெரு மன்னனுகத் திகழ்ந்த இராசேந்திரனுக்குத் திரையும், நரையும் தோன்றத் தொடங்கின. இருப்பினும், அரசியல் பெருங்காரியங் களில் இவனும் பங்கேற்றுக் கருத்துரைகள் கூறவும், நாட்டு நிலேகளை உடனிருந்து கவனிக்கவும் தயங்கியதே யில்லே.

அறிவும் ஆற்றலும் அனுபவமும் மிக்க அரசியல் அலுவலர் களையும், சிற்றரசர்களையும், அமைச்சர்களையும், ஆற்றல் மிக்க ஆண் மக்களையும் பெற்றிருந்த இராசேந்திரன் தனது இறுதிக் காலத்தில் மன அமைதியுடன் காலத்தைக் கழித்துக்கொண்டி ருந்தான். இந்தப் பெருஞ்சிங்கம் கிழடு பட்டுவிட்டாலும் இதன் கருச்சணையும் கம்பீரமும் ஓய்ந்ததாகத் தெரிய வில்லே. அப் பொழுது அரசியல் வானில் அவன் ஒரு பொற்காலத்திணை வரைந்து கொண்டிருந்தான் என்ருல் மிகை யாகாது.

இவனது இறுதிக் காலத்தில் அன்பு மிக்க மனைவிமார்களும் அவனிடம் பேரன்பு கொண்டு பேணிக் காத்தனர். அவர்களுள் வீரமாதேவி என்பாள் இவணைக் கண்ணுங் கருத்துமாகப் போற்றி வளர்த்தாள் என்பது குறிப்பிடத் தக்க தாகும்.

ஏறத்தாழ ஐம்பதாவது அகவையில் ஆட்சிப் பொறுப் பேற்ற இம்மன்னன், தனது தள்ளாத பருவத்திலும் திறமையான ஆட்சியிணை மேற்கொள்ளத் தவற வில்லே. எண்பது வயதைத் தாண்டிய நிலேயிலும், உடல்நிலே தளர்ந்திருந்த போதிலும், அரசியல் நடவடிக்கையிலிருந்து ஓய்வெடுத்துக்கொள்ள விரும் பாமல் திறமையாக ஆட்சியிணைக் கவனித்தான்.

கடாரம் சென்று, வெற்றி கண்டு, தமிழ் மக்கள் வீரத்தையும் விவேகத்தையும் அங்கே நிலேநாட்டி, அலேகள் பாய்ந்து ஒலி எழுப்பும் கருங்கடலில் வெற்றி முழக்கம் இட்டுக்கொண்டே சோணுட்டிற்குத் திரும்பிய பின்னர், இராசேந்திரன் அமைதி

யான வாழ்க்கையை மேற்கொள்ள எண்ணி யிருந்தான்; தன்னுடைய நெஞ்சில் படிந்து கிடந்த போர்வெறியை யெல்லாம் பக்தி உணர்வால் அவித்து அமைதியாகவே இருக்கத் தலைப் பட்டான்.

கோயிற் பணிகளிலும், கோயிலில் பூஜை செய்யும் அந்தணர்களுக்கு உதவுவதிலும், சைவ சமயத்தைப் பரப்ப முற்பட்ட சான்றோர்களுக்குத் தக்க உதவி புரிவதிலும் ஈடுபட்டுக் கொண்டிருந்தான்.

கடாரப் படையெழுச்சிக்குப்பின் இவனது ஆட்சிக் காலத்தில் இருபதாண்டுகள் அமைதிக் காலமாக இருந்தது என்று எஸ் கிருட்டிணசாமி ஐயங்கார் போன்ற வரலாற்றறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். இராசேந்திரனின் மெய்க் கீர்த்தியைப் பொருத்த மட்டில் இவனுடைய போர் நிகழ்ச்சிகள் கடாரப் படையெழுச்சிக்குப் பின்னர் முடிவு பெற்றதாக அறியலாம். ஆனல், இராசாதிராசனின் மெய்க்கீர்த்தியைப் பார்க்குங்கால் இராசேந்திரனது ஆட்சிக் காலத்தினை அமைதிக் காலமாக நாம் கூற வியலாது.

இக்காலத்தில் இராசேந்திரன், தானே போர் நிகழ்ச்சிகளில் படைத் தலைமை யேற்றுப் படை நடத்திச் செல்லாவிட்டாலும் அவனுடைய மகனும் இளவரசனுமாகிய இராசாதிராசனிடம் படைப் பொறுப்பினை ஏற்கப் பணித்துக் கலகங்களை அடக்கினுன் என்பது அறியப்படுகின்றது.

சேரர், பாண்டியர், ஈழவர், மேலைச் சாளுக்கியர் ஆகியோர் அச்சம் தவிர்ந்தா ரில்லை; அவர்கள் சோழர்களைத் துச்சமென மதித்துப் படைப் பெருக்கத்தில் ஈடுபட்டனர்; சோழருக் கெதிராகப் புரட்சிக் கொடி யுயர்த்தினர். மேலைச் சாளுக்கிய மன்னர்களில் பெரும்புலியாகத் திகழ்ந்த ஆகவமல்லன் எனும் சோமேசுவரன் என்பான் இப்புரட்சிக்குத் தலைமை தாங்கி நடத்தி வந்தான். விறுகொண்ட இராசாதி ராசன் இப்புரட்சியினையும் அடக்கி மேலைச் சாளுக்கியரையும் ஒடுக்கினுன்.

தனது இறுதிக் காலத்தில், அண்டை நாடுகளில் தோன்றிய கலகங்கள் அடக்கப்பட்ட போதிலும், இராசேந்திரன் மகிழ்ச்சி மிக்கவனுகக் காணப்பட வில்லை. உடல் தளர்ந்திருந்த நேரத்தில் மனமும் தளர்ந்திருந்ததால் இவனது உடல்நிலை பெருமளவில் பலவீனப்பட்டது. எவ்வளவுதான் உடல் பலவீனப்பட்டாலும் தன் நாட்டுக்குள் சுற்றுப் பயணம் செய்து, மக்கள் நிலையைப்

பார்வை இடுவதிலும், திருத்தலங்களுக்குச் சென்று இறை வழி பாடு புரிவதிலும் அரசியல் சூழல்களைப் பார்வை இடுவதிலும் நாட்டங் கொண்டவனாகவே இருந்தான்.

இவனுடைய எண்பத்து மூன்றாவது வயதில் ஒரு நாள் சான்றோர்கள் நிறைந்த தொண்டை நாட்டுப் பகுதிக்குச் சென்றுவரத் திட்டமிட் டிருந்தான். சோழப் பெரும்படையின் அணியெனத் திகழ்ந்த, அரிய பல தியாகங்களைப் புரிந்த, நாட்டுப்பற்று மிக்க இளஞ்சிங்கங்களைக்கொண்டு விளங்கிய தொண்டை நாட்டைப் பார்வையிடுவதில் இராசேந்திர சோழன் பேரவாக் கொண்டதில் வியப் பில்லை.

தொண்டை நாட்டின்கண் சுற்றுப்பயணம் மேற்கொண்டி ருந்த மாமன்னன் பிரமதேயத்தையும் பார்வையிட்டான். ஆங்கு அவன் தங்கியிருந்த காலை அவனது உடல்நிலை பலவீன மடைந்தது. முப்பத்து மூன்றாண்டுகள் சோழப் பெருநாட்டினை வளமுடன் ஆண்டுவந்த மாமன்னன் ஏறத்தாழத் தனது எண் பத்து மூன்றாவது அகவையில் (கி.பி. 1040) இறைவன் திருவடி சேர்ந்தான்.

இராசேந்திரனது உடல் வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள பிரமதேசம் என்னும் ஊரிலேயே அடக்கம் செய்யப்பட்டது. சோணாட்டின் ஒளிவிளக்கு அணைந்துவிட்டது!

அன்று கங்கைநதி பாயும் கவின்மிகு நாட்டை வென்று அடிமைப்படுத்திய இராசேந்திரன், இன்று சுற்றத்தார்களும் மக்களும் கங்கை நீர்போல் கண்ணீர் விட்டழச் சிவலோகம் சென்றுவிட்டான்!

அலைகடல் நடுவுள் பல கலஞ் செலுத்தி, ஈழ மண்டலத்தை யும், கடாரத்தினையும், கிழக் கிந்தியத் தீவுகளையும் வெற்றி கொண்ட இரசேந்திரனைக் காலன் (கூற்றுவன்) வெற்றி கொண் டான்!

இறுதிவரை சிவநேயச் செல்வனாகவும், சமயப் பொறை மிக்கவனாகவும் வாழ்ந்து வந்தவன் சிவனடி சேர்ந்துவிட்டான்!

தமிழக வரலாற்றில் பொன் யுகங் கண்ட கன்னித் தமிழனும் கடலாண்ட காவலன் பொன்னுலகம் நோக்கிச் சென்று விட் டான்!

தன்னால் வென்றடக்கப்பெற்ற நாட்டிற் கெல்லாம் தன் பிரதிநிதிகளை முதன் முதலாக நியமித்து ஆளச் செய்த ஆட்சி யாளன், இன்று மேலுலகையும் ஆளச் செல்பவன்போல் சென்று விட்டான்!

இராசேந்திரனின் இறப்பின் போது அவன் தேவியான வீரமாதேவியும் தனித்திருக்கப் பொருதவளாய்க் கணவன் சென்ற உலகிற்குச் சென்று, அவனுடன் வாழ்வதை விரும்பித் தானும் உடன்கட்டையேறி உயிர் துறந்தாள்![1]

இராசேந்திரன், அவனுடன் உயிர் துறந்த வீரமாதேவி ஆகிய இருவர் உயிர்கட்கும் நீர்வேட்கை தணித்தற் பொருட்டுச் சேனாதிபதி மதுராந்தகன் பரகேசரி மூவேந்த வேளான் தண்ணீர்ப் பந்தல் ஒன்று நிறுவினான். இவன் வீரமாதேவியின் உடன் பிறந்தான் என்பதனைப் பிரம தேயக் கல்வெட்டா லறிய லாம்.

தமிழ் மண்ணிலே பிறந்து, கன்னித் தமிழையும், வட மொழியையும் ஆதரித்து, வடநாடு சென்று வடவரின் கொட்டத்தினை யடக்கிக் கடல் கடந்து சென்று, கன்னித் தமிழனின் வீரத்தினை நிலைநாட்டிய ஆற்றல் மறவனும், பண்டித சோழனு மாகிய இம் மாமன்னனின் சாதனைகள் இன்றும் நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றன.

கால வெள்ளத்தால் அழிக்க வொண்ணாப் புகழினைத் தமிழக வரலாற்றுச் சுவடியில் பதித்துவிட்டுத் தமிழர்களின் இதயங் களில் மங்காத மாமணியாய், மாசற்ற பொன்னாய் ஒளி வீசிக் கொண்டிருக்கும் மாமன்னன் பரகேசரி முதலாம் இராசேந்திர சோழனின் வீர வாழ்வு இவ்விதம் முடிவுற்றது. இவனது பொன்னுடல் மறைந்தாலும், புகழுடல் மறையாது என்பதனைக் கங்கை கொண்ட சோழீச்சுரம் இன்றும் உணர்த்திக்கொண்டுள் ளது. சோழர் குல ஒளிவிளக்கு அணைந்துவிட்ட போதிலும் அத னுடைய பெயரும் புகழும் என்றென்றும் ஒளி வீசிக் கொண்டே யிருக்கும் என்பதில் ஐய மில்லை.

'நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ் வுலகு'[2]

[1] Ins. 260 of 1915
[2] திருக்குறள்-நிலையாமை-6

# 10. குண நலன்கள்

இதுகாறும் கூறியவற்ருல் இராசேந்திரனுடைய வாழ்க்கை வரலாறு, போர்ச் செயல்கள், அரசியல் திறன், கீர்த்தி, சாதனைகள் ஆகியவைபற்றி நாம் ஒருவாறு அறிந்துகொள்ள இயலும். நம் இராசேந்திரன் விசயாலய சோழன் வமிசத்தில் தோன்றிச் சோழர்களின் புகழினையும், மேலாண்மையினையும் உலகறியச் செய்த செயல் வீரனும், மாமன்னனுமான முதலாம் இராசராச சோழனுக்குப் பின்னர் சோழப் பெருநாட்டினை ஆட்சி புரியும் நற்பேறு பெற்றவனுவான். இவன் தன் தந்தையின் காலத்தில் சோழப் பேரரசு ஈட்டிய வெற்றியினையும், புகழினையும், மங்காது, மறையாது, குன்ருது, குறையாது காத்தோம்பியதுடன் நில்லாமல், மேலும் மேலும் பல உன்னதமான வெற்றிகளைச் சோழப் பேரரசிற்கு ஈட்டித் தந்து, புகழின் கொடுமுடியில் அதைஏற்றி வைத்தான். இவனது ஆட்சிக் காலத்தில் சோழப் பெருநாட்டின் எல்லையினை விரிவுபடுத்தியதுடன், மேம்பட்ட ஆட்சி முறையினையும் ஏற்படுத்தினுன்.

சோழ வேந்தர்களுள் உயர்ந்த நிலையில் வைத்துப் போற்றப்படும் நம் இராசேந்திரன் ஒரு செம்மை சால் வேந்தனுக்குரிய எல்லா நற்பண்பியல்களும் ஒருங்கே அமையப் பெற்றுத் திகழ்ந்தான் என்பது போற்றுதற்குரிய தொன்ருகும். பரந்த நோக்கமும் விரிந்த மனப்பான்மையும் கொண்ட இராசேந்திரன் தன் வீர மிக்க முன்னேர்களைப் போன்று அஞ்சா நெஞ்சமும், வீரமும், கருணை யுள்ளமும், இறை யன்பும், கொடைத் திறனும், அறிவும், புலமையும், கலை யுணர்வும், பெருந்தன்மையும், நீதிநெறி வழுவா நேர்மையும், மக்களிடத்து அன்பும் பரிவும், சமயப் பொதுநோக்கும் வாய்க்கப்பெற்றவனுய்ச் செங்கோல் செலுத்தினுன். ஈண்டு இவனுடைய நற்பண்புகளைப்பற்றிச் சிறிது காண்போம்.

*வீரம்*

குணமெனும் குன்றேறி நின்ற இவன்பாற் காணப்படும் உயர்குணம் பலவற்றுள்ளும் முதலாவதாக வைத்துப் பாராட்டத் தக்கது இவனது வீரத் தன்மையே யாகும். இவன் வீரனுக் கேற்ற, சிங்கத்தினை யொத்த உடற்கட்டும், வீரமும், தீர மும், துணிச்சலும், போர்க்கலை யறிவும் கொண்டவன்; சிறந்த குதிரை வீரனும், குறி தவருத வில் வீரனும், வாள் வீரனு மாவான். வாளேந்தும் வாய்ப்பு இவனுக்குத் தந்தை வழி ஏற் பட்ட தாகும். வீரத்தோடு கூடிய விவேகமும், தெளிந்த அறிவும் இவன் சிறந்த வீரனுகத் திகழத் துணை புரிந்தன. சோழ குலத்துப் பேரரசர்களின் வழித் தோன்றலாகிய இவனுடைய நரம்புகளிலும் தன் முன்னேரின் வீர ரத்தம் நிறைந்து ஓடிற்று தலின் இயற்கையிலேயே இவன் வீர மறவனுகத் திகழ்ந்தான். வீரனின் அணியாகக் கருதப்படும் அஞ்சாமையை நிறைந்த அளவில் நம் அஞ்சா நெஞ்சன் கொண்டிருந்தான். வாழையடி வாழையாக வீரம் செறிந்த பழங்குடியில் தோன்றிய இவ் வேந்தன், தன் தந்தையின் ஆட்சிக் காலத்தே பார் புகழும் வீரனுகத் திகழ்ந்து, பல போர்க் களங்களுக்குப் படை நடத்திச் சென்று, தனது வீரத்தினை வெளிக்காட்டி, வெற்றி வீரனுகத் திகழ்ந்தான். சேர பாண்டியரையும், சாளுக்கியரையும், ஈழத் தினரையும், கலிங்கரையும் இவன் தன் தந்தையின் ஆட்சிக் காலத்திலேயே வென்று அடக்கினுன் என்பதனுல் இவனது வீரத்தின் பெருமையினை நாம் நன் கறியலாம்.

நம் இராசேந்திரன் வடபுலத்தில் வெற்றித் திருவுலா வந்து, வட வாரிய வேந்தர்களைப் போர்க் களத்தில் புறமுதுகிட்டோடச் செய்து, கங்கை நீரைக் கொணர்ந்த செய்தி, இவனது தலை சிறந்த வீரத்திற்கோர் எடுத்துக்காட்டாகும். வங்க நாட்டின் சிங்கமான மகிபாலனை இக்கோமான் வென்றடக்கிப் போர்க் களத்தினின்றும் துரத்தியடித்த செய்தி இந்தியா முழுவதிலும் இணையற்ற புகழினை இராசேந்திரனுக்குத் தேடித் தந்ததை வரலாறு என்றென்றும் மறவாது. ‘கங்கை கொண்ட சோழ புரம்’ இன்றும் இவன் வீரப்புகழ் பாடுவதை நாம் காணலாம்.

சோழர்கட்கு இடைவிடாது தொல்லை ஈந்து வந்த, தீராப் பகைஞர்களான மேலைச் சாளுக்கியரின்மீது வேங்கை யெனப் பாய்ந்து அவர்களை வென்று தனது மேலாண்மையினை ஆங்கு நிறுவியவன் நம் இராசேந்திரனே யாவான். மேலைச் சாளுக்கிய மாவீரர்களும் வேந்தர்களுமான சத்தியாசிரயனையும், சயசிம் மனையும், ஆகவமல்லனையும் தோற்கடித்து வெற்றி வீரனுகத்

திகழ்ந்த இராசேந்திரன் மாபெரும் வீரன் என்பதில் எள்ளளவும் ஐய மில்லை. சயசிம்மனை வென்றடக்கியதன் நினைவாகச் 'சய சிம்ம சிம்ம சரபன்' என்னும் விருதுப் பெயரினைப் பெற்றதால் இவனது வீரம் நன்கு வெளிப்படுகின்றது. காவிரி நாடனுகிய இராசேந்திரன், கங்கை நாடனும் வங்கச் சிங்கமுமான மகி பாலனை வென்று 'மகிபால குல காலன்' எனும் விருதுப் பெயரையும் பெற்றவன்; போர்க் கலையில் இவன் உரோம நாட்டு வீரனும் ஜூலியஸ் சீசரோடும், கிரேக்க நாட்டு மாவீரனும் அலெக்சாந்தரோடும் ஒப்பு நோக்கத் தக்கவனுவான்.

தரைப் படையினைக் கொண்டு வியத்தகு வெற்றிகள் பல பெற்ற மாவீரனும் இராசேந்திரன் கப்பற்படை கொண்டு, கடல் கடந்த நாடுகள் பலவற்றை வென்றுன்; வியத்தகு புகழ் பெற் ருன். பெருவீரனுகிய இவ்வேந்தன் அலைகடல் நடுவுள் பல கலஞ் செலுத்திச் சுமத்ரா, ஜாவா, இந்து சீனம், கடாரம், ஈழம், நிக்கோபார் முதலான கடல் கடந்த நாடுகளை வென்று கட லாண்ட காவலனுகவும் சிறந்து விளங்கினுன். இவன் கடல் கடந்து சென்று வியத்தகு வெற்றிகள் பல பெற்று விளங்கினுன் என்பதனைக் 'கடாரங் கொண்டான்' என்ற விருதுப் பெயரால் அறியலாம்.

'பூர்வ தேசமும் கங்கையும் கடாரமும் கொண்டான்' என்று இவன் கல்வெட்டுகளில் போற்றப்படுவதனுல் இவன் வீரத் தின் திருவுருவாய், வெற்றியின் பேருருவாய் விளங்கினுன் என் பதனை நாம் அறியலாம்.

பண்டை உலகில் மாபெரும் வேந்தனுகவும், ஒப்புயர் வற்ற மாபெரும் வீரனுகவும் விளங்கியவன் மாவீன் அலெக்சாந்த ராவான். அவன் தந்தையான பிலிப் ஆட்சிப் பொறுப் பேற்ற வுடன் துண்டு துண்டாகச் சிதறிக் கிடந்த கிரேக்க நாடுகள் அனைத்தையும் தனது ஆட்சியின்கீழ்க் கொணர்ந்து ஒன்று பட்ட கிரேக்க நாட்டினை உருவாக்கினுன். இவ்விதம் தன் தந்தை அமைத்த அடித் தளத்தின்மீது அலெக்சாந்தர் ஒரு மாபெரும் பேரரசினை நிறுவினுன். அலெக்சாந்தர் பேரரசினை நிறுவத் துணை புரிந்தது அவனது பெருவீரமே யாகு மென்பதில் சிறிதளவும் ஐய மில்லை. பிலிப் மன்னனைப் போல் முதலாம் இராசராசன் தென்னுட்டினை ஒன்று படுத்தி ஓராட்சிக்குக்கீழ்க் கொணர்ந்தான். அவன் மகனும், பெருவீரனுமாகிய இராசேந் திரனும் அலெக்சாந்தரைப் போல் தனது வீரத்தின் துணை கொண்டு நாடுகள் பலவற்றை வென்று, 'கங்கை கொண்டான்'

'கடாரங் கொண்டான்' என்னும் சிறப்புப் பெயர்களைப் பெற்று வீரத்தின் நிலைக்கலனாய்த் திகழ்ந்தான். இவ்விதம் அலெக்சாந்தரைப் போல், வீரமே துணையெனக் கொண்டு மாபெரும் வெற்றி வீரனாகத் திகழ்ந்த நம் இராசேந்திரனை 'இந்தியாவின் அலெக்சாந்தர்' எனக் கூறுதல் சாலப் பொருந்தும்.

வீரத்தின் திருவுருவாய்த் திகழ்ந்தமையால்தான் நம் வேந்தன் 'சோழேந்திர சிம்மன்', 'முடிகொண்ட சோழன்', 'வீர ராசேந்திரன்', 'கங்கை கொண்டான்', 'கடாரம் கொண்டான்', 'மகிபால குல காலன்' என்னும் வெற்றிப் பெயர்களால் அழைக்கப் பெறுகின்றான் என்பதனை நாம் ஈண்டு நினைவிற் கொள்ள வேண்டும்.

'இலங்கை வேந்தன் பெண்டு பிள்ளைகளைப் பறி கொடுத்து அச்சத்தினால் இராசேந்திரனின் இரு திருவடிகளையும் தொழுதான்' எனவும்,

'தடை படாத நிறைந்த பராக்கிரமத்தையும் ... ... ... உடையவனுமான இராசேந்திரன்' எனவும்,

'பகைவர்களை முறியடித்தவனும்......' எனவும்,

'இராசேந்திரன்...குதிரை ஏற்றம், யானை ஏற்றம், தேரேறுதல் முதலியவற்றில் மிக்க பயிற்சி யுள்ளவனும், வாள்போரின் நுட்பங்களை அறிந்தவனும், எறிபடைக் கலங்களில் தேர்ச்சி பெற்றவனு மாகி' எனவும்

இராசேந்திரனின் கரந்தைச்செப்பேடு இவனைப் போற்றுவதாலும், இவனது வீரத்தின் மேம்பாட்டினை நாம் அறியலாம். தனது வாழ்நாளில் தோல்வியே காணாது வெற்றி ஒன்றையே கண்ட வீர மறவன் இராசேந்திரன் ஆவான். போர்க் கலையில் தேர்ச்சியும், முதிர்ச்சியும் கொண்டு தன் வாளாண்மையாலும், தோளாண்மையாலும், திக்கெட்டும் வெற்றிக்கொடி நாட்டிப் பெரும்புக ழீட்டிய நம் இராசேந்திரன் ஒப்புயர் வற்ற மாவீரன் என்பதில் சிறிதளவும் ஐய மில்லை.

'புகழ், வீரச் செயல்களின் நறுமணம்' எனக் கிரேக்க நாட்டு மாபெரும் அறிஞன் சாக்கரடீஸ் செப்பியது போல் இராசேந்திரனும் தன் வீரச் செயல்களினால் பெரும்புக ழீட்டினான்; வரலாற்றுப் புகழ் பெற்றான். தன் வாழ்நாளில் தோல்வியே காணாது, வெற்றி ஒன்றனையே கண்ட இராசேந்திரன் மாபெரும் வீரன் எனக் கூறுதல் சாலப் பொருந்தும்.

**இறையன்பு**

> 'கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
> நற்ருள் தொழாஅர் எனின்'[1]

என்ற வளமார்ந்த வள்ளுவரின் குறட்பாவிற் கிணங்க இராசேந்திரனும், ஆதி யந்தம் இல்லா அரும்பெருஞ் சோதியாம் இறைவன் மாட்டுப் பேரன்பு கொண்டவனுய் இருந்தான். கடவுள் பக்தியில் ஒப்பாரு மின்றி, மிக்காரு மின்றிச் சிறந்து விளங்கியவன் இராசேந்திரன் என்பது இவன் செய்த அறக் கொடைகளால் இனிது விளங்கும். தென்னுடுடைய சிவபெருமானிடத்து இவன் ஒப்புயர் வற்ற பக்தியுடையவனுய் ஒழுகி வந்தான் என்பதனை நாம் முன்பே கண்டோம்.

தனது கங்கை வெற்றியின் நினைவுச் சின்னமாகக் கங்கை கொண்ட சோழபுரம் எனும் நகரினை நிறுவித் தனது வெற்றிக்குப் பெருந்துணை புரிந்த எல்லாம் வல்ல சிவபெருமானுக்குத் தனது இதயங் கனிந்த நன்றியினைத் தெரிவிக்கும் பொருட்டுக் 'கங்கை கொண்ட சோளேச்சரம்' எனும் பெயரில் சிவன் கோயிலைக் கட்டியதால், இவன் சிவபெருமான்மீது கொண்டிருந்த அளவு கடந்த பக்தியும் ஈடுபாடும் புலனுகின்றன. இராசேந்திரன் மாண்டுவிட்டான்; அவன் பெற்ற வெற்றிகளும் மறைந்து விட்டன; அவன் நிறுவிய சோழப் பேரரசும் அழிந்து விட்டது; ஆனல், அவன் நிறுவிய கங்கை கொண்ட சோளேச்சரமோ, இன்றும் இம்மண்ணுலகில் நின்று நிலவிச் சிவநேயச் செல்வனுகிய அவனது பெரும்பக்தியினைப் பறைசாற்றிக் கொண்டிருக்கின்றது.

தில்லை யம்பதியின் கண்ணுள்ள பொன்னம்பலத்திலே ஆனந்த நடனம் புரியும் ஆடவல்லானே சோழர்களின் குல தெய்வ மாகும். எனவேதான், இராசேந்திரனும் தில்லை நடராசப் பெருமான்மீது எல்லை யற்ற அன்பு கொண்டவனுய்க் காதலாகிக் கசிந் துருகிக், கண்ணீர் மல்கிப் பக்திப் பரவச மடைந்தான்.

சிவநேயச் செல்வனுகிய இராசேந்திரன் தனது தலைநகரத்தினைத் தஞ்சையினின்றும் கங்கை கொண்ட சோழபுரத்திற்கு மாற்றியதன் காரணமே தன் குல தெய்வமாம் தில்லைக் கூத்த பிரானைத்தான் வணங்கச் செல்லுங்கால் ஆறுகள் தடையாக அமைந் துள்ளன என்பதே யாகு மென்று கல்வெட்டறிஞர்

[1] திருக்குறள் - கடவுள் வாழ்த்து-2

திரு. சுந்தரேச வாண்டையார் அவர்கள் குறிப்பிடுகின்றார். மேலும், வரலாற்றறிஞர் பண்டாரகர் திரு. என். சுப்ரமணியன் அவர்கள் 'இராசேந்திரன் தலைநகரைத்தஞ்சையிலிருந்து கங்கை கொண்ட சோழபுரத்திற்கு மாற்றியதன் காரணம், அஃது அவனது சமயத் தலைநகரான சிதம்பரத்திற்கு அருகில் அமைந் திருத்தலினால் இருக்கக் கூடும்' என்று குறிப்பிடுகின்றார். எனவே, தில்லைக் கூத்தன்பால் கொண்ட எல்லை யற்ற அன்பே இவனைத் தலைநகர் மாற்றும் பணியில் ஈடுபடுத்திற்று என்பதில் ஐய மில்லை. இதிலிருந்து இவ்வேந்தனின் பக்திச் சிறப்பு நன்கு வெளிப்படுகின்றது.

நம் இராசேந்திரன் இளமைக் காலத்தே சைவத் திருமுறை களைக் கற்றுத் தேர்ந்தவனாதலின் பக்தி நெறியினில் தன் வாழ் நாள் முழுவதும் ஒழுகி வந்தான்.

வடநாடு சென்று, பகைவரை வென்று திரும்பிய சோழ நாட்டுப் படைத் தலைவனை (மாதண்ட நாயகனை) இவன் கோதாவரிக் கரையில் வரவேற்று அவனோடு தன் நாட்டிற்குத் திரும்புகையில் இடையிலுள்ள திருத்தலங்களில் இறைவனைத் தொழுது, நிவந்தங்கள் அளித்த செய்தி கல்வெட்டுச் சான்றால் அறியப்படுதலின் இராசேந்திரனது பக்தி மேம்பாட்டினை நாம் தெளிவாக அறியலாம். 'இராசேந்திர சோழ தேவர் கங்கை கொண்டு எழுந்தருளுகின்ற இடத்துத் திருவடி தொழுது' என்ற திரைலோக்கிய மாதேவிச் சதுர்வேதி மங்கலத்துக் கல் வெட்டுச் செய்தியாலும் இதனை நாம் நன்கறியலாம்.

இராசேந்திரன், மூதலாம் கண்டராதித்த சோழனாலும், அவன் மனைவி செம்பியன் மாதேவி என்னும் சிவமணியாலும், இராசராசனின் தமக்கையார் குந்தவைப் பிராட்டியாராலும் இளமைக் காலத்தில் வளர்க்கப் பட்டமையின் இறை யன்பு பெற்று விளங்கினான் என்பதில் வியப் பொன்று மில்லை. ஏனெ னில், ஒருவன் தனது இளமைக் காலத்து அடையப் பெற்ற பயிற்சியும், பழக்க வழக்கமும், பண்பும் அவனது வாழ் நாள் முழுவதும் நீங்காது நிலைபெற்றுப் பயன் தரும் என்பது உலகறிந்த உண்மை யாகும். எனவே, இவன் மரபு வழியாலும், சுற்றுப்புறச் சூழலாலும், (Heridity and Environment) பத்தி மார்க் கத்தில் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்தான் என்பது புலனாகும்.

கங்கைவார் சடையானைக் கண்டு சிரந் தாழ்த்திக் கை கூப்பி, நினைந்து நினைந்து, நெஞ்சம் நெக்குருகி, அகவிருள்

போக்கி, உள்ளொளி பெற்றுத் தூய வாழ்வு வாழ்ந்த நம் வேந்தன் சிறந்த சிவ பத்தன் என்பதனைத் தமிழக வரலாறு என்றென்றும் மறவாது.

**கொடைத் திறன்**

'ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல(து)
ஊதியம் இல்லை உயிர்க்கு'[1]

வையகமும், வானகமும் வாயாரப் புகழும் புலமை வேந்தன் பொய்யா மொழியின் பொன்னுன குறளோவியம் இது. இதன் இலக்கியமாகத் திகழ்ந்தவன் நம் இராசேந்திரன் எனக் கூறுதல் தவருகாது. இதுகாறும் நாம் வரையாது வழங்கும் பாரியையும், கருணனையும் தலைசிறந்த கொடையாளர்களெனக் கருதி வந்தோம். நம் இராசேந்திரனது வரலாற்றைக் கற்போர் இவனும் சிறந்த கொடையாளன் எனக் கருதுவர்.

அற்ருர் அழிபசி தீர்த்து, ஈத்துவக்கும் இன்பத்தினை அனுபவித்து அனுபவித்து மகிழ்ந்தவன் நம் இராசேந்திரன் ஆவான். இவனது கொடைத் திறனுக்கோர் எல்லையில்லையென்று கூறுமளவிற்கு இவன் வறியார்க்கு வரையாது வாரி வாரி வழங்கி, இம்மன்னு உலகத்து மன்னுதல் குறித்தான்.

இல்லையென்று இரப்பவர்க்கு, இல்லையென்று கூருது, வாரி வாரிக் கொடுக்கும் இதயத்தினையும், இரக்க சிந்தனையினையும் நம் இராசேந்திரன் பெற்றிருந்த காரணத்தால்தான் இவனது கரந்தைச் செப்பேடு இவனை, 'அறமாகிய உதய பருவதத்தில், நாளும் உதயத்தை அடைந்து உலகத்திலுள்ள யாவராலும் வணங்கப்படுபவனும்...தீவிரமான பிரதாபத்தை உடையவனும் தன் கரங்களால் எல்லா உலகுக்கும் உபகாரம் செய்பவனும்....' என்று புகழ்ந்து கூறுகின்றது.

சோழப் பெருமன்னர்களுள் தலைசிறந்த கொடை வள்ளலாகத் திகழ்ந்த நம் இராசேந்திரன் திரிபுவனமாதேவி சதுர்வேதி மங்கலத்தைச் சுற்றியுள்ள கிராமங்கள் ஐம்பத்தொன்றனைத் தக்கார்க்குத் தானமாக அளித்துள்ளான்.

தஞ்சை மாவட்டத்தின்கண்ணுள்ள கரந்தைச் செப்பேட்டின்மூலம் கொடை வள்ளல் இராசேந்திரன், ஆயிரத்து எழுபத்து மூன்று (1073) பேருக்குக் கொடையளித்தான் என்ற

[1] திருக்குறள்-புகழ்-1

செய்தியினை அறிகிறோம். இதனை எண்ணுந்தொறும் நம் நெஞ்சமெல்லாம் இன்பக் கடலில் குதிக்கின்றது; நம் வேந்தனே சிறந்த கொடை வள்ளல் என்ற எண்ணம் நம் நெஞ்சத்தில் உதிக்கின்றது'

எனவேதான், இவ் வேந்தனின் கருணை யுள்ளத்தினையும், கொடைத் திறனையும் கண்ட புலவர் பெருமக்கள், 'அரசன் (இராசேந்திரன்) கொடை வழங்கியதைச் செப்பேட்டில் எழுதி யெழுதி நாட்டில் செம்புத் தட்டுப்பாடு ஏற்பட்டுவிட்டது' என மிகப் பொருத்தமாகக் கூறி யுள்ளனர். இதனைச் சிலர் உயர்வு நவிற்சியேயென எண்ணுகின்ற போதிலும் இதில் உண்மை யில் லாம லில்லை.

பொதுவாக இராசேந்திரன் திருக்கோயில்கட்கும், பார்ப் பனர்கட்கும் ஒல்லும் வகையெல்லாம் அறக்கொடை யளித்து வந்தான் என்பதனைக் கல்வெட்டுகள் இனிது விளக்குகின் றன.

ஆயிரத் தெண்பது சதுர்வேதி பட்டசிரேஷ்டர்களுக்கு இரண் டாயிரத்து ஐந்நூற்றுத் தொண்ணூற்றைந்தே முக்காலே மூன்று மா மாகாணிக்கீழ் முக்காலே யொரு மாவரைக் கீழரையே இரண் டுமா நிலப்பரப்புக் கொண்ட ஐம்பத் தோரூர்களை நிலத் தானம் செய்த இராசேந்திரன் சிறந்த கொடை வள்ள லென்பதில் ஐய மில்லை. இந்நிலங்களின் ஆண்டு வருவாய் ஐம்பத்தோராயி ரத்து ஐம்பதின் கலம் நெல்லும், முப்பத்திரண்டரை மீன் பாட் டங் காசும், அறுபத்தைந்து அக்கமும் பிரமதேய இறையிலியாக விடப்பட்டமை குறிப்பிடத் தக்கது.

சதுர்வேதி பட்டர்களைப் போன்று குளப்பாட்டு உவச்சன் அமலன் தேவன், உகச்சன் கரிகாலன் மண்டகவன் போன்ற உகச்சர்களும், திரிபுவன மாதேவி நல்லூர் பிரமன் திருவடிகள், சருப்பேதி மங்கலத்து மண்டகனுபகன் போன்ற நாவிதர்களும் மற்றும் தொழிலாளர் பலரும் தானம் பெற்றுள்ளனர்.

மக்களுக்கு வாரிவாரி வழங்கிய இவன் திருக்கோயில்கட்கும் நிறைய நிலத்தானஞ் செய்துள்ளான் என்பதனைக் கீழ்க்கண்ட கரந்தைச் செப்பேட்டுப் பகுதியா லறியலாம்.

'இவ்வூர் ஸ்ரீ கைலாசமான ஸ்ரீ ராசராச ஈஸ்வர முடை யார்க்கு நிலம் எண்வேலி II இவ்வூர் நடுவில் ஸ்ரீகோயிலான் முடி கொண்ட சோழ விண்ணகர தேவர்க்கு நிலம் எண் வேலி II

இவ்வூர்த் திருமேற்றளியான திரிபுவன மாதேவி விண்ணகர தேவர்க்கு நிலன் நால்வேலி ll இவ்வூர் ஜநநாம விண்ணகர தேவர்க்கு நிலன் எண்வேலி ll இவ்வூர் கேரளாந்தக விண்ணகர் தேவர்க்கு நிலன் மூவேலி ll இவ்வூர் சுப்பிரமண்ய தேவர்க்கு நிலம் வேலி ll இவ்வூர்ச் சபையார்க்கு நிலம் வேலி ll இவ்வூர் மஹாசாஸ்தாவுக்கு நிலம் வேலி ll இவ்வூர் பிடாரியார்க்கு நிலம் வேலி ll இவ்வூர் திரிபுவன மாதேவிப் பேரேரிக்கரை கணபதியார்க்கு நிலம் மூவேலி ll இவ்வூர் பிடாகை குளப்பாட்டு மகா தேவர்க்கு நிலம் ஒரு வேலி ll கூத்தனூர் மாதேவர்க்கு நிலம் அரை ll உறத்தூர் மாதேவர்க்கு நிலம் வேலி ll ’

‘சோற்றுத்துறை மாதேவர்க்கு நிலம் ‘று’ மா ll முஞ்ஞாவல் மாதேவர்க்கு நிலம் அரைll மயின் மாலய நல்லூர் மாதேவர்க்கு நிலம் அரை ll மேட்டு மேற்குடி மாதேவர்க்கு நிலம் கால் ll சிக்கல் மாதேவர்க்கு நிலம் அரை ll நியாயநடை நல்லூர் மாதேவர்க்கு நிலம் கால் ll பரகேசரி நல்லூர் மாதேவர்க்கு நிலம் அரை ll கூத்தனூர் விஷ்ணுக்களுக்கு நிலம் அரை ll முஞ்ஞாயில் விஷ்ணுக்களுக்கு நிலம் அரை ll புலியக்குடி விஷ்ணுக்களுக்கு நிலம் அரை ll சிறையூர் பிடாரியார்க்கு நிலம் ஒருமா ll சோற்றுத்துறைப் பிடாரியார்க்கு நிலம்ஒருமா ll மயின் மாலய நல்லூர் பிடாரியார்க்கு நிலம் ஒருமா ll பெண்ணுகத்துப் பிடாரியார்க்கு நிலம் ஒருமா ll கோவிந்த நல்லூர்ப் பிடாரிக்கு ஒருமா ll மேட்டு மேற்குடி’ பிடாரிக்கு நிலம் நாலுமா ll எனப் பட்டியல் நீண்டு செல்கின்றது.

இவன் வேத, சாத்திர, ஆகம புராண வளர்ச்சிக்கும், பாரதம் வாசிப்பானுக்கும் நூற்றுக் கணக்கான வேலி நிலங்களை இறையிலியாக அளித்துள்ளான் என்ற செய்தியினையும் கரந்தைச் செப்பேட்டா லறிய லாகும்.

ஈழநாட்டின்கண் மாந்தோட்டம், மாத்தோட்டம் என்னு மிடங்களில் இவன் சிவன் கோயில்களைக் கட்டுவித்து, அதன் நாள் வழிபாட்டிற்கு நிவந்தங்களும் விட்டுள்ளான்.

கூழம்பந்தல் கங்கை கொண்ட சோழீச்சுரர் ஆலயத்திற்கு இரண்டாயிரத்து இருநூற்றைம்பது கலம் நெல்லும், அறு பத்தைந்து கழஞ்சு பொன்னும் வரியிலி யிட்டுக் கொடுத்துள் ளான்.

திருவொற்றியூர்க் கோவிலின் உட்கோவிலைக் கட்டிமுடித்து நிவந்தங்கள் விட்டுள்ளான்.

தென்னாக்காடு மாவட்டம், சிதம்பரம் வட்டத்தின்கண்ணுள்ள திருச்சின்னபுரம் கல்வெட்டின் வாயிலாக, இவன் அக்கோவிலில் மாலை முதல் நடு இரவு முடிய விளக்கெரியப் பணம் அளித்துள்ளான் என்ற செய்தியினை அறிய முடிகின்றது.

கும்பகோணத்திற்குக் கிழக்கே நான்கு கல் தொலைவிலுள்ள திருவியலூர்ச் சோழ மார்த்தாண்ட சதுர்வேதி மங்கலம் என்ற வேம்பற்றூர்க் கோயிலுக்கு நம் இராசேந்திரன் நிவந்தங்கள் அளித்துள்ளான். இவனது மூன்று மாட்சி யாண்டில் இக்கோயிலில் திருச்சுற்றுலயமும், கோபுரமும் இவனால் கட்டப்பட்டன என்பதனை இவனது கல்வெட்டு உணர்த்துகின்றது.

இவன் மைசூர் மாநிலத்திலுள்ள கோலார் என்னுமிடத்தில் துர்க்கைக்குக் கோயில் எடுப்பித்து, அதன் நாள் வழிபாட்டிற்கான நிவந்தங்களும் அளித்துள்ளான்.

இவன், திருச்சி மாவட்டத்தின்கண் கொள்ளிடத்தின் வடகரையில் அமைந்துள்ள திருமழபாடி வைத்தியநாத சுவாமி கோயிலினைப் புதுப்பிக்கும் பணியில் ஈடுபட்டான். இத்திருப்பணி, கி.பி. 1026 ஆம் ஆண்டில் நிறைவுபெற்றது.

கங்கைகொண்ட சோழபுரத்தின்கண் கங்கைகொண்ட சோளேச்சுரர் என்னும் சிவாலயத்தை மிகுந்த பொருட்செலவில் கட்டி முடித்தான் என்பதனை நாம் முன்பே கண்டோம்.

திருச்சி மாவட்டம் காமரச வல்லிக் கோவிலுக்கு (கார்கோடீஸ்வரம்) இவன் நிலத்தானஞ் செய்துள்ளதாக இவனது எட்டா மாட்சி யாண்டில் (கி.பி.1020) வெளியிடப்பெற்ற காமரச வல்லிக் கோயில் கல்வெட்டுக் குறிக்கின்றது.

செங்கற்பட்டு மாவட்டம், திருவாலங்காட்டிலுள்ள சிவன் கோவிலுக்குப் பழையனூர் என்னும் சிற்றூரை நம் வேந்தன் தேவதானமாக அளித்ததாகத் திருவாலங்காட்டுச் செப்பேடு குறிக்கின்றது. இக் கோயிலில் ஊழியஞ் செய்கின்ற குடும்பங்களும் தேவ தான நிலத்தில் வீடு கட்டிக்கொள்ளவும், நிலத்தைப் பயிரிட்டுப் பயனடையவும் அனுமதிக்கப்பட்டனர்.

மேற் கூறப்பட்டவற்றால் நம் இராசேந்திரன் ஆண்டவன் பால் கொண்ட அளவற்ற அன்பின் காரணமாக எல்லை யற்ற பொருளினைத் திருக்கோயில்களுக்காகத் தானஞ்செய்துள்ளான்.

என்பதனை யறியலாம். நம் இராசேந்திரன் பார்ப்பனர்களுக்கு வேத விருத்தி, பட்ட விருத்தி, அத்தியாயன விருத்தி போன்ற வற்றிற்கு எண்ணிறந்த பொருளினைத் தானஞ் செய்துள்ளான். பார்ப்பனர்களை உண்பிக்கும் அக்கிரசாலைப் புரங்களை நிறுவு வதற்கும் நிறையத் தானங்கள் செய்துள்ளான் நம் வேந்தன்.

கல்வி வளர்ச்சியின் பொருட்டு நம் வேந்தன் எண்ணிறந்த பொருள் மதிப்புள்ள நிலங்களைத் தானஞ் செய்துள்ளான். தென்னார்க்காடு மாவட்டம் எண்ணாயிரத்தில் அமைக்கப்பட்டி ருந்த மறைநூல் விடுதிக் கல்லூரிக்கு மட்டும் இவன் முந்நூறு ஏக்கர் நிலம் மானியமாக அளித்துள்ளான். வேப்பத்தூர், திரு முக்கூடல், திரிபுவனி போன்ற கல்லூரிகளுக்கு இவ் வேந்தன் நிறைய நிலத்தானங்கள் செய்துள்ளான். இதனால், இவன்கல்வி வளர்ச்சிக்கு அளவிறந்த கொடை யளித்துள்ளான் என்பதும் புலனாகும். இவன் தனக்குச் சைவாச்சாரியராக விளங்கிய சர்வ சிவ பண்டிதர்க்கு ஆச்சாரிய போகமாக ஆண்டுதோறும் இரண் டாயிரங் கலம் நெல் அளிக்க ஏற்பாடு செய்துள்ளதாலும், தன் மற்ற ஆசிரியர்கட்கும் தானஞ் செய்துள்ளதாலும் இவனது கொடைத் திறனை நாம் அறியலாம். இவனது கல்வித் தொண் டினைச் செட்டி நாட்டு அரசர், பச்சையப்பர், அழகப்பச் செட்டி யார் போன்றாருடன் ஒப்பிடலாம்.

எனவே, நம் இராசேந்திரன் கொடையாளனாக விளங்கிய தும், அதனால் அவன் பெரும்புகழ் பெற்றதும் குறிப்பிடத் தக்க தாகும்.

*அரசியல் திறன்*

சோழப் பெருவேந்தனான நம் இராசேந்திரன் போற்றத் தகுந்த அரசியல் திறன் பெற்றவனாவன் என்பதனை வரலாற்று மாணவர்கள் என்றென்றும் மறத்த லியலாது. வாழையடி வாழையாக அரசியல் அறிவு நிரம்பப் பெற்ற சோழப் பெருங்குடி யில் தோன்றிய இராசேந்திரன் சிறந்த அரசியல் அறிஞனாகத் திகழ்ந்தான் என்பதில் வியப்பதற் கொன்று மில்லை. இருப்பினும் இவன் வியப்பிற்குரிய பல அருஞ்செயல்களை, அரசியல் துறை யில் நடைமுறைப் படுத்திய அரசியல் அறிஞனாவான் என்பதனை ஈண்டு நாம் கருத்தில் கொள்ள வேண்டும்.

'தந்தை யறிவு மகனறிவு' என்பது போல் அரசியல் அறிஞ ராக விளங்கிய முதலாம் இராச ராசனின் மகனான நம் இராசேந்

திரனும் அரசியல் துறையில் உன்னத நிலையினை எய்தினான். தன் தந்தையின் ஆட்சிக் காலத்திலேயே இவன் சோழப் பெருநாடு முழுவதையும் சுற்றிப் பார்த்து ஆட்சி முறையில் பண்பட்ட பயிற்சி பெற்றான். இவன் கி.பி. 1012இல் இளவரசனாக நியமிக்கப்பட்டுத் தந்தையுடன் இணைந்த ஆட்சியினை மேற்கொண்டான் என்பதனை நாம் முன்பே கண்டோம்.

தன் தந்தை, தன்னை இளவரசனாகவும், மாதண்ட நாயகனாகவும் நியமித்ததைப் போன்று, தானும் தன் மூத்த மகனாகிய முதலாம் இராசாதி ராசனைக் கி.பி. 1018 ஆம் ஆண்டு இளவரசனாகவும் மாதண்ட நாயகனாகவும் நியமித்தான். இம்முறை, இராசராசன் காலத்தே பின்பற்றப்பட்ட போதிலும் நம் இராசேந்திரன் செய்த செயலே போற்றற்குரிய தாகும். எனெனில், நம் இராசேந்திரன் தன் தந்தையின் இறுதிக் காலத்தில் இளவரசனாக்கப் பட்டான். (கி.பி. 1012) ஆனால், நம் இராசேந்திரன் தனது ஏழாம் ஆட்சி யாண்டிலேயே (கி.பி.1018) தன் மகனுக்கு இளவரசு பட்டம் கட்டினான். தான் சிறந்த அரசியல் அறிஞனாதலின் தன் மகனுக்குத் தொடக்கக் காலத்தி லிருந்தே அரசியல் கருமங்களில் பயிற்சி யளித்தான் எனக் கொள்ளுதல் பொருத்தமானதே. ஏறத்தாழ இருபத்தேழு ஆண்டு காலம் தந்தையும் மகனும் இணைந்து ஆட்சி நடத்தியதை வேறெங்கும் காண முடியாது.

தன் மூத்த மகனை இளவரசனாக நியமித்தது போன்றே, இராசேந்திரன் தன் இரண்டாம் மகனான இராசேந்திர சோழ தேவனையும், மூன்றாம் மகனான வீர ராசேந்திரனையும் சோழப் பெருநாட்டினைச் சுற்றி வருவதிலும் அமைதியை நிலைநாட்டுவதிலும் பயிற்சி யளித்தான். பின்பு பாண்டி நாட்டை வென்று தன் மகனிடம் பாண்டிய நாட்டின் ஆட்சிப் பொறுப்பினை ஒப்படைத்தான். இது நம் தமிழக வரலாற்றில் இராசேந்திரன் செய்த புதுமை யாகும். மேலும், நாட்டுப்பற்று மிக்க பாண்டிய நாட்டு மக்களைத் திருப்திப் படுத்தவே சோழ-பாண்டியன் எனும் பெயர் சூட்டியதோடு, பாண்டி நாட்டின் ஒழுகலாற்றின்படி சடைய வருமன் எனும் பட்டத்தினையும் இராசேந்திரன் தன் மகனுக்குச் சூட்டினான் என்பதும் இவ்வேந்தனது தேர்ந்த, தெளிந்த, மேம்பட்ட அரசியல் திறனை வெளிப்படுத்துகின்றது. இராசேந்திரன் பாண்டி நாட்டில் அரசப் பிரதிநிதியை நியமித்தமையின், இவன் தன் தந்தையினும் சிறந்த அரசியல் அறிஞன் என்பது புலனாகும்.

பாண்டிய நாடு நன்முறையில் தன் மகனால் ஆளப்படுவது கண்ட இராசேந்திரன் சேர நாட்டின் ஆட்சிப் பொறுப்பினையும் அவனிடம் ஒப்படைத்தது போற்றத் தகுந்த ஒன்றாகும். தன் மற்ற மக்களையும் சில மண்டலங்களுக்குத் தலைவர்களாய் அமர்த்தி ஆட்சி புரியச் செய்தான்.

இவ்விதம் இவன் தனது ஆட்சிப் பொறுப்பினைத் தனது மக்களிடம் ஒப்படைத்த காரணத்தால்தான் இவன் புறநாட்டுப் படையெழுச்சிகளில் முழுமையாக ஈடுபடவும், முதுமைக் காலத்தில் மனநிறைவுடனும், அமைதியுடனும் வாழவும், சிவ பூசையிலும், சமயப் பணிகளிலும் நாட்டங் கொள்ளவும் முடிந்தது. இக்கடமைகளைச் செய்து முடித்து வெற்றி கண்ட நம் வேந்தனது அரசியல் அறிவை எங்ஙனம் போற்றுவது?

தன் மகளாகிய அம்மங்கை தேவியைச் சாளுக்கிய மன்னனான இராச ராச நரேந்திரனுக்கு மணம் புரிவித்துச் சோழ-சாளுக்கிய உறவினை வலுப்படுத்தியமை நம் இராசேந்திரனது அரசியல் திறத்தை எடுத்தியம்புகின்றது. மேலைச் சாளுக்கியரும், கீழைச் சாளுக்கியரும் இணைந்து விட்டால் சாளுக்கியர்களின் கை ஓங்கி விடுமென்றும், சோழர்களின் நிலைமை தாழ்ந்து விடுமென்றும் கருதிய நம் வேந்தன் கீழைச் சாளுக்கிய-சோழ உறவினைத் துண்டித்து விடாது விரிவுபடுத்தினான்.

தக்க தருணத்தில் கீழைச் சாளுக்கியர்களுக்குப் படையுதவியளித்து, மேலைச் சாளுக்கியர்களை வென்று, இராச ராச நரேந்திரனை வேங்கி யரியணையில் அமரச் செய்தது இராசேந்திரனின் அரசியல் திறத்தினைப் பாரறியப் பறை சாற்றுகின்றது.

ஈழநாடு முழுமையும் வென்று மும்முடிச் சோழ மண்டலத்துடன் இணைத்துச் சோழர் மேலாண்மையை ஆங்கு நிறுவியதும், நம் வேந்தனது அரசியல் திறத்தினை நன்கு அறிவிக்கின்றது.

காம்போசம், சீனம், கிழக் கிந்தியத் தீவுகள் ஆகியவற்றுடன் நம் வேந்தன் கொண்டிருந்த நட்பும், நல்லுறவும் இவன் சிறந்த அரசிய லறிஞன் என்பதனை உணர்த்துகின்றன. இராசேந்திரன் கி.பி. 1020, கி.பி. 1033 ஆம் ஆண்டுகளில் சீன மன்னனிடம் தூதுக் குழுக்களை அனுப்பி நட்புறவும், வணிக உறவும் கொண்டான்.

சோழப் பெருநாட்டின் தென் கோடியில் அமைந்திருந்த தலைநகராகிய தஞ்சையை, நாட்டின் மத்தியப் பகுதியான

கங்கை கொண்ட சோழ புரத்திற்கு மாற்றியமை இராசேந்திர சோழனின் அரசியல் அறிவினை நன்கு வெளிப்படுத்துகின்றது.

தன் தந்தையின் ஆட்சிக் காலத்தில் அரசியல் துறைகளிலும், படைத் துறைகளிலும் பணி யாற்றிய சிறந்த தகுதி படைத்தோரைத் தனது ஆட்சிக் காலத்திலும் பயன்படுத்திக் கொண்டது போற்றுதற்குரிய தொன்றாகும். எடுத்துக்காட்டாகக் கிருஷ்ணன் இராமனான மும்முடிச் சோழ பிரம மாராயன், ஈராயிரவன் பல்லவராயனான உத்தம சோழப் பல்லவரையன் ஆகியோரைக் கூறலாம்.

நாட்டினை வெல்லுதலும், அவற்றினை ஆட்சிக் குட்படுத்தலும் (Conquest and Consolidation) நாடு முழுமையும் அமைதி நிலவச் செய்தலும், மக்களைப் பாதுகாத்தலும், நாட்டின் எல்லைகளைப் பாதுகாத்தலும், படையைப் பெருக்கி வலுப்படுத்தலும் போன்ற இன்னோரன்ன அருஞ்செயல்களைச் செய்தமை நம் இராசேந்திரன் தலை சிறந்த அரசியல் அறிஞன் என்பதனை மெய்ப்பிக்கின்றது.

சைவ சமயத்தினைப் போற்றியதுடன் அமையாது, மற்ற மதத்தினருக்கும் மத உரிமை வழங்கி, எல்லா மக்களின் நன் மதிப்பையும், ஒத்துழைப்பையும் பெற்று, மாமன்னன் அசோகனைப் போல் சமயத் துறையில் 'எம்மதமும் சம்மதம்' என்ற பரந்த மனப்பான்மையைச் சமயத் துறையில் பின்பற்றிய இராசேந்திரன் சிறந்த அரசியல் திறன் வாய்க்கப் பெற்றவன் என்பதில் எள்ளளவும் ஐய மில்லை.

தான் போற்றத் தகுந்த அரசியல் அறிஞனாகத் திகழ்ந்த காரணத்தால்தான் இவன் தன் தந்தை விட்டுச் சென்ற சோழப் பெருநாட்டினைக் கட்டிக் காத்து, விரிவுபடுத்தி, நல்லாட்சி நடாத்தி மக்களுக்கு நல்வாழ் வளித்துப் பேரும் புகழும் பெற்றான்.

தனது இறப்பிற்குப் பின், தான் விட்டுச் சென்ற சோழப் பெருநாடு நீண்ட நெடுங்காலம் நிலைத்திருந்தமையின், இவன் தன் மக்களையும் அரசியல் துறையில் நன்கு பக்குவப்படுத்திய அரசியல் அறிஞன் என்பது புலனாகும். தன் மக்களுக்குள் பட்டத் தகராறு ஏற்படாதவாறு தடுக்க வேண்டுமென நினைத்த இவன், தன் மூத்த மகனை இளவரசனாக்கினான் என்பதாலும் இவனது அரசியல் திறனை அறியலாம்.

**கால மறிந்து கரும மாற்றல்**

இராசேந்திரன் தனது ஆட்சியின் பிற்பகுதியில் சேர, பாண்டியர் விடுதலை வேட்கையுடன் தன்னுட்சிக் கெதிராகக் கலகம் செய்தபோது, தன் மகனுகிய இராசாதி ராசனை அனுப்பி அக்கலகத்தினை அடக்கினுன்.

'இதனை இதனுல் இவன்முடிக்கும் என்றுய்ந்து
அதனை அவன்கண் விடல்'[1]

என்ற குறள்மொழிக் கிணங்கத் தன்னுட்சியின் பிற்பகுதியில் மேலைச் சாளுக்கிய நாட்டிலும், ஈழ நாட்டிலும் ஏற்பட்ட கலகங்களை அடக்கும் பொருட்டுத் தானே படைத் தலைமை யேற்றுச் செல்லாமல் இளவரசன் இராசாதி ராசனையே அப்பொறுப்பினை ஏற்கச் செய்தான்.

**மக்கள் நல்வாழ்வில் நாட்டம்**

மக்கள் எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே மன்னனது நோக்கமாக இருத்தல் வேண்டும். இராசேந்திர சோழனும் மக்களுடைய நல்வாழ்வில்தான், தன் வாழ்வு அடங்கி யிருப்பதாக எண்ணினுன். தன் குடிமக்கள் நல் வாழ்வினில் நாட்டம் உடையவனுக இருந்ததால்தான் இவ்வேந்தன் நாட்டின் வேளாண்மையினையும், தொழிலையும், வாணிகத்தையும் பெருக்கினுன். 'குடியுயரக் கோல் உயரும்' என்பதனை நன்குணர்ந்த இவன் தன் குடிமக்கள் அனைவரும் வளமும் நலமும் பெறுதற் கேற்ற செயல்களைச் செய்து அவர்களது பேரன்புக்குரியவனுயினுன்.

குன்ருே, மலையோ, இல்லாத சமவெளியில் பதினுறு கல் தொலைவு வலிமை மிக்க கரையினை யமைத்து நீரைத் தேக்கி, நீண்ட நெடுங்கடலோ? என்று பலரும் வியக்கும் வண்ணம் சோழ கங்கத்தை அமைத்து நீர்ப்பாசனத்திற்கு வழிவகுத்தான்; விளைச்சலை மிகுதிப்படுத்தினுன்; இதனுடன் மன நிறைவு கொள்ளாது காவிரிப்பூம்பட்டினத் தருகில் கங்கை கொண்டான் கால்வாய் வெட்டுவித்தான்; சோழபுரத்தில் கன்னி நங்கை ஏரியை வெட்டுவித்தான்; 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என்னும் பொன் மொழிக் கிணங்க மக்களின் பசிப் பிணி போக்கும் மருத்துவனுகத் திகழ்ந்தான்; 'நீரின்றி அமையாது உலகு' என்பது போல் மக்கள் வாழ்வின் அடிப்படைத் தேவையான நீரைத் தேக்கி, உணவு உற்பத்தியைப் பெருக்கினுன்.

[1] திருக்குறள்-517

குடபுலவியனார் என்னும் புலவர் தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு அறிவுரை கூறப் புகுந்த காலை, 'வேந்தே! மறுமை யுலகத்து நுகரும் இன்பத்தைப் பெற விரும்பினாலும், இவ்வுலகின் கண் பல வேந்தர்களை வென்று தானே தலைவனாகப் பேரும் புகழும் பெற்று வாழ விரும்பினாலும், நீர் நிலைகளை உண்டு பண்ணும் முயற்சியில் ஈடுபடுக. நீர் நிலைகளைக் குறைவின்றி அமைத்தவனே நிலைபெற்ற புகழுடையவன்' என்று நீரின் இன்றியமையாமையை வலியுறுத்தினார். நம் இராசேந்திரனும் இதனைச் செய்து மக்களின் நல்வாழ்வில் நாட்டம் கொண்டவனாக நடந்து கொண்டான்.

மக்களுக்கு உணவளித்ததோடமையாது ஆன்மீக வளர்ச்சிக்கும் திருக்கோயில்களை அமைத்து, வேதங்களையும், ஞான நூல்களையும் பொது மக்கள் கேட்டின்புறத் தக்க ஏற்பாடுகளை இவன் செய்தான்.

மக்கள் நலங் கருதி நாட்டில் சட்டத்தையும், அமைதியையும் பாதுகாத்து, அச்சமின்றி மக்கள் வாழ வழி வகுத்தான்; அன்னிய நாட்டுப் படையெழுச்சியினின்றும் தன் நாட்டைக் காக்கப் பெரும்படையினை நிறுவினான்; மக்களைக் காத்தோம்பினான்; நாடெங்கும் கல்விக் கூடங்களையும், கல்லூரிகளையும் நிறுவி அறிவுப் பசியைப் போக்கினான்; அன்னிய நாட்டின் படையெழுச்சியினின்றும் தன் நாட்டைக் காக்கப் பெரும் படையினை நிறுவினான்; மக்களைக் காத்தோம்பினான். தான் நல்லொழுக்க நெறியில் நின்று பிறருக்கு எடுத்துக்காட்டாய் விளங்கியதோடு மக்களையும் நன்னெறிப்படுத்தினான். நாட்டில் எங்குப் பார்த்தாலும் அமைதியும், இன்பமும், செல்வமும் நிலவ அரும்பாடு பட்டான்.

இவற்றினையே நம் இராசேந்திரனது கரந்தைச் செப்பேடும் 'அரசன் பூமியை ஆளும் போது மக்கள் அற வழியில் கருத்துள்ளவர்களாகவும், தம் கடமைகளில் ஊன்றியவர்களாகவும், துன்பங்கள் அற்றவர்களாகவும், நிலைத்த செல்வம், விழா இவை நிறைந்தவர்களாகவும், மிக்க மகிழ்ச்சி உடையவர்களாகவும், உண்மையைப் பற்றுபவர்களாகவும், நல்வாழ்க்கையுடையவராகவும் இருந்தனர். காலத்தில் மழை பொழிந்தது. ஆறுகள் நன்னீரோடு பெருகின. எல்லாப் பக்கங்களிலும் நாடு (பூமி) பல்வேறு பயிர் வகைகளால் அழகு செய்யப் பெற்றிருந்தது' என்று நம் வேந்தனது ஆட்சிக் காலத்தில் மக்களது நல்வாழ்வினைச் சுருங்கக் கூறுகின்றது. 'மனித

சமூகத்தின் நன்மையை நாடி உழைப்பதன் மூலமே உண்மையான, நிலையான புகழை நிறுவ முடியும்' என்று மேனாட்டறிஞன் சார்லசுசம்மரின் கருத்துப்படி இராசேந்திரன் பொது மக்களின் நலன் நாடி யுழைத்து நற்புகழ் பெற்றான்.

***பண்டித சோழன்***

சங்க காலத்தில் நம் நாட்டினை யாண்டு வந்த சேர, சோழ, பாண்டிய வேந்தர்கள் கல்வி கேள்விகளில் மேம்பட்டிருந்தனர்; செஞ்சொற் கவி பாடும் வன்மை பெற்று விளங்கினர்; கற்றோரைப் போற்றினர்; சங்க கால வேந்தர்களைப் போலவே பிற்காலச் சோழ மன்னர்களும் புலமை மிக்கவராக விளங்கினர். அவர்களுள் நம் வேந்தனும் ஒருவனாவன். தாய் மொழியினையும், தாய் நாட்டினையும் தன்னிரு கண்களாகப் போற்றுதல் பெரு மன்னனின் கடமையாகும். நம் இராசேந்திரனும் தாய் மொழியாம் தித்திக்கும் தமிழ்மீது அளவற்ற காதல் கொண்டான்; போற்றினான்; தமிழ்ப் புலவர் பெருமக்களுக்கு நல்லாதரவு நல்கினான். சிறந்த சிவனடியாராகப் போற்றப்பெறுபவரும், கங்கை கொண்ட சோளேச்சரத்தான்மீது திருவிசைப்பாப் பாடியவருமான கருவூர்த் தேவர் என்பவர் அக்காலப் புலவர் பெருமக்களுள் ஒருவ ராவர். நம்பியாண்டார் நம்பியும் இவனால் ஆதரிக்கப்பட்டவரே.

நம் தமிழ் மொழியின்கண் அக்கறையும் ஈடுபாடும் கொண்ட நம் இராசேந்திரன், வடமொழியின்பால் ஆர்வம் கொண்டிருந்தான்; புலமையும் பெற்றிருந்தான். இவனது வடமொழிப் பட்டயங்களையும், கல்வெட்டுகளையும் சிறந்த காவிய நடையில் வரைந்தவரான நாராயண கவி என்பார் நம் வேந்தனால் பெரிதும் ஆதரிக்கப்பட்டார். இவருக்குத் தேவையான அனைத்து வசதிகளையும் நம் வேந்தன் செய்து கொடுத்தான். 'யாப்பருங்கலம், யாப்பருங் கலக் காரிகை' என்பன செய்த அமித சாகரரும் இவற்றுக்கு உரை வகுத்த குண சாகரரும் இக்காலத்தவர் எனக் கூறலாம்' என்று பண்டாரகர் மா. இராசமாணிக்கர் தமது 'சோழர் வரலாறு' எனும் நூலின்கண் குறிப்பிடுகின்றார்.

தமிழிலும் வடமொழியிலும் தேர்ச்சி பெற்றுக் கற்றோரைப் போற்றிப் பாதுகாத்த நம் வேந்தன் சிறந்த அறிஞன் என்பதனை இராசேந்திரனது கரந்தைச் செப்பேடு 'நுட்பமான மதி.........புலவருடைய குழாங்களில் பண்டிதர்களை அளந்து

காட்டும் உரைகல்லாய் இருப்பவனும்' என்று குறிப்பிடுதலால் அறியலாம்.

'அவன் இளம்பருவத்திலேயே எல்லா வேதங்களையும் சாத்திரங்களையும் அறிந்தவனாய்' என்றும் கரந்தைச் செப்பேடு குறிப்பிடுவதனால் நம் வேந்தன் வேதங்களையும் ஞான நூல்களையும் கற்றுத் தேர்ந்து, புலவர் பெருமக்களுடன் இலக்கியங்களை ஆய்ந்தறியும் ஆற்றல் பெற்றவன் என்பதும் புலனாகும். மேற்கூறிய திறமைகளை நம் வேந்தன் பெற்றிருந்த காரணத்தினாலேயே பண்டித சோழன் என்று புகழப்படுகின்றான். மேலும், நம் இராசேந்திரன் அறிஞனான காரணத்தால்தான் எண்ணாயிரம், திரிபுவனை, வேப்பத்தூர், திருமுக் கூடல் ஆகிய வடமொழிக் கல்லூரிகளுக்கு நிறைய நிலதானங்கள் அளித்துள்ளான். தன் ஆசிரியர்களுக்கு ஆச்சாரிய போகம் அளித்துள்ளான். 'மூவுலகங்களுக்குரிய கோளங்களையும் கடந்து சென்று தன் உயர்ந்த குணங்களின் கூட்டங்களை உடையவனும், எல்லாச் சாத்திரங்களையும் கடந்த அறிவுடையவனும்...பிரகாசிக்கிற பெரிய மகிமையைத் துதிப்பதற்கு இடம் கொள்ளாத காவியங்களை உடையவனும்' என்று இராசேந்திரனது கரந்தைச் செப்பேடு இவனைப் புகழ்ந்துரைப்பதனாலும் இவன் சாத்திரங்களையும் கடந்த அறிவுடையவன் என்பதனை அறியலாம்.

'நாடாட்சி, மக்கள் நன்மைக்காக இயங்கவேண்டுமெனின் புலவர்களே நாட்டை ஆள வேண்டும்; அல்லது மன்னர்கள் புலவர்களாதல் வேண்டும்' என்றார் மேனாட்டறிஞர் ஒருவர். நம் இராசேந்திரனைப் பொறுத்த வரையிலும்கூட இக்கூற்று உண்மை யாகிறது. நம் இராசேந்திரனும் சிறந்த புலமை பெற்றவன் என்பதனால் நாட்டினை நன்காண்டான்.

மேற் கூறியவற்றால் கல்வி யறிவும், பட்டறிவும் பெற்ற நம் இராசேந்திரன் புலமையிற் சிறந்து விளங்கியதோடு கற்றோரைப் போற்றிக் கற்றோரிடம் கலந்துரையாடுவதில் பெருமகிழ்வு கொண்டவனாதலின், பண்டித சோழன் என அழைக்கப்பெற்றான் என்பதனை நாமறியலாம்.

### பெற்றோரிடத்துப் பேரன்பு

இவ்வுலகின்கண் பெற்றோர் மக்கள்மீதும், மக்கள் பெற்றோர் மீதும் அன்பு கொண்டிருத்தல் இயற்கையே ஆகும். ஆனால், நம்

இராசேந்திரனே, தன் தந்தையைப் போலவே தன் பெற்றோரிடத்து எல்லை யற்ற அன்பும், பக்தியும் கொண்டிருந்தான். தன்னைப் பத்து மாதம் சுமந்து பெற்றுச் சீராட்டிப் பாராட்டிப் பேரன்பினைச் சொரிந்து வளர்த்த தாயின்மீதும், தன்னைச் சான்றோனாகவும், ஆற்றல் மிக்கவனாகவும் வளர்க்கத் தகுந்த ஏற்பாடுகளைச் செய்த தந்தையின்மீதும் அளவற்ற அன்பு கொண்ட நம் வேந்தன் அவர்கட்குப் படிமம் எடுத்து நாள் வழிபாட்டிற்கு நிவந்தம் அளித்துச் சிறப்பித்தான். இச் செய்கையால் நம் இராசேந்திரன் தன் பெற்றோர் மீது கொண்டிருந்த பாசத்தினையும் பக்தியினையும் இனிது அறியலாம். எனவேதான், வள்ளுவனும் 'அன்பிற்கு முண்டோ அடைக்குந் தாழ்'[1] எனப் பேசினார் போலும்! நம் வேந்தனும்,

> 'மகன் தந்தைக் காற்றும் உதவி இவன்தந்தை
> என்னோற்றான் கொல்எனும் சொல்'[2]

என்ற வளமார்ந்த வள்ளுவர்தம் வண்டமிழ் மொழிக் கிணங்கத் தன் பெற்றோருக்குப் பெருமை தேடித் தந்தான்; பெற்றோருக்குச் சிறந்த புதல்வனாக விளங்கினான் என்பதனை அறியலாம்.

**செய்ந்நன்றி மறவாமை**

செய்ந்நன்றி அறிதலை வலியுறுத்த எண்ணிய வள்ளுவப் பெருந்தகை,

> 'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
> செய்ந்நன்றி கொன்ற மகற்கு.'[3]

என்று கூறினார் நம் இராசேந்திரனே, இக்குறள் வழி நின்றான்; பொன்றாப் புகழினைப் பெற்றான்.

இளமைக் காலத்தில் தன்னை அன்புடன் வளர்த்துக் கல்வி, கேள்வி, ஒழுக்கம், இறை யன்பு ஆகிய நற்பண்புகள் தோன்றி வளர வகை செய்து, நன்னெறிப் படுத்தியவரும், சைவ சமயத்துக்குத் தாய் போன்றவரும், சிவஞான கண்டராதித்தரின் மனைவியுமான செம்பியன் மாதேவிக்குத் தஞ்சை மாவட்டம், நாகப்பட்டினம் வட்டம் செம்பியன் மாதேவி என்னும் ஊரிலுள்ள கோவிலில் படிமம் ஒன்றனை நிறுவி, அதன் நாள் வழிபாட்டிற்குத் தேவையான நிவந்தமும் அளித்துள்ளமையால்[4]

[1] திருக்குறள்-70
[2] திருக்குறள்-71
[3] திருக்குறள்-110
[4] Ins. 481 of 1925; M.E.R. for 1926-Page-105

இவனுடைய செய்ந்நன்றி அறிதல் என்னும் பண்பினை அறியலாம்.

தனக்குச் சைவாச்சாரியராக விளங்கிய சர்வசிவ பண்டிதரின் தொண்டினை என்றென்றும் மறவாத நம் இராசேந்திரன் அவருக்கும் அவர் சீடர்களுக்கும், ஆச்சாரிய போகமாக ஆண்டு தோறும் இரண்டாயிரம் கல நெல் அளித்து[1] மகிழ்ந்ததும் அவன் செய்ந்நன்றி மறவாச் செம்மல் என்பதனை உணர்த்துகின்றது. தனக்குக் கல்வி கற்பித்த மற்ற ஆசிரியர்கட்கும் இது போன்றே இவன் தானங்கள் பல செய்து நன்றி யறிதலைத் தெரிவித்துக் கொண்டான்.

கங்கைப் படையெழுச்சியின் போது, அருள்கூர்ந்து தனக்கு வெற்றி தேடித் தந்த குல தெய்வமாம் தில்லைக் கூத்தரசனுக்குத் தனது இதயங்கனிந்த நன்றியறிதலைத் தெரிவித்தற் பொருட்டே இவன் கங்கை கொண்ட சோளேச்சுரத்தைக் கட்டுவித்தான். இராசேந்திர சோழன் மடிந்து, மண்ணோடு மண்ணாக ஆகி விட்ட போதிலும் அவனது விழுமிய பேரரசு அழிந்து பட்ட போதிலும், அவனது நன்றிக் கடன் இன்றும் நின்று நிலவுகிறது. அவன் நிறுவிய கங்கை கொண்ட சோளேச்சுரம் இன்றும் அவனது நன்றி மறவா நற்பண்பினை உலகிற் கெடுத்தோதிக் கொண்டிருக்கிறது.

மேற் கூறியவற்றால் நம் இராசேந்திரன் செய்ந்நன்றி மறவாத சிறந்த பண்பினைப் பெற்றுத் திகழ்ந்தவனாகப் போற்றப் பெறுகிறான்.

**சமயப் பொது நோக்கு**

தான் வழிபடும் மதத்தினைப் போற்றுவதுடன் புற மதங்களையும் இகழாது அவற்றையும் போற்றுவதே சமயப் பொறை எனப்படும். மாமன்னன் அசோகன் தனது பாறைக் கல்வெட்டு இரண்டாவது அரச ஆணையில், 'ஒருவன் தன் மதத்தைப் புகழ்ந்து, பிறர் மதத்தைப் பழித்தல் கூடாது; பிற மதங்களும் யாதேனும் ஒரு வகையில் பாராட்டத் தக்க பண்புடையனவே. இதை யறிந்து நடந்தால் ஒருவன் தன் மதத்தையும் உயர்த்தியவனாவான்; பிற மத வளர்ச்சிக்கும் துணை புரிந்தவனாவான். இதற்கு மாறாக நடந்து கொள்பவன் தன் மதத்திற்கும் மாசூட்டிப்

[1] S. I. I Vol. II. No. 20

பிற மதங்களையும் பாழ் செய்தவ னுவான்; தன் மதத்தை உயர்த்த வேண்டிப் பிற மதங்களைப் பழித்துப் பேசுபவன் உண்மையில் அவ்வாறு பழிப்பதால், தன் மதத்திற்குத் தானே கேடு விளைவிக்கின்றுன். ஆகவே, பிற மதத்தவர்க்குப் பொன்னும் பொருளும் போல்வன அளிக்கும் புறச் செயல்களால் சமரச நிலை ஏற்பட்டு விடாது; பிற சமயங்களையும் தம் சமயம் போல் மதிக்கும் பண்பாடு வளர்தல் வேண்டும்; அதுவே, உண்மைச் சமரச நிலைக்கு வழித் துணையாம் என்று மாண்புமிகு மன்னன் மதிக்கிருன்' எனக் கூறுகின்றுன். இக்கருத்தினை அசோகர் கைக்கொண்டார்; இராசேந்திர சோழனும் கைக்கொண்டான். மேற்கூறிய நன்மொழியின் இலக்கணமாகத் திகழ்ந்தவருள் இராசேந்திரனும் ஒருவன் ஆவன். சிவபாத சேகரனும் இராசராசனின் தவப் புதல்வனும் நம் இராசேந்திரனும் சிவனடி போற்றும் சிந்தையோனுகத் திகழ்ந்தான். சைவ மதம் தழைத் தோங்க அயராது உழைத்த நம் வேந்தன், கங்கைக் கரையிலிருந்து சைவ சமயாச்சாரியர்களை அழைத்து வந்து, சோணுட்டின்கண் குடியமர்த்திச் சைவ சமயத்திற்கு அளப்பரிய திருத்தொண்டு புரிந்தான். சைவ சமயத்தினைக் கொடு முடியில் ஏற்றி வைத்த நம் இராசேந்திரனும் 'ஒரு மதாச்சாரியார்' எனக் கூறு மளவிற்கு நற்பணி புரிந்தான்.

சைவ சமயத்தினை வாழ வைத்ததோடு நம் வேந்தன் அமைதி பெற்றிருப்பின் இவனது பெரும்புகழ் பாரெங்கும் பரவி இராது; மாருக இவன் 'எம்மதமும் சம்மதம்' என்ற செம்மையான, தரணி போற்றும் தங்கம் நிகர் கருத்தினைக் கண்டோர் உளம் கொள்ளும் கோட்பாட்டினை, நெஞ்சத்தின் அடித்தளத்தின்கண் நிறுத்திப் புறச் சமயத்தாரும் போற்றும் வகையில் வழி பாட்டுரிமை அளித்து அவர்கட்கும், அவர்களது சமயத்திற்கும் ஒல்லும் வகையெல்லாம் நல்லறம் செய்தான்; நிவந்தங்கள் அளித்தான்; நல்லாதரவு நல்கினுன். இவன் தன்னளவில் சிறந்த சிவ பக்தனுக விளங்கிய போதிலும் பல சமயத்தவருக்கும் மன்னன் என்ற முறையில் சமயப் பொது நோக்கம் உடையவனுகத் திகழ்ந்தான். 'திருமந்திர ஓலை நாயகம் கங்கை கொண்ட சோழபுரத்து ராசவித்தியாதரப் பெருந்தெருவில் சோனகன் சாவூர் பரஞ்சோதி' என்று இராசேந்திரனது கல்வெட்டுக் கூறுதலின், இவன் சமயம், மொழி, நாடு எனும் பாகுபாடின்றி அராபியனுக்கும் உயர்பதவி வழங்கியிருந்த செய்தி யறியப்படுதலின் இவனது சமரச நோக்கத்தினை எப்படிப் போற்றுவது?' நம் இராசேந்திரன் சமயப் பொது

நோக்குப் பெற்றுத்] திகழக் காரணம் யாது? என்பதனை நாம் ஆய்ந்து பார்க்குங்கால் இவனை இளமைக் காலத்து வளர்த்து, நல்வழி காட்டிய செம்பியன் மாதேவியும், குந்தவையாரும் இவனிடம் சமயப் பொறையினை ஊட்டினர் என்பது புலப்படும். குந்தவையார் சிவ, வைணவ, சமண, புத்த ஆலயங்கட்கு எவ்வித வேறுபாடுமின்றி வரையாது வழங்கிய அம்மையாராவர். இவர் வைகைத் 'திருமலையில் குந்தவை ஜினாலயம்' என்னும் சமணப் பள்ளியினை நிறுவிய பெருமைக் குரியவராவர். எனவே, நம் இராசேந்திரனும் சமயப் பொறையினை இளமைக் காலத்திலேயே இவரிடம் பெற்றான் எனக் கொள்க.

சமயப் பொறையினை நம் மன்னன் செம்மையான முறையில் மேற்கொண்டான் என்பதனைத் தன் தந்தையின் ஆட்சிக் காலத்து நாகப்பட்டினத்தின்கண்ணுள்ள சூடாமணி விகாரை என்னும் புத்த ஆலயத்திற்குப் பள்ளிச் சந்தமாக அளிக்கப்பட்ட ஆனை மங்கலம் என்னும் ஊரினை இவன் தனது ஆட்சிக் காலத்தில் சாசன மூலமாக வழங்கினான் என்ற செய்தியால் உணரலாம். இவன் ஈழத்தினை வென்ற பின்பு ஈழ நாட்டின் பல பகுதிகளில் சைவ, வைணவ ஆலயங்களை எழுப்பினான் என்பதும் குறிப்பிடத் தக்கதாகும்.

நம் வேந்தனது ஆட்சிக் காலத்தில் 'கல்வியிற் கரையிலாக் காஞ்சி மாநகரின்கண்' எண்ணற்ற புத்த மதத்தினரும் சமண சமயத்தினரும் சம உரிமையுடன் வாழ்ந்தனரென்பதாலும், புத்த விகாரைகளும் சமணப் பள்ளிகளும் பல்கிப் பெருகியிருந்தனவென்பதாலும் சமயப் பொறையினை மன்னன் மேற்கொண்டிருந்தான் என்பது புலனாகும். சோணாட்டின்கண் சைவ சமயத்துடன் வைணவமும் தழைத்தோங்கியதாலும் இவனது மதக் காழ்ப்பின்மையை, சமரச நோக்கத்தினை நன்கறியலாம்.

நம் இராசேந்திரன் சைவ ஆலயங்களைக் கட்டுவித்ததோடமையாது கங்கபாடி நாட்டின்கண் குவலாள புரத்தில் (கோலார்) ஒரு பிடாரிக் கோயிலையும் எடுப்பித்தருளினான்; வைணவக் கோயில்களுக்கும், சமணப் பள்ளிகளுக்கும், புத்த விகாரைகளுக்கும் முறையே திருவிடையாட்டமும், பள்ளிச் சந்தமும் அளித்துள்ளான்; வைணவக் கோயில்களில் பிரபந்தங்கள் ஓத வகை செய்துள்ளான்.[1] இதனால், சைவ நலச் செல்வ

[1] 179 of 1923; 194 of 1923; 333 of 1917

ஞகத் திகழ்ந்த நம் இராசேந்திரன் பிற சமயங்களைப் போற்றும் மேம்பாடுடையவனுயும் விளங்கினுன் என்பது குறிப்பிடத் தக்க தாகும்.

உலக வரலாற்றின்கண் மங்காத மாமணியாய் மாசற்ற பொன்ஞய் ஒளிவிசிக் கொண்டிருப்பது மாமன்னன் அசோ கனின் புகழும், மாமன்னன் அக்பரின் புகழு மாகும். இதன் காரணம் என்ன? அசோகனும் அக்பரும் முறையே தங்கள் புத்த மதத்திற்கும் இஸ்லாம் மதத்திற்கும் பெரும்பணி யாற்றிய போதிலும் பிற மதங்களையும் பேணிப் போற்றினர்; சம வாய்ப் பளித்தனர்; எல்லாப் பிரிவினரின் நன்மதிப்பையும் பெற்றனர். இவர்களின் பரந்த மனப் பான்மையும், சமயப்பொறையும் இவர் கட்குப் பெரும்புகழ் ஈட்டித் தந்தன. இவர்களைப் போன்றே நம் வேந்தனும் மதக் காழ்ப்பின்மையால் எல்லாச் சமயத்தாரின் நன்மதிப்பையும் ஒத்துழைப்பையும் பெற்றுப் பெருமன்னனு கப் பெரும்புகழ் ஈட்டினுன். சுருங்கக் கூறின் இவன் எச்சமயத்த வரும் பாராட்டும் சமயப் பொது நோக்கம் உடையவனுக விளங் கினுன்.

இதுகாறும் கூறியவற்ருல் நம் இராசேந்திரன் சிவஞானச் செல்வனுக இருந்ததோடு சமயப் பொதுநோக்கினையும் கொண்டு சிறப்புற்ருன் என்பது புலனுகும். இராசேந்திரனைப் போல் நாமும் சமயப் பொது நோக்கினைப் பின்பற்றினுல் தான்,

> 'சத்தெல்லாம் ஒன்றென் றுணர்ந்த சன்மார்க்க
> சங்கம் என்ருேங்கு மோ !'

என்ற தமிழகத்தின் தலை சிறந்த தத்துவ ஞானியாம் வள்ளலார் இராமலிங்க அடிகளாரின் கனவு நனவாகும்; சன்மார்க்கம் தழைக்கும்; வீடும் நாடும் நலம் பெறும்.

**கலை யார்வம்**

பண்டைக் கால மன்னர்களுள் பெரும்பாலோர் கலையார்வம் மிக்கவர்களாக இருந்தனர் என்பது வரலாறு கண்ட உண்மை யாகும். இதனுல், நம் இராசேந்திரனும் கலை யார்வம் மிக்கோன் என்பதும் பெறப்படுகின்றது. பொதுவாகச் சோழ மன்னர்கள் அதிலும் சிறப்பாகப் பிற்காலச் சோழ மன்னர்கள் கலை யார்வம் கொண்ட கலைஞர்களாகக் காணப்படுகின்றனர்.

நமது இராசேந்திரனும் கலைப் பித்தனுதலின் கலை வளர்ச்சிக் குத் தக்க ஆதர வளித்துக் கலைப் புரட்சியையே தன்ஞட்டில் ஏற்

படுத்தி விட்டான் எனக் கூறுதல் பொருந்தும். இவனது ஆட்சிக் காலத்தில் கட்டடக் கலையும் சிற்பக் கலையும் உச்ச நிலையில் காணப் பெற்றன. இவற்றுக் கெல்லாம் முழு முதற் காரணம், கலை யார்வம் மிக்க நம் மன்னனின் நல்லாதரவே யாகும்.

கங்கைகொண்ட சோழபுரமும், கங்கை கொண்ட சோளேச் சரமும் நமது வேந்தனின் கலை யார்வத்திற்கோர் தலை சிறந்த எடுத்துக்காட்டுக ளாகும். கங்கை கொண்ட சோழபுரம் பாழ டைந்த நிலையில் காணப் பெற்ற போதிலும், கங்கை கொண்ட சோளேச்சரமோ, தன் நிலை குன்றிய போதிலும் என்றும் செம் மாந்து நின்று நிலவி, இராசேந்திரனின் கலை யார்வத்தினை எடுத்துரைத்துக் கொண்டுள்ளது. இவ்வாலயம் பொலி விழந்து காணப்பட்ட போதிலும், கலைச் சிறப்புக் கெடாமல், உருவத் தில் மாவீரன் இராசேந்திரனின் புகழுக் கேற்ப நீண்டுயர்ந்து நிற்கின்றது.

கங்கை கொண்ட சோளேச்சரம் ஓர் எழில் மிகுந்த சிற்பக் கூடமாகவே இன்றும் காட்சி தருகிறது. கலைமகள், திருமகள், சண்டிகேசுவரர், கணேசர், நடராசர், சுப்பிரமணியர், பிரம் மன், பிக்சாதனு, கசலக்குமி போன்ற சிற்பங்கள் கண்ணைக் கவரும் வண்ணம் அமைக்கப் பட்டுள்ளன. நம் வேந்தன் கலை யார்வம் மிக்கவ னுதலால்தான், எண்ணிறந்த சிற்பங்களைப் போற்றிப் புரந்து, நம் கண்ணுக்கு விருந்தளிக்கும் எண்ணிலாச் சிற்பங்களை அன்று உருவாக்க உறுதுணை புரிந்தான்.

நம் வேந்தனது காலத்தில் ஆடல், பாடல், ஓவியம், நாடகம் போன்ற கலைகளும் வளர்ச்சி பெற்றிருத்தலின் இராசேந் திரன் இவைகளில் பெரிதும் ஈடுபாடு கொண்டு விளங்கினுன் என்பது புலனுகும்.

நம் இராசேந்திரன் முகலாயப் பெருமன்னனுன ஔரங்க சிப்பைப் போல் கலையார்வ மில்லாது இருந்திருப்பின் ‘இங்கு விமானத்திலும், கோயிலின் வெளிப் புறத்திலும் காணும் சிற்பங் களைக் காட்டிலும் உயர்ந்த சிற்பங்கள் தென்னிந்தியாவில் மட்டு மன்றித் தென்னிந்தியக் கலையைப் பின்பற்றிய சாவகக் கலையி லும் இல்லை’ என்று மேனுட்டறிஞுல் புகழப்படும் சிறப்பினைக் கொண்ட சிற்பங்களை நாம் கண்டு கண்டு மகிழ்வு கொண்டு பெருமைப்பட முடியுமா ?

எனவே, இராசேந்திரன் கலை யார்வம் கொண்டு கலைஞர் களைப் போற்றிய காரணத்தால்தான் நம் நாடு கலைச் செல்வத்

தில் மேம்பட்ட நிலையினை எய்தி அந்நிய நாட்டினராலும் பாராட்டப் பெறுகின்றதென்பதனை நாம் நன்குணர வேண்டும். இராசேந்திரனின் கலை யார்வம் போற்றுதற்குரியதாக இருந்தது. எனவே தான், கரந்தைச் செப்பேடும் இவனை 'எல்லாச் சாத்திரங்களையும் கடந்த அறிவுடையவனும், கலைகளில் தேர்ச்சி பெற்றவனும்' எனப் புகழ்கின்றது. மேற் கூறியவற்றால் நம் இராசேந்திரன் கலை யார்வ மிக்கோன் என்பது அறியற் பாலது.

### வடமொழி யார்வம்

தாய் மொழியாம் தமிழ்மீது தணியாத பேரன்பும் பற்றும் கொண்டொழுகிய நம் இராசேந்திரன் வட மொழியின்மீதும் பேரார்வம் கொண்டவன் என்பது, கல்வெட்டுச் செய்திகளால் உணர்த்தப்படுகின்றது. இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் தமிழக மெங்கும் வடமொழி யார்வம் நிறைந்திருந்தது. வட மொழி கற்பதே பெருமையென எண்ணப்பட்டது. பல்லவரது ஆட்சிக் காலத்திலிருந்தே தமிழகத்தில் வடமொழி யார்வம் ஏற் பட்டுவிட்டது. எனவேதான், இராசேந்திரனும் வடமொழியார் வம் கொண்டு வடமொழியினை ஊக்குவிக்கப் பேராதரவு நல்கினான்.

இவன் தன் கல்வெட்டுகளில் வடமொழியினைப் பயன் படுத்தி யுள்ளதாலும், இவனது கரந்தைச் செப்பேட்டின் ஒரு பகுதியும் திருவாலங்காட்டுச் செப்பேடும் வடமொழியில் காணப் படுவதனாலும், கரந்தைச் செப்பேட்டில் காணப்படும் இலச்சினை யில் வடமொழிச் சுலோகம் பொறிக்கப் பட்டுள்ளதாலும் இவன் வடமொழி யார்வம் கொண்டவன் என்பது புலனாகின்றது. இதனை, 'அரசியற் செய்திகளும் பிறவும்' எனும் தலைப்பின் கண் காண்க.

மேலும், இவன் தன்னாட்டில் வடமொழிக் கல்வி வளர்ச்சிக் காகப் பல வடமொழிக் கல்லூரிகளை நிறுவி வேதம், இலக்கணம், வேதாந்தம், மீமாம்சை ஆகியன கற்பிக்கப் பேருதவி புரிந்துள்ளான். தென்னார்க்காடு மாவட்டம் எண்ணாயிரம் (இராச ராச சதுர்வேதி மங்கலம்) என்னும் ஊரில் மறைநூல் விடுதிக் கல்லூரி ஒன்றும் வேப்பத்தூரில் வடமொழிக் கல்லூரி ஒன்றும் பாண்டிச்சேரிக் கருகில் திரிபுவனி என்னும் ஊரில் வடமொழிக் கல்லூரி ஒன்றும் நம் இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் புகழ் பெற்றிருந்தன. இவைகளின் பராமரிப்புச் செலவுக்காகவும், பேராசிரியர்கட்கு ஊதியம் வழங்குவதற்காகவும், மாணாக்கர்

கட்கு இலவசக் கல்வி அளிப்பதற்காகவும் இவன் நிறைந்த அளவில் மானியங்கள் விட்டுள்ளான். ஒவ்வொரு கல்லூரியிலும் ஏறத்தாழ முந்நூற்றைம்பது மாணுக்கர் கல்வி பயின்றனர்.

வடமொழியில் உயர் கல்வி கற்க இத்துணை அரிய வாய்ப்புகளை ஏற்படுத்தித் தந்த இராசேந்திரன் எண்ணிறந்த வடமொழிப் புலவர்களையும் ஆதரித்துள்ளான். அவர்களுள் நாராயண கவி என்போன் குறிப்பிடத் தக்கவ ஞவான். இவனே, திரிபுவன மாதேவிக்கும், இராசேந்திரனுக்கும் பேராசிரியராகத் திகழ்ந்தான் என்பதனைக் கரந்தைச் செப்பேட்டா லறிய லாகும்.

மேற்கூறியவற்ருன் இராசேந்திரன் வடமொழி யார்வம் கொண்டு வடமொழி வளர்ச்சிக்கு அளப்பரிய தொண்டு செய்துள்ளான் என்பதும் வடமொழிக் கல்லூரிகளை நிறுவி, வடமொழிப் புலவர்களை ஆதரித்து வந்தான் என்பதும் உணரப்படுகின்றன. எனவே, இவனைத் 'தென்னுட்டுப் போச மன்னன்' எனல் பொருந்தும்.

**புதியன புனைதல்**

சோழர் வரலாற்றில் மட்டு மன்றித் தமிழக வரலாற்றிலும் போற்றுதற்குரிய புதுமையான பல திட்டங்களையும் செயல்களையும் நிகழ்த்திக் காட்டித் தன் பின்னேருக்கு முன்னேடியாகவும், வழிகாட்டியாகவும் திகழ்ந்தவன் இராசேந்திர சோழனுவான். பழமையைப் பொன்னே போல் போற்றும் பெற்றியும், தன் சோழர் குல முன்னேர்களின் அடியொற்றிச் செல்லும் திறனும் கொண்ட இராசேந்திரன் புதுமை புனையும் ஆற்றலும் கொண்டு புதுமையான செயல்கள் பல புரிந்து கலங்கரை விளக்கமாகவும் ஒளி மிகுந்து காணப்படுகிருன். இவனது அரசியல் திறனென்னும் உலைக் களத்திலே உருவாக்கப்பெற்ற புதுமையான அம்சங்களெனும் கருவிகளை ஈண்டு நாம் ஆய்வோம்.

தன்னுட்டில் வென்றடக்கப்பட்ட நாடுகளைத் தனது அரசுடன் இணைத்துக் கொள்வதோடு அதனைச் செம்மையான முறையில் ஆளும் பொருட்டுத் தன் மகனை அரசப் பிரதிநிதியாக அனுப்பி வைத்தல் அரசியல் திறஞ் சார்ந்த மன்னனின் கடனுகும். இராசேந்திரனுக்கு முன்பு ஆட்சி செய்த முன்னேர்கள் இச்சத்தான முறையைப் பின்பற்ற வில்லை. இதனை முதன் முறையாகப் புகுத்திச் சோழ வரலாற்றில் புதுமையைப் புனைந்தவன் இராசேந்திரனே யாவான்.

தனது ஆட்சிக் காலத்தில் தனியாட்சி மேற் கொள்வதில் தணியா வேட்கை கொண்டு புரட்சிக் கொடி யுயர்த்திய பாண்டியரை வென்று, தன் மகனைப் பாண்டிய நாட்டின் அரசப் பிரதிநிதியாக நியமித்துச் சடைய வருமன் சுந்தர சோழ பாண்டியன் எனும் பட்டத்தினையும் சூட்டினான். சோழ இளங்கோவிற்குப் பாண்டியப் பட்டத்தினையும் இணைத்து, அதனுடன் நில்லாது பாண்டிய நாட்டின் ஒழுகலாற்றின்படி சடைய வருமன் என்னும் பட்டத்தினையும் சூட்டியது தமிழக வரலாற்றிலேயே காணப் பெறாத புதுமையானதும், வியப்புக்குரியதுமான செய்தி யாகும். இதில் சிறப்புக்குரியது யாதெனில், இராசேந்திரனின் முன்னோர் பலர் பாண்டிய நாட்டினை வென்றிருந்த போதிலும் இவனைப் போன்று அரசப் பிரதிநிதியை அவர்கள் நியமிக்க வில்லை. ஏன்? அரசியல் அறிஞனெனப் போற்றப்பெறும் சோழப் பெரு மன்னனான இராசராசனும் இதனைச் செய்யத் தவறி விட்டான். எனவேதான், இராசேந்திரனும் பாண்டி நாட்டின்மீது மறுபடியும் படையெடுக்க நேர்ந்தது.

### அம்மன் கோவில்

சோழப் பெருமன்னர்கள் ஆண்டவனுக்கு ஆலயங்கள் பல எழுப்புவதில் தன்னிகரற்று விளங்கினர். குறிப்பாக அதிலும் சிறப்பாக விசயாலய சோழ குலத் தோன்றல்கள் தோற்றுவித்த சிவாலயங்கள் ஏராளம் ஏராளம்!! இராசராசேச்சுரத்தினைக் கட்டிப் புகழ்க் கொடி நாட்டிய இராசராசனின் தனயனான இராசேந்திரனும் திருக்கோயில் கட்டுவதில் புதுமையைக் கூட்டித் தன் திறனைக் காட்டித் தந்தைக்கேற்ற தனயன், தான் என்பதனை உலகிற்கு எடுத்துக் காட்டினான்.

பிரதான கோயிலுக் கருகே (Main temple) அம்மனுக்கும் தனிக் கோயிலமைக்கும் புதிய முறையினை, புதிய பாணியை அமைத்தவன் இராசேந்திர சோழனே ஆவான். இது பிற்காலத்தில் திருக் காமக் கோட்டம் என அழைக்கப் பெற்றது. இதனால், திருக்கோயிலமைப்பு முறையில் இராசேந்திரன் புதுமையைப் புகுத்தினான் என்பது போற்றற்குரிய தாகும்.

### தலை நகர் மாற்றம்

புதியன புனைவதில் ஆர்வம் கொண்ட இராசேந்திரன் தனது தலைநகரினை மாற்றவும் முடிவு செய்தான். விசயாலய சோழன் காலம் முதற்கொண்டு மாமன்னன் இராச ராசனது காலம் முடிய தஞ்சை மாநகரம் சோழர்களின் புகழ் மிக்க

தலைநகராய் விளங்கிற்று. அக்காலை எல்லா வசதிகளும் அமையப் பெற்றது தஞ்சை மாநகர். இருப்பினும் இராசேந்திரன் தனது தலைநகரினைத் தஞ்சையிலிருந்து கங்கை கொண்ட சோழ புரத்திற்கு மாற்றினன்; புதிய நகரினை அமைத்தான்; புதுமை சேர்த்தான்; வரலாற்றின்கண் புகழ் பெற்ருன். இப்புகழ் பூத்த புது நகர், இராசேந்திரனின் புதுமை புனையும் ஆற்றலினைப் பறை சாற்றுகின்றது. தானும் ஒரு புதிய நகரினை அமைத்துத் தந்தையைப் போன்றதொரு சிவாலயம் கட்ட வேண்டுமென்பதே இவனது விருப்பமாக இருந்திருத்தல் வேண்டும்.

### புனித தீர்த்தம்

தமிழகத்திலுள்ள திருக்கோவில்களில் புனித தீர்த்தம் என்ற புண்ணிய தீர்த்தம் காணப்படுகிறது. புண்ணிய தீர்த்தக் கிணறு கோவிலுக்குள் காணப்பெறும். முதலாம் இராசராசன் கட்டிய தஞ்சைப் பெருவுடையார் கோயிலின் புண்ணிய தீர்த்தம், சிவ கங்கைக் குளமாகும். இதன் பெயர்தான் சிவ கங்கைக் குளமே தவிர, இங்குள்ள நீர் கங்கையிலிருந்து கொண்டுவரப் பட்டதன்று. ஆனல், இராசேந்திரனே, கங்கை நதியிலிருந்து கங்கை நீரைக் கொணர்ந்து, அதன் ஒரு பகுதியினைப் புண்ணிய தீர்த்தக் கிணற்றில் ஊற்றினன். மேலும், கங்கை கொண்ட சோழ புரத்திலுள்ள சிங்க தீர்த்தமும் (சிங்க முகக் கிணறு) புதுமையான அமைப்பினைக் கொண்டது.

நாட்டின் நீர்ப்பாசன வசதியை விரிவாக்க, உணவு உற்பத்தியைப் பெருக்க, விரிவான திட்டத்தினைத் தீட்டி, நீல நெடுங்கடலோ? எனக் காண்பார் வியக்கும் வண்ணம் சோழ கங்கம் என்னும் மாபெரும் ஏரியை உருவாக்கியவன் இராசேந்திரன். இங்கு ஏரியை அமைத்தது புதுமையன்று. குன்றும் மலையும் இல்லாத இடத்தில் ஏறத் தாழப் பதினறு கல் தொலைவு நீளமும் மூன்று கல் (Mile) தொலைவு அகலமும் கொண்ட பரந்த ஏரியினை அமைத்து, அதன் கரைகளை உயர்த்தி, நீரைத் தேக்கியதே புதுமையாகும். எனவேதான், திரு. ஆர். நாகசாமி அவர்கள் இதனை 'நம் நாட்டில் காணப்படுகின்ற மனிதனல் சமைக்கப்பெற்ற ஏரிகளுள் இதுவே பெரியது'[1] எனக் குறிப்பிடுகின்ருர். இதில் கங்கை நீரின் ஒரு பகுதியை ஊற்றி இதற்குச் 'சோழ கங்கம்' எனப் பெயரிட்டதும் புதுமை என்க. தமிழகத்

[1] This is the biggest man made lake known to exist in this country–Gangaikondacholapuram-Page-58

தில் மட்டுமின்றி இந்தியா முழுவதிலும் இத்துணைப் பெரிய ஏரி யாங்கணும் காணப்பட்ட தில்லை.

இராசேந்திரன் கால முதல் கல்வெட்டுகள் புதிய அமை தியைப் பெற்றன. இஃது இராசேந்திரன் செய்த புதுமை யாகும். 'திரிபுவன சக்கரவர்த்தி' எனவும் 'கோனேரின்மை கொண் டான்' எனவும் இவனுடைய கல்வெட்டுகளில் பொறிக்கப்பட் டுள்ளமையை ஈண்டு நாம் எடுத்துக் காட்டாகக் கூறலாம். இப் புதுமையினைக் கல்வெட்டறிஞர்கள் நன்கு உணர்வர்.

**இளங்கோப் பட்டம் (இளவரசு பட்டம்)**

தனது ஆட்சிக் காலத்திலேயே தன் மகனை இளங்கோ வாக ஆக்கி இணைந்த ஆட்சியினை (Joint rule) மேற் கொண்டது இராசராசன் செய்த புதுமை யாகும். இதில் புதுமை யாதெனில் இராசராசன் தனது இருபத்தெட்டாம் ஆட்சி யாண்டில் தன் மகனுக்கு இளங்கோப் பட்டம் கட்டினன். இராசேந்திரனே, தனது ஏழாம் ஆட்சி யாண்டிலேயே தன் மகனுக்கு இளங்கோப் பட்டம் கட்டி, ஆட்சித் துறையில் ஈடுபடுத்தி, இருபத்தேழு ஆண்டு காலம் தந்தையும் மகனும் இணைந்த ஆட்சியினைத் தோற்றுவித்தான். வரலாற்றில் இது யாங்கணும் காணப் பெறுத புதுமை யாகும்.

மேற் கூறியவற்றல் இராசேந்திரன் புத்தம் புதிய திட்டங் கள் பலவற்றினைத் தன் ஆட்சிக் காலத்தில் செயல் முறைக்குக் கொண்டுவந்தான் என்பது புலப்படும். இவன் புதுமை புனையும் பித்தனுகையால் இது போன்ற புதுமையினைச் செய்தான் எனக் கொள்ளுதல் வேண்டும்.

இதுகாறும் கூறியவற்றல் இராசேந்திரன் பெருவீரமும், கருதுவார் கருதும் உருவமாய் இருக்கும் இறைவன்மீது அன் பும், பாரி போன்று வாரி வழங்கும் வள்ளன்மையும், அரிய அரசியல் திறமும், மக்கள் நல்வாழ்வில் நாட்டமும், கல்வி கேள்விகளில் முதிர்ச்சியும், பெற்று வளர்த்துச் சான்றோனுக்கிய பெற்றோரிடத்துப் பேரன்பும், செய்ந்நன்றி மறவாத செம்மை யும், சமயப் பொறையும், கலை யார்வமும், வடமொழி யார்வ மும், புதியன புனையும் ஆற்றலும் பெற்றுச் சோழ மன்னர்களுள் தனக்கு ஒப்பாரு மின்றி மிக்காரு மின்றிச் சிறந்து விளங்கினன் என்பது பெறப்படும்.

மேற்கூறிய நற்பண்புகளே யன்றி, மன்னனுக்கேயுரிய செங்கோன்மையும், சான்ருண்மையும், நேர்மையும் குறித்த காலத்தில் குறித்தவற்றைச் செய்தலும், பழி யஞ்சுதலும், கடல் கடந்த காவலர்களுடன் நட்பும், சுற்றம் போற்றலும், அஞ்சாமையும் போன்ற போற்றுதற்குரிய அருங்குணங்களும் அமையப்பெற்றுச் செங்கோல் செலுத்திச் செம்மையுற ஆட்சி செய்தான் நம் இராசேந்திரன் என்பதைத் தெள்ளிதின் அறியலாம்.

இறுதியாக இக்காவலனின் குண நலன்களேப்பற்றி இவனுடைய கரந்தைச் செப்பேடு யாது கூறுகின்றது என்பதனேயும் ஈண்டுக் குறிப்பிடுதல் நலம் பயப்ப தாகும்.

‘அறமாகிய உதய பருவதத்தை, நாளும் உதய பருவதத்தை அடைந்து உலகத்திலுள்ள யாவராலும் வணங்கப்படுவதும்.... தீவிரமான பிரதாபத்தை உடையவனும், தன் கரங்களால் எல்லா உலகுக்கும் உபகாரம் செய்பவனும், சன்மார்க்கத்திலேயே இருப்பவனுமான அப்படிப்பட்ட இவ்வரசன், சூரியன் போல் தன் சேர்க்கையினுலும் மரபினுலும் உலகத்தை ஒளியோடு விளங்கச் செய்தான்’

‘விந்தையாகிய அன்னப் பேட்டுக்கு விளேயாடும் ஏரி போன்றவனும், வாத இலக்குமிக்குப் பரந்த விளேயாட்டிட மானவனும், தைரியம், நுட்பமான மதி, அன்பு, செல்வம், இரக்கம் இவைகட்குப் பிறப்பிட மானவனும் புலவர்களுடைய குழாங்களில் பண்டிதர்களே அளந்து காட்டும் உரை கல்லாய் இருப்பவனும், இம்மைக்கும் மறுமைக்குமான வேத மார்க்கமாகிற குகையின் தத்துவத்தைக் காட்டும் வேத விளக்கமாய் இருப்பவனும் வணங்கிய அரசர்களுடைய கிரீடங்களால் பளபளவென மின்னுகிற பாத பீடத்தை உடையவனுமாக இந்த இராசேந்திரன்’

மூவுலகங்கட்குரிய கோளங்களேயும் கடந்து சென்று தன் உயர்ந்த குணங்களின் கூட்டங்களே உடையவனும், எல்லாச் சாத்திரங்களேயும் கடந்த அறிவுடையவனும், கலேகளில் தேர்ச்சி பெற்றவனும், அரசர்களின் முடி வரிசைகளால் தேய்க்கப்பட்ட பாத பீடத்தை உடையவனும், பிரகாசிக்கும் பெரிய மகிமையைத் துதிப்பதற்கு இடங் கொள்ளாத காவியங்களே யுடையவனும் பகைவர்களே முறியடித்தவனும், செல்வம் நிறைந்தவனுமான இராசேந்திர சோழன்’

'தடை படாத நிறைந்த பராக்கிரமத்தையும் புலனடக்கத்தையும் உடையவனுமான இராசேந்திரன்'

இச்செப்பேட்டில் சில செய்திகள் மிகைபடக் கூறப்பட்டிருப்பினும் அடிப்படையில் உண்மை யில்லாம லில்லை.

இதனல், ஆண்மை, அறிவு, ஆற்றல்களில், சோணுட் டரியணையின்கண் அமர்ந்து அரசாண்ட அரசர்கள் அனைவரினும் நம் இராசேந்திரன் குணக் குன்ருக விளங்கிச் சீரும் சிறப்பும் பெற்று, வரலாற்றில் பேரும், புகழும் கொண்டு சிறந்தோங்கினுன் என்பது குறிப்பிடத் தக்க தாகும். தென்னிந்திய வரலாற்று வானத்தில் முழுமதியென ஒளி வீசிய கலங்க மற்ற நிலவு இராசேந்திரனே யாவன்.

சோணுட்டில் அரியணை யேறித்தமிழகத்தில் வெற்றிக் கொடி நாட்டித் தென்னுட்டில் புகழ்க் கொடி யுயர்த்தி, வடநாட்டிலும் தனது புலிக் கொடியினை ஓங்கிப் பறக்கவிட்டுக் கடல் கடந்த நாடுகளிலும் சோழர்தம் ஏகாதிபத்தியத்தை நிறுவிய இராசேந்திரன் இந்தியாவின் தலை சிறந்த கடற்போர் வீரனுவான்.

இவனது ஆட்சிக் காலத்தில் சோழப் பெருநாடு பரந்து விரிந்து சென்றது. தமிழகத்தில் இவனைப் போன்று பரந்து பட்ட பேரரசினை ஆண்ட வேந்தர் எவரு மில்லை யெனத் துணிந்து கூற லாம். எனவேதான், பேராசிரியர் என். சுப்பிரமணியன் அவர்கள் 'இப்பெரு மன்னனது ஆட்சியின் இறுதிக் காலத்தில் சோழப் பெருநாடு பரப்பிலும் புகழிலும் உச்ச நிலையினை யடைந்தது. இவனுக்கு முன்பும், பின்பும் ஆண்ட எந்தத் தமிழக ஆட்சியையும் இதற் கிணையாகக் கூற வியலாது'[1] என்று மனமாரப் பாராட்டு கின்ருர்.

எனவே, பெருவீரத்துடன் ஆட்சித் திறன், சமயப் பொறை, நாட்டின் நலனில் அக்கறை போன்ற இன்னேரன்ன நற்குணங் களின் மொத்த உருவாய்த் திகழ்ந்த இராசேந்திரன் போற்றத் தகுந்த மன்னனுக விளங்கினுன் என்பதில் வியப் பில்லை.

இத்துணைப் பெருவீரமும், வெற்றியும், கீர்த்தியும் பெற்று விளங்கிய இராசேந்திரன் மாமன்னன் அசோகனைப் போன்று

[1] During the last years of this great king's reign the Chola Empire reached the zenith of its extent and glory and was unrivalled by any Tamil power before or after.'-Prof. N. Subramanian, History of Tamil Nad.

சமய வாழ்வினை மேற் கொண்டிருந்தான் என்பதனைக் கீழ்க் கண்ட கரந்தைச் செப்பேட்டுப் பகுதிகளா லறியலாம்.

'சன்மார்க்கத்தில் இருப்பவன்'

'இம்மைக்கும் மறுமைக்குமான வேத மார்க்கமாகிற குகையின் தத்துவத்தைக் காட்டும் ஞான விளக்காக இருப்பவன்'

'எல்லாச் சாத்திரங்களையும் கடந்த அறிவை உடையவன் இராசேந்திரன்'

'அவன் (இராசேந்திரன்) இளம்பருவத்திலேயே எல்லா வேதங்களையும், சாத்திரங்களையும் கற்றவனாக இருந்தான்'

எனவே, இவன் பல நற்குணங்களின் மொத்த உருவாக விளங்கியதுடன் அன்பு நெறியான பக்தி நெறியைப் பின்பற்றி நடந்தான் என்பது புலனாகும்.

# 11. அறிஞர்கள்

இராசேந்திர சோழன் கல்வி, கேள்விகளிற் சிறந்த மன்னனுவன். இவன் கற்றறிந்த அறிஞர் பெருமக்களைப் போற்றும் பெற்றியினன். இவன் தமிழ் மொழியிலும் வடமொழியிலும் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தான். இவனது புலமையினைக் கண்ட சான்றோர் இவனைப் 'பண்டித சோழ'னென்று சிறப்பித்தனர். கற்றோருடன் கலந்துரை யாடுவதில் இவன் பெருவிருப்பம் கொண்டவனென்றும், 'புலவர்களுடைய குழாங்களில் பண்டிதர்களை அளந்து காட்டும் உரைகல்லாய் இருந்தவனென்றும்' கரந்தைச் செப்பேடு இவனைப் போற்றுகின்றது. ஈண்டு அறிவிற் சிறந்தவனுகிய நம் வேந்தனுல் ஆதரிக்கப்பெற்ற அறிஞர் பெருமக்களைப் பற்றிச் சிறிது ஆய்வோம்.

*சர்வ சிவ பண்டிதர்*

இராசராசன் காலத்தில் பெரிய கோவிலில் இருந்த சர்வசிவ பண்டிதர் என்பார் கல்வியிற் சிறந்த அறிஞராவார். இவர் இராசேந்திரனின் பெருமதிப்பிற் குரியவராக இருந்தார். இவருக்கும் இவருடைய சீடர்களாய் ஆர்ய தேசம், மத்திய தேசம், கௌட தேசம் ஆகிய விடங்களில் இருந்தவர்களுக்கும் ஆச்சார்ய போகமாக ஆண்டு தோறும் நிறைந்த அளவாக ஆடவல்லான் மரக்காலால் இரண்டாயிரங் கலம் நெல் அளப்பதற்கு இராசேந்திரன் ஆணை பிறப்பித்தான்.[1] இதனுல், இராசேந்திரனுக்குச் சைவாச்சாரியராக விளங்கியவர் சர்வ சிவ பண்டிதராவார் என்பது உறுதி பெறுகிறது.

'சர்வ சிவ பண்டிதர்' என்று இவர் பெயர் பெற்றிருத்தலின் இவர் மூன்று வகையான ஆசாரியர்களுள் தலைமையான

[1] S. I. I. Vol-II. No 20

'சர்வ சாதகர்' என்னும் ஆச்சாரியராவர் என்பது புலப்படு கின்றது. ஆச்சாரியருள் 'சர்வ சாதகர்', 'போதகர்', 'ஆச் சார்யர்' என்று மூன்று பிரிவுகள் உண்டென்பதனை அறி ஞர்கள் குறிப்பிடுகின்றனர்.[1] எனவே, இவர் இராச ராசேச் சுரத் தின்கண் வழிபாடு நிகழ்த்தும் ஆச்சாரியர்களுள் முதன்மை யான தலைமையிடத்தைப் பெற்றவர் என்பதும் இவருக்குக் கீழ்ப் பல ஆச்சாரியர் கோவிலில் பணி புரிந்தனர் என்பதும் பெறப்படு கின்றன.

இராசேந்திர சோழன் சைவ மதத்தைச் சார்ந்திருந்தமை யின் குரு ஒருவரிடம் தீட்சை பெற வேண்டுமென்ற சைவ சம யத்தின் தலை சிறந்த கோட்பாட்டிற் கிணங்கத் தனது அரசவை யிலும் குருக்களுக்குச் (இராசகுரு) சிறப்பிடம் அளித்திருந்தான். இவர்களுள் தலையாயவரே சர்வ சிவ பண்டித ராவார். இராச ராசனின் கல்வெட்டுகளிலும், இராசேந்திரனின் கல்வெட்டு களிலும் ஈசான பண்டிதர், சர்வ சிவ பண்டிதர், பவன பிடாரன் ஆகிய குருமார்களின் பெயர்கள் குறிக்கப்பெறுகின்றன.[2] முத லாம் குலோத்துங்கன், மூன்றும் குலோத்துங்கன் போன்ற மன் னர்களும் தன் 'சுவாமி தேவர்' (குரு) அறிவுரைப்படி நடந் தனர் என்பதும் குறிப்பிடத் தக்க தாகும்.

***காஷ்மகிராரி ஆராவமுது புருஷோத்தமனன இராசேந்திர சிம்மப் பேராசிரியர்[3]***

இப்பேராசிரியர் இராசேந்திரனின் பேராசிரியராக இருந்து மன்னனுக்கு நற்கல்வி பயிற்றுவித்தார். இப்பேராசிரியருக்குத் தக்க ஊதிய மளித்துப் பெருமைப்படுத்தினுன் இராசேந்திரன். இவர்தான், இராசேந்திரனின் கரந்தைச் செப்பேட்டுப் பகு தியை இயற்றிய பெருமைக் குரியவ ராவர்.

***காஷ்மகாரி கிருஷ்ணரங்கனுன் திரிபுவன மகாதேவிப் பேராசிரியன்***

இப்பேராசிரியரையும் இராசேந்திரன் நன்கு ஆதரித்து ஆதரவு காட்டினுன். இவரும் கரந்தைச் செப்பேட்டுப் பகுதி களை இயற்றிப் பெருமை பெற்றுர்.

[1] *அடிகளாசிரியர் அவர்கள்-தமிழ்ப்பொழில்-துணர் 35. மலர்-9 1959 டிசம்பர்-1960-ஜனவரி*
[2] S. I. I. Vol. II. No. 90
[3] *கரந்தைச் செப்பேடு-ஏடு-30*

இவ்விரு பேராசிரியர்களும் இராசேந்திரனால் மானிய மளிக்கப்பட்டுச் சிறப்பிக்கப் பெற்றனர். இதனை 'இவ்வூர் சாசனம் வெட்டி பூஜ்ஜையாகப் பெற்ற காஷ்மகாரி கிருஷ்ண ரங்கனான திரிபுவன மகாதேவிப் பேராசிரியனுக்குத் துணி நிலம் வேலி இவ்வூர் சாசனம் வெட்டிப் பூஜ்ஜையாகப் பெற்ற காஷ்மகாரி ஆராவமுது புருஷோத்தமனான ராஜேந்திர சிம்மப் பேராசிரியனுக்குத் துணி நிலம் வேலி' என்ற கரந்தைச் செப்பேட்டின் முப்பதாவது ஏட்டா லறிய லாகும்.

### இலகுளீச பண்டிதர்

இராசேந்திர சோழன் அறிவுத் துறையிலும், ஆன்மீகத் துறையிலும் தேர்ச்சி பெற அரும்பாடு பட்டவர்களுள் இவரும் ஒருவ ராவர். அப்பரடிகளது காலத்தில் அறுவகைச் சமயங்கள் தமிழகத்தின்கண் நிலவியதாக அப்பரடிகள் குறிக்கின்றார். சைவ நெறியின் அறுவகைப் பிரிவுகளுள் காளாமுகச் சைவம் சிறப்பான தாகும். மற்றும் சாக்தர்கள், சன்மார்க்கர் போன்ற சைவ சமயப் பிரிவினரும் அக்காலத்தில் வாழ்ந்து வந்தனர். இராசேந்திர சோழனது ஆட்சிக் காலத்தில் காளாமுகச் சைவம் மக்கள் மத்தியில் சிறப்பிடம் பெற்றிருந்தது. இச் சமயத்தவர் பலர் பண்பட்ட அறிஞராகவும், பண்டிதராகவும் அக்காலை விளங்கி வந்தனர். அவர்களுள் இலகுளீச பண்டிதர் மிகவும் குறிப்பிடத்தக்கவ ராவார். இவர் கோயில் அலுவல்களைக் கவனித்து வந்தார்.[1] இவர் இராசேந்திரனால் பெரிதும் ஆதரிக்கப்பட்டார் என்று தெரிகிறது. அக்காலத்தில் காளாமுகச் சமயத்தினரே சிவ அற நிலையங்களைப் பாதுகாத்து வந்தனர். இராசேந்திரனும் காளாமுகச் சைவக் கோட்பாடுகளை நன்குணர்ந்து போற்றினான் என்பதனை முன்பே கண்டோம்.

### ஈசான சிவ பண்டிதர்

முதலாம் இராசேந்திர சோழனின் குருவாக விளங்கியவர் ஈசான பண்டிதர் என்பவ ராவர். இவர் இராசேந்திர சோழனுக்கு நண்பராய், தத்துவ ஞானியாய், வழி காட்டியாய் விளங்கினார். 'ஈசான பண்டிதர்' இராசேந்திரனின் குருவாகத் திகழ்ந்தார் என்பதனை வடவார்க்காடு மாவட்டத்தில் காஞ்சியிலிருந்து வந்தவாசிக்குச் செல்லும் நெடுஞ்சாலையில் பதின்மூன்று கல் தொலைவிலுள்ள கூழம்பந்தல் என்னும் ஊரின்கண்ணுள்ள கங்கை கொண்ட சோளேச்சுரர் கோயில் கல்வெட்டி

[1] 271 of 1927
[2] கூழம்பந்தல் கோயிற் கல்வெட்டு-திரு. நடன காசிநாதன், எம். ஏ.

ஞல்[2] அறிய முடிகின்றது. இங்குள்ள சிவன் கோயில் நம் இரா சேந்திரனின் கங்கைப் படையெழுச்சியின் வெற்றிச் சின்ன மாகக் கட்டப்பட்டது. இதனைக் கட்டியவர் ஈசான பண்டிதர் என்பதனைக் கல்வெட்டுச் செய்தியால் அறியலாம். இவர் நம் வேந்தனல் பெரிதும் ஆதரிக்கப்பட்டார்.

### நம்பி யாண்டார் நம்பி

இராசராசனின் ஆட்சிக் காலத்தில் தமிழ்த் தொண்டு புரிந்து வந்த நம்பியாண்டார் நம்பி இராசேந்திரன் ஆட்சிக் காலத் திலும் தமிழ்த் தொண்டு புரிந்தார் என்பதனைக் கல்வெட்டுச் சான்ருல் அறியலாம். இராச ராசனைப் போலவே நம் இராசேந் திரனும் நம்பியாண்டார் நம்பியினை ஆதரித்து நல்லாதரவு நல் கினன்.

### கருவூர்த்தேவர்

இவரது பெயரினைக் கொண்டு இவர் கருவூரின்கண் பிறந்த வர் என்பது தெரிகின்றது. இவரைச் சித்தர் என்று சிலர் கருது கின்றனர். இவர் திருத்தலங்கள் தோறும் சென்று இறைவனை வணங்கித் திருப்பதிகம் பாடும் இயல்பினராதலின் இவரைச் சித்தராகக் கருதுதல் அத்துணைப் பொருத்த முடையதாகத் தோன்ற வில்லை.

சென்ற திருத்தலந் தோறும், திருமுன் நின்று திருவிசைப் பாப் பாடிய ஒன்பதின்மருள் இவரும் ஒருவ ராவர். இவர் சிதம்பரம், திருக்களந்தையாதித்தேச்சரம், திருக்கீழ்க்கோட்டூர் மணியம்பலம், திருமுகத்தலை, திரைலோக்கிய சுந்தரம், கங்கை கொண்ட சோளேச்சரம், திருப்பூவணம், திருச்சாட்டியக்குடி, தஞ்சை இராச ராசேச்சுரம், திருவிடை மருதூர் என்ற பத்துத் திருத்தலங்களையும் தரிசித்துப் பாடி யருளியவ ராவர்.

இவர், இராச ராசனது ஆட்சிக் காலத்திலும், இராசேந் திரனது ஆட்சிக் காலத்திலும் வாழ்ந்தவ ராவர். இவர் தஞ்சை இராச ராசேச்சுரத்தின்கண்ணுள்ள சிவலிங்கத்தை எழுந்தருளு விக்கச் செய்தார். நம் வேந்தன் இவர்பால் அன்பு கொண் டொழுகினன். இவர் இராச ராசன், இராசேந்திரன் ஆகிய இரு வருக்கும் குருவாக விளங்கியதாகத் திரு. ஜி. எம். முத்துசாமி குறிப்பிடுகிருர்.

### நம்பி காட நம்பி

நம்பி காட நம்பி திருவாரூர் இறைவன் மீதும், சிதம்பரம் இறைவன்மீதும் இரு பாக்கள் பாடிப் புகழ் பெற்றவ ராவர். இவர்

கி.பி. 1050 ஆம் ஆண்டினதாகக் குறிக்கப்பெற்றுத் திருவை யாற்றில் காணப்படும் கல்வெட்டில் கூறப்பட்டுள்ளவரான ஆத்நேய நம்பி காட நம்பி என்னும் அருச்சகரே என்று அறிஞர் சிலர் கருதுகின்றனர். எனவே, இவரும் நம் வேந்தனின் ஆதரவைப் பெற்றிருந்தார் எனக் கொள்வது தவருகாது.

### சைவ ஆசாரியர்கள்

நம் வேந்தன் கங்கைப் பகுதியிலிருந்து சைவ சமயாச்சாரியர்களையும், சிவ பிராமணர்களையும் அழைத்து வந்து, காஞ்சி மாநகரிலும், சோணுட்டிலும் குடியேற்றி அவர்களுக்கு நல்லாதரவளித்து வந்தான்.[1]

### அமிதசாகரர், குணசாகரர்

யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை என்பன செய்த அமித சாகரரும் இவற்றிற்கு உரை செய்த குணசாகரரும் இராசேந்திரன் காலத்தவர் என்று பண்டாரகர் மா. இராசமாணிக்கர் கருதுகிருர்.[2]

### நாராயண கவி

வடமொழியின்கண் சிறந்த ஆர்வம் கொண்ட இவர் போற்றுதற்குரிய கவிஞராய்த் திகழ்ந்தார். இராசேந்திரனது வடமொழிப் பட்டயங்களையும், கல்வெட்டுகளையும் அழகிய காவிய நடையில் எழுதிப் புகழ் பெற்றவரும் இவரே யாவார். நம் வேந்தனது திருவாலங்காட்டுச் செப்பேடுகளை வரைந்தவரும் இவரே யாவார். இவர் சங்கரரின் மகனுவார்.

நம் இராசேந்திரன் இவ் வடமொழிக் கவிஞருக்கு நல்லாதரவு நல்கித் தேவையான வசதிகளைச் செய்து தந்தான். இவர் இரண்டாம் புலிகேசியின் ஐகோல் வெட்டெழுத்தினை (Aihole Inscription) வரைந்த இரவி கீர்த்தியுடன் ஒப்புமை நோக்கத் தக்கவ ராவர். ஏனெனின், இவர்கள் வரைந்த வெட்டெழுத்துகள் இலக்கிய நயம் கொண்டவையாகப் போற்றப்படுகின்றன.

மேற் கூறியவற்ருல் இராசேந்திரன், மன்னன் என்ற முறையில் கவிஞர்களையும், கலைஞர்களையும், அறிஞர்களையும் நன்கு ஆதரித்து அவர்கள் குறைவற்று வாழ நிறைந்த அளவில்

[1] திரிலோசன சிவாசாரியாரது சித்தாந்த சாராவலியின் உரை
[2] 'சோழர் வாலாறு' - பண்டாரகர் மா. இராசமாணிக்கர், பக்கம்-134, வரிகள்-22-24

உதவி செய்தான் என்பதும் இவ்விதம் இவன் அறிஞர் பெரு மக்களைப் பேணிப்போற்றிய காரணத்தால் நாட்டில் அறிவொளி பிறந்தது என்பதும் பெறப்படுகின்றன. வட நாட்டின்கண்ணுள்ள மாளவ நாட்டினை ஆண்டு வந்த பரமார போச மன்னன் புலவர்களையும் அறிஞர்களையும் போற்றிப் புரந்ததுபோல் நம் வேந்தனும் அறிஞர் பெருமக்களைப் பேணிப் பாதுகாத்ததனுலும், போச மன்னனைப் போல் இராசேந்திரனும் கல்வியிற் சிறந்தவனுதலாலும் இவனைத் 'தென்னுட்டுப் போச மன்னன்' எனக் கூறுதல் பொருந்தும். போச மன்னனைப் போன்று இவனும் வட மொழிக் கல்லூரியை நிறுவினுன். போசன் 'தாரா' என்னும் புதிய தலைநகரத்தினை நிறுவியது போன்று, இவனும் கங்கை கொண்ட சோழ புரமென்னும் புதிய தலைநகரை நிறுவினுன். போச மன்னன் போச புரத்தில் மாபெரும் ஏரியை அமைத்தது போல் இவனும் 'சோழ கங்கம்' என்னும் பேரேரியைக் கட்டினுன். சம காலத்தில் ஆட்சி புரிந்த இவர்கள் இருவரும் பல விதங்களில் ஒப்புமையான குணங்களைப் பெற்றிருந்தனர் என்பது நினைவிற் கொள்ளத் தக்க தாகும்.

இலகுலிச பண்டிதர், சர்வ சிவபண்டிதர், ஈசான சிவ பண்டிதர், சதுரானன பண்டிதர்[1] போன்ற நல்லறிஞர்களைப் போற்றி வளர்த்த இப்பெருவேந்தன் குப்த பெருமன்னனை இரண்டாம் சந்திரகுப்தன், வர்த்தன வம்சத்து ஹர்சன், விசய நகர மன்னன் கிருட்டிண தேவராயன் போன்ற ஈடுமெடுப்பு மில்லாப் பெருவேந்தர்களுக்கு ஒப்புமை கூறத் தக்க சீரும் சிறப்புமுடையவன்.

[1] S. I. I. IV. 553 and 126 of 1912 *சதுரானன பண்டிதரின் வேண்டுகோளுக் கிணங்க இராசேந்திரன் திருவொற்றியூரில் கோயில் எடுப்பித்துள்ளான்.*

# 12. அரசியல் அலுவலர் - சிற்றரசர்

சோழப் பெருநாட்டினை யாண்ட மாமன்னர்களுள் தலையாய வன் நம் இராசேந்திரனே யாவான் எனக் கொள்ளுதல் தவரு காது. ஏனெனில், இவனது ஆட்சிக்காலத்தில், சோழப் பெரு நாடு பல்கிப் பெருகிப் பரந்து விரிந்து கிடந்தது. பொதுமக்கள் எல்லா வளனும், நலனும் பெற்று வாழ்வாங்கு வாழ்ந்தனர். நாட்டில் நலஞ் சார்ந்த ஆட்சிமுறை நிலவியதால், அமைதியும் ஒழுங்கும் நிலைநாட்டப்பட்டன. கைத்தொழிலும், வாணிகமும் பெருவளர்ச்சி பெற்றன. சமயமும் கலையும் உன்னத நிலையினை எய்தின. இவ்விதம் நம் இராசேந்திரனது காலம் பல்வகைத் துறைகளிலும் சிறந்து விளங்கியமைக்குக் காரணம் மன்னனின் தனித் திறமையே யாகு மென நாம் கூற இயலாது. ஏனெனில், அரசியல் துறையிலும், போர்த் துறையிலும் மன்னனுக்குப் பெருந்துணை புரிந்த அரசியல் அலுவலரும், போர்ப் படைத் தலை வர்களும், சிற்றரசர்களும் மக்கள் நலம் கருதித் தன்னலம் கரு தாது உழைத்தனர் என்பதனை ஈண்டு நாம் மறுத்த லியலாது.

சோழப் பெருநாடு அகல அகலப் படை வலியும் பெருகிற்று. இராசராசன், இராசேந்திரன் ஆட்சிக் காலத்தில், சோழ அரசு ஏகாதிபத்தியமாக மாறியதால், தொடர்ந்து போர் நிகழ்ச்சிகள் இடம் பெற்றன. புதிய புதிய ஒப்புயர் வற்ற படைத் தலைவர் களும் நிருவாகிகளும் சந்தர்ப்பத் தேவைகளினாலும், சூழ்நிலை களாலும் பல்கிப் பெருகினர்.

மாவீரன் அலெக்சாந்தரின் தொடர் போர்களின் விளை வாகப் பெரும்புகழீட்டிய படைத் தலைவர் ஏராளம்; மாமன்னன் நெப்போலியனது காலத்தில்பிரெஞ்சு நாடு உருவாக்கிய படைத் தலைவர் ஏராளம்! ஏராளம்!! அதனைப் போன்றே நம் இராசேந் திரனது காலத்தில் தோன்றினோர் பல ராவர். இராசேந்திரனது காலத்தில் பெருந்தொண்டு புரிந்து புகழ் பூத்த அலுவலர்,

சிற்றரசர், படைத் தலைவர் குறித்து ஈண்டு ஒரு சிறிது காண்போம்.

மன்னனது ஆணையின்படி யொழுகி நாட்டு நலன் கருதிப் பல்லாற்ருனுந் தொண்டு புரிந்தோர் பலர் இருப்பினும் அவர்களது வரலாறு பற்றித் தெளிவான குறிப்புகள் நமக்குக் கிடைத்தில. கல்வெட்டுகளிலும் செப்பேடுகளிலும் குறிக்கப் பெற்றுள்ள ஒரு சில அலுவலர்களைப் பற்றி, இங்கு நாம் காணலாம். இவர்களது முழு வரலாற்றினையும் நாம் அறிந்து கொள்ளத் தகுந்த ஆதாரங்கள் இல்லாமையின் அவர்களைப்பற்றிய சில செய்திகளை மட்டும் ஈண்டு நாம் ஆய்வோம்.

**வல்லவரையன் வந்தியத்தேவன்**

வல்லவரையன் வந்தியத் தேவன் முதலாம் இராசராச சோழனின் தமக்கையான, குந்தவைப் பிராட்டியின் கணவன் ஆவன். இதனுல், இவன் இராசேந்திரனின் அத்தையின் கணவன் என்பது புலனுகும். இவன் சோழர்க்குச் சிறந்த படைத் தலைவனுயிருந்து அரும்பணி யாற்றினுன். இவன் நம் இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் தலைமைப் படைத் தலைவனுகப் (மாதண்ட நாயகன்) பெரும்பணி புரிந்தான், பொதுவாக அக்காலத்தில் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களே மாதண்ட நாயகராக நியமிக்கப்படுதல் வழக்கமா யிருந்தது.

இவன் கீழைச் சாளுக்கிய குலத்தைச் சார்ந்தவனுயினும், தன் மனைவியுடன் சோணுட்டிலேயே தங்கிச் சோழர்களின் முன்னேற்றத்தில் அக்கறையும் ஈடுபாடும் கொண்டிருந்தான். இவன் வட ஆர்க்காடு மாவட்டத்தின்கண் உள்ள, பிரமதேசம் என்னும் ஊரைச் சூழ்ந்த பகுதியினைச் சிற்றரசனுக இருந்து ஆண்டு வந்தான்.[1] சோழப் பெருமன்னனின் சாமந்தர்களுள் இவனே முதன்மையானவன். இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் மன்னனுக்கு உறுதுணையாக, ஊன்றுகோலாக விளங்கியவர்களுள் வல்லவரையன் வந்தியத்தேவனும் ஒருவனுவான். இவனது ஆட்சிப் பகுதி சேலம் மாவட்டம் வரை பரவியிருந்ததாகக் கல்வெட்டுச் சான்று பகர்கின்றது. சேலம் மாவட்டத்தின் ஒரு பகுதி அக்காலத்தில் வல்லவரையர் நாடு என்ற பெயராலேயே அழைக்கப்பட்டது. நம் இராசேந்திரன் இவன்பால் பேரன்பு கொண்டவனுக விளங்கினுன்.

[1] Ins. 191 and 243 of 1915

**விக்கிரம சோழ சோழியவரையனாகிய அரையன் இராசராசன்**

நம் இராசேந்திரனின் படைத் தலைவர்களுள் பெருவீரமும், அஞ்சா நெஞ்சமும், வெற்றிச் சிறப்பும் வாய்க்கப்பெற்றவருள் முதன்மையாக வைத்து மதிக்கத் தக்கவன் இவனே யாவன். சோழப் பெரும்படையினை நடத்திச் சென்று மேலைச் சாளுக்கிய ரையும்[1] கீழைச் சாளுக்கியரையும் வென்றடக்கி அவர்களுடைய நாடுகளில் சோழர்தம் புலிக் கொடியை ஓங்கிப் பறக்கவிட்டவன் இவனே யாவன். இவனது வருகையினைக் கேட்டவுடனேயே வேங்கி நாட்டு மன்னனும் போர் வீரர்களும் பரிதியைக் கண்ட பனி போல் ஓடி ஒளிந்தனர் என்பதனால் இவனுடைய போர்த் திறனையும், ஆற்றலினையும் அறியலாம்.[1] இச் செய்தி கல்வெட் டுச் சான்றுகளால் இனிது விளங்குகின்றது.

சோழப் பெருமன்னர்களின் தீராப் பகைஞர்களான, மேலைச் சாளுக்கியர்களை அடக்கி ஒடுக்கும் பொருட்டு, நம் இராசேந்திர னால் அனுப்பப்பட்ட படைத் தலைவன் இவனே யாவன் என்ப தால் இவன்மீது நம் மன்னன் கொண்டிருந்த பெருமதிப்பினை யும், நம்பிக்கையினையும் இனிதறியலாம். இராசேந்திரனது கங்கைப் படை யெழுச்சியின்போது படைத் தலைமை யேற்றுப் படை நடத்திச் சென்றவன் இவனேயாதல் வேண்டுமென்பதனை நாம் முன்பே கண்டோம். பெருவெற்றி வீரனாகத் திகழ்ந்து பெரும்புகழ் ஈட்டிய இவன் தனது பெறற்கரிய வெற்றியின் அடை யாளமாக எதிர்த்தவர் காலன், நால்மடி பீமன், சோழசக்கரன், சாமந்தாபாணன், உபாரி நாராயணன், வீரபூஷணம், வீர வீமன் என்னும் தோரணையான பட்டங்களுடையவனாகப் பெய ரும் புகழும் பெற்று விளங்கினான்.

இராசேந்திரனது பத்தாம் ஆட்சியாண்டினதாகிய அனந்த புரம் மாவட்டம் கொத்த சிவரம் ஊர் ஆஞ்சநேயர் கோயில் தூணில் வரையப் பெற்றுள்ள கன்னட சாசனத்தில்[3] இவ னுடைய வெற்றிகளும் குறிக்கப்பெற்றுள்ளன.

கொத்த சிவரத்துக்கும் பாத சிவரம் என்ற ஊருக்கு மிடையே யுள்ள சிவன் கோவிலில் உள்ள கீழ்க்கண்ட சாசனப் பகுதி இவனது புகழ் பாடுவதைக் காணலாம்.

[1] Ins. 23 of 1917
[2] Ins. 751 of 1917
[3] M.E.R. No. 23 of 1917 (c)

‘கலிங்கரையு மொட்டரையுங் கட்டழித்துக் கைவேற்
றெலிங்கரையுஞ் சேண்விசும்பிற் சேர்த்திக்
கொலிங்கரையும்
போரழித்து வாய்த்தனவே போர்ச்சோ ழியவரையன்
கார்முகத்து வாய்த்த கணை’

‘வேயோடு கானதரில் வீழ்செருநர் தோல்பிடித்துப்
பேயோடு பேயுறங்கும் பெற்றித்தே—போயோடி
நான்மடிவீ மற்குடைந்த நாமப் படைத்தெலுங்கர்
கான்மடிவீ மட்டுலருங் காடு’

இராசேந்திர சோழனின் படைத் தலைவர்களுள் ஆற்றலும் ஆண்மையும் மிக்கவன் இவனே யாவன் என்பதில் சிறிதளவும் ஐய மில்லை.

இவன் சோழ மண்டலத்தின்கண் உள்ள திரைமூர் நாட்டி லுள்ள சாத்த மங்கலத்தில் பிறந்தவ னுவான். இவனது பெயரில் ‘அரையன்’ என்ற சொல்லிருத்தலின் இவன் முத்தரையர் குலத் துதித்தோன் எனச் சிலர் கருதுகின்றனர். இராசேந்திரனது பத்தாம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டில் இவனைப் பற்றிய குறிப்பு கள் காணப்படுகின்றன.

இவன் முதலாம் இராச ராசன் ஆட்சிக் கால முதல், சோழர் படைத் தலைவனுகப் பணி புரிந்து நம் இராசேந்திரனது ஆட்சித் தொடக்கக் காலத்திலும் படைத் தலைவனுகப் பணி புரிந்தான். மேலைச் சாளுக்கிய மன்னன் செயசிங்கனைப் போரில் வென்று, புகழ் பூத்த படைத் தலைவன் இவனே யாவன். வீரத்தின் பிறப் பிடமாய், வெற்றியின் இருப்பிடமாய்த் திகழ்ந்த இவன், நம் இராசேந்திரனின் பெருமதிப்புக்குப் பாத்திர மானவன் என்பது வியப்பிற்குரிய தன்று.

***கிருஷ்ணன் இராமன்***

இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் படைத் தலைவனுகப் போற்றத் தகுந்த முறையில் பணி யாற்றிய இவனும் முதலாம் இராச ராசன் காலத்தவன்ஆவன். இவன் இராசராச சோழனது ஆணைப்படி தஞ்சைப் பெரிய கோயிலின் திருச்சுற்று மாளிகை எடுப்பித்தவன் என்பதனை ‘ஸ்ரீ ராஜ ராஜ தேவர் திருவாய் மொழிந்தருள, இத்திருச்சுற்று மாளிகை எடுப்பித்தவன் சேனுதி பதி கிருட்டிணன் ராமனுன மும்முடிச் சோழ பிரம்ம மாராயன்’ எனத் தஞ்சைக் கோயிலின் தென்புறத்தில் இரண்டிடத்தும்

மேற்புறத்து ஓரிடத்திலும் திருச்சுற்றுலேயிலும் எழுதப் பெற்றுள்ள கல்வெட்டுச் செய்தியா லறியலாம்.

இராச ராசனது ஆட்சிக் காலத்தில் இவன் மும்முடிச் சோழ பிரம மாராயன் எனும் பட்டத்தினைப் பெற்றுன். நம் இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் இராசேந்திர சோழ பிரம மாராயன்[1] என்ற பட்டத்தினைப் பெற்றுன். இதனுல், மன்னன் தனது விருதுப் பெயரினைச் செயற்கரிய செயல் புரியும் அதிகாரிகளுக்கு இடுதல் வழக்க மென்பதனை இனிது அறியலாம். இவன் நம் வேந்தனது ஆட்சிக் கால முழுவதும் படைத்தலைவனுகப் பணி யாற்றி யிருத்தல் வேண்டு மென்பதைக் கி.பி. 1044இல் விடுத்த இராசேந்திரனது கல்வெட்டில் இவனது பெயர் குறிக்கப் பெற்றிருத்தலால் அறிய லாகும். எனவே, கிருட்டிண இராமனுன மும்முடிச் சோழப் பிரம மாராயன் நம் இராசேந்திரனின் போர் நிகழ்ச்சிகளில் பெரும்பங்கு பெற்றுன் என்பது விளங்கும்.[2]

*மாராயன் அருண்மொழி*

இவன் நம் இராசேந்திரன் ஆட்சிக் காலத்தில் அரசியல் தலைவனுகப் பெரும்பணி யாற்றியவனுவன். இவனது அருந் தொண்டினைப் பாராட்டும் வகையில் இராசேந்திரன் இவனுக்கு உத்தம சோழ பிரம மாராயன் எனும் விருதினை வழங்கினுன். எனவே, இவன் மாராயன் அருண் மொழியான் உத்தமசோழ பிரம மாராயன் என அழைக்கப் பெற்றுன்.

இவன், மேலே குறிப்பிடப்பெற்ற கிருட்டிணன் இராமன் எனும் படைத் தலைவனின் அருமந்த மகனுவான். இவன் தன் தந்தையைப் போன்று இராசேந்திரன் ஆட்சிக் காலத்தில் சீரும் சிறப்பும் பெற்று விளங்கியவ னுவன். இவன் பிரம மாராயன் எனப்படுவதால் அந்தணர் குலத்தில் தோன்றியவன் எனக் கருதலாம். இவன் இராசேந்திர சோழனின் கட்டளைக் கிணங்கக் கங்கபாடி நாட்டின்கண் உள்ள குவலாள புரத்தில் (கோலார்) கி.பி. 1033 ஆம் ஆண்டில் பிடாரி கோயில்[3] ஒன்றை எடுப்பித் தான்.

*ஈராயிரவன் பல்லவனுன உத்தம சோழப் பல்லவரையன்*

இவன் முதலாம் இராச ராச சோழனது ஆட்சிக் கால முதற் கொண்டே அரசியற் பணிகளில் பங்கு கொண்டு, நல்ல தேர்ச்சி

[1] E.P Ind Vol. XXII-No. 34
[2] Ins. 217 of 1911
[3] EP. Car. Vol. X KL. No. 109.9

பெற்றவ னுவன். நம் இராசேந்திரனது ஆட்சிக் காலத்திலும் பேரதிகாரிகளுள் ஒருவனுகப் பணி யாற்றிய பெருமைக் குரிய வன் இவனுகும்.

இவன் சோழ நாட்டின்கண் உள்ள பாம்புணிக் கூற்றத்துள் அடங்கிய அரசூரில் பிறந்தவனுவன். ஆனை மங்கலச் செப்பேடு களில் குறிப்பிட்டுள்ள சோழ அரசியல் தலைவர்களுள்[1] இவன் குறிப்பிடத் தக்கவ னுவான். இராச ராசன் காலத்திலேயே இவன் உயர் அதிகாரிகள் வரிசையில் இருந்தவன் என்பது போற்றுதற்குரிய தாகும்.

இராச ராச பிரம்ம மகாராசா என்ற பார்ப்பனப் படைத் தலைவனும் இராசேந்திர சோழனது காலத்தில் படைத் தலைமை யேற்றுப் புகழ் பெற்ருன். கீழைச் சாளுக்கிய நாட்டின் மன்ன னுகப் பதவி யேற்ற விசயாதித்தனை, அரியணையி லிருந்து கீழே யிறக்கி இராச ராச நரேந்திரனைக் கீழைச் சாளுக்கிய மன்ன னுக முடி சூடச் செய்ய உறுதி கொண்ட நம் இராசேந்திரன், இராச ராச பிரம்ம மகாராசாவின் தலைமையின்கீழ்ச் சோழப் படையினைக் கீழைச் சாளுக்கிய நாட்டிற்கு அனுப்பி வைத் தான்.

வேங்கிக் கருகில் களிநந்தி என்னு மிடத்தில் நிகழ்ந்த கடும் போரில் இவன் வியக்கத் தக்க முறையில் போர் புரிந்து, பகை ஞர்களை வெட்டி விழ்த்தினுன். இருப்பினும் இறுதியில் மாற்ரு னின் வேலால் குத்துண்டு வீர மரணம் எய்தினுன். சோணுட்டிற் காக இறுதி வரை போரிட்டுத் தன் உயிரைத் தியாகம் செய்த இம்மாவீரனின் நினைவாக ஒரு கோயில் அமைக்கப்பட்டது.

### உத்தம சோழ கோன்

நம் இராசேந்திரனுக்கு உறு துணையாயிருந்த படைத் தலை வர்களுள் இவனும் ஒருவனுவன். இராச ராச பிரம்ம மகாராசா விற்குத் துணையாக இவனும் உத்தம சோழ மிலாடுடையானும் கீழைச் சாளுக்கிய நாட்டிற்கு நம் மன்னனுல் அனுப்பப்பட்ட னர். இவர்கள் இருவரும் கடும்போர் புரிந்து போர்க் களத்தே வீர மரணம் எய்தினர். தமது உயிரினைத் துச்சமென மதித்துப் போர்க் களத்தே தமது உயிரைத் தியாகம் செய்த இவர்களது நினைவாகவும் கோயில்கள் எழுப்பப்பட்டன.

[1] S. I. I. Vol. II. Nos. 12 and 55

இராச ராச மாராயன், இராசேந்திர சோழப் பல்லவராயன் ஆகிய இரு படைத் தலைவர்களும் நம் இராசேந்திரன் ஆட்சிக் காலத்துப் படை நடத்திச் சென்று, அருஞ்சமர் புரிந்தனர் என்பது மகேந்திர மலையிலுள்ள கோகர்ணேசுவரர் திருக்கோயில் கல்வெட்டால் அறியப்படுகின்றது.

***பாண்டியன் சீவல்லபன்***

முதலாம் இராச ராசனது ஆட்சிக் காலத்தே பாண்டிய நாடு முழுமையும் சோழரது மேலாண்மையினை ஏற்றுக் கொண்டது. இதனைத் தொடர்ந்து நம் இராசேந்திரனது ஆட்சிக் காலத்தும், சுந்தர சோழ பாண்டியன் எனப் பெயர் பெற்ற தன் மகனால் பாண்டிய நாடு ஆளப்பட்டு வந்தது என்பதனை நாம் முன்பே கண்டோம். இவனுடைய தேவி சோழ நாட்டின்கண் உள்ள திருவிசலூர்க் கோயிலுக்குப் பலவகையான விலை யுயர்ந்த அணி கலன்கள் அளித்துள்ளமையாலும், இவன் நம் இராசேந்திரன் ஆளுமைக்கு உட்பட்டவ னாதலாலும், இவன் சோழனுக்குத் திறை செலுத்திக் கொண்டிருந்த சிற்றரசனாவனெனக் கருத இட முண்டு.[1]

***உத்தம சோழ மிலாடுடையான்***

இவன் நம் இராசேந்திரனது ஆட்சிக் குட்பட்டு ஆட்சி செலுத்தி வந்த குறுநில மன்னனாவான். தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்ட மலை நாட்டை இவன் ஆண்டு வந்தான். இவனது அரும்பணியினைப் பாராட்டி நம் வேந்தன் தன் விருதுப் பெயரினை இவனுக் களித்துச் சிறப்பித்தான்.

இவனது இயற்பெயர் பராந்தகன் யாதவ வீமன் என்பதாகும்.[2] கீழைச் சாளுக்கிய நாட்டினுக் கெதிராக அனுப்பப் பட்டு வீர மரணம் எய்திய உத்தமசோழ மிலாடுடையான் எனக் குறிக்கப் பெற்றவன் இவனாதல் வேண்டும். இவனைப் பற்றிய பிற செய்திகள் யாதும் கிடைத்தில.

***கங்கை கொண்ட சோழ மிலாடுடையான்***

இவனும் மேலே கூறப்பட்ட மலையமானாட்டை ஆட்சி புரிந்த குறுநில மன்னனாவான். இவன் உத்தம சோழ மிலாடுடையானுக்குப் பின்னர் மலையமானாட்டை ஆண்டு வந்தான்.

[1] Ins. 46 of 1907
[2] Ins. 20 of 1905; Ins. 587 of 1908

இவன் திருக்காளத்திக் கோயிலில் கார்த்திகை விளக்கீட்டிற்கு நிவந்தமாகப் பொன் வழங்கினன் என்பதனைக் கி.பி. 1024 ஆம் ஆண்டு வெளியிட்ட திருக்காளத்திக் கல்வெட்டால் அறியலாகும்.[1] உத்தம சோழ மிலாடுடையானைப் போலவே இவனும் நம் இராசேந்திரனின் மேலாண்மைக்குக் கீழ்ப்படிந்து அரசாண்டு, இராசேந்திரனுக்குப் பெருந்துணை புரிந்தான்.

### சத்திரிய சிகாமணி கொங்காள்வான்

இவன் நம் இராசேந்திரனது ஆட்சிக் கடங்கிய நிலையில் குடகு நாட்டை ஆண்டு வந்த சிற்றரசனவான். நம் வேந்தன் பகைஞர் நாட்டின்மீது நிகழ்த்திய போர்களில் இவனும் படையுதவி யளித்துக் கடும்போர் புரிந்தான். இவனது ஒப்பற்ற படைத் தலைமையினையும், பெருவீரத்தினையும் கண்ணுற்ற இராசேந்திரன் இவனுக்குச் 'சத்திரிய சிகாமணி கொங்காள்வான்' என்னும் பட்டத்தினை யளித்துப் பாராட்டி நாட்டுரிமையும் வழங்கி மகிழ்ந்தான்.

இவனது இயற்பெயர் மணிஜா என்ப தாகும். இவன் கி.பி. பதினோராம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்திருந்தான். இவன் முதலாம் இராசராசனது ஆட்சிக் காலத்திலும் சோழர்க்குப் பெருந்துணை புரிந்து வந்தான். இராசேந்திரனது வெற்றி மேம்பாட்டிற்கு இச்சிற்றரசனும் உறுதுணையாய் இருந்தான் எனக் கொள்ளுதல் சாலப் பொருந்தும்.

### சங்காள்வார்

மைசூர் மாவட்டத்தின்கண் உள்ள சங்க நாட்டில் ஆண்டு வந்த சங்காள்வார் மரபினரும் நம் இராசேந்திரனது ஆட்சிக்குட்பட்டுத் திறை செலுத்துகின்ற சிற்றரசர்களாக இருந்தனர்.

சோழரது மேலாண்மையை ஏற்றுக்கொண்டு, சிற்றரசர்களாக ஆட்சி புரிந்து வந்த கொங்காள்வார் சில காலம் கழித்தவுடன் தம்மைச் சோழர்தம் கால் வழியினர் எனக் கூறிக் கொண்டமையோ டமையாது, தம்மைக் கரிகாற் சோழன் மரபினர் எனவும், சிறப்பித்துக் கொண்டு தெலுங்குச் சோழர்களைப் போன்று பெருமை கொண்டனர். மேற் கூறியவற்றால் கொங்காள்வார் சோழ மரபின்மீது கொண்டிருந்த பற்றினையும் ஈடுபாட்டினையும் நன்கு அறியலாம்.

[1] Ins. 291 of 1904

மேற் கூறப்பட்ட அரசியல் அதிகாரிகள் படைத் தலைவர் களே யன்றி, நம் இராசேந்திரனின் மைந்தர்களும் ஆட்சிப் பொறுப்பிலும், போர்ச் செயல்களிலும் பெருந்துணை புரிந்தனர் என்பது போற்றுதற்குரிய ஒன்ருகும். இவர்களுள் முதலாம் இரா சாதி ராசன் குறிப்பிடத் தக்கவ ஞவான். இவன் கி.பி. 1018ஆம் ஆண்டில் இளவரசு பட்டம் பெற்றது முதல் அரசியல் துறை யிலும், போர்த் துறையிலும் தன் தந்தைக்குப் பேருதவி புரிந்து வந்தான்.

நம் இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில், தலைமைப் படைத் தலைவனுக இவன் பதவி யேற்றுப் பல போர்க் களங்களில் பகை ஞர்களைப் பந்தாடிச் சோழர்களுக்கு வெற்றி தந்தவனுவன் என் பதனை நாம் மறக்க இயலாது. இவற்றுள் இராசாதி ராசன் புரட் சிக் கொடி உயர்த்திக் கலகம் விளைவித்த பாண்டி வேந்தர்களான மூவரையும் வென்று, தன்னடிமைப் படுத்தியமையும், தனி ஆட்சி பெறும் நோக்கத்துடன் சேர நாட்டின்கண் எழுந்த கல கத்தை அடக்கி ஒடுக்கியமையும், இரண்டாம் ஈழநாட்டுப் போரில் தன் வீரத்தினை நிலைநாட்டிப் புகழ்க் கொடி நாட்டியமை யும், மேலைச் சாளுக்கிய நாட்டின்மீதும் படையெடுத்துச் சென்று அந்நாட்டின் வேந்தரான ஆகவ மல்லன் சோமேசு வரனை வென்று கண்டப்பயன், கங்காதரன் ஆகிய படைத் தலை வர்களைப் போர்க் களத்திலே கொன்றமையும் இவனது பெரு வீரத்தைப் பறை சாற்றுவதோடு தன் தந்தைக்கு எத்துணைப் பேருதவியாக விளங்கி, அரசியலையும் போர் நிகழ்ச்சிகளையும் கவனித்து வந்தான் என்பதனையும் நன்கு விளக்கும். இராசாதி ராசனது மெய்க்கீர்த்திப் பகுதியிலிருந்து, இவன் எவ்விதம் தன்னை உருவாக்கிய தந்தைக்குப் பேருதவி புரிந்தான் என் பதனைத் தெளிவாக அறிய முடிகிறது.

நம் இராசேந்திரன் தன் தந்தையின் காலத்து இளவரசனுக வும், மாதண்ட நாயகனுகவும் இருந்து அரும்பணி யாற்றியதைப் போல முதலாம் இராசாதி ராசனும் நம் இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் இளவரசனுகவும் மாதண்ட நாயகனுகவும் பெரும்பணி புரிந்து தந்தையின் நன்மதிப்பினையும், நம்பிக்கை யினையும் பெற்ருன்.

இவ்விதமாக ஆற்றலும், அறிவுக் கூர்மையும், நம்பிக்கை யும், நாணயமும், கீழ்ப்படிதலும், கடமை உணர்ச்சியும் கொண்ட சிற்றரசர்களின் பெருந்துணை கொண்டும், அரசியல் அலுவலர்களின் அயரா உழைப்பின் துணை கொண்டும், இரா

இராசேந்திர சோழன் செம்மையாகச் செங்கோல் செலுத்தி நாட்டு மக்களின் நல்வாழ்விற்கு வழி கோலினன். மன்னன் மட்டும் தனித்து நின்று ஆட்சி புரிதல் என்பது இயலாத காரியம். அலுவலர்களும் சிற்றரசர்களும் இராசேந்திர சோழனது ஆட்சியின் தூண்களாக விளங்கினர் என்பதனை ஈண்டு நாம் நினைவிற் கொள்ளல் வேண்டும். (அரசியல் அலுவலர் பற்றிய விரிவான செய்திகளை 'அரசியல்' எனும் பகுதியிற் காண்க.)

# 13. கலைத் தொண்டு

பன்னூறு ஆண்டுகட்கு முன்பே, நம் தமிழகத்தில் கலை யார்வம் சிறந்து விளங்கியதனை எண்ணிறந்த சான்றுகளா லறியலாம். கலை, கலைக்காக (Art for Arts sake) என்று கருதும் மேனாட்டாரைப் போலன்றித் தமிழக மக்கள் கலையினை வாழ்வினின்றும் பிரிக்க வொண்ணாத ஒன்றாகவே கருதினர்; அதை வாழ்வுக்குப் பயன்தரக் கூடியதாகவே எண்ணிக் கலையார்வம் கொண்டனர்; கலைகளில் தேர்ச்சி பெற்றனர்; சிலர் பல்கலை வல்லுநராகவும் திகழ்ந்தனர். ஒரு நாட்டின்கண் வாழும் மக்களனைவரும் உணவு, உடை, உறையுள் ஆகிய அடிப்படைத் தேவைகளைக் குறைவறப் பெற்றால்தான் கலையில் ஆர்வம் செலுத்த இயலும் என்பது நினைவிற் கொள்ளத் தக்க தாகும். எனவே, சோழர் காலத்து மக்கள் எல்லா வளமும், நலமும் பெற்று இன்புற்று வாழ்ந்தனர் என்பது உறுதி பெறுகின்றது.

கலைமகளைத் தெய்வமாகக் கொண்டு விளங்குபவை 'ஆய கலைகள் அறுபத்து நான்கு' என்பது மரபு. இவை மன்னர்க்குரிய கலைகள், அந்தணர்க்குரிய கலைகள், வணிகர்க்குரிய கலைகள், வேளாளர்க்குரிய கலைகள், மகளிர்க்குரிய கலைகள், நுண்கலைகள், பொதுவான கலைகள் எனப் பல விதமாய்ப் பகுக்கப்பட்டிருந்தன.

கலைகளை வளர்ப்பதில் மன்னன் பேராதரவு நல்கினான். பல மன்னர்களும் தாமே சிறந்த கலைஞர்களாகவும் விளங்கி மக்களுக்கு வழிகாட்டிகளாய்த் திகழ்ந்தனர். நம் சோழ வேந்தர்களுள் சிலர் கவிஞர்களாகவும், அறிஞர்களாகவும், இசைஞர்களாகவும் சிறந்து விளங்கினர். இராசேந்திர சோழனும் தன் குல முன்னோர்களைப் போன்று கட்டடக் கலையிலும், சிற்பக் கலையிலும், ஓவியக் கலையிலும், இலக்கியக் கலையிலும் பேரார்வம் கொண்டு கலைக் காவலனாகவே மாறினான்.

இராசேந்திரனது காலத்திய கட்டடக் கலை வளர்ச்சிக்கும், உயர்ச்சிக்கும் இன்றும் பேருருவுடன் நின்று நிலவி வரும் கங்கை கொண்ட சோழபுரத்திலுள்ள கங்கை கொண்ட சோளேச்சரமே சான்று பகரும். இவன் காலத்திய சிற்பக் கலையின் அற்புதத்திற்கும், இக்கங்கை கொண்ட சோளேச்சரமே சான்று பகர்கிறது. இராசேந்திரனது வெற்றி மேம்பாடுகளும், பரந்து விரிந்த பேரரசும், என்றோ அழிந்து விட்ட போதிலும், இவனது கலைப் பணியோ, இன்றும் இவனது புகழ்ப்பரணி பாடிக் கொண்டுள்ளது. கங்கை கொண்ட சோளேச்சரம் ஒரு சிற்பக் கூடமாகவே காட்சி யளிப்பதனைக் காண்போர் உணர்வர்.

இராசேந்திர சோழனது காலத்திய கலைச் சிறப்பினை ஆராயப் புகுமுன் அவனது காலத்தின் கலைக் கருவூலமாய்க் காணப் படும் கங்கை கொண்ட சோழபுர மென்னும் தலைநகரத்தைப் பற்றியும், அவனது இறையன்பின் இலக்கியமாகத் திகழும் கங்கை கொண்ட சோளேச்சரத்தைப்பற்றியும் தனித் தனியே காண்போம்.

**கங்கை கொண்ட சோழபுரம்**

இது முதலாம் இராசேந்திரனால், தனது கங்கைப் படையெழுச்சிக்குப் பின் அமைக்கப் பட்ட புதிய தலைநகர மாகும். திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உடையார் பாளையம் வட்டத்தில் இப்பொழுது இஃது ஒரு சிற்றூராகத் திகழ்கிறது. கொள்ளிடத்திலுள்ள கீழணைக்கட்டிலிருந்து ஐந்து கல் தொலைவில் அமைந்துள்ள இந்நகர், பிற்காலச் சோழ மன்னர்களின் தலைநகரமாக ஏறத் தாழ 240 ஆண்டுகள் சிறப்புடன் விளங்கிய பெருமையுடைய தாகும்.

பெறற்கரிய பெருவெற்றி பெற்ற பெருமன்னர்கள், தங்களது வெற்றி என்றும் நின்று நிலவுமாறு, புதியதாக நகரொன்றனை அமைத்து, அதற்குத் தன் பெயரினை யிடுதல் வழக்கமாகும். உலகம் போற்றும் மாவீரனான அலெச்சாந்தர் தன் வியத்தகு எகிப்து வெற்றியின் சின்னமாக 'அலெச்சாந்திரியா' என்னும் புதியதொரு நகரினைத் தன் பெயரால் நிறுவினான். நம் இராசேந்திரனும், வடநாடு சென்று, பகைஞர்களை வென்று, பெருமை கொண்டதன் அறிகுறியாகவும் கங்கை நீரைக் கொண்டு வந்ததன் அடையாளமாகவும்தான் அமைத்த புதிய நகரத்திற்குக் 'கங்கை கொண்ட சோழன்' என்ற தனது வெற்றிப் பெயர் என்றென்றும் பொன்றுது நின்று நிலைக்கும் பொருட்டுக் 'கங்கை கொண்ட சோழ புரம்' எனப் பெயரிட்டான்.



உத்தர கைலாசம்
(அம்மன் கோயில்)



கோபுரம்



கங்கை கொண்ட சோழீஸ்வரம்



சிங்கமுகக் கிணறு



துவாரபாலகர்
(அர்த்தமண்டபத்தின் தெற்கு வாயில்)



ஆடவல்லார்



சுப்ரமணியர்



சண்டீசப் பதம் தரும் காட்சி

இவ்வெற்றித் திருநகர் 'கங்காபுரி' என்றும் 'கங்காபுரம்' என்றும் புலவர் பெருமக்களால் போற்றப் பெற்றுள்ளது.

'கங்கா நதியுங் கடாரமுங் கைக்கொண்டு
கங்கா புரிபுரந்த கற்பம்'[1]

என்று ஒட்டக் கூத்தர் குறிப்பிடுவதனாலும்,

'கங்கா புரியின் மதிற்புறத்துக் கருதார் சிரம்போய் மிகவீழ
இங்கே தலையின் வேல்பாய்ந்த இவைவூ ழைகளாக்
கொள்ளீரே'[2]

என்று செயங் கொண்டார் குறிப்பிடுவதனாலும்,

'பெரும்புனற் றனது கங்கை மாநகர் தைத்தபின்'[3]

என்று வீர ராசேந்திரனின் மெய்க்கீர்த்தி குறிப்பிடுவதனாலும்,

'வண்புயலைக் கீழ்ப்படுத்து வானத் தருமலைந்து
மண்குளிரச் சாயல் வளர்க்குமாம்—தண்கவிகைக்
கொங்கா ரலங்கல் அனபாயன் குளிர்பொழில்சூழ்
கங்கா புரமா ளிகை.'[4]

என்று தண்டியலங்கார மேற்கோள் செய்யுளில் குறிப்பிட்டுள்ள தாலும்,

'உடையார் ஸ்ரீ ராஜேந்திர தேவர் கங்கை கொண்ட சோழ புரத்துக் கோயிலினுள்ளால் முடிகொண்ட சோழன் திரு மாளிகையில் வடபக்கத்துத் தேவாரத்துச் சுற்றுக் கல்லூரியில் தானஞ் செய்து அருளாயிருந்து'

'உடையார் ஸ்ரீ வீர ராசேந்திர தேவற்கு யாண்டு அஞ்சா வது கங்கை கொண்ட சோழ புரத்துச் சோழ கேரளன் திருமாளி கையில் ராஜேந்திர சோழ மாவலி வான ராஜனில் எழுந்தருளி யிருந்து'

'கங்கை கொண்ட சோழ புரத்(து) முடி கொண்ட சோழன் திருமாளிகையி லாதி பூமியின் கீழைச்சோபனத்துப் பள்ளிக் கட்டி லில் எழுந்தருளியிருந்து,

[1] *விக்கிரம சோழனுலா. வரிகள் 34-36*
[2] *கலிங்கத்துப் பரணி-களம் பாடியது-பா-91*
[3] Ep. Ind. Vol. XXI No. 38
[4] *தண்டியலங்கார மேற்கோள் செய்யுள்-95*

'கங்கை கொண்ட சோழபுரத்துக் கங்கை கொண்ட சோழன் திருக்கொற்ற வாசலில் புறவாயில் சேநாதிபதி, இளங்காரிக் குடையான் சங்கரன் அம்பலங் கோயில் கொண் டாநாத அநந்தபாலர் பெருந்திருவாட்டி என்று செய்த அறச் சாலைக்கு'

'கங்கை கொண்ட சோழபுரத்து வீட்டிலுள்ளால் குளிக்க மாடத்துத் தானஞ் செய்தருளாயிருந்து'

'கங்கை கொண்ட சோழ புரத்தில் வீரசோழன் மாளிகை யில்'

'ராஜேந்திர தேவன் கங்கை கொண்ட சோழபுரத்துக் கேர ளன் மாளிகையில் சோபான காடு வெட்டியில் எழுந்தருளி'

'வைதும்ப அரசனை இருந்தலை அரிந்து பெரும்புனற்றன் னுடு கங்கை மாநகர்த் தெய்தபின் திங்களில்'

'ஜயத் திருவுடன் கங்காபுரி புகுந்தருளி'

என்னும் மேற் கூறிய கல்வெட்டுப் பகுதிகளாலும் கங்கை கொண்ட சோழபுரம் மாபெரும் நகரமாய்த் திகழ்ந்தது என்பது விளங்கும்.

பிற்காலச் சோழ மன்னர்களின் தலைநகராகத் தொடர்ந்து நீடித்த இப்பெருநகர் முடிகொண்ட சோழன் திருமாளிகை, சோழ கேரளன்[1] திருமாளிகை, கேரளன் திருமாளிகை, வீர சோழன் திருமாளிகை போன்ற பல அழகிய மாளிகைகளைத் தன்னகத்தே கொண்ட பரந்துபட்ட நகராகக் காட்சி யளித்தது என்பதையும் மேற் கூறிய சாசனப் பகுதிகளால் அறியலாம்.

இந்நகரின் நடுவில் தன் தந்தை இராச ராசன் அமைத்த தஞ்சைப் பெருவுடையார் கோயிலைப் போலவே தானும் 'கங்கை கொண்ட சோளேச்சுரம்' என்னும் பேரழகு மிக்க கோவிலைக் கட்டினுன்; 'சோழ கங்கம்' என்னும் மிகப் பெரிய ஏரியையும் வெட்டினுன். இக் கோவிலும், ஏரியும் கங்கை கொண்ட சோழ புரத்தின் அணியெனத் திகழ்ந்தன. இவன் இவ்வழகிய நகரின் நான்கு புறங்களிலும் நான்கு காளிகளை எல்லைத் தெய்வங்களாக நிறுத்தினுன். இக்காளி கோவில்கள் இன்றும் இந்நகரின் எல்லைப் புறங்களில் உள்ளன. மேற்கு வாயில் காளிகோவில் மூன்று கல்

[1] S. I. I. Vol. II-20. Ins. 102 of 1926; Ins. 182 of 1915, Ins. 510 of 1926

தொலைவிலும், கிழக்கு வாயில் காளிகோவில் இரண்டு கல் தொலைவிலும், வடக்கு வாயில் காளிகோவில் இரண்டு கல் தொலைவிலும், தெற்கு வாயில் காளிகோவில் இரண்டு கல் தொலைவிலும் அமைந் திருந்தன. வடக்கு வாயில் கோயில் சலுப்பை என்னும் சிற்றூரிலும், தெற்கு வாயில் கோயில் வீர ரெட்டி தெரு என்னும் சிற்றூரின் அருகிலும் இருந்தன. இச் சிற்றூரில் தான் தீர்த்தக் குளமும் இருந்தது. இக்குறிப்புகளால், இராசேந்திரனுல் அமைக்கப்பட்ட பண்டை நகரம், ஏறத்தாழ நான்கு கல் சதுர அமைப்புடையதாக இருந்திருக்க வேண்டு மென்று கருத இடமுண்டு.

கங்கை கொண்ட சோளேச்சுரத்தைச் சுற்றிலும் இரண்டு கல் தொலைவிற்குள் அமைந்துள்ள சிற்றூர்களையும், அவைக ளின் பெயர்க் காரணங்களையும் நாம் ஆய்ந்து பார்த்தால் அந் நகரின் சிறப்பினையும் பெருமையினையும் தெளிவாக அறிய முடி யும். உட்கோட்டை, சுண்ணும்புக்குழி, மாளிகை மேடு, ஆயி ரக் கலம், செங்கல் மேடு, மெய்க்காவல் புத்தூர், கணக்கு விநாய கர் கோயில், குருகை பாலப்பன் கோயில், வீரசோழ புரம், வாண தரையன் குப்பம், குயவன் பேட்டை, தொட்டிக் குளம், பொன்னேரி, பள்ளி ஓடை, சலுப்பை, செம்மேடு, சப்போடை, முத்துச் சில்பாபுரம், மண்மலை, பாகல் மேடு, தேர்மேடு, கழனி குளம், கொல்லா புரம் போன்ற இடங்கள் இக்கோவிலைச் சுற்றிக் காணப்படுகின்றன.

இவை யனைத்தும் பண்டைக் காலத்தில் ஒரே நகரின் பகுதி களாக அமைந்திருந்ததால் அந்நகர் பெருநகராக விளங்கியது. இக்கோவிலி லிருந்து ஏழு கல் தொலைவில் பரணைமேடு என்னும் சிற்றூர் உளது. அவ்வூரிலிருந்து கோவில்வரை பருத்தி மூட்டை களை யடுக்கி, நீண்ட பரணைக் கட்டிக் கோயிலின் உச்சிக்கு விமானக்கல் கொண்டு செல்லப்பட்டது என்று அவ்வூர் முதிய வர்கள் கூறுகின்றனர். இது தஞ்சை யருகிலுள்ள சாரப்பள்ளம் என்னும் சிற்றூரிலிருந்து நீண்ட சாரம் கட்டித் தஞ்சைப் பெரு வுடையார் கோவிலுக்கு விமானக்கல் கொண்டு சென்றதை நமக்கு நினைவூட்டுகின்றது.

**உட்கோட்டை**

இது தற்போது, ஏறத் தாழ இருநூற்றைம்பது வீடுகளைக் கொண்ட சிற்றூராய்க் காணப்படுகிறது. இதுவே கோட்டை இருந்த இடமாகக் கூறப்படுகிறது. இவ்வூர் மக்கள் இதை உக்

கோடை என அழைக்கின்றனர். இங்குத் தற்போது ஓர் உயர் நிலைப் பள்ளியும் உளது.

**மாளிகை மேடு**

மாளிகை மேடு என்பது சோழ மன்னர்களின் மாளிகை இருந்த இடமாகும். இன்று இவ்விடம் வயலாகக் காணப்படு கிறது. இது உட்கோட்டைக்கு மேற்கில் அமைந்துள்ளது. இப் பகுதியில் உடைந்த மட்பாண்ட ஓடுகளும், காறைக் கலப் புள்ள செங்கற் சிதைவுகளும் காணப்படுவதால் இவ்விடத்தில் முன்பு அரண்மனை இருந்தது என்பது உறுதி பெறுகின்றது. இம் மாளிகை மேட்டில், தோண்டி யெடுக்கப்பட்ட கற்றூண்கள் புதுச்சாவடிக் குளத்தின் படிக்கட்டுகளாகப் பயன்படுத்தப் பட்டனவாம். மாளிகை மேடு கிழக்கு மேற்கில் ஒரு கல் நீளமும், தெற்கு வடக்கில் ஒன்றரைக் கல் நீளமும் கொண்ட தாகும். இப்பெருமாளிகை பல பகுதிகளாகத் தடுக்கப் பட்டிருந்தது. இம்மேட்டின் கிழக்கில் ஒரு நீளமான செங்கற் சுவர் இன்றும் காணப்படுகிறது. இங்குக் காணப்படும் செங்கல் 15 அங்குல நீள மும் 8 அங்குல அகலமும், 4 அங்குல கனமும் கொண்ட தாகும். இங்குக் கல்லாலான மதகின் சிதைவுகள் காணப் பெறுதலின், அரண்மனையிலிருந்து கழிவு நீர் செல்லவும், மழை நீர் செல்ல வும் தகுந்த ஏற்பாடுகள் செய்யப் பட்டிருந்தன என்று அறிய லாம்.

கோயிலுக்குப் பின்புறம் காணப்படும் ஓடை தற்காலத்தில் கட்டப்பட்ட தாகும். அதன் இருபுறமும் காணப்படும் இடிந்த செங்கற் சுவர்களின் சிதைவுகள் பண்டைக் காலத்தன வாகும். எனவே, இப்பரந்த மேட்டில்தான் முன்பு அரண்மனை கட்டப் பட்டிருந்தது என்பதனை உய்த்துணரலாம்.

**சுண்ணும்புக் குழி**

இதுதான் அரண்மனை, கோயில், உள்கோட்டை, நந்தி மற்றும் கட்டடங்கள் கட்டுவதற்குத் தேவையான சுண்ணும்பு தயாரித்த இடமாகும். எனவே, சுண்ணும்பு தயாரிக்கப் பயன் பட்ட குழி சுண்ணும்புக் குழி எனப்பட்டது பொருத்தமே.

**மெய்க்காவல் புத்தூர்**

கங்கை கொண்ட சோளேச்சுரத்திற்கு மெய்க்காவல் செய்த வீரர்கள் வாழ்ந்த இடம் மெய்க்காவல் புத்தூர் ஆகும்.

மன்னனுக்கு மெய்க்காவல் புரிந்தோரும் இங்குதான் வசித்திருக்கக் கூடும்.

### ஆயிரக் கலம்

இஃது உட்கோட்டைக்கு அருகில் போர்ப்படை ஆயுதங்கள் வைக்கப் பட்டிருந்த இடமாதலின் ஆயுதக் கலம் என அழைக்கப்பட்டது. இது தற்காலத்தில் ஆயிரக்கலம் என்னும் பெயருடன் ஒரு சிற்றூராக விளங்குகிறது. ஆயுதக் கலமென்பது ஆயிரக் கலமென்று மருவி வழங்குவதாயிற்று.

### வாண தரையன் குப்பம்

இது கோவிலுக்குத் தெற்கேயுள்ள ஒரு சிற்றூராகும். இது முதலாம் குலோத்துங்க சோழன் படைத் தலைவனாகிய வாண கோவரையன் தங்கியிருந்த இடமாகும். இது வான வேடிக்கை நிகழ்த்துதற்குத் தேவையான வான வெடிகள் உற்பத்தி செய்யும் வானர்கள் வாழ்ந்த இடமென்றும் சிலர் கூறுகின்றனர். இஃது இன்று 'வானடுப்பு' எனப்படுகிறது.

### வீர ரெட்டி தெரு

இது கங்கை கொண்ட சோழபுரத்திற்குத் தெற்கில் அமைந்துள்ள சிற்றூராகும். இங்குச் சோழ வீரர்கள் தங்கியிருந்ததால் இது வீர ரெட்டி தெரு என அழைக்கப்பட்டது.

### செங்கல் மேடு

கங்கை கொண்ட சோழேச்சுரம், அரண்மனை, உள் கோட்டை ஆகிய கட்டடங்கள் கட்டுவதற்குத் தேவையான செங்கற்கள் அறுக்கப்பட்ட இடம் செங்கல் மேடு என்னும் பெயரால் அழைக்கப் பெறுகின்றது.

### கணக்கு விநாயகர் கோயில்

இதுபற்றி ஒரு கதை இப்பகுதி மக்களால் பல்லாண்டு காலமாகப் பேசப்பட்டு வருகிறது. கங்கை கொண்ட சோழேச்சுரம் கட்டுவதற்கான செலவுக் கணக்கினைக் குறித்து வைப்பதற்காக நியமிக்கப்பட்ட கணக்கன், கங்கை கொண்ட சோழேச்சுரத்தான்மீது பெரும்பத்தி கொண்டு கணக் கெழுதுவதனை மறந்தான். மன்னன் ஒரு நாள் கணக்கனை அழைத்துக் கோவில் கட்டுவதற்காகிய செலவுக் கண்க்கினைப் படிக்கச் சொன்னான். கணக்கன் விழித்தான்; ஆண்டவனிடம் தனக்கு உதவும்படி வேண்டினான்; ஆண்டவன் அருள் புரிந்தான்; விநாயகரே நேரில் வந்து

மன்னவன் ஏற்றுக் கொள்கின்ற முறையில் செலவுக் கணக்கினைப் படித்தார். இவ்வாறு செலவுக் கணக்கினைப் படித்த வினாயகருக்குக் கோயில் கட்டப்பெற்ற இடம் கணக்கு விநாயகர் கோவில் என்று அழைக்கப்பெற்றது.

**குருகை ப்ாலப்பன் கோயில்**

இது குருகை காவலப்பன் கோயில் எனவும் அழைக்கப் பெறுகிறது. இச் சிற்றூர் கங்கை கொண்ட சோழபுரத்திலிருந்து அரைக்கல் தொலைவில் அமைந்துள்ளது. இங்குதான் ஸ்ரீ நாத முனிகள் அவதாரம் செய்தார் எனவும் கூறப்படுகின்றது.

**தொட்டி குளம்**

இஃது ஒரு பெரிய ஏரியாக இருந்தது.

**தீர்த்த குளம்**

இங்குதான் புனித தெப்பக்குளம் இருந்தது. தெப்பத் திருவிழா இங்குச் சிறப்பாக நடைபெற்றது.

**தேர்மேடு**

கோயில் தேர் நிறுத்தப்பட்டிருந்த இடம் தேர்மேடு என்று அழைக்கப் பெற்றது.

**குயவன் பேட்டை**

மண் பாண்டம் செய்யும் குயவர்கள் வாழ்ந்த பகுதி குயவன் பேட்டை யென வழங்கப் பெற்றது.

**மீன்சுருட்டி**

கங்கை கொண்ட சோழபுரத்தருகில் மீன்சுருட்டி என்ற ஊர் ஒன்று உள்ளது. இவ்வூர்ப் பெயர்க் காரணம் பற்றியும் ஒரு செவிவழிச் செய்தி கூறப்படுகிறது. இராசேந்திரன் தன் படைகளைக் கங்கைக் கரைக்கு அனுப்பிய பின்பு பாண்டியர்கள் சோணாட்டின்மீது படையெடுத்துச் சோழபுரம் நோக்கிப் புறப்பட்டனரென்றும், சோழப் படைகள் தயார் நிலையில் விழித்திருக்கவே பாண்டிய வீரர்கள் தங்கள் மீன் கொடிகளைச் சுருட்டிக் கொண்டோடியதால் மீன்சுருட்டி எனும் பெயர் பெற்றது என்றும் கூறுகின்றர்.

கோயிலுக்கும் மாளிகை மேட்டிற்கும் இடையில் உள்ள ஓடையில் செங்கற் சுவர்களுடைய நிலவறைப் பகுதி இன்றும் காணப்படுவதால், பண்டைக் காலத்தில் கோயிலையும் மாளிகை

மேட்டையும் இணைக்கும் சுரங்கம் ஒன்றிருந்தது என்பதை யறியலாம்.

இந்நகர அமைப்பினைத் தெளிவாக அறிந்து கொள்ளப் போதிய சான்றுகள் இல்லை. இது நான்கு கல் சதுரங் கொண்ட பெருநகரம் என்பதை முன்பே கண்டோம். சோழ மாளிகை என்ற பெரிய அரண்மனை நகரின் நடுவண் அமைந்திருந்தது. இதில் சோழ கேரளன் திருமாளிகை, கேரளன் திருமாளிகை, முடிகொண்ட சோழன் திருமாளிகை, வீரசோழன் திரு மாளிகை போன்ற பல மாளிகைகள் அடங்கி யிருந்தன. அரண் மனை ஏவலாளர் தங்கி யிருந்த பகுதி 'திருமஞ்சனத்தார் வேளம்' எனப்பட்டது. அரண்மனையைச் சுற்றி அமைச்சர், படைத் தலை வர் போன்ற அலுவலர் வாழத் தக்க வீடுகளைக் கொண்ட அகன்ற தெருக்கள் காணப்பட்டன. அவற்றிற் கப்பால் வாணிகர் களின் தெருக்கள் அமைந்திருந்தன. மக்கள் தேவையான பொருட்களை வாங்குவதற் கமைந்த பெரிய கடைத் தெருவும் அமைந்திருந்தன.[1] அரச விருந்தினரும், வெளி நாட்டினரும் தங்குவதற்கெனத் தனி மாளிகைகளும், அங்கே அமைக்கப்பட் டிருந்தன. சுருங்கக் கூறின் ஒரு சிறந்த தலை நகருக்குத் தேவை யான எல்லா அமைப்புகளையும் கங்கை கொண்ட சோழபுரம் பெற்றிருந்தது என்று கூறலாம்.

அங்கே காணப்பெறும் பாழடைந்த கட்டடச் சிதைவுகளின் துணை கொண்டு மேற்கூறிய நகர அமைப்பினை நாம் அறியலாம். கங்கை கொண்ட சோழபுரத்தில் அகழ்வாராய்ச்சி நடத்தப் பெற்றால்தான் பல அரிய உண்மைகள் நமக்குப் புலனாகும். அது வரையில் நகர அமைப்புப் பற்றித் தெளிவாக, விரிவாக நம்மால் அறிந்துகொள்ள இயலாது. இங்கே காணப்படும் அழிவுச் சின் னங்களைக் கொண்ட மேடுகளையும் அதைச் சுற்றிய காடுகளையும் நோக்கும் போது, பழைய பாபிலோன் நகர அடையாளங்களாக இருந்த மேடுகளே வரலாற்றாசிரியர்களின் மனக்கண்முன் காட்சி தருகின்றன.

கங்கை கொண்ட சோழபுரம் பூம்புகார், பழையாறை, தஞ்சை போன்ற சோழர்களின் பழைய தலை நகரங்களுக்கு ஒப் பான அழகும், விரிவும், வசதியும் கொண்டிருந்தது என்பது உறுதி. கங்கைகொண்ட சோழன், தான் இளைஞனாயிருந்த காலை வாழ்ந்து வந்த, சோழ மன்னர்கள் முடி புனைந்துகொள்ளும் சிறப்பினைப் பெற்ற பெருநகராகிய பழையாறையைப் போல்

[1] 102 of 1926

ஓர் அழகிய நகரை அமைக்க விழைந்ததால் கங்கை கொண்ட சோழபுரத்தை அமைத்திருக்கக்கூடும். ஏனெனில், பழையாறை நகரும் முழையூர், பட்டீச்சுரம், திருச்சத்தி முற்றம், சோழ மாளிகை, திருமேற்றளி, கோபிநாத பெருமாள் கோயில், ஆரியப் படையூர், புதுப்படையூர், பம்பைப் படையூர், மணப் படையூர், அரிச்சந்திரபுரம், தாராசுரம், நாதன் கோயில் ஆகிய ஊர்கள் சூழப்பெற்ற அழகிய பெருநகராகப் பழங்காலத்தில் விளங்கியது. கங்கை கொண்ட சோழபுரம் பழையாறை ஆகிய நகரங்களை நோக்குமிடத்து, நம் முன்னோர்கள் எத்துணைச் சிறப்பு மிக்க பெருநகரங்களை அமைத்திருந்தனர் என்ற உண்மை நமக்குப் புலனாகும். இதை எண்ணுந்தொறும், நாம் பெருமையும், பெருவியப்பும், பெருமிதமும், பெருமகிழ்ச்சியும் கொள்கிறோம். இன்று சிற்றூர்களாகக் காணப்பெறும் இந்நகரங்கள் பண்டைக் காலத்தில், ஒல்காச் சிறப்புப் பெற்ற பேரழகு வாய்ந்த மாநகரங்களாக விளங்கி யிருந்தன.

பிற்காலச் சோழர்களுள் தலை சிறந்து விளங்கிய மாமன்னன் இராசேந்திரன் காலத்தில் உருவாக்கப்பட்ட கங்கை கொண்ட சோழபுரத்தின் பெருமையினையும், சிறப்பினையும் கண்ட நாம், அதன் தொன்மையினையும் காணுதல் இன்றியமையாத தாகும். பெருமை சான்ற கங்கை கொண்ட சோழபுரம், இற்றைக்கு 948 ஆண்டுகட்குமுன் கட்டப் பெற்றிருக்க வேண்டு மென்பது கல்வெட்டுகளால் உணர்த்தப்படுகிறது. முதலாம் இராசேந்திரனின் பதின்மூன்றாவது ஆட்சி யாண்டில் வெளியிடப்பட்ட கல்வெட்டில் இவனது கங்கைப் படையெழுச்சி பற்றிக் குறிப்புகள் முதன் முதலாகக் காணப்பெறுகின்றன. இருப்பினும் இவனது பன்னிரண்டாவது ஆட்சி யாண்டில் வெளியிடப்பட்ட 'திருமன்னி வளர' என்ற அழகிய தொடக்கத்தைக் கொண்ட மெய்கீர்த்திப் பகுதியில் 'வெளிமலர்த் தீர்த்தத்து எறிபுனல் கங்கையின்' என்று கங்கை நீரினைக் கொண்டுவந்த செய்தி குறிக்கப் பெற்றுள்ளமையால் கி.பி. 1024இல் இந்நகரம் கங்கை கொண்ட சோழபுரம் எனப் பெயரிடப் பெற்றிருத்தல் வேண்டு மென்பது உள்ளங்கை நெல்லிக்கனி யாகும். இவன் ஆட்சி எய்திய முதல் மூன்றாண்டுகள் முடிய, எவ்விதப் போர் நிகழ்ச்சிகளிலும் பங்கு கொள்ள வில்லை என்பது இவன் காலத்திய கல்வெட்டுகளால் உறுதி யாகிறது. எனவே, இம்மூன்றாண்டுகட்கு இடைப்பட்ட காலத்தில்தான் இவன் புதிய நகரத்தையும், புதிய கோயிலையும் கட்டி யிருக்க வேண்டும். பின்னர் வட வேந்தர்களை வென்று, கங்கை நீரினைக் கொணர்ந்து, வெற்றி விழாக் கொண்டாடிக் கங்கை கொண்ட சோழன் என்ற விருதினைப் பெற்ற நாளில்

அதாவது கி.பி. 1024இல் இவனது தலை நகரத்திற்குக் கங்கை கொண்ட சோழபுர மென்றும், கோயிலுக்குக் கங்கை கொண்ட சோளேச்சுரம் என்றும் பெயரிடப்பட்டிருக்க வேண்டும்.

இந்நகர் முதலாம் இராசேந்திர சோழன் காலத்தில் தலை நகராக்கப்பெற்று இவனுக்குப் பின்னர் ஆண்ட முதலாம் இராசாதிராசன், இரண்டாம் இராசேந்திரன், வீர ராசேந்திரன், அதி ராசேந்திரன், முதற் குலோத்துங்கன், இரண்டாம் இராசராசன், இரண்டாம் இராசாதிராசன், மூன்ரும் குலோத்துங்கன், மூன்ரும் இராசராசன், மூன்ரும் இராசேந்திரன் போன்ற மன்னர்கள் காலங்களிலும் தொடர்ந்து தலை நகராய்ச் சிறப்புற்று விளங்கியது. எனவே, கங்கை கொண்ட சோழபுரம், இவனது கங்கைப் படையெழுச்சிக்குப்பின் அமைக்கப்பட்டு ஏறத்தாழ 240 ஆண்டுகள் தலை நகராய் விளங்கிய பெருஞ்சிறப்பிற் குரியதாகும்.

கங்கை கொண்ட சோழபுரம், சோழர் வரலாற்றில் தனிப் பெரும் பெருமை கொண்டது. சோழர் வரலாற்றில் விரிந்த, பரந்த பேரரசினை யேற்படுத்திக் 'கடாரம் கொண்டான்' எனப் பெயர் பெறும் முதலாம் இராசேந்திரன் சோழர்களின் பொற் காலத்தை உருவாக்கியதும் இந்நகரில்தான்; இரண்டாம் இராசேந்திரன், முதற் குலோத்துங்கன் போன்ற பெருமன்னர்கள் புறநாட்டு மன்னர்களை வென்று, வெற்றி விழாக் கொண்டாடிய பெருமைக் குரியதும் இந்நகரே; கலிங்கம் வென்ற காவலனும் முதலாம் குலோத்துங்கன் செயங்கொண்டானுகத் தலை நகர் திரும்பிய காலை, அவைக்களப் புலவராகிய செயங் கொண்டாரைக் கண்டு தானும் சயங் கொண்டான் ஆயினேன் என்று கூறப் பாவலன் செயங் கொண்டானும் காவலன் செயங் கொண்டானைப் போற்றிக் 'கலிங்கத்துப் பரணி' பாடியதும் இந்நகரில்தான்; பாவேந்தனும் ஒட்டக் கூத்தன் விக்கிரம சோழன், இரண்டாம் குலோத்துங்கன், இரண்டாம் இராசராசன் ஆகிய சோழ மன்னர்களின் அருமை பெருமைகளைப் பாடிப் புகழ்ந்து 'மூவருலா' இயற்றியதும் இத் தண்டமிழ் நகரில்தான்; மூன்ரும் குலோத்துங்கன் சேக்கிழார் பெருமானைத் தில்லைக்கு அனுப்பித் திருத்தொண்டர் புராணத்தைப் பாடுமாறு செய்ததோடு நாடோறும் எவ்வளவு பாடல்கள் பாடப்பெற்றுள்ளன என்பதை ஆளனுப்பி அறிந்து வருமாறு செய்த புண்ணிய நகரும் இதுதான்; சோழ-சாளுக்கிய குலத் தோன்றலாக விளங்கிய முதலாம் குலோத்துங்கன் பிறந்து, வளர்ந்து, அரசோச்சிப் புதிய வரலாறு சமைத்ததும் இவ்வணி நகரில்தான்;

சிற்பக் கலைக்கோர் முடி மணியாய்த் திகழ்ந்து, பேரெழில் வாய்ந்த சிற்பங்களைத் தன்னகத்தே கொண்ட கங்கை கொண்ட சோளேச்சுரம் நிலைபெற்றிருப்பதும் இக்கலை நகரிலேதான்; இந்தியாவிலேயே தலை சிறந்து விளங்கிய பேரேரியாகிய 'சோழ கங்கம்' வளம் பல விளைத்ததும் இந்நகரில்தான்; கருவுக்குள் உருவாகும் சிசுவும்கூடக் கசிந்துருகும் அளவிற்குக் கருவூர்த் தேவர் கங்கை கொண்ட சோளேச்சரத்தான் மீது திருவிசைப்பா இசைத்ததும் இந்நகரில்தான்; பொங்கு தமிழின் பெரும்புகழ் குன்றாது, குறையாது, காத்தோம்பி வளர்க்கப் பட்டதும் இம்முத்தமிழ் நகரிலேதான்; தமிழையே பேச்சாகவும், மூச்சாகவும் கொண்டு, தன்னலம் கருதாது தரணி காக்கப் பாராண்ட மன்னர்களும், செந்தமிழைச் சிந்தையிலே தேக்கிச் செஞ்சொற் கவிமழை பொழிவித்த கவிஞர் பெரு மக்கள் வாழ்ந்ததும், விழ்ந்ததும் இத்தீந்தமிழ் நகரிலேதான்.

செயங் கொண்ட சோழனான இராசராசன் தரணி போற்றும் தஞ்சையைத் தலை நகராய்க் கொண்டான் என்றும் தஞ்சையிலே 'இராசராசேச்சுரம்' என்ற பெருவுடையார் கோயிலைக் கட்டி அழியாப் புகழ் பெற்றான் என்றும் முன்பே கண்டோம். ஆனால், முதலாம் இராசேந்திரனோ, தஞ்சையை விடுத்துத் தனது தலைநகரைக் கங்கை கொண்ட சோழபுரத்திற்கு மாற்றினான். இவன் தனது தலைநகரை மாற்றியதற்குரிய காரணங்கள் யாவை? என்பதை யறியத் தகுந்த ஆதாரங்கள் காணப்பெற வில்லை. இராசேந்திரன் கங்கை கொண்ட சோழ புரத்திற்குத் தனது தலைநகரை மாற்றியமைக்குரிய காரணங்களாகக் 'கல்வெட்டு ஆராய்ச்சிக் கலைஞர்' திரு. வை. சுந்தரேச வாண்டையார் அவர்கள் கீழ்க்கண்டவற்றைக் குறிப்பிடுகின்றார்.

'பிற்காலச் சோழ மன்னர்களுக்கு (விசயாலயன் காலம் முதல், முதலாம் இராசராசன் காலம் முடிய) தலைநகராய் விளங்கி யிருந்த தஞ்சாவூர், பாண்டிய மன்னர்களுடைய எல்லைக்கு அருகில் இருந்தமையால், அம்மன்னர்கள் படை யெடுத்து வந்து எளிதில் வென்று விடலாம் என்னும் கருத்துப் பற்றியும், தங்கள் குல தெய்வமாகிய தில்லைச் சிற்றம்பலத்து இறைவனை அடிக்கடி வந்து வழிபடுவதற்குக் கொள்ளிடப்பேராறு வெள்ளப் பெருக்குக் காலங்களில் பெருந் தடையாய் இருந் தமையாலும், இக்காலத்தில் கொள்ளிடப் பேராற்றுக்கு இருக் கும் கீழ் அணைக்கட்டு (Lower Anicut) அக்காலத்தில் இல்லாமை யாலும், முதலாம் இராசேந்திர சோழன் சோழ வள நாட்டின் உட்பகுதியாகிய கங்கை கொண்ட சோழ புரத்தைத் தலைநக ராகக் கொண்டிருக்க வேண்டும்'

மேற்கூறிய காரணங்களே யன்றிக் கீழ்க்காணும் காரணங் களினாலும் இராசேந்திரன் தனது தலைநகரினைக் கங்கை கொண்ட சோழ புரத்திற்கு மாற்றி யிருக்கலாம்.

1. தலைநகர், நாட்டின் நடுவிடத்தில் அமைந்திருப்பது நிருவாகத்திற்கு நலம் பயக்குமாதலின், சோணாட்டின் தென் பகுதியி லமைந்த தஞ்சையை விடுத்து நடுவண் அமைந்த கங்கைகொண்ட சோழபுரத்தைத் தேர்ந் தெடுத்திருக்கக் கூடும்.

2. தன் தந்தையைப் போலவே தானும் ஒரு பெருங் கோயிலைக் கட்டிப் புகழ் பெற வேண்டு மென்று விழைந்ததால், தலைநகரை மாற்றிக் கோயிலைக் கட்டி யிருக்கலாம்.

3. பிற நாடுகளை வென்று தனது பேரரசினை விரிவு படுத்த எண்ணிய இராசேந்திரன் தன் படைகள் போர்க் காலங்களில் பல நதிகளைக் கடந்து செல்வது கடினமென உணர்ந்ததால், அவ்விடையூறுகளைக் களைய வேண்டித் தனது தலைநகரத்தினை மாற்றினான். இதனால், படைகள் கால தாமத மின்றி விரைவில் அண்டை நாடுகளின்மீது படையெடுக்க முடிந்தது.

4. விசயாலயன் ஆட்சிக் காலத்திலிருந்து, முதலாம் இராசராசன் காலம்வரை சோணாட்டின் தலைநகராக விளங் கியது தஞ்சை. எனவே, புதுமையை விரும்பிய நம் இராசேந் திரன், புதிய தலை நகர் ஒன்றனை அமைக்க விரும்பி யிருத் தல் வேண்டும்.

5. அரச குடும்பம் பழையாறையில் இருந்ததாலும் தான் இளமைக் காலத்தில் பழையாறை நகரில் வாழ்ந்ததாலும், அதற்கருகில் தலைநகர் இருக்க எண்ணிக் கங்கை கொண்ட சோழபுரத்தை இராசேந்திரன் தேர்ந்தெடுத்திருக்க வேண்டும். இவனது பன்னிரண்டாம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டின்படி இவன் பழையாறை நகரிலிருந்து கொண்டு சில ஆணைகளைப் பிறப்பித்தான் என்பதும் ஈண்டு கவனிக்கத் தக்க தாகும். இதனைக் கூழம்பந்தல் கோயில் கல்வெட்டா லறியலாம்.

**சோழ கங்கம்**

இராசேந்திரன் தனது கங்கைப் படையெழுச்சியின் நினை வாகப் புதிய நகருக்குக் கங்கை கொண்ட சோழபுர மெனவும், கற்றளிக்குக் கங்கை கொண்ட சோளேச்சுர மெனவும் பெயரிட்

டான் என்பதை முன்பே கண்டோம். இவ்வாறே தான் கட்டிய புதிய நகருக்குக் கங்கை கொண்ட சோழபுரமெனப் பெயரிட்ட தோடு மட்டு மன்றித் தான்வெட்டிய புதிய ஏரிக்கும் சோழ-கங்கம் எனப் பெயரிட்டான். இராசேந்திரனது படை, கங்கை சென்று கங்கை நீரைக் கொணர்ந்த செய்தியைத் திருவாலங்காட்டுச் செப்பேட்டிலுள்ள 109 முதல் 124 முடிய உள்ள வடமொழிப் பாடல்கள் விளக்குகின்றன. இராசேந்திரன் தனது படையினை வட நாட்டிற்கு அனுப்பியதன் நோக்கமே கங்கை நீரைக் கொணர்ந்து தனது தலைநகரையும், கோயிலையும் தூய்மைப் படுத்தவே யாகும். தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணம் வட்டத்தில் உள்ள திரைலோக்கி என்னும் ஊர்ச் சிவன் கோயில் கல்வெட்டிலும் 'இராசேந்திர சோழன் கங்கை கொண்டு எழுந் தருளி நின்ற இடத்துத் திருவடி தொழுது' என்று குறிப்பிடப் பட்டுள்ளதால் இராசேந்திரன் கங்கை நீரைக் கொண்டு வந்த செய்தி உறுதிப்படுகிறது.

இவ்விதம் கொணர்ந்த புனித நீரைக் கங்கை கொண்ட சோழ புரத்தில் ஒரு பெரிய ஏரி ஒன்றை வெட்டி அதில் அத்தூய நீரை ஊற்றி அதற்குச் சோழ கங்கம் எனப் பெயரிட்டான்.[1] இவ் வேரியைச் 'சல மயமான சயத் தம்பம்' அதாவது நீர் மய மான வெற்றித் தூண் என்று திருவாலங் காட்டுச் செப்பேடு புகழ்கின்றது.

இது கங்கை கொண்ட சோழபுரத்திற்கு மேற்கே சயங் கொண்ட சோழபுரம் செல்லும் பெருவழியில் இரண்டுகல் தொலை வில் உள்ளது. இது தற்காலத்தில் பொன்னேரி எனவும் அழைக் கப்படுகிறது. இஃது இப்பொழுது தூர்ந்து மேடாக இருக்கிறது. இது தெற்கு வடக்காக 16 கல் நீள முடையது. உயர்ந்த கரை களை யுடையது. இந்த ஏரிக்கு நீர் கொண்டு வருவதற்குத் தென் புறத்தில் கொள்ளிடத்திலிருந்து ஒரு கால்வாய் வெட்டப்பட் டிருந்தது; வட புறத்திலும் வெள்ளாற்றிலிருந்து மற்றொரு கால் வாய் வழியாக ஏரிக்கு நீர் கொண்டு வரப்பட்டது. இக்கால்வாய் கள் இருந்தமைக்கு அறிகுறியாக இவற்றின் சுவர்கள் இன்றைக் கும் அழிந்த நிலையில் காணப்படுகின்றன. இவ்வேரி முற்காலத் தில் கடல் போன்ற காட்சியை நல்கியிருக்க வேண்டும். இதன் தண்ணீரால் பல்லாயிரக் கணக்கான ஏக்கர் நிலங்கள் பயிரிடப் பட்டு ஏராளமான தானியங்கள் விளைவிக்கப்பட்டன. இன்று தென்னார்க்காடு மாவட்டத்தில் பேரேரியாகக் காட்சி தருவதும்,

[1] S. I. I. Vol. III. No. 205-verse-124

எழுபத்து நான்கு மதகுகளைக் கொண்டதுமான, வீராணம் ஏரி முற்காலத்தில் இப்பொன்னேரியின் வடிகாலாகவே அமைந்திருந்தது. திருச்சிராப்பள்ளி, தென்னுர்க்காடு கோட்டங்களுக்கு இந்த ஏரியின் நீரே பயன்பட்டது.

இற்றை நாள் வரை, ஆராய்ச்சியாளர்கள் வட நாட்டில் மாளவ தேசத்தில், போச மன்னனுல் வெட்டப்பட்ட போச புரத்து ஏரியே மிகவும் பெரியதும், சிறப்பு மிக்கது மெனக் கருதி வந்தனர். போசபுரத்து ஏரியில் இரண்டு குன்றுகட்கு இடையில் அமைந்துள்ள பெரிய பள்ளத்தாக்கை அடைத்து அணை கட்டித் தண்ணீரைத் தேக்கி வைத்துள்ளனர். இது மிகவும் பெரிய ஏரியாக இருந்த போதிலும், இரண்டு குன்றுகட் கிடையில் அமைக்கப் பட்டுள்ளதால் இதனைக் கட்டுவது கடின மன்று. ஆனுல், கங்கை கொண்ட சோழபுரத்தி லமைக்கப்பட்டுள்ள சோழ கங்க ஏரியின் சிதைவுகளைக் காண்போர் பெருவியப் படைவர் என்பது உறுதி. ஏனெனில், மலைகளும், குன்றுகளும் இல்லாத சமவெளியில் பதினுறு கல் தொலைவுவரை வலிமையான, உயரமான கரைகளைக் கட்டி, நீண்ட கால்வாய் வெட்டித் தண்ணீரைப் பள்ளத் தாக்கிலிருந்து மேட்டிற்குக் கொண்டு வந்து ஏரியில் தேக்கி வைத்த லென்பது எளிமையான செயலன்று.

பண்டைக் காலத்தில் இவ்வியத்தகு ஏரியினைக் கட்டும் பணியில் எத்துணைத் தோழர்கள் பச்சைக் குருதி பரிமாறி, ஓய்வு, ஒழிச்சலின்றிச் சலியாது உழைத்து உழைத்து உருக் குலைந்தனர் என்பதை எண்ணும் போது, நம் நெஞ்ச மெல்லாம் துணுக் குறுகின்றன. எனவே, போசபுரத்து ஏரியைவிட, இப்பொன்னேரியே மிகவும் சிறந்தது; போற்றத் தக்கது என்று அதைக் கண்டோர், இனிக் காண இருப்போர் கருதுவர் என்பது திண்ணம்.

போசபுரத்து ஏரியைக் கட்ட இயற்கை துணை புரிந்தது; பொன்னேரியைக் கட்ட, கட்டுடல் வாய்த்த தொழிலாளர்களின் தோள் வலியும், மனவலியும் துணை புரிந்தன வென்பதை வரலாறு என்றென்றும் உறுதி செய்கிறது.

இங்ஙனம் வளம்பல பெருக்கிய மக்கள் நல்வாழ்விற்குத் துணையா யமைந்த இந்த ஏரி, இன்று காடடர்ந்த இடமாகக் கிடக்கிறது. இப்பாழடைந்த ஏரி தன் பெருமை யிழந்து, பொலிவிழந்து, தன் பழமையை மட்டுமே உணர்த்திக் கிடப்பது வருந்துதற் குரியதே. பிற்காலத்தில் சோணுட்டின்மீது

படையெடுத்த பகைஞர்கள் இதனைப் பாழாக்கினர் என்ற ஒரு செய்தி மரபாகக் கூறப்பட்டு வருகிறது.[1]

ஏறத்தாழ இருபத்தாறு ஆண்டுகட்கு முன் அரசியலார் தெற்கு வடக்கில் மூன்று கல் நீளத்திற்கும், கிழக்கு மேற்கில் ஒரு கல் அகலத்திற்கும் இதனை அகழ்ந்து, ஆழப்படுத்திப் பெரிய கரைகளைக் கட்டி நீர்ப் பாசனத்திற்குப் பயன்படும் ஏரியாக அமைத் துள்ளனர். மழை பெய்யும் பொழுது, கருவாட்டு ஓடை என்னும் காட்டாறு வழியாகத் தண்ணீர் இவ்வேரியினுள் நிரம்பு கிறது. இதைக் கொண்டு ஆயிரம் ஏக்கர் நிலம் வளம் பெறுகி றது. அரசினரின் இம்முயற்சி பாராட்டத் தக்கது. இருப்பினும், கழுதை தேய்ந்து கட்டெறும்பான கதைபோல் செயற்கைக் கட லெனக் காட்சி யளித்துப் பாலை நிலமெல்லாம் சோலை வனமாக மாற்றிய இப்பழமை மிக்க சோழ கங்கம் இன்று சிறிய ஏரியாகக் காணப் பெறுகிறது. இப்பழைய ஏரி முன்பிருந்த நிலைக்குப் புதுப் பிக்கப் பட்டுத் தன் பண்டை நிலையை யெய்துமாயின், தமிழ் நாடு உணவு உற்பத்தியில் தன்னிறைவு பெறும் என்பது உறுதி. அதோடு நாடு வளம் பெறும்; மக்கள் நலம் பெறுவர். நீல நெடுங் கடலென காட்சி யளிக்கும் இப்பேரேரியால் இராசேந் திர சோழனின் பெயரும் புகழும் மீண்டும் நிலைநாட்டப்பெறும். அவன் நாட்டிய நீர் மயமான வெற்றித் தூண் (சல மயமான சயத் தம்பம்) மறுபடியும் தமிழகத்தில் நிலைநாட்டப் பெறும். இதுவே, நாம் இராசேந்திர சோழனுக்குச் செய்யும் கைம்மாறு கும் என்பதில் சிறிதும் ஐய மில்லை.

### *கங்கை கொண்ட சோளேச்சுரம்*

கங்கை கொண்ட சோழனை இராசேந்திரன் அமைத்த புதிய நகரம் கங்கை கொண்ட சோழபுரம் எனப் பெயர் பெற்றாற் போல, அவன் கட்டிய புதிய கோயில் 'கங்கை கொண்ட சோளேச்சரம்' என்னும் பெயர் பெற்றது. இக்கற்றளி தஞ்சைப் பெருவுடையார் கோயில் அமைப்பிலேயே அமைக்கப் பெற்ற மாடக் கோயி லாகும். மாடக் கோயி லென்பது மாடிபோல் அமைந்த கோயில். தஞ்சைப் பெருவுடையார் கோயிலைவிட இக் கோயில் தோற்றத்தில் சிறிதே யாயினும், சிற்ப வேலைப்பாடு களில் அதைவிட மேம்பட்டு விளங்குகின்றது. இக்கோயில் தலை நகரின் நடுவண், பெருமிதத் தோற்றத்துடனும், கலையழகுடனும் கம்பீரமாகக் காட்சி யளித்த தென்பதைக் கோவிலின் சூழல் நன் குணர்த்துகின்றது. ஆறு கோபுரங்களைக் கொண்டு விளங்கிய

[1] Ind. Ant. IV. P. 274

இக் கோயில், நகரின் அழகுக்கு அழகு செய்வதாக அமைந் திருந்தது.

பெரும்பாலான கோயில்களின் அடிமட்டம் தரை மட்டத் தோடு ஆரம்பிக்கும். ஆனல், கங்கை கொண்ட சோளேச்சரத் தின் அடிமட்டமோ, தரையிலிருந்து இருபதடி உயரத்தில் ஆரம் பிக்கப் பெற்றுள்ளது. இதனல், இக்கோயில் உறுதியான அடிப் படையில் அமைக்கப் பெற்றுள்ளது என்பது புலனுகும். இதைப் போன்று கோயிலின் உபபீடமும் தரையிலிருந்து ஆறடி உயரத் தில் ஆரம்பமாகிறது. இவ்வுபபீடத்தில் பதுமவரி, குமுதவரி, யாளிவரி, பட்டியல்வரி, மற்றவரி போன்ற ஐந்து வரிகள் பெரிய அளவில் செய்யப்பட்டிருக்கின்றன. இதன்மீது கருப்பக் கிரகத்தின் சுற்றுச் சுவர் உயரமாக எழுப்பப்பட்டுள்ளது. இக் கருப்பக் கிரகத்தின்மீது ஒன்பது மாடங்கள் கொண்ட பெரிய கூருருளைக் கோபுரம் வைக்கப் பெற்றுள்ளது.

**விமானம்**

கோயில் பெரிய மேட்டின்மீது அமைக்கப் பெற்றுள்ளது. கருப்பக் கிரகம் ஏறத்தாழ 240 ஆடி உயரம் இருக்கிறது. மேலே யுள்ள விமானமோ, 174 அடி உயரங் கொண்டது. இது 100 அடிச் சதுரமாக அமைந் துள்ளது. இவ் விமானம் ஒன்பது அடுக்குகளைக் கொண்டது. இவற்றுள் முதல் இரண்டு அடுக்கு கள் ஒன்றன்மீது ஒன்ருகவும், எஞ்சியவை மேலே செல்லச் செல்லச் சிறுத்துச் சரிவாகவும் அமைந் துள்ளன. விமானத்தின் நாற் புறங்களிலும் வாயில்களும், மாடங்களும் பெரியனவாக அமைக்கப் பட்டுள்ளன.

விமானம் முழுவதிலும் அழகும் கவர்ச்சியும் மிக்க பதுமை கள் காட்சி யளிக்கின்றன. தென்னிந்தியாவிலுள்ள கோயில் களில் காணப்படும் விமானங்கள், செங்கல்லும் சுண்ணும்பும் சேர்த்துக் கட்டப் பெற்றவை யாகும். ஆனல், தஞ்சைப் பெரு வுடையார் கோயிலும், கங்கை கொண்ட சோளேச்சுரமும் கரு வறையிலிருந்து சிகரம் வரை கல்லால் அமைக்கப்பட்டவை யாகும். மேலும், இக்கோபுரங்களின் அடிப் பீடம் நாற்புறமும் ஒத்த சம சதுரமாக அமைக்கப்பெற்று, மேலே செல்லச் செல்ல எல்லாப் பக்கமும் குறுகி வந்து, உச்சியில் நான்கு பக்கங்களும் கூடிப்பொருந்துகின்ற இடத்தில், ஒரே கல்லாலான வட்டமான சிகரத்தைக் கொண்டுள்ளது. இச்சிகரத்தின் மீதுதான் ஒற்றைக் கலசம் வைக்கப்பெற்று அழகிய தோற்றத்துடன் காணப் பெற்றது. அக்கலசம் இப்பொழுது காணப்பெற வில்லை. இக்

கோயில் அமைப்பும், விமானமும் தஞ்சைக் கோயிலைப் போல் காட்சி தருகின்றன.

இப்பிரமாண்டமான அடிப் பீடத்தின் அகலத்திற் கேற்ற கோபுரம், எழுப்பப்பட வேண்டுமெனில் அத்துணை யுயர்ந்த கோபுரத்திற்குக் கற்களை மேலெடுத்துச் செல்வ தென்பது கடின மான செயலாகும். எனவே, இக்கோயில் கோபுரம், தஞ்சைப் பெருவுடையார் கோயில் போன்று அதிகமான உயரத்தில் அமைக்கப்பெற வில்லை.

மேலும், இக்கோயிலின் அடிப் பீடம் அமைத்த மாபெரும் சிற்பி இறந்து விட்டதால் அவன் மகன் இதைத் தொடர்ந்து கட்டி முடித்தான் என்று கூறப்படுகிறது. கற்களை மேலே கொண்டு செல்லக் கோயிலைச் சுற்றி மண் மேடிட்டு, அதன் மீது சாரக் கட்டைகளைப் பரப்பிச் சாரம் அமைத்ததாகக் கூறப்படு கிறது. கோயிலி லிருந்து ஏழுகல் தொலைவில் உள்ள பரணைமேடு என்னும் ஊரிலிருந்து பருத்தி மூட்டைகளை யடுக்கிப் பரணை கட்டி விமானக்கல் மேலெடுத்துச் செல்லப்பட்டுப் பொருத்தப் பட்ட தாகக் கூறப்படுகிறது.

இவ்விமானத்தின் சரிவு தஞ்சைப் பெருவுடையார் கோயி லைப் போல் ஒரே நேர்க் கோட்டில் அமைய வில்லை. முதல் மேல்நிலை தவிர, எஞ்சிய மேல் நிலைகள் அனைத்தும் உட்குழிந்து அடங்கி மேலே எழும்புகின்றன. விமானத்தின் உச்சியில் பொருத்தப் பட்டுள்ள மிகப் பெரிய வட்ட வடிவக்கல் 34 அடி குறுக்களவு கொண்டதா யுள்ளது. இஃது ஒரே கல்லால் அமைக் கப் பெற்ற விமான மாகும். உச்சியில் குறுகி வரும் விமானத்தின் நாற்புறங்களும் இதனோடு இணைக்கப்படுகின்றன. இதைத் தாமரை இதழ் போன்று அழகாகச் செதுக்கி யுள்ளனர்.

**சிவலிங்கம்**

இக்கோயிலில் உள்ள சிவலிங்கம் மிகவும் நீண்டுயர்ந்து காணப்படுகிறது. இதனைப் போன்ற பெரிய லிங்கத்தினை நாம் தமிழகத்தில் மட்டுமன்றித் தென்னாட்டில் வேறு எந்தக் கோயில் களிலும் காண இயலாது. இதன் உயரம் பதின்மூன்றடி யாகும். இதன் குறுக்களவு மூன்றடி. இக்கோயிலில் உள்ள இலிங்கமும், தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் உள்ள இலிங்கத்தினைப் போன்று காட்சி தருகின்றது.

இச்சிவலிங்கம் ஒரே கல்லால் ஆனது என்பது குறிப்பிடத் தக்க தொன்றாகும். இது பதின்மூன்று முழச் சுற்றளவுடையது ; இதன் பீடம் நாற்பது முழச் சுற்றளவுடையது; பீடத்தைத் தாங்க எட்டுக் கற்றூண்கள் அமைக்கப்பட்டுள்ளன. இச்சிவலிங்கப் பீடத்திற்கு நாற்பது முழ ஆடை அணியப் படுகின்றது ; சிவ லிங்கத்தின் அங்கவத்திரம் ஒன்பது முழம் கொண்டது.

### சிவலிங்கமும் கோயிலும்

கங்கை கொண்ட சோளேச்சரர் கோயில், இலிங்கத்தைப் போன்று அடியில் சதுர அமைப்புக் கொண்டதாயும் இடையில் எண் பட்டை வடிவாயும் முடிவில் உருண்டையாயும் அமைந்துள்ளது. இவ்விமானத்தை உற்று நோக்குபவர் இலிங்க உருவம் உள்ளதைக் காண்பர். (இக்கருத்தினைத் தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் திரு. ஆர். நாகசாமி அவர்கள், நாங்கள் கங்கை கொண்ட சோளேச்சுரர் கோயிலுக்குச் சென்ற போது விளக்கிக் கூறினார்.) இலிங்கம் மிக உயரத்திலிருப்பதால் சாரம் கட்டி அதன் மீது ஏறி நின்று அபிடேகம் செய்வது வழக்கம். இஃது இப்பொழுது இடி விழுந்து இரண்டாகப் பிளந்துள்ளது என்று கூறப்படுகிறது. இச்சிவலிங்கப் பெருமான்மீது கருவூர்த் தேவர் திருவிசைப்பாப் பாடியுள்ளார். இவர் இராசராசேச்சரத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் மீதும் பாடியுள்ளார். இவர் கங்கை கொண்ட சோழீச்சரத்தான் மீது பாடிய பாக்கள் ஒன்பதாம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளன. இவை கல்லையும் கசிந்துருகச் செய்யுமாறு பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட இயற்றப்பட்ட பாடல்களாகும். இவர் இயற்றியுள்ள பதினொரு பாக்களையும் படித்துச் சுவைக்கும் போது தான், கருவூர்த்தேவர் கங்கை கொண்ட சோளேச்சரத்தான்மீது கொண்ட கரைகாணாத காதலை உணர முடியும். அப்பாக்களை ஈண்டு காண்போம்.

1. அன்னமாய் விசும்பு பறந்தயன் றேட
அங்ஙனே பெரியநீ சிறிய
என்னையாள் விரும்பி யென்மனம் புகுந்த
எளிமையை யென்றும்நான் மறக்கேன்;
முன்னமா லறியா வொருவனா மிருவா!
முக்கணா! நாற்பெருந் தடந்தோள்
கன்னலே! தேனே! யமுதமே! கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே!

2. உண்ணெகிழ்ந் துடல நெக்குமுக் கண்ணு!
ஓலமென் றேலமிட் டொருநாள்
மண்ணினின் றலறேன்; வழிமொழி மாலை
மழலையஞ் சிலம்படி முடிமேல்
பண்ணிநின் றுருகேன்; பணிசெயே னெனினும்
பாவியேன் ஆவியுள் புகுந்தென்
கண்ணினின் றகலா னென்கொலோ? கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே !

3. அற்புதத் தெய்வ மிதனின்மற் றுண்டோ?
அன்பொடு தன்னையஞ் செழுத்தின்
சொற்பதத் துள்வைத் துள்ளமள் ளூறும்
தொண்டருக் கெண்டிசைக் கனகம்
பற்பதக் குவையும் பைம்பொன்மா ளிகையும்
பவளவா யவர்பணை முலையும்
கற்பகப் பொழிலு முழுதுமாங் கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே!

4. ஐயபொட் டிட்ட வழகுவா ணுதலும்
அழகிய விழியும்வெண் ணீறும்
சைவம்விட் டிட்ட சடைகளுஞ் சடைமேல்
தரங்கமுஞ் சதங்கையுஞ் சிலம்பும்
மொய்கொளெண் டிக்குங் கண்டநின் றொண்டர்
முகமலர்ந் திருகணீ ரரும்பக்
கைகண்மொட் டிக்கு மென்காலோ? கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே!

5. சுருதிவா னவனும்; துருநெடு மாலாம்;
சுந்தர விசும்பின்இந் திரனும்;
பருதிவா னவனும்; படர்சடை முக்கட்
பகவனும்; அகவுயிர்க் கமுதாம்;
எருதுவா கனனும்; எயில்கள்மூன் றெரித்த
ஏறுசே வகனுமாம்; பின்னும்
கருதுவார் கருதும் உருவமாம்; கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே!

6. அண்டமோ ரணுவாம் பெருமைகொண் டணுவோர்
அண்டமாஞ் சிறுமைகொண் டடியேன்
உண்டவூ னுனக்காம் வகையென துள்ளம்
உள்கலந் தெழுபரஞ் சோதி!

கொண்டநாண் பாம்பாம் பெருவரை வில்லில்
குறுகலர் புரங்கண்மூன் றெரித்த
கண்டனே! நீல கண்டனே! கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே!

7. மோதலைப் பட்ட கடல்வயி றுதித்த
முழுமணித் திரளமு தாங்கே
தாய்தலைப் பட்டங் குருகியொன் றுய
தன்மையி லென்னை முன் னீன்ற
நீதலைப் பட்டா லியானுமவ் வகையே;
நிசிசர ரிருவரோ டொருவர்
காதலிற் பட்ட கருணையாய்! கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே!

8. தத்தையங் கனையார் தங்கண்மேல் வைத்த
தயாவைநூ றுயிரங் கூறிட்
டத்திலங் கொருகூ றுன்கண்வைத் தவருக்
கமருல களிக்குநின் பெருமை
பித்தனென் றொருகால் பேசுவ ரேனும்
பிழைத்தவை பொறுத்தருள் செய்யும்
கைத்தலம் அடியேன் சென்னிவைத்த கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே!

9. பண்ணிய தழல்காய் பாலளா நீர்போல்
பாவமுன் பறைந்துபா லனைய
புண்ணியம் பின்சென் றறிவினுக் கறியப்
புகுந்ததோர் யோகினிற் பொலிந்து
நுண்ணியை யெனினு நம்ப! நின் பெருமை
நுன்னிடை யொடுங்கநீ வந்தென்
கண்ணுனுள் மணியிற் கலந்தனை; கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே!

10. அங்கைகொண் டமரர் மலர்மழை பொழிய
அடிச்சிலம் பலம்பவந் தொருநாள்
உங்கைகொண் டடியேன் சென்னிவைத் தென்னை
உய்யக்கொண் டருளினை மருங்கில்
கொங்கைகொண் டனுங்குங் கொடியிடை காணில்
கொடியளென் றவிர்சடை முடிமேல்
கங்கைகொண் டிருந்த கடவுளே! கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே!

11. மங்கையோ டிருந்தே யோகுசெய் வானை
வளரிளந் திங்களை முடிமேல்
கங்கையோ டணியுங் கடவுளைக் கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானை
அங்கையோ டேந்திப் பலிதிரி கருவூர்
அறைந்தசொன் மாலையா லாழிச்
செங்கையோ டுலகி லரசுவீற் றிருந்து
திளைப்பதுஞ் சிவனருட் கடலே.

பொதுவாகக் கோயில்கள் கிழக்கு அல்லது மேற்கு நோக்கி யிருக்கும். சில கோயில்கள் தெற்கு அல்லது வடக்கு நோக்கியும் அரிதாகக் காணப்படுவ துண்டு. பொதுவாகத் தமிழகத்தில் கிழக்கு அல்லது மேற்கு நோக்கியே கோயில்களை அமைக்கும் வழக்கம் பின்பற்றப்பட்டு வருகிறது. கங்கை கொண்ட சோளேச் சுரம் கிழக்கு நோக்கிய வண்ணம் அமைந்துள்ளது. இங்கே கோயில் கொண்டுள்ள இறைவன் பெருவுடையார் பிரகதீசு வரர் என்று பெயர் பெறுகிறார். தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ள இறைவன் பெயரும் பெருவுடையார் என்பது ஈண்டு நினைவிற் கொள்ளத் தக்க தாகும். கருப்ப கிரகமும் அதற்கு முன் னால் அர்த்த மண்டபமும் உள்ளன. கருப்ப கிரகத்துக்கும் அர்த்த மண்டபத்திற்கும் இடையில் அணுக்கன் வாயில்கள் தெற் கிலும், வடக்கிலும் உள்ளன. சிற்ப நூல் வல்லார் கருப்பக் கிரகத்தை அக நாழிகை யென்றும், அர்த்த மண்டபத்தை இடை நாழிகை யென்றும் குறிப்பிடுகின்றனர். இதன் தெற்கு வாயிலில் கசலக்குமி சிற்பம் மேற்கு நோக்கித் தாமரை மலரில் (பதும பீடத்தில்) அழகாக அமைக்கப்பட்டுள்ளது. கசலக்குமி இரண்டு கைகளுடன் கமலம் ஏந்திய வண்ணம் அமர்ந்துள்ளாள். தலையின் இருபுறமும் யானைகள் குடங்களைக் கொண்டு அபிடேகம் செய்வது போல் அமைக்கப் பட்டுள்ளன.

### இன்றுள்ள நிலை

கங்கை கொண்ட சோளேச்சுரத்தின் இன்றைய நிலையைக் காண்பவர் இதன் பண்டைச் சிறப்பை உய்த்துணர்வர்.

### திருமதில்

திருமதில், உயர்ந்தும் அகன்றும் பகைவரைத் தாக்கும் நிலை யிலும் தஞ்சைக் கோயிலைப் போலவே யமைந்துள்ளது. அறு நூறடி நீளமும், நானூற்றைம்பது அடி அகலமும், நான்கடி கன

மும் கொண்ட இம்மதில் முழுவதும் கற்களாலேயே அமைக்கப் பட்டுள்ளது. இத்திருமதிலை யடுத்து இரண்டு அடுக்குத் திருச் சுற்று மாளிகை இருந்தது. ஆனால், அதன் ஒரு பகுதியை மட் டுமே இன்று நாம் காண முடிகிறது.

*திருச்சுற்று*

திருச்சுற்று மாளிகை சிறந்த முறையில் இரண்டடுக்கு மாட வரிசைகளுடன் அமைக்கப் பட்டிருந்தது; பின்னர், காலத்தால் சிதைந்தும் இடிக்கப்பட்டும் நிலைகுலைந்து விட்டது. இப்பொழு துள்ள பிரகாரமும் சுற்றுச் சுவரும் 584 அடி நீளமும் முந்நூற்று எழுபத்திரண்டு அடி அகலமும் கொண்டுளது. திருச்சுற்றில் அழிந்த நிலையில் காணப்பெறும் சந்திர சேகரர் கோயிலும், மற்றும் பல கோயில்களும் காணப் பெறுகின்றன. சண்டீசர் சிறு கோயில் தவிர, மற்றவை பிற்காலத்தில் அமைக்கப்பட்டவை என்றும், அம்மன் கோயிலும் பிற்காலத்தில் உள்ளே கொண்டு வந்தமைக்கப் பெற்றது என்றும் கூறுகின்றனர்.

கோயிலின் வட பிரகாரத்தில் ஒரு கிணறு உள்ளது. வாணு சூரனின் பத்தியைக் கண்டு பெரிதும் மகிழ்ந்த சிவபெருமான் கங்கையை அங்கே கொண்டு வந்ததாக ஐதீகம். மதிலின் முன் புற மூலைகள் இரண்டிலும் பின்புற மதிலின் நடுப்பகுதியிலும் அரைவட்ட வடிவமான கூடம் ஒன்று காணப்படுகிறது. இது காவற் கூடமாக இருந்திருக்க வேண்டுமென்று அறிஞர் கருது கின்றனர்.

*நந்தி*

உட்கோயிலுக் கெதிரே பெரிய நந்தி ஒன்று படுத்துக் கொண்டிருக்கும் நிலையில் அமைக்கப்பட்டுள்ளது. இது தஞ்சைப் பெரிய கோயிலில் அமைந்துள்ளதுபோல் கல்லால் அமைக்கப் படாமல், முற்றும் செங்கற்களால் அமைக்கப்பட்டுள்ளது. தஞ் சைப் பெரிய கோயிலில் உள்ள நந்தியின் உயரம் பன்னிரண்டு அடி; நீளம் ஒன்பதரையடி; அகலம் எட்டரையடி என்ப தையும் ஈண்டு நாம் நினைவிற் கொண்டால், ஏறத்தாழ இரண்டு நந்திகளும் தோற்றத்தில் ஒன்றாகவே காட்சி யளிப்பதை அறிய லாம்.

*சிங்க முகக் கிணறு*

சில ஆலயங்களில் தீர்த்தக் கிணறுகளுக்குமேல் சிங்கத்தைப் போன்ற உருவம் அமைத்திருப்ப துண்டு. (அந்தத் தீர்த்தங்

களுக்குச் சிங்க தீர்த்தம் என்று பெயர். அந்த உருவத்திற்குக் கீழ்ச் சுரங்கம் போன்ற படிகள் இருக்கும். அவைகளின் வழியாக இறங்கித் தீர்த்தம் எடுப்ப துண்டு) இவ்விதமான சுரங்க வழிக் கிணறுகள் பழைய காலத்து அரண்மனைகளில் இருந்தன. அம்பி என்ற விசய நகரத் தலைநகரில் இப்படிப்பட்ட கிணறுகள் பல காணப்பட்டன. கங்கை நதியிலிருந்து கொண்டு வரப்பட்ட தூய நீரின் ஒரு பகுதியினை இக்கிணற்றில் ஊற்றி இதை இராசேந்திரன் தூய்மை செய்தான் என்பது ஐதிகம்.

இந்நந்திக்கு வலப்புறம் நேரெதிரே இருபத்தேழு அடி குறுக்களவுள்ள சிங்கமுகக் கிணறு ஒன்று வியக்கத் தக்க அளவில் அமைந்துள்ளது; படிக்கட்டு வரிசைக்குமேல் செங்கற்களாலான சிங்கம் காட்சியளிக்கிறது. இப்படிக்கட்டுகள் டகர வரிசையில் அமைக்கப்பட்டுள்ளன. உட்கார்ந்திருக்கின்ற நிலையிலுள்ள சிங்கத்தின் வயிற்றில் உள்ள வாயில் வழியே படிக்கட்டுகள் செல்கின்றன. இவற்றின் வழியே இறங்கிச் சென்றால் இருபது படிக்கட்டுகள் தாண்டிய பின் நீரைக் காணலாம். ஏறத்தாழ முப்பது படிக்கட்டுகள் நீருள் உள்ளனவாம். எனவே, இக்கிணற்றில் கருங்கற்களாலான ஐம்பது படிக்கட்டுகளைக் காணலாம். இவ்வியக்கத் தகு கிணற்றை நேரில் காணும் பொழுதுதான், தமிழர்களின் கலையுணர்ச்சியை, அழகுணர்ச்சியை, நுண்ணிய வேலைப்பாட்டினை உளமாரப் பாராட்டுதல் கூடும். இதனால், தமிழர்கள் எங்கும் எதிலும் அழகைக் கண்டனர் எனலாம். இது பிற்காலத்தில் உடையார் பாளையம் சமீன்தார் ஒருவரால் செய்யப்பட்ட கைங்கரியம் எனக் கூறுவர்.

தமிழகத்தில் கிணறுகளையும் அழகுறப் பல பாணிகளில் அமைக்கும் வழக்கம் நிலவி வந்தது. பல்லவர் காலத்துத்திருவெள்ளரை கோயிலில் அமைக்கப்பட்டுள்ள 'சுவஸ்திகா' அமைப்பிலுள்ள கிணறும், கங்கை கொண்ட சோழபுரத்துச் சிங்கமுகக் கிணறும் குறிப்பிடத் தக்கவைகளாகும்.

கங்கை கொண்ட சோழபுரத்தின் கண்ணுள்ள சிங்க முகக் கிணறும் மாமல்லபுரத்தின்கண் கடற்கரைக் கோயிலுக் கருகிலுள்ள சிங்கமும் பார்வைக்கு ஒரே மாதிரியாகத் தோற்ற மளிக்கின்றன. கங்கை கொண்ட சோழபுரத்தில் சிங்கத்திற்குள் கிணறு உள்ளது. மாமல்ல புரத்திலோ, சிங்கத்தினுள் கடவுள் படிமம் வைக்கப்பட்டுள்ளது. ஆனால், இவை காட்சிக்கு ஒன்றே போல் தோன்றுகின்றன.

### உட்கோயில்

உட்கோயிலின் நீளம் முந்நூற்று நாற்பதடி; அகலம் நூறடி; இதனுள், அமைந்துள்ள மகா மண்டபம் நூற்றெழுபத்தைந்து அடி நீளமும் தொண்ணூற்றைந்து அடி அகலமும் கொண்டது. அர்த்த மண்டபம் இறை அறைக்கும் மகா மண்டபத்திற்கும் இடையில் அமைந்துள்ளது. அர்த்த மண்டபத்தின் தெற்கிலும் வடக்கிலும் படிகளுடனுகிய அழகிய திருவாயில்கள் காணப்படுகின்றன. கோயிலை அணுகும் திருவாயில் கிழக்கே உள்ளது. மகா மண்டபத்தில் எட்டுப் பகுதிகளாக நூற்று நாற்பது கற்றூண்கள் அணி அணியாக நிறுத்தப்பட்டுள்ளன. நடுப்பகுதி பதினெட்டு அடி உயரங் கொண்டதாய் இருபக்கமும் பதினறு அடி உயரங் கொண்டதாய் மேலே கல் கொண்டு மூடிய மண்டப மாகும். கோயிலின் அடிப்பாகம் நூறு அடி சதுர அளவுடைய தாகும். இதன் மீதுள்ள விமானம் நூற்று எண்பத்தாறு அடி உயர முள்ளது.

### அர்த்த மண்டபம்

அர்த்த மண்டபம், இடை நாழிகை யெனச் சிற்ப நூல் வல்லுநரால் அழைக்கப்பெறுகிறது. இஃது இரு வரிசைகளாலானபெரிய சதுரக் கற்றூண்களாலானது. இது சிற்பக் கலையின் இருப்பிடமாகக் காணப்படுவதால், இதை ஒரு சிற்பக் கூடம் என்று கூறுதல் மிகையாகாது. இம்மண்டபத் தூண்களுக்கு மேல் நடனச் சிலைகள் பல செதுக்கப்பட்டுள்ளன. அவற்றில் பல வகையான நடன நிலைகள் குறிக்கப்பட்டுள்ளன. இலிங்கத்தை நோக்கியுள்ள எதிர்சுவர்மீது ஆறு வரிசைகளில் மிக நுண்ணிய வேலைப்பாடமைந்த சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் சண்டீசப்பதம், தடாதகை திருமணம், பார்த்தனும் பரமனும் போர் புரிதல், மார்க்கண்டன் ஆகியோரின் வரலாற்றை விளக்கும் சிற்பங்கள் குறிப்பிடத் தக்கவை யாகும். காஞ்சி வைகுந்தப் பெருமாள் கோயிற் சுவரில் அமைக்கப்பட்டுள்ள சிற்பங்களும் இவைகளுடன் ஒப்பு நோக்குதற்குரியனவாகும். பல்லவர் காலத்தில் தொடங்கப் பெற்ற சிற்பக்கலை இராசேந்திரன் காலத்து மலர்ந்து, மணம் பெற்றுச் சிற்பக் கலையின் முடி மணியாய்த் திகழ்ந்ததெனக் கூறலாம். அர்த்த மண்டபத்தின் இருபுறமும் படிகள் இருபதடி உயரத்திற்குப் பக்கவாட்டில் மேலேறிச் செல்கின்றன. படியைக் கடந்து ஏறியதும் வாயிற் காவலர் சிலைகள் இரண்டு காணப்படுகின்றன.

### மகா மண்டபம்

பெயருக்கேற்ப, இம்மண்டபம் பெரிதாக அமைந்திருந்தது. பிற்காலத்தில் ஆயிரக்கால் மண்டபங்கள் எழுப்பப் பெறுவதற்கு இதுவே அடிப் படையாக அமைந்தது எனலாம். இங்குத் தமிழ் ஞான சம்பந்தரின் கற்சிலை மிக்க எழிலுடன் செதுக்கப்பட்டுள் ளது. துர்க்கையம்மன் சிலையும் வியக்கத்தகு வேலைப்பாட்டுடன் அமைக்கப் பட்டுள்ளது. துர்க்கை, கொற்றவைத் தெய்வம் என்று அழைக்கப் பெறுகிறது.கங்கை கொண்ட சோழ புரத்துச் சிற்பங்களுள் நாலடி சதுரங் கொண்ட ஒரே கல்லில் அமைக்கப் பட்ட நவக்கிரகங்கள் மிகச் சிறந்தவை. இவ்வமைப்பு வேறெங் கும் காணப்படாத புதுமை வாய்ந்தது என்பது குறிப்பிடத் தக்க தாகும். சூரிய பீடம் தாமரை இதழ்களோடு கூடிய சக்கர வடி வில் அமைந்துள்ளது. சூரியனைச் சுற்றி மற்ற எட்டுக் கிரகங் களும் எட்டுத் திக்கினை நோக்கிய வண்ணம் இருக்கின்றன. நடு வண் பரிதிக்கு (சூரியன்) முன்னால் ஏழு புரவிகள் பூட்டப் பெற்ற இரதம், இழுத்துச் செல்லப்படும் நிலையில் அமைக்கப்பட்டுள் ளது. அருணன் தேரோட்டியாக உள்ளான். இவை யனைத்தும் கண்கொள்ளாக் காட்சி யாகும். இச்சதுரச் சிற்பம் இப்பொழுது அர்த்த மண்டபத்தில் இருக்கிறது. மகா மண்டபத்திலுள்ள இரு அறைகளிலும் விமானத்தின் கலசமும் பல சிலைப் படிமங்களும் திருமேனிகளும் இருக்கின்றன.

### வாயிற் காவலர்

கங்கை கொண்ட சோளேச்சரத்தில் கம்பீரத் தோற்ற முள்ள பன்னிரண்டு வாயிற் காவலர் சிலைகள் காணப்பெறு கின்றன. இவை ஏறத்தாழப் பன்னிரண்டு அடி உயரங் கொண்டவையாக உள்ளன. வாயிற் காவலரின் முகம் பயங்கரத் தோற்றத்தைக் கொண்டுளது. இவற்றுள் முதல் இரு சிலைகள் கோபுரச் சிதைவில் காணப் பெறுகின்றன. வாயிற் காவலர் சிலை கள் ஒவ்வொரு வாயிலிலும் இரு மருங்கிலும் நிறுத்தப்பட்டிருக் கும். எனவே, கோயில் வாயில், அர்த்த மண்டப வாயில், உள் ளறை வாயில், வடக்கு வாயில், தெற்கு வாயில் ஆகிய ஐந்து வாயில்களிலும், வாயிலுக்கு இரு சிலைகளாக நிறுத்தப்பட்டுள் ளன. இவைகள் காண்போரின் மனத்தில் மகிழ்ச்சியை ஏற்படுத்து கின்றன; குறிப்பாகச் சிறுவர்களின் நகைச்சுவைக்கு இடமாக அமைந்துள்ளன.

**சிற்பங்கள்**

விமானத்திலும், கோயிலின் தூண்களிலும் செதுக்கப் பட்டுள்ள சிற்பங்கள் பேரழகு வாய்ந்தவையாக அமைந்துள்ளன. தென் மேற்கில் சபாபதி சிற்பமும், தெற்கில் விநாயகர் சிற்பமும், வடக்கில் திருவாயிலருகே சண்டேசுவரருக்குச் சண்டேசப் பதம் வழங்கும் காட்சியை விளக்கும் சிற்பமும், வியத்தகு வேலைப்பாடு உடையன. இவற்றுக் கணித்தாக அமைந்துள்ள இலக்குமி, கலைவாணி போன்ற பேரழகு மிக்க சிற்பங்களும் நம் கண்ணையும் கருத்தையும் ஈர்ப்பன வாகும். இவை யனைத்தும் உயிர் ஓவியங்களாகக் காட்சி யளிக்கின்றன. இவைகளைக் காணும் பொழுது 'தென்னிந்தியாவில் உள்ள சிற்பங்களினும், சாவகத்தில் உள்ள சிற்பங்களினும் இச்சிற்பங்கள் சிறந்துள்ளன, எழில் மிக்குள்ளன' என்று அறிஞர்கள் குறிப்பிடுவது நினைவில் வருகிறது.

சுற்றுப் பிரகாரத்தில் விமானத்துக்குப் பரபாகமாகத் (எதிரிடையாக) தெற்கிலும் வடக்கிலும் இரு சிறிய கைலாச விமானங்கள் உள்ளன. இவ்விரண்டனுள் ஒன்றில் பிருகந்த நாயகியின் சந்நிதி உள்ளது. அம்பிகை பேரழகுடன் விளங்குகின்ற காட்சி, பக்தர்களின் நெஞ்சில் பத்திக் கனலை எழுப்பக் கூடியதாக அமைந்துள்ளமை குறிப்பிடத் தக்க தாகும். தேவியின் உருவம் ஏறத்தாழ எட்டடி உயரத்தில் மென்குழைவுடன் அமைக்கப் பெற்றுள்ளது. தேவியின் இரு கரங்கள் பாசாங்குசங்கள்[1] ஏந்தி, இரு கைகள் அடைக்கலம் அடைந்தவர்க்கு அருள் வழங்குகின்றன. சாந்தி தவழும் அந்த முகத்தில் எல்லையற்ற கருணையும் கம்பீரமும் களிநடம் புரிகின்றன. இவ்வருள் வடிவத்தைப் போன்றே கோயிலில் மகிடாசுரமர்த்தினியின் (உக்கிர ரூபம்) கொடுமையான காட்சியும் நம்மைக் கவர்கிறது. காளியின் சிற்பம் நம்மை வியப்பில் ஆழ்த்தி நடுங்க வைக்கிறது. அசுரனைக் காலடியில் வைத்து மிதித்த வண்ணம் காட்சி தரும் காளி, இருபது திருக்கரங்களுடன் உக்கிர கோலத்தில் சீறும் அழகுடன் விளங்குகிறாள். அருகில் உள்ள சிங்கம் அசுரனின் செங்குருதியை உறிஞ்சிக் குடிப்பது போல் செதுக்கப்பட்டுள்ளது. காளி கொடுமையே உருவானவள். ஆதலினால், இச்சிற்பமும் கொடிய காட்சியினை நல்குகின்றது மேற்கூறிய சிறந்த சிற்பங்களைப் போன்றே கணங்களும் (அப்சர) தேவ மகளிரும், இராக்கதக் கூட்டங்களுமாக எவ்விடத்தும் அமைந்துள்ளதை நோக்குமிடத்து, இக்

[1] பாசம்-கயிறு. அங்குச மென்பது யானைப் பாகனது கருவி. யானைப் பாகனது கருவியைப் போன்ற கருவி.

கோயிலின் கம்பீரமான தோற்றத்திற்குப் பெருந்துணை புரிவது இனிது விளங்கும்.

இந்தியச் சிற்ப வரலாற்றில் கங்கை கொண்ட சோழபுரச் சிற்பங்கள் தமக்கென ஒரு தனியிடத்தைப் பெற்றுள்ளன. கலையழகும், புதுப் பொலிவும், மென் குழைவும், கவர்ச்சியும் கொண்ட சிற்பக் கூடமாகவே கங்கை கொண்ட சோளேச்சுரம் காணப்படுகிறது. பல்லாண்டுகட்குமுன் வடிக்கப்பெற்ற இச்சிற்பங்கள், இன்றுதான் செதுக்கப்பட்டவை என்று எண்ணுமாறு பேரழகுடனும், மிக நுண்ணிய சிற்ப வேலைப்பாட்டுடனும் விளங்குகின்றன. மாமல்லன் மல்லைக் கடற் கரையில் தொடங்கி வைத்த சீர்மிகு சிற்பக் கலையின் மலர்ச்சியை, உயர்ச்சியை, முழுமையைக் கங்கை கொண்ட சோளேச்சுரத்தில், சிறப்புற்று மிளிர்வதைப் பரக்கக் காணலாம். இற்றை நாள் வரை இவற்றைப் போன்று பேரெழில் வாய்ந்த சிற்பங்கள் இப்பூவுலகின் எப்பகுதியிலும் உருவாக்கப் படவில்லை என்பது ஆராய்ச்சியாளரின் துணிபு. இத்துணைச் சிறப்பு மிக்க சிற்பங்களை உருவாக்கிய சிற்பிகள் எத்துணைக் கலை நுணுக்கத் தேர்ச்சி பெற்றிருந்தனர் என்பது வியப்பிற் குரியது.

இத்துணைக் கலை நுணுக்கம் வாய்ந்த சிற்பங்களுள் ஒன்றைப் பற்றி நாம் இங்கு விரிவாகக் காண்போம். சண்டேசுவரர்க்கு அருள் புரியும் மூர்த்தியின் கற்சிலை சிற்பக் கலைக்குச் சிகரம் போலமைந்துள்ளது. இது கருவறை முக மண்டபத்தின் வடக்குத் திருவாயிலில் கிழக்கு நோக்கிய வண்ணம் அமைந்துள்ளது. இச்சிற்பம் சண்டீசப் பதம் தரும் காட்சியைத் தத்ரூபமாக விளக்குகிறது. ஒரு சிற்பத்தில், பசு இலிங்கத்தின் மீது பால் பொழிந்து அபிடேகம் செய்கிறது; மரத்தின் மீதமர்ந்து கொண்டு எச்ச தத்தன் இதனைப் பார்க்கின்றான். சண்டேசுவரர் தம் தந்தையின் காலை வெட்டுவது போன்ற நிலையில் மற்றொரு சிற்பமும் செதுக்கப்பட்டுள்ளது. அடுத்து ஒரு பெரிய சிற்பம் நடுவண் செதுக்கப்பட்டுள்ளது.

இச்சிற்பத்தில் தென்னாடுடைய சிவபெருமான் உமாதேவியாருடன் அமர்ந்துள்ளார். சிவபெருமான் தமது கொன்றை மாலையைச் சண்டீசர் முடிமீது சூட்டி அவருக்குத் தம் கோயில் மேலாளர் பதவியை வழங்குகிறார். அருகில் அமர்ந்துள்ள உமா தேவி ஆசீர்வாதம் செய்கிறாள். மேலே சூரிய சந்திரரும் தேவர்களும் காட்சி தருகின்றனர். இவை கோயில் நடுமண்டபச் சுவரில் நான்கு வரிசையில் செதுக்கப்பட்டுள்ளன. இவை கலை

நுணுக்கச் சிற்ப வேலைப்பாடுகளில் சிறந்து விளங்குகின்றன. இச் சிற்பங்களைக் கண்டு களிப்பவர்கள், சண்டேசப்பத வரலாறு பற்றி அறிந்து கொள்ள விழைவது இயல்பே. ஏனெனில், இக்கதை யினை அறிந்து கொண்டால்தான் இச்சிற்பத்தினை முழுவதும் சுவைக்க முடியும்.

சேய்ஞலூர் என்பது சோணாட்டிலுள்ள ஒரு சிற்றூர். அங்கு மறையவர் வாழ்ந்து வந்தனர். அவ்வூரில் விசார சருமன் என்ற சிறுவன் சிவ பெருமான்மீது எல்லையற்ற அன்பு பூண்டிருந்தான். இவன் தந்தையின் பெயர் எச்ச தத்தன். இடையனின் கொடு மையினின்றும் பசுக்களைக் காத்தற் பொருட்டு விசார சருமன் அன்றுடம் பசுக்களை ஓட்டிக் கொண்டு போய்ப் புல் வெளியில் மேய்த்து வருவான். இவ்விதம் பசுக்களை மேய்த்துக் கொண்டு வாழ்ந்த சிறுவன், சிவன் மீது கொண்டுள்ள ஈடுபாட்டால்,பசுக் கள் மேய்ந்து கொண்டிருக்கும் போது, மணலில் அமர்ந்து, மணலால் சிவலிங்கம் அமைத்து, அதனை மெய்ம் மறந்து வழிபடு வது வழக்கம். அதைக் கண்ணுற்ற பசுக்களும் மண்ணாலான சிவ லிங்கத்தின்மீது பால் சொரிந்து தங்கள் பத்தியை வெளிக் காட்டின.இதனால், பசுக்கள் வீடு சென்றதும் குறைந்த அளவில் தான் பால் கறந்தன. அதைக் கண்ட பசுக்களுக்குரிய மறைய வர் எச்ச தத்தனிடம் விசாரரைப் பற்றி முறையிட்டனர்.

இதைக் கேள்வியுற்ற எச்ச தத்தர் தம் மகன் மாடு மேய்க்கு மிடத்திற்குச் சென்று, மறைவி லமர்ந்து கொண்டு நிகழ்ச்சிகளைக் கவனித்து வந்தார். மகன் சிவலிங்கம் சமைத்த தையும், பசுக்கள் பால் சொரிந்ததையும் கண்ட எச்சதத்தர் சீற்றம் மிகக் கொண்டார்; விரைந்து சென்று மகனைக் கோல் கொண்டு புடைத்தார்; கடு மொழிகளையும், சுடு மொழிகளையும் புகன்றார்; சின மிகுதியினால் மகன் வைத்திருந்த திருமஞ்சனக் குடத்தையும் காலால் உதைத்து உடைத்தார். அதுவரை சிவ பூசையில் ஆழ்ந்திருந்த விசார சருமர் கண் விழித்தார். தந்தை யின் செயல் கண்டு, சினங் கொண்டு, தந்தையின் கால் மீது ஒரு சிறு கோலை எறிந்தார். அக்கோல் மழுவாயுதமாக மாறித் தந்தையாரின் காலை வெட்டியது. அதையும் பொருட் படுத்தாது விசார சருமர் தொடர்ந்து சிவ பூசையில் ஆழ்ந்தார்.

இச்சிறுவனது பத்தியின் சிறப்பைக் கண்ட சிவபெருமான், உமா தேவியாருடன் விசார சருமருக்குக் காட்சி தந்தார். விசார சருமரும் இறைவனது திருவடிகளில் வீழ்ந்து வணங்கிக் காத லால் கசிந்துருகிக் கண்ணீர் மல்கினார். சிவ பெருமான் அச்சிறு

வனை அன்புடன் நோக்கி 'நம் பொருட்டால் ஈன்ற தாதையின் காலை ஒடித்தாய்; இனி நாமே உனக்குத் தாதையாவோம்,' என்று கூறியணைத்துக் கொண்டு கருணையால் உச்சி மோந்தார்.

'சிறிய பெருந் தோன்றலார்' எனச் சேக்கிழார் சிறப்பித்துப் பாடுதலை இவண் நோக்குதல் நலமாகும்.

சிவன் கைப்பட்டதால் சிறுவரும் சிவமய மானூர்; தேவர் மலர் மாரி பொழிந்தனர். சிவ பெருமான் அச் சிறுவரைத் தம் தொண்டர்களுக் கெல்லாம் தலைவராக்கி 'நாம் உண்ட கலமும், உடுப்பனவும், சூடுவனவும் உனக்காகச் சண்டேசனுமாம் பதம் தந்தோம்' என்று கூறித் தமது கொன்றை மாலையினை அவர் முடி மீது சூட்டினூர். இவ்விதமாய் விசார சருமர், சண்டீசர் என்னும் பெயர் பெற்றூர். இந்நிகழ்ச்சிகளைச் சேக்கிழார் பெருமான் 'பெரிய புராணத்தில்' விரிவாக விளக்கிச் செல்கிறூர். பெரிய புராணத்துள் வரும் இந் நிகழ்ச்சிகளைக் கூறும் கீழ்க் காணும் செய்யுள்களைப் படித்துணர்ந்து இச்சிற்பத்தைப் பார்வையிட்டால் இச்சிற்பத்தின் அருமையும் பெருமையும் புலப்படும்.

'செங்கண் விடையார் திருமலர்க்கை
தீண்டப்பெற்ற சிறுவனூர்
அங்கண் மாயை யாக்கையின்மேல்
அளவின் றுயர்ந்த சிவமயமாய்ப்
பொங்கி எழுந்த திருவருளின்
மூழ்கிப் பூமேல் அயன்முதலாம்
துங்க அமரர் துதிசெய்யச்
சூழ்ந்த ஒளியில் தோன்றினூர்.'

அண்டர் பிரானுந் தொண்டர்தமக்
கதிப னுக்கி, அனைத்தும்நாம்
உண்ட கலமும் உடுப்பனவும்
சூடு வனவும் உனக்காகச்
சண்டீ சனுமாம் பதந்தந்தோம்
என்றங் கவர்பொற் றடமுடிக்குத்
துண்ட மதிசேர் சடைக்கொன்றை
மாலை வாங்கிச் சூட்டினூர்.'

மேற்கண்ட பாக்களினுல் சண்டீசப் பதம் பெற்ற வரலாறு படம் பிடித்துக் காட்டப் பெற்றுள்ளது. இப்படத்தினைச் சிற்பமாகச் செதுக்கியுள்ள சிற்பியின் அருஞ்செயல் போற்றுதற்

குரியது. சொற்சித்திரமும் கற்சித்திரமும் விசித்திரமாக அமைந்துள்ளன. சொல் வன்மையும், கை வன்மையும் ஒன்றுடன் ஒன்று போட்டிப் போட்டுக் கொண்டு சண்டீசர் வரலாற்றை விளக்குகின்றன.

சண்டேசுவரர்க்கு அருள் புரியும் மூர்த்தியின் சிலை, காண்போரின் கண்ணையும் கருத்தையும் கவர்ந்து, நீங்காத நினைவினை மனத்தகத்தே ஏற்படுத்துகிறது. இச்சிற்பச் சிறப்பைச் சொற்களினால் போற்றுவது இயலாது; இதனை நேரிற் கண்டு களித்தால் தான் இதனது வியக்கத் தக்க சிற்பக் கலையை முழுமையாக உணர்ந்து போற்ற முடியும்.

தொல்பொருள் ஆய்வாளர் திரு. நடன காசிநாதன் அவர்கள் 'தஞ்சைப் பெருவுடையார் கோவிலில் காண முடியாத சிலைக் கலைப் படைப்புகளைக் கங்கை கொண்ட சோழ புரத்துக் கோவிலில் காணலாம். கோவிலின் வடக்குப் பக்க நுழை வாயிலில் இரு பக்கங்களிலும் உள்ள கலைச்செல்வி, சண்டேசுவர அனுக்கிரக மூர்த்தி ஆகிய சிற்பங்கள் உலகப் புகழ் பெற்ற சிற்பங்களாகும்' என்று தமது நூலில்[1] போற்றிப் புகழ்ந்திருப்பதாலும் சிற்பச் சிறப்பினை நன்கறியலாம்.

ஆராய்ச்சியறிஞர் சிலர் சண்டேசுரரது உருவம் கம்பீரமான தோற்றத்தில் காணப்படுதலின், சிவனது அருளினைப் பெறும் சண்டேசுரர் உருவத்தினைச் சமைத்த சிற்பி மாமன்னன் இராசேந்திரனை மனத்திற் கொண்டு இராசேந்திரனையே ஆங்கு வடித்து விட்டான் எனக் கருதுகின்றனர். இச்சிற்பத்தினைக் காணும் போது இராசேந்திரனே சிவனிடம் அருள் பெறுவது போன்ற உணர்வு தம்மனத்தில் ஏற்படுகிறது என்று அவர்கள் கருதுகின்றனர். இஃது ஆய்வுக்குரிய ஒன்று.

'இக்கோவிலின் சுவர்மாடத்தில் காட்சி தரும் முருகப் பெருமானின் உருவமும், கோவிலினுள் உற்சவ மூர்த்தியாக உள்ள முருகப் பெருமானின் செப்புத் திருமேனியும் ஒரே வடிவமாக உள்ளமை அருமையினும் அருமை என்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்'[2] என்று திரு. நடனகாசிநாதன் அவர்கள் 'காலச் சுவடுகள்' எனும் தமது நூலில் குறிப்பிடுவதனால் இராசேந்திரன் காலத்திய சிற்பச் சிறப்பினை நாம் தெள்ளிதின் உணர முடிகின்றது.

1, 2 'காலச் சுவடுகள்' நடன காசிநாதன்-பக்கம்-92

கங்கை கொண்ட சோளேச்சுரர் கோவிலி லிருந்து மூன்று மீட்டர் தொலைவு கிழக்கே அமைந்துள்ள செங்கமேடு என்னும் சிற்றூரிலுள்ள தோப்பில் காணப்படுகின்ற பைரவர் உருவங்கள் இரண்டும் கலிங்க பாணியில் காணப்படுதலின் அவை முதலாம் இராசேந்திரனால் தனது கலிங்க வெற்றியின் நினைவுச் சின்னங்களாகக் கலிங்க நாட்டினின்றும் கொண்டு வரப்பட்டவையா யிருத்தல் வேண்டு மென்று தொல்பொருள் ஆய்வுத் துறை இயக்குநர் திரு. இரா. நாகசாமி[1] அவர்கள் கருதுகின்றார்.

வீரரெட்டி தெருவில் காணப்படும் துர்க்கை உருவமும், மணல்மேட்டில் காணப்படும் துர்க்கை உருவமும் சாளுக்கிய பாணியில் அமைந்திருத்தலின், சாளுக்கிய நாட்டிலிருந்து இவை கொணரப் பட்டிருக்கலாம்.

கங்கை கொண்ட சோழபுரம் பன்னாட்டுச் சிற்பக் கூடமாக விளங்குகின்ற தென்பதனையும் இதனா லறியலாம்.

ஒரு காலத்தில் கட்டடக் கலை யுயர்ச்சியும், சிற்பக் கலை வளர்ச்சியும் பெற்றுத் தெய்வ மணங் கமழ்ந்து, கம்பீரமாகத் தோற்ற மளித்த கங்கை கொண்ட சோளேச்சரம் இன்று பொலி விழந்து, பாழடைந்த நிலையில் காணப்படுகிறது. சுற்று மதிலின் மேற்பகுதியும், பெருஞ்சிற்ப வேலைப்பாடு மிக்க கற்களும் இடிக்கப்பட்டுக் கொள்ளிடத்தின் கீழணை கட்டுவதற்குப் பயன் படுத்தப்பட்டன. இன்றும் கல்வெட்டுகள் கொண்ட பல கற்றூண்களையும், கற்களையும் கீழணைக் கட்டில் காணலாம். இவ் வூர்ப் பொதுமக்கள், இக்கற்கள் கொண்டு செல்லப்படுவதைத் தடுத்து நிறுத்த முயன்றும், வெற்றி கிட்ட வில்லை. இம்மதிற் சுவருக்கு ஈடாக வேறு சுவர் கட்டித் தருவதாக ஆங்கிலேயரால் உறுதி மொழிகள் கூறப்பட்ட போதிலும், அவ்வாறு நிறைவேற்றப் பெற வில்லை. சுவெல்லின் பழமைப் பட்டியலில் (புராதன ஜாபிதா) இக் கோயில் ஐந்நூற்று எண்பத்திரண்டு அடி நீளமும், முந்நூற்று எழுபத்திரண்டு அடி அகலமும் நூற்றெழுபத்து நான்கு அடி உயரமும் கொண்ட ஒரு மத்திய கோபுரத்துடன் விளங்கியதாகக் குறிப்பிடப் பெற்றுள்ளது. மேலும், வெளிப்புற மதிலில் ஆறு கோபுரங்களும் நான்கு மூலைகளிலும், கொத்தளங்களும், அகழிகளும் சூழப் பெற்றிருந்தன என்றும் குறிப்பிடுகின்றனர். ஆனால், இன்றோ, இடிந்த நிலையில் காணப் பெறுகின்றன. ஏறத்தாழ எண்பதடி உயரத்தில் முழுவதும் கருங்கல்லாலான கோபுரமும்,

[1] Gangaikondacholapuram-Page-61

சாந்தாலான ஏழு கலசங்களும் அழிந்து பட்டுள்ளன. கொள்ளிடத்தில் கீழணை கட்ட கல் வேண்டி வெடி வைத்த போது, கோபுரமும் இடிந்து விழுந்ததாக அங்குள்ள முதியோர் கூறுகின்றனர். கோயில் திருச்சுற்றும் நன்னிலையி லின்றி, முள்ளும் கல்லும் நிறைந்து காணப்படுகின்றன. கருவூர்த் தேவர் மன முருகிப் பாடிய திருவிசைப்பாக்களைக் கொண்ட சோளேச்சரம், உருமாறிக் கிடக்கின்றது. இக்கோவிலுக்கு முந்நூற்று அறுபத்தைந்து காணி நிலமும், நல்ல வருவாயும் இருந்த போதிலும் தக்க கண்காணிப்பு இன்றிப் பழுது பார்க்கப் பெற்றுச்சீர்செய்யப் பெருமல் இழி நிலையில் காணப்படுகிறது. இவை முற்று மழியின் இராசேந்திரன் காலத்திய கட்டடக் கலைக்குச் சான்றுகள் இன்றிப் போய்விடும். நன்னிலையில் இருந்த இக்கோவில் முற் காலத்தில் கோட்டையாகப் பயன்படுத்தப் பட்டதால் பழுதடைந்து விட்டது என்று கூறப்படுகிறது.

கங்கை கொண்டானுன சிவபெருமானுக்குக் கங்கை கொண்டானுகிய முதலாம் இராசேந்திர சோழன் கங்கை கொண்ட சோழ புரத்திலுள்ள கங்கை கொண்ட சோளேச்சரத்தில் ஆலயம் எழும்பினுன். இராசேந்திர சோழன் சிறந்த சிவநேயச் செல்வனுக விளங்கியதோடு, கலையார்வம் மிக்க கலைஞனுகவும் திகழ்ந்தான் என்பதற்கு வேறு சான்று தேவையோ?

கங்கை கொண்ட சோளேச்சரத்தைக் கட்டிய இராசேந்திரன், ஈழ நாட்டின்கண் மாந்தோட்டம், மாத்தோட்டம் என்னுமிடங்களில் சிவன் கோவில்களும் கட்டியுள்ளான்.[1] மேலும், சதுரானன பண்டிதரின் வேண்டுகோளுக் கிணங்க மன்னனின் ஆணைப்படி திருவொற்றியூர் ஆதிபூரிஸ்வரர் கோயில் 'ரவி' என்ற நேரவீர சோழச் தச்சனுல் கற்றளியாக மாற்றப்பட்டது.[2] இக்கோவிலின்கண்ணுள்ள பைரவர், தக்கணுமூர்த்தி, சண்டேசுவரர் சிற்பங்கள் மிக்க அழகுடையவை. இராசேந்திரன் வேம்பற்றூர்க் கோயிலின் சுற்ருலயத்தையும் கோபுரத்தையும் புதுப்பித்தான்.

இராசேந்திரன், மைசூர் மாநிலத்தில் பெங்களூரிலிருந்து வடக்கே நாற்பது கல் தொலைவில் உள்ள குனிகல் (Kunigal) என்ற ஊருக் கருகிலுள்ள (ஒரு கல் தொலைவு) கொத்தகெரெ (Kothakare)என்னு மிடத்தில் கோவில் ஒன்றணைக் கட்டியுள்ளான். இதனருகில் இரு பெரும்ஏரிகள் வெட்டப்பட்டன. இவற்றுள்

[1] Ins. 616 of 1912; S. I. I VI-14 pp.
[2] அதிபூரிஸ்வரா கோயில்-S I. I. IV-553 and 126 of 1912

ஒன்று இன்றும் 'இராசேந்திர சோழப் பேரேரி' எனும் பெயரால் அழைக்கப் படுகிறது. எனவே, இவ்வேரியும் அவனுல் வெட்டப் பெற்றிருத்தல் வேண்டும் என்று நாம் கருத இடமுண்டு. கொத்த கெரெலில் முதலாம் இராசாதிராசனின் கல்வெட்டொன்றும் காணப்படுகிறது.

பெருங்களூர் மாவட்டம் சென்னப் பட்டணம் வட்டத்தில் தொட்டமளூர் (Doddamalur) என்னு மிடத்தில் காணப் பெறும் கோவிலும் இராசேந்திரனது காலத்தில் கட்டப்பட்டதாகத் தெரிகிறது.[1]

சகம் 943 இல் மைசூர் மாநிலப் பேலத்துருவில் ஒரு பழைய கோவில் புதுப்பிக்கப் பெற்றது.[2] பெரும்அளவில் அடியவர் களுக்கு உணவும் வழங்கி உருத்திர ஓமமும் நடந்ததாக இரா சேந்திரனின் 9வது ஆட்சி யாண்டுக் கல்வெட்டுக் கூறுகிறது. இராசேந்திர சோழனின் 24ஆம் ஆட்சி யாண்டில் சேரச் சிற்றரசனுகிய இராசசிம்மனுல் இராசேந்திர சோழ விண் ணகர் என்ற கோவில் எடுக்கப் பெற்றது. தென்னூர்க்காடு மாவட்டத்திலுள்ள எண்ணுயிரம் எனும் ஊரில் தன்னுடைய தந்தையின் நினைவாகச் சுந்தர சோழ ஆழ்வார் கோவிலும், சகோதரன் நினைவாக இராசராச ஆழ்வார் கோவிலும் குந்தவை யினுல் எடுக்கப் பெற்றதாக ஒரு கல்வெட்டுக்[3] கூறுகிறது. செங் கற்பட்டு மாவட்டம் காவன் தண்டலம்[4] என்னும் இடத்தில் இரா சேந்திரனின் நான்காம் ஆண்டில் அரச அதிகாரி ஒருவர் இரா சேந்திர சோழீச்சுரம் என்னும் கோவிலைக் கட்டினுர். இராசரா சன் நினைவாக வட ஆர்க்காடு மாவட்டம் செங்குன்றத்தில் சயங் கொண்ட சோழீச்சுரம்[5] என்ற கோயில் கட்டப்பட்டது. பஞ்சவன் மாதேவிச்சுரம் என்னும் பள்ளிப்படைக் கோவில்[6] இராசேந் திரனின் பட்டத்தரசி பஞ்சவன் மாதேவியின் பெயரால் பழை யாறையில் அமைக்கப்பட்டமையை இவனது ஏழாம் ஆண்டுக் கல்வெட் டொன்ருல் அறிகிரோம். மைசூர் மாநிலக் கோலாரில் கோலாரம்மா கோவில் என்னும் பிடாரி ஆலயம்[7] இவனது இருப தாம் ஆண்டில் புதுப்பிக்கப்பட்டதாகக் கல்வெட்டால் அறி

[1] Epi. Car. Vol. IX
[2] 139 of 1399 (E.C. IV Hg. 16)
[3] 335 of 1917; 330 of 1917
[4] 210 of 1901, S. I. I. VII-423
[5] 152 of 1921
[6] 271 of 1927 இஃது இராமநாதன் கோயிலில் உள்ளது.
[7] 480 of 1911 (EC X KR-109-A)

கிறோம். கண்ணினால் திருக்கயிலையில் இருந்த கோலம் நண்ணித் திருநாவுக்கரசரால் பாடப் பெற்றதாகக் கருதப்பெறும் திருவையாறு ஐயாறப்பர் திருக்கோயிலில் தென் திருச்சுற்றில் தக்கண (தென்) கைலாயம்[1] என்னும் திருக்கோயில் இவன் காலத்தில் மீண்டும் கற்றளி யாக்கப்பட்டது. இக்கோயிலில் நுளம்பபாடிப் பகுதியைச் சேர்ந்த கல்லால் ஆகிய 44 தூண்கள் அமைந்து இராசேந்திரனுடைய வெற்றிச் சிறப்பைத் தமிழுலகிற்குக் காட்டுகின்றன. இராசேந்திரன் காலத்தில் 'அகரம்' என்ற ஊரில் கைலாயநாதர் கோயில்[2] கட்டப்பட்டதனைக் கல்வெட்டு வாயிலாக அறியலாம். வட ஆர்க்காட்டுத் திருவல்லத்தில் வில்வவனேசுவரர் ஆலயத்தின் தெற்குப் பக்கத்தில் திருவையா ஈசுவரம்[3] என்ற கோயில் இவன் காலத்தில் வைதும்பர் தலைவன் ஒருவனால் எடுப்பிக்கப்பட்டது. அளகாதிரிப் புத்தூர் சூரியன் கோயில்[4] எடுக்கப் பெற்றதும் இவன் ஆட்சிக் காலத்தில்தான்.

திருச்சி மாவட்டம், அரியலூர் வட்டம், திருமழபாடியில் உள்ள வைத்தியநாதசுவாமி கோயில் இவனால் புதுப்பிக்கப் பெற்றது. இவன் தனது எட்டாமாட்சி யாண்டில் வானமங்கை என்னும் ஊரில் 'கைலாச நாதர் கோயில்' ஒன்றனைக் கட்டுவித்தான் என்பதனைக் கல்வெட்டால் அறியலாம்.[5]

இராசேந்திரன் கலையார்வமும் இறையன்பும் நிரம்பப் பெற்றவனாதலின் எண்ணிறந்த கோயில்கட்கு அறக் கொடைகள் அளித்துள்ளான். காமரச வல்லியிலுள்ள கார்கோடீசுவரத்திற்கும் (திருச்சி மாவட்டம்), திருவாலங்காட்டுச் சிவன் கோயிலுக்கும், வேம்பற்றூர்க் கோயிலுக்கும், திருச்சின்னபுரம் கோயிலுக்கும் இவன் நிவந்தங்கள் அளித்துள்ள செய்தியினை ஈண்டு நாம் எடுத்துக் காட்டாகக் கூறலாம்.

இவனது ஆட்சிக் காலத்தில் கூழம்பந்தலில் கங்கை கொண்ட சோழீச்சரர் ஆலயம்[6] அமைக்கப்பெற்றது. இவன் குருவான ஈசான பண்டிதர் அமைத்த இக்கோயிலுக்குச் செயங் கொண்ட சோழ மண்டலத்துக் காலியூர்க் கோட்டத்துப் புலிவல நாட்டு ஆதுவப் பாக்கத்தில் வெள்ளான் வகையாக விளங்கும்

[1] S. I. I. V. No. 513-ARE. No. 214 of 1894
[2] 234 and 235 of 1931
[3] North Arcot District 8 of 1889-S. I. I. III. 53
[4] 289 of 1938
[5] 231 and 232 of 1931
[6] 414 of 1902-S. I. I. VII.1047

நிலங்களில் காணிக் கடனுகச் செலுத்தப்பட வேண்டிய நெல் இரண்டாயிரத்து இருநூற்றைம்பதின் கலத்தையும் பொன் அறு பத்தைங் கழஞ்சையும் வரியி லியிட்டுக் கொடுத்துள்ளான் இம் மன்னன்.

கலைப் புரவலனுகிய இவன் கன்னியா குமரியில், கோனேரிசு வரர் கோயில் எனும் ஆலயத்தைத் தன் தந்தையின் நினை வாக எடுத்துள்ளான். இதனை,

'இக்கோயில் சோழர் காலத்துக் கோயில்தான் என்பதும், அதுவும் சோழ மன்னன் முதலாம் இராச ராசனின் நினைவாக அவனுடைய அருமை மைந்தன் முதலாம் இராசேந்திரன் எடுப் பித்தது என்பதும் அக்கோயிலிலேயே காணப்பெறும் கல்வெட்டு களால் உணர்ந்து கொள்ள முடிகிறது'[1] என்று கல்வெட்டு ஆய் வாளர் திரு. நடன காசி நாதன் அவர்கள் தமது 'காலச் சுவடு கள்' எனும் நூலின்கண் குறிப்பிடுவதா லறியலாம்.

மேற்கூறியவற்ருல் இவன் சிறந்த கோயிற்பணி புரிந்தா னென்பது விளங்கும். (இவனது கோயிற் பணி பற்றிக் 'குண நலன்கள்' எனும் பகுதியில் காண்க)

**கட்டடக் கலை**

இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் கட்டட நூலின் துணை கொண்டு கங்கை கொண்ட சோழபுரமும், கங்கை கொண்ட சோளேச்சரமும் கட்டப்பட்டன என்பதனை நாம் அறியலாம். கங்கை கொண்ட சோழ புரத்தில் மன்னர், வணிகர் முதலிய பலருக்கும் தனித்தனி வீதிகள் அமைக்கப்பட்டிருந்தன வென வும்,காலைக் கடை (நாளங்காடி), மாலைக் கடை (அல்லங்காடி) முதலியன கொண்ட கடை வீதிகளும், அகழி,மதில், கோட்டை, வாயில், கரந்துறை வாயில் போன்ற நகர அமைப்பின் சிறந்த அங்கங்களைக் கொண்டு திகழ்ந்தன எனவும் கண்டோம். அழகிய அரச மாளிகைகளும், விண்ணை முட்டும் திருக்கோயில் களும், பரந்தகன்ற மண்டபங்களும் இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் அமைக்கப்பட்டதால், அக்காலத்திய கட்டடக் கலை யின் சிறப்பினை நாம் நன்கறியலாம். திருக்கோயில் திராவிட பாணியிலேயே கட்டப்பட்ட தென்பது ஈண்டு நாம் நினைவிற் கொள்ளத் தக்க தாகும்.'சோழக் கலைஞர் அரக்கர்களைப் போலச் செயல் தொடங்கி நுண்வினைப் பொற்கொல்லர் போல் செய்து

[1] 'காலச் சுவடுகள்'-பக்கம்-75

முடிக்கும் திறன் வாய்ந்தவர்' என்ற அறிஞர் பெர்குசன் அவர்களின் புகழுரை இராசேந்திரனது கட்டடக் கலைக்கும் சாலப் பொருந்தும். பல்லவர்களது ஆட்சிக் காலத்தில் தொடங்கப் பெற்ற புத்தம் புதிய முறையிலான கட்டடக்கலை இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் உச்ச நிலையில் திகழ்ந்தமை குறிப்பிடத் தக்கதாய்த் தோன்றுகும்.

### சிற்பக் கலை

சிற்பக் கலை தலையாய கலையாக வைத்தெண்ணப்படுகிறது. செம்பு, பொன், வெள்ளி, ஐம்பொன் முதலிய உலோகங்களாலும், மண்ணாலும், சுண்ணம்பாலும், கல்லாலும், மரத்தாலும், நெட்டியாலும் பாவைகள் அமைப்போர் சிற்பிகள். அவர்கள் படைக்கும் சிற்பங்கள் வாய் பேசாதவை; ஆனால், சிற்பியின் திறனைப் பற்றி நம்மைப் பேச வைப்பவை.

இராசேந்திரன் காலத்துச் சிலை வடிக்கும் சிற்பிகள் படைத்த சிற்பங்கள், இன்றும் கங்கை கொண்ட சோளேச்சரத்தில் குன்றா அழகுடன் காட்சி தருகின்றன. இங்குக் காணப்படும் சிற்பங்களுள் கலைமகள், திருமகள், சண்டீச அனுக்கிரக மூர்த்தி ஆகியவை கண்ணையும், கருத்தையும் ஈர்க்கத் தக்கவையாக அமைந்து ஒருமுறை கண்டாலும் என்றென்றும் நமது மனக்கண்ணில் நீங்கா இடம் பெறும் பான்மையவாக அமைந்துள்ளமையை யாவரும் உணர்வர். பல வகையான நுண்ணிய வேலைப்பாடமைந்த ஆடவல்லான் படிமங்கள் இராசேந்திரனது காலத்திய சிற்பக் கலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகின்றன. இங்குள்ள சோமாஸ்கந்தர், சுப்பிரமணியர், துர்க்கை, போகசத்தி, அதிகார நந்தி போன்ற பேரழகு மிக்க செப்புப் படிமங்கள் மிகவும் பாராட்டத் தக்க வகையில் அமைந்துள்ளன. இவைகள் இராசேந்திரனது காலத்தினவாகக் கருதப்படுகின்றன. இராசேந்திரனது ஆட்சிக் காலம் சோழர் சிற்பக் கலையின் பொற்காலமாகும். இக்காவலன் காலத்திய கவர்ச்சிகரமான நுண்ணிய வேலைப்பாடமைந்த சிற்பங்கள் போன்று இராசராசன் காலத்தில் கூட அமைக்கப் பெறவில்லை. கங்கை கொண்ட சோளேச்சரத்தில் காணப்படும் சோமாஸ்கந்தர் தொகுதி நுண்ணிய வேலைப்பாடும் கலை யழகும் மிக்கதாகக் காட்சி யளிக்கின்றது. எனவேதான், தமிழ்நாடு தொல்பொருள் துறை இயக்குநர் திரு. ஆர். நாகசாமி அவர்களும் தமது 'கங்கை கொண்ட சோழபுரம்' எனும் நூலின்கண் (இராசேந்திரனது காலத்திய) இச் சோமாஸ்கந்தர் தொகுதியே இன்று காணப்பெறும் பேராதிக்கச் சோழர் காலத்

துப் படிமங்களுள் பெரியது எனக் குறிப்பிடுகின்றார்.[1] இராசேந்திரனது காலத்திய சிற்பக்கலைச் சிறப்பினைக் 'கங்கை கொண்ட சோளேச்சரம்' எனும் பகுதியில் கண்டு கொள்க.

'இங்கு விமானத்திலும், கோயிலின் வெளிப்புறத்திலும் காணும் சிற்பங்களைக் காட்டிலும் உயர்ந்த சிற்பங்கள் தென்னிந்தியாவில் மட்டு மன்று, தென்னிந்தியக் கலையைப் பின்பற்றிய சாவகக் கலையிலும் இல்லை' என்பது அறிஞர் கருத்தாதலின், கலைக் காவலனும் இராசேந்திரனது ஆட்சிக் காலத்திய சிற்பக் கலை வளர்ச்சி பற்றி இனி தறியலாம்.

**நாடகமும் இசையும்**

நாடகமும் இசையும் முத்தமிழில் அடங்கும். பண்டு நாடகமும் இசையும் மன்னனால் பெரிதும் ஆதரிக்கப்பட்டன. இவை மக்களின் இன்பப் பொழுது போக்கிற்காகத் தோன்றியமையால் கிராமங்களிலும், நகரங்களிலும் இவை சிறப்புப் பெற்றன. நாடகங்கள் பெரும்பாலும் புராணக் கதைகளைப் பின்னணியாகக் கொண்டும், மன்னனது வரலாற்றைப் பின்னணியாகக் கொண்டும் திகழ்ந்தன. நம் இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் இராசராசேச்சுர நாடகம், சாக்கைக் கூத்துப் போன்றவை மக்களின் ஆதரவைப் பெற்றிருந்தன. அக்காலத்தில் நாடகம், கூத்து என்னும் பெயரால் பாமர மக்களால் வழங்கப்பெற்றது.

மார்கழி, வைகாசி மாதங்களில் திருவாதிரைத் திருநாள்களில் சாக்கைக் கூத்து நிகழ்த்துவதற்குச் சாக்கை மாராயன் விக்கிரம சோழனுக்குக் காமரசவல்லிச் சதுர்வேதி மங்கலத்தார் நிலக்கொடை அளித்தனர்.[2]

முதலாம் இராசேந்திரனது காலத்தில் 'இராசராச விசயம்' என்னும் நூலினைப் படித்து வருவதற்காக நாரணன் பட்டாதித்தன் என்ற சவர்ணன் ஒருவன் நிலத்தானம் பெற்றான்.[3] எனவே, நாட்டில் கலைஞர்கள் ஆதரிக்கப்பட்டுக் கலைவளர்ச்சி யேற்பட்டதென்பது புலனாகிறது.

[1] 'This is the biggest group of Somaskandha image of the Jmperial Chola period now known to exist. 'Gangaikonda Cholapuram'-R. Nagasamy Page-36

[2] 65 of 1914

[3] S. I. I. II. No. 306

இராசேந்திரனது காலத்தில் திருக்கோயில்களில் ஓதுவார்களும், கந்தர்வர்களும், இசைக் கருவி வாசிப்போரும் நியமனம் செய்யப் பெற்றிருந்தமையின் இசையும் நல்ல வளர்ச்சி பெற்றது.

### இலக்கியம்

இவன், கல்வி கேள்விகளில் மேம்பட்டவனாய்த் தமிழ் மொழியிலும் வடமொழியிலும் ஈடுபாடு கொண்டதோடு அமையாது கற்றோரைப் போற்றிப் புரந்தமையால் 'பண்டித சோழன்' என்று இவனை வாயார வாழ்த்தினர் மக்கள். இவனது ஆட்சிக் காலத்தில் பத்திப் பரவச மூட்டும் பக்திப் பாடல்களும், காவிய வளம் கொண்ட வடமொழிப் பாடல்களும் எண்ணிறந்த அளவில் இயற்றப் பெற்றன.

இவனது ஆட்சிக் காலத்தில் வெளியிடப் பெற்ற தமிழ்க் கல்வெட்டுகளும் வடமொழிக் கல்வெட்டுகளும் என்றென்றும் சிறந்த இலக்கியமாக வைத்து எண்ணப்படும் தகுதி படைத்தவையாகும். இவனது திருக்களர் செப்பேடு தனித் தமிழில் காணப்படுதலின் அக்காலத் தமிழ் வளர்ச்சியை நாம் காண இயலும். நாராயண கவி என்னும் வடமொழிப் புலவரால் கவின்மிகு காவிய நடையில் எழுதப் பெற்ற இவனது திருவாலங் காட்டுச் செப்பேடு சொற்செறிவும், பொருட் செறிவும் கொண்டு இலங்குகின்றது. கருவுக்குள் உருவாகும் சிசுவும் கூடக் கசிந்துருகும் சீரிய பத்திப் பாக்களைக் கங்கை கொண்ட சோளேச்சரத்தானுக்குப் படைத்த கருவூர்த் தேவர் சிறந்த கவிஞரென்பது யாவரும் ஒப்புக்கொள்ளக் கூடிய ஒன்றாகும். இலக்கிய நயமும் பத்திச் சுவையும் கொண்ட இத்திருவிசைப்பா ஒன்பதாந் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளது. இராசேந்திரன் காலத்திய இலக்கிய வளர்ச்சிக்கு இத்திருவிசைப்பா ஒன்றனை மட்டுமே சான்றாகக் கொள்ளுதல் தகும்.

மேற்கூறியவற்றால் சோழப் பெருமன்னனான இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் கட்டடக்கலை, சிற்பக்கலை, நெய்தற் கலை, நாடகக்கலை, இசைக்கலை, இலக்கியக்கலை ஆகியவை உன்னத நிலையில் விளங்கியமையை நன்கறியலாம்.

இவைகளைப் போன்று அக்காலத்தில் ஆண் மக்களாலும், பெண்மக்களாலும் ஆடற்கலை (Dancing) பெரிதும் போற்றப்

பட்டன. திருக்கோயில்களில் பணிபுரியும் பதியிலாரும், ஆடற் கலையில் தேர்ச்சி பெற்றுத் தெய்வச் சந்நிதிகளிலும், மன்னனது அவையிலும் ஆடல் நிகழ்த்தும் ஆண்களும் அக்காலத்தில் இருந் தனர். அவர்கட்கு மன்னன் மானியங்கள் வழங்கியதோடு சிறப் புப் பெயர்களும் வழங்கினான். அக்கூத்தர்களுள் சாக்கையர் என் பார் புகழ் பெற்றவராவர்.

மேற்கூறப்பட்ட கலைகளேயன்றி ஓவியக் கலை, சோதிடக் கலை, வானநூற் கலை, மருத்துவக் கலை, மல்யுத்தக் கலை, சமை யற்கலை, மலர் தொடுத்தல், அணிகலன் செய்யுங்கலை போன்ற வையும் இராசேந்திரனது காலத்தில் சிறப்புற்று விளங்கின.

சில கலைகளுக் கென்று, தனித்தனியாகக் கலை மன்றமும் நிறுவப்பெற் றிருந்தது. அனைத்துக் கலை மன்றங்களும் ஒருசேரத் திகழ்ந்த இடம் திருக்கோயில். திருக்கோயில், மக்களை நன்னெ றிப் படுத்தியதுடன், பயனுள்ள வழிகளில் பொழுது போக்கவும் தக்க ஏற்பாடுகளைச் செய்திருந்தது. இப்பணிகள் தொடர்ந்து நன்முறையில் நடைபெற மன்னன் அறக்கொடைகள் அளித் துள்ளான். கோயிற் பணிகளுக்குப் போக எஞ்சியுள்ள பணம் கல்விக்கும், மருத்துவத்திற்கும் செலவிடப் பெற்றன. மக்களைப் பலதுறைகளில் முன்னேற்றும் வழிகாட்டியாக அமைந்த திருக் கோயில்கள் நன்முறையில் செயல்பட்டன; கலைகளும் வளர்ச்சி பெற்றன.

மேற்கூறியவற்றால் கல்விச் சிறப்போடு கலையுணர்வும் மிக்க இராசேந்திர சோழன், மக்களுக்குத் தேவையான வசதிகளைச் செய்து தந்ததோடு நில்லாது மக்களின் பொழுது போக்கிற்கும், மன அமைதிக்கும் துணை புரியும் பல வகைப்பட்ட கலைகளை முன்னேற்றுவதில் பெரிதும் நாட்டங் கொண்டான். இவனது ஆட்சிக் காலத்தில் சோணாடு கலைத் துறையில் பெற்ற வளர்ச்சி யினை, முயற்சியினை, அகஸ்டஸ் ஆட்சிக் காலத்தில் உரோமப் பெருநாடு பெற்றிருந்த கலை வளர்ச்சியுடன் ஒப்புமை கூறலாம். இராசேந்திர சோழன் உரோமப் பெருமன்னனான அகஸ்ட ஸைப் போல் கலைக் காவலனாய்த் திகழ்ந்தமையின் 'தென்னாட் டின் அகஸ்டஸ்' என்ற புகழுரையைப் பெறும் தகுதியுடையவனா னான். உரோம் நாட்டின்கண் அகஸ்டஸ் காலத்தில் பல அழகிய மாளிகைகள் எழுப்பப் பெற்றன. இராசேந்திரனது ஆட்சிக் காலத்திலும் கங்கை கொண்ட சோழபுரம், கங்கை கொண்ட

சோளேச்சரம். மதுரையில் அரச மாளிகை, கோலாரில்(மைசூர் நாடு) துர்க்கை கோயில், திருவிசலூர்க் கோயில் (புதுப்பிக்கப் பட்டது), திருமழபாடி கோயில் (புதுப்பிக்கப்பட்டது), மண்ணை கொண்ட சோழன் மண்டபம், கங்கை கொண்ட சோழீச்சுரர் கோயில் (கூழம்பந்தல்) ஈழத்தில் பல சைவ வைணவக் கோயில் கள் போன்ற அழகிய பல கட்டடங்கள் விண் முட்டும் வகையில் அமைக்கப் பட்டிருந்தன என்பதனை எண்ணிப் பார்க்குங்கால் இவனுக்கு இப்பெயர் பொருத்த முடைத் தென்பதனை அறிய லாம்.

# 14. அரசியல்

பண்டைக் காலத்தில் மன்னன் நாட்டின் உயிர் நாடியாகக் கருதப்பட்டான். மன்னனின் முதலாவது கடமை நாட்டில் நல்லாட்சி முறையினை ஏற்படுத்தி மக்களைக் காத்தலாகும். மன்னன் ஒருவனே நாட்டினை ஆட்சி புரிதல் என்பது இயலாத காரியம். எனவே, பண்டை மன்னர்கள் அரசாட்சியில் தனக்குதவி புரிய அமைச்சர்களையும் அலுவலர்களையும், பல குழுக்களையும் ஏற்படுத்திக் கொண்டனர். இவ்வாறு மன்னன் பல துணையுடன் நாட்டைத் திறமையுடன் ஆண்டான்.

இந்திய ஆட்சி முறை வரலாற்றில் மௌரியர்களின் ஆட்சி முறை முதன்மை வகிக்கின்றது. இது பிற இந்திய ஆட்சி முறைகளுக்குத் தாயாக,வழிகாட்டியாக, முன்னோடியாகத் திகழ்கிறது. குப்தர் கால ஆட்சி முறையும் இதனைப் பின்பற்றியே வகுக்கப் பட்டது. மௌரிய ஆட்சி முறையைப் போன்றே சோழர் ஆட்சி முறையும், அல்லாவுதீன் கில்ஜியின் ஆட்சி முறையும், ஷெர்ஷாவின் ஆட்சி முறையும், அக்பரின் ஆட்சி முறையும், சிவாஜியின் ஆட்சி முறையும் இந்திய வரலாற்றில் சிறப்பிடம் பெற்றுள்ளன. இவைகள் போற்றுதற்குரிய பல அம்சங்களைத் தம்மகத்தே கொண்டுள்ளமை குறிப்பிடத் தக்க தாகும்.

மௌரிய ஆட்சி முறையில் நகராட்சி முறையும் (Municipal Administration) ஷெர்ஷாவின் ஆட்சி முறையில் வருவாய்த் துறை நிருவாகமும் (Revenue Administration) போற்றத் தக்க முறையில் அமைந்திருந்தன போல்,சோழர்களின் ஆட்சி முறையில் கிராம சுயாட்சி முறை (Village Administration) குறிப்பிடத் தக்க முறையில் சிறந்திருந்தது. இவர்களது 'குடவோலை முறை' பன்னாட்டுப் புகழ் பெற்றுள்ளமை பாராட்டத் தக்க தாகும். இக்

குடவோலை முறை சில அம்சங்களில் தற்காலத் தேர்தல் முறையினை ஒத்துள்ளது. பன்னெடுங் காலமாகத் தமிழகத்தில் நிலவி வந்த சோழர் ஆட்சி முறை பற்றி ஈண்டு ஆய்வோம்.

சோழர் வரலாற்றினை விளக்கும் இலக்கியச் சான்றுகள், சோழர் காலத்தில் எழுந்த கல்வெட்டுகள், செப்பேடுகள் ஆகியவற்றின் துணை கொண்டு, சோழர் ஆட்சி முறையினை நாம் அறியலாம். சோழர் ஆட்சி முறை பல சிறந்த ஆட்சிக் கூறுகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது.

***மன்னன் நிலை***

ஒரு நாட்டின்கண் வாழும் மக்கள் இன்புற்று வாழ வேண்டுமெனில் அந்நாட்டில் அரசமுறை சிறந்து விளங்குதல் வேண்டும். எனவேதான், வள்ளுவப் பெருந்தகையும்

'ஆங்(கு)அமைவு எய்தியக் கண்ணும் பயம்இன்றே
வேந்(து)அமைவு இல்லாத நாடு'[1]

என்று கூறி மக்களின் நல்வாழ்விற்கு வேந்தனின் முக்கியத்துவத்தை நன்கு சுட்டிக் காட்டுகின்றார்.

'நெல்லும் உயிரன்றே; நீரும் உயிரன்றே;
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்'[2]

என்ற புறப்பாடல் மோசிகீரனார் அருளிச் செய்ததாகும். எனவே, பண்டைக் காலத்தில், நாட்டு மக்களின் நல்வாழ்விற்கென அமைந்த, நல்லரசின் இன்றியமையாமையை மக்கள் உணர்ந்திருந்தனர் என்பது புலனாகும்.

நல்வேந்தன் அமையப் பெறாத நாடு கடும்புலி வாழும் காட்டினும் கொடிது என்பதை நம் முன்னோர் நன்கு அறிந்திருந்தனர். சோழ மன்னர்களும், நாட்டு நிருவாகத்தின் தலைமைப் பொறுப்பினை ஏற்றிருந்த போதிலும், தன்னிச்சைப்படி ஆட்சி செலுத்தும் வல்லாட்சியாளனாக விளங்காது, மக்களின் நலனில் நாட்டம் கொண்டு ஆட்சி நடாத்தினர். எனவே, அக்கால ஆட்சி முறையினைக் 'குடி தழுவிய கோனாட்சி முறை' எனக் கூறுதல் பொருத்தமான தாகும். மக்களால் விரும்பப்பட்டு, மக்க

[1] திருக்குறள்-740
[2] புறநானூறு

ளுக்காகவே, அரசோச்சிய மன்னர்களே, அக்காலத்து ஆண்ட காரணத்தால்தான், வள்ளுவப் பெருந்தகையும்,

> 'குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
> அடிதழீஇ நிற்கு முலகு'[1]

எனக் குறித்துச் சென்றார்.

சோழ மன்னர் மக்களின் உலகியல் வாழ்விற்கும், பண்பாட்டுக் கூறுகளின் செழிப்பிற்கும், அயராது பாடுபட்டனரே யன்றித் தன்னலம் ஒன்றையே கருதினரல்லர். குடி மக்களின் நலனே தன்னல மெனவும், அவர்களின் மகிழ்ச்சியே, தன் மகிழ்ச்சி யெனவும் கொண்டு, நல்லாட்சி நடத்தியமையின், பண்டு மன்னன் இறைவனென்றே மக்களால் மதிக்கப் பெற்றனன். மக்களாகிய உடலுக்கு மன்னன் உயிராகவே கருதப்பட்டான்.

சோழ மன்னர், முடி புனைந்து ஆட்சி செய்தமையின் முடி மன்னர் என்று அழைக்கப் பெற்றனர். மன்னர், 'தேவர்', 'பெருமாள்', 'நாயனார்' என்று கல்வெட்டுகளில் குறிக்கப் பெறுகின்றனர்; 'உடையார்', 'சக்கரவர்த்தி', 'திரிபுவன சக்கரவர்த்தி' எனவும் அழைக்கப்பட்டனர். முதலாம் இராசராசன் காலமுதல், சோழப் பெருமன்னர்களின் ஏகாதி பத்தியம், நான்கு திக்குகளிலும் பரவிற்று. இப்பேரரசின் தனி நாயகம் வகித்த மன்னர்களை இராசகேசரி வருமன், பரகேசரி வருமன் என்னும் பட்டங்களுடன் 'கோ' என்பதைச் சேர்த்துக் 'கோராசகேசரி வருமன்', 'கோப்பரகேசரி வருமன்', என்று முன்னோர் வழங்கி வந்தனர். நமது இராசேந்திர சோழன் 'கோப்பர கேசரி வருமன்' என அழைக்கப் பெற்றான் என்பதை முன்பே கண்டோம்.

ஆட்சித் துறையின் தலைமை யிடத்தை மன்னன் பெற்றிருந்தான். மன்னர்கள் அரசவையில் மிகுந்த ஆடம்பரத்தையும், வனப்பையும் ஏற்படுத்தி இருந்தனர். மன்னன் தன் தேவிகளுடன் உல்லாசமாக இருக்கப் பல அரண்மனைகளும், பொழுது போக்கிடங்களும், பூங்காக்களும், கலை மண்டபங்களும் நிறுவியிருந்தான். எனவே, சோழ மன்னரின் முடியாட்சியினை ஆடம்பர ஆரவார மிக்க, பைசாண்டைன் நாட்டு முடியாட்சியுடன் (**Byzantine Monarchy**) ஒப்புமை கூறலாம்.

[1] திருக்குறள்-செங்கோன்மை-4

மன்னர் நீதியின் ஊற்றுகவும் விளங்கினர். சட்டத்திற்கு உட்பட்டவராகவே மன்னர் நடந்து கொண்டு, சட்டத்திற்கு மதிப்பளித்தனர். சட்டம் மன்னரைவிட உயர்ந்ததெனக் கருதப் பட்டதேயன்றி, மன்னர் சட்டத்தைவிட உயர்ந்தவராகக் கருதப்படவில்லை. 'சட்டத்தின் முன் யாவரும் சமம்' என்ற கோட்பாடு பண்டு நிலவி வந்தது.

மன்னர், அரசியர் ஆகியோர் படிமங்கள், திருக்கோயில்களில் அமைக்கப் பெற்றதனை நோக்குமிடத்து, அக்காலச் சோழ மன்னர், தெய்வீக உரிமைக் கோட்பாட்டில் நம்பிக்கை கொண்டிருந்தனர் என்று எண்ண இடமுண்டு.

ஆட்சித் தலைவனுக விளங்கிய மன்னன் இட்டது சட்டமும், வைத்தது வரிசையுமாகப் பெரும்பாலும் இருந்தது. 'திருவாக்கிற்கு எதிர் வாக்குண்டோ?' என்றும் 'அரசன் அன்று கொன்ருல் தெய்வம் நின்று கொல்லும்' என்றும் பழமொழிகள் கூறப்பட்டிருத்தல், அக்காலத்து மன்னனுக் கிருந்த அதிகார வலிமையினை யுணர்த்தும். ஆனல், சோழ மன்னர், எதேச்சாதிகாரியாக இல்லாமல் நாட்டு மக்களின் நன்மை கருதி யாண்டனர்.

சோழப் பேரரசின் அரசாங்க உள்துறைகளை அமைச்சரும், உடன்கூட்டத்து அதிகாரிகளும், மகாசபையார்களும் தலைமையாக நின்று நிருவகித்துவந்தார்கள். உள்நாட்டுக் கலகம் வெளிநாட்டுப் படையெடுப்பு ஆகியவற்றைத் தடுத்துத் தேச அமைதியைக் காத்து வந்தவர்கள், மண்டல மாக்களும், படைத் தலைவர்களுமான சாமந்தர்களே யாவர். எனவே, மன்னன் தனது ஆட்சிப் பொறுப்பினை அமைச்சர், அதிகாரி, சாமந்தர் ஆகியோரின் துணை கொண்டே ஏற்று நடத்தி வந்தான் என்பது ஈண்டுக் குறிப்பிடத் தக்க தாகும்.

மன்னனுக்கும் அவனது தகுதிக் கேற்பப் பல அரசச் சின்னங்கள் உள. அவை குலம், பெயர், முடி, கோல், மாலை, கட்டில், குடை, கொடி, முத்திரை, முரசு, கடிமரம், குதிரை, யானை, தேர், மணி எனப் பதினைந்து வகை யாகும்.

அரசாள்வோன் மகன், அடுத்து மன்னனுக அமரும் வழிமுறைக் கொள்கை, அக்காலத்து நிலவிய மரபாகும். பொதுவாக மன்னனுடைய கோப்பெருந் தேவியின் மூத்த மகன் அரியணையேறுதல் மரபு. மூத்த மகன் இறந்துவிடின், இளைய மகனும், ஆண் மக்களே இல்லாத போழ்து, கோப்பெருந்தேவிக் கடுத்த

தேவியின் ஆண் மக்களுள் மூத்தோனும், அரியணை யேறுதல் வழக்கம். மேற் கூறியவர் யாரும் இல்லாத போது மன்னனின், பிற நெருங்கிய உறவினருள் தக்கோன், அரியணை யேற்றப்படு வான்.

**பேரரசனும் இளவரசனும்**

சோழ மன்னனே சோழப் பெருநாட்டின் தனித் தலைவனு வான். இவனே சட்ட மியற்றுதல் (Legislature), கருமம் ஆற்று தல் (Executive), நீதி வழங்குதல் (Judiciary), என்னும் முத்துறை அதிகாரக் கூறுகளையும் பெற்றுத் திகழ்ந்தான். சோழப் பெரு மன்னர்கள் பட்டத்திற்குரிய தம் புதல்வர்க்கு இளவரசு பட்டம் கட்டி, ஆட்சித் துறைகளில் நன்கு பழக்கி வருவது வழக்கமாக இருந்தது. இம் முறையினை, முதன் முதலில் ஏற்படுத்திய பெரு மைக் குரியவன் முதலாம் இராச ராச சோழனுவான். இச்செய லால் பட்டத் தகராறு ஏற்படுதல் தவிர்க்கப் படுவதோடு, வருங் கால மன்னன், ஆட்சியில் பயிற்சி பெறுகின்ற பொன்னுன வாய்ப்பினைப் பெறுகின்ருன்.

நம் இராசேந்திரனும் தனது எட்டாம் ஆட்சி யாண்டுக் காலத்திலேயே தன் மகனுகிய முதலாம் இராசாதிராசனுக்கு இளவரசு பட்டம் கட்டினுன். இவ்விதம் இளவரசு பட்டம் பெற்ற இளவரசன், தன் பெயராலேயே ஆணைகள் பிறப்பிக்கும் அதிகாரமும் பெற்றிருந்தான். எனவேதான், இராசேந்திரனின் காலத்தில் தந்தை, மகன் - இவர்களது இணைந்த ஆட்சியினைக் காண முடிகின்றது. இவன் தன் மகன்பால் அரசியலை ஒப்ப டைத்ததால்தான், வியத்தகு வெற்றிகள் பெற்றுப் பெருவீரனுகத் திகழ முடிந்தது. நம் இராசேந்திரன், இராசாதிராசனை நாடாட் சியிலும், போர் நிகழ்ச்சியிலும் 26 ஆண்டுகள் பழக்கி வந்தமை ஈண்டுக் குறிப்பிடத் தக்க தாகும்.

நம் இராசேந்திரனின் இறுதிக் காலங்களில், பட்டத்து இள வரசனுன, முதலாம் இராசாதி ராசனே பல போர்களில் தலைமை யேற்றுச் சென்று, வெற்றி வாகை சூடினுன் என்று முன்பே கண்டோம். இவற்றுள் மேலைச் சாளுக்கியப் போர், ஈழப் போர் போன்றவை மிகவும் குறிப்பிடத் தக்கவை யாகும். இவ்விதமாகத் தந்தைக்கு உற்ற துணையாய் விளங்கிய முதல் இராசாதி ராசனே, நம் இராசேந்திர சோழனின் இறப்பிற்குப் பின்னர், சோழப் பெருநாட்டின் மன்னனுக முடிசூட்டப் பெற்ருன் என்ப

தும், ஈண்டு நினைவிற் கொள்ளத் தக்கதாகும். இளவரசர்களாக நியமிக்கப் பெறுவோர், தமது ஆட்சி யாண்டினை, இளவரசு பட்டம் பெற்ற ஆண்டிலிருந்தே கணக்கிடுவர்.

**பேரரசின் உட்பிரிவுகள்**

சோழப் பேரரசு, அக்காலத்தில் பல மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. மண்டல அதிகாரி 'மண்டலிகள்' அல்லது 'மண்டல முதலி'யென அழைக்கப் பட்டனர். ஆள்வினை பொருட்டு, முதலாம் இராச ராசன் காலத்துச் சோழப் பெருநாடு சிறியதும், பெரியதுமான ஒன்பது மண்டலங்களாகப் பிரிக்கப் பட்டிருந்தன. பெருமன்னர் அண்டை நாடுகளை வென்று, அவர்களைச் சிற்றரசர்களாகப் பாவித்து, அவர் நாடுகளைத் தன் பேரரசிற்குட்பட்ட மண்டலங்களாக இணைத்துக் கொண்டு, அவற்றிற்குத் தன் விருதுப் பெயர்களை இடுவது வழக்க மாகும்.

முதலாம் இராச ராசன் பெருவீரனாக விளங்கியதால், அவனது பேரரசு பல மண்டலங்களைப் பெற்றிருந்தது. முதலாம் இராச ராசனின் பேரரசில் அடங்கிய மண்டலங்களையும், அவற்றின் சிறப்புப் பெயர்களையும் ஈண்டுக் காண்போம்.

| நாட்டுப் பெயர் | | மண்டலப் பெயர் |
|---|---|---|
| சோணாடு | ... | சோழ மண்டலம் |
| பாண்டி நாடு | ... | இராச ராசப் பாண்டி மண்டலம் |
| சேர நாடு | ... | மலை மண்டலம் |
| கொங்கு நாடு | ... | அதிராசராச மண்டலம் |
| தொண்டை நாடு | ... | சயங்கொண்ட சோழ மண்டலம் |
| கங்கபாடி | ... | முடிகொண்ட சோழ மண்டலம் |
| நுளம்பபாடி | ... | நிகரிலிச் சோழ மண்டலம் |
| வேங்கை நாடு | ... | வேங்கை மண்டலம் |
| இலங்கை (ஈழம்) | ... | மும்முடிச் சோழ மண்டலம் |

சோழ மண்டல மென்பது இன்றைய தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி மாவட்டங்களையும், தென்னார்க்காடு மாவட்டத்தின் தென் பகுதியையும் தன்னகத்தே கொண்ட நிலப் பரப் பாகும்.

சயங் கொண்ட சோழ மண்டலம் என்பது தென்னார்க்காடு மாவட்டத்தின் பெரும்பகுதியினையும், செங்கற்பட்டு, வட ஆர்க்காடு, சித்தூர் மாவட்டங்களையும் தன்னகத்தே கொண்டுள்ள நிலப்பரப் பாகும்.

இராச ராசப் பாண்டி மண்டலம் என்பது மதுரை, இராம நாதபுரம், திருநெல்வேலி ஆகிய மாவட்டங்களைத் தன்னகத்தே கொண்ட தாகும்.

அதிராசராச மண்டல மென்பது கோயம்புத்தூர் மாவட்டத் தையும், சேலம் மாவட்டத்தின் ஒரு பகுதியையும் தன்னகத்தே கொண்டுள்ள தாகும்.

வேங்கை மண்டலம் என்பது கீழைச் சாளுக்கிய நாடாகும்.

மும்முடிச் சோழ மண்டல மென்பது ஈழ நாடாகிய இலங்கை யாகும். இராச ராசன் காலத்தில், வட இலங்கை மட்டுமே சோழராட்சியில் இணைக்கப் பெற்று, மும்முடிச் சோழ மண்டல மென அழைக்கப் பட்டது. நம் இராசேந்திரனது ஆட்சிக் காலத் திலோவெனில், இலங்கை நாடு முழுவதும் மும்முடிச் சோழ மண்டலத்தில் சேர்க்கப்பட்டது.

இனி, ஒவ்வொரு மண்டலமும் பல வள நாடுகளாகப் பிரிக்கப் பட்டிருந்தது. பெரும்பான்மையாக நோக்குமிடத்து, வளநாடு என்பது இரண்டு பேராறுகளுக்கு இடையில் அமைந்திருந்த நிலப்பரப் பாகும். சான்ருகச் சோழ மண்டலத்து உய்யக்கொண் டார் வளநாடு, அரசி லாற்றுக்கும், காவிரி யாற்றுக்கும் இடைப் பட்ட நிலப் பரப்பாகும் என்பது, தஞ்சை இராச ராசேச்சுரத்தில் காணப்படும் ஒரு கல்வெட்டால் புலப்படுகின்றது.

முதலாம் இராச ராசனது காலத்தில் சோழப் பேரரசு, வள நாடுகளாகவும், 79 நாடுகளாகவும் பகுக்கப் பட்டிருந்தது. அவ் வொன்பது வளநாடுகளின் பெயர்கள் அனைத்தும், முதலாம் இராச ராசனின் இயற்பெயரும் பட்டப் பெயர்களுமே யாகும். அவை,

1. இராசேந்திரசிங்க வளநாடு, 2. இராசாசிரய வளநாடு, 3. நித்தவிநோத வளநாடு, 4. சத்திரிய சிகாமணி வளநாடு, 5. உய்யக் கொண்டான் வளநாடு, 6. அருண்மொழித் தேவ வள நாடு, 7. கேரளாந்தக வளநாடு, 8. இராச ராச வளநாடு, 9. பாண்டிய குலாசனி வளநாடு என்பன வாகும்.

ஒவ்வொரு வளநாடும் பல நாடுகளாகவும் பகுக்கப் பட்டிருந் தது. நாட்டதிகாரி நாடாள்வான் எனவும், நாட்டு நாயகம் என வும், நாடுடையான் எனவும், நாட்டு வியவன் எனவும் அழைக்

கப்பெற்றுன். வளநாட்டு அதிகாரிகளும், நாட்டதிகாரிகளைப் போன்றே அழைக்கப் பட்டிருத்தல் வேண்டும். நாடு என்பது தொண்டை மண்டலத்தில் 'கோட்டம்' எனவும் சோழ மண்டலத்திலும் பிற பகுதிகளிலும் 'கூற்றம்' எனவும் அழைக்கப் பெற்றது. ஒவ்வொரு கூற்றமும் பல ஊர்களைக் கொண்டது. சிற்றூராயின் பலவூர் சேர்ந்தும், பேரூராயின் தனித்தும், ஊர் என்னும் அடிப்படை ஆள்நில வுறுப்பாகப் பகுக்கப் பட்டிருந்தன. தனியூராகவுள்ள பேரூர் 'தனியூர்' என்றும், கூட்டூரின் பகுதியான சிற்றூர் 'பற்று' அல்லது குறைப்பற்று என்றும் பெயர் பெறும். பல பற்றுகள் சேர்ந்த கூட்டூர், அதிலுள்ள முதன்மையான சிற்றூரால் அழைக்கப் பெறும். தனியூரான பேரூராயிருப்பினும், குறைப்பற்றுன சிற்றூரா யிருப்பினும், பார்ப்பனத் தலைமையுள்ள ஊர்களெல்லாம் சதுர்வேதி மங்கலம் எனும் பொதுப் பெயரால் அழைக்கப் பெற்றன.

அக்காலத்தில். ஓர் ஊர், மண்டலம்-வளநாடு-நாடு-ஊர் என்ற முறையில் குறிக்கப்பட்டு வந்தது. சான்றுகச் 'சயங்கொண்ட சோழ மண்டலத்து ஊற்றுக் காட்டுக் கோட்டத்துப் பாலையூர், நாட்டுப் பாலையூர் கிழவன் அரையன் முடிகொண்ட சோழன்' என்றும், 'சோழ மண்டலத்து, உய்யக்கொண்டார் வளநாட்டு, வேணுட்டு, கேரளாந்தகச் சதுர்வேதி மங்கலத்து நராக்கன் மாராயன் சனநாதபணுன இராசேந்திர சோழ பிரமாதி ராசன்' என்றும், நம் இராசேந்திர சோழனின் கரந்தைச் செப்பேடு குறிப்பிடுவதனுல் அவன் காலத்திய நாட்டுப் பிரிவுகளை நாம் அறியலாம்.

இந்நாட்டுப் பிரிவுகள் சில மன்னர் காலத்தில் சில மாற்றங்களையும் பெற்றன. சோழர் மண்டலத்திலுள்ள சத்திரிய சிகாமணி வளநாடு, முதற் குலோத்துங்க சோழனின் ஆட்சிக் காலத்தில் குலோத்துங்க சோழநாடு எனவும், இராசேந்திர சிங்க வளநாடு, உலகுய்ய வந்த சோழ வளநாடு எனவும் விருதராச பயங்கர வளநாடு எனவும் இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது என்பதையும் ஈண்டு நாம் எடுத்துக் காட்டாகக் காட்டலாம். இங்ஙனமே, முதற் குலோத்துங்க சோழனின் மகன் விக்கிரம சோழன் ஆட்சிக் காலத்தில் உலகுய்ய வந்த சோழ வளநாடு என்பது விக்கிரம சோழ வளநாடு என்னும் பெயரினைப் பெற்றது.

சோழ மண்டலத்தின்கண் இருந்த ஒன்பது வளநாடுகளின் பெயர்கள், இராசராசனது இயற்பெயரையும், சிறப்புப் பெயர்

களையும் கொண்டிருத்தலின் வளநாடு எனும் உட்பிரிவு இராச ராசனுக்கு முன் ஆண்ட மன்னர்கள் காலத்தில் இருந்ததில்லை என்பதையும், இராச ராசனே இப்பிரிவுகளை முதன் முதலில் ஏற் படுத்தினுன் என்பதனையும் ஈண்டு நாம் மனத்தில் கொள்ள வேண்டும்.

வளநாட்டின் உட் பிரிவாகிய நாடுகளுள் சில, கூற்றங்கள் என அழைக்கப் பெற்றன. நாடுகளும், கூற்றங்களும் அவ்வவற்றி லுள்ள பேரூர் ஒன்றைத் தலைநகராகக் கொண்டிருந்ததால், அதன் (பேரூர்) பெயராலேயே அந்நாடு வழங்கப் பெற்றது. இதனை நல்லூர் நாடு, அம்பர் நாடு, ஆக்கூர் நாடு, நாங்கூர் நாடு, தஞ்சாவூர்க் கூற்றம், ஆவூர்க் கூற்றம், வெண்ணிக் கூற் றம் எனும் பெயர்களா லறியலாம்.

சோணுட்டின் ஒன்பது வளநாடுகளுள் ஒன்றனைப் பற்றியும் அதன் பிரிவுகளைப் பற்றியும் விரிவாகக் காண்பது நலம் பயப்ப தாகும். ஈண்டு நாம் இராசேந்திரன் காலத்திய நித்த விநோத வளநாட்டினைப் பற்றி விவரமாக அறியலாம். கல்வெட்டா ராய்ச்சி அறிஞர் திரு. சி. கோவிந்தராசர் அவர்கள் கரந்தைச் செப்பேட்டினை ஆய்ந்து நித்த விநோத வளநாட்டின் பிரிவுகளை யும், வெண்ணிக் கூற்றத்துள் அடங்கிய ஊர்ச் சபைகளையும் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகின்ருர்.

'தஞ்சை மாவட்டத்திலுள்ள மன்னுர்குடி வட்டத்தின் வடக்குப் பகுதியும், அரிசிலாற்றுக்குத் தெற்குப் பரப்பும், தஞ்சா வூர் வட்டத்தின் கிழக்குப் பகுதியும், பாபநாசம் வட்டத்தின் மேற்குப் பகுதியும் கூடிய வளம் நிறைந்த பகுதியே நித்த விநோத வள நாடாகும். இவ்வள நாட்டுள் ஆவூர்க் கூற்றம், நல்லூர்நாடு, காந்தார நாடு, கரம்பை நாடு, கிழார்க் கூற்றம், பாம்புணிக் கூற்றம், முடிச் சோழநாடு, பொய்யூர்க் கூற்றம், பூண்டி நாடு என்ற பிரிவுகள் உள்ளன. இதன் தென் சிறையாக இணைந் திருந்ததே விர சோழ வள நாடு. இரண்டு வள நாட்டிலும் இடம் பெற்றிருந்ததும் வெண்ணி நகரப் பெருங்குறி சபையோடு கூடியதுமான கூற்றமே வெண்ணிக் கூற்ற மாகும்.'

இவ்வெண்ணிக் கூற்றத்துள், 1. முல்லை வாயில், 2. மதநா லய மங்கலம், 3. பாப்பார குலத்தூர், 4. அவநிகேசரி, 5. கொட்டையூர், 6. நகரம் சோழ விச்சாதிர சதுர்வேதி மங்கலம்,

7. தேவன் மங்கலத்தூர், 8. வெண்ணி நகரம், 9. பெரு நங்கை மங்கலம், 10. அவாயச் சதுர்வேதி மங்கலம், 12.பூண்டி யாகிய ஒலோகமாதேவிச் சதுர்வேதி மங்கலம், 13. வெண்ணுப் புத்தூர், 14. நெற்குன்றத்தூர் ஆகிய ஊர்களின் சபைகள் அங் கம் வகித்தன.

இதனைப் போன்று எல்லா மண்டலங்களுக்கும், வளநாடு களுக்கும், நாடுகளுக்கும் எல்லைகள் தெளிவாக்கப்பட்டு, அவற் றின் பகுதிகள் நன்கு விளக்கப் பட்டிருந்தன வென்பதனைக் கல் வெட்டால் அறியலாம். அக்காலத்திய சோழப் பெருநாட்டின் கண்ணுள்ள மண்டலங்கள் தற்காலத்திய மாகாணங்களுக்கும் (States), அக்காலத்திய வளநாடுகள் தற்காலத்திய மாவட்டங் களுக்கும் (Districts), அக்காலத்திய நாடுகளும் கூற்றங்களும் தற்காலத்திய வட்டங்களுக்கும் (Taluk) நிகரானவை என்பதும் ஈண்டு உணரத் தக்க தாகும்.

**நகரங்கள்**

நாட்டின் அணிகலன் நகர மாகும். வளங் கொழிக்கும் பெரிய மாளிகையைக் குறிக்கும் 'நகர்' என்பதன் அடிச் சொல்லி லிருந்து 'நகரம்' பிறந்த தாதலின் பெரிய மாட மாளிகைகள் நிறைந்த இடமே நகர மாகும் என்பது நன்கு விளங்கும். நகரங் களுள் தலை சிறந்து விளங்குவது தலைநக ராகும். பண்டைக் காலத்தில் சோணாட்டின்கண் புகழ்பெற்ற நகரங்கள் பல காணப் பட்டன. அவை அழகும் செல்வமும் பெற்று விளங்கின.

பண்டைக் காலத்தில் புலவர்கள், பெண்கள் அழகினை நக ரத்துடன் ஒப்பிட்டுக் கூறுவதனை மரபாகக் கொண்டிருந்தலின், பெண்களின் அழகினை, விரும்பிப் போற்றியது போல் நகரின் அழகினையும் விரும்பிப் போற்றினர் எனலாம். பண்டைய நகரங் கள் அனைத்தும் வாணிகச் சிறப்பும், தொழிற் சிறப்பும், வளமும் பெற்றுத் திகழ்ந்தன. நகரங்கள் அமைத்தலில் நம் முன்னோர் சிறந்து விளங்கினர்.

நகரங்களுள் தலைசிறந்து விளங்குவது தலைநகர மாகும். தலை நகரத்தில் இருந்துதான் மன்னன் ஆட்சி புரிதல் பண்டைய மரபாகும். தலைநகரம், திட்டமிட்டு அமைக்கப்பட்டு, அரண்மனை அல்லது கோயிலை மையமாகக் கொண்டு, ஆறு போன்று நீண்டு அகன்ற தெருக்களையும், பாதுகாவல் மிக்க கோட்டையையும், அகழியையும் கொண்டு கவினுற்று விளங்கிற்று.

'மண்ணுற ஆழ்ந்த மணிநீர்க் கிடங்கின்
விண்ணுற ஓங்கிய பல்படைப் புரிசை
தொல்வலி நிலைஇய அணங்குடை நெடுநிலை
நெய்படக் கரிந்த திண்போர்க் கதவின்
மழையாடு மலையின் நிவந்த மாடமொடு'

எனவரும் 'மதுரைக் காஞ்சி' அடிகளால் அறியலாம்.

மூவேந்தர்களுள் மங்காச் சிறப்பினைக் கொண்ட சோழ வேந்தர் ஆட்சிக் காலத்து உறையூர், கருவூர், அழுந்தூர், குடவாயில், திருவாரூர், தஞ்சை, பழையாறை, கங்கை கொண்ட சோழபுரம், இராசராசபுரம் என்பன அகநாட்டுத் தலைநகர்களாகவும், காவிரிப்பூம் பட்டினம் போன்றன கரைநாட்டுத் தலைநகர்களாகவும் விளங்கின.

பழையாறை நகர் நந்திபுரம், ஆயிரந்தளி, முடி கொண்ட சோழபுரம் எனவும் அழைக்கப் பெறுகிறது.

விசயாலயன் வழியில் வந்த சோழ மன்னர்கள் ஆட்சிக் காலத்தில் பழையாறை, தஞ்சை, கங்கை கொண்ட சோழ புரம், இராச ராசபுரம் என்பன தலைநகரங்களாக விளங்கின.

நம் இராசேந்திர சோழனது ஆட்சியின் ஆரம்பக் காலத்தில் தஞ்சையே தலைநகரா யிருந்திருக்க வேண்டும். ஏனெனில், இராசேந்திர சோழன் தனது கங்கை வெற்றிக்குப் பின்னரே கங்கை கொண்ட சோழ புரத்திற்குத் தனது தலைநகரை மாற்றினான். இவன் ஏறத்தாழக் கி.பி. 1025 இல் கங்கை கொண்ட சோழ புரத்தைத் தலைநகராய்க் கொண்டிருத்தல் வேண்டுமென்று நாம் கருத இடமுண்டு.

பிற்காலச் சோழ வமிசத்தைத் தோற்றுவித்த விசயாலயன் கி.பி. 846 இல் முத்தரையர்களை வென்று, தஞ்சையைக் கைப்பற்றி, அதனைத் தலைநகராகக் கொண்டான். தஞ்சை, 'தஞ்சாபுரி' என்றும் 'இஞ்சி சூழ் தஞ்சை' என்றும் போற்றப்படுகிறது. இஞ்சி யென்பது மதில் எனப் பொருள்படும். எனவே, தஞ்சைப் பெருநகரானது உள்மதில், புறமதில் ஆகிய மதில்களைக் கொண்டு மிகப் பெரிய நகராக விளங்கியது என்பது புலனாகும். தஞ்சை ஏறத்தாழ 180 ஆண்டு காலம் சோழர்களின் தலைநகராக விளங்கிய சிறப்புடைய தாகும்.

நம் முதலாம் இராசேந்திரனால் அமைக்கப்பட்ட புதிய தலைநகரான கங்கை கொண்ட சோழபுரம் ஏறத்தாழ 250 ஆண்டு

களாகச் சோழர்களின் தலைநகராகச் சிறப்புற்று விளங்கியது. இந்நகரின்கண் இராசேந்திரனால் கட்டப் பெற்ற கங்கை கொண்ட சோளேச்சரர் ஆலயம் கலைச் சிறப்பு மிக்கதாகும். கங்கை கொண்ட சோழ புரத்தின் முழு விவரங்களைக் 'கலைத் தொண்டு' என்னும் பகுதியில் காண்க.

சோழர்கள், பல்லவர்களை முறியடித்த பின்பு 'காஞ்சி மாநகரினைத்' துணைத் தலைநகரமாகக் கொண்டு, சில காலம் அங்குத் தங்கி இருந்தனர். நம் இராசேந்திரனும் மேலைச் சாளுக்கியரின்மீது படையெடுத்த போது, காஞ்சி அரண்மனையி லிருந்து புறப்பட்டான் என்று கல்வெட்டு உணர்த்துகின்றது. காஞ்சியில் ஜின காஞ்சி எனும் பகுதியில் சோழர்கள் தங்குவதற்குக் கொட்டகாரம் ஒன்று அமைத்திருந்தனர். கொட்ட காரம், அம்பலம் எனவும் அழைக்கப்பட்டது. இஃது உலோகங்களால் அமைக்கப்பட்டதாதலின் தீயினால் அழிக்க முடியாததாக இருந்தது.

நம் இராசேந்திர சோழன் கங்கை கொண்ட சோழபுர அரண்மனையில் மட்டுமன்றிக் காஞ்சி அரண்மனையிலும், பழையாறை அரண்மனையிலும், தஞ்சை அரண்மனையிலும் சில காலம் தங்கினான். மன்னனது அரண்மனையில், அவனுக்குப் பணிபுரிய ஏவலர்கள் பலர் வேலைக்கு அமர்த்தப் பட்டனர். அவர்கள் தமக்கு இடப்பட்ட கட்டளைகளை அட்டியின்றி முடித்தனர். அவர்களுள் சிலர் மன்னனின் மெய்க் காப்பாளர்களாக விளங்கினர் என்பதைத் 'திருமெய்க்காப்பார்' என்று சில சமயங்களில் குறிப்பிடப் பெற்றிருத்தலின் இனிது அறியலாம். மன்னனுக்குப் பணி புரியும் பரிவாரங்கள் மன்னனைத் தெய்வமாகப் போற்றினர்.

வேளங்கள் (Velans) என அழைக்கப்பெறும் இவ்வரண்மனை ஊழியர்கள், குடியிருப்பதற்கெனத் தனிக் குடியிருப்புகள் தஞ்சையிலும், கங்கை கொண்ட சோழ புரத்திலும் அமைக்கப் பட்டிருந்தன.

அரச குடும்பத்தினர் பலர் தனித் தனி மாளிகையில் வசித்தனர். இவர்கள் தமக்கெனத் தனியாக ஏவலர்களை அமர்த்திக் கொண்டனர். கங்கை கொண்ட சோழ புரத்தில், பல மாளிகைகள் இருந்தன என்பதால் இவை இனிது விளங்கும்.

அரண்மனைக் காரியங்களைக் கவனிக்க மாளிகை நாயகம், திருமுகக் கணக்கு, அகப் பரிவாரம், அணுக்கச் சேவகம்,

உழைச் சுற்றுளர், அடையாளக்காரர் போன்றவர்கள் நியமிக்கப்பட்டனர்.

மன்னனின் முன்னோரின் அருமை பெருமைகளை எடுத்துக் கூறிக் குடிப் பெருமையை உணர்த்தி, மன்னனின் ஊக்கத்தினையும், வீரத்தையும் கிளருமாறு 'ஏத்தாளர்' என்ற பாடகர் பலரிருந்தனர்.

***மத்திய அரசு***

மன்னன், தான் விரும்பிய செயலைத்தானே தன்னிச்சைப்படி நடத்துதற்கு அதிகாரம் பெற்றவனெனினும், அரசியல் அதிகாரிகளுடனிருந்து ஆராய்ந்தே செயல்படுத்தினான். ஆட்சித்துறையின் பல்வேறு கிளைகளின் நிருவாகத் தலைவர்கள், மன்னனுக்கு ஆட்சி நிருவாகத்தில் உற்றதுணையாக,ஊன்று கோலாக விளங்கியிருந்தனர் என்பதற்கு ஆதாரங்கள் காணக் கிடக்கின்றன.

நாட்டின் அன்றாட நிருவாகத்தில், உடன் கூட்டத் ததிகாரிகள் என்றழைக்கப்படும் உயர்மட்ட அதிகாரிகள், மன்னனுக்குப் பெருந்துணை புரிந்ததாகக் கல்வெட்டுகள் சான்று பகர்கின்றன. இவர்கள் மன்னனின் தேவைகளைக் கவனித்து வந்தனர்.

அரசாட்சியில் மன்னனுக்குப் பெருந்துணை புரிந்தவர் அமைச்சர்களும், தலைமைச் செயலாளருமாவர். இவர்களைக் கலந்து கொண்டுதான் மன்னன் ஆணை பிறப்பிப்பது வழக்கமாயிருந்தது. சோழப் பெருமன்னர்கள் அமைச்சர் குழு ஒன்றனையும், அதன் தலைவரான முதலமைச்சரையும் நியமனம் செய்து, அவர்களின் ஆலோசனைகளை அவ்வப் பொழுது கேட்டு நாடாட்சி புரிந்தான் என்பதனை இலக்கியங்கள் வாயிலாக அறிகிறோம். அரசியல் அலுவலர்களுள் 'பெருந்தனத்தார்', 'சிறுதனத்தார்' என இரு பிரிவுகள் நிலவி வந்தன. உயர்தரச் செயலாளர் பெருந்தனமெனவும், கீழ்ப் பிரிவுச் செயலாளர் சிறுதனமெனவும் அழைக்கப் பெற்றனர். இவ்வலுவலர் பதவிகள் பெரும்பாலும் பரம்பரை யுரிமை பற்றி வரலாயின.

'மத்தியஸ்தன்' எனப்படும் அலுவலரும் மன்னனுக்குப் பேருதவி புரிந்து வந்தான். இவன் 'கரணத்தான்' எனவும் 'கேட்கோவன்' எனவும் 'கரணத்தான் கேட் கோவன்' எனவும் அழைக்கப் பெறுகிறான். ஊரார் தீட்டிய ஆவண ஓலையில் கையொப்பமிட்டு மன்னனின் சார்பாகத் தன் இசைவினைத் தெரிவித்தல் இவனது கடனாகும்.

இராசேந்திரனது கரந்தைச் செப்பேட்டினைக் கொண்டு சதுர்வேதி ஸ்ரீ ஜகநாதன் என்பான் இம்மன்னனது அமைச்சனாகப் பணிபுரிந்து புகழ் பெற்றான் என்பது புலனாகிறது.

ஐம்பெருங்குழு என்ற அதிகாரச் சுற்றம், மன்னனுடைய ஆட்சிக்கு, அடிப்படைத் துணையா யிருந்தது. ஐம்பெருங்குழுவிற்கு அடுத்து, அதனினுஞ் சற்று விரிவாக விளங்கிய அதிகாரச் சுற்றம் எண்பேராயம் என்ப தாகும்.

உறுதிச் சுற்றம் என்ற குழு மன்னனுடைய நன்மையையும், உடல் நலத்தையும் கவனித்து வந்தது.

அரசியற் பொறுப்புச் சுற்றம் என்ற குழு, மன்னனில்லாத அல்லது அவன் கடுநோயுற்ற பொழுது அரசியலைக் கவனித்தது.

அரசியல் அலுவலர்கட்கு நில மானியங்கள் வழங்கப்பட்டதன் மூலம் ஊதிய மளிக்கப்பட்டது. இதனை 'ஜாகீர்' முறையுடன் ஒப்பிட்டுணரலாம். இதைத் தவிரப் போர்த் திறைப் பொருள்களிலும், அலுவலர்கட்குப் பங்கு கொடுக்கப்பட்டது.

சோழர் காலத்தில் அதிகாரம் மையப்பட்டிராமல் பன்முகப் படுத்தப்பட்டிருந்தது போற்றத் தகுந்த தொன்றாகும். அதிகாரம் பன்முகப்படுத்தப்பட்டதால் அலுவலர்கள் முறையாகத் தம் கடமைகளை ஆற்ற முடிந்தது. மேற் கூறியவற்றால்,

'இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும்.'[1]

என்னும் குறள் மொழிக் கிணங்க மன்னன், தன் மனம் சென்ற வழி ஆட்சி நடத்தாது அறிஞர் பெருமக்களின் அறிவுரை கேட்டு ஆட்சி நடத்தினான்.

### அரசியல் அதிகாரிகளும் கடமைகளும்

சோழ மன்னர்களின் ஆட்சிக் காலங்களில் பல்வகைத் துறைகளையும் நிருவகித்த பெருமை, அதிகாரிகளைச் சாரும். இவர்களுள் அமைச்சர் முதன்மை பெற்றவராவர்.

[1] திருக்குறள்-பெரியாரைத் துணைக்கோடல்-8

**ஐம்பெருங்குழு**

அமைச்சர், புரோகிதர், படைத்தலைவர், தூதர், ஒற்றர் என்னும் ஐவர் குழுவின் பெருந்தொகுதியே ஐம்பெருங்குழு என அழைக்கப்படுகின்றது.

சோழ நாட்டில், தூதர்கள் பெருந்தொகையினரா யிருந்தனர் என்பது தெளிவு. அரச தூதர் சட்டையுந் தலைப்பாகையும் அணிந்திருந்தனர். தூதர் மன்னன் விடுத்த செய்திகளைப் பிற மன்னரிடத்துக் கொண்டு சேர்ப்போ ரென்றும் மன்னனின் கட்டளையை நாட்டதிகாரிக ளிடத்தும், ஊரதிகாரிக ளிடத்தும் கொண்டு செல்வோ ரென்றும் இருவகைப் படுவர். இவர்கள் அதிகாரிகள், மன்னர், இளவரசர் ஆகியோரால் மதிக்கப்பட்டனர்.

**எண்பேராயம்**

கரணத்தியலவர் (கணக்கர்), கரும விதிகள் (மன்னனது கட்டளையை நிறைவேற்றும் அதிகாரிகள்) கனகச் சுற்றம் (பண்டாரம் எனப்படும் நிதியக யதிகாரிகள்), கடை காப்பாளர் (அரண்மனை வாயிற் காவலர்), நகர மாந்தர் (நகரப் பெருமக்கள்), வணிகப் பெருமக்கள், படைத்தலைவர், யானை மறவர் இவுளி மறவர் (குதிரைச் சேவகர்), என்னும் கூட்டத்தாரின் பெருந்தொகுதி எண் பேராய மாகும்.

**உறுதிச் சுற்றம்**

குறிக்கப்பட்ட படைத் தலைவர், நிமித்தகர், மருத்துவர், நட்பாளர், அந்தணர் ஆகிய ஐவர் சேர்ந்த குழு உறுதிச் சுற்ற மாகும். மன்னனைப் பேணிப் பாதுகாப்பது இக்குழுவின் கடமை யாகும்.

**அரசியற் பொறுப்புச் சுற்றம்**

'ஆசான் (புரோகிதன்), பெருங்கணி (கணியர் தலைவன்), அறக்களத் தந்தணர் (நியாய சபையினர்), காவிதி (வரியதிகாரிகள்), மந்திரக் கணக்கர் (அரச கட்டளை எழுதுவோர்) ஆகிய ஐந்திறத்தாரைக் கொண்டது, அரசியற் பொறுப்புச் சுற்ற மாகும். மன்ன னில்லாத போழ்து, நாட்டாட்சியினை மேற்கொள்ளும் பெரும்பொறுப்பு இக்குழுவினைச் சார்ந்தது.

**அரசவை**

மன்னன், சூழ்வினை அமைச்சர், படைத்தலைவர் பல்வேறு ஆள்வினைத் திணைக் களத்தலைவர், பெருங்கணி, ஆசான், பல்

வகைப் புலவர், மற்றும் நாள்தோறும் குழுமி யிருக்கும் நிலையான கூட்டம் அனைத்தும் அரசவை எனப்படும். அரசவை கூடுமிடம் அவைக்கள மாகும். அவைக் களத்தின்கண் மன்னன் முக்கிய இடத்தினை வகிப்பான். மன்னனுக் கடுத்து முதலமைச்சனே தலைமை யிடத்தினை வகிப்பான்.

### படைத்தலைவன்

மன்னனது காலாட்படை, குதிரைப்படை, யானைப்படை இவற்றிற்குத் தலைமை வகித்துப் போர் நிகழுங் காலங்களில், படை நடத்திச் சென்று போர் செய்வோன் படைத் தலைவனு வான். மன்னனின் வெற்றிகட்கு இவனே காரண மாவான்.

### நாட்டதிகாரிகள்

நாட்டதிகாரிகள் ஒவ்வொரு உள்நாட்டிற்கும் தலைவர்க ளாய் விளங்குவோராவர். இவர்கள் தமது கண்காணிப்புக் குட் பட்ட நாட்டைச் சுற்றிப் பார்த்துக் குடி மக்களின் நலன்கள், அற நிலையங்கள், நீதி வழங்கும் முறை, முதலானவற்றை மேற் பார்வையிட்டு மக்களுக்குத் தேவையான வசதிகளைச் செய்வர்.

### நாடு காவலதிகாரி

நாட்டிலுள்ள ஊர்களில் களவு, கலகம், அமைதி யின்மை, போன்ற தீச் செயல்கள் நடவாமல் காத்துவரும் அதிகாரி நாடு காவலதிகாரி யாவார். இதனால், நாட்டில் குழப்பங்கள் அப்போ தைக்கப் போது அடக்கப்பட்டன.

### நாட்டை யளப்போர்

ஒவ்வொரு நாட்டையும், கூறுபட அளவிட்டுக் கணக்கில் வைப்போர் நாட்டை யளப்போராவர். முதலாம் இராசராசனது ஆட்சிக் காலத்தில் சோழப் பெருநாடு முழுதும் அளக்கப்பட் டது.[1]

### நாடு கண் காட்சி

நாடுகண் காட்சி என்போர், நாட்டை யளப்போர் சரியாக நாட்டை அளந்துள்ளனரா என்பதை மேற்பார்வையிடும் அதி காரிகளாவர்.

[1] S. I. I. VII. Nos. 222 and 223

**வரியிலார்**

இவர்கள் கூறுபட அளந்திட்ட நாட்டின் நிலங்களின்மீது வரியிட்டு, வரிகளின் மூலம் தண்டப்படும் தொகையைக் கணக்கில் எழுதி வைப்பவராவர். ஊர்களிலும், தலைநகரிலும் தண்டப்பட்டு வந்த வரித்தொகையின் கணக்கையும் இவர் பதிவார்கள்.

**வரிக்குக் கூறு செய்வோர்**

வரி வகைகளின் மூலம் வசூலிக்கப்பட்ட பொருளைச் செலவிடும் முறைகளைப் பாகுபாடு செய்வோர் வரிக்குக் கூறு செய்வோர் என அழைக்கப் பட்டனர்.

**வரிப் பொத்தகம்**

ஒவ்வொரு ஊரினின்றும் மன்னனுக்கு வரவேண்டிய காணிக் கடனின் கணக்கினை வைப்போர் வரிப் பொத்தகம் என அழைக்கப் பெற்றனர். காணிக் கடன் என்பது நிலவரி யாகும். கிழான் அரங்கன் வீதி விடங்கன் என்பான் இராசேந்திரனின் காலத்து வரிப் பொத்தகமாக அமர்த்தப் பட்டான். இறையான் சேரிக் கிழவன் புழமதனிராமன் என்பானும் இப்பணியில் அமர்த்தப்பட்டான்.

**வரிப் பொத்தகக் கணக்கு**

மேற்கூறிய வரிப் பொத்தகம் என்னும் அதிகாரியின் தலைவன், வரிப் பொத்தகக் கணக்கு என அழைக்கப் பட்டான். முதலாம் இராசேந்திரன் ஆட்சிக் காலத்தில், அரங்கன், வீதி விடங்கன் என்பான் வரிப் பொத்தகக் கணக்கு எனும் அதிகாரியாகப் பணி புரிந்தான் என்பதைச் சயங் கொண்ட சோழ மண்டலத்துக் காலியூர்க் கோட்டத்துப் பாகூர் நாட்டின் கூழம்பந்தல் கிராமத்தி லமைந்துள்ள கோயில் கல்வெட்டால் அறியலாம்.

**புரவு வரி**

புரவு வரி என்போர் நிலவரி நீங்கிய இறையிலி நிலங்களிலிருந்தும், ஊர்களிலிருந்தும், வருவதற்குரிய பிற வரிகளின் கணக்கினைப் பதிவு செய்பவராவர்.

**புரவுவரித் திணைக் களம்**

புரவுவரித் தொகுதி புரவுவரித் திணைக் களம் எனப்படும். நம் இராசேந்திரன் காலத்தில் 1. பொன்னன் கொண்டயன், 2. சிறு குடையான் அடிகள் திருமணி, 3. ஆலங்குளவன் ஆதித்தன்,

4. சூல பாணி அருமொழி ஆகிய நால்வரும் வரித் திணைக் களப் பணியாற்றினர் என்பது கல்வெட்டால் அறியப்படுகிறது.

### புரவுவரித் திணைக் களத்துக் கண்காணி

புரவுவரித் திணைக் களத்துக் கண்காணி என்போர், புரவு வரித் திணைக் களத்து அதிகாரிகளைக் கண்காணிக்கும் உயர் அதிகாரி யாவர். 1. பெரும்பேற்கிழான் பட்டன் வாசுதேவன், 2. சீகண்டன் சேந்தன் ஆகிய இருவரும் நம் இராசேந்திரன் ஆட்சிக் காலத்தில் புரவு வரித் திணைக் களத்துக் கண்காணி களாவர்.

### புரவு வரிச் சீகரணம்

புரவு வரித் திணைக் களத்துத் தலைமைக் கணக்கன் புரவ்வரிச் சீகரணம் என அழைக்கப் பெற்றான்.

### புரவு வரித் திணைக்கள நாயகம்

புரவு வரித் திணைக்களத் தலைமைக் கணக்கனின் தலைவன் புரவு வரித் திணைக்கள நாயகம் எனும் பெயரால் அழைக்கப் பட்டான்.

### கருமி

'ஓலை நாயகம்' என்னும் அதிகாரியால் சரி பார்க்கப்பட்ட மன்னனது ஆணையைப் பதிவேட்டில் பதிவு செய்யும் அதிகாரி 'கருமி' எனப்படுவார். இவ்வாறு பதிவு செய்யப்படுதலே 'வரி யிலிட்டுக் கொள்வது' என்ப தாகும்.

### வரியிலீடு, புரவுவரித் திணைக்கள முகவெட்டி

மேற்கூறிய அதிகாரிகளைப் போல இவ்விருவரும் வரியதிகாரி களாவர்.

### ஓலை எழுதுவோன்

மன்னனது ஆணையினை ஓலையில் எழுதுவதால் இவன் ஓலை எழுதுவோன் எனப்பட்டான். இராசேந்திரனது கூழம்பந்தல் கோயில் கல்வெட்டினால் மகிபால குலகாலன் என்பான் இப்பணி யினைச் செய்தான் என அறிய முடிகின்றது.

'இப்படி வரியிலிட்டுக் கொள்க வென்று நாம் சொல்ல நம் ஓலை எழுதும் சயங்கொண்ட சோழ மண்டலத்து ஊற்றுக்காட்டுக் கோட்டத்துப் பாலையூர் நாட்டுப் பாலையூர் கிழவன் அரையன்

முடிகொண்ட சோழன் எழுத்தினுலும்' என இராசேந்திரனின் கரந்தைச் செப்பேடு குறிப்பிடுவதனல், அரையன் முடிகொண்ட சோழன் என்பான் ஓலை எழுதுவானுகப் பணி புரிந்தான் என்பதை அறிகிறேம்.

### ஓலை நாயகன்

ஓலை எழுதுவோரால் எழுதப்பட்ட மன்னனின் ஆணைகளைச் சரிபார்க்கும் பொறுப்பினை யுடையவர் ஓலைநாயகமாவார். 1.விக்கிரம சோழ சோழிய வரையன், 2. இராச ராச பிரம்ம ராயன், 3. உய்யக் கொண்டார் வளநாட்டு வெணுட்டுக் கேரளாந்தகச் சதுர்வேதி மங்கலத்து நராக்கன் கிருட்டிணன் இராமனுன இராசேந்திர சோழப் பிரம்ம ராயன், 4. உய்யக் கொண்டார் வளநாட்டுத்திரைமூர் நாட்டுப் பாம்புணிக் கூற்றத்து அரை சூருடையான் ஈராயிரவன் பல்லவயனுன உத்தம சோழப் பல்லவரையன், 5. அருமொழி தேவ வளநாட்டு நென்மலி நாட்டு உத்தம சோழ நல்லூருடையான் பாஞூர் அம்பலத் தடியான முடிகொண்ட சோழ விழுப்பரையன் ஆகியோர் இராசேந்திரன் ஆட்சிக் காலத்தில் ஓலை நாயகன் என்ற அதிகாரிகளாகப் பணியாற்றினர் என்பதைக் கல்வெட்டுகளாலும், செப்பேடுகளாலும் அறியலாம்.

### நாழிகைக் கணக்கர்

அத்தாணி மண்டபத்திலும் அரண்மனையிலும், அவ்வப்போது நாழிகை யறிந்து (காலத்தை) மன்னனுக்கு அறிவிப்போர், நாழிகைக் கணக்கர் ஆவர். இவர்கள் நாழிகை வட்டிலின் துணைகொண்டு நாழிகை யறிவர்.

### திருவாய்க் கேள்வி

இஃது அரச ஆணைவாய்க் கேள்வி என வழங்கப் பெற்றது. மன்னன் அவ்வப்போது திருவாய் மலர்ந்தருளும் ஆணைகளைக் கேட்டுவந்து திருமந்திர ஓலையிடம் அறிவிப்போர் திருவாய்க் கேள்வி என அழைக்கப்பெற்றனர்.

### திருமந்திர ஓலை

திருமந்திர ஓலை யென்போர் மன்னனின் ஆணையைத் திருவாய்க் கேள்வி என்னும் அதிகாரி அறிவிக்க அறிந்து அவ்வரச ஆணையினை எழுதியும் இன்னின்ன காலத்து இன்னின்ன நடத்தற்குரியன என்பதை மன்னனுக்கு நினைவூட்டியும், அவனல்

நடத்தற்குரிய காரியங்களை நிருவகித்துப் பார்த்தும், அவனின் அந்தரங்கச் செயலனாக இருந்து பணி புரிவோனாகும்.

> 'முறையி டத்திரு மந்திர வோலையாண்
> முன்வ ணங்கிமு ழுவதும் வேந்தர்தம்
> திறையி டப்புற நின்றனர் என்றலும்
> செய்கை நோக்கிவந் தெய்தி யிருக்கவே'

என்று செயங் கொண்டார் கூறுவதாலும் இது விளங்கும்.

**திருமந்திர ஓலைநாயகம்**

திருமந்திர ஓலை என்னும் அதிகாரிகளுக்குத் தலைவராக இருந்து, செய்திகளைக் கண்காணிப்பவர்கள் திருமந்திர ஓலை நாயகம் என்னும் பெயரால் அழைக்கப் பெற்றனர். பொதுவாக நாயகம் என்றாலே தலைவன் எனப் பொருள்படும். நம் இராசேந்திரன் காலத்தில் கங்கை கொண்ட சோழ புரத்து இராச வித்தியாதரப் பெருந்தெருவில் சோநகன், சாவூர் பரஞ்சோதி ஆகியோர் திருமந்திர ஓலை நாயகமாகப் பணி புரிந்தனர்.

**பட்டோலைப் பெருமான்**

நாள்தோறும் நடக்கும் அரசியல் நிகழ்ச்சிகளை, நிகழ்ச்சிப் புத்தகத்தில் குறித்து வைப்பவன் பட்டோலைப் பெருமான் எனப் பெயரிடப் பட்டான்.

**பட்டோலை**

தபால் எழுதுவோன் பட்டோலை எனப்பட்டான்.

**வாயிற் கேட்போர்** (Secretarial Staff)

வாய்க்கேள்வி எனப்படும் அரசு ஆணையைக் கேட்டெழுதும் அதிகாரச் சுற்றத்திற்கு வாயிற்கேட்போர் எனப் பெயர்.

**விடையில்**

கிராம சபைகளினின்றும், நாட்டதிகாரிகளிடத்திருந்தும், பிற அதிகாரிகளிடத்திருந்தும், வரும் ஓலைகளைப் படித்தறிந்து அவற்றிற்குத் தக்கவாறு, அரசாங்க சட்ட திட்டப்படி விடையெழுதி அனுப்புவோர் விடையில் எனப்பட்டனர். மற்றும் மன்னனுடைய ஆணைத் திருமுகத்தைத் தூதுவர் மூலமாக உரியவர்கட்கு அனுப்புவோரும் இவர்களே யாவர்.

**விடை அதிகாரி**

மேற்கூறியவாறு தக்க விடைகளை எழுதி யனுப்பும் விடையில் என்னும் அலுவலர்களின் தலைவனுக்கு விடையதிகாரி எனப் பெயர்.

**ஆணத்தி**

இவர் மன்னனது ஆணையாகிய திருமுகத்தை எடுத்துச் செல்லும் அதிகாரியாவார்.

**கரும விதிகள்**

கருமிகள் என்னும் ஆக்க வினைத் துறையர்களை, ஏவி நடத்தி மேற்பார்வையிடும் அதிகாரிகள் கரும விதிகளாவர்.

**உடன் கூட்டம்**

மன்னன் தலைநகரின்கண் தங்கி யிருக்குங் காலையும், நாடு காவல் மேற்கொண்டு வெளியிடஞ் செல்லு மிடத்தும், அவனுடன் கூட விருக்கும் அரசியல் வினைக் கூட்டத்தார் உடன் கூட்டம் என அழைக்கப் பெறுவர். பல அரசியல் துறைகளின் தலைவர்கள் இக்குழுவில் இடம் பெறுவர். வரி, தொழில், வாணிகம், செலவு முதலியன பற்றி மன்னன் இவர்களுடன் கலந்தாலோசித்துச் செயல்படுவான். இவ்வுடன் கூட்டத்தை அமைச்சர் குழு எனக் கூறுதல் தவருகாது. இவர்கள் மன்னனின் உயர்மட்ட அதிகாரிகள் என்பதனைக் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன.

**உடன் கூட்டத்து அதிகாரிகள்**

உடன் கூட்டத்தினருள் அதிகாரிகளா யிருப்போர் உடன் கூட்டத் ததிகாரிகளாவர். நம் இராசேந்திரனது ஆட்சியில் உதய திவாகரன் தியான ராச ராச மூவேந்த வேளான் சூற்றியான சோழ வேளான் என்பவர்கள், உடன் கூட்டத்துக் கருமம் ஆராய்பவர்களாக இருந்தனர் என்பது கல்வெட்டால் அறியப் படுகிறது.

பொதுவாக வினையாற்றும் காலை மன்னனைச் சூழ்ந்திருக்கும் பரிவாரம் மூன்று வகைப்படுவர். அவை ஏவற் பரிகாரம், காவற் பரிகாரம், வினைப் பரிகாரம் ஆகும்.

**கட்டியங்காரன்** (Herald)

மன்னன் அரண்மனையினின்றும் வெளியில் புறப்பட்டு நாடு நகரங்களுக்குச் செல்லும் போதெல்லாம் அவனது பரிவாரத்திற்கு முன் சென்று, மன்னனது வருகையை ஆங்கு அறிவித்து

மக்களை வழியினின்றும் விலக்கிப் போக்குவரத்து வசதியினை யேற்படுத்துவோன் கட்டியங்காரனாகும். தற்காலத்தில் அமைச்சர்களும் பெருந்தலைவர்களும் நகரங்களுக்கு வருகை புரியும்போது மக்கள் கூட்டத்தினை, ஒருநெறிப்படுத்தித் துரிதப் போக்குவரத்துக்குத் தகுந்த ஏற்பாடுகளைச் செய்யும் காவல் துறைக்கு ஒப்பானவர் கட்டியங்காரர் எனக் கூறலாம்.

***படையுள் படுவோன் அல்லது சின்னமூதி***

மன்னன் போர்த் தொடர்பாகப் பிறப்பிக்கும் ஆணைகளை அவ்வப்போது காள மூதிப் படைகட்குத் தெரிவிப்பவன் படையுள் படுவோன் ஆவன். அவன் படைக் கிழவன், சிறுக்கன், படைச் சிறுக்கன், படைச் சிறுபிள்ளை என்பன போன்ற பல பெயர்களால் அழைக்கப்பட்டான்.

***அரசாங்கச் செயலாளன்***

உடன் கூட்டத்தாரின் முடிவுகளை மன்னன் ஆணைப்படி அவ்வத் துறை அதிகாரிகட்கு அறிவித்து, எப்பொழுதும் மன்னனருகே யிருந்து அரசியல் செய்திகளை மன்னனுக்கு அறிவிப்பவன் அரசாங்கச் செயலாளன் ஆவான்.

***மாளிகை நாயகம்*** (Chamberlain)

அரண்மனைக் காரியங்களை மேற்பார்வை செய்வோன் மாளிகை நாயகம் எனப்பட்டான். அக்காலத்து அரண்மனை, மாளிகை எனவும் அழைக்கப் பெற்றது ஈண்டு நாம் நினைவிற் கொள்ளத் தக்க தாகும்.

***திருமுகக் கணக்கு***

திருமுகக் கணக்கு என்போன் அரண்மனை வரவு செலவுக் கணக்கு எழுதுவோ னுவான்.

***அகப் பரிவாரம்***

அரண்மனையில் பணி புரியும் ஏவலர்கள் அகப் பரிவாரம் என அழைக்கப்பெற்றனர்.

***அணுக்கச் சேவகம்***

மன்னனொடு நெருங்கிப் பணி செய்வோர் அணுக்கச் சேவகம் எனப்பட்டனர்.

**உழைச் சுற்றுளர்**

மன்னனுக்குப் பக்கத்திலிருந்து ஏவல் கேட்போர் உழைச் சுற்றுளராவார்.

**அடையாளக்காரர்**

மன்னனுக்குக் கவரி, ஆலவட்டம் ஆகியவை வீசுவாரும் குடை, கொடி ஆகியவை பிடிப்பாரும் அடையாளக்காரர் என் றழைக்கப்பட்டனர்.

**ஊர்களிலிருந்த வினைஞர்**

ஒவ்வொரு ஊரிலும் மன்ன னுணைப்படி ஊர் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சபை நிருவாகத்தைக் கவனித்து வந்தது. அச்சபையார் ஆளுங்கணம் எனவும், கணகப் பெருமக் கள் எனவும் வாரியப் பெருமக்கள் எனவும், கணவாரியப் பெரு மக்கள் எனவும் அழைக்கப் பெற்றனர்.

**நகரத்தார்**

நகர மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு நகர நிருவாகத்தைக் கவனிக்கும் சபையார் நகரத்தாராவர்.

**கரணத்தான்**

கரணத்தான் என்போன் ஊர்ச் சபைக் கணக்கினை எழுதி வந்தான். கணக்கு மிகுதி யில்லையாயின் அச்சிற்றூரில் கணக்கு வாரியமும், கரணத்தானும் தேவை யில்லை.

**பாடிகாவல்**

ஊரைக் காவல் புரிவோர் பாடிகாவல் என் அழைக்கப் பெற்றனர். காவல் புரிவோரின் தலைவன் 'பெரும் பாடி காவல்' எனப்பட்டான். இவனே 'தலையாரி' எனவும் அழைக்கப்பட் டான். இவனுக்குக் கீழ்ப்பட்டவரைச் சிறுபாடி காவல் எனக் கூறுதல் மரபு.

**வேலி நாயகம்**

கொடிக்கால், தோட்டம், தோப்பு ஆகியவற்றின் வேலை களைக் கவனிக்கும் அலுவலன் வேலி நாயகம் எனப்பட்டான்.

**வெட்டி**

ஊர்ச் சபையிலுள்ள கீழ் வேலைகளைக் கவனிப்பவன் 'வெட்டி' எனப்பட்டான். இவன் 'வெட்டியான்' எனவும், 'வெட்டியாள்' எனவும் அழைக்கப்பட்டான்.

## பெருநாடெங்குமிருந்த வினைஞர்

### அறங்கூறவையம்

தலைநகர், பேரூர் போன்ற நாட்டின் பல்வேறு பகுதிகளில் மக்களின் வழக்குகளைக் கேட்டு முறை செய்வதற்கு அறமன்றங்கள் அன்று இருந்தன. அம்மன்றத்தில் பல உறுப்பினர்கள் இருப்பர். அம்மன்றமே அறங்கூறவையம் என வழங்கிற்று. அறங் கூறவையம், அறக்களம், மன்றம், நியாயசபை, தருமாசனம் என்பன போன்ற பல பெயர்களால் அழைக்கப்பட்டது. அறங்கூறவையத்து உறுப்பினர்களும் நியாயத்தார், அறக்களத்தார், மன்றத்தார், தருமாசனத்தார் எனவும் அழைக்கப்பெற்றனர்.

### அறப்புறங்காவலர், புண்ணியக்கணப் பெருமக்கள்

பல்வேறு இடங்களிலுள்ள மடம், மருத்துவமனை போன்ற அறநிலையங்களை மேற்பார்வை யிடுதற்குத் தனித்தனிக் குழுவார் அமர்த்தப் பெற்றிருந்தனர். இவ்வாறு அமைக்கப்பட்ட குழுக்களில் இடம் பெற்றோர் அறப்புறங் காவலர் எனவும் புண்ணியக் கணப் பெருமக்கள் எனவும் அழைக்கப் பெற்றனர்.

### நாடு கண்காணி நாயகம் (Kankani Nayakam of The Nadu)

வலியூருடையான் ஐயப்பாடி குணநிதி என்பான் இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில், கோயில் வரவு செலவுக் கணக்குகளைச் சரி பார்த்தான் என்பதனைக்கோயில் கல்வெட்டால் அறியலாம். எனவே, நாடு கண்காணி நாயகம் அக்காலை கோயில் கணக்குகளைச் சரி பார்க்கும் அதிகாரியென எண்ணலாம்.

### தண்டுவான்

ஊர்தோறும் வரிகளைத் தண்டும் பணியில் ஈடுபடுத்தப்பட்ட அரசியல் வினைஞன் தண்டுவான் எனப்பட்டான். இவன் தண்டாளன் எனவும் அழைக்கப்பட்டான்.

### வண்ணக்கர்

பேரூர்கள் தோறும் பொற்காசுகளையும், காசாக வழங்கின பொற்கட்டிகளையும், அளவிட்டு ஆராய்ந்து, நோட்டஞ் செய்து, முத்திரையிடும் அலுவலர் வண்ணக்கர் எனப்பட்டனர். இவ்விதம் முத்திரையிடப்பட்ட பொன்னே அரசாங்கத்தால் புழக்கத்திற்கு வெளியிடப்பட்டன.

மேற்கூறப்பட்ட இன்றியமையாத அலுவலர்களே யன்றி, வேறு சில அலுவலர் பற்றிய குறிப்புகளும், கல்வெட்டில் காணப் படுகின்றன. இவ்வலுவலர்களின் வினை அறுதியிட்டு உறுதியாக அறியப்பட வில்லை. இருப்பினும் இவ்வலுவலர்களின் பெயர்களை மட்டும் ஈண்டுக் காண்போம். இவர்கள் முதலிகள், பழ நியாயம், அரைசு மக்கள், தெரிப்பு, முகவெட்டி, பெரும்பணைக்காரன், நடுவிருக்கை, சிறுதனம், பெருந்தனம், சிறுதரம், பெருந்தரம் பெருந்தரத்து மேல்நாயகம் ஆவர்.

இவற்றுள், 'நடுவிருக்கை' என்போன் அறங்கூறவையத்தா ளுய் இருத்தல் வேண்டும் என்று எண்ண இடமுண்டு. 'நடுவி ருக்கை' என்பது அரசாங்கப் பதவிகளுள் ஒன்று. குறித்த செய லொன்றை நிறைவேற்ற வேண்டு மென்று வேந்தன்பால் விண் ணப்பித்தல் இவனது கடமை யாகும், என்று இராசேந்திரனின் கரந்தைச் செப்பேட்டிற்கு விளக்கவுரை எழுதியுள்ள கல்வெட் டறிஞர், பேராசிரியர் திரு. சி. கோவிந்தராசன் அவர்கள் 'தமிழ்ப் பொழில்' என்னும் இதழின்கண் குறிப்பிட்டுள்ளார். இதுவும் பொருத்த முடைத்தே. கிராம சபையில் 'நடுவிருக்கை' என்பான் நியாயஸ்தனுவான். மத்திய ஆட்சியில் 'நடுவிருக்கை' என்பான் அரசனுல் எல்லை நிரணயிக்க நாட்டாருடன் அனுப் பப்பட்ட அதிகாரி யாவான். எனவே, இருவிதமான 'நடு விருக்கை' அதிகாரி இருந்தனர் என்பது புலனுகும். மன்னன் இடும் ஆணையைக் கேட்டு ஓலை நாயகத்திற்குக் கூறுபவர் 'நடு விருக்கை' எனப்படுவர் என்று[1] திரு. கு. தாமோதரன் குறிப்பிடு கிருர்.

முதலாம் இராசேந்திரனின் கரந்தைச் செப்பேட்டின் மூல மாக அவனது காலத்தில் அருமொழி தேவ வளநாட்டு, இங்க ணுட்டு, இளையான் குடியான் இராசாதித்தன் கூத்தாடியான விழுப்பரையன் என்பான் நடுவிருக்கை அலுவலனுக இருந்தான் என்பது புலனுகின்றது. பெருந்தரத்து மேல்நாயகம் என்பான் வளநாட்டதிகாரிகள் தலைவனுகவும் இருந்திருக்கக் கூடும்.

சதாசிவப்பட்ட சோமயாஜி, பரமேசுவரப் பட்டர் ஆகிய இரு நடுவிருக்கும் அதிகாரிகள் நம் இராசந்திரன் ஆட்சிக் காலத்தில் பணி புரிந்தனர் என்பதைக் கூழம்பந்தல் கங்கை கொண்ட சோளேச்சுரர் கோயில் கல்வெட்டா லறியலாம்.

[1] ஆய்வுக் கோத்து-பக்கம்-504

**முகவெட்டி**

நம் இராசேந்திர சோழனது ஆட்சியில் 1. சங்கரநந்தி பட்டன், 2. ஐயாறன் தேவர் கண்டன், 3. நெற்குன்றங்கிழான் காமன் சந்திர சேகரன், 4. வேளான் பெருமான் என்ற நால்வரும் முகவெட்டி எனும் அதிகாரியாகப் பணியாற்றினர் என்பது, கூழம்பந்தல் கோயில் கல்வெட்டால் அறியலாம். மன்னனது அறக்கட்டளையை யுணர்த்தும் ஆணைவரி என்ற புத்தகத்தில் எழுதப்பட்டபின்பு 'முகவெட்டி' அதில் கையொப்பமிட்டுத் தங்களது இசைவினைத் தெரிவிக்க வேண்டும்.

**கீழ் முகவெட்டி**

முகவெட்டி என்ற அதிகாரிகட்கு உட்பட்டுப் பணி புரிந்தோர் கீழ் முகவெட்டி என அழைக்கப்பெற்றிருத்தல் வேண்டும். 1. பட்டன் மாசறு சோதி, 2. நாராயண பட்டன் ஆகிய இருவரும் நம் இராசேந்திரன் ஆட்சிக் காலத்துக் கீழ் முகவெட்டி அதிகாரிகளாகப் பணி புரிந்தனர் என்ற செய்தி கல்வெட்டில் குறிக்கப் பெறுகின்றது.

**வரியிலி**

இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் வரியிலி எனும் பெயர் பெற்ற அலுவலர்களும் இருந்ததாகக் கல்வெட்டுகள் செப்புகின்றன. அவனது ஆட்சிக் காலத்தில் சூரன் ஐயாறன், சூற்றி பட்டாலகன் ஆகிய இருவரும் வரியிலி அலுவலராகப் பதவியேற்றிருந்த செய்தியைக் கூழம்பந்தல் கோயில் கல்வெட்டு உணர்த்துகின்றது.

வடஆர்க்காடு மாவட்டம், வந்தவாசி வட்டத்திலுள்ள கூழம்பந்தல் என்ற சிற்றூரின்கண் அமைக்கப்பட்டுள்ள கங்கை கொண்ட சோழீச்சுரர் கோயில் சுவரில் காணப்படும் கல்வெட்டில், இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில், மாணிக்கன் எடுத்த பாதமான சோழ மூவேந்த வேளான் என்பான் 'கருமம் ஆராய்பவராகவும்' சனனுதனுன இராசேந்திர சோழ பிரமாதிராசன் என்பான் 'ஒப்பிட்டுப் புகுந்த அதிகாரி'யாகவும், பொற்காடன் மதுராந்தகனுன இராசராச மார்த்தாண்ட மூவேந்த வேளான் 'கண்காணி' யாகவும் பணியாற்றியதாக அறிகிரேும்.

**அதிகாரிகள் பெற்ற பட்டங்கள்**

அரசியல் துறையில் மன்னனுக்கு உறுதுணையாக நின்று பேருதவிகள் புரியும் அதிகாரிகள் மன்னனுல் மதிக்கப் பெற்று,

அவர்களது தொண்டினைப் பாராட்டும் மகத்தான பட்டங்கள் வழங்கிச் சிறப்பிக்கப் பெறுதல் பண்டை வழக்கமா யிருந்தது. இவ்வாறு மன்னனால் பாராட்டப் பெற்றதால் அதிகாரிகள் அரசாங்கப் பணிகளில் ஊக்குவிக்கப் பெற்று, மேலும் பல தொண்டுகள் புரிய ஆவல் கொண்டனர்.

ஆங்கிலேய ராட்சியில் கூட ஆற்றல் மிக்கவர்களைப் பாராட்டும் வகையில் 'இராவ் பகதூர்', 'திவான் பகதூர்,' 'சர்' முதலான பட்டங்களை வழங்கிச் சிறப்பித்தமை எல்லோரும் அறிந்த ஒன்றாகும்.

ஆங்கிலேயர்கள் இந்தியாவிற்கு வருகை புரிவதற்குப் பன்னூறு ஆண்டுகட்கு முன்பே தமிழகத்தின்கண் நல்லாட்சி செலுத்திய சோழ வேந்தர் அரசியல் அதிகாரிகளுள் சிறந்தோர்க்கும், போர்க் காலங்களில் தம் உயிரினையும் பெரிதென மதியாது வீரப்போர் புரிந்த மறவர்கட்கும் பட்டங்கள் பல அளித்து மகிழ்ந்தனர்.

அங்ஙனம் மன்னரால் வழங்கப் பெற்ற பட்டங்கள் மூவேந்த வேளான், பூவேந்த வேளான், கேரள ராசன், காலிங்க ராயன், கச்சிராயன், வாண கோவரையன், பல்லவ ராயன், சேதிராயன், காடவ ராயன், தொண்டையன், சோழ பாண்டியன், விழுப்பரையன், இளங்கோவேள், ஈழங்கொண்டார், களத்தில் வென்றார் முதலியன வாகும். இப்பட்டங்களை மன்னன் பெரும்பாலும் தன் பெயர்களோடு இணைத்தே வழங்குவது வழக்கம்.

இதன் உண்மையை இராசேந்திர சோழ மூவேந்த வேளான் இராசேந்திர சோழ பிரம்ம ராயன், முடிகொண்ட சோழ விழுப்பரையன், இராசேந்திர சோழப் பல்லவராயன், நாட்டு முத்தரைய அர்த்தார் தேவன் என்ற உத்தம சோழப் பெரியரையன், வீர சோழ அணுக்கன் ஆய்ப்பாடி மழபாடி, குமார காலன் வாசுதேவன் என்ற அதிசய சோழ மூவேந்த வேளான், அரையன் முடிகொண்ட சோழன், நராக்கன் மாராயன் சனநாதபனான இராசேந்திர சோழ பிரமாதிராசன் என்று இராசேந்திர சோழனது ஆட்சிக் காலத்தில் வழங்கப்பெற்ற பட்டங்களால் நாம் தெளிவாக அறியலாம். அன்றியும் பெருந்தரம், சிறுதரம் என்ற இரண்டு பட்டங்கள் இருந்தலைக் கல்வெட்டுகளின் உதவியால் அறியலாம். இவற்றின் மூலம் அக்காலத்து அதிகாரிகளுள் உயர்வு தாழ்வு நிலவியதை உணரலாம். இது தற்காலத்தில் உள்ள அரசிதழ் பதிவு பெற்ற அலுவலர், அரசிதழ் பதிவு பெறாத

அலுவலர் (Gazetted and non - Gazetted officers) என அலுவலர் களைப் பாகுபாடு செய்யப்பட் டுள்ளதை ஒக்கும் எனக் கூறுதல் பொருந்தும்.

*அரச ஆணை*

சோழ மன்னர் காலத்து ஆட்சித் துறையில் பணிபுரிந்த ஒரு சில அலுவலர்கள் பற்றியும் அவர்களின் அலுவல்களைப் பற்றியும் இதுவரை ஒரு சிறிது கண்டோம். இவ்வதிகாரிகள் எவ்விதமாக ஒரு பணியில் இணைந்து முறையாகப் பணியாற்றினர் என்பதை அறிந்துகொண்டால்தான், ஒவ்வொரு அலுவலரின் பணியினை யும், நாம் விளக்கமாக உணர முடியும்.ஈண்டு நாம் நிலக்கொடை பற்றிய மன்னனுடைய ஆணை உருவாக்கப்பட்டு நிறைவேற்றப் படும் முறையினைக் கல்வெட்டுகள் எவ்விதம் தெளிவாக எடுத் துக் கூறுகின்றன என்பதைக் காண்போம்.

மன்னன் திருவாய் மலர்ந்தருளுகின்ற ஆணை 'திருமந்திர ஓலை' என்னும் அதிகாரியால் ஓலையில் தீட்டப்படுகின்றது. இவ் விதம் எழுதப்பட்டவற்றைத் 'திருமந்திர ஓலை நாயகம்' என் னும் அதிகாரி ஒப்பு நோக்குகிறார். ஒப்பு நோக்கப்பட்ட இவ் வாணையினை 'விடையில் அதிகாரி' என்னும் அலுவலர் 'வரி' என்ற புத்தகத்தில் எழுதும்படி பணிக்கிறார். 'உடன் கூட்டம்' 'விடையில்', 'நடுவிருக்கை' முதலிய அதிகாரிகள் அதனை எழு தும்படி செய்கின்றனர். இவ்விதமாக மன்னனது ஆணை எழுத் தால் எழுதப் பெற்றுச் சரிபார்க்கப்படுகின்றது. இதன் பிறகுதான் 'புரவு வரித் திணைக் களம்', 'வரிப் பொத்தகம்', 'முகவெட்டி', 'வரியிலீடு', 'வரிப் பொத்தகக் கணக்கு', 'பட்டோலை' முதலிய அதிகாரிகள் தங்கள் கையொப்பங்களை அதிலிட்டுத் தங்களது ஒப்புதலைத் தெரிவிக்கின்றனர். அவர்களது இசைவினைப் பெற்ற பின்பு இவ்வாணை முழுமை பெற்று, நிறைவேற்றப்படத் தக்க தயார் நிலையி லிருக்கும்.

பின்னர், இவ்வாணை எவ்வூரைச் சார்ந்த நிலம் கொடை யாக அளிக்கப் படவேண்டுமோ, அவ்வூருக்கு அரச மரியாதை யுடன் அதிகாரிகளால் எடுத்துச் செல்லப்படும்.

மன்னன், நிலம் நன்கொடை யளிக்கும் ஆணை பற்றிய செய்தியினை முன்கூட்டியே அறிந்து கொண்ட அவ்வூர் அதிகாரி களும் பிறரும் 'ஆணை' கொண்டு வரும்போது தங்களிருக்கை யினின்றும் எழுந்து, கைகூப்பி வணங்கி, அவ்வாணையைத்

தங்கள் தலையின்மீது கொண்டு செல்வர். பின்பு அவ்வாணை பெருமக்கள் முன்பு படிக்கப்பெறும்.

அதன் பின்னர் ஆணையில் குறிப்பிட்டுள்ள நிலத்தின் எல்லையை நிலம் கூறு செய்வோர் ஊர் கரணத்தார், நாட்டார் ஆகியோரை வைத்துக் கொண்டு 'பிடிசூழ' எல்லைகளை நிரணயம் செய்வார்கள்.

இவ்வெல்லைகள் மாற்றப் படாமலிருக்கும் பொருட்டும், யாவர்க்கும் தெரியும் பொருட்டும் கல்லும் கள்ளியும் எல்லை நெடுகிலும் நடப்படுகின்றன.

சிவன் கோயிலுக்கு நிலம் விற்கப்பட்டால் 'திருச்சூலத்தைக்' கல்லில் பொறித்து நடுதல் வழக்க மாகும்.

திருமால் கோயிலுக்கு நிலம் வழங்கப்பட்டால் 'திரு ஆழியை'க் கல்லில் பொறித்து நடுவது வழக்கா யிருந்தது.

இவ்விதம் எல்லை நெடுகிலும் கல் நட்ட பின்பு எல்லாத் தரப்பினரும் சம்மதம் தெரிவித்த பின்பு, ஓலையிலுள்ள இவ்வாணை கல்லிலும் செம்பிலும் எழுதப்படுகிறது.

இது போன்ற அறக் கொடைகளைப் பற்றிய விரிவான செய்திகள் கல்வெட்டுகளைக் காட்டிலும், செப்பேடுகளில் குறிக்கப் பெற்றுள்ளன. திருவாலங்காட்டுச் செப்பேடு, பெரிய லெய்டன் செப்பேடு, அன்பில் செப்பேடு ஆகியவைகளை எடுத்துக்காட்டுகளாக ஈண்டு நாம் குறிக்கலாம்.

மன்னன் அறக்கொடை வழங்கிய செய்தியினைச் செப்பேடுகள் 'அறவோலை செய்திருந்தோம்' எனக் குறிக்கிறது. மன்னனது ஆணை அனைத்தும் முதலில் ஓலையிலோ, அல்லது திரைச் சீலையிலோ எழுதப் பெற்றுப் பின்னர் கல்லிலும் செப்பேடுகளிலும் வெட்டப்படும்.

முதலாம் இராசேந்திரனின் பன்னிரண்டாம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டு அம்மன்னன் ஆணையைப் பிறப்பிக்கையில் உடனிருந்த அதிகாரிகள் யாவர் என்பதைக் கூழம்பந்தல் கோயில் கல்வெட்டு விளக்கிக் கூறுகின்றது. இவன் தானம் கொடுத்த போது, 'ஓலை எழுதுவோன்', 'ஓலை நாயகன்', 'ஒப்பிட்டுப் புகுந்த அதிகாரி' 'உடன் கூட்டத்துக் கருமம் ஆராய்வர்', 'நடு

விருக்கும்', 'கருமம் ஆராய்வர்', 'புரவுவரித் திணைக் களத்துக் கண்காணி' 'புரவு வரித் திணைக் களம்', 'வரிப் பொத்தகம்', 'வரிப் பொத்தகக் கணக்கு', 'வரியிலி', 'கீழ் முகவெட்டி', 'கண்காணி' ஆகிய அதிகாரிகள் இருந்ததாகக் குறிக்கின்றது. எனவே, இவர்கள் இன்றியமையாத அதிகாரிகள் என்பது புலனுகின்றது.

அரசன் இட்ட அறவாணை எவ்வாறு எழுதப் பெற்றுச் செயல் படுத்தப்பட்ட தென்பதனை முதலாம் இராசேந்திரனின் கரந் தைச் செப்பேடு மிகத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டு கின்றது. அரசிய லதிகாரிகள் எவ்விதம் தம் பணிகளைச் செய் தனர் என்பதனையும், இப்பணியி லீடுபட்ட அரசிய லதிகாரிகள் யாவ ரென்பதனையும் இச்செப்பேடு விளக்கிக் கூறுவதால் இச் செப்பேடு சோழர் அரசியல் வரலாற்றின் சிறந்த ஆதாரமாகப் பயன்படுகின்றது. இதனை நாம் தெளிவாக முறையாகக் காணு தல் நலம். 'ஆக இப்படி வரியிலிட்டுக் கொள்க வென்று நாம் சொல்ல, நம் ஓலை எழுதும் சயங் கொண்ட சோழ மண்டலத்து ஊற்றுக் காட்டுக் கோட்டத்துப் பாலையூர் நாட்டுப் பாலையூர் கிழ வன் அரையன் மும்முடிச் சோழன் எழுதினுன்'.

ஓலை நாயகம் என்னும் அதிகாரிகளான 1. நராக்கன் கிருட் டிணன் இராமனுன இராசேந்திர சோழப் பிரமாதிராயன், 2. அரையன் இராசராசனுன விக்கிரம சோழச் சோழியவரை யன், 3. அரை சூருடையான் ஈராயிரவன் பல்லவனுன உத்தம சோழப் பல்லவரையன், 4. பாளூர் அம்பலத்தாடியான முடி கொண்ட சோழ விழுப்பரையன் ஆகியோர் ஓலையில் பொறிக்கப் பட்டுள்ள செய்தியினைச் சரி பார்த்தனர்.

பின்னர், 1. நராக்கன் மாராயன் சனனுதனுன இராசேந்திர சோழ பிரமாதிராசன், 2. காஞ்சி வாயிலுடையான் உதய திவா கரன் தில்லை யாளியான இராச ராச மூவேந்த வேளான், 3. இரா சாதித்தன் கூத்தாடியான பரகேசரி விழுப்பரையன், 4. பர மேசுவர சர்வ கிருத்தியாஜி மாவடிகள் ஸ்ரீதர ஸ்ரீபட்டசோமயாஜி ஆகிய அரச கருமம் ஆராய்பவர் அவ் வோலையினைப் பார்த்து, அரச கரும அணுக்கத்தினர் என்னும் அதிகாரிகளுக்குச் சரி பார்க்கும் பொருட்டு அனுப்பி வைத்தனர்.

இவ்வோலையைச் சரிபார்த்த அரச கரும அணுக்கத்தினரா கப் பணி புரிந்த அதிகாரிகள் கீழ்க்கண்டோராவார் என்பதனை யும் இச்செப்பேடு குறிப்பிடுகின்றது.

1. வயலூர் கிழவன் தத்தன் சேந்தனை இராசேந்திர சோழ அணுக்கப் பல்லவரையன்

2. பரகேசரி நல்லூருடையான் மாணிக்கன் எடுத்த பாத மான சோழ மூவேந்த வேளான்

3. சிறிஞூர் கிழவன் தன்னிச்சை ஆதித்தன்

4. வைப்பூர் கிழவன் தீரன் பாஸ்கரன்

இந்நால்வரால் சரிபார்க்கப்பட்ட இவ்வோலை நிலவரி நிரு வாகத் துறைத் தலைமை யதிகாரி (புரவு வரித்திணைக் களத்துக் கண்காணி)க்கு அனுப்பப்படும். அறக் கட்டளைக்குரிய ஊர்க ளின் முன்னுள் பெயர், வரிவகை ஆகியவற்றைக் கண்காணிப்புச் செய்வது இவ்வதிகாரியின் கடனாகும்.

புரவு வரித்திணைக் களத்துக் கண்காணி என்னும் அதிகாரி யான விசலூர்க் கிழவன் கணபதி அழகியான் அறக்கட்டளைக் குரிய ஊர்களின் விவரம் பற்றிக் கண்காணிப்புச் செய்தான். பின்பு,

புரவு வரித் திணைக் களம் என்றழைக்கப்படும் நிலவரி நிருவா கத் துறையதிகாரிகளான 1. பூஞ்சாற்றுடையான் நக்கன் அரங் கன், 2. தலையூருடையான் நக்கன் தாமோதரன், 3. அழிஞ்சில் மங்கல முடையான் நாகன் நக்கன், 4. பெரும்பேடுகிழான்பட்டன் வாசுதேவன் ஆகியோர் வரிமுறையைத் தணிக்கை செய்தனர்.

அதனை வரிப்பொத்தகம் என்னும் அதிகாரியான இறை யான் சேரி கிழவன் புழமதனி ராமன் பார்த்து,

முகவெட்டியெனும் அதிகாரிகளான 1. உவர்க்குடி கிழான் அரையன் கணபுரம், 2. இலுப்பையூ ருடையான் இராமன் அம லன், 3. விராண முடையான் நூற்றெண்மன் கருணாகரன், 4. பணையூருடையான் காவிதி வெண்காடன் ஆகியோருடன் ஒப் படைத்தான். அவர்கள் தம்மிடம் உள்ள கணக்குகளுடன் ஒப் பிட்டுச் சரி பார்த்தனர். பின்பு,

வரிப்பொத்தகக் கணக்கு என்னும் அதிகாரியான செல்காரு ருடையான் நாதுங்கன் கருத்தன் நிலத்தின் கணக்கோடு இறை யிலி அளவையும் குறித்து வைத்த பின்பு அதனை வரியிலிடு எனும் அதிகாரியான நிலவரிக் கணக்கில் புது வரிகளைச் சேர்க்கும் பணி

பூதிக் குடையான் சிங்கன் புலியன் மேற்பார்வையிட்டு வரிப் பொத்தகக் கணக்கில் இறையிலியாக இட்டெழுதி அரச கட்டளை ஓலையைப் பூர்த்தி செய்தான்.

பின்பு பட்டோலை (மன்னனது கட்டளை ஓலைகளை அதிகாரிகள் சரிபார்த்து நிறைவு செய்த பின் ஓலையைத் திருமுகமாக எழுதுவோன்) என்னும் அதிகாரியான நரிக்குடையான் சத்தி இராமன் அரச ஆணை ஓலையைத் திருமுகமாகத் தீட்டினான்.

பின்பு, அரசாணைகளைத் தணிக்கை செய்யும் துறைகளின் தலைமை யதிகாரிகள் ஒன்று கூடிக் கையெழுத்திட்டு ஒப்புதல் தெரிவித்தனர்.

இவ்விதம் முறையாகத் தணிக்கை செய்யப் பெற்ற பின்பு, மன்னன் இராசேந்திரன் தான் பிரமதேய மாகும் கிராமங்களை அறிவோலை செய்யக் கருதி, 1. வீரசோழ வளநாட்டினை யளந்து வகை செய்யும் 'கண்காணி நாடுவகை புரியும் அதிகாரி களத்தூர் கிழவன் சிறியான் ஆதித்தன்', 2. புரவு வரித்திணைக்களம் என்னும் அதிகாரி பூஞ்சிற்றூருடையான் நக்கன் அரங்கன், 3. விளாநாட்டு இராசேந்திர சோழ சதுர்வேதி மங்கலத்துக் கவுணியன் கிருஷ்ண மாற்பட்டன் ஆகிய மூவரையும் மன்னனே நியமித்துத் தானத்துக்குரிய ஊரவர்களுடன் அருகிருந்து எல்லைகளைக் காட்டிப் 'பிடி சூழ்ந்து பிடாகை நடந்து எல்லைகட்குக் கல்லும் கள்ளியும் நாட்டி அறவோலை செய்து போகவும்' என்று திருவாய் மலர்ந்தருளினான்.

மன்னனது ஆணையைத் திருமந்திர வோலை என்னும் அதிகாரியான ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து ஊற்றுக்காட்டுக் கோட்டத்துப் பாலையூர் கிழவன் அரையன் முடி கொண்ட சோழன் எழுதினான். அத்திருமுகத்தினைத் திருமந்திர ஓலை நாயகம் எனும் அதிகாரிகள் பார்த்து ஒப்புதல் செய்தனர். பின்பு, முறைப்படி அறவோலைப்படி சாசனம் செய்யப்பெற்றது.

இவ்வறவோலை மூலம் இராசேந்திர சோழன் ஐம்பத்தோரூர்களையும் ஒரூராக இணைத்துத் தனது தாயின் பெயரால் திரிபுவன மாதேவிச் சதுர்வேதி மங்கலம் எனப் பெயரிட்டுத் தமது எட்டாமாட்சி யாண்டில் பிரமதேய மாக்கினான்.

### அரசிறை

அக்காலத்தில் சோழர்காலக் குடிகள் தம் மன்னனுக்குச் செலுத்தி வந்த நிலவரியே அரசிறை எனப்பட்டது. இது காணிக்

கடன், செய்க்கடன் எனவும் அழைக்கப்பட்டது. நிலம், விளை நிலம், விளையா நிலம் என இரு வகையாகப் பகுக்கப்பட்டன. இக்காணிக் கடன், விளையும் நெல், வரகு போன்ற தானியங் களுள் ஒரு பகுதியாகவோ, பொன்னும், காசுமாகவோ செலுத் தப்படுவது வழக்கம். இக்காணிக்கடன் குடிமக்க ளிடமிருந்து ஊர்ச்சபையாரால் ஆண்டுதோறும் வசூலிக்கப்பெற்று மன்ன னது தலைநகரத்திலுள்ள அரசாங்கக் கருவூலத்திலுள்ள தலை மைப் பண்டாரம் பெற்றுக் கொண்டு பதிவு செய்து கொள்வார்.

கடந்த ஈராண்டிற்கும் நிலவரி செலுத்தாத குடிமகனின் நிலங் கள் மூன்றுமாண்டுத் தொடக்கத்தில் பறிமுதல் செய்யப்பட்டு, விற்பனை செய்யப்படுவது வழக்கம். அங்ஙனம் விற்றமையால் கிடைத்த பொருள் அரசாங்கத்தில் சேர்க்கப்படும். இவ்வதிகா ரம் ஊர்ச் சபையார்க்கே கொடுக்கப்பட்டதால் வரி வசூல் எளி தாயிற்று.

**வரி வகைகள்**

சோழர் காலத்தில் ஏறத்தாழ 400 வகையான வரிகள் வசூ லிக்கப்பட்டன. நிலவரியே யன்றிக் கண்ணாலக் காணம், குசக்கா ணம், நீர்க்கூலி, தறியிறை, தரகு, தட்டாரப்பாட்டம், இடைப் பாட்டம், ஓடக்கூலி, செக்கிறை, வண்ணாரப் பாறை, நல்லா, நல் லெருது, நாடுகாவல், உல்கு, ஈழப்பூட்சி முதலான பலவகை வரி களும் சோழர் அரசியலில் இருந்துள்ளன.

கடன், கூலி, குறை, பாட்டம், பூச்சி என்பன வரிகளை யுணர்த்தும் மொழிகளாகும்.

வரிகளின் பட்டியல் மிகுந்துள்ளதால் சோழர் காலத்தில் அரசாங்க வரிகள் மிகுந்திருந்தன என நாம் எண்ணுதல் கூடாது. ஏனெனில், அக்காலை பற்பல தொழில்களுக்கும் வரிகள் விதிக்கப் பட்டிருந்த தென்பதை ஈண்டு நாம் நினைவிற் கொள்ள வேண் டும். ஒவ்வொரு தொழில் பெயரையும் சுட்டி வரிப் பெயரும் குறிக்கப் பெற்றிருத்தலின் வரிப் பெயர்கள் மிகுந்து காணப்படு கின்றன. ஆனால், தற்காலத்திலோ, தொழில் வரி எனும் பொதுப் பெயரால் பல்வகைத் தொழிலாளர்களிடம் வரி வசூலிக்கப்படு கின்றது. இத்தொழில் வரி எனும் பெயரில் பல்வகையான தொழி லாளர்களின் தொழில் வரிகளும் அடங்கி யுள்ளன என்பதை உணரும் போது இவை நன்கு விளங்கும்.

கண்ணாலக் காணம் என்பது திருமணவரி. இது மணமகனும், மணமகளும் திருமண நாளன்று அரசாங்கத்திற்குச் செலுத்தும்

வரியாகும். இவ்வரி குறைந்த அளவில்தான் வசூலிக்கப்பட்டது. முதலாம் பராந்தகனின் ஈரோட்டுக் கல்வெட்டைக் கொண்டு கண்ணாலக் காணம் எனும் பெயரில் அரைக்கால் பணம் வசூலிக் கப்பட்டதாக அறிகிறோம்.

இடைப்பாட்டம் என்பது இடைப்பூச்சி அல்லது இடைவரி எனப் பெயர் பெறும்.

தறியிறை என்பது தறிப்புடைவை எனப்படும்.

தட்டாரப் பாட்டம் என்பது தட்டுக்காயம் எனவும் தட் டொலி எனவும் வழங்கப் பெற்றது.

நாடு காவல் எனும் வரி, பாடி காவல் எனவும் வழங்கப்பெற் றது. இஃது ஊர்களைக் காத்தற் பொருட்டு வாங்கப்பட்ட ஒரு தனி வரியாகும்.

உல்கு என்பது சுங்க வரியாகும்.

கள் இறக்குவோர்மீது போடப்பட்ட வரி ஈழம்பூட்சி எனப் படும்.

மேற் கூறப்பட்ட வரிக ளெல்லாம், எல்லாக் காலத்தும், எல் லா விடத்தும், எல்லாரிடத்தும் வசூலிக்கப்பட்டவை யல்ல. சங்க காலத்தைக் காட்டிலும் பிற்காலச் சோழர் காலத்தில் வரிகள் மிகுதி யாகும் என்பது ஈண்டு நோக்குதற் குரியது. இக்காலத்தி லில்லாத ஆள்வரி, திருமணவரி போன்றவை அக்காலத்தில் வசூ லிக்கப்பட்டன. ஆள்வரி, மணவரி முதலியன தற்காலத்திய நேர்வரியையும் (Direct Tax) விற்பனை வரி, ஓடக் கூலி முதலியன தற்காலத்திய மறைமுக வரி (Indirect Tax)யையும் போன் றவை என்பது குறிப்பிடத் த்க்க தாகும்.

*நீர்ப்பாசன வரி*

நம் வேந்தனது காலத்தில் ஏரி, குளங்களிலுள்ள நிலைநீரை யும், ஆற்று நீரையும் பாய்ச்சிக் கொள்வதற்கு நீர்ப்பாசன வரி யும் வசூலிக்கப்பட்டதாக அறிகிறோம். இதனை 'நீர்நிலைப் பாட் டம்,' 'ஒழுக்கு நீர்ப்பாட்டம்' எனக் கல்வெட்டுகள் கூறுதலின் அறிய லாகும். நம் இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் சயங் கொண்ட சோழ மண்டலத்தில் வழக்கத்திலிருந்த வரிகள் சில வற்றின் பெயர்களைச் சயங்கொண்ட சோழ மண்டலத்துக் காலி

யூர்க் கோட்டத்துப் பாகூர் நாட்டில் அமைந்திருந்த கூழம்பந்தல் கிராமத்திலுள்ள கங்கை கொண்ட சோழீச்சரர் கோயில் கல்வெட்டு அறிவிக்கின்றது. அவை உழவிறை, எச்சோறு, கூற்று நெல், வெட்டி, அமிஞ்சி ஆகியன வாகும். உழவிறை என்பது உழவுத் தொழில் புரிவோர் மீது விதிக்கப் பட்ட வரி யாகும்.

எச்சோறு எனப்படுவது நிலங்களைக் கூறு செய்யும் அதிகாரிகளுக்கு அளிக்கப்படும் சோறு என்ப தாகும்.

வெட்டி என்பது நிலங்களைக் கண்காணித்து வருவதற்காக வசூலிக்கப்பெறும் வரி யாகும்.

நிலங்களுக்கு நீர்பாய்ச்சுதற்காக வசூலிக்கப்படும் வரி அமஞ்சி எனும் பெயரால் வழங்கப் பெற்றது.

**இறையிலி நிலங்கள்**

நிலத்தை யளக்கும் போது, ஊர் மக்கட்குப் பொதுவாகப் பயன் படக்கூடிய பகுதிகள், இறை யில்லாதவைகளாக ஒதுக்கப்பெற்றன. நம் இராச ராசன் காலத்தில் கீழ்க்கண்டவைகள் இறையிலி நிலங்களாக ஒதுக்கப்பட்டவை யாகும்.

அவை ஸ்ரீ கோயில், பிடாரி கோயில், ஐயனுர் கோயில், சேட்டையார் (மூதேவி) கோயில், காடு காண் (துர்க்கை) கோயில், ஊர் இருக்கை, ஊர்நத்தம், கம்மாளச் சேரி, தளிச் சேரி, வண்ணரைச் சேரி, பறைச் சேரி, தீண்டாச் சேரி, உழைப் பறையர் இருக்கும் சேரி, குளம், குளக்கரை, திருமஞ்சைக் குளம், புலத்தில் குளம், கழனிக் குளம், செங்கழுநீர் நட்ட குளம், ஊருணி குளம், அதன் கரை, பறைக்குளக் குழி, கிணறு, அதன்தொட்டி, வெள்ளான் சுடுகாடு, பறைச் சுடுகாடு, சுடுகாட்டுக்குப் போகும் வழிகள், நாய் வாலம், மருத்துவப் பேறு, கணி முற்றூட்டு, சாலா போகம், பள்ளிச் சந்தம் பள்ளி, பெண்பள்ளி, திரப்பான மகாதேவர், தேவதானங்கள், திருவடிகள் தேவதானங்கள், பள்ளிச் சந்தம் இறங்கின ஊர்கள், நந்தவனங்கள், பெருவழிகள், களமாய்க் கிடந்த நிலங்கள், கன்று மேய் பாழாய்க் கிடந்த நிலங்கள், கொட்டகாரம், ஆறுகள், குறங்கறுத்துப் புறவூர்க்கு நீர்பாய்ந்த வாய்க்கால்கள், ஊடறுத்துப் போன வாய்க்கால்கள், ஊர்க்களம், நீரோடுகால் முதலானவை யாகும்.

*மன்னன் வழங்கும் நிலத்தானங்கள்*

சோழ மன்னர்கள் பல வகைப்பட்ட கோயில்களுக்கும், அறச்சாலைகளுக்கும், புலவர்களுக்கும், பார்ப்பனர்களுக்கும் நிலத்தானம் செய்து வந்தனர். இங்ஙனம் தானமாக வழங்கப் பெற்ற நிலங்களின்மீது வரி விதிக்கப்பட வில்லை.

சங்ககாலச் சோழர்கள் யாகங்களையும், வேதத்தில் கூறப் பட்டுள்ள ஐதிகச் சடங்குகளையும் ஆடம்பரமான முறையில் நிகழ்த்தினர் என்பதனைச் சங்க கால இலக்கியங்களால் நன்கறிய லாம். இந்தியப் பெருமன்னர்கள் பெரும்பாலும் விரும்பிச் செய்த 'அசுவமேத யாகத்தினைச் சோழ மன்னர்கள் செய்ததாகத் தெரிய வில்லை. சோழ வேந்தர்களுள் இராசாதிராசன் மட்டும் தான் அசுவமேத யாகம் செய்தான் என்ற செய்தியை அவனது வெட்டெழுத்துகள் உணர்த்துகின்றன.

மனுநீதி முறையிலும், வேத மார்க்கங்களிலும் ஆட்சி புரிந்த சோழப் பெருமன்னர்கள் அசுவமேத யாகம் செய்யாதது விந்தையே யாகும். இதன் காரணம் யாது? என்பதை நாம் ஆராயும்போது, சோழ மன்னர்கள் உயிர்ப்பலியிடும் யாகத்தின் மீது வெறுப்பு கொண்டு தானத்தினை (கொடை) மேற்கொண்ட னர் என்பது உய்த்துணரப் படுகின்றது. தானத்தில் நம்பிக்கை வைத்து இம்மன்னர்கள் ஒல்லும் வகை யெல்லாம் அறவினை செய்தனர்; நிலக்கொடை யளித்தனர். தாம் வணங்கும் தெய் வத்திற்கும், தாம் மேற்கொண்ட சமயத் துறைக்கு மன்றிப் புறச் சமயத்திற்கும் நன்கொடைகளை வாரி வாரி வழங்கினர். எனவே தான், சமயத் துறையில் இம்மன்னர்கள் கொண்டிருந்த பரந்த மனப் பான்மையினையும் எம்மதமும் சம்மதம் என்ற சமரசக் கொள்கையினையும் பொன்னேபோல் போற்றினர். சமயத் துறை யில் சோழ மன்னர்கள் மாமன்னர் அக்பருடனும், மாமன்னர் அசோகருடனும் ஒப்புமை கூறத் தக்கவ ராவார்கள்.

ஈண்டு இம் மன்னர்கள் இறையிலியாக அளித்த பல வித மான நிலக்கொடை பற்றிக் காண்போம்.

*தேவதானம்*

சிவன் கோயிலுக்கு அளிக்கப்படும் நிலங்கள் தேவதானம் என அழைக்கப்படும்.

*திருவிடையாட்டம்*

வைணவக் கோயிலுக்கு அளிக்கப்படும் நிலக்கொடை திரு விடையாட்டம் எனப்படும்.

**பள்ளிச்சந்தம்**

சமண, பௌத்த ஆலயங்களுக்கு வழங்கப் பெறும் நிலங்கள் பள்ளிச்சாந்தம் என வழங்கப்படும்.

**சாலா போகம்**

அறப்பணி புரியும் அறச்சாலைகட்கு அளிக்கப்படும் நிலங்கள் சாலாபோகம் எனப்படும்.

**பிடாரி பத்தி**

பிடாரி பத்தி என்பது பிடாரி கோயில்கட்கு அளிக்கப்படும் நிலக் கொடை யாகும். இது பிடாரி விளாகம் எனவும் பெயர் பெறும்

**ஐயன் போகம்**

ஐயனுர் கோயில்கட்கு விடப்படும் நிலம் ஐயன்போகம்எனப் பெயர் பெறும்.

**புலவர் முற்றூட்டு**

புலவர்களின் முன்னேற்றம் குறித்து அளிக்கப்படும் கொடை புலவர் முற்றூட்டு எனப்படும்.

**கணி முற்றூட்டு**

இது நாழிகை, கணிதம், சோதிடம் ஆகியவற்றில் வல்லா னுக்கு அளிக்கப்படும் நிலக்கொடை யாகும்.

**பிரம தேயம்**

பார்ப்பனர்கட்குத் தரப்பட்ட நிலக்கொடை பிரமதேயம், பட்ட விருத்தி என்று அழைக்கப்பட்டது.மறையோர் எனப்படும் பார்ப்பனர்கட்குத் தரப்படும் மானியம் இருவகை யாகும். அவை தொகுதியினருக்குக் (Group) கொடுப்பதும், தனிப்பட்ட வருக்குக் கொடுப்பதும் ஆகும்.

தொகுதிப்பட்டவருக்குக் கொடுக்கப்படும் மானியங்கள் அக ரப்பற்று, அக்கிர கார வாடை, அக்கிர சாலைப்புறம் எனப் பெயர் பெறும்.

அகரப்பற்று என்பது பார்ப்பனர் மட்டும் குடியிருக்கும் இறை யிலி நில மாகும்.

அக்கிரகாரவாடை என்பது, பார்ப்பனர் பெரும்பான்மையா கவும், பிற இனத்தினர் சிறு பான்மையாகவும், குடியிருக்கும் இறையிலி நிலமாகும்.

அக்கிர சாலைப்புற மென்பது, பார்ப்பனரை உண்பிக்கும் அக் கிர சாலைக்கு அளிக்கப்பட்ட மானிய மாகும்.

தனிப்பட்ட பார்ப்பனருக்குத் தரப்பட்ட மானியம் வேத விருத்தி, பட்டவிருத்தி அத்தியாயன விருத்தி, தயித்திரியக் கிடைப்புறம், பாரதப் புறம் எனப்படும்.

இராசேந்திரன் தனது எட்டாம் ஆட்சியாண்டில் வான மங்கை யெனும் ஊரினை யமைத்து, அதில் நான்காயிரம் அந்த ணர்களைக் குடியேற்றினன் என்பதனைக் கல்வெட்டுச் செய்தியா லறியலாம்.[1]

இராசேந்திர சோழன் தனது எட்டா மாட்சி யாண்டில் (கி. பி. 1020) நூற்றேழாம் (107) நாளில் பெரும் பற்றப் புலியூர் மாளிகையிலுள்ள 'இராசேந்திர சோழப் பிரமாதிரா சன்' என்ற மண்டபத்திலிருந்து விரத மேற்றிருந்த போது ஒரு பிரமதேய தானம் செய்ததாகக் கரந்தைச் செப்பேடு குறிக்கின் றது. மூவாயிரத் தொருநூற்று முப்பத்தைஞ்சே நான்மாவரை முந்திரிகைக்கீழ் முக்காலே இரண்டுமா முக்காணி யரைக் காணிக்கீழ் முக்காணி நிலவளவு கொண்ட ஐம்பத் தோரூர் களைத் திரிபுவன மாதேவிச் சதுர்வேதி மங்கலம் எனப் பெய ரிட்டு அவ்வக்கிரகாரம் முழுவதையும் அங்கு வாழ்ந்திருந்த அந் தணப் பெரியோர்கட்கு நீர் வார்த்துக் கொடுத்தான். மேற்குறிப் பிட்டுள்ள ஐம்பத்தோரூர்களாவன:

1. செம்பங்குடி, 2. குளப்பாடு, 3. துளார், 4. நல்லம்பர், 5. திரிபுவன மாதேவி நல்லூர், 6. விச்சூரான சிக்கர், 7. முஞ் ஞாவல், 8. கூத்தனூர், 9. கமுகன் சேந்தன்குடி, 10. வைகுந்த நல்லூர், 11. மகிமாலய நல்லூர், 12. கீழமாத்தூர், 13. பர கேசரி நல்லூர், 14. பெண்ணுகடம், 15. உறத்தூர், 16. சிறை யூர், 17. கீழ்ச் சோற்றுத்துறை, 18. நெடுவாயில் 19. ஏறுபாடி, 20. புளிகைக்குடி, 21. பெருங்குடி, 22. முண்டனூர், 23. தாமோ தர நல்லூர், 24. அரசூர், 25. வாளுவ நல்லூர், 26. குணசீல நல்லூர், 27. செய்யா நல்லூர், 28. சிற்ருலி நல்லூர், 29. நித்த விநோத நல்லூர், 30. வேங்கூர், 31. நியாய நடைநல்லூர், 32. சேந்த மங்கலம், 33. இகழா நிலை நல்லூர், 34. வீரநாரா யண மங்கலம், 35. கருவூர், 36. கோவிந்த நல்லூர், 37. வீர சோழ நல்லூர், 38. கொஞ்ஞாப்பூர், 39. மணி மங்கலம்,

[1] 232 of 1931

40. துறையா நல்லூர், 41. வாமன நல்லூர், 42. ஆத நல்லூர், 43. சிறு முன்னியூர், 44. மேட்டு மேற்குடி, 45. பூத மங்கலத்துப் பால்காடன் காரிக் குறிச்சி, 46. பருத்தி நியமத்துத் திறப்பான தேவதானக்குடி, 47. விளங்குடி, 48. வெண்ணிக் கணி முற்றூட்டிறங்கல் நெடுங்கணக்குடி, 49. பூத மங்கலத்துப்பால் அயலூட்டிக் காணி,50. பள்ளிச்சந்த மிறங்கின ஸ்ரீகரண மங்கலமான கொட்டாரக்குடிப் பள்ளி, 51. புறக்குடி.

இவ்வூர் நிலங்களின் வாயிலாக ஆண்டுதோறும் ஐம்பத்தோராயிரத்து ஐம்பதின் கல நெல்லும், மீன் பாட்டங்காசு முப்பத்திரண்டரையும் அக்கம் அறுபத்தைஞ்சும் வருவாயாகக் கிடைத்தன. இத்தானத்தால் ஆயிரத் தெண்பது சதுர்வேதிபட்டர்கள் தானம் பெற்றதனையும் கரந்தைச் செப்பேடு உணர்த்துகின்றது. இராசேந்திரனைப் போன்று பார்ப்பனர்கட்கு வரையாது வழங்கிய வள்ளலைத் தமிழக வரலாற்றில் காண்ப தரிது.

இப்பிரம தேய தானத்தைக் கரந்தைச் செப்பேடு இவ்வாறு குறிக்கின்றது.

'ஸ்வஸ்திஸ்ரீ கோனேரின்மை கொண்டான் நித்த விநோத வளநாட்டு விர சோழ வளநாட்டு வெண்ணிக் கூற்றத்து நாட்டார்க்கும், பிரமதேயக் கிழவர்க்கும், தேவதானப் பள்ளிச்சந்தக் கணிமுற்றூட்டு வெட்டிப்பேற்றுப் பழவறச் சாலாபோகம் உள்ளிட்ட ஊர்களிலார்க்கும், நகரங்களிலார்க்கும், நமக்கு யாண்டு எட்டாவது நாள் நூற்றேழினால் நாம் பெரும்பற்றப் புலியூர் விட்ட விட்டின் உள்ளால் மாளிகையின் கீழை மண்டபம் இராசேந்திர சோழ பிரமாதி ராசனில் நாமுண்ணு விருந்து.

நித்த விநோத வள நாட்டு வீரசோழ வளநாட்டு நாட்டுப் பொது திரிபுவன மாதேவிப் பேரேரியும், இவ்வேரியரயர்கள் கமுகு கொள்ளி வெட்டிப் பேறும், நாட்டுப் பொது ஊர் நத்தமும், நாட்டுப் பொது சிறு பற்றைக் காடும் என்றளந்து வந்த நிலமும், இந்நாட்டு நெற்குப்பைத் திருமால் காடனும், தஞ்சை நாட்டுக் கோனும், வேளாண் அரங்கனும் உள்ளிட்டார் பற்றும்'[1] கூடியதாக அளந்து வந்த ஊர்கள்.

இக்கரந்தைச் செப்பேட்டினைக் கொண்டு, தானத்தினைப் பெற்றுக்கொண்ட ஆயிரத் தெண்பது சதுர்வேதி பட்ட சிரேட்டர்களின் பெயர்களும், கோத்திரமும், சூத்திரமும், பங்கும்

[1] கரந்தைச் செப்பேடு-4-6

மிகத் தெளிவாகக் குறிக்கப் பெற்றுள்ளமை குறிப்பிடத் தக்க தொன்றும். அவற்றுள் ஒன்று,

'இவ்வூர் விசுவாமித்திர கோத்திரத்துத் திருவஸ்தம்புசூத் திரத்துக் கொடுங்கை அதிராச்சரன் ஸ்ரீவத்ஸகங்க பட்டனுக்குப் பங்கொன்று'[1]

ஸ்ரீவத்ஸ கங்க பட்டனைப்போல் கேசவன் திருவரங்கப்பட் டன், புலிப்புரத்து மகாசேனன் ஸ்ரீமாதவ கிரமவித்தன், தேவ தத்தன் ஆனந்த பிடாரபட்டன் மற்றும் பலர் தானம் பெற்றனர்.

சதுர்வேதிப் பட்டர்களைப் போன்று, பிரமதேய இறையிலி ஊர்களிலுள்ள உகச்சர், நாவிதர், குயவர் ஆகிய சமுதாயத் தொழிலாளர்கட்கும் மன்னன் இறையிலியாக நிலத்தானம் செய் தான். இதனைத் 'திரிபுவன மாதேவிச் சருப்பேதி மங்கலத்துப் பிடாகை குளப்பாட்டு உவச்சன் அமலன் தேவனுக்கு உகச்சப் பங்கொன்று||' 'திரிமேற்றளியான திரிபுவன மகாதேவி விண்ண கர்க்கு உகச்சப்பங்கு, மேற்படியூர் உகச்சன் கரிகாலன் மண்டக வனுக்கு உகச்சப் பங்கொன்று||'

'நித்த விநோத வளநாட்டு வீர சோழநாட்டு திரிபுவன மாதேவிச் சருப்பேதி மங்கலத்துப் பிடாகை திரிபுவன மாதேவி நல்லூர் நாவிதன் பிரமன் திருவடிகளுக்கு நாவிசப் பங்கு அரை||' 'இந்நாட்டு ஆவூர் கூற்றத்து மனுகுல சூளாமணிச் சருப் பேதி மங்கலத்து நாவிசன் மண்டகனுபகனுக்கு நாவிசப் பங்கு அரை||' (இவற்றைப் போன்று பல பங்குகள் செப்பேட்டில் குறிக்கப் பெற்றுள்ளன.) என்னும் கரந்தைச் செப்பேட்டுப் பகுதியா லறியலாம்.

***அம்பல மானியம்***

அரசியல் வினைஞருள் ஊர்த் தலைவனுக்கு அளிக்கப்படுபவை அம்பல மானிய மாகும்.

***அமர நாயகம்***

போர்ப்படைத் தலைவனுக்கு அளிக்கப்படும் மானியம் அமர நாயகம் எனப் பெயர் பெறும்.

[1] கரந்தைச் செப்பேடு–பகுதி-3. தொடர் என் 26

### எட்டிப் புரவு

வணிகருட் சிறந்தோருக்குச் சோழப் பெருமன்னர்கள் 'எட்டி' எனும் பட்டத்தை வழங்கினர். வணிகருட் சிறந்தோருக்கு வழங்கப்பட்ட மானியம் 'எட்டிப் புரவு' எனப் பெயர் பெற்றது.

இராசேந்திர சோழன் வேத, வேதாந்த, வியாகரண, ஆகம புராண வளர்ச்சிக்கும் அளவிறந்த தானங்கள் புரிந்து நாட்டின் ஆன்மீகக் கல்வியை வளர்ச்சியுறச் செய்தான் என்பதனைக் கரந்தைச் செப்பேடு விளக்குகின்றது.

அவற்றுள் மீமாம்ச பட்டவிருத்திக்கு ஐவேலி நிலமும், வேதாந்த பட்ட விருத்திக்கு ஐவேலி நிலமும், பிரகரணப்பட்ட விருத்திக்கு நால்வேலி நிலமும், பவிழியக் கிடைப் புறத்துக்கு ஒரு வேலி நிலமும், வாச்சனையக் கிடைப் புறத்துக்கு ஒரு வேலி நிலமும், சாதோகக் கிடப் புறத்திற்கு ஒரு வேலி நிலமும், காப்பியக் கிடைப்புறத்திற்கு ஒரு வேலி நிலமும், சமிதி முலச்சரயம் ஓதுவிப்பானுக்கு ஒரு வேலி நிலமும், மகாபாரதம் ஓதுவிப்பானுக்கு ஒரு வேலி நிலமும், அம்பலம் மெழுகித் தொட்டி நீர்த் தண்ணீராட்டுவானுக்கு ஒரு வேலி நிலமும், தானம் செய்யப் பெற்றதாக இராசேந்திரனின் கரந்தைச் செப்பேடுகள் உணர்த்துகின்றன.

'இவ்வூர்ச் சாசனம் வெட்டிப் பூச்சையாகப் பெற்ற காஷ்மகாரி கிருஷ்ணரங்கனான திரிபுவன மகாதேவிப் பேராசிரியனுக்குத் துணி நிலம் வேலி. இவ்வூர் சாசனம் வெட்டிப் பூஜ்ஜையாகப் பெற்ற காஷ்மகாரி ஆராவமுது புருடோத்தமனான இராசேந்திர சிம்மப் பேராசிரியனுக்குத் துணி நிலம் வேலி.'[1]

மேற்கண்ட கரந்தைச் செப்பேட்டுப் பகுதியால் சாசனத்தை எழுதிய ஆசிரியர்கட்கும் நிலத்தானம் அளிக்கப்பட்டதை யறியலாம். இச்சாசனத்தைச் செப்பேட்டில் வெட்டிய சங்கராரியருடைய மகனான நாராயணனுக்கும் நிலத்தான மளிக்கப்பட்டது.

### மடப் புறம்

மடத்திற்கு விடப்படும் இறையிலி நிலம் மடப்புற மாகும்.

[1] கரந்தைச் செப்பேடு-ஏடு-30·2/2/2/

**தண்ணீர்ப் பட்டி**

தண்ணீர்ப் பந்தலுக்கு விடப்பட்ட மானியம் தண்ணீர்ப் பட்டி எனப் பெயர் பெறும்.

**இரத்தக் காணி**

போரில் இறந்து விட்டவனின் மகனுக்கோ, மனைவிக்கோ வழங்கப்படும் மானியம், இரத்தக்காணி எனப்படும். இஃது இரத் தக் காணிக்கை, இரத்த மானியம், உதிரப்பட்டி எனவும் அழைக் கப்படும்.

மேலே குறிக்கப்பெற்ற தானங்களைப் போலவே கணக்கன், வெட்டியான், மருத்துவன், நட்டுவனர், பறை யறிவிப்போன் போன்ற பல அரச ஊழியர்களுக்கும் மானியங்கள் வழங்கப் பெற்றன.

**ஆவணக்களரி** (Registration office)

அரச முத்திரையுடன் கூடிய முறியோலை (தற்காலப் பத் திரம்) அக்காலத்தில் ஊர்கள் தோறும், எழுதப் பெற்ற ஆவணங் களைக் (விலையோலை) காப்பிட ஆவணக்களரி நிறுவப்பெற்றது. ஒரு நிலத்தை விற்பவனும், வாங்குபவனும், அல்லது அட மானம் வைப்பவனும், தம்முள் இசைந்து எழுதின ஆவணத்தை எடுத்துக்கொண்டு போய், ஆவணக்களரியாரின் முன் தம் முடைய இசைவினையும், உறுதி மொழியினையும் தெரிவித்து, ஆவணத்தைக் காப்பிடும்படி கேட்டுக்கொள்வர். ஆவணத்தின் மீது அரச முத்திரையிட்டுப் பதிவு செய்யப் பெறுதலே காப்பிடப் படுதல் என அழைக்கப்பெற்றது.

நிலத்தின் எல்லைகளும், விலையும் இவ்வாவணத்தில் குறிக்கப் பெற்றிருக்கும். இவ்வாவணம் என்றென்றும் பயன்படக் கூடிய தொன்றுதலின், அவ்வூரிலுள்ள கோயிற் சுவரிலும் இதனைப் பொறித்து வைத்தல் வழக்க மாகும்.

**ஆவணம்**

ஆவணம் என்பது அவ்வவ்வினைக்கும் எழுதப்பட்ட கருவிக் கும் ஏற்ப ஏடு, ஓலை, கரணம், கலம், சீட்டு, செய்கை, தீட்டு, நறுக்கு, பட்டிகை, பட்டயம், முறி எனப் பல பெயர் பெறும். ஆவணம் என்பது பத்திரம், பிறமானம் என்னும் வட சொற்க ளால் தற்காலத்தில் வழங்கப்பெறுகின்றன.

'இனி இந்நான்கெல்லைக் குட்பட்ட தரமிலி மிகுதிக் குறைவு பட்ட குழி. சூா. இக்குழி (600) அறுநூறுக்கு எம்மிலிசைந்த விலை

சான பொருள் அன்றுட நற்காசு 20. இப்படி இருபதும் ஆவணக் களரியே காட்டிக் காப்பிட்டுக் கை செலவறக் கொண்டு விற்று, விலைப் பிரமாணஞ் செய்து கொண்டு மண்ணற விற்றுப் பொருளறக் கண்டோம்' என்னும் சாசனப் பகுதியும் இதனைக் கூறுதலின் நன்கறியலாம்.

**நிலங்கள்**

ஒரு நாட்டின்கண் உள்ள ஊர்களை முறையாக அளந்தால் தான், அங்குள்ள விளை நிலங்களின் சரியான அளவும், அவற்றிற்குரிய நிலவரி குடிமக்களிடமிருந்து எவ்வளவு வசூலிக்கப்பட வேண்டு மென்பதும், அறுதியிட்டு உறுதியாகக் கூற முடியும். எனவேதான், அக்காலத்தில் நாடு முழுவதும் அளக்கப்பட்டுப் பதிவு செய்யப்பட்டது. நில வரியைத் துல்லியமாய் நிரணயிக்க நிலம் அளத்தல் அவசிய மாகிறது.

சோழப் பெருநாடு முழுமையும், முதலாம் இராசராசன் காலத்தில்தான் முதன் முதலாக அளக்கப்பட்டது. கி. பி. 1001 இல் சேனாதிபதி குரவன் உலகளந்தான், இராசராச மாராயன் என்பானும், உல களவித்த திருவடிகள் சாத்தன் என்பானும் நிலம் அளந்தனர் என்பதனைக் கல்வெட்டு உணர்த்துகின்றது.

நிலம் அளந்த கோலினை 'உலகளந்த கோல்' என்பர். இது 'சிற்றம்பலக் கோல்,' 'பங்கிட்ட கோல்' எனவும் வழங்கப்பெற்றது. இக்கோல் பதினாறு சாண் அளவுடைய தாகும். இராசேந்திர சோழன் ஆட்சிக் காலத்திலும் இக்கோல் கொண்டே நிலம் அளக்கப்பட்டது என்பது கூழம்பந்தல் கோயிற் கல்வெட்டால் அறியலாகும்.

முதற் குலோத்துங்க சோழனது ஆட்சிக் காலத்தில் கி. பி. 1086 லும் மூன்றும் குலோத்துங்க சோழனது ஆட்சியின் போது கி. பி. 1216 லும் சோழப் பெருநாடு முழுமையும் அளக்கப்பட்டது.

எல்லை மாறும் போதெல்லாம் வள நாடுகளும், நாடுகளும் அளக்கப்பெறும். அவற்றை யளக்குங் கோல் 'இறையிறுக்குங் கோல்' எனப்பட்டது. முற்காலத்தில் 'குடி தாங்கிக் கோல்' எனும் பெயரில் ஒரு கோல் இருந்ததாகத் தெரிகிறது.

**நில வகையும், அளவும், தரமும்**

நிலங்கள் நீர் நிலம், கொல்லை, காடு என்று மூன்று வகையாகப் பகுக்கப்பட்டன. இவற்றுள் நீர் நிலம், கொல்லை என்பன

முறையே நன்செய், புன்செய் என அழைக்கப்படும். நூறு குழி கொண்டது ஒருமா ஆகவும் இரண்டாயிரங் குழி கொண்டது (இருபதுமா) ஒரு வேலியாகவும் அளக்கப்பட்டன. 'வேலி நூற்றுக் கல வரிசைக் கீழ் வந்த நிலம் ஏழரையே முக்காணி' எனக்கூறப் பட்டிருத்தலின் வேலி ஒன்றுக்கு நூற்றுக் கல விளைவுள்ளதும், அதற்குக் கீழ்ப்பட்டதுமென, நிலங்கள் இரு வகையாகப் பகுக் கப்பட்டன. இச்செய்தியினை ஒலோக மாதேவிச்சுவரக் கல் வெட்டினுல் அறியலாம்.

*நுட்பமான நில அளவு*

அக்காலத்தில் நிலத்தின் சிறு பகுதியும் விடாமல் மிகவும் நுட்பமாக அளக்கப்பட்டது. இதனை 'இறையிலி நீங்கு நிலம் முக் காலே இரண்டு மாக்காணி அரைக்காணி முந்திரிகைக் கீழ் அரையே இரண்டுமா முக்காணிக் கீழ் முக்காலே நான்குமா அரைக்காணி முந்திரிகைக் கீழ் நான்குமாவினுல் இறை கட்டின காணிக்கடன்' என்பதனுலும், இராசராசன் காலத்தில் அளத் தற்கரிய மிக நுண்ணிய சதுரத்தையும், அதாவது ஒரு வேலியில் 5,24,288,00,000 இல் ஒரு பாகத்தையுங்கூட அளவிட்டு, அத னின்று வரவேண்டிய வரி கணக்கிடப்பட்டதாலும் நன்கு விளங் கும். இவ்வளவு துல்லியமாக அளக்கப்பட்டமை நமக்குப் பெரு வியப்பை யளிக்கின்றது.

இவ்விதம் நுண்ணிய முறையில் அளக்கப்பட்ட நிலங்கள், எல்லைகளிட்டுப் பிரிக்கப்பட்டு, மற்ற நிலங்களினின்றும் வேறு படுத்தப் பட்டன. 'நாற்கோலாசறுதியில் நாட்டின புல்லடிக் கல்லேயுற்று' எனவும் 'இப்பரிசு கல்லு நாட்டி எல்லை தெரித்து' எனவும் 'எல்லை தெரித்துக் கல்லும் கள்ளியும் நட்டு' எனவும் கல் வெட்டுகளில் காணப்படுதலின் நிலத்தை யளந்து, எல்லையறிந்து எல்லையில் புள்ளடிக் கல்லும், கள்ளியும் வைத்து எல்லைகள் காக் கப்பட்டன. சென்ற அத்தியாயத்தில் குறிக்கப் பெற்றதைப் போல் கோயில் நிலமாயின் கோயிற் சின்னங்களும் கற்களில் பொறிக்கப்பெற்று நடப்பட்டன.

நீர்ப் பாசனத்தின் பொருட்டுக் கண்ணுறுகள் பல வெட்டு வித்து, இன்னின்ன கண்ணுறுகள், இவ்வளவு இவ்வளவு சதுரத் துக்குப் பாய்வது என்று வரையறை செய்யப்பட்டிருந்தது எனக் கருந்திட்டைக்குடி ஆலயக் கல்வெட்டால் விளங்குகிறது.

நிலத்தின் அளவும், எல்லையும், வருவாயும் எத்துணைத் தெளி வாகவும் நுண்ணிய முறையிலும் அக்காலத்தில் குறிக்கப்பெற்றுச்

சாசனங்களில் எழுதப் பெற்றது என்பதற்குக் கரந்தைச் செப் பேட்டில் கீழ்க் காணும் செம்பங்குடி என்ற ஊரளவுக் கணக் கினைக் கொண்டறியலாம்.

'செம்பங்குடி அளந்தபடி நிலன் நூற்று முப்பத்தேழே யாறுமாக் காணி யரைக்காணி முந்திரிகைக் கீழ் நான்மா வரையிலும், இவ்வூர்ப் பிடாரி கோயிலும் திருமுற்றமும், ஐயன் கோயிலும், திருமுற்றமும், இவ்வூர் நிலயத்தை ஊடறுத் துப் போன சிங்க ளாந்தகன் வாய்க்காலும், இவ்வூர், நிலத் தைப் போய் ஊடறுத்துப்போய் மயிமாலய நல்லூருக்குப் பாயும் வாய்க்காலும், இவ்வூர் நிலத்தை ஊடறுத்துப்போம் கரு ணைக் காலான மும்முடிச் சோழப் பேராற்றுனும், இவ்வூர் நிலத் தை ஊடறுத்துப் போன சுந்தர சோழ வாய்க்காலும், இவ் வூர்ச் சுடுகாடுமான நிலன் அரையே மும்மாவரை முந்திரிகைக் கீழ் எட்டுமா முக்காணிக் கீழ் முக்காலே ஒரு மாநீக்கி, நிலன் நூற்று முப்பத்தாறரையே இரண்டுமா முக்காணி முந்திரிகைக் கீழ் நான்கு மாவினுல் நெல்லு நாலாயிரக் கலமும், மீன் பாட்டம் காசு மூன்றும்.'

எனவே, சோழர் ஆட்சிக் காலத்தில் நிலங்கள் நுண்ணிய முறையில் (நுட்பமாக) அளக்கப்பட்டுத் தரம் பிரிக்கப்பட்டு, நில வரி ஒழுங்குபடுத்தப்பட்டு, வசூலிக்கப்பட்டதென்பது நன்கு புல னுகின்றது. தற்கால அதிகாரிகளைப் போன்று சோழர் காலத்தும் அதிகாரிகள் திறமையாகப் பணியாற்றினர் என்பது புலனுகின் றது.

## கிராம ஆட்சி

### ஊர்ச்சபை அமைப்பும் கடமைகளும்

நம் இராசேந்திரன் காலத்தில் ஊர்கள் தோறும் சபைகள் இருந்தன. அச்சபையினர் தத்தம் ஊரிலுள்ள எல்லா வகையான வேலைகளையும் கவனித்து வந்தனர். அவற்றுள் ஊரிலுள்ள நிலங் கட்கு அரசிறை ஏற்படுத்தியமையும், அதனை வசூலித்து மன்ன னுக்குச் செலுத்தியமையும், ஈராண்டு வரை வரி செலுத்தாதார் நிலத்தின் மூன்றுமாண்டு தொடக்கத்தில், பறிமுதல் செய்து விற்று ஊருடைமை யாக்குதலும், கோயிலுக்கு மெய்க்காவலர், கணக்கர் போன்றோரை நியமித்தல்போன்ற இன்னோரன்னவேலை களைச் செய்து வந்தமையும் குறிப்பிடத் தக்கன வாகும். இவற்றுக் கான நிருவாகச் சபையினரை இவர்கள் தேர்ந் தெடுத்த செய்தி கல்வெட்டில் காணப் பெறவில்லை. இருப்பினும் தோட்ட

வாரியர், சம்வத்சர வாரியர், ஏரி வாரியர், பஞ்ச வாரியர், பொன் வாரியர், தடிவழி வாரியர் (தற்காலப் பெருவழித்துறை (Highways Dept.) போன்ற உறுப்பினர்கள் இருந்ததைக் கல் வெட்டுகள் கூறுகின்றன. இவர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டனர். சுருங்கக் கூறுமிடத்து அந்நாளில் ஊராட்சி முழுமை யும் இச்சபையாரால்தான் நடத்தப்பட்டது எனக் கூறலாம்.

நம் இராசேந்திர சோழனும் தன் முன்னோர் காலத்து ஊராட்சி முறையினையே பின்பற்றி அதன் சிறப்பியல்புகளை நன் கறிந்தவனு யிருந்தான். எனவே, ஈண்டுச் சோழப் பெருமன்னர் கள் வாழையடி வாழையாகப் பின்பற்றிய ஊராட்சி முறை பற்றி ஆய்வோம்.

சோழப் பெருமன்னர்கள் தமது ஆணையின்கீழ் வாழும் மக்கள் ஆட்சித் துறையில் தேர்ச்சி பெறவும், தத்தம் ஊரின் நன்மை தீமைகளை ஆராய்ந்து, அதில் அக்கறை கொண்டு அதற்குரிய ஏற்பாடுகளைச் செய்து கொள்ளவும், ஊர்கள் தோறும் சபைகளை நிறுவி யிருந்தனர். இக்கிராம ஆட்சி முறை சோழர் கால ஆட்சி முறையின் போற்றத் தகுந்த கூறுபாடா கும். இது பன்னுட்டினரின் ஒருமித்த பாராட்டுதலைப் பெற்றுள் ளது. இது தற்காலத்திய தல சுய ஆட்சி முறையினை (Local Self-Government) ஒத்த தாகும். சோழர் காலக் கிராம ஆட்சியில்தான் மக்களால் மக்களுக்காக ஏற்படுத்தப்பட்ட மக்களரசினை நாம் காண முடிகிறது. ஊர்ச்சபை உறுப்பினர்கள் பொது மக்களால் தேர்ந் தெடுக்கப்பட்டவ ராவர்.

அக்காலத்தில் ஒவ்வொரு ஊரும் பல பகுதிகளாகப் பகுக் கப்பட்டிருந்தது. ஒவ்வொரு பகுதியையும் குடும்பு (Ward) என வழங்கினர். ஒவ்வொரு குடும்பிற்கும் ஓர் உறுப்பினர் மட்டும் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்படுவர். ஊர்ச்சபை உறுப்பினர் எண்ணிக்கை, அவ்வூரின் அளவிற்கு ஏற்றுற்போல் அமைந் திருந்தது. எடுத்துக்காட்டாகச் செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள உத்திரமேரூர் முப்பது குடும்புகளைக் கொண்டதாகவும், தஞ்சை மாவட்டத்திலுள்ள செந்தலை (சந்திரலேகைச் சதுர் வேதி மங்கலம்) ஏறக்குறைய அறுபது குடும்புகள் உடையதாக வும் இருந்தன என அறிகிறோம். எனவே, பெரிய ஊர்களில் அதிக உறுப்பினர்களும் சிறிய ஊர்களில் குறைந்த உறுப்பினர் களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர் என்பது உறுதி.

இனிச் சபையின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்படுவோ ரின் தகுதிகள் யாவை? என்பதைக் கவனிப்போம். காணிக்கடன்

செலுத்துதற் கேற்ற கால்வேலி நிலமும், சொந்த மனையும், உடையவராய், மறைகளையும் ஆகமங்களையும் நன்கு கற்று அவற்றைப் பிறர்க் குணர்த்தவும் வல்லவராய், கருமம் ஆற்று வதில் திறமை பெற்றவராய், முப்பத்தைந்து வயதுக்கு மேற் பட்டு எழுபத்தைந்து வயதுக் குட்பட்டோராய், நல்வழியில் சம் பாதித்த பொருளினைப் பெற்றுத் தூய வாழ்க்கையினைப் பின்பற் றுவோராய், மூன்றாண்டுகட்கு உட்பட்டு நிறைவேற்றுக் கழகத் தினும் (நிருவாக சபை) உறுப்பினராக இருந்திராதவராய் இருப் பவரே ஊர்ச்சபையின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பெறும் உரிமை யுடையோ ராவர்.

அரைக்கால் வேலி நிலமே உடையவராய், ஒரு மறையைக் கற்றுணர்ந்தவராய், நான்கு பாடியங்களுள் ஒரு பாடியத்தைப் பிறர்க்குணர்த்தும் திறன் கொண்டவராய் இருப்பவரும் உறுப் பினராகத் தேர்ந்தெடுக்கப்பெற உரிமை உடையோ ராவர்.

சுருங்கக் கூறுமிடத்துக் காணிக்கடன் இருத்தற் கேற்ற நில மும், சொந்த வீடும், அறவழியில் சம்பாதித்த பொருளும் உடையவராய்க் கல்வி கேள்விகளிற் சிறந்த ஒழுக்க சீலராய், நேர்மையான முறையில் செயல் படுவோரே உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பெற உரிமை யுடையவராவர். இக்காலையும் இவை போன்ற தகுதிகள் வற்புறுத்தப்படின், ஊரவை உறுப்பின ராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பெரும்பாலோர் தகுதி யில்லாதவர் களாகக் கூறப்படுவர் என்பது திண்ணம். அக்காலை சொத்துடை யோரும், ஒழுக்கச் சீலரும் பதவி வகித்தலைத்தான் மக்கள் விரும் பினர் போலும்,

இனி ஊர்ச்சபை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கத் தகா தார் யாவர்? என்ற பட்டியலும் ஈண்டு கண்டு மகிழத் தக்கதாக வும், சுவை பயக்கத் தக்கதாகவும் உள்ளது. எந்தச் சபையிலா வது உறுப்பினராக இருந்து கணக்குக் காட்டாதிருந்தவரும், அவருக்குச் சிற்றவ்வை, பேரவ்வை, அத்தை, மாமன் என்ற இவர்களின் மக்களும், அவர்தம் தந்தையும், தாயுடன் பிறந்த வன், தந்தையுடன் பிறந்தவன், தம்முடன் பிறந்தவன், மனைவி யோடு பிறந்தவன், பெண் கொடுத்த மாமன், உடன் பிறந்தாள் கணவன், மகளை மணந்தவன் என்றிவர்களும், இவர்களின் சுற் றத்தார்களும், உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கத் தகாதவராவர்.

இவர்களே யன்றி நெருங்கிய உறவினர்களாகிய பெண் ணைத் தகாப் புணர்ச்சி செய்தவரும், பார்ப்பனக் கொலை செய்த வரும், கள்ளுண்பவரும், களவாடுபவரும், ஆசான் மனைவியைக்

கூடியவரும் கிராம குற்றப் பதிவுப் புத்தகத்தில் பதிவு செய்யப் பெற்றவரும், அவருக்கு உறவினரும், ஆராயாமல் செயல்படத் துணியும் இயல்பினரும், பிறன் பொருளை வவ்வினவரும், கள்ளக் கையெழுத்திட்டோரும், (Forgery) தீமையான செயல் செய்த தன் பொருட்டுக் கழுதை மீதேற்றப்பட்டவரும், இழி குலத்த வரின் கூட்டுறவு காரணமாகச் சாதியினின்று விலக்கப்பெற்றுக் கழுவாய் செய்யப் பெறுதவரும் போன்றவர்கள் ஊர்ச்சபை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கத் தகாதவராவர். இவர் போன்ற தகாதோர் அன்று பதவியில் அமர்த்தப்படாமையின் காரண மாகத்தான் அன்று நல்லாட்சி நடந்தது. கையூட்டுப் பெறு தலும், தரக்குறைவாக நடத்தலும் இல்லாதிருந்தன.

இன்னும் எத்தகைய கையூட்டு (Bribe) வாங்கினேரும், கிரா மத் துரோகியென ஒதுக்கப்பட்டோரும், பொது மகளிருடன் கூடினேரும், கழுவாயால் தூயவரான போதும் தம் வாழ் நாள் முடிவுறும் வரை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்படும் தகுதி யினை இழந்தவராவார்.

### குடவோலை முறை

மேற்குறித்த தகுதிகள் படைத்தவர்கள் காரிய நிறைவேற் றுக் கழக உறுப்பினராகக் குடவோலை முறைப்படியே ஆண்டு தோறும் பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்படுவர். தேர்ந் தெடுத்தற்குக் குறிக்கப்பெற்ற நாளில், அரசாங்க அதிகாரி ஒரு வர், சபை கூடுவதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ள மாளிகை யில் அவ்வூரிலுள்ள இளைஞர் முதல் முதியோர் ஈருகவுள்ள எல் லாப் பொதுமக்களையும் கூட்டுவர். அக்கூட்டத்தின் மத்தியில் ஒரு குடம் வைக்கப்பெறும். அவண் குழுமியுள்ள நம்பியருள் வயது முதிர்ந்தார் ஒருவர் அக்குடத்தை யெடுத்து அதனுள் ஒன்றும் இல்லை என்பதை எல்லோரும் அறியக் காட்டிக் கீழே வைப்பார். பின்னர், ஒவ்வொரு ஊரையும் முப்பது பகுதிகளாகப் பிரித்து ஒவ்வொரு பகுதியிலுள்ள ஒவ்வொருவரும் தமக்குத் தகுதி உடையார் என்று தோன்றுவோரின் பெயரினை ஓலையில் எழுதி, அவ்வோலைகளை ஒன்று சேர்த்து, இன்ன பகுதியைச் சார்ந்த ஓலை என்பது விளங்க, அப்பகுதியின் வாயோலை ஒன் றைச் சேர்த்துக் கட்டிக் குடத்தில் இடுவர். இங்குப் பகுதி எனப் படுவது குடும்பு எனவும் பெயர் பெறும். இவ்விதம் அவ்வூரி லுள்ள முப்பது பகுதியினரும் தமது ஓலையைக் குடத்திலிடுவர்.

பின்னர், அம்முதியவர் அங்கு நடைபெறுவதனை அறியாத ஓர் இளஞ் சிறுவனை அழைத்து, அக்குடத்தினின்றும் ஓர் ஓலைக்

கட்டினை எடுப்பித்து அதனை அவிழ்த்து, வேறு ஒரு குடத்திலிட்டுக் குலுக்குவர். அவ்விதம் நன்கு குலுக்கப்பெற்ற குடத்தினின்றும், ஒரு ஓலையை மட்டும் அச்சிறுவனைக் கொண்டு எடுக்கச் செய்து, அதனைத் தாம் பெற்று, அங்கிருக்கும் கரணத்தான் கையில் கொடுப்பர். இவண் கரணத்தான் என்று குறிக்கப் பெறுபவன் கிராமக் கணக்கனுவான். அவன் தன் ஐந்து விரல்களையும் அகல விரித்துத் தன் கையில் ஒன்றும் இல்லை என்பதனைப் பிறர் அறியக் காட்டி, அகங்கையால் அவ் ஓலையினை வாங்கி, அதில் எழுதப் பெற்றுள்ள வேட்பாளரின் பெயரினை அங்குள்ளார் அனைவரும் கேட்கும்படி உரக்கப்படிப்பான். அங்குக் குழுமியுள்ள நம்பிமார் அனைவரும் அவ்வோலையிலுள்ள பெயரினைப் படித்துப் பார்ப்பர். இவ்விதம் அனைவரும் படித்து உணர்ந்த பின்னரே அப்பெயர் ஒரு ஓலையின்கண் குறிக்கப்பெறும். அவ்வோலையின்கண் குறிக்கப்பெற்ற பெயரினை உடையவர், அக்குடும்பிற்குரிய கிராம சபை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவராக உறுதி செய்யப் பெறுவர். இங்ஙனமே மற்றைய குடங்களையும் குலுக்கி முன்போல் எடுப்பித்து அவர்கள் பெயர்களையும் ஓலையில் எழுதிக்கொள்வர். இவ்விதமாக ஊர்ச் சபை உறுப்பினர்கள் பொதுமக்களால் குடவோலை முறைப்படி தேர்ந்து எடுக்கப் பெறுகின்றனர்.

நாம் மேற்கூறியவாறு அக்கால ஊர்ச்சபை நிகழ்ச்சிகள் அனைத்தும் கிராமக் கணக்கனை முன் வைத்து நடத்தப் பெற்றன என்பதனைக் கீழ்க்காணும் பெரிய புராணப் பாடல் உணர்த்துகின்றது.

'இருள்மறை மிடற்றேன் கையில்
 ஓலைகண் டவையோர் ஏவ
அருள்பெறு கரணத் தானும்
 ஆவணம் தொழுது வாங்கிச்
சுருள்பெறு மடியை நீக்கி
 விரித்ததன் தொன்மை நோக்கித்
தெருள்பெறு சபையோர் கேட்ப
 வாசகம் செப்பு கின்றான்.'

மேற்கூறிய இலக்கியச் சான்று மட்டுமன்றிக் கல்வெட்டும் இக்குடவோலை முறையினைக் கீழ்க்கண்ட முறையில் குறிக்கின்றது.

'சாலவும் விருத்தரும் பாலரும் அல்லாதார் குறைக்குமகளில் பொன்காண வல்லவர் எனப்படுவாரை நோக்கி மாட வீதியார்

கூடிக் குடவோலை எழுதிப் புகவிட்டுத் தங்கள் சேரியில் நால் வரைக் குடவோலையில் போந்தாரைக் கொள்வதாகவும் இப் பரிசே சங்கரப் பாடியில் மூவரைக் கொள்வதாகவும்.'

உறுப்பினர் தேர்தல், கடமை, வாரியம் போன்றவை மிகத் தெளிவாகவும் விரிவாகவும், சிறப்பாகவும் சோழர் காலக் கல் வெட்டுகளில் குறிக்கப்பெற்றுள்ளன. பராந்தகச் சோழன் காலத் திய உத்திரமேரூர் கல்வெட்டு இம்முறையினைக் குடவோலை முறை எனச் சிறப்பித்து உலகிற்கு எடுத்துக் காட்டியது. பராந் தகன் காலத்தில் இம்முறை செப்பம் செய்யப்பட்டு முழுமை பெற்ற போதிலும், சங்க காலத்தேயும் வழக்கிலிருந்த செய்தி இலக்கியங்களால் அறியப்படுகிறது.

மருதனிளநாகனுர் என்னும் புலவர் தமது காலத்தில் வழக் கிலிருந்த குடவோலை முறையினை அகநானூறு எனும் நூலில் கீழ்க்கண்டவாறு குறித்துள்ளார்.

கயிறுபிணிக் குழிசி ஓலை கொண்மார்
பொறிகண் டழிக்கும் ஆவண மாக்களின்
உயிர்த்திறம் பெயர நல்லமர்க் கடந்த
தறுகணாளர் குடர்தரீஇத் தெறுவரச்
செஞ்செவி எருவை யஞ்சுவர இகுக்கும்'[1]

**வாரியங்கள்**

இவ்வண்ணம் ஊரிலுள்ள எல்லாக் குடும்புகளுக்கும் அங்கத் தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட பின்னர், ஊர்ச்சபையின் உட் பிரிவுக் கழகங்கள் அமைக்கப்பெறும். அக்கழகங்கள் வாரியங் கள் என அழைக்கப்பெற்றன. வாரியங்களுக்கு அங்கத்தினர் கள் தேர்ந்தெடுக்குங்கால் அங்கத்தினரின் வயது, கல்வியறிவு போன்றவைகளும் கருத்தில் கொள்ளப்பெறும்.

இவ்வங்கத்தினர்கள் முப்பதின்மருள் வயதிலும் கல்வியிலும் அறிவிலும் முதிர்ந்தோர் பன்னிருவரைச் சம்வத்சர வாரியராகத் தேர்ந்தெடுப்பர். மற்றையோருள் பன்னிருவர் தோட்ட வாரிய ராகவும், அறுவர் ஏரி வாரியராகவும் தேர்ந்தெடுக்கப் பெறுவர்.

[1] அகநானூறு-77

பின்னரும், இம்முறையே முப்பது ஓலைகளைத் தேர்ந்தெடுத்துக் குடத்திலிட்டுக் குலுக்கி, அவற்றுள் பன்னிரண்டினை எடுக்கச் செய்து, அறுவரைப் பொன் வாரியராகவும், அறுவரைப் பஞ்ச வார வாரியராகவும் அமர்த்துவர்.

ஆகவே, இக்காரிய நிறைவேற்றுக் கழகம், சம்வத்சர வாரியர், தோட்ட வாரியர், ஏரி வாரியர், பஞ்ச வாரியர் என்ற ஐந்து வகையான வாரியரைத் தன்னகத்தே கொண்டதாகும். அக்காலை கிராம சபையில் ஐந்து உட்கழகங்கள் இருந்தன என்பது புலனாகும்.

சபையின் உறுப்பினர் தம்மைத் தேர்ந்தெடுத்த நாளிலிருந்து முந்நூற்றறுபது நாள் வரையிலும் (ஓராண்டு) எவ்வகை ஊதியமும் பெறாது தம் கடமைகளை ஆற்றுவதற்கு உரிமையும், அதிகாரமும் பூண்டவராவர். இவர்கள் ஆளுங் கணத்தார் எனவும், கணப் பெருமக்கள் எனவும் அழைக்கப்பெற்றனர்.

கழக உறுப்பினர் ஏதேனும் குற்றம் புரிந்தால் உடனே பதவியினின்றும் நீக்கப்படுவர்.

நியாய விசாரணை செய்து குற்றத்திற்கேற்ற தண்டனை விதித்தலும், கோயிற் காரியங்கள் ஒழுங்காக நடைபெறுகின்றனவா? என்பதை மேற் பார்வை யிடுதலும், ஊரைச் சுற்றிப் பார்த்து நன்மை தீமைகளை நாடித் தேவையானவற்றைச் செய்தலுமாகிய பொதுக் காரியங்களை மேற்கொள்வது சம்வத்சர வாரியர் கடமை யாகும்.

ஏரி, குளம், ஊருணி, வாய்க்கால் முதலிய நீர் நிலைகளைப் பழுதுறாமல் பாதுகாத்தலும், விளைச்சலுக்கு வேண்டிய நீரைச் சரிவரப் பாய்ச்சுவித்தலும் போன்ற காரியங்களைச் செய்தல் ஏரி வாரியர் கடமை யாகும்.

புஞ்சை, புறம்போக்கு நிலங்களைப் பற்றிய எல்லாவற்றையும் கண்காணிப்பது தோட்ட வாரியர் கடமை யாகும்.

பஞ்ச காலங்களில் மக்களின் உணவுத் தேவைகளைப் பூர்த்தி செய்யும் பொருட்டு ஊரிலுள்ள தானிய விளைவில் ஒருசிறு பகுதியைப் பெற்றுப் பாதுகாத்து வைப்பது பஞ்ச வாரியர் கடமை யாகும். தானிய விளைவில் ஆறில் ஒரு கடமை மன்னனுக்காகவும், மீதமுள்ள ஐந்து கூறு நிலமுடையார்க்காகவும் பிரித்துக் கொடுப்போரும் இவராவர்.

பொன்னை உரை காண்பதும், அரசரால் வெளியிடப்பெறும் பொற் காசுகள், செப்புக் காசுகள் ஆகியவற்றை ஆராய்ந்து கண் காணிப்பதும் பொன் வாரியத்தார் கடமை யாகும். இவ்வாரியத் தில் ஒன்பது உறுப்பினர் பணி புரிந்தனர். இவ்வொன்பதின்மருள் படைவீரர் இருவரும், சங்கர பாடிகள் (வாணியர் அல்லது செக்கார்) மூவரும் இடம் பெற்றிருந்தனர். இவர்கட்கு மாதந் தோறும் ஏழரை மஞ்சாடிப் பொன் ஊதியமாக அளிக்கப்பட் டது. சிறுவரும் வயது கடந்தவரும் இவ்வாரியத்தின் உறுப் பினராக முடியாது. இவர்கள் ஓரவஞ்சனை யின்றி மக்களின் பொன்னை மாற்றறிய வேண்டும். இவர்கள் ஆணிக் கல்லைப் பொன்னை உரைக்கும் கட்டளைக் கல்லாகப் பயன்படுத்தினர். இவ்விதம் உரைத்து எடுக்கப்பட்ட பொன் துகளைப் பொன் வாரி ய்த்தார் ஏரி வாரியப் பெருமக்களிடம் ஒப்படைப்பர். பொன் வாரியத்தார் தங்கள் கடமைகளை நேர்மையாகவும் நாணய மாகவும் ஆற்றுதல் வேண்டும் என விதிக்கப்பட்டிருந்தது. இவர் கள் மூன்று திங்களுக்கு ஒரு தடவை ஆட்டை (ஆண்டு) வாரி யத்தினர் முன்னிலையில் 'நாங்கள் எமக்கிட்ட கட்டளையை மீறி, உரை காண வேண்டி வந்த பொன்னைக் களவாடி யிருப்போ மாயின், யாம் என்றென்றும் பசிப் பிணியால் துன்புற்று அழிவோ மாக' என்று ஒரு உறுதி மொழியினை எடுத்துக் கொண்டு அதன் வழி நடந்தனர்.

மேற்கூறிய வாரியங்களே யன்றிக் கழனி வாரியம், கணக்கு வாரியம், கலிங்கு வாரியம், தடிவழி வாரியம், ஆட்டை வாரியம், உதாசீன வாரியம் போன்ற வாரியங்களும் சில கிராமங்களில் இருந்தன.

ஊர்க் கணக்குகளைக் கண்காணிக்கும் பொறுப்புக் கணக்கு வாரியத்தாரிடம் விடப்பட்டது.

நஞ்சை நிலங்களைப் பற்றிய யாவற்றையும் கண்காணித்து வரும் பொறுப்புக் கழனி வாரியத்தாரிடம் ஒப்படைக்கப் பட் டிருந்தது. ஆறு, ஏரிகளிலுள்ள மதகுகளை மேற்பார்வையிட்டுத் தேவைக்கேற்பத் தண்ணீரை வடித்தும், பெருக்கியும் கண் காணிப்பவர் கலிங்கு வாரியத்தார் எனப்பட்டனர். கலிங்கு என்பது மதகாகும்.

வயல்களிலும், ஊர்ப் புறங்களிலும் உள்ள பாதைகளையும், சாலைகளையும் கண்காணித்துப் பணி புரிவோர் தடிவழி வாரியத் தாராகும்.

மேற்கூறிய கழகத்தார் பணித்தவற்றைச் செய்பவன் கரணத்தான் எனப்படுவான். இவனை மத்தியஸ்தன் எனவும் கூறுவ துண்டு. நல்வழியில் ஈட்டிய பொருளும், நல்லொழுக்க மும் உடையவனையே கரணத்தானாக ஏற்படுத்துவர். இவன் கணக்குகளை எழுதுதல் வேண்டும். இவன் எழுதிய கணக்கைப் பெருமக்கள் வேண்டும்போது, தானே நேரில் காண்பித்து அவர் களது நன்மதிப்பைப் பெறவேண்டும். இல்லையேல் அடுத்த ஆண்டில் கணக்கெழுதும் உரிமை இவனுக்குக் கொடுக்கப்பட மாட்டாது.

கணக்கனுக்கு ஒரு நாளைக்கு ஒரு நாழி நெல்லும், ஓராண் டிற்கு ஏழு கழஞ்சு பொன்னும் இரண்டு கூறையும் சம்பள மாகக் கொடுக்கப்படுவது வழக்கம். இவன், தான் எழுதிய கணக்கைச் சபையார் முன் ஆண்டுதோறும் ஆய்வுக்காக வைத் தல் வேண்டும். தான் எழுதியுள்ளது சரியான கணக்கு என் பதைக் காய்ச்சின மழுவைக் (Red Hot Iron) கையில் ஏந்தி உறுதிமொழி கூறிக் கொடுத்தல் வேண்டும். அங்ஙனம் கொடுக் குங்கால் கையில் சூடு படாதிருந்தால், கணக்கனுக்குரிய ஏழு கழஞ்சு பொன் சம்பளத்துடன் காற்பங்கு பொன் சேர்த்துக் கொடுக்கப்படும். கையில் ஊறுபாடு நேருமாயின், பத்துக் கழஞ்சு பொன் தண்டமும் வேறு தண்டமும் சபையாரால் விதிக் கப்படும்.

இவ்வாறு சோழர் காலத்தில் நாணயமும் நேர்மையும் வாய்ந்த பணியாளர்கள் நன்கு ஊக்கு விக்கப்பெற்று, நாணய மின்மையும் நேர்மையின்மையும் கொண்ட பணியாளர்கள் தண் டிக்கப் பெற்றனர். இது போன்ற சிறந்த கூறுபாடுகளைத் தன்ன கத்தே கொண்டிருந்த காரணத்தால் சோழர் கால அரசியல், வரலாற்று அறிஞர் பலரால் போற்றப் பெறுகின்றது.

சபை உறுப்பினர்கள் கூடுவதற்கு ஊர்தோறும் மாளிகை அமைக்கப் பெற்றிருந்தது. இராசராசன் காலத்தில் மதுராந் தகச் சதுர்வேதி மங்கலத்தில் பெருமக்கள் கூடுவதற்கெனச் செம்பியன் மாதேவிப் பெருமண்டபம் அமைக்கப் பட்டதாகக் கல்வெட்டுச் சான்று பகர்கின்றது. ஊர்ச்சபை கூடுவதற்கெனத் தனி மண்டப மில்லாத ஊர்களில் கோயில் மண்டபத்திலோ, மரத்தடியிலோ சபை கூடியது. நம் இராசேந்திரன் காலத்தில் காமரசவல்லி என்னும் ஊர்ச்சபையினர் ஸ்ரீகைலாசம் உடையார் கோவிலில் கூடினர் என்று அவ் வூரிலுள்ள கார்கோடீஸ்வரர்

கோவில் கல்வெட்டுக் கூறுகிறது. காமரசவல்லி திருச்சி மாவட்டத்தில் ஏலாக்குறிச்சியிலிருந்து நான்கு கல் தொலைவி லுள்ளது.

ஊர்ச்சபை கூடுகின்ற நாளைக் காளம் ஊதுவித்து உறுப்பினர்கட்கு உணர்த்தினர் என்பதும், அவசியம் நேர்ந்த காலங்களில் பகற் காலத் தன்றி இராக்காலத்தும் சபையினர் கூடிக் காரியங்களை ஆய்ந்தனர் என்பதும் கல்வெட்டுகளால் விளங்குகின்றன. ஊர் மக்களின் தேவைகளை ஊர்ப் பெருமக்களே பூர்த்தி செய்து வந்தனர். இது தற்காலத்திய தல சுயஆட்சி முறையினை ஒத்த தாகும். எனவே, இற்றைக்குப் பன்னூறு ஆண்டுகட்கு முன்பே சோழர்கள் கிராம சுய ஆட்சி முறைக்குக் கால் கோளிட்டனர் என்றும், இன்றைய தல சுய ஆட்சியின் சிறந்த கூறுபாடுகள், அன்றைய ஆட்சி முறையில் கருக்கொண்டிருந்தமையையும் கண்டு எல்லை யற்ற மகிழ்ச்சி யடைகிறோம்.

நீதி விசாரணை நடத்தும் சம்வத்சர வாரியர் கொடுக்கும் தண்டனைகள் அறமுறை பிறழாது இருந்தன. கொலைப் பாதகம் புரிந்தவனுக்குக் கொலைத் தண்டம் விதித்தலும், பிற குற்றங்கட்குச் சிறையிடுதலும், தளையிடுதலும், பொன்தண்டம் விதித்தலும் வழக்கம். அறியாமையின் காரணமாகத் தற்செயலாக நிகழ்ந்த உயிரிழப்பிற் கெல்லாம் அவ்வவற்றிற்கு ஏற்றபடி திருக்கோயில்களில் விளக்கிடுவதற்குக் குற்றவாளிகள் பொன் கொடுக்குமாறு அவையினர் தீர்ப்புக் கூறுவர். ஏனெனில், குற்றவாளி கொலை செய்ய வேண்டு மென்ற எண்ணத்துடன் அதனைச் செய்ய வில்லை. இது போன்ற நிகழ்ச்சிகள் கல்வெட்டுகளில் ஏராளமாகக் குறிக்கப் பெற்றுள்ளன.

வேட்டைக்காரன் ஒருவன் விலங்கின்மீது அம்பெய்தான்; அது குறி தவறி உழவன் மீது தைத்து, உழவன் இறந்துபட்டான். ஒருவன் தன் மனைவியைச் சினத்தால் தள்ளினன்; எதிர் பாராத விதமாக அவள் கீழே விழுந்து இறந்தாள். ஒருத்தி தன் மகள்மீது எறிந்த கோல் அருகில் நின்ற வேறொரு பெண் மீது பட்டு அவள் மாண்டுவிட்டாள். மேற் கூறப்பட்ட மூன்று குற்றங்களும் எதிர் பாரா நிலையில் நிகழ்ந்தமையின் திருக்கோயில்களில் விளக்கெரிக்கப் பொற்கொடை யளிக்குமாறு தீர்ப்புக் கூறப்பட்டது. கடமைகளை நிறைவேற்றத் தவறினோர் பொன் தண்டம் விதிக்கப் பட்டனர். அவர்கள் அத்தண்டத்தைக் கொடா தொழியின் அன்னோரின் சொத்துகள் மன்னனது ஆணையின்படி விற்கப்பட்டன வாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன.

**படை**

ஒரு நாட்டு அரசியற்குப் படையே அடிப்படை. படையின்றி நாடில்லை; நாடின்றிப் படையுமில்லை; போர் என்பது இன்று எல்லோராலும் வெறுக்கப்பட்ட போதிலும் இக்காலத்தில் படையில்லாத நாடே இவ்வுலகின்கண் இல்லை. 'வலிமையே உரிமை' (Might is Right) என்ற கோட்பாடு அரசோச்சிய அக்காலத்தில் படையின் இன்றியமையாமை பற்றிச் சொல்லத் தேவையில்லை. ஒரு நாட்டிற்குப் படையின் முக்கியத் துவத்தை விளக்க வந்த வள்ளுவப் பெருந்தகையும்,

> 'உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
> வெறுக்கையுள் எல்லாந் தலை'[1]

என்று கூறி வேந்தனுக்கு வெல்படை தலையாயது என்பதைக் குறிப்பிட்டார்.

படை, மன்னனின் இன்றியமையாத உறுப்பாதலின் மன்னர்க்குரியவற்றைக் கூறும் தொல்காப்பியச் சூத்திரத்திலும், படை தலையாயதாகக் குறிக்கப் பெற்றது. செந்தமிழ் வித்தகர் இளங்கோவடிகளும் படையை மன்னனின் திருமேனி எனச்சுட்டினர். அறம் உரைக்கும் திருவள்ளுவரும் பொருட்பாலின் முதற் பாவின் முதற்சொல்லாகப் போர்க்குரிய படையை வைத்து,

> 'படைகுடி கூழ்அமைச்சு நட்(பு)அரண் ஆறும்
> உடையான் அரசருள் ஏறு'[2]

என அரசுக்குரிய இன்றியமையாத ஆறனுள் படைக்கே முதன்மை அளித்தார்.

**படை வகைகள்**

படையானது, போர் நிகழும் இடம் பற்றி 1. நிலப்படை (Military), 2. கடற்படை (Navy) என இரு வகைப்பட்டது. அக்காலத்து ஆகாய விமானப் படை இல்லை.

நிலப் படை, ஊர்தி பற்றி 1. கரிப் படை, 2. பரிப் படை, 3. தேர்ப்படை, 4. காலாட்படை என நால்வகைப்பட்டது. காலாட்படை, கருவி பற்றி 1. விற்படை, 2. வாட்படை, 3. வேற்படை என மூன்று வகைப்பட்டது.

1 திருக்குறள்-படை மாட்சி-1
2 திருக்குறள்-இறை மாட்சி-1

'மும்முடிச் சோழத் தெறிந்த ஆனையாள்கள்', 'சிங்களாந் தகத் தெறிந்த குதிரைச் சேவகர்','கேரளாந்தகத் தெறிந்த பரி வாரத்தார்' என்று வழங்கப் பெறுதலின், மன்னனிடம் யானைப் படை, குதிரைப்படை, காலாட்படைகள் மிகுதியாக இருந்தன என்பது புலனாகும். இராசேந்திரன் ஆட்சிக் காலத்தில் தேர்ப் படை இருந்ததாகக் கல்வெட்டுகளில் குறிப்புகள் காணப்பெற வில்லை. வீரர்கள் போர்க் களத்தின்கண் தேரைச் செலுத்திச் சென்றதாகவும், தேர்ப்படையினைத் தாக்கியதாகவும் எவ்விதக் குறிப்பும் காணக்கிடைக்க வில்லை. மன்னர்கள் யானை மீதிருந்தும் குதிரை மீதிருந்தும் போர் புரிந்தனர் என்றுதான் கூறப்பட்டுள் ளதே யன்றித் தேர் மீதிருந்து போர் செய்ததாகக் குறிக்கப்பெற வில்லை. எனவே, இராசேந்திரன் காலத்தில் தேர்ப்படை ஒரு தனிப்படையாகக் கருதப்பெற வில்லை.

இராசேந்திரனது காலத்தில் தேர்ப் படையே இல்லையெனக் கூறுதல் தவறாகும். தமிழ்நில வழக்குப்பற்றி நூல் செய்த ஒல்காப் பெரும்புலமைத் தொல்காப்பியனார் 'தொல்காப்பியம்' எனும் நூலின்கண் புறத்திணையியலில் 'தானை யானை குதிரை யென்ற-நோனாருட்கு மூவகை நிலையும்'[1] என்று குறிப்பிட்டுள்ளார். இதன் கண் தானையையும் சேர்த்து முப்படைகளையும் கூறிக் குதிரை யின்றித் தேர், தானே செல்ல யியலாமையின் தேர்க்கு மறம் இல் லையாதலின் அதனைக் கூறாதொழிந்தார். இது பற்றியே இராசேந் திர சோழனது காலத்திய வெட்டெழுத்துகளில் தேர்ப்படை யெனத் தனித்துக் கூறவில்லை போலும்! எனக் கொள்ளல் பொருத்த முடைத் தாகும்.

**படை வகையும் பெயரும்**

'பரிவார மெய்க்காப்பாளர்', 'உடனிலை குதிரைச் சேவகர்' எனக் கல்வெட்டுச் செய்திகள் கூறுவதனால் மன்னன், தனது தற்காப்பின் பொருட்டு மெய்க்காப்பாளரையும், குதிரைப் படை யொன்றனையும் தன்னுடன் கொண்டிருந்தான் என்பது புலப் படும்.

அக்காலத்தில் போர்க் கருவிகள், எய்ப்படை, எறிபடை, குத்துபடை, வெட்டுபடை, அடிபடை, தடுபடை என ஆறு வகையாக இருந்தன. வில்லம்பு எய்ப்படை யாகும். விட்டேறு எறிபடை யாகும். வேல், ஈட்டி, குந்தம் முதலியன குத்துபடை

[1] தொல் புறத்திணையியல்-சூத்திரம்-17

ஆகும். வாள் வெட்டுபடை ஆகும். மழு, தண்டு முதலியன அடி படை ஆகும். கவசம், கேடயம் முதலியன தடுபடை ஆகும்.

மேலே கண்ட ஒவ்வொரு படைக் கருவியிலும் நன்கு தேர்ந்த தனித்தனிப் படைகளும் இருந்தன. இதனைப் பராந்தகக் கொங்க வாளர், 'வலங்கைப் பழம்படைகளிலார்', 'சிறுதனத்து வடுகக் காவலர்', 'பண்டித சோழத் தெறிந்த வில்லிகள்' எனவும் 'மூலப் பரிவார விட்டேறு' எனவும் 'கைக்கோளப் பெரும்படை' எனவும் 'வாள் பெற்ற கைக்கோளர்' எனவும் சாசனங்களில் குறிக்கப் பெற்றிருத்தலின் அறிய லாகும். வில்லிகள் என்போர் வில் வீரர்களாவர். விட்டேறு என்பது வேற்படை யாகும்.

அக்காலத்தில் மெய்யுறை (Coat of Mail) பூண்ட வீரர்படை யும் இருந்தது என்பதனைத் 'தெரிந்த அந்தளகத்தாளர்' என்ப தால் அறியலாம். அந்தளம் என்பது மெய்யுறை யாகும். யானை வீரர் குஞ்சர மல்லர், ஆனை யாள்கள், ஆனைப் பாகர், அத்தி மல்லர் என அழைக்கப் பெற்றனர். குதிரை மறவர் இவுளி மற வர் என்றும் குதிரைச் சேவகர் என்றும் அழைக்கப் பெற்றனர். படைகளைக் குறிப்பிடு மிடத்து, இன்ன விடத்து வெற்றி பெற்ற சிறப்பினுக்குரிய தானை இது வென்பது விளங்க 'அழகிய சோழத் தெறிந்த', 'அரிதுர்க்கலங்கணத்தெறிந்த', 'சண்ட பராக் கிரமத் தெறிந்த', 'விக்கிரமா பரணத் தெறிந்த', 'கேரளாந் தகத் தெறிந்த', 'சிங்களாந்தகத் தெறிந்த' என்பன போன்ற அடைமொழிகள் கொடுத்து அவற்றைச் சிறப்பித்தனர்.

போர் செய்ய, மன்னன் நாள் பார்த்தலும் அவன் படை வீரர்கள் குறி பார்த்தலும் மரபு. நாளும் கோளும் பார்த்துப் போருக்குச் சென்றால் வெற்றி கிட்டு மென்பது அவர்கள் நம்பிக் கையாகும். படை தங்கி யிருந்த இடம் 'கடகம்' என்றும் 'பாசறை' என்றும் அழைக்கப்பெற்றது.

***வேளைக்காரப் படை***

மேற்கண்ட படைகளே யன்றி இராசேந்திரனிடம் உற்றிடத் துயிர் வழங்கும் வலங்கை, வேளைக்காரப் படைகள் இருந்தன. வீரத்தின் இருப்பிடமாய்த் திகழ்ந்த இவர்கள் மன்னனுக்காகத் தம் இன்னுயிரையும் தத்தஞ் செய்யத் தயங்காதவ ராவர். இவர்கள் வேளைக்காரர் எனக் குறிக்கப் பெற்றிருத்தல் தகாது. கண்ணை இமை காப்பதுபோல் இவர்கள் மன்னனைக் காத்தோம் பினர்; தம் சோர்வால் மன்னனுயிர்க்குத் தீங்கு விளையின் தாமும் உடன் இறக்கும் தன்மையராவர். ஆற்றல் மறவர்களான

இவர்கள், 'இன்னவாறு செய்வேன்; செய்யாதொழியின் இன்ன கேடுறுவேன்' என வஞ்சினங் கூறிச் சொன்னவாறு செயல்படுவர். சொன்னதைச் செய்து முடிக்கும் திறலுடைய இவர்கள் வேளைக்காரப் பெரும்படையெனக் குறிக்கப் பெறுகின்றனர்.

எனவேதான், திருவகுப்பு நூலுடையார் தம் அடியார்க்குக் கேடு விளையாமல் முன்னின்று காத்தோம்பும் தமிழ் நாட்டுத் தெய்வமாம் முருகப் பெருமானை வேளைக்காரன் என்றனர் போலும்! இதனால், வேளைக்காரர் எத்தனை மேம்பட்டவர் என்பதனை விளம்ப வேண்டுவதில்லை.

*நிலைப்படை*

பெருவீரனான இராசேந்திரனிடத்துத் தான் வென்று கைக்கொண்ட நாடுகளில் குழப்பமும், அமைதியின்மையும் ஏற்படாது காத்தற் பொருட்டு 'நிலைப் படையும்' இருந்திருந்தல் வேண்டுமென்று எண்ணுதல் தகும்.

*தானைத் தலைவர்கள்*

படைக்குத் தலைவன் படைத் தலைவனாவான். அனைத்துப் படைக்கும் தலைமையேற்பவனை இவன் காலத்தில் 'மாதண்ட நாயகன்' எனவும், ஒவ்வொரு படைக்கும் தலைமை யேற்பவனைத் தண்ட நாயகன் எனவும் சேனாதிபதி எனவும் சாமந்தன் எனவும் அழைத்தனர். படைத் தலைவன், படைமுதலி, சேனைமுதலி எனவும், பெரும்படைத் தலைவன், பெரும்படை முதலி, சேனாவரையன், சேனாதிராயன் எனவும் அழைக்கப்பெற்றனர்.

நம் இராசேந்திரன் காலத்தில் விக்கிரம சோழியவரையனாகிய அரையன் இராசராசன், கிருட்டிணன் இராமனான மும்முடிச் சோழப் பிரம ராயன், வல்லவரையன் வந்தியத் தேவன், இராசேந்திர சோழப் பல்லவ ராயன், இராசராச மாராயன் ஆகியோர் படைத் தலைவர்களாகப் பணியாற்றினர்.

*கடற்படை*

கடல் கடந்த நாடுகளை வென்று அடிமைப் படுத்த விரும்பும் மன்னன் கடற்படையின்றி, யாதும் செய்ய இயலாது. எனவே, தமிழ் நாட்டினர் பண்டைக்கால முதல் கடற்படை வைத்துக் கடலாண்டனர்.

இவ்வுலகின்கண் பரந்து விரிந்த பேரரசினை நிறுவிய ஆங்கிலேயர்கள் தங்களது கடற்படையின் வலிமை கொண்டே 'செயற்கரிய' செய்தனர் என்பதை வரலாறு என்றும் மறவாது.

இந்தியாவின்கண் பரந்துபட்ட பேரரசினை நிறுவிய மொக லாயர்களது பேரரசு வீழ்ந்துபடக் காரணமாக இருந்தவற்றுள் கடற்படை வலிவின்மையும் ஒன்றும் என்பதும் வரலாறு கண்ட உண்மை யாகும்.

கடற் படையின் இன்றியமையாமையை நன்குணர்ந்த சோழர்கள் கடற் படையினை நிறுவியிருந்தனர் என்பது போற்று தற் குரியது. பண்டைக் காலத்தில் ஆட்சி புரிந்த கரிகாற் சோழ னும் கப்பற் படைகொண்டு ஈழத்தினை வென்று, சிங்களவரைக் கொண்டுவந்து காவிரிக்குக் கரை கட்டிய வீர வரலாறு நாம் மறக்காத ஒன்று.

விசயாலய சோழக் குடியின் அருமந்த மன்னனும் முதல் பராந்தக சோழன் மதுரையினையும், ஈழத்தினையும் வென்று 'மதுரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரி' எனப் பெயர் பூண்டான்.

சுந்தர சோழனும் ஈழத்தின்மீது போர் தொடுத்தான். சோழர் வரலாற்றிலொரு பொற்காலத்தினை உருவாக்கிய முத லாம் இராசராச சோழனும், கப்பற் படையினைச் செப்பம் செய்து ஈழத் தீவினையும் மாலத் தீவினையும் வென்று மங்காப்புகழ் பெற் ருன்.

இக்கடலாண்ட காவலர்களின் கால்வழி வந்தோனுன நம் இராசேந்திரனும், அலைகடல் நடுவுள் பல கலஞ் செலுத்தும் திற லுடையோன் என்பதால் தனக்கென ஒரு தலைமை யிடத்தைப் பெற்றுத் தனக்கு ஒப்பாரு மின்றி, மிக்காரு மின்றித் தலைசிறந்து விளங்கினுன்.

இவன் காலத்திய சோழர் கடலாதிக்கம், இங்கிலாந்து நாட் டின் கடலாதிக்கத்துடன் ஒப்புமை கூறத் தக்க தாகும்.

இவனது வெற்றிப் புகழினை மலாய்த் தீபகற்பத்தின் மண் ணும், கடார நாட்டின் கடலலைகளும், சுமத்திராத் தீவின் சோலை களும், ஈழத்தீவின் தென்னைகளும் பாடிக் கொண்டிருந்தன வெனின் இவனது கப்பற்படைத் திறனைச் சொல்லவும் வேண் டுமோ!

இவன் எண்ணிறந்த போர்க் கலங்களைக் கட்டுவித்துப் போர் வீரர்கட்குக் கடற்போரில் நற்பயிற்சி யளித்துக் கடல் கடந்த வெற்றிகள் பல பெற்று, இந்திய மன்னர்களுள் தலைசிறந்த கட

லாண்ட காவலனைகப் போற்றப் பெறுகிறுன். இவனது கடலா திக்கம், சோழர்களது கடல் வாணிகத்தைப் பெருக்கவும், பொருளாதாரம் முன்னேற்ற மடையவும் வழி வகுத்தது.

முதலாம் இராசராசனின் ஆட்சிக் காலத்திலும், முதலாம் இராசேந்திரனின் ஆட்சிக் காலத்திலும் 'மூன்று கை மகாசேனை' என்ற ஒருபடை யிருந்ததாகத் தெரிகின்றது. இப்படை மூன்று பிரிவுகளாகப் பகுக்கப்பட்டிருத்தல் வேண்டுமென்று எண்ண இட முண்டு. மூன்றுகை மகாசேனை என்பது மூன்று பிரிவுகளாக அமைக்கப் பட்டிருந்த தென்றும், அவற்றுள் ஒன்ருன வலங் கைப் பிரிவு நிலையான பிரிவு என்றும், இடங்கை என்பது வணி கர்களையும் தொழிலாளர் சிலரையும் கொண்ட தென்றும், மூன்ரு வது பிரிவு கோயில் பணியாளர்களைக் கொண்டிருந்த தென்றும் கருத இடமேற்படுகிறது.'[1] என்று தென்னிந்திய வரலாற்று மேதை திரு. பண்டாரகர் கே. கே. பிள்ளையவர்கள் குறிப்பிடுவ தாலும் இதனை நாம் நன்கறியலாம். இப்படை வைணவ ஈடு பாடுடையதாக விளங்கியது.

கோயில்களின் பாதுகாப்பினையும், கோபுரங்களின் பாது காப்பினையும் ஆங்காங்கு நிறுத்தப்பட்டிருந்த படைகளே ஏற் றன என்ற செய்தியும் கல்வெட்டுகளால் உறுதிப்படுகின்றது.

தமிழக வரலாற்றிலேயே, சோழரின் ஆட்சியில்தான் வலங்கை, இடங்கைப் பிரிவுகளைப் பற்றிய குறிப்புகள் முதன் முத லாகக் காட்சி தருகின்றன. இலங்கையிலும் இடங்கைப் படை யொன்று நிறுவப்பட்டிருந்ததாகப் பொலந்நறுவையில் காணப் பெறும் கல்வெட்டா லறியலாம்.[2] இக்கல்வெட்டு இலங்கை நாட் டினைக் கி.பி. 1065 முதல் கி.பி. 1120 முடிய ஆட்சி புரிந்த விசய பாகு (Vijaya Bahu) என்ற மன்னனின் காலத்தில் வெளியிடப் பட்ட தாகும்.

இதுகாறும் கூறியவற்ருல் சோழப் பெருமன்னர்கள் படை யின் முக்கியத்துவத்தை யறிந்திருந்த காரணத்தால் தமது படை வலியைப் பெருக்கி, உள்நாட் டமைதியைக் காத்ததோ டமையாது, வெளிநாட்டுப் படையெடுப்பில் நாட்டங் கொண்டு, வெற்றி பல கண்டு, தமது நாட்டினை விரிவுபடுத்தித் தமது ஏகாதி பத்தியத்தினையும் நிறுவினர். தமிழக மூவேந்தர்களும் கடற்

[1] தமிழக வரலாறு-மக்களும் பண்பாடும்-பக்கம்-308
[2] E. P. Ind. XVIII. No. 38

படையினைப் பெற்றிருந்த போதிலும் அவர்களுள் சோழர்களே கடலாதிக்கத்தில் முன்னணியில் திகழ்ந்தன ரென்பதனை யறியலாம்.

**கோயில்கள்**

'கோயி லில்லாத ஊரில் குடியிருக்க வேண்டா' என்பது முதுமொழி. இம்முதுமொழியினைப் பின்பற்றிச் சோழர் காலத்து நாடெங்கனும் எண்ணிறந்த கோயில்கள் கட்டப்பட்டன. கோயில்கள் இறைவனை வழிபாடு செய்து வீடு பேறடையும் இடமாக மட்டும் அடையாது, மக்கள் அறிவு வளர்ச்சிக்குரிய நாடகம், நாட்டியம், சமயச் சார்புடைய சொற்பொழிவுகள் போன்றவை நிகழும் இடமாகவும் திகழ்ந்தது. எனவே, எல்லா விதமான கலை மன்றங்களும் ஒருசேரத் திகழ்ந்த இடம் திருக்கோயில் என்பது புலனாகும். மக்கள் உடல் வளர்ச்சிக்குச் சத்தான உணவு பயன்படுதல் போல, மக்கள் ஆன்மீக வளர்ச்சிக்கு இறை வழிபாடு பயன்பட்டது. ஆகவே, 'கோயில்கள் பல்கலைக் கழகங்கள்' என்றால் அது மிகை யாகாது.

சோழர் காலத்தில் கோயில் சமுதாயத்தின் முதுகெலும்பாக, உயிர் நாடியாக விளங்கியது. தூய பணிகள் பலவற்றினைப் புரிந்து வந்த கோயில், மக்களால் பெரிதும் விரும்பப்பட்டதில் வியப் பொன்று மில்லை. சோழர் காலக் கோயிலின் முக்கியத்துவத்தினைக் கலாநிதி திரு. டி. வி. மகாலிங்கம் அவர்கள் கீழ்க் கண்டவாறு குறிப்பிடுகின்றார். 'கோயிலானது ஒரு தலத்திலுள்ள மக்களின் சமய வாழ்க்கையின், முக்கியத்துவம் பெற்ற உயிர்த் துடிப்புள்ள இடமாக விளங்கியதோடு, அவ்வூர் மக்களுடைய அரசியல், சமுதாய, பொருளாதாரத் துறைகளைச் சார்ந்த பல் வேறு இயக்கங்களிலும் பங்குகொண்ட சமூக நிறுவனமாகச் சிறந்து விளங்கியது. தானே நிலப் பிரபுவாகவும் முதலாளியாகவும், (மக்களுக்கு வேலை கொடுப்பவராகக்) கோயில் திகழ்ந்தது. கோயிற் பண்டாரமானது நிதியகம் (Bank) போல அமைந்து வைப்புப் பணங்களைப் பெற்றும், கடனுதவி வழங்கியும் மக்களுக்கு உதவி செய்தது. கிராமப்புறக் கைத்தொழில்களின் வளர்ச்சிக்கும் கோயில்கள் பெரிதும் உதவின. அரசாங்கத்திற்குச் செலுத்தப்பட வேண்டிய வரிகள் கோயில்களால் அளவிடப் பட்டன. தனிப்பட்டவர்கள் தங்கள் நிலத்திற்குச் செலுத்த வேண்டிய வரிகளும் (மன்னனால்) கோயில்களுக்குக் கொடுக்கப் பட்டன. இவற்றைவிடக் கோயில்களும் மக்களிடமிருந்து வழக்கமான கடமைப் பணத்தையும் பெற்றன....மன்னர் கோயிற் பாது

காப்பில் தனிக் கவனம் செலுத்தினர். எடுத்துக்காட்டாகச் சோழப் பெருமன்னன் முதலாம் இராசராசன் ஆட்சிக் காலத் திலே திருவாழீச்சுவரத்திலுள்ள பெருங்கோயிலும், அதன் பண் டாரமும், பணியாட்களும் சோழப் படையின் ஒரு பிரிவான மூன்று கை மகாசேனையின் பாதுகாப்பிலிருந்தது.......நாட்டின் பொருளாதார வாழ்வில் கோயில் முக்கியப் பங்கு வகித்தது. பெருவாரியான நிலவுடைமைகளை யுடையதாய்ச் செல்வ மிகுந்த நிறுவனமா யிருந்த காரணத்தால் பலருக்கு வேலைவாய்ப்பு வசதி யளித்தது கோயில். இராசராசன் ஆட்சிக் காலத்திலே தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் மட்டும் அறுநூற்று ஒன்பது பணி யாள்கள் வரை பணி யாற்றினர்.'

'கோயிலில் பல்வேறு வகையான பணிகளில் அவர்கள் ஈடு பட்டனர்...ஊரிலேயுள்ள பெரிய நிலவுடமை நிறுவனம் என்ற முறையில் கோயில் ஊரின் விவசாயத்தில் ஊக்கங் காட்டியது. வயல்களில் பயிர் செய்வதோடு அமையாது, புதிய நிலங்களையும் சாகுபடிக்குக் கொண்டு வந்தது. பாழ்பட்ட கிராமங்களுக்குப் புனர் வாழ்வு அளிக்க முயன்றது.......'

கோயில் பண்டாரமானது நிதியகம் போலக் கடமை யாற்றிய தால் தனிப்பட்ட நிறுவனங்களுக்கும், ஊராட்சி மன்றங்களுக் கும், வட்டியுடனும், வட்டி யில்லாமலும் கடனுதவியது. உழவர் கள் தமது தொழில் தேவைகளுகாகக் கடன் பெற்றனர். சிலர் தம் பெண்களுக்குச் சீதனம் கொடுப்பதற்கும் கோயிலிலிருந்து கடன் பெற்றனர். எனவே, அக்காலத்தில் கோயில் சமுதாய வாழ்வின் நடுநாயகமாக விளங்கிற் றென்பதைத் தெற்றென அறியலாம்.

சோழர் ஆட்சிக் காலத்தில் கோயில்கள் பெற்ற வளர்ச்சி யினை வரலாற்றறிஞர் திரு. கே. ஏ. நீலகண்ட சாத்திரியார் 'சோழர்கள்' எனும் நூலின்கண் கீழ்க்கண்டவாறு கூறியுள் ளார்.

'...... மத்திய காலத்து இந்து சமயம் தென்னிந்தியாவிற்கு அளித்த இரு பெருங்கொடைகள் கோயிலும் மடமும் ஆகும். சோழரின் ஆட்சிக் காலப் பகுதியிலேயே இவ்விரு நிறுவனங் களும் மெல்ல மெல்ல வளர்ந்து சூழ்நிலைக் கேற்ப மாற்ற மடைந் தன; இவை பொது மக்களின் கற்பனையைக் கவர்ந்தன; பணக் காரரின் ஆதரவைப் பெற்றன; இக்கவனமும் ஆதரவும் கிடைக் கவும், இந்நிறுவனங்கள் பௌத்த விகாரைகளையும், சமணப்

பள்ளிகளையும் விஞ்சி யெழுந்து உறுதியான நிலையை யடைந்தன. இன்றுவரை இந்த உயர்நிலையை இவை பெற்று வந்துள்ளன... விசயாலயன் மரபு சோழர் ஆட்சியிலே, தென்னிந்தியாவின் சைவ சமயத்தின் பொற்காலம் தொடங்குகிறது எனக் கூறலாம்'.

'நில உரிமைக்காரனுகவும், முதலாளியாகவும், பொருள்களை நுகர்வோனுகவும், சேவைகளைப் பெறுவோனுகவும் விளங்கிய கோயில், வங்கியாகவும், பள்ளிக்கூடங்களாகவும், பொருட்காட்சிச் சாலைகளாகவும், வைத்திய சாலைகளாகவும், நாடக மன்றங்களாகவும் விளங்கியது; சுருங்கக் கூறின் அக்காலத்து நாகரிக வாழ்க்கையிலும், கலைகளிலும் சிறந்தன வெல்லாம் தன்னையே சுற்றி இயங்கப் பெற்றது மட்டுமன்றி, அவற்றை யெல்லாம் தரும உணர்விலிருந்து உதித்த மனிதாபி மானத்தால் செம்மைப் படுத்தியதில், மத்திய கால இந்துக் கோயிலுக்கு நிகரான நிறுவனங்கள் உலக வரலாற்றிலேயே அருமையாகத்தான் உள்ளன எனலாம்.'

கோயில்கள் மன்னர்களாலும் பிறராலும் கொடையாக அளிக்கப்பெற்ற பெரும்பொருளும், நிலமும் உடையனவாய் அக்காலத்தில் சிறந்து விளங்கின. ஒவ்வொரு மாதமும் பூரணையில் கோயில்களுக்கு விழா நடைபெற்றது. உச்சிப் போதில் கோயில்களில் மகேச்சுரர்க்கு நாள்தோறும் அன்ன மிடுவது வழக்கமாக இருந்தது. நாள்தோறும் திருமுன்னர் தேவாரப் பதிகங்கள் விண்ணப்பஞ் செய்வதற்கு நிவந்தங்கள் விடப்பட்டிருந்தன. திருப்பதிகம் ஓதுவார் பிடாரர்கள் எனப்பட்டனர்.

மன்னர்களாலும், மன்னன் தேவியராலும், அதிகாரிகளாலும், தனிப்பட்டோராலும், வணிகக் கழகங்களினுலும் அக்காலத்தில் கோயில்களுக்கு நிலம், சாவா மூவாப் பேராடு, பொன், பொருள் ஆகியவை கொடையாக வழங்கப் பெற்றன. இக் கொடைகள் நந்தா விளக்கிற்காகவும், பூசையினை தொடர்ந்து நடத்துதற்கும், திருப்பதிகம் ஓதுதற்கும், இசைக் கருவிகள் இசைப்பதற்கும், நாட்டியக் கலைக்கும், திருவிழா நடத்துதற்கும், கோயில் திருப்பணி செய்வதற்கும் பயன்பட்டன.

கோயிற் காரியங்களை அவ்வூரிலுள்ள சபையினரே மேற்பார்வையிட்டு வந்தனர். மன்னனும் அரசாங்க அதிகாரிகளும், நாட்டைச் சுற்றிப் பார்த்து வருங்காலை, கோயில்களில் காரியங்கள் திட்டமிட்டபடி நடைபெறுகின்றனவா? என்று ஆராய்ந்து வருவது வழக்கம்.

கோயில் கணக்கு எழுத கரணத்தார் என்பார் நியமிக்கப் பட்டிருந்தனர். ஒவ்வொரு கரணத்தாரும் தமக்கு உதவியாகத் தமக்குக் கீழ் இரு கரணத்தார்களை நியமித்துக் கொண்டனர். இவ்வாறு நியமனம் பெற்றவர்களே கீழ்க் கரணத்தார் என அழைக்கப் பெற்றனர்.

நாடு கண்காணி நாயகம் என்ற அதிகாரி கோயில் வரவு செலவுக் கணக்குகளைச் சரிபார்த்ததாக இராசேந்திரனது கல் வெட்டால் அறியலாம். நம் இராசேந்திரன் காலத்தில் வலியூரு டையான் ஐயப்பாடி குணநிதி என்பான் கோயில் கணக்கினைக் கண்காணித்ததாக அறிகிறோம்.

திருக்கோயிலையும் அதிலுள்ள பொருள்களையும் பாதுகாப் பவர் திருமெய்க்காப்பாளர் (Temple Watchman) என அழைக்கப் பெற்றனர்.

தேவார நாயகம் என்பான் தேவாரத் திருப்பதிகங்கள் ஓதும் பிடாரர்களை மேற்பார்வையிட்டான். முதலாம் இராசேந் திரனது ஆட்சிக் காலத்தில் நாங்கூருடையான் பதஞ்சலி பிடா ரன் என்பவன் தேவார நாயகம் செய்பவனு யிருந்தான் என் பதனைக் கும்பகோணம் வட்டம் மானம்பாடி என்ற ஊரிலுள்ள கல் வெட்டால் அறியலாம். இவன் சிவன் கோயில்களில் திருப்பதிகம் பாடுவோரைக் கண்காணிப்பதோடு கோயில்களில் நடைபெற்ற நாள் வழிபாடு முதலான எல்லாவற்றையும் மன்னனது ஆணை யின்படி ஸ்ரீகாரியஞ் செய்த அதிகாரி யாவான்.

கோயில் காரியம் செய்பவர் ஸ்ரீகாரியம் செய்பவர் என அழைக்கப் பெற்றனர். ஸ்ரீகாரியம் செய்வோர், மேற்பார்வை யிடுபவர், ஸ்ரீ காரியக் கண்காணி நாயகம் எனப்பட்டனர்.

கோயிலுக்குரிய பணிகளைச் செய்வதற்குப் பதியிலார் நூற் றுக் கணக்கில் நியமிக்கப் பட்டிருந்தனர். இவர்கள் பதியிலார் எனவும் தளிச்சேரிப் பெண்டுகள் எனவும் அழைக்கப் பெற்றனர். இவர்கட்காகத் தனித்தனி மனைகள் கட்டப்பட்டிருந்தன. ஒவ் வொருவருக்கும் ஒவ்வொரு வேலி நிலம் நிவந்தம் கொடுக்கப் பட்டது. இப்பெண்களுள் பலர் ஆடல் பாடல்களில் வல்லுநராகத் திகழ்ந்தனர். இவர்கள் தங்கள் பெயர்கட்குமுன் நக்கன் என் னும் பெயரினை இணைத்துக் கொண்டனர். நக்கன் என்பது சிவ னுக்குரிய பெயர்களுள் ஒன்று. இப்பெண்கள் தங்கள் வாழ் வினைச் சிவன் கோயிலுக்காக அர்ப்பணித்தமையின் இப்பெய ரினை இணைத்துக் கொள்ளுதல் பொருத்த மானதே யாகும்.

கோயில்களில் பாடுவோர் காந்தர்விகள் எனப்பட்டனர். கொட்டி மத்தளக்காரர், பக்க வாத்தியர், வீணை வாசிப்பவர், மொரலியம், வங்கியம், பாடவியம், உடுக்கை, முத்திரை, சங்கு முழங்குவோர் ஆகியோரும் அக்காலத்தில் கோயில்களில் இசை மழை பொழிந்தனர்.

பண்டைக் காலத்தில் கோவில்களில் பணிபுரியப் பலர் நியமிக்கப் பட்டிருந்ததாகக் கோலாரிலுள்ள துர்க்கைக் கோயிலில் வெட்டப் பட்டிருந்த கல்வெட்டுக் கூறுகின்றது. இக்கோயிலில் பூசனை நிகழ்த்துவதற்குச் சைவப் பிராமணன் ஒருவனும், பூசனைக்குரிய மற்றப் பணிகளைச் செய்யப் பிரமச்சாரிகள் நால்வரும், வழிபாட்டிற்குரிய (அபிடேகம்)நீர், பூ, போன்ற பொருள்களைச் சித்தம் செய்து வைக்கப் பணியாளர்களும், கோயில் நந்தவனத்தைப் பராமரிக்க இரண்டு குடும்பங்களும், கோயிலைப் பாதுகாப்பதற்குக் காவலர் மூவரும் , பைரவர் மூவரும், யோகீஸ்வரர் நால்வரும் நியமனம் செய்யப் பெற்றிருந்தனர். தேவாரத் திருப்பதிகங்கள் முறையாக ஓதப்பெறுவதற்குப் பத்து ஓதுவார்களும், கோயில் கணக்கினைக் குறித்து வைக்க ஒரு கணக்கனும், நாட்டியம் நிகழ்த்துவதற்கு ஆடல்பாடல்களில் தேர்ச்சி பெற்ற இருபத்து நான்கு தேவரடியார்களான நடன மாதர்களும், ஒரு குயவனும் ஒரு வண்ணானும், ஒரு சோதிடனும், மேற்பார்வையிடும் அரசியல் பணியாளன் ஒருவனும், ஒரு கருமானும், ஒரு தச்சனும் நியமிக்கப்பட்டனர். மேலும், வியாகரணம், மீமாம்சம் போன்றவற்றினைக்கற்பிக்கும் ஆசானும், கோயில் திருப்பணி செய்ய அலுவலர்களும் கோயிலில் நியமிக்கப் பட்டனர். இவர்கள் தம்தம் கடமைகளைக் குறைவறச் செய்து முடித்தனர்.

இவனது ஆட்சிக் காலத்தில் கோயில் பணிகளை யாற்ற கோயில்களில் எழுந்தருளுவித்தவற்றுள் கடவுள் வடிவம் திருமேனி யெனவும், மக்கள் வடிவம் பிரதிமம் எனவும் வழங்கப் பெற்றன என்பதனை 'எழுந்தருளுவித்த பிச்சதேவர் திருமேனி', 'நம்பி ஆரூரர் பிரதிமம்' என்ற கல்வெட்டுப் பகுதிகளா லறியலாம்.

கோயிற்குரிய செலவு போக எஞ்சிய பொருளின் ஒரு பகுதியினைக் கல்வி வளர்ச்சிக்காகப் பயன் படுத்தினர் என்ற செய்தியைத் தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள எண்ணாயிரம் என்னும் ஊரிலுள்ள கல்வெட்டால் அறியலாம்.

கோயிற் செலவு போக எஞ்சியதின் ஒரு பகுதியை மருத்துவ மனைகட்கும் பயன்படுத்தப்பட்ட செய்தியினைச் செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள திருமுக்கூடல் கோயில் கல்வெட்டாலறியலாம்.

நம் தமிழகத்தின்கண் விளங்கிய பல செங்கற் கோயில்கள் பிற்காலச் சோழர் காலத்துக் கற்றளிகளாக மாற்றப்பெற்றன. பிற்காலச் சோழர் காலத்துக் கோயில்களுள் தலைசிறந்து விளங்குவது இராசராசன் கட்டுவித்த தஞ்சை இராசராசேச்சுரமும், இராசேந்திரன் கங்கை கொண்ட சோழபுரத்தில் அமைத்த கங்கை கொண்ட சோழீச்சரமும் ஆகும்.

சோழர்களின் கலைத் திறன் இன்றும் பன்னாட்டறிஞர்களின் ஒருமித்த புகழ்ச்சியினைப் பெற்றுள்ளது. தமிழ்நாட்டில் கோயில்களின் கலைப்பணியின் விளைவாக, வீழ்ச்சி நிலையிலிருந்து கலை மீட்கப்பட்டு உச்ச நிலைக்குக் கொண்டு வரப்பட்டன. எனவே தான், 'சோழக் கலைஞர் அரக்கர்களைப் போலச் செயல் தொடங்கி நுண்வினைப் பொற்கொல்லர் போலச் செய்து முடிக்கும் திறம் வாய்ந்தவர்' என அறிஞர் பெர்குசன் அவர்கள் புகழ்ந்துரைக்கின்றார்.

நம் இராசேந்திர சோழனும் கோயில்கள் பல அமைத்துக் கோயில் நிருவாகத்தினைச் சிறந்த முறையில் மேற்பார்வை செய்தான். இவனது ஆட்சிக் காலத்தில் கோயில் காரியங்களைக் கவனிப்பதற்கென்றே ஒரு பெருங்குழுவினை நிறுவியிருந்தான் என்பது பெரிதும் போற்றுதற் கொன்றாகும். ஐம்பத்தாறு அங்கத்தினர்கள் தங்களுக்குள் பதினான்கு குழுக்களாகப் பிரிந்து கோயில் நிருவாகத்தினை மேற் கொண்டனர். ஒவ்வொரு குழுவிலும் நான்கு அங்கத்தினர்கள் இடம் பெற்றிருந்தனர். வேலைத் திறனுக் கேற்ப அங்கத்தினர்கள் தங்கள் ஊதியத்தினைப் பெற்றுக் கொண்டனர்.

மேற்கூறிய செய்திகளை உக்கல் சிவன் கோயிலில் காணப் பெறுகின்ற இராசேந்திரனின் இருபத்தொன்பதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டா லறியலாம்.

இவ்விதம் பல குழுக்களை நிறுவி, அவற்றிற்கெனத் தனித் தனிக் கருமங்களை ஒப்படைத்துள்ள செய்தி, மௌரியர்களின் நகராட்சி நிருவாகத்தினை நம் மனக்கண்முன் கொண்டு வந்து நிறுத்துகின்றது.

**சமயம்**

'சமயம் மக்களுக்கு அபின்' எனச் சிலர் குறைபட்டுக் கொண்ட போதிலும், ஒரு சமுதாயத்தின் நாகரிகத்தினை அச் சமுதாயத்தின் சம நிலையைக் கொண்டே அளந்தறிய முடியும். அக்கால மன்னனும் மக்களும் சமய அடிப்படையில் தங்களது வாழ்வினை அமைத்துக் கொண்டனர். சமயமும் வாழ்வும் ஒன்றுக்கொன்று பின்னியும் பிணைந்தும் இழைந்தும் இணைந்தும் பண்டு காணப்பட்டதை எவரும் மறக்கவோ, மறைக்கவோ, ஏன்? மறுக்கவோ முடியாது.

சோழர் ஆட்சிக் காலத்தில் சைவமும் வைணமும் பீடு நடை போட்டன என்ற போதிலும், சைவ சமயம், சோழப் பெருமன்னர்களால் பெரிதும் போற்றப்பட்டன. சோழப் பெருமன்னர்கள் சைவ சமயத்தில் ஈடுபாடு கொண்டு, அதற்குப் பேராதரவு அளித்த போதிலும் மற்றச் சமயங்களை வெறுத்தார்களில்லை. எம் மதமும் சம்மதம் என்ற பரந்த கொள்கையினைப் பறை சாற்றிய சோழ மன்னர்கள் சமண சமயத்திற்கும் புத்த சமயத்திற்கும் வழிபாட்டுரிமை அளித்தனர். இருப்பினும் பௌத்தமும் சமணமும் வீழ்ச்சியுறும் நிலையில் காணப்பட்டன. இவைகள் செல்வாக் கிழக்கத் தொடங்கியதே யன்றி, முழுமையாக அழிந்துவிட வில்லை என்பது ஈண்டுக் குறிப்பிடத் தக்க ஒன்ருகும். காஞ்சியில் சமணம் நன்கு வேரூன்றி யிருந்தமை ஈண்டு நினைவிற் கொள்ளத் தக்க தாகும்.

நம் இராசேந்திரனது ஆட்சிக் காலம் சைவ சமயத்தின் பொற்காலம் எனக் கொள்ளுதல் மிகையாகாது. இராசேந்திரனின் காலத்தில் சைவ சமயத்தில் பல பிரிவுகள் இருந்துவந்தன. அவற்றுள் காளாமுகச் சைவமும் ஒன்று. இராசேந்திர சோழப்பெருமன்னன் காளாமுகத்தைச்சார்ந்தஇலகுவீச பண்டிதரிடத்துச் சைவ ஆகமங்களைக் கற்றுத் தேர்ந்தான். செம்பியன் மாதேவியாலும், குந்தவைப் பிராட்டியாராலும் வளர்க்கப்பெற்ற இவன், இளமைப் பருவத்திலேயே சைவ சமயத்தின்பால் நாட்டம் கொண்டான். 'சிவபாத சேகரன்' என்றும் 'திருமுறை கண்ட சோழன்' என்றும் போற்றப் பெறுகின்ற முதலாம் இராசராசனின் தவப் புதல்வனுகத் தோன்றிய இவன் சைவ சமயத்தில் நல்ல ஈடுபாடு கொண்டிருந்தான் என்பதில் வியப்பொன்றுமில்லை.

வேத, வேதாந்த, வியாகரண, ஆகம புராண அறிவு நிரம்பப் பெற்ற இராசேந்திரன், சைவ சமய வளர்ச்சிக்கு ஒல்லும்

வகையெல்லாம் அரும்பணியாற்ற விழைந்தான்; சிவபெருமானின் சீரிய கழல்களை ஏத்தும் பணியே தூய பணி யெனக் கொண்டு, சைவ சமயத்துடன் தனது வாழ்க்கையை இணைத்துக்கொண்டு சமய வாழ்வு மேற்கொண்டான்; தில்லையம்பல நடராசன்மீது எல்லை யற்ற அன்பு கொண்டான்; நாடெங்கினும் நடராசர் படிமங்களை வடித்து, அவன் தலையிலே கங்கையைச் சூட்டி மகிழ்ந்தான்; கங்கை கொண்ட சோழபுரத்தின்கண் பிரமாண்டமான சிவாலயம் ஒன்றை எழுப்பினான்; திருவொற்றியூர் இறைவனது உட்கோயிலை அமைத்தான்; கடல் கடந்த ஈழ நாட்டின்கண் மகா தோட்டம், மாந்தோட்டம் என்னு மிடங்களில் சிவனுக்குத் திருக்கோயில்கள் எழுப்பினான்; திருமழபாடி சிவன் கோயிலைப் புதுப்பித்தான்; திருக்கோயில்கட்கு நிவந்தங்கள் விட்டான்; சிவ நேயச் செல்வனாக விளங்கினான்.

இராசேந்திரன் கங்கைக்கரை நாடுகளிலிருந்து சைவ பிராமணர்களை அழைத்து வந்து தமிழகத்தில் குடியேற்றிச் சைவ சமய வளர்ச்சிக்கு அரும்பாடு பட்டான். இவனது முயற்சியால் தென்னாட்டுச் சைவமும் வடநாட்டுச் சைவமும் ஒன்று கலந்தன. பல்வேறு பகுதிகளில் நிலவி வந்த சைவம் ஒன்றுக் கொன்று நெருங்கிய தொடர்பு கொண்டது. சாக்கதர்கள், காளாமுகர், சண்மார்க்கர் முதலிய சைவ சமயப் பிரிவினர் தங்கள் பணிகளைத் தொடர்ந் தாற்றினர். இஃது எவ்வகையில் சிவ ஞான போதம் உருவாகக் காரணமாயிற்று? என்பது புலனாக வில்லை.

சிவநேயச் செல்வனான இவன் எம்மதமும் சம்மதம் என்ற பரந்த கொள்கையைப் பறை சாற்றினான். இவனது ஆட்சிக் காலத்தில் சைவ சமயத்துடன் வைணவமும், புத்தமும், சமணமும் தழைத் தோங்கின.

தன் தந்தையின் ஆட்சிக் காலத்தில் நாகப்பட்டினத்தில் கட்டப்பட்ட, சூடாமணி விகாரை, என்ற புத்த ஆலயத்திற்குப் பள்ளிச் சந்தமாக விடப்பட்டிருந்த ஆனை மங்கலம் என்னும் கிராமத்தைத் தனது ஆட்சிக் காலத்தில் சாசனமாக வழங்கிச் 'சூரிய சந்திரர் உள்ளவரை' அனுபவிக்க அவ்வாலயத்திற்கு அனுமதி யளித்தமையின் இராசேந்திரன் சமயப் பொறை மிக்கவன் என்பது புலனாகும்.

சோணாட்டின்கண் பல வகை மதத்தினரும் சகோதரர்போல் அன்பு கலந்து வாழ்ந்தனர். எல்லோருக்கும் மத சுதந்திரம் அளிக்கப்பட்டது. காஞ்சியில் பல சமணப் பள்ளிகளும், புத்த

விகாரைகளும் அமைக்கப்பட்டிருந்ததால் புறச் சமயத்தாருக்கும் மன்னன் ஆதரவு நல்கினன் என்பது புலனுகின்றது. சோழர் காலத்தில் பல வைணவக் கோயில்களும் கட்டப்பட்டன. இக் கோயில்களில் நாலாயிரத்திவ்விய பிரபந்தம் விண்ணப்பிக்கவும் ஏற்பாடுகள் செய்திருந்தான் என்பதனைக் கீழ்க்கண்ட கல் வெட்டுகளா லறியலாம்.

இவனது எண்ணுயிரம் கல்வெட்டு,[1] திருவாய்மொழி விண் ணப்பிக்கவும், வியாகரணம், வேதம் கற்பிக்கும் கல்வி நிலை யத்தை நடத்தவும் இவன், இராசராச விண்ணகர்க்கு 46 வேலி நிலம் அளித்ததாகக் கூறுகிறது.

இவனது பத்தொன்பதாம் ஆண்டு உத்தரமேரூர்க் கல் வெட்டு[2] இவன் ஊர்ச்சபை, கோயிலுக்கு 2240 குழி நிலம் இறை யிலியாக அளித்ததைக் கூறுகிறது. நித்திய பூசனைக்கும், சிறப் புப் பூசனைக்கும் இதன் வருவாய் பயன்படுத்தப் பட்டதாகவும் இரண்டு காலங்களிலும் மூவர் திருமொழி விண்ணப்பம் செய்ய 1470 வேலி நிலத்தின் வருவாய் பயன் படுத்தப்பட்டதாகவும் கூறுகின்றது. இவண் திருமொழி யென்பது நாலாயிரத் திவ்விய பிரபந்த மாகும்.

இராசேந்திர சோழ விண்ணகரத்து வெள்ளைமூர்த்தி ஆழ் வார்க்கு 1520 குழி நிலம் விற்று இறையிலியாக்கப் பட்டதுடன், மூவர் திருமொழி விண்ணப்பம் நாடோறும் நிகழ்த்தப்பெற ஏழு குறுணி நெல் அளிக்கப்பட்டதாக இவனது 26 ஆம் ஆண்டு உத் தரமேரூர்க் கல்வெட்டுக் கூறுகிறது.[3]

எனவே, இராசேந்திரனது காலத்தில் சமயக் காழ்ப்பு இன்றி, எம்மதத்தினரும் சம உரிமை பெற்று வாழ்ந்தனர் என் பது விளங்குகின்றது.

**கல்வி**

பண்டைத் தமிழர் கல்வியின் சிறப்பை நன்குணர்ந்திருந் தனர். கல்வி கற்காத மக்களை விலங்குகளோ டொப்பவே கரு தினர் என்பதனை,

'விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்ருரோடு ஏனை யவர்.'[4]

[1] 333 of 1917
[2] 176 of 1923
[3] 194 of 1923
[4] *திருக்குறள்-கல்லாமை-10*

என்னும் வள்ளுவர் வாய்மொழியால் நன்கு அறியலாம். திருக்குறள் பொருட்பாலில் இறை மாட்சிக்குப் பின்னர் கல்வி, கல்லாமை, கேள்வி என்னும் தலைப்புகளிலும் கல்வியின் முக்கியத்துவமும் பயனும் வற்புறுத்திக் கூறப்பட்டுள்ளமையாலும்,

'எண்என்ப ஏனை எழுத்(து)என்ப இவ்விரண்டும்
கண்என்ப வாழும் உயிர்க்கு'[1]

என்று வள்ளுவப் பெருந்தகை, கல்வியினைக் கண் போன்றதெனக் கூறுவதாலும் நம் முன்னோர் கல்வியின் இன்றியமையாமையை நன்கு அறிந்திருந்தனர் என்பது தெளிவு.

பண்டைக் காலத்தில் கல்வித் திட்டம் பொதுக் கல்வி, சிறப்புக் கல்வி, ஆராய்ச்சிக் கல்வி யென மூவகை நிலைகளைப் பெற்றிருந்தது. சிறப்புக் கல்வி யென்பது தாம் விரும்பும் தொழில் அல்லது கலை பற்றிப் பயில்வ தாகும். அன்று மருத்துவம், வாணிகம், கட்டிடக் கலை, வானநூல், நெய்தல் கலை, உழவுத் தொழில், படைக் கலம் பயிற்றல், ஆட்சியியல், மனையியல், ஓவியக்கலை, சிற்பக்கலை, ஆசிரியரியல், புலவரியல் போன்றவை தொழிற் கல்வியுள் அடங்கின என்பதனை இலக்கியச் சான்றுகளால் அறிய லாகும்.

சோழ மன்னர்கள் கல்வியில் பெரிதும் ஈடுபாடு கொண்டு அதன் வளர்ச்சியில் அக்கறையும் ஆர்வமும் கொண்டிருந்தனர். அக்காலத்தில் ஒவ்வொரு கிராமத்திலும் மரத்தடியிலோ, வீட்டுத் திண்ணையிலோ பள்ளிக்கூடம் நடைபெற்றது. ஊர்ப் பொது நிலத்திலிருந்து வரும் வருவாயைக் கொண்டு ஆசிரியர்களுக்கு ஊதியம் வழங்கப்பெற்றது. கல்விக் கூடங்கள் பெரும்பாலும் விகாரங்கள், மடங்கள், பள்ளிகள் கோயில்கள் ஆகியவற்றுடன் இணைக்கப் பெற்றிருந்தன.

இக்காலை படித்தல், எழுதுதல், கணக்குச் செய்தல் (Reading Writing, Arithmetic) என்று கூறப்படுபவை, அக்காலை எண் எழுத்து ஆகியவற்றுள் அடங்கியதாக விளங்கின. எனவேதான், 'எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்' எனக் கூறப் பெற்றது. அக்காலத்தில் முந்திரி, மாகாணி போன்ற நுண்ணிய வாய்பாடுகள் இருந்தன.

பிற்காலச் சோழ வேந்தர் காலத்துத் தமிழுடன், வடமொழியும் போதிக்கப்பட்டது. ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் ஆங்

[1] திருக்குறள்–கல்வி-2

கிலம் கற்றலும், ஆங்கிலத்தில் உரையாடுவதும், எழுதுவதும் பெருமை என எண்ணப்பட்டது போல் பண்டைக் காலத்தில் வட மொழி கற்பது பெருமையாக எண்ணப்பட்டது எனவேதான், சோழப் பெருமன்னர்களுள் பலர் வடமொழியிலும், தமிழிலும் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தனர். குறிப்பாக முதலாம் இராசராச னும், முதலாம் இராசேந்திரனும் வடமொழியில் பெரிதும் ஈடு பாடு கொண்டிருந்தனர். இவர்களின் கல்வெட்டுகள் வடமொழி யிலும் தமிழிலும் வெளியிடப் பெற்றிருப்பதால் இதனை நாம் உறு தியாகச் சொல்லலாம்.

சோழ வேந்தர்கள் கல்விக் கூடங்களுக்குத் தாராளமாக மானியங்களை வழங்கினர். உயர்கல்வி இலவசமாக அளிக்கப் பெற்றது. மாணவர்கள் பல திக்கிலிருந்தும் வந்து இக்கல்லூரி களில் பயின்றனர். ஆசிரியர்களுக்குப் பணம், தானியம் ஆகி யவை ஊதியமாக அளிக்கப்பட்டன. இக்கல்லூரிகளில் வேதங் கள், இலக்கணம், வேதாந்தம், மீமாம்சம் ஆகியவை கற்பிக்கப் பட்டன.

கோயில் போன்ற பொது இடங்களில் இராமாயணம், மகா பாரதம் ஆகிய இதிகாசங்களும், புராணங்களும் ஒப்புவிக்கப் பெற்றுச் சொற்பொழிவுகளும் நிகழ்த்தப்பெற்றன. அக்காலத் தில் கோயில்களே, உயர்கல்விக் கூடங்களாக விளங்கின. இத னைக் கல்வெட்டுத் 'திருச் சுற்றுளைக் கல்லூரி' என்று குறிக்கிறது.

உயர்தரக் கல்வி கோயில், மடம், பள்ளி ஆகிய இடங்களில் போதிக்கப்பட்டது. பெரிய அளவிலான நூல் நிலையங்களும் இங்கு அமைக்கப்பட்டிருந்தன. மீமாம்சை, வியாகரணம் (இலக் கணம்) வேதாந்தம், பாணினி வியாகரணம், பொது உயர்கல்வி யின் பல்துறைகள் பற்றிய அறிவார்ந்த பாடங்கள் முதலியன போதிக்கப்பட்டன. இக்கல்விக் கூடங்களில், ஆய்ந்தவிந் தடங் கிய சான்றோர் பலர் ஆசிரியர்களாக நியமிக்கப்பட்டனர்.மாணாக் கர் அனைவரும் தகுதி அடிப்படையில் தேர்ந்தெடுக்கப் பெற்ற னர்.இவர்களுக்கு இலவசக் கல்வியும், உணவும் கிடைக்க ஏற் பாடுகள் செய்யப்பட்டன.

***எண்ணாயிரம்***

முதலாம் இராசேந்திரன் காலத்தில் தென் ஆர்க்காடு மாவட்டத்தில் எண்ணாயிரம் (இராச சதுர்வேதி மங்கலம்) என் னும் ஊரில் மறைநூல், (வேதம்) விடுதிக் கல்லூரி ஒன்று நிறுவப்

பெற்றது. இது விழுப்புரத்திற்கும் திண்டிவனத்திற்கும் இடையே உள்ள ஊராகும். இவ்வூர்ச் சபையார் மத்திய அரசின் அலுவலர் முன்னிலையில் இக்கல்லூரி மாணவர்களுக்கு அரசன் ஆணைப்படி உண்டி வசதியும், ஆசிரியப் பெருமக்கட்கு ஊதிய வசதியும் அளிப்பதற்கு ஏற்பாடு செய்திருந்ததாக எண்ணாயிரம் கல்வெட்டுக் கூறுகிறது. இக்கல்வெட்டின் உதவியால்[1] அக்காலத்தில் உயர் கல்விக்குக் கொடுக்கப்பட்ட முக்கியத்துவத்தினையும், கற்பிக்கப்பட்ட பலவகைத் துறைகளைப்பற்றியும், பேராசிரியர்கட்குக் கொடுக்கப்பட்ட ஊதியத்தின் மூலம் பல்வகைப் பட்ட பாடங்கள் போதிக்கும் பேராசிரியர்களின் சிறப்பினைப் பற்றியும், மாணவர்களின் பராமரிப்புச் செலவுகள் பற்றியும் தெள்ளத் தெளிய அறிந்துகொள்ள முடிகின்றது.

இக்கல்லூரியில் மொத்தம் முந்நூற்று நாற்பது மாணாக்கர் கல்வி பயின்றனர். இவர்களுள் இளநிலையாளர் (Junior Students) இருநூற்று எழுபதின்மரும் முதுநிலையாளர் (Senior Students) எழுபதின்மரும் உயர்கல்வி பெற்றனர். இவர்கட்குப் பல்வகைத் துறைக் கல்வியினைக் கற்பிக்கப் பதினான்கு பேராசிரியர்கள் நியமிக்கப் பட்டிருந்தனர்.

இளநிலை மாணவருள் எழுபத்தைந்து மாணாக்கர் இருக்கு வேதமும் எழுபத்தைந்து மாணாக்கர் யசூர் வேதமும், இருபது மாணாக்கர் சாந்தோகசாமனும், இருபத்தைந்து மாணாக்கர் வியாகரணமும் கற்றுவந்தனர். நாற்பதின்மர் உரூபாவதார இலக்கணமும் இருபதின்மர் அதர்வண வேதமும், இருபதின்மர் சந்தோகாசாமனும், இருபதின்மர் தலவகாரசாமனும் பயின்றனர்.

இங்ஙனம் மாணாக்கர் தமக்கு விருப்பமுள்ள பாடப் பிரிவினைத் தேர்ந்தெடுத்து அதனை ஆழ்ந்த முறையில் கற்றுத் தேர்ந்தனர் என்பது புலனாகும். முதுநிலை மாணாக்கர் மேம்பட்ட மூன்று பாடங்களைக் (Three advanced subjects) கற்று வந்தனர். இருபத்தைந்து மாணாக்கர் வியாகரணமும், முப்பத்தைந்து மாணாக்கர் பிரபாகர மீமாம்சமும், பத்து மாணாக்கர் வேதாந்தமும் பயின்றனர். முதுநிலை மாணாக்கர் தேர்ந்த மேம்பட்ட கல்வியினைப் பெற்றுப் புகழ் பெற்றனர். இவர்கட்கு இளநிலை மாணாக்கரைவிட 66 சதவிதம் அதிகம் செலவாயிற்று என்பதனால் இக்கல்வியின் தரம் உயர்ந்தது என்பது புலப்படும்.

[1] 333 of 1917; M. E. R. 1918, P. 147; 343 of 1917.

சமஸ்கிருத இலக்கணத்தின் முன்னுரை என்னும் பாடத்தினைக் கற்போர் உருபாவதாரத்தைக் கற்க வேண்டி யிருந்தது. மாணுக்கர் நான்கு வேதத்தினையும் ஐயம் திரிபறக் கற்றனர். தென்னுட்டில் வடமொழிப் போதனை வரலாற்றில், இராசேந்திர னது காலம் குறிப்பிடத் தக்க தாகும்.

இக்கல்லூரியின்கண் நற்பணி புரிந்த பேராசிரியப் பெருமக்கள் நல்ல ஊதியம் பெற்றனர். தற்காலத்தில் கல்லூரியில் பல்வேறு பாடங்களைக் கற்பிக்கும் பேராசிரியர்கள் ஊதியத்தைப் பொறுத்த மட்டில் எவ்வித வேறுபாடுகளும் இன்றி, ஒரே நிலையில் காணப்படுகின்றனர். ஆனல், அக்காலத்திலோ, சில பாடங்களைக்கற்பிக்கும் பேராசிரியர்கள், நிறைந்த ஊதியமும், வேறு சில பாடங்களைக் கற்பிக்கும் பேராசியர்கள், குறைந்த ஊதியமும் பெற்றனர். அக்காலத்தில் வேதாந்தம் கற்பிக்கும் பேராசிரியர் மட்டும் நாள் படியாக (Daily Allowance) $1\frac{1}{3}$ கலம் பெற்று மற்றப் பேராசிரியர்களைக் காட்டிலும் நிறைந்த ஊதியத்தினராக விளங்கினர். மீமாம்சையும் வியாகரணமும் கற்பிக்கும் நம்பிகள் ஒரு நாள் படியாக ஒரு கலம் நெல் பெற்று, அடுத்த நிலையில் இருந்தனர். ஏனைய பேராசிரியப் பெருமக்களோ, மூன்று குறுணி அல்லது கால்கலம் நெல் பெற்றனர்.

மேற்கூறிய நாள்படியே யன்றி, வேதாந்தப் பேராசிரியரைத் தவிர, மற்றப் பேராசிரியர்களும் முதுநிலை மாணக்கரும் (Chatras) ஊதியமாகப் பொன்னும் பெற்றனர். வியாகரணம், மீமாம்சை, கற்பிக்கின்ற பேராசிரியர்கள் தாங்கள் கற்பிக்கின்ற ஒவ்வொரு அத்தியாயத்திற்கும் ஒவ்வொரு கழஞ்சு பொன்னும், பாடம் முழுவதற்கும் முறையே எட்டுக் கழஞ்சும், பன்னிரண்டு கழஞ்சும் பெற்றனர். மற்றப் பேராசிரியர்கள் ஒவ்வொரு மாணுக்கருக்கும், ஆண்டிற்கு அரை கழஞ்சு என்னும் விகிதத்தில் ஊதியம் பெற்றனர்.

வேதாந்தம் பயிற்றும் பேராசிரியருக்குப் பொன் அளிக்கப் பட வில்லை. ஏனெனில், வேதாந்தத்தினைப் பயிற்றுவித்து அதன் மூலம் பொன் பெறுதல் சட்டப்படியும், வழக்கப்படியும், அக்காலத்து அனுமதிக்கப்பட வில்லை. இதனல், வேதாந்தத்தின் மேன்மையினை அக்கால மக்கள் பெரிதும் மதித்தனர் என்பது உய்த்துணரப் படுகின்றது.

மாணுக்கர்கட்குக் கல்வி, உண்டி, உறையுள், உடை ஆகியவை இலவசமாக அளிக்கப்பட்டமையும், பேராசிரியர்கள் மாணுக்கர்மீது தனிக் கவனம் செலுத்தி, அவர்களது கல்வி நிலை

யினை மேற்பார்வை யிட்டமையும், தற்காலக் கல்வி முறையின் சிறந்த அமிசமான தனி முறைப்பயிற்றுத் திட்டமுறை (Tutorial Scheme) அக்காலத்துச்செயல் பட்டமையும் பண்டைக் காலத்திய குருகுலக் கல்வி முறையினைப் பின்பற்றியமையும், இக்கல்வி முறையுள் போற்றுதற்குரிய அமிசங்களாகும். ஒவ்வொரு துறை யிலும், மாணக்கர் சேர்க்கப்படுவதில் கட்டுப்பாடு நிலவியது. குறிப்பிட்ட அளவிற்குமேல் மாணக்கர்கள் சேர்க்கப்பட வில்லை. மாணக்கர்கள் தகுதி அடிப்படையில்தான் சேர்க்கப்பட்டனர். ஒவ்வொரு பேராசிரியரும் தமக்குக்கீழ் இருபத்தைந்து மாணக் கரை அமர்த்திக்கொண்டு மேற்பார்வை யிட்டனர்.

தற்காலக் கல்வி முறையின் பல சிறப்புக் கூறுபாடுகளைத் தன்னகத்தே கொண்ட இக்கல்லூரி, செம்மையாக நடைபெற்று வருவதற்கு மன்னன் எல்லா உதவிகளையும் செய்தான். எண்ணு யிரம் கல்லூரிக்கு முந்நூறு ஏக்கர் நிலம் மானியமாக விடப்பட் டிருந்தது ஈண்டுக் குறிப்பிடத் தக்க ஒன்றாகும்.

இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் இதைப் போன்று முந் நூற்று நாற்பது மாணக்கர் பயின்ற மற்றொரு கல்லூரியும், நூற் றுத் தொண்ணூறு மாணக்கர் பயின்ற மூன்றாவது கல்லூரியும், வியாகரண தான மண்டபம் என்னும் வடமொழிப் பாணினி இலக்கணக் கல்லூரி ஒன்றும், திருவொற்றியூரில் புகழ்பெற்று விளங்கியதைக் கல்வெட்டுச் சான்றுகளால் அறியலாம். வேப் பத்தூரில் அமைக்கப் பெற்றிருந்த வடமொழிக் கல்லூரியும் அக் காலத்துப் புகழ்பெற்ற கல்லூரிகளுள் ஒன்றாகும். திருமுக்கூடல் என்னும் இடத்தில் ஒரு வடமொழி விடுதிக் கல்லூரி இருந்த தாகக் கல்வெட்டுகளால் அறியலாம்

பாண்டிச்சேரி யருகே திரிபுவனி[1] (Tribhuvani) என்னு மிடத் தில் அமைக்கப் பெற்றிருந்த கல்லூரியில். இரு நூற்றறுபது மாணக்கர், பன்னிரண்டு பேராசிரியரிடம், கல்வி பயின்றதாகக் கல்வெட்டின் உதவியால் அறிகிறோம். இக்கல்லூரி ஏறத்தாழ எண்ணுயிரம் கல்லூரியைப் போலவே அமைக்கப் பெற்றிருந்தது. கல்லூரிகள் பெரும்பாலும் கோயிலோடு சேர்க்கப்பட்டிருந்தன.

மேற் கூறப்பட்ட வடமொழிக் கல்லூரிகளே யன்றி, முதலாம் இராசராசன் காலத்தில் தஞ்சையில் ஒரு கலைக்கல்லூரி நிறுவப் பெற்று இசை, நடனம், நாடகம் போன்ற அழகு கலைகளும், தமிழ், சமஸ்கிருதம் போன்ற மொழிகளும் பயிற்றுவிக்கப் பெற்

[1] 176 of 1919

றன. இங்கு இசைக் கூடம், நடனக் கூடம், நாடகக் கூடம் போன்ற தனித்தனிக் கூடங்கள் பல அமைக்கப் பெற்றிருந்தன. கோயில்களை யொட்டி, அமைந்த கல்லூரிகள் கல்வித் தொண்டும், கலைத்தொண்டும் புரிந்து வந்தன. இக்கல்லூரிகள் பன்னிரண்டாம் நூற்றாண்டில் ஏற்பட்ட வேற்றரசர் படையெடுப்பினுலும், அரசியல் குழப்பங்களினுலும் தடைபட்டன.

மேற் கூறியவற்ருல் சோழர் காலத்தில் கல்விநிலை மேம்பட்டிருந்ததையும், சோழப் பெருமன்னர்கள், வடமொழிக் கல்லூரிகளை யமைத்து, வேதாந்தம், வியாகரணம், மீமாம்சம் போன்றவை கற்பிக்கப்படுதற்கு மானியங்கள் அளித்ததையும் கோயில்கள் கல்விப் பணியினை மேற்கொண்டதையும் இனிது அறியலாம்.

இதில் வியப்புக் குரியது யாதெனில், தமிழ்க் கல்வி பயிற்றுவிக்க மானியங்கள் விடபட்டதாக ஒரு கல்வெட்டானும் இல்லை. தமிழ் நாட்டினை யாண்டு வந்த தமிழ் மன்னர்கள் தித்திக்கும் தீந்தமிழ்க் கல்வியைப் போற்ருது விட்டமை பெருங்குறை பாடேயாகும். இதனை எண்ணுந்தொறும், எண்ணுந்தொறும் 'தமிழ் நாட்டின் தமிழ்த் தெருவில் தமிழ்தான் இல்லை' என்று இருபதாம் நூற்ருண்டின் இணையற்ற புதுமைக் கவிஞுன பாவேந்தன் பாரதிதாசன் மனம் குமுறிப் பாடிய பாடல்தான் நம் காதுகளில் ஒலிக்கிறது.

ஊர்தோறும் தமிழ்க் கல்வி கற்பிக்கப்பட்டமையாலும், ஒரு சில இடங்களில் மட்டும் வடமொழியும், வேதபாடமும் பயிற்றுவிக்கப் பட்டமையாலும், பின்னது கல்வெட்டில் இடம் பெற்றிருத்தல் வேண்டும். மேலும், பிற்காலச் சோழர் காலத்தில் வடமொழி யார்வம் (வடமொழி மோகம்) மேலோங்கி யிருந்ததாலும் மன்னர்கள் வடமொழியினைப் பெரிதும் ஆதரித்துத் தமிழ்மொழி வளர்ச்சியினைப் புறக்கணித்தனர் போலும்!

மன்னனின் மெய்க்கீர்த்திகளும், கல்வெட்டுகளும் தமிழிலும், வட மொழியிலும், வெளியிடப் பெற்றிருத்தலின், சோழர் காலத்தில் தமிழும், வடமொழியும் பெரிதும் வளர்ச்சி பெற்றன வென அறியலாம். பல்லவரது ஆட்சிக் காலத்தில் காணப் பெற்ற வடமொழி யார்வம் சோழர் காலத்தில் பல்கிப் பெருகியது.

கோயில்களில் கிடைக்கின்ற வருவாய் கோயில் நிருவாகச் செலவிற்கும், கல்விப் பணிக்கும் பயன்படுத்தப்பட்டது. இரா

சேந்திரனைப் போன்ற மன்னர்கள் கல்விமான்களை ஆதரித்துப் போற்றியதுடன், தாங்களும் கற்றுணர்ந்த அறிஞர்களாய் விளங்கினர்.

இங்ஙனம் பண்டுதொட்டு நம் தமிழகத்தின்கண் நிலவி வந்த கல்வி முறை, மேலை நாட்டுக் கல்வி அறிஞர்களால் யாது காரணம் பற்றியோ, கல்வி வரலாற்றில் (History of Education) சேர்க்கப்பட வில்லை. தமிழகக் கல்வி முறை இவ்விதம் புறக் கணிக்கப் பட்டது பெருங்குறையே ஆகும்.

### பொருளாதார நிலை

சோழர்களின் அரசியல் நிலையினைப் போன்று, பொருளா தார நிலையும் போற்றுதற்குரிய முறையில் அமைந்திருந்தது. சோழப் பெருமன்னர்கள் நாட்டின் பொருளாதாரத்தைப் பெருக் குவதில் பெருமுயற்சிகள் மேற்கொண்டனர். செழுமை மிக்க சோணாட்டில் உழவர் பெருங்குடி மக்கள் உணவு உற்பத்தியைப் பெருக்கினர்; உணவுப் பஞ்சத்தைப் போக்கினர்; வணிகர்கள் திறம்பட வாணிகம் புரிந்தனர்; தொழிலாளர்கள் பெயரளவில் பொருள்களை உற்பத்தி செய்தனர்; நாட்டின் பொருளாதார நிலை உயர்ந்தது; மக்களனைவரும் வாழ்வாங்கு வாழ்ந்தனர். ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கு அதன் பொருளாதார வளர்ச்சியே முதன்மையான தாகும். இதனை நன்கறிந்த சோழப் பெருமன் னர்கள் ஒல்லும் வகை யெல்லாம் முயன்று சோணாட்டின் பொரு ளாதார நிலையினை மேலும் மேலும் உயர்த்தினர். இராசேந்திர சோழனும் சோணாட்டின் பொருளாதார நிலையினை உயர்த்தப் பெருமளவில் பாடுபட்டான். ஈண்டு நாம் சோழப் பேரரசின் பொருளாதார வளர்ச்சிக்குக் காரணமாக அமைந்த நாணயங் கள், அளவைகள் (Weights and Measures), வாணிகம், தொழில் பற்றிய சில செய்திகளை ஆராய்வோம்.

### நாணயங்கள்

ஒரு நாட்டின் வாணிக வளர்ச்சிக்கு நாணயங்கள் இன்றி யமையாதவை யாகும். சோழ மன்னர்கள் காலத்தில் அழகிய நாணயங்கள் வெளியிடப் பெற்றன. சோழ மன்னர்களின் ஆட்சிக் காலங்களில் செம்பாலும், வெள்ளியாலும், பொன்னு லும் செய்யப்பெற்ற நாணயங்கள் வழக்கத்தி லிருந்தன என்ப தனைக் கல்வெட்டுச் செய்தியாலும், இதுவரை நமக்குக் கிடைத் துள்ள (தோண்டி எடுக்கப் பட்டுள்ள) நாணயங்களாலும் அறிய லாம். சோழ மன்னர்கள் தங்கள் நாணயங்களில் தங்களது

இயற்பெயரையோ, சிறப்புப் பெயரையோ பொறித்திருந்தனர். இதனைக் கொண்டு இன்ன காசு இன்ன மன்னன் காலத்தில் வெளியிடப் பெற்றதென்பதனை அறிந்து கொள்ளலாம்.

சோழர் கால நாணயங்களைப் பற்றி அறிந்துகொள்ள டாக்டர் கன்னிங்காம், சர் வால்டர் எலியட், டாக்டர் ஹுல்டஷ் போன்ற அறிஞர் பெருமக்களின் நூல்கள் பெரிதும் பயன்படுகின்றன. 'இந்திய நாணயயியல் கழகம்' வெளியிட்டுவரும் கட்டுரைகளும் பண்டை நாணயங்களைப் பற்றிய விரிவான செய்திகளை எடுத்தியம்புகின்றன.

பிற்காலச் சோழர் காலத்தில் அளவிறந்த பொற்காசுகள் கொடை வகையிற் கொடுக்கப் பட்டதாலும், அணிகலன், தெய்வப் படிமம், அம்பல முகடு, தட்டுமுட்டு முதலிய பல வகைகளில் இட்டுவைக்கப் பட்ட பொன்முதல் முழுகிய முதலாய் (Sunk Capital) இருந்ததனலும், வெளிநாட்டு மன்னர்களின் படை யெழுச்சியின் போது கொள்ளை யடிக்கப் பட்டதாலும், திறை கொள்ளப் பட்டதாலும், நாள்கள் செல்லச் செல்ல மக்கள் பெருக்கத்தினலும், விளைவு பெருக்க மின்மையாலும் நாணயச் செலாவணிக்குத் தேவையான அளவு பொன் கிடைக்க வில்லை. எனவே, கீழ்த்தர நாணயங்கட்கு முதன் முதலாக வெள்ளி பயன்பட்டது. இரட்டை நாணயத் திட்டமும் (Bimetallism) ஏற்பட்டது. பின்பு வெள்ளியும் அருகி விடவே, செம்பு கடைக் கீழ்த்தர நாணயங்கள் அடிக்கப் பயன்பட்டது. செப்பு நாணயங்கள் புழக்கத்திற்கு வந்ததால் மும்மை நாணயத் திட்டம் (Trimetallism) அன்று பின்பற்றப் பட்டது.

அக்காலப் பொன் நாணயங்கள் தலைத்தர நாணயங்களாகவும், வெள்ளி நாணயங்கள் இடைத்தர நாணயங்களாகவும், செப்பு நாணயங்கள் கடைத்தர நாணயங்களாகவும் கருதப்பட்டன.

எனவே, தங்க நாணயங்கள் (Principal Coins) தலைமை நாணயங்களாகவும், வெள்ளி, செப்பு நாணயங்கள் சில்லரை நாணயங்களாகவும் (Subsidary Coins) இருந்தன.

காசு, பொன், கழஞ்சு, மாடை எனப் பல தரப்பட்ட காசுகள் வழங்கப்பெற்ற போதிலும் பிற்காலத்தில் காசு ஒன்றே இறுதிவரை புழக்கத்தில் இருந்தது.

நற்காசுகளையும் கலப்புக் காசுகளையும் உரைத்துப் பார்க்க அக்காலே 'கட்டளைக்கல்' எனும் உரை கல்லும், 'தண்டவாணி' எனும் உரையாணியும் இருந்தன.

சோழர் காசுகள் முதலாவது சதுர வடிவாகவும், நீண்ட சதுரமாகவும் இருந்து பின்னர் வட்ட வடிவினைப் பெற்றதென்பர் நாணய ஆராய்ச்சியாளர்.

*அஃகசாலை*

காசடிக்கும் இடம் அஃக சாலை எனப்பட்டது. காசடிப்ப தற்குத் தனி வரி விதிக்கப் பட்டது. இஃது அடிக்காசு, பொன் வரி, மாடைக் கூலி எனும் பெயர்களால் அழைக்கப்பெற்றது.

நம் இராசேந்திரன் ஆட்சிக் காலத்தில் காசுகளே யன்றி, ஆடு (Sheep) காசுக்கு நிகராகப் புழக்கத்தில் இருந்தது. இரா சேந்திரனது பதினாறும் ஆட்சி யாண்டில் இருபத்தைந்து காசு கள் இருபத்திரண்டரை ஆடுகளுக்குச் சமமானதாக இருந்த மையைக் கல்வெட்டா லறியலாம்.

இராசேந்திரன் காலத்தில் செம்பினாலும், பொன்னினாலும், வெள்ளியினாலும் செய்யப் பெற்ற காசுகள் புழக்கத்தில் இருந் தன. செப்புக் காசுகள் நிறைந்த அளவில் புழக்கத்திலிருந்தன. ஈழக் காசு எனப்பட்ட காசுகளும் அக்காலத்தில் இருந்தன. இவை மாற்றுக் குறையாத பொற் காசுகளாகும். காய்ச்சி உருக்கி னும் மாற்றும் நிறையும் குன்றாததென அதிகாரிகளால் ஆராயப் பெற்று உறுதி யளிக்கப் பட்டதற்கு அடையாளமாகத் துளையிடப் பெற்ற பொன்னும் அக்காலே வழக்கி லிருந்தது. தூய வெள்ளிக் காசும் துளையிடப் பட்டதாகத் தெரிகிறது.

அக்காலச் சோழ மன்னர் நாணயங்கள் அனைத்தும் ஒரே எடை யுள்ளனவாகச் செய்யப் பட்டிருந்தன வென்று பண்டார கர் கன்னிங்காம் (Dr. Cunningham) தமது நூலில் குறித்துள் ளார். சோழர் காலத்திய செப்பு நாணயங்கள் அதிக அளவிலும், பொன், வெள்ளி நாணயங்கள் குறைந்த அளவிலும் இன்று காண முடிகின்றன.

சோழர் கால நாணயங்களில் சோழர்களின் முத்திரையான புலியும், அதனருகில் சேர, பாண்டிய சின்னங்களான வில்லும், மீனும் பொறிக்கப் பட்டுள்ளன. இவற்றைச் சுற்றிலும் வெளி யிட்ட மன்னனின் பெயர் பொறிக்கப் பட்டுள்ளன. 'கங்கை

கொண்ட சோழன்' எனப் பெயர் பொறிக்கப் பட்ட தங்க நாண யமும் கண்டெடுக்கப் பட்டுள்ளன. இஃது இராசேந்திரன் காலத் தது என்பதில் ஐய மில்லை.

முதலாம் இராசேந்திரன் ஆட்சிக் காலத்தில் 'இராசேந் திரன் மாடை', 'இராசேந்திர சோழக்காசு', எனும் பெயர் களில் நாணயங்கள் வெளியிடப் பட்டதாகக் கல்வெட்டுகளால் அறிய லாகும். இராசேந்திர சோழனின் ஆட்சிக் காலத்திற்கு முன்பே 'மதுராந்தக தேவன் மாடை' எனும் பெயரினைக் கொண்ட ஒரு நாணயமும் சோணாட்டில் வழக்கில் இருந்ததாக அறிகிறோம். இஃது உத்தம சோழன் எனப் பெயர் பெறும் மது ராந்தகசோழ மன்னன் ஆட்சிக் காலத்தில் வெளியிடப் பட்ட பொற்காசு என்பது தெளிவு. மன்னன் தனது பெயரால் காசு, மாடை என்னுமிரு வகையான நாணயங்களை வெளியிட்டான் என்பதனை இவ்விரு வகையான நாணயங்கள் வழக்கத்திலிருந்த தால் அறியலாம். முதலாம் குலோத்துங்க சோழனுக்கு முன்பு ஆட்சி புரிந்த சோழ மன்னர்கள் அனைவரும் இவ்விரு வகையான நாணயங்களை வழக்கத்தில் கொண்டு வந்தனர் என்பது அறிஞர் கருத்து.

மாடை என்ற நாணயம் ஒரு கழஞ்சு எடை கொண்டதும் ஒன்பதரை மாற்றுக் கொண்டதுமான செம்பொன்னால் செய்யப் பட்டது என்பது ஆராய்ச்சியாளர்கள் முடிபாகும். எனவே, மாடை என்பது நாற்பது குன்றிமணி எடை கொண்ட பொன் நாணய மாகும் என்பது புலனாகும். 'மாடை ஒன்றுக்குக் காசு இரண்டாக' எனும் தொடர் மைசூர் நாட்டிலுள்ள கோலார் என்னும் இடத்திலுள்ள முதலாம் குலோத்துங்க சோழனின் கல் வெட்டுப் பகுதியில் இடம் பெற்றிருத்தலினாலும், ஒன்பதரை மாற் றும் ஒரு கழஞ்சு எடையுமுள்ள மதுராந்தகன் மாடை இரண்டு காசுகளுக்குச் சமமானது' என்று திருப்புகலூரிலுள்ள முதலாம் குலோத்துங்க சோழன் காலத்திய கல்வெட்டொன்று உணர்த்து வதாலும் இதனை நாம் நன்க றியலாம்.

மாடை, காசு, பழங்காசு, ஈழக்காசு ஆகிய நாணயங்கள் யாவும் 'பொன்' எனும் பொதுப் பெயராலேயே அக்காலத்தில் அழைக்கப்பட்டன.

ஒரு மன்னனது ஆட்சிக் காலத்தின்கண் வெளியிடப் பெற்று அவனது ஆட்சிக் காலத்தில் வழக்கத்திலுள்ள காசு 'அன்றாடு நற்காசு' என அழைக்கப் பெற்றதாகவும், அம்மன்னனுக்குமுன்

ஆட்சி புரிந்த மன்னர்களால் வெளியிடப் பெற்று வழக்கத்தி லுள்ள காசு 'பழங்காசு' என அழைக்கப் பெற்றதாகவும் கல் வெட்டுச் செய்தியா லறியலாம்.

சோழ மன்னர்களது ஆட்சிக் காலத்தில் வழக்கத்திலிருந்த மற்றொரு பொற்காசு 'ஈழக் காசா'கும். இதன் பெயர்க் காரணம் பற்றி ஆராய்ச்சி அறிஞரிடையே கருத்து மாறுபாடுகள் நிலவு கின்றன. 'ஈழம்' என்ற சொல் 'பொன்' எனப் பொருள்படுத லின் ஈழக்காசு என்பது சோழரின் பொற்கா சென்று ஒரு சில ரும், ஈழக்கா சென்பது ஈழ நாட்டின்கண் அரசாட்சி புரிந்து வந்த வேந்தர்கள் தத்தம் காலங்களில் வெளியிட்ட காசுகளாகு மென்று ஒரு சிலரும் கருத்துத் தெரிவிக்கின்றனர்.

சோழப் பெருமன்னர்களான முதலாம் பராந்தகன், முத லாம் இராச ராசன், முதலாம் இராசேந்திரன் போன்ருேர் தமது ஆட்சிக் காலங்களில் ஈழ நாட்டின்மீது படை யெடுத்துச் சென்று, அந்நாட்டிலிருந்து பொன்னும், மணியும், மின்னும் வைரமும், இன்னும் பல விலை யுயர்ந்த அணிகலன்களும் திறைப் பொருளாகக் கொணர்ந்தனர் என்பதனை நாம் முன்பே கண் டோம். இவ்விதமாகத் திறைப் பொருளாக ஈழத்தினின்றும் சோணுட்டிற்குக் கொண்டு வரப்பட்ட காசுகள் சோணுட்டில் வழக்கத்தி லிருந்ததால் இக்காசுகள் 'ஈழக் காசுகள்' என அழைக்கப் பெற்றிருத்தல் வேண்டுமென எண்ணுவது பொருத்த முடைத்தே. இராசேந்திர சோழன் கடாரத்தினை வென்று, அங் கிருந்து கொண்டுவந்த காய் 'கடாரங்காய்' எனப் பெயர்பெற் றிருத்தலைப் போல 'ஈழக்காசும்' பெயர் பெற்றிருத்தல் வேண் டும். இக்காசுக ளனைத்தும் அரைக் கழஞ்சு எடை கொண்டன வாகவும், மாடையைப் போன்ற மாற்றுடையனவாகவும் இருந் தமை ஈண்டுக் குறிப்பிடத் தக்க தாகும்.

ஈழக் காசினைப் போன்று 'ஈழக் கருங்காசு' எனும் நாணய மும் அக்கால வழக்கில் இருந்ததாகக் கல்வெட்டுச் செய்தியா லறியலாம். இது வெள்ளியினுல் செய்யப் பெற்றிருத்தல் வேண்டு மென்று சிலரும் செம்பால் (செப்புக் காசு) செய்யப் பெற்றிருத்தல் வேண்டு மென்று சிலரும் குறிப்பிடுகின்றனர். இதனைப் பற்றிய எடையும், மாற்றும் அறியப்பட வில்லை. இவை தமிழகத்தின் பல பகுதிகளில் தோண்டி யெடுக்கப் பட்டுள்ளன.

'அக்கம்' என்ற காசு சோணுட்டில் வழக்கி லிருந்ததாக முதலாம் பராந்தக சோழனின் ஆனைமலைக் கல்வெட்டாலும்,

(கி.பி. 939 இல் குறிக்கப்பட்டது) முதலாம் இராச ராச சோழனின் தஞ்சை இராச ராசேச்சுரக் கல்வெட்டாலும் முதலாம் இராசேந்திரனின் கரந்தைச் செப்பேட்டாலும் அறியலாம். ஏழரை புதிய அக்கம் கொண்டது ஒரு ஈழக்கா சென்பதனை 'ஒரு ஈழக் காசுக்குப் புத்தக்கம் ஏழரையாக' எனும் ஆனைமங்கலக் கல்வெட்டுப் பகுதியா லறியலாம்.

'திரமம்' என்ற மற்ெருரு நாணயமும் தமிழகத்தில் வழங்கி வந்ததாகச் சோழர் கல்வெட்டுகள் செப்புகின்றன. சேர நாட்டுப் பகுதிகளிலும் இந்நாணயம் வழக்கி லிருந்ததெனச் சேரர் கல் வெட்டுச் சான்று பகர்கின்றது. இது கிரேக்க நாணயத்தின் பெயராக இருத்தலின், தமிழகத்தின்கண் கி.மு. முதல் நூற்ருண் டிலிருந்தே வழங்கி யிருத்தல் வேண்டுமெனக் கருதப்படுகிறது. காஞ்சி, உடையார்குடி (தஞ்சை மாவட்டம்), திருப்புகலூர் ஆகிய ஊர்களில் காணப்படும் கல்வெட்டுகளில் இந்நாணயத் தைப் பற்றி ஒரு சில இடங்களில் குறிக்கப் பெற்றுள்ளன.

சோழர் காலத்திய பொன் நாணயங்கள் நமக்கு அதிக அள வில் கிடைக்கப் பெறவில்லை யென்பதனுல் பொன் நாணயங்கள் அக்காலத்தில் குறைந்த அளவில்தான் வழக்கில் இருந்திருக்கக் கூடுமென எண்ண இடமுண்டு. சிறிய அளவில் கிடைக்கும் இப் பொன் நாணயங்கள் மக்கள் கையில் கிடைத்தால், யாவருக்கும் காட்டாது அவற்றை உருக்கி பொன் அணிகலன்கள் செய்து கொள்ளும் மனப்பான்மை மக்களிடையே நிலவி வருதலின், ஆராய்ச்சியாளர் கையில் பெரும்பான்மையான நாணயங்கள் வந்து சேர வில்லை.

அதிட்டவசமாகக் கி.பி. 1946 ஆம் ஆண்டில் கிழக்குக் கோதாவரி மாவட்டத்தைச் சார்ந்த 'தவளேசுவரத்தில்' நூற்றி ருபத்தேழு பொன் நாணயங்கள் புதை பொருள் ஆராய்ச்சியாள ரால் தோண்டி எடுக்கப் பட்டுள்ளன. இந்நாணயங்கள் ஆராய்ச் சியாளர்கட்குப் பெரிதும் பயன்படுகின்றன. இவை கீழைச் சாளுக்கிய மன்னனுகிய இராச ராசேந்திரனது ஆட்சிக் காலத் திலும், முதலாம் இராசேந்திரன், முதலாம் இராசாதி ராசன் ஆகிய சோழப்பெரு மன்னர்களது ஆட்சிக் காலத்திலும் வெளி யிடப்பட்டவை யாகும். இவை யாவும் செம்பொன்னுல் செய்யப் பட்டவை யாகும். இவற்றுள் நாற்பத் தொன்பது செம்பொற் காசுகள் இராசராச நரேந்திரனது காலத்தனவாகும். இவை வேங்கி நாட்டில் (கீழைச் சாளுக்கிய நாடு) கி.பி. பதினொன்ரும் நூற்ருண்டில் வழங்கிய நாணயங்கள் என்பதும் அறியத் தக்க

தாகும். 'கங்கை கொண்ட சோழன்' என்று கிரந்த எழுத்துக் களில் பொறிக்கப்பட்டுள்ள முப்பத்திரண்டு பொன் நாணயங்க ளும் அத்தொகுதியில் காணப்படுகின்றன. இவைகள் யாவும் முத லாம் இராசேந்திர சோழனின் இருபத்தெட்டாம் ஆட்சி யாண்டு முதல் முப்பத்து மூன்ரும் ஆட்சி யாண்டு முடிய உள்ள கால அள வில் வெளியிடப் பெற்றனவாக அறிகிருேம். எனவே, இவை கி.மு. 1040 க்கும் 1045க்கும் இடைப்பட்ட காலத்தில் வெளி யிடப்பட்டனவாகத் தெள்ளிதின் அறியலாம். 'மலைநாடு கொண் டான்' என்று கிரந்த எழுத்துகளில் பொறிக்கக் பட்டுள்ள நாற் பத்தாறு பொன் நாணயங்கள் அத்தொகுதியில் காணப்படுகின் றன. இவண் 'மலைநாடு கொண்டான்' எனச் சிறப்பிக்கப் படு பவன் முதலாம் இராசேந்திர சோழனின் மகனுன முதலாம் இராசாதி ராச சோழனுவான். இவன் கி.பி. 1018இல் இளங் கோப் பட்டம் பெற்றுத் தந்தையுடன் இணைந்த ஆட்சியினை மேற் கொண்டவன் ஆவன். இவன் இளங்கோவா யிருந்த காலத்தில் சேர நாடாகிய மலைநாட்டை வென்ருன். இந்நாணயங்கள் இவ் வேந்தனின் முப்பத்து நான்காம் ஆட்சி யாண்டு முதல் முப்பத் தாருவது ஆட்சி ஆண்டிற்குள் வெளியிடப் பெற்றன வாகும். எனவே, இந்நாணயங்கள் கி.பி. 1052 முதல் கி.பி. 1054 முடிய உள்ள காலத்தில் வெளியிடப் பெற்றிருத்தல் வேண்டு மென்பது உறுதிப் படுகின்றது.

'கங்கை கொண்ட சோழன்', 'மலைநாடு கொண்டான்' எனும் பெயர்களில் நாணயங்கள் வெளியிட் டிருத்தலின், மன் னர்கள் தங்களது இயற்பெயரில் நாணயங்கள் வெளியிட்ட தோடு, தங்களது வெற்றியின் நினைவாகப் புதிய நாணயங்கள் வெளியிட்டனர் என்பது புலனுகும். இதுகாறும் நமக்குக் கிடைத் துள்ள சோழர் கால நாணயங்களுள் உத்தம சோழன் காலத் தில் வெளியிடப் பெற்றுள்ள பொற்காசுதான் பழமையானது என்பது குறிப்பிடத் தக்க தாகும்.

இதுகாறும் கூறியவற்ருன் சோழ மன்னர்கள் தங்களது ஆட்சிக் காலத்தில் பலவிதமான பொற்காசுகளையும், வெள்ளிக் காசுகளையும், செப்புக் காசுகளையும் வெளியிட்டு, நாட்டின் வாணிக வளர்ச்சிக்குப் பெருந்துணை புரிந்தன ரென்றும், அத னுல், சோழரின் பொருளாதார நிலை முன்னேறியது என்றும் தெள்ளிதின் புலனுகும்.

## அளவைகள்

### 1. எடுத்தலளவைக் கருவிகள்

நம் வேந்தனது காலத்தில் எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் ஆகிய நான்கு வகைப்பட்ட அளவைகளும் வழக்கத்தில் இருந்தன. ஈண்டு எடுத்தல் எனக் குறிக்கப்பெற்றது நிறுத்தல் அளவை யாகும். மணிகளும் பொன்னும், வெள்ளியும் முதலான விலை யுயர்ந்த பொருள்கள், மிக நுணுக்கமாக நிறுக்கப்பட வேண்டுவன ஆதலின் கழஞ்சு, மஞ்சாடி, குன்றி என்னும் நிறை கல்லால் நிறுக்கப்பட்டன. செம்பு, பித்தளை, வெண்கலம், தாரா என்பனவும் சருக்கரை, கடுகு, மிளகு, புளி என்பனவும் போன்ற சாதாரணப் பொருள்கள் பலம் என்னும் நிறைகல்லாலும் நிறுக்கப் பட்டன. பொன்னின் மாற்றினை ஆராய்ந்தறியப் பயன்படும் ஆணி ஒன்று அக்காலத்திலிருந்தது. அதற்குத் தண்டவாணி என்று பெயர்.

தற்காலத்தில் வழங்கும் சேர், வீசை, துலை முதலியவை முற்காலத்தில் வழக்கில் இருந்தனவாகக் குறிப்புகள் இல்லை. செம்பு, பித்தளை முதலியன 'செப்புக்குடம் ஒன்று நிறை மூவாயிரத்து எண்பத்து முப்பலம்' என்பது போல எத்துணையாயினும் பலத்தாலேயே நிறுக்கப் பட்டன என்று குறிக்கப் பெற்றிருத்தல் ஈண்டு நோக்கற் பாலது. அரசாங்க முத்திரை யிடப்பெற்ற நிறைகல் 'குடிஞைக்கல்' எனப்படும்.

### 2. முகத்தலளவைக் குறிகள்

நெல், அரிசி, பருப்பு, பயறு, உப்பு, நெய், பால், தயிர், தானியங்கள் முதலியன செவிடு, ஆழாக்கு, உழக்கு, உரி, நாழி, குறுணி, பதக்கு, தூணி, கலம் என்பன போன்ற முகக்குங் கருவிகளால் அளக்கப்பட்டன. அரச முத்திரையிடப்பட்ட ஊர் மரக்கால் 'இராச கேசரி' என அழைககப்பட்டது. இது நம் இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் 'அருண் மொழித்தேவன்' எனவும் பெயரிடப் பட்டது. கோயில் மரக்கால் ஆடவல்லான் எனப் பெயர் பெற்றது. இம்மரக்கால் பெரிய கோயில் பண்டாரத்தில் இருந்தது.

### நீட்டலளவைக் கருவிகள்

சோழர் காலத்தில் நீட்டலளவைகளும் நுண்ணியனவாக விளங்கின. நீட்டலளவை தோரை, விரல், சாண், முழம் என்

பவற்ருல் நடைபெற்றது. இதனை 'இரு முழமே ஒரு விரலே இரண்டு தோரை நீளமும்' என்ற சாசனப் பகுதியால் அறியலாம்.

அளவைகளைப் பொறுத்த மட்டில் இராசராசன் காலத்த வற்றையே இராசேந்திரன் பின்பற்றினுன். ஈண்டு நாம் இராச ராசன் காலத்து நிலவிய அளவை வாய்பாட்டைப் பார்ப் போம்.

**நிறுத்தலளவை**

| | | |
|---|---|---|
| 2 குன்றி | — | 1 மஞ்சாடி |
| 20 மஞ்சாடி | — | 1 கழஞ்சு |

**முகத்தலளவை**

| | | |
|---|---|---|
| 5 செவிடு | — | 1 ஆழாக்கு |
| 2 ஆழாக்கு | — | 1 உழக்கு |
| 2 உழக்கு | — | 1 உரி |
| 2 உரி | — | 1 நாழி |
| 8 நாழி | — | 1 குறுமணி |
| 2 குறுமணி | — | 1 பதக்கு |
| 2 பதக்கு | — | 1 தூணி |
| 3 தூணி | — | 1 கலம் |

**நீட்டலளவை**

| | | |
|---|---|---|
| 8 தோரை | — | 1 விரல் |
| 12 விரல் | — | 1 சாண் |
| 2 சாண் | — | 1 முழம் |

**காலவளவை**

| | | |
|---|---|---|
| 60 நொடி | — | 1 விநாடி |
| 60 விநாடி | — | 1 நாழிகை |
| $7\frac{1}{2}$ நாழிகை | — | 1 சாமம் |
| 8 சாமம் | — | 1 நாள் |
| 7 நாள் | — | 1 வாரம் |
| 15 நாள் | — | 1 பக்கம் |
| 2 பக்கம் | — | 1 மாதம் |
| 6 மாதம் | — | 1 அயனம் |
| 2 அயனம் | — | 1 ஆண்டு |

**குழியளவை**

| | | |
|---|---|---|
| 16 சாண் | — | 1 கோல் |
| 18 கோல் | — | 1 குழி |
| 100 குழி | — | 1 மா |
| 240 குழி | — | 1 பாடகம் |
| 20 மா | — | 1 வேலி |

ஒரு கோல் என்பது பதினாறு சாண் கொண்ட தாகும். கல்வெட்டுகளின் துணைகொண்டு சோழர் காலத்தில் பதினாறு சாண் கோல், கடிகை களத்துக் கோல், திருப்பாதக் கோல், மாளிகைக் கோல் போன்ற பலவிதமான கோல்கள் நிலத்தினை அளப்பதற்குப் பயன்பட்டன. கோலின் அளவினைப் பொறுத்துக் குழியின் அளவு மாறுபட்டது. எனவே, ஒருமா என்பது எவ்வளவு குழி கொண்டது என்பதும் ஒரே அளவாக இல்லை.

எடுத்துக்காட்டாக நம் இராசேந்திரனின் ஆறும் ஆட்சி யாண்டில் தென்னார்க்காடு மாவட்டம் கீழூரில் (பதினாறு சாண் கொண்ட கோலால் அளக்கப்பட்டது) இரு நூற்றம்பைத்தாறு குழி கொண்டது ஒருமா எனக் கணக்கிடப்பட்டது. ஆனால், அதே ஆண்டில் தஞ்சை மாவட்டத்திலுள்ள திருவாடுதுறையில் (மாளிகைக் கோலால் அளக்கப்பட்ட) நூறுகுழிகள் கொண்டதே ஒருமா எனக் கணக்கிடப்பட்டது. பன்னிரண்டாண்டுகள் கழிந்த பின்னர் (அதே பதினாறு சாண் கோலால்) அளக்கப்பட்ட போதே இருநூறு குழிகள் கொண்டது ஒருமா எனக் கணக்கிடப்பட்டது. எனவே, இடத்திற்கு இடம் நில அளவு சிறிதளவு மாற்றம் பெற்ற தென்பதனை அறியலாம்.

**வாணிகமும் கைத்தொழிலும்**

ஒரு நாட்டின்கண் வாழ்கின்ற மக்களுக்குத் தேவையான பொருள்களை வினியோகம் செய்வோர் வாணிகப் பெருமக்களாவர். இவர்கள் ஓரிடத்தில் மிகுதியாகக் கிடைக்கும் பொருள்களை நாட்டின் பிற பகுதிகளுக்குக் கொண்டு சென்று, விற்று இலாபம் பெறுவர். வணிகர்கள், ஒரு நாட்டின் பொருளாதார நிலையினை முன்னேற்றும் பணியில் நல்ல தொண்டு செய்வர்.

நகரங்களிலும், கிராமங்களிலும் வாணிகம் புரிந்து வாழ்ந்து வந்த வணிகர் பலர் திருக்கோயில்களுக்கும், ஏரி, குளம், கிணறு வெட்டுவதற்கும் பொருளும், நிலமும், அளித்து மக்களுக்குத் தொண்டு செய்ததாகக் கல்வெட்டுச் சான்றுகளா லறியலாம்.

வாணிகர்கள் தனித்தும், குழுக்களாகச் சேர்ந்தும் வாணிகம் புரிந்து வந்தனர். இவர்கள் மன்னனால் பெரிதும் மதிக்கப் பெற்றனர். வாணிகம், உள்நாட்டு வாணிகம், வெளிநாட்டு வாணிகம் என இரு வகையின வாகும். உள்நாட்டு வணிகத்திற்கு வண்டிகளும், பொதி மாடுகளும், சிறு வழிகளும், பெருவழிகளும் பயன் பட்டன. வெளிநாட்டு வாணிகம் பெரும்பாலும் கடல் கடந்து நடைபெற்றதால் கலங்கள் தேவைப்பட்டன. நம் தமிழர்கள் பண்டு தொட்டுக் கடல் கடந்த வாணிகத்தில் ஈடுபட்டிருந்தனர் என்பதனை இலக்கியச் சான்றுகளாலும்,வெட்டெழுத்துச் சான்றுகளாலும், வெளிநாட்டு நூல்களாலும் அறியலாம்.

1. ‘பொன்சொரி கதவு தாளிற்றிறந்துபொன் யவனப் பேழை’

2. ‘அருமணி வயிரம் வேய்ந்த அருங்கலப் பேழை ஐந் நூற்(று) எரிமணி செம்பொன் ஆர்ந்த விராயிரம் யவனப் பேழை’

3. ‘மணியியல் யவனச் செப்பின் மங்கலத் துகிலை வாங்கி’

போன்ற இலக்கியக் குறிப்புகளிலிருந்து தமிழகம், யவன நாட்டுடன் மேற்கொண்டிருந்த வாணிகத்தை யறியலாம்.

சோழர்கள் ஆட்சிக் காலத்தில் நிருவாகம் மிகத் திறம்பட விளங்கியமையால், அமைதியான ஆட்சி நிலவியது. நாடு அமைதியாக இருந்தமையால் கைத்தொழில்களோடு பொருள் களின் உற்பத்தியும் பெருகியது. சோழ நாட்டுக் குட்பட்ட பல பகுதிகளில் உள்நாட்டு வாணிகம் செம்மையாக நடைபெற்றது. தனிப்பட்ட வணிகர்களும் வணிகர் சங்கங்களும், கடல் கடந்த வாணிகத்திலும் ஈடுபட்டி ருந்ததாகக் கல்வெட்டுகளால் அறிய லாம். சீனம், கிழக்கிந்தியத் தீவுகள், அராபியா ஆகிய நாடு கள், சோழ நாட்டுடன் வாணிகத்தில் ஈடுபட்டிருந்தன.

சோணாட்டு வணிகர்கள் மேற்கே இலட்சத் தீவுகள், அரா பியா, பாரசீகம் ஆகிய நாடுகளுடனும் தெற்கே ஈழம், மாளவத் தீவுகள் போன்றவற்றுடனும், கிழக்கில், பருமா, சாவா, சுமத் திரா, சீனு போன்ற நாடுகளுடனும் கடல் வாணிகம் புரிந்து வந் தனர்.

நம் இராசேந்திரனது காலத்தில் சீன நாட்டுடன் சிறப்பான முறையில் வாணிகம் நடைபெற்றதாகச் சீன நூல்கள் சான்று

பகர்கின்றன. இராசேந்திர சோழன் தன் தூதுவர்களைச் சீன நாட்டிற்கு அனுப்பினான் எனவும், சீன மன்னனும் சோணாட்டிற்குச் சீனத் தூதுவர்களை அனுப்பினான் எனவும், நாம் முன் பகுதியில் கண்டோம். இச்செயலால் சோணாட்டிற்கும், சீன நாட்டிற்கு மிடையே வாணிக உறவு உன்னதமான நிலையில் இருந்ததாக அறியலாம்.

பன்னெடுங் காலமாகவே தமிழகமும் சீன நாடும் நட்புறவும் வாணிகத் தொடர்பும் கொண்டு விளங்கியதனை வரலாறு உணர்த்துகின்றது. முதலாம் இராசராசனது ஆட்சிக் காலத்திலும் தமிழக-சீன உறவு நீடித்தது என்பதனை இவன் சீன நாட்டிற்கு அனுப்பிய தூதுக் குழுவால் அறியலாம்.

இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் இவ்வாணிக உறவும் நட்புறவும் மேலும் சிறந்தோங்கின. கடல் கடந்த நாடுகளில் தனது மேலாதிக்கத்தினை நிறுவிக் கடல் வாணிகத்தைப் பெருக்க விழைந்த இராசேந்திரன், சோணாட்டிற்கும் சீன நாட்டிற்கு மிடையே நிலவிய வாணிகத்தைக் கடார வேந்தன் தடுக்க முயன்றதால்தான் இவன் கடாரப் படையெழுச்சியினை மேற்கொண்டான் என்பதனை முன்பே கண்டோம்.

மேலும், தஞ்சை மாவட்டத்தின்கண் பட்டுக்கோட்டை வட்டத்திலுள்ள 'விக்கிரம்' என்னும் கிராமத்திலும், ஓலயக் குன்னம் என்னும் கிராமத்திலும், தஞ்சை மாவட்டம், மன்னார்குடி வட்டம் தல்லிக்கோட்டை என்னும் கிராமத்திலும் நூற்றுக் கணக்கான சீன நாணயங்கள் தோண்டிஎடுக்கப் பெற்றுள்ளமையாலும்,சோணாடு இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் சீன நாட்டுடன் கொண்டிருந்த உன்னதமான வாணிகத்தினை நாம் நன்கறியலாம். இவண் குறிப்பிடத் தக்கது யாதெனில், தஞ்சை மாவட்டத்தில் மட்டும் இரண்டாயிரத்து நூற்று அறுபத்தைந்து சீன நாணயங்கள் கிடைக்கப் பெறுதலின், சோணாட்டு-சீன நாட்டு வணிகம் எவ்வளவு உயர்ந்த நிலையில் விளங்கி யிருக்க வேண்டுமென்பதை நன்கு உணர முடியும்.

மேற்குறிக்கப்பெற்ற சீன நாணயங்கள் இராசேந்திரனின் சம காலத்தில் சீன நாட்டை யாண்டு வந்த மன்னர்கள் காலத்தில் வெளியிடப் பட்டவை யாகும் என்பது ஈண்டுக் குறிப்பிடத் தக்க தொன்றாகும். இம்மன்னர்களின் பெயரினையும், ஆட்சிக் காலத்தினையும், நாணயத்தில் குறிக்கப் பெற்றுள்ள ஆண்டினையும் ஈண்டு நாம் காண்போம்.

1. டியான்-ஷெங்யுவான்-பாவ் (T'ien–Sheng Yuan-Pao)
   கி.பி. 1017 - கி.பி. 1021 கி.பி. 1017

2. டியான்-ஷி-டுங்-பாவ் (Tien-hsi-t'ung-pav)
   கி.பி. 1017 - கி.பி. 1021 கி.பி. 1017

3. மிங்-டாவ் யுவாங்-பாவ் (Ming-Tao-Yuang-Pao)
   கி.பி. 1032 - கி.பி. 1033 கி.பி. 1032

4. சிங்-யூ-யுவாங் பாவ் (Ching-Yu-Yuan-Pao)
   கி.பி. 1034 - 1037 கி.பி. 1034

5. ஹ்வாங் சங்-டுயாங் பாவ் (Huang Sung-T'uang Pao)
   கி.பி. 1023 - 1040 கி.பி. 1023

மேற் கூறப்பட்ட சீன நாட்டு நாணயங்கள் சென்னை அருங் காட்சி யகத்தில் உள்ளன. இவைகளின் மூலம் சீன நாட்டுடன் இராசேந்திரன் நட்புறவுடன் தொடர்பு கொண்டிருந்தமை இனிது விளங்கும்.

நுண்ணிய விலை யுயர்ந்த பருத்தி ஆடைகளும், அம்பர், முத்து, பவளம், நகைகள், காண்டாமிருகக் கொம்புகள், வாசனைத் திரவியங்கள் முதலான பொருள்களும் இந்தியாவி னின்றும், சீன நாட்டிற்கு ஏற்றுமதி செய்யப் பட்டனவாக வரலாற்றறிஞர் குறிப்பிடுகின்றனர். இவ்வணிகத் தொடர்பு கிட்டத்தட்ட பதின்மூன்றாவது நூற்றாண்டின் இறுதிக் காலம் வரை நீடித்தது. தமிழ் நாட்டு வணிகர்கள் சீனாவிலும் பாரசீக வளைகுடாவிற்கு அருகிலுள்ள நாடுகளிலும் குடியேறி இருந்தனர் என்ற செய்தி, நம் தமிழர்களின், கடல் கடந்த வாணிகத்தினை உறுதிப்படுத்துகின்றது.

தமிழ் நாட்டுச் சிற்பங்கள், சீனக் கோயில் ஒன்றில் காணப் படுவதாலும், சீன நாட்டு நாணயங்கள், தஞ்சை மாவட்டத்தின் பல்வேறு பகுதியிலும் காணக் கிடைத்தலினாலும், முத்து, யானைத் தந்தம், கண்ணாடிப் பொருள்கள், வண்ணப்பட்டுக் கலந்த பருத்தித் துணிகள், பாக்கு ஆகிய பொருள்கள் சோணாட்டிலிருந்து சீன நாட்டின் துறைமுகத்தை வந்தடைந்தன என்று சீன அறிஞரான சௌ-ஜீ-குவா (Chau-Ju-Kua) குறிப்பிடுவதனாலும் தமிழர்கள் சீன நாட்டுடன் கொண்டிருந்த வாணிகத் தொடர்பு நன்கு விளங்குகின்றது.

பன்னெடுங் காலமாகவே, தமிழ்நாடு அராபியாவுடன் குதிரை வாணிகத்தில் ஈடுபட்டிருந்த போதிலும், பிற்காலச் சோழர் காலத்தில் இது மேலும் சிறப்புற்றிருந்தது. சோழர்கள் சிறந்த தொரு குதிரைப் படையினை நிருவகித்து வந்தனர் என்ற செய்தி, கல்வெட்டுச் சான்றுகளால் அறியப்படுவதால் சோழர் கள் அராபிய நாட்டினின்றும், குதிரைகளைப் பெருவாரியாக இறக்குமதி செய்தனர் என்பது உள்ளங்கை நெல்லிக் கனி யாகும். ஏனெனில், கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ள 'குதிரைச் செட்டிகள்' என்ற தொடர், மலை நாட்டிலிருந்து குறிக்கப்பெறு வதால் பெரும்பாலான குதிரைகள், அராபிய நாட்டினின்றும் இறக்குமதி செய்யப்பட்டதெனக் கருதுதல் தவறாகாது.

நம் இராசேந்திரன் ஆட்சிக் காலத்தில் சோழ-அராபிய வாணிகம் சிறந்து விளங்கியது. இதனை இராசேந்திரனது கோலார் கல்வெட் டொன்றில் செதுக்கப்பட்ட கீழ்க்கண்ட வரி களால் இனிதறியலாம்.

'திருமந்திர ஓலை நாயகம் கங்கை கொண்ட சோழபுரத்து ராச வித்தியாதரப் பெருந்தெருவில் சோநகன், சாவூர்ப் பரஞ் சோதி'

இவண் சோநகன் எனும் சொல் கிரேக்க மொழியிலுள்ள 'ஐயோனியன்' என்ற சொல்லின் திரிபே என்றும், அறிஞர் சிலர் எண்ணுகின்றனர். பொதுவாக ஐயோனின் என்பது பண்டைக் காலத்தில் ஆசியக் கண்டத்திலிருந்த கிரேக்கர்களைக் குறிக்கு மெனின், மேல் எடுத்தாண்ட கல்வெட்டின் காலத்தில் அச் சொல் தென்னிந்தியாவில், அராபியரைத்தான் சுட்டிற்று. அரா பியன் இராசேந்திரன் ஆட்சிக் காலத்தில் அரசியலில் உயர்ந்த பதவிகள் பெற்றுச் செல்வாக்குப் பெற்றிருந்ததால், அராபிய வாணிகம் சிறப்புப் பெற்றிருந்தமை உய்த்துணரப்படும்.

அக்காலத்தில் ஒவ்வொரு வணிகனும், தனித்த முறையில் தன் தொழிலை நடத்தி வரவில்லை. வெளிநாட்டு வாணிகத்திற்கு முக்கியமாக விரிந்த முதலும், ஆள் கூட்டமும் இன்றியமையா தவை. வர்த்தகம் என்பது ஒருவரோ, இருவரோ பெரும் பொரு ளைச் செலவிடப் பலர் கூடிச் செய்யக் கூடிய வர்த்தக முறை களில் ஒன்றாகும். இவ்வாறு தேர்ச்சி பெற்றோர் பலர் ஒன்று கூடி வாணிக நிமித்தமாகக் குழுக்கள் பல நிறுவி யிருந்தனர். இக் குழுக்களை ஐரோப்பிய நாடுகளில் மத்திய காலத்தில் நின்று நில விய 'கில்டு' (Guild) என்று சொல்லப்பட்ட குழுக்களுடன் ஒப் பிடலாம்.

கல்வெட்டின் துணை கொண்டு உள்நாட்டு வாணிகத்தில் ஈடுபட்டு வந்த 'நகரம்' (நகரத்தார்) வெளிநாடுகளில் வாணிகம் செய்து வந்த 'மணிக் கிராமம்', வலஞ்சியர்' என்ற இரண்டு வகையான வணிகச் சங்கங்கள் இருந்து வந்தன என்பதை யறிகிறோம். 'சித்திரமேழிப் பெரிய நாட்டார்', 'திசை ஆயிரத்து ஐந்நூற்றுவர்', 'தவனச் செட்டிகள்', சயபாலர்கள், முனைவீர கோடியர், முடற் படைக் கலைஞர் ஆகிய வணிகக் கூட்டத்தினர் தங்களை 'இராச ராசப் பெருநீரவியோம்' என்று குறிப்பிட்டுள்ள செய்தியினை அன்பில் கல்வெட் டொன்றால் அறிய லாகும்.

கி.பி. 1015 ஆம் ஆண்டில் நிகரிலி சோழச் சதுர்வேதி மங்கலத்துச் சபையினர் வணிகக் குழுவினர்க்கு வீட்டுமனை வழங்கிய செய்தியாலும், கி.பி. 1033 இல் அம்பாசமுத்திரத்தின் சிவன் கோயிலுக்கு வணிகர் சங்க நன்மைக்காகக் கொடை யளிக்கப் பட்டிருப்பதாலும், இராசேந்திரன் காலத்திலும் வணிகக் குழு சிறப்புற்றிருந்தமையினை நன்கறியலாம்.

திருவிளக்குக் குடியிலுள்ள கோயில் கல்வெட்டின் மூலம் வலஞ்சியரும், நானா தேசியத் திசை ஆயிரத்து ஐந்நூற்றுவரும் இக்கோயிலுக்குத் திருப்பணி செய்தனர் என்பதனை யறியலாம். இவர்களுள் நானா தேசத் திசையாயிரத்து ஐந்நூற்றுவர், பெரும் புகழ் பெற்றுத் திகழ்ந்த வணிகச் சங்கத்தவ ராவர். அலைகடலுக் கப்பாலும் இவர்கள் புகழ் பரவி யிருந்த செய்தியினைச் சுமத்திராவில் 'லோபா டோவா' என்ற இடத்திலுள்ள தமிழ்க் கல்வெட்டாலறியலாம்.

தென்னார்க்காடு மாவட்டத்தின்கண் உள்ள எண்ணாயிரம் என்ற ஊரின் தெற்குக் கடைத் தெருவில் வலஞ்சியர்களும், அந்தணர்களும் சேர்ந்து வாணிகம் புரிந்தனர் என்ற செய்தி, கல்வெட்டுகளால் புலனாகின்றது. கி.பி. 1037 ஆம் ஆண்டில் வாலையூர் என்னும் ஊரின்கண் இருந்த நகரம் அவ்வூர்க் கோயிலில் விளக்கெரியும் திருப்பணிக்காகத் தமது வாணிகத்தில் சில முறைகளைக் கையாண்டது. தானியங்களை விற்போரும் வாங்குவோரும் ஒரு காலத்தில் 'ஒரு நாழியில் கால் அளவு பாட்டம்' தானியம் கொடுத்தனர்; நிறை யொன்றுக்கு ஒரு பலத்தில் கோல் கூலியும், ஆயிரம் பாக்கிற்குப் பத்துப் பாக்கும்' கொடுத்து வந்தனர். பொதுவாக வணிகச் சங்கத்தினர் பலவிதமான நன் கொடைகளை அளித்து மகிழ்ந்தனர். மன்னரும் அதிகாரிகளும் உள்ளூர் அவையினரும் வணிகர்களுக்குப் பெருமதிப் பளித்தனர்

இதுகாறும் கூறியவற்ருல், வணிகப் பெருங்குடி மக்கள் பல குழுக்களாகத் தங்களைப் பிரித்துக் கொண்டு கடல் கடந்த வாணிகத்தில் ஈடுபட்டுப் பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிகோலினர் என்பது புலனுகும். இவ்வணிகப் பெருமக்களுள் நிலவிய பிரிவும், வேறுபாடும் யாதெனத் தெளிவாக அறிந்து கொள்ளப் போதிய ஆதாரங்கள் கிடைத்தில. உதாரணமாக நகரத்தாருக்கும் வலஞ்சியருக்கு மிடையே உள்ள வேறுபாடு யாதென்பது விளங்க வில்லை. மாதந்திரத்தின் மூதாதையர் வலஞ்சியர் ஆவர். மாதந்திரத்தாரின் தலைமை (மூல) அலுவலகம் வடநாட்டின் கண் உள்ள பீசப்பூரின் அருகிலுள்ள ஐயப்பொழில் ஆகும். ஐயப்பொழிலைத் தலைமை யிடமாகக் கொண்டு வாணிகம் புரிந்து வந்த குழுவினர் 'நானுதேசி திசையா யிரத்து ஐந்நூற்றுவர்' என அழைக்கப் பெற்றனர்.

மாதந்திரத்தார் படைத் தலைமையின் நிருவாகக் குழுவாகக் கருதப்படுகின்றனர். 'வலஞ்சியர்', 'நகரத்தார்' ஆகிய இருவரின் வேறுபாடு தெளிவாகப் புரிய வில்லை யாயினும், வலஞ்சியர் மாதந்திரத்தாரின் மூதாதையர் என்பதும் நகரத்தார் மாதந்திரத்தாருடன் இணைந்தவர் என்பதும் நன்கு புலனுகின்றன. இதனைச் சிங்களக் கல்வெட்டொன்று தெளிவாக உணர்த்துகின்றது. இக்கல்வெட்டுச் சிங்கள மன்னனுன விசயபாகுவால் வெளியிடப் பெற்றுப் பொலந் நறுவையில் கண்டு பிடிக்கப் பட்டுள்ளது. இம்மன்னன் புத்த ஆலயம் ஒன்றனை எடுப்பித்துஅதன் பாதுகாப்பினை 'வேளைக்காரரின்' பொறுப்பில் விட்டிருந்தான். அவ்வேளைக்காரர்கள் 'மாதந்திரத்தோங்கூடி, எங்களுக்கு மூதாதைகளாயுள்ள வலஞ்செயரையும் எங்களோடு கூடிவரும் நகரத்தார் உள்ளிட்டாரையுங் கூட்டி......கலந்து பேசி, மன்னனுடைய விருப்பத்திற்கு ஒப்புக் கொண்டு, கல்வெட்டில் வலங்கை, இடங்கை, சிறுதனம், பிள்ளைகள், தனம்வடுகர், மலையாளர், பரிவாரக் கொந்தம், பலகலனை யுள்ளிட்ட திருவேளைக்காரோம்' என்று கையொப்ப மிட்டதாகக் கூறப்படுகின்றது. 'வேளைக்காரர்கள்' என்போர் வாணிகத் துறையுடனும் தொடர்பு கொண்டவர் என்பதனை ஈண்டு நாம் உய்த்துணரலாம். இப்பிரிவினர் பலரும் அக்காலத்திலேயே அயல்நாட்டு வாணிகத்தை மேற்கொண்டு திறம்படச் செய்தனர்.

வலஞ்சியரைப் பற்றிய விரிவான செய்திகளை முதலாம் இராசேந்திரன் காலத்திய காட்டூர்க் கல்வெட்டா லறியலாம். இவர்கள் வாசுதேவன், கந்தழி, விரபத்திரன் ஆகிய கடவுளரிடம் தோன்றியவராகவும், வீர வலஞ்சிய சமயத்தைக் காக்க உறுதி

பூண்டவராகவும், துர்க்கையை வழிபடுபவராகவும் இக்கல் வெட்டில் குறிக்கப் பெறுகின்றனர். இவர்களுக்குள் பல பிரிவு கள் இருந்தன. அவற்றுள் நான்கு திசைகளின் ஆயிரம் வட்டங் கள், பதினெண் நகரங்கள், முப்பத்திரண்டு வேளர்புரங்கள், அறுபத்து நான்கு கடிகைத் தானங்கள் போன்றவை குறிப் பிடத் தக்கவை யாகும்.

செட்டிகள், செட்டிப் பிள்ளைகள், சிங்கம், சிறுபுலி, கவரர் கள், கந்தழிகள், பத்திரகர்கள், காவுண்ட சாமிகள், வலங்கை, வாரியன் ஆகியவர்களும் இவர்களது குழுவில் சேர்ந்திருந்தனர்.

அக்காலக் கிராம ஆட்சியில் நான்கு வகையான சபைகள் இயங்கி வந்தன. அவற்றுள் வணிகர்கள் வாழ்ந்த நகரங்களில் இயங்கி வந்த சபையும் ஒன்ருகும். இச்சபையினர் தமக்குரிய தேவைகளைப் பூர்த்தி செய்தனர். (சதுர்வேதி மங்கலத்திலிருந்த பிராமணர் சபையும், திருக்கோயில் தேவதான சபையும், பிரா மண ரல்லாதார் வாழ்ந்த ஊர்களில் உள்ள சபையும் மற்ற மூன்று சபைக ளாகும்.)

'நாநாதேச திசையாயிரத்தைஞ்னூற்றுவர்,' 'நாநாதேசி கள்' எனவும், 'ஐந்நூற்றுவர்' எனவும் 'திசையாயிரத்தைந் நூற்றுவர்' எனவும் கல்வெட்டுகளில் குறிக்கப் பெற்றுள்ளனர். இவர்கள் எல்லா நாடுகளுக்கும் சென்று வாணிகம் புரிந்தமை யின் நாநா தேசிகள் (நாநாதேசி—பல தேசங்கள்) எனவும், இவர்களது குழுவில் ஐந்நூறு வணிகர்கள் இடம் பெற்றிருந்த மையின் ஐற்நூற்றுவர் எனவும், ஆயிரம் திக்குகளுக்குச் சென்று வாணிகம் புரிந்த ஐந்நூற்றுவராதலின் திசையாயிரத்து ஐந்நூற் றுவர் எனவும் அழைக்கப் பெற்றிருத்தல் வேண்டும். கி.பி. 1088 ஆம் ஆண்டில் சுமத்திரா நாட்டில் காணப்படும் தமிழ்க் கல்வெட் டில் 'திசையாயிரத்தைஞ்னூற்றுவர்' என்ற வணிகக் குழுவின ரைப் பற்றிய குறிப்புக் காணப்படுகின்றது. இது முதலாம் குலோத் துங்க சோழனது ஆட்சிக் காலத்தில் வரையப்பட்ட கல்வெட் டென்பது குறிப்பிடத் தக்க தாகும்.

நாஞதேசிகள் வாணிகம் செய்துகொண்டு வாழ்ந்து வந்த இடங்கள் வீரபட்டினம் எனவும், எறிவீர பட்டினம் எனவும் அழைக்கப் பெற்றனவாகக் கல்வெட்டுகளா லறியலாம். இவர்கள் முதலாம் இராசேந்திர சோழனின் ஆட்சிக் காலத்தில் மயிலாப் பூரில் கூடிச் செங்கற்பட்டு மாவட்டம் பொன்னேரி வட்டத்தி

லுள்ள அய்யாப்புழல் காட்டூர் என்னு மிடத்தை வீரப் பட்டின மாக மாற்றினர் என்ற செய்தியினையும், அவ்வூர்ப் பொதுமக் களுக்குப் பல வழிகளில் நன்மை புரிந்தனர் என்ற செய்தியினை யும் அவ்வூர்க் கல்வெட்டா லறியலாம்.

நானுதேசிகளும், நாட்டாரும் நகரத்தாரும் முதலாம் இரா சாதிராசனின் ஆட்சிக் காலத்தில் சீராவள்ளி என்ற ஊரில் கூடி, 'நானுதேசியத சமடி எறிவீர பட்டினம்' என்று அவ்வூரின் பெயரை மாற்றி யமைத்ததுடன் அவ்வூர் மக்களுக்குச் சில உரி மைகள் வழங்கியதாகவும் அறிகிருேம். இதனைச் சித்தூர் மாவட் டம் மதனபல்லி வட்டத்திலுள்ள பசினி கொண்டா கல்வெட் டொன்ருல் அறிய லாகும்.

மேற் கூறியவற்ருல் வாணிகத் தலங்கள் வீரர்களால் பாது காக்கப்பட்டன வென்றும் வீரர்களின் பாதுகாப்பிற் குட்பட்ட வாணிகத் தலங்கள் வீரபட்டினம், எறிவீர பட்டினம் எனும் பெயர்களால் அழைக்கப் பெற்றன என்றும் அறியலாம்.

தலை நகரங்களிலும், கடற்கரைப் பட்டினங்களிலும், அயல் நாடுகளிலும் வாணிகம் செய்து பெரும்பொருளீட்டிய வணிகக் குழுவினர் மணிக்கிராமத்தாராவர் என்பதனைக் கல்வெட்டு களாலும் செப்பேடுகளாலும் அறியலாம். இவர்கள் மிகப் பழமை வாய்ந்த வாணிகக் குழுவினராவர். இவர்கள் உறையூர் மணிக் கிராமம், காவிரிப்பூம் பட்டினத்து மணிக்கிராமம், கொடும்பா ளூர் மணிக் கிராமம், இளங்கோப் பட்டினத்து மணிக் கிராமத்தார் என்று கல்வெட்டுகளால் சிறப்பிக்கப் பட்டுள்ளமையின் இவர் கள் தலைநகரங்களில் வாணிகத்தில் சிறந்திருந்தனர் என்பது புலனுகும். சயாம் தேசத்தில் காணப்படுகின்ற தமிழ்க் கல் வெட்டொன்று, அந்நாட்டில் மணிக்கிராமத்தார் கி.பி. ஒன்ப தாம் நூற்ருண்டிலேயே சிறப்புடன் வாணிகம் செய்த செய்தி யினைக் குறிப்பிடுவதால் அவர்களின் வாணிகச் சிறப்பினை நாம் நன்குணரலாம். இக்கல்வெட்டுத் தெள்ளாறெறிந்த நந்திவருமப் பல்லவன் காலத்தில் வெளியிடப் பெற்ற தாகும். இச்செய்தி யால் மணிக்கிராமத்தாரின் கடல் வாணிகச் சிறப்பை நன்கறிய லாம்.

தமிழகத்தின்கண் வாணிகம் புரிந்து வந்த புகழ் மிக்க குழு வினருள் அஞ்சுவண்ணத்தார் என்ற வகையினரும் ஒருவரா வர். இவர்கள் முகமதிய மரபினர் என்பதும் தமிழ்நாட்டில் தங்கி வாணிகம் செய்தனர் என்பதும் சில ஆதாரங்களால் புலனுகின்

றன. 'இயவனராசன் கலுபதிதாமுத லெண்ண வந்தோர்--அயன் மிகு தானையர் அஞ்சு வண்ணத்தவர்' எனவும் 'ஏழ் பெருந்தேரங்கத் தியவனர்கள்-அல்லா என வந்து' எனவும் 'பல் சந்த மாலை' எனும் நூலின் பாடல்கள் குறிப்பிடுவதால் இவர்கள் முகமதியரா யிருத்தல் வேண்டு மென்பது அறியப்படும். இவர்கள் சில பாடல்களில் 'சோனகர்' எனவும் குறிப்பிடப் பெறு கின்றனர்.

'கலைமதி வாய்மைக் கலுழ்பா வழிவருங்
கற்பமைந்த, தலைமையர் ஏழ்பெருந் தேரங்கமும்
பெற்றவர் ... ... ...'

இவர் எனப் பிறிதொரு பாடற் பகுதி குறிப்பிடுவதால், இவர்கள் 'காலிப்' (Caliph) வழி வந்தவர் என்பதும் புலனாகும்.

இவர்களைப் பற்றிய குறிப்பு முதலாம் இராசேந்திரனின் காலத் திலிருந்த சேரமான் பாஸ்கர ரவிவருமன் காலத்திய செப்பேட் டில் இடம் பெற்றுள்ளது. முதலாம் ஆதித்த சோழனின் காலத் திலிருந்த சேரமான் தாணுரவியின் ஆட்சிக் காலத்தில் வெளி யிடப்பெற்ற செப்பேட்டிலும் இவர்களைப்பற்றிய குறிப்புகள் காணக் கிடைத்தலின் இவர்களின் பழமையை என்னென்பது! இச்செப்பேட்டுச் செய்திகளால் அஞ்சுவண்ணத்தார் சேர நாட் டின்கண் சிறப்புடன் வாணிகம் செய்த வணிகக் குழுவினர் என் பது விளங்கும். எனவேதான், பண்டாரகர் குண்டர்ட்டு, பண் டாரகர் பருனல் போன்ற அறிஞர்கள் அஞ்சுவண்ணத்தார் என் போர் சேர நாட்டிலிருந்த யூதர்களா யிருத்தல் வேண்டு மென்று கருதுகின்றனர். இவர்கள் யார்? என்பது குறித்து வரலாற்றறிஞர் களிடையே கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன.

இவர்கள் சேரநாட்டில் மட்டு மன்றிப் பாண்டி நாட்டிலும் வாணிகம் செய்தனர் என்பதனைக் கீழ்க் கடற்கரையில் பாண்டி நாட்டிலுள்ள தீத்தாண்ட தானபுரத்துக் கல்வெட்டா லறியலாம். இவர்கள் சோழ நாட்டின்கண்ணுள்ள நாகப்பட்டினத்தில் வணி கம் புரிந்ததைக் கீழ்க்கண்ட பழம் பாடலொன்றால் அறியலாம்.

'குடக்கினில் துரங்கமும் வடக்கினில் கலிங்கமும்
குணக்கினில் பசும்பொனும் குளித்ததெற் கிலாரமும்
அடிப்பரப் புடைக்கலத் தனேகவண்ண மாகவந்த
தஞ்சுவண்ண முந்தழைத் தறத்தின்வண் ணமானவூர்

கடற்கரைக் குவித்திடு சந்தனத்தை இந்துடன்
கலந்திறைக்கு மந்தியைக் கனன்றுமுசுவின்குலம்
புடைப்பதற்கெழுந்துகை முறுக்கலும் இழுக்கிவாய்
புக்கமுத்தை விட்டெறிந்து பூகமேறு நாகையே'

அஞ்சுவண்ணத்தார் தமிழகம் முழுவதும் நன்முறையில் வாணிகம் செய்து நற்புகழ் பெற்ற குழுவினராவர்.

வணிகர்கள் புறநாடுகளுக்குச் செல்லுங்கால் கூட்டங் கூட்டமாகச் செல்வது வழக்கமாதலின், இக்கூட்டத்திற்கு 'வாணிகச் சாத்து' எனும் பெயர் நிலவிற்று. சோழ மன்னர்கள் சிறப்பு மிக்க வணிகர்கட்கு 'எட்டி' எனும் பட்டத்தைச் சூட்டிச் சிறப்பித்தனர். சோழ நாட்டு வணிகர்கள் பூம்புகார், நாகப்பட்டினம் போன்ற துறைமுகங்களை மட்டுமன்றிக் காரைக்கால், வீரை, (வீராம்பட்டினம்), மாமல்லபுரம், வீரசோழப் பட்டினம் (கோவளம்) மைலாப்பூர் ஆகிய கடற்றுறைப் பட்டினங்களின் மூலமாகவும் கடல் வாணிகத்தை மேற்கொண்டனர்.

சோணாட்டு வணிகக் குழுவினர் மேற்கேயுள்ள அராபிய நாட்டினருடனும், பாரசீக நாட்டினருடனும், கிழக்கேயுள்ள சுவர்ணபூமி, ஸ்ரீவிசயம், சுவர்ண தீபம், காம்போசம், சீனம் ஆகிய கடல் கடந்த நாட்டினருடனும் கடல் வாணிகம் புரிந்து சோணாட்டின் பொருளாதாரத்தை உயர்த்தினர்.

'நடுநுகத்துப் பகல்போல
நடுவுநின்ற நன்னெஞ்சினோர்
வடுவஞ்சி வாய்மொழிந்து
தமவும்பிறவும் ஒப்பநாடிக்
கொள்வதூஉ மிகைகொளாது
கொடுப்பதூஉங் குறைகொடாது
பல்பண்டம் பகர்ந்துவீசும்'

என்று பட்டினப்பாலையில் உருத்திரங் கண்ணனார் குறிப்பிட்டுள்ளதைப் போன்றும்,

'வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோற் செயின்'[1]

என்று திருக்குறளின்கண் திருவள்ளுவர் குறிப்பிட்டுள்ளதைப் போன்றும் தமிழக வணிகர் வாணிகத்தில் அறநெறியைப் பின்

[1] திருக்குறள்-120

பற்றினரென உறுதியாகக் கூறலாம். இதனுல், சோழர் காலத்திய வணிகரும், நேர்மைத் திறத்துடன் வாணிகம் புரிந்தனர் எனக் கொள்ளுதல் தவருகாது.

எனவே, வணிகர்கள் ஒரு நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிப்படை யானவர்கள் ஆவர். அதிலும் சிறப்பாகக் கடல் கடந்து வாணிகம் செய்யும் வணிகர்களால்தான், ஒரு நாட்டின் பொருளாதாரம் முன்னேற்றம் அடைகிறது. வாணிகத்தில் ஈடுபட்டிருந்த நகரத்தார் திருக்கோயில்களுக்கும் பொதுக் காரியங்களுக்கும், அறக்கொடைகள் அளித்துள்ளனர், திருநாம நல்லூர் நகரத்தார் கோயிலுக்கு நன்கொடைகள் அளித்துள்ள செய்தியினை, நம் இராசேந்திரனது ஆரும் ஆட்சி யாண்டில் வெளியிடப்பட்ட நல்லூர் கல்வெட்டா லறியலாம்.

வணிகக் குழுக்கள் கடல் கடந்து பிற நாடுகளுக்குச் செல்லுங்காலே, படைத் துணையோடு சென்றனர் என்பதனையும், கல்வெட்டுச் சான்று லறியலாம். இவர்கள் தமது தற்காப்பிற்காகவே படை கொண்டு சென்றனர் என்பதும் இதனுல் பெறப்படுகின்றது. இதனைச் சீயத்தில் கிடைத்த கல்வெட்டில், 'சேனுமுகம்' என்ற சொற்ருெடராலும், 'நான்கு திசையாயிரத்து ஐந்நூற்றுவப் பெருஞ்சமயமும், இச்சமயத்துத் திருவடிக்குப் பணி செய்யும் எறி வீரரும், கொங்காள்வாரும்' என்ற பசனி குண்டா கல்வெட்டாலும் அறியலாம்.

ஒரு நாட்டில் 'தலை சிறந்த மதாசாரியர்க்கு ஒப்பானவர் வர்த்தகர்கள்' என்று முகமது நபி அவர்கள் திருவாய் மலர்ந்தருளியிருத்தலின் வணிகரின் இன்றியமையாமையை, நாம் தெள்ளிதின் உணரலாம். 'திரைகட லோடியும் திரவியம் தேடு' எனும் முதுமொழியினைப் பொன்னெனப் போற்றிய சோணுட்டு வணிகர்கள் கடல் கடந்து சென்று பொருளீட்டிச் சோணுட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்குத் துணை புரிந்தனர். எனவே, இவர்கள் ஒரு நாட்டின் வளர்ச்சிக்குப் பெரிதும் உறு துணையாக, ஊன்றுகோலாக விருப்பர் என்பது வெள்ளிடைமலை. நம் இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் மலாயா, இலங்கை, ஸ்ரீவிசயம், கடாரம், பருமா, சுமத்திரா முதலான கடல் கடந்த நாடுகளில், சோழரது புகழ்க் கொடி பட்டொளி வீசிப் பறந்ததன் பயனுகக் கடல் கடந்த வாணிகமும் பெருவளர்ச்சி பெற்றது. ஐரோப்பிய அரசாங்கம் வெளி நாடுகளில் வாணிகம் புரியும் தம் நாட்டு வணிகர்கட்குப் பேருதவி புரிந்தது. ஆனுல், சோழ மன்னர்கள் வெளி நாடுகளில் வாணிகம் செய்யும் தமிழர்கட்குப் பேருதவி புரிய

வில்லை. அவ்விதம் அவர்கள், பேருதவி யளித்திருப்பின், நமது அரசியல் ஆதிக்கம் கடல் கடந்த நாடுகளில் பரவி யிருக்கும் என்பதில் எள்ளளவும் ஐய மில்லை. இதனுல், அக்கால வணிகர்களுக்கோ, சோழ வேந்தர்களுக்கோ, பொருளாதார ஏகாதிபத்திய உணர்வு (Economic Imperialism) இருந்ததாகத் தெரிய வில்லை என்று கருதலாம்.

**தொழில்கள்**

சோழரது ஆட்சிக் காலத்தில் பல வகைப்பட்ட தொழில்கள் வளர்ச்சி பெற்றிருந்தன. பொன் வேலை செய்வோர், உலோக வேலை செய்வோர், நெசவு வேலை செய்வோர், மர வேலை செய்வோர், தந்த வேலை செய்வோர் போன்ருேர் தங்களது தொழிலைத் திறம்படச் செய்து வந்தனர். உலோக சம்பந்தமான கைத்தொழிலைச் செய்வோர் அன்ருட உபயோகத்திற்குத் தேவையான உலோகப் பாத்திரங்களைச் செய்தனர். இவற்றுள் வெண்கலப் பாத்திரங்கள் குறிப்பிடத் தக்கவை யாகும். இவை பெரும்பாலும் செல்வர்களால் பயன் படுத்தப் பட்டன. பல்வேறுபட்ட கைத் தொழில்கள் நாட்டில் வளர்ச்சி யடைந்தமையால் மக்கள் எல்லாவிதமான பொருள்களையும் பெற்று இன்புற்றனர். ஈண்டு நாம் சோழர் காலத்தில் சிறந்து விளங்கிய தொழில்களுள் சில வற்றினைப் பற்றிச் சிறிது ஆய்வோம். வாணிகம், விவசாயம் பற்றிய செய்திகள் முன்பே கூறப்பட்டுள்ளன. அவற்றினை முன் பகுதியில் காண்க.

சோணுட்டின்கண் சிறப்புற்று விளங்கிய தொழில்களுள் நெசவுத் தொழிலும் ஒன்று. விவசாயத்திற்கு அடுத்தபடியாக இத்தொழில் மூலமாகவே அரசுக்குப் பெருவருவாய் வந்த தென்பதால் இதன் முக்கியத்துவத்தை நன்கறியலாம்.

இத்தொழில், புதிய கற்காலத்திலேயே ஆரம்ப மாயிற்று என்று தொல்பொருள் ஆய்வறிஞர் திரு. எச். டி. சங்காலியா[1] குறிப்பிடுவதானுலும், ஆடையைப் பற்றி ஒல்காப்பெரும்புலமைத் தொல்காப்பியனுர் தமது நூலில் குறிப்பிடுவதானுலும்,[2] பருத்தி,[3]

[1] Pre and Photo History - India and Pakistan - H. D. Shankalia

[2] தொல் பொருளதிகாரம்–262–3
கூழை விரித்தல் காதொன்று களைத
லூழணி தைவர லுடைபெயர்த் துடுத்தலோ
டூழி நான்கே யிரண்டென மொழிப

[3] புறம் 299-1
'பருத்தி வேலிச் சீறூர் மன்னன்'

இலவமரம்,[1] கோங்கமரம்[2] முதலியவை பற்றிச் சங்க இலக்கியங்களில் குறிப்பிடுவதனுலும் இத் தொழிலின் தொன்மையை நாம் நன்கு அறியலாம்.

சோழர் காலத்தில் ஆட்டு மயிர், எலி மயிர், பருத்தி, பட்டு ஆகியவற்ருல் நேர்த்தியான ஆடைகள் நெய்யப்பட்டன.[3] இவை பாம்பு உரித்த தோல்,[4] மூங்கிலின் உட்புறத்தேயுள்ள மெல்லிய வெண்மையான தோல்,[5] புகை,[6] பாலாவி[7] போன்று விளங்கின. தமிழகத்தில் முப்பத்தாறு வகையான ஆடைகள்[8] நெய்யப்பட்டன என்பதனை அடியார்க்கு நல்லார் குறிப்பிட்டுள்ளார்.

நம் நாட்டில் நெய்யப்பட்ட மெல்லிய, நுண்ணிய, அழகிய ஆடைகள் கடல் கடந்த நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. இதனுல், தமிழ் நாட்டுப் பொருளாதாரம் முன்னேற்ற மடைந்தது.

நெசவுத் தொழிலை மேற்கொண்டிருந்தோர் கம்மியர்,[9] காருகர்[10] எனத்தமிழ் இலக்கியங்களில் குறிப்பிடப் படுகின்றனர். இவர்கள் கைக்கோளர்[11] எனவும், சாலியர்[12] எனவும், சோழிய

[1] பரிபாடல் 19-79
'பருவமில் கோங்கம் பகைமலர் இலவ'

[2] குறுந்தொகை 254-2
முலையேர் மென்முகை அவிழ்ந்த கொங்கின்
தலையவர் வந்தன வாரா தோழி

[3] சிலம்பு 14-205
'நூலினும் மயிரினும் நுழைநூற் பட்டினும்'

[4] புறநானூறு 383-10
'பாம்புரி யன்ன வடிவின காம்பின்

[5] புறநானூறு 383-10
'பாம்புரி யன்ன வடிவின காம்பின்
கழைபடு....'

[6] புறநானூறு 393-19
புகைவிரிந் தன்ன பொங்குதுகி லுடீஇ

[7] பெரும்பாணுற்றுப் படை 469
ஆவி யன்ன அவிர் நூற் கலிங்கம்

[8] கோசிகம், பீதகம், பச்சிலை, அரத்தம், நுண்டுகில், சுண்ணம், வடகம், பஞ்சு, இரட்டு, பாடகம், கோங்கலர், கோபம், சித்திரகம்மி, குருதி, கரியல், பேடகம், பரியட்டக்காசு, வேதங்கம், புங்கர் காழகம், சில்லிகை, தூரியம், பங்கம், தத்தியம், வன்னடை, கவற்றுமடி, நூல்யாப்பு, திருக்கு, தேவாங்கு, பொன்னெழுத்து, குச்சரி, தேவகிரி, காத்தூலம், இறஞ்சி, வெண்பொத்தி, செம்பொத்தி, பணிப்பொருத்தி,

[9] மதுரைக் காஞ்சி 521
'சிறியரும் பெரியருங் கம்மியர் குழீஇ

[10] மணிமேகலை 25-105
காருக மடந்தை கணவனுங் கைவிட

[11], [12] ARE 300 of 1909

சாலியர்[1] எனவும், பட்ட சாலியர்[2] எனவும், சேணியர்[3] எனவும் கல்வெட்டுகளில் குறிக்கப் பெறுகின்றனர். இவர்களிடையே பல்வேறு பிரிவினர் இருந்தன ரென்பதையும் இதனு லறியலாம்.

1946 ஆம் ஆண்டு பாண்டிச் சேரியைச் சார்ந்த அரிக்கமேடு என்னுமிடத்தில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சியின் போது எழுத்துகளுடன் கூடிய பானை ஓடொன்று கிடைத்தது. அதில் கைக்கோளரென்று குறிக்கப் பெற்றுள்ளதாகவும், அது நெசவாளரைக் குறிப்பதாகவும் திரு. சக்கரவர்த்தி குறிப்பிடுகின்ருர். எனவே, கைக்கோளர், நெசவாளர் என்பது தெளிவு.

'நெசவுத் தொழில் செய்த பல்வகைப் பிரிவினருள் இக்கைக்கோளர் என்ற பிரிவினர் சமுதாயத்திலும், அரசியலிலும் நிருவாகத்திலும் செல்வாக்குப் பெற்றிருந்தனர். இவர்களில் பெரும்பாலானவர் சைவர்களாக இருந்திருக்கின்றனர். சிலர் இலிங்கத்தை அணிகலனுக அணிந்துள்ளனர். ஒரு சிலர் வைணவராக இருந்திருக்கின்றனர். இவர்களின் வழிவந்தவர்கள் தற்பொழுது காஞ்சிபுரத்தில் வசித்து வருகின்றனர்' என்று கல்வெட்டாய்வாளர் திரு. அ. அப்துல் மஜீத் அவர்கள் 'நெசவியல்' என்னும் கட்டுரையில் குறித்துள்ளதால்[5] இவர்களது சமயத்தினை நாம் ஒருவாறு அறியலாம்.

உடற்கட்டும் வலிமையும் வீரமும் மிக்க இவர்கள் போர்ப் படையில் சேர்ந்து வீரர்களாகப் பணி புரிந்தனர். எனவேதான், கல்வெட்டுகளும் இவர்களைக் 'கைக்கோளப் பெரும்படையினர்' எனக் குறிக்கின்றது.

இவர்கள் திருக்கோயிலைச் சுற்றியுள்ள பகுதிகளில் வசித்து வந்தன ரென்றும், கோயில் பணியாளர்களுள் ஒருவராக விளங்கின ரென்றும், திருக்கோயில்கட்குக் கொடைகள் அளித்துள்ளனரென்றும், இறைவனுக்கு ஆடைகள் நெய்தளித்தன ரென்றும், கூத்த பிரானுக்கும், பிச்ச தேவருக்கும், கணபதிக்கும் கோயில்கள் எடுப்பித்தன ரென்றும் கல்வெட்டுச் செய்திகளாலறியலாகும்.

நம் இராசேந்திர சோழனின் இரண்டாமாட்சி யாண்டின் கல்வெட்டினைக் கொண்டு கைக்கோளப் பெரும்படையினர்

[1] ARE 269 of 1913
[2] Museum Plates of Uttama Chola-Nilakanta Sastry
[3] ARE 2 of 1913
[4] Ancient India - No. 2
[5] ஆய்வுக் கொத்து–பக்கம்-160

திருவிடை மருதூரிலுள்ள மகாலிங்க சுவாமி கோயிலுக்கு ஒரு சாளரமும் (சன்னல்), ஒரு கதவும், ஒரு நிலைப்படியும், மண்டபத்திற்குப் படிகளும் அமைத்துக் கொடுத்தனர் என்பதனை யறியலாம்.

மேற்கூறியவற்றால் சோழர் காலத்தில் நெசவுத் தொழில் சிறப்புற்று விளங்கிய தென்றும், இதனால், அரசிற்கு நல்ல வருவாய் கிடைத்த தென்றும், இவர்கள் நெசவுத் தொழிலுடன் நாடு காக்கும் பணியிலும் ஈடுபட்டனர் என்பதும் புலனாகும். மக்களுக்கும், இறைவனுக்கும், மன்னனுக்கும் தேவையான ஆடைகளை நெய்து அளித்த இவர்கள், சமுதாயத்தில் நன்னிலை பெற்றிருந்தனர் என்பதும் ஈண்டு நினைவு கொள்ளத் தக்க தாகும். பட்டசாலியர் என்போர் மன்னனுக்குரிய நேர்த்தியான ஆடைகளை நெய்தனர். சோழர் காலத்தில் நெசவுத் தொழில் மேன்மை யுற்றிருந்தது.

**கப்பல் கட்டும் தொழில்**

சோழப் பெருமன்னர்கள் வலிமை மிக்க நிலப்படையை வைத்திருந்ததோடு, ஆற்றல் மிக்க கப்பற் படையையும் வைத்திருந்தனர். குறிப்பாக அதிலும் சிறப்பாக முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன் போன்ற சோழப் பெருமன்னர்கள் கடல் கடந்த நாடுகளை வென்று, தன்னடிப் படுத்தும் முயற்சியில் தளராது ஈடுபட்டிருந்தமையின் எண்ணிறந்த போர்க் கலங்களை வைத்துக் கடற்போர் புரிந்தனர். இத்துணைப் பெரிய கடற் படையினைக் கொண்டு, கடலாண்ட இவர்களது ஆட்சிக் காலங்களில் கப்பல் கட்டும் தொழில் சிறந்திருந்தது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி ஆகும்.

**உலோகத் தொழில்கள்**

தமிழர்கள் பண்டைக் காலந் தொட்டு உலோக வார்ப்புத் தொழிலில் சிறந்திருந்தனர் என்பதனை இலக்கியச் சான்றுகளாலறியலாம். சோழர்கள் காலத்திலும் இத்தொழில் நல்ல வளர்ச்சி பெற்றிருந்தது.

இவர்களது காலத்தில் மக்களின் வீட்டுத் தேவைக்கும், கோயில்களுக்கும் அதிக அளவில் உலோகப் பாத்திரங்கள் தயாரிக்கப் பெற்றன. இவர்கள் காலத்தில் அழகிய நாணயங்கள் வெளியிடப் பெற்றதாலும் இத்தொழிற் சிறப்பை நாமறியலாம்.

[1] ARE 253 of 1907, ASI. S. I. I. Vol. XIX

கலவை உலோகங்களைத் தயாரித்து, அவற்றைக் கொண்டு மிக நயமான பாத்திரங்களை வார்ப்பதில், சோழர் காலத்திய கன்னர்கள் திறமை பெற்றிருந்தனர். தாமிரம், பித்தளை, வெண் கலம் ஆகிய உலோகங்களாலான பாத்திரங்கள் அக்காலத்தில் பேரளவில் உற்பத்திசெய்யப்பட்டன. மண்பாண்டம் செய்கின்ற குயவர்கள் ஏழைகட்குத் தேவையான மண்கலங்களைத் தயாரித் தளித்தனர். திருமேனியென அழைக்கப்பெறும் கடவுள் படிமங் களும் பிரதிமம் என வழங்கப்படும் மக்கள் படிமங்களும், உலோ கங்களால் வடிக்கப் பெற்றமையின், அக்கால உலோகக்கலை உயர்ந்த நிலையில் இருந்ததை யறியலாம்.

பொற்கொல்லர்கள் தங்கத்தினால் உயர்ந்த நகைகளையும், ஆபரணங்களையும், கல் இழைத்த அழகிய அணிகலன்களையும் நேர்த்தியான முறையில் செய்தனர். நம் இராசேந்திரனது காலத்தில் எண்ணிறந்த வகையான அணிகலன்கள் மக்களால் பயன்படுத்தப் பட்டிருந்தமையால், பொற்கொல்லனின் அருந் திறனையும் கலைத்திறனையும் நாம் தெள்ளத் தெளிய உணரலாம். தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகளால், அக்கால கம்மியர் கலையும், பொற்கொல்லர் கலையும் உன்னத நிலையிலி ருந்தது என்பதனைத் தெளிவாக அறியலாம். பொன்னாலும், முத் தாலும் ஆன பல்வகைப்பட்ட அணிகலன்களைக் கவர்ச்சியான முறையில் செய்யும் முறையினை அக்காலக் கலைஞர்கள் கற்றிருந் தனர்.

சில கைத்தொழில்கள் நீதி மன்றத்தின் பார்வையிலோ, அல்லது கோயிலின் அங்கீகாரத்தின் கீழோ நடைபெற்று வந் தன என்பதனைக் கல்வெட்டுகளால் அறியலாம்.

உப்பு எடுக்கும் தொழில் அரசாங்கத்தின் பார்வையில், அவர்களின் ஆணைக்குட்பட்டே நடைபெற்று வந்ததாகத் தெரி கிறது. கடற்கரைப் பட்டினங்களில் உப்பளங்கள் அமைக்கப் பெற்று, உப்பு உற்பத்தி செய்யப் பட்டதாகக் கல்வெட்டுகள் சான்று பகர்கின்றன.

நுண்ணிய கலைத்திறன் மிக்க தந்த வேலை, நெட்டி வேலை போன்றவை அக்காலத்து நடைபெற்றதால் சோழர் காலத்தில் நுண்ணிய வேலைப்பாடு மிக்க கலைகள் சிறந்து விளங்கியதை யறியலாம்.

பொதுவாகச் சோழர் காலத்தில் சிலை வடிக்கும் சிற்பியர் பலர் தமது நுண்ணிய கலைத்திறனால், கண்ணைக் கவரும் எண்

ணிறந்த கவின் மிக்க சிலைகளை வடித்தனர். நம் இராசேந்திர னது ஆட்சிக் காலத்தில் வாழ்ந்த சிற்பிகளின் கலைத்திறனைக் கங்கை கொண்ட சோளேச்சரத்தில், காட்சி யளிக்கும் சிற்பங் கள் இன்றும், பறை சாற்றிக் கொண்டுள்ளன. இங்கு உருவாக் கப்பட்டுள்ள சிற்பங்கள், கலையின் கொடுமுடியைத் தொட்டு நிற் கின்றன.

வணிகர்களைப் போன்று கைத் தொழில்களை மேற்கொண்டு பல்வகைப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழிலாளர்களும் நாட்டின் முன்னேற்றத்தில் பெரும்பங்கு வகிப்பர் என்பது உள் ளங்கை நெல்லிக்கனி ஆகும். எனவே, இவர்கள் நம் இராசேந் திரனின் ஆட்சிக் காலத்தில் ஒல்லும் வகையெல்லாம், நாட்டின் முன்னேற்றத்திற்கு அரும்பாடு பட்டனர் என்பது போற்றுதற் குரிய தொன்றாகும்.

இதுகாறும் கூறியவற்றால், பரந்துபட்ட பெரிய நாடு தன் குடை நிழற்கீழ் வந்து வாழவேண்டுமென விரும்புவதைக் காட்டிலும், தன் குடைக்கீழ் வாழும் குடிமக்களின் நலம் பெருகு தல் வேண்டுமென விரும்பும் செங்கோல் முறையைச் சிறக்க உணர்ந்திருந்த இராசேந்திரன், நாட்டு மக்களின் நலம் பெருக் குவதே தன் கடமையெனக் கொண்டு நாட்டில் நல்லாட்சி நடைபெற ஆவன புரிந்தான். சோழப் பெருமன்னர்கள் வாழை யடி வாழையாய்ப் பின்பற்றி வந்த ஆட்சி முறையினைத் தழுவித் தேவையான துறைகளில் திருத்தம் செய்து, நல்லாட்சி நடத் திய இராசேந்திரன் சிறந்த ஆட்சியாளனாகப் போற்றப்படு கிறான். நாட்டின் வேளாண்மையைப் பெருக்கியதன் மூலம் மக்கள் வளத்தினைப் பெருக்கி, வாணிகத்தினை முன்னேற்றிய தன் பயனாக மக்களின் தேவைகளை நிறைவேற்றிப் போர்ப் படை யமைத்து நாட்டமைதி காத்துத் திருக் கோயில்களை நிறுவித் திருத்தொண்டு புரிந்து, பல்வகைத் தொழில்களை வளர்த்து, நாட்டின் உற்பத்தியைப் பெருக்கி, ஊராட்சி முறையினை விரிவு படுத்தி மக்களை நிருவாகத்தில் ஈடுபடுத்திச் சைவ சமயத்தைத் தழைத் தோங்கச் செய்து, பிற சமயத்தாரையும் பேணிக் காத்து, மக்கள் நல்வாழ்வே தன் வாழ்வெனக் கொண்டு மாட் சிமை மிக்க ஆட்சி முறையினை நிறுவிய இராசேந்திரன், சோழர் ஆட்சிமுறை வரலாற்றில் செப்பங்கள் பல செய்த திட்ப நுட்ப முடையோனாகப் போற்றப்படுகிறான்.

கி.பி. பதினான்காம் நூற்றாண்டில் தில்லிப் பேரரசினை ஆட்சி புரிந்த பிரோஷ்ஷா துக்ளக் என்னும் சுல்தான், இராசேந்திர

ணைப் போன்று தன் நாட்டில் நீர்ப்பாசன வசதிகளை விரிவு படுத்தி, வேளாண்மையைப் பெருக்கி, நாட்டை வளப்படுத்தினன் என்பதனல் 'வடநாட்டில் ஒரு இராசேந்திரன்' இருந்தான் என்பதனை அறியலாம். சோழர்களது ஆட்சி முறை மௌரியர்களின் ஆட்சி முறையைப் போன்று பல போற்றத் தகுந்த ஆட்சிக் கூறுகளைத் தன்னகத்தே கொண்டு விளங்கியதை அறியலாம். இவ்வாட்சிமுறை தமிழகத்தில் பன்னூருண்டு காலம் வழக்கிலிருந்து, தமிழகத்தை யாண்ட பிற அரசர்களாலும் இது ஒரு சில மாற்றங்களுடன் பின்பற்றப்பட்டும் வந்தமை குறிப்பிடத் தக்க தாகும். இந்தியாவின் ஆட்சி முறை வரலாற்றில், சோழர்களது ஆட்சி முறை முதன்மையான ஆட்சி முறைகளுள் ஒன்ருகப் போற்றப் படுகின்றது. சோழர்களின் ஊராட்சி முறையும், கடற்படை நிருவாகமும், கோயில் நிருவாக முறையும் போற்றத் தகுந்த அளவில் அமைந்திருந்தன. எனவே, சோழப் பெருமன்னர்கள் சிறந்த வீரர்களாகத் திகழ்ந்ததோடு நல்லாட்சியாளர்களாகவும் விளங்கினர். சோழர் குடியில் தோன்றிய இராசேந்திரனும், குடிமக்கள் நல்வாழ்வு வாழ நல்லாட்சி முறையினை நிறுவிப் புகழ் பெற்ருன்.

# 15. சமுதாய நிலை

கி. பி. பதினோராம் நூற்றாண்டின் தொடக்கக் காலத்தின் சோணாட்டின் சமுதாய நிலையினை நாம் அறிந்து கொள்ளுதல் அவசிய மாகும். தமிழகத்தின் தலைசிறந்த மன்னனும் முதலாம் இராசராசசோழனின் ஆட்சிக் காலம் தமிழக வரலாற்றில் பொன் எழுத்துகளால் பொறிக்கப் பட வேண்டிய காலம். இவன் தனது அரும்பெரும் முயற்சியின் பயனாக மேம்பட்ட சமுதாயத்தினை உரு வாக்கிப் போற்றுதற் குரியவனாகிறான். இவன் மகனான இரா சேந்திரனது ஆட்சிக் காலத்திலும் சமுதாய வாழ்வினைச் சீர் திருத்தும் வகையில் எண்ணிறந்த பணிகள் மேற்கொள்ளப்பட் டன. எனவே, இராசேந்திரனது ஆட்சிக் காலத்திலும் சமுதாய வாழ்வு சிறந்திருந்ததில் வியப் பில்லை.

இராசேந்திரனது போர்ச் செயல்களையும், ஆட்சி முறையி னையும் நாம் அறிந்து கொள்வது மட்டும் போதாது. அவனது ஆட்சிக் காலத்தில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கை பற்றியும் அறிந்து கொள்வது அவசிய மாகிறது. ஏனெனில், மனித வாழ் வினை மையமாகக் கொண்டு தீட்டப்பட்ட வரலாறுதான் கால வெள்ளத்தைக் கடந்து என்றென்றும் பொன்றாது நின்று நிலவும் திறம் கொண்டது. எனவேதான், வரலாற்றறிஞர் திரு.பி.டி.சீனி வாச ஐயங்காரும் 'சரித்திரம் என்பது மக்கள் வாழ்க்கை, நாக ரிகம், குறிக்கோள் என்பவை பற்றிக் கூறுவதுதான்' என்று குறிப் பிடுகின்றார். எனவே, இவண் நாம் இராசேந்திரன் காலத்திய சமுதாய வாழ்வைப்பற்றிக் காணலாம்.

'மனிதன் ஒரு சமுதாய மிருகம்' (Man is a social animal) என்று நன்றாகச் சொன்னார் அறிஞர் அரிஸ்டாடில். எனவே, மனி தன் தனித்து வாழாது சமுதாயத்துள் இணைந்து வாழ்கிறான். நம் இராசேந்திரனது காலத்தில் சமுதாயத்தில் பல்வேறு வகைப்

பட்ட நிலைகளைக் காணலாம். இச்சமுதாய வாழ்வின் அடிப்படையினைக் கொண்டே, நாட்டின் பெருமையும், சிறுமையும் கணிக்கப் பெறுகின்றன. அக்காலத்தில் மக்களிடையே பல பிரிவுகள் காணப் பட்டன. ஒவ்வொரு பிரிவும் அதற்கெனத் தனி வாழ்வு முறைகளை மேற்கொண்டு வந்தது. இப்பிரிவுகளுள் அந்தணர், வாணிகர், உழவர், தொழிலாளர், வீரர் போன்ருேர்பற்றி நாம் அறிந்து கொள்ளுதல் அவசிய மாகும்.

சோழர் காலத்திய சமுதாயம் நெகிழ்ச்சி யுடையதாகக் காணப்பட்டது. சாதி, சமுதாய அமைப்பின் அடிப்படையாக விளங்கிற்று. அக்காலத்தில் சாதி அடிப்படையில் அமைந்த குழுக்கள் செல்வாக்குடன் விளங்கின. தொழிலை அடிப்படையாகக் கொண்ட சாதி பாகுபாட்டு முறை, வாழையடி வாழையாக நம் நாட்டில் நிலவி வந்தது. அவர்கள் தத்தம் சாதி உரிமைகளைப் பாதுகாப்பதிலேயே முனைந்திருந்தனர். இதன் விளைவிஞல் சில பிரிவினர் தொடர்ந்து உயர்நிலை பெற்றனர்; மன்னனின் ஆதரவைப் பெற்றனர். சில பிரிவினர் என்றென்றும் தாழ்ந்த நிலையிலேயே ஆழ்த்தப் பெற்றனர். மேற்கூறிய கோட்பாட்டினை அடிப்படையாக வைத்துக் கொண்டுதான் சோழர் காலச் சமுதாயம் எனும் கட்டிடத்தை நாம் ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

*அந்தணர்*

இவர்கள் சமுதாயத்தில் தலையாய இடத்தைப்பெற்று அரசர், வணிகர், பொதுமக்கள் ஆகிய எல்லோராலும் மதிக்கப் பெற்றனர். இவர்கள் வேதங்களையும் சாத்திரங்களையும் கசடறக் கற்றுத் தேர்ந்தனர்; திருக்கோயில்களிலும் அம்பலங்களிலும் இரவில் மகாபாரதம், புராணம் போன்ற அறிவு நூல்களை மக்கள் முன்பு எடுத்துரைத்தனர். அரசர்க்குரிய ஆச்சாரியர்களாகவும் அரசன் நல்வாழ்வு பெற வேண்டி, வேதம் ஓதுதல், வேள்விகள் புரிதல் போன்ற கிரியைகள் செய்பவர்களாகவும், அரசியல் தலைவர்களாகவும் நற்பணி புரிந்து வந்த இவர்கள், மன்னனின் பெருமதிப்புக்கும் நம்பிக்கைக்கும் உகந்தவர்களாக நடந்து கொண்டனர். இவர்கள் சில சமயங்களில் படைத்தலைவர்களாகவும் பணியாற்றினர். இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் இராசராச பிரம மகாராசன் என்னும் அந்தணனும், கிருஷ்ணன் இராமனுன மும்முடிச் சோழ பிரம மாராயன் என்னும் அந்தணனும் படைத்தலைவராகப் பணியாற்றினர் என்பதனை ஈண்டு நாம் எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம். இவர்கள் வட மொழியிலும் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தனர்.

உயர்சாதி மக்களாகக் கருதப்பெற்ற இவர்கள் அரசியலில் அமைச்சராகவும் பணியாற்றினர். மாராயன் அருண்மொழியான உத்தம சோழப் பிரமராயன் என்னும் அந்தணன் அரசியல் தலைவனாகப் பணி புரிந்ததை ஈண்டு உணரலாம். எனவே, பார்ப்பனர் திருக்கோயில்களில் ஆதிக்கம் செலுத்தியதோடு அமையாது, அரசியலிலும் செல்வாக்குப் பெற்று, மன்னனின் நல்லாதரவைப் பெற்றனர். சில சமயங்களில் படையிலும் நல்ல உயர்ந்த பதவிகளைப் பெற்றனர். எனவே, மன்னனுக்கடுத்துப் பார்ப்பனர் அனைத்துச் செயல்களிலும் செல்வாக்குடன் விளங்கினர்; மன்னனுக்கு அறிவுரையும் ஆசியுரையும் கூறினர். புரோகிதர் சோழர் அரசியலின் அச்சாணி எனக் கூறலாம்.

இவர்களது பணியினைப் பாராட்டும் முகத்தால் சோழ வேந்தர்கள் இவர்கட்குப் பிரம ராயர் எனும் சிறப்புப் பட்டத்தினையும் வழங்கினர். மேற்கூறிய மூவரும் நம் இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் ‘பிரம ராயன்’ எனும் பட்டத்தினைப் பெற்றுப் படைத் தலைவர்களாகவும், அரசியல் தலைவர்களாகவும் பணி புரிந்தனர்.

பார்ப்பனர் அந்தணர், மறையோர், வேதியர், அருச்சகர், புரோகிதர் எனப் பல பெயர்களால் அழைக்கப் பெற்றனர்.

வேதங்கள் ஓதி வந்த இவர்கட்கு மன்னன் இலவசமாக வீடு, ஊர், வரியிலி நிலங்கள் ஆகியவை யளித்து வந்தான். இவர்களது வாழ்விற்கென மன்னன் ஆற்றங்கரைகளில் தெருக்கள் அமைத்து வசதி செய்து கொடுத்தான். வேதியர்க்கு பிரமதேயம், சதுர்வேதி மங்கலம் எனும் பெயர்களால் கிராமங்களும், நிலங்களும் வரி யின்றி வழங்கினான். எல்லா இன மக்களும் கலந்து வாழும் ஊர்களில் பார்ப்பனர்களுக் கென்று தனித் தெருக்கள் ஒதுக்கப் பட்டன.

அந்தணர்கட்கு அகரப் பற்று, அக்கிரசாலைப்புரம், அக்கிர கார வாடை, வேத விருத்தி, பட்ட விருத்தி, அத்தியயன விருத்தி முதலிய பலவகையான மானியங்கள் மன்னனால் வழங்கப்பட்டன. இவற்றுள் அக்கிர சாலைப் புரமென்பது பார்ப்பனருக்கு இலவசமாக உணவளிக்கும் அக்கிரசாலைக்கு அளிக்கப் பட்ட மானிய மாகும். திருக்கோயில்களிலும் பார்ப்பனருக்கு இலவசமாக மதிய உணவு அளிக்கப்பட்டது.

இராசேந்திரன் பார்ப்பனருக்குப் பல கிராமங்களைத் தானம் செய்துள்ளதாக இவனது கரந்தைச் செப்பேடு சான்று தருகின்

றது. இவன் ஓர் அந்தணனுக்குக் கோயில் படைக்கவும், வேத பாடம் கற்பிக்கவும் நிலத்தானம் அளித்துள்ளதாகத் துறையூர்க் கல்வெட்டொன்று செப்புகின்றது. இவர்கள் இராசேந்திரனது காலத்தில் மறைக்கல்லூரிகளில் பேராசிரியராகவும் பணி புரிந்தனர்.

இராசராச சோழனது காலத்திலும், இராசேந்திர சோழனது காலத்திலும் அந்தணர்கள் வடநாட்டினின்றும் அழைத்து வரப் பெற்றனர் என்பது நினைவிற் கொள்ளத் தக்கதாகும். நம் இராசேந்திரன் சருவசிவ பண்டிதர்க்கும் அவருடைய சீடர்க்கும் ஆசார்ய போகம் அளித்ததனை முன் பகுதியில் கண்டுள்ளோம். இதுகாறும் கூறியவற்றால் அந்தணர் சோழர் சமுதாயத்தில் உயர்ந்த நிலையைப் பெற்றுப் பல சலுகைகளைப் பெற்றனர் என்பது புலனாகிறது. அந்தணர் செய்த சில குற்றங்களுக்குக் குறைந்த தண்டனை வழங்கப்பட்டது. இது முறை யன்று என்பது மட்டும் ஈண்டுக் கூறத் தக்க தாகும். பார்ப்பனக் கொலை புரிவோர் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர்.

பிராமணர்களுக்குப் பல சலுகைகளும், உயரிய நிலையும் அளித்தமையைக் கண்டு வியப்புற்ற தமிழ்நாட்டு வரலாற்று அறிஞர்,பண்டாரகர் திரு. என். சுப்பிரமணியன் அவர்கள் தமது 'தமிழ்நாட்டு வரலாறு' எனும் நூலின்கண் கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டுள்ளார்.

'எங்கிருந்தோ வந்த அதிகார மற்ற ஏழைகளான சிறுபான்மையோர் மன்னர்களால் சிறப்பான முறையில் நடத்தப்பட்டமை வியப்பிற் குரியதாக உள்ளது'

அமைச்சரும், உயர்தரத்து அதிகாரிகளும் பல நல்ல வசதிகளைப் பெற்று உயர்நிலையி லிருந்தனர். ஆனால், இவர்கள் நேர்மை தவறாது பணி புரிந்தனர் என்பது உய்த் துணரப்படுகின்றது. இவர்கட்கென்று தனி வீதிகள் இருந்தன. இவர்கள் நாட்டுப் பற்றுடன் பணியாற்றித் தேவையான சமயத்தில் உயிரையும் பணயம் வைத்துப் பணிபுரிந்தனர். இவரிடை.யே பல கோத்திரப் பிரிவுகள் இருந்தன வென்பதனைக் கரந்தைச் செப்பேட்டா லறியலாம்.

**வணிகர்**

இவர்கள் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு முதுகெலும்பு போன்றவராவர். இவர்களுள் பல பிரிவினர் இருந்த

ணர். உள் நாட்டில் வாணிகம் புரிவோர், வெளி நாட்டில் வாணிகம் புரிவோர் என இவர்கள் இருபெரும்பிரிவினராகப் பிரிக்கப்பட்டனர். நகரத்தார், வலஞ்சியர், நானுதேசியத் திசையாயிரத்து ஐந்நூற்றுவர், மணிக்கிராமத்தார் போன்ற பல வணிகக் குழுக்களும் வாணிகம் செய்தமை விளங்கும். கடல் கடந்து வாணிகம் புரிவோர் தங்கள் பாதுகாப்பிற்காகப் படை வீரர்களைத் தம்முடன் கொண்டு சென்றனர். இவர்கள் மலாயா, சீனம், சாவா, சுமத்திரா, அராபியா, காம்போசம் ஆகிய நாடுகளுடன் கடல் வாணிகம் புரிந்து, சோணாட்டின் நிதி நிலையைப் பெருக்கினர். இவர்கள் தனித் தெருக்களில் வசித்தனர்.

வணிகர்கள் மன்னரால் பெரிதும் மதிக்கப்பட்டனர். சில வணிகர் மன்னனுக்கு இணையாக வைத்தும் மதிக்கப் பெற்றனர். மன்னனும் இவர்கட்குத் தேவையான வசதிகளைப் புரிந்து வந்தான். பெருவழிகள் பல அமைக்கப்பட்டன; வெளிநாட்டு வாணிகத்தில் இடையூறு நிகழ்ந்த போழ்து, மன்னன் தலையிட்டு நிலைமையைச் சீர் செய்து பேருதவி புரிந்தான். இராசேந்திரன் ஸ்ரீவிசய நாட்டின்மீது படையெடுத்து வணிகர் துயர் துடைத்ததனை எடுத்துக்காட்டாக ஈண்டுக் குறிப்பது பொருத்தமுடையதாகும்.

தங்க நாணயங்களும் செப்பு நாணயங்களும் அக்காலத்தில் புழக்கத்தி லிருந்ததை இராசேந்திரனின் காசுகளா லறியலாம். செங்கற்பட்டு மாவட்டத்தின்கண் உள்ள நட்டம், திருமுக்கூடல் ஆகிய ஊர்களிலும் தென் ஆர்க்காடு மாவட்டத்தின்கண் உள்ள எண்ணாயிரம், வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள செங்குன்றம் ஆகிய ஊர்களிலுள்ள கல்வெட்டுகளாலும், திருவொற்றியூர்க் கல்வெட்டாலும் பண்டமாற்று முறையும் பின்பற்றப் பட்டதாகத் தெரிகிறது. பண்டமாற்று வாணிகத்தில் நெல், அளவு கோலாகப் பயன்பட்டது.நெல்லின் விலை இடத்திற்கிடம் வேறுபட்டிருந்தது.

வணிகர்கள் பெருஞ்செல்வர்களாக விளங்கியமையின் திருக்கோயில்கட்கும், பொதுக் காரியங்களுக்கும் தானஞ் செய்தனர். இதனை இராசேந்திரனது ஆளும் ஆட்சி யாண்டாகக் குறிக்கப் பெற்றுள்ள திருநாமநல்லூர்க் கல்வெட்டா லறியலாகும்.

**உழவர்**

பண்டைக் காலத்தில் உழவுத் தொழில் தலையாய தொழிலாகக் கருதப்பட்டது. 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரா'தலின், உழவர் நாட்டின் அச்சாணி போன்றவர்களா

வர். கிராமத்தில் விவசாயம் புரிவோர் வேலை யில்லாத காலத்துக் கைத் தொழில்களையும் துணைத் தொழிலாகக் கொண்டனர்.

குடிமக்கள் அரசிறை எனப்படும் நிலவரியும் நீர்க்கூலி எனப் படும் நீர்ப்பாசன வரியும் செலுத்தினர். மன்னனும் நீர்ப் பாச னத்திற்காகப் பல ஏரிகளையும், கிணறுகளையும், வாய்க்கால்களை யும் வெட்டுவித்தான். நம் இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் சோழ கங்கம் ஏரி, இராசேந்திரன் வாய்க்கால் போன்றன பல வெட்டப்பட்டமை ஈண்டு நினைவிற் கொள்ளத் தக்க தாகும்.

நிலம் அளந்த கோல் ‘உலகளந்த கோல்’ எனப்பட்டது. இது பதினாறு சாண் அளவுடையது. எனவே, நிலங்கள் முறையாக அளக்கப்பட்டன வென்பது புலனாகும். எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் ஆகிய அளவைகள் அக்கால வழக்கிலிருந் தன. ஆடவல்லான், இராசகேசரி போன்ற மரக்கால்களால் நெல் அளக்கப்பட்டது.

**கைத்தொழில்**

சிறுமுதல் கொண்டு வீட்டிலேயே செய்யும் தொழில் கைத் தொழி லாகும். கயிறு திரித்தல், கூடை முடைதல், பாய் முடைதல், குழந்தைகட்கு விளையாட்டுப் பொருள் செய்தல், தோலுறை செய்தல் போன்ற கைத்தொழில்கள் மக்களால் பெரி தும் பின்பற்றப்பட்டன. மண்பாண்டம் செய்தல், குடிசைத் தொழில்களுள் தலையாய தாகும். ஏழை மக்கள் மண்பாண்டங் களைப் பயன்படுத்தியதால் பெயரளவில் இவை உற்பத்தி செய் யப்பட்டன.

**நெய்தல்**

மக்கட்குத் தேவையான துணிகளை நெய்தல் கைக்கோளர் கடமை யாகும். பட்டிலும், மயிரிலும், பருத்தியிலும் அக்கால ஆடைகள் நெய்யப்பட்டன. உள்ளநாட்டுத் தேவைக்கே யன்றி வெளிநாட்டு ஏற்றுமதிக்கும் நேர்த்தியான ஆடைகள் நெய்யப் பட்டன.

**பொற்கொல்லர்**

சோழர் காலத்தில் மக்கள் பல அணிகலன்களை அணிந் திருந்தனர். இவை பொன், வெள்ளி, முத்து, விலை யுயர்ந்த கற் கள் போன்றவற்றால் நேர்த்தியான முறையில் செய்யப்பட்டன. பொற்கொல்லர் நுண்ணிய வேலைத் திறனை இராசராசனின்

பெருவுடையார் கோயில் கல்வெட்டா லறியலாம். பொற்கொல்ல ரால் செய்யப்பட்ட பல விதமான அணிகலன்களை 'நாட்டுச் செய்திகளும் வழக்குகளும்' எனும் பகுதியில் காணலாம்.

*மற்ற வினைஞர்கள்*

பொற்கொல்லரே யன்றி, அக்காலத்தில் கருமான், தச்சன், சக்கிலியன், அம்பட்டன், வண்ணான், வெட்டியான், ஏவலாளன் போன்ற பல தொழில்களை மேற்கொண்டோரும் வாழ்ந்திருந் தனர். இவர்கட்கு ஊர்ச் சபையினர் உரிமை நிலங்கள் அளித் தனர். மன்னன் இவர்கட்குத் தேவையான போழ்து நிலங்களும் தானஞ் செய்துள்ளான். கன்னலர் (Artisan)களுக்கு இராசேந் திரன் வீட்டு மனையும், இடுகாடும் அளித்தமை தஞ்சை மாவட் டம் கீழையூர் கிராமத்தில் உள்ள அருணசலேசுவரர் கோயில் கல்வெட்டா லறியலாம்.

சிற்பிகளும், ஓவியர்களும், கட்டட வினைஞர்களும், சோதி டர்களும், செப்பேடு வரைவோர்களும் மன்னனால் பெரிதும் ஆதரிக்கப் பெற்றனர். சோதிடர், படை புறப்படுங்கால் நாளும் கோளும் பார்த்துச் சொல்வர். இவர்கட்கு மன்னன் 'கணி முற் றூட்டு' வழங்கினான்.

*வீரர்கள்*

சோழர் காலத்தில் ஆண் மக்களுள் பெரும்பாலோர் படைக் கலப் பயிற்சி பெற்று, நாட்டுப்பற்றுக் கொண்டு நாடு காக்கும் பணியில் ஈடுபட்டனர். பெருவீரர்கள் மன்னனால் சிறப்பிக்கப் பெற்றனர். இவர்கள் தமது உயிரையும் பணயம் வைத்துப் போர் புரிந்தனர். அமைதிக் காலங்களில் வாணிகத்திலும், விவசாயத் திலும் இவர்கள் ஈடுபட்டனர். கல்வி அறிவு பெற்றவர் அரசியல் துறைகளில் பணி யாற்றினர்.

*உணவு*

மக்கள் பெரும்பாலும் அரிசி உணவே உண்டனர். கம்பு, கேழ்வரகு, சோளம், போன்ற தானியங்களும் உணவுப் பொரு ளாகப் பயன்பட்டிருக்கக் கூடும். காய், கனிகள், கீரைகள், முட்டை, பால், பால்பொருள்கள், இறைச்சி, கிழங்குகள், கொட்டைகள் ஆகியவையும் உணவாகக் கொள்ளப்பட்டன. அந்தணரும் வேறு சில பிரிவினரும் சைவ உணவு உண்டனர். மற்ற பிரிவினர் சைவ உணவும் அசைவ உணவும் கொண்டனர்.

**ஆடை அணிகலன்**

மக்கள் பெரும்பாலும் பருத்தி ஆடைகளை அணிந்தனர். வசதி படைத்தோர் பட்டாடை யணிந்தனர். சில காலங்களில் ஆட்டு மயிர், எலி மயிர், ஆகியவற்றாலான ஆடைகளையும் உடுத்தினர்.

தங்கம், வெள்ளி, ஆகியவற்றாலான மோதிரம், காப்பு, சங்கிலி, கடுக்கன் போன்ற அணிகலன்கள் ஆண், பெண், சிறுவர் போன்ற எல்லோராலும் அணியப்பட்டன. தாலி என்ற மங்கல அணியும் அக்கால வழக்கிலிருந்தது. அரதன வளையல், பவழக் கடகம், பதக்கம், மாணிக்கத் தாலி, பட்டிகை, மோதிரம், உளுத்து, சோகைச் சிடுக்கின் கூடு, பாசமாலை போன்ற மணி பதித்த அணிகலன்கள் பெருஞ்செல்வர்களால் அணியப்பட்டன.

திருமுடி, திருச்சரம், திரள் மணிவட்டம், தாலி மணி வட்டம், திருமகரம், கைக்கடகம் போன்ற பொன் அணிகலன்களும் பெண்களால் அணியப்பட்டன.

முத்தாலான முத்தின் சூடகம், முத்தின் சிடுக்குப் போன்றவைகளும் அக்காலச் செல்வ மகளிரால் அணியப்பட்டன. அணிகலன்களைப் பற்றிய விரிவான செய்தியினை 'அரசியற் செய்திகளும் வழக்குகளும்' என்னும் தலைப்பில் காண்க.

பெண்கள் மலரின் மீது விருப்பம் கொண்டு அதைத் தலையில் சூடினர் என்பது இலக்கியச் சான்றுகளால் புலனாகும்.

**பொழுது போக்கு**

வேட்டையாடுதல், கோழிச் சண்டை, ஏறு தழுவல், சதுரங்கம் ஆடல், மல்யுத்தம், சிலம்பம் ஆகியவற்றில் பெரிதும் ஈடுபாடு கொண்டு பொழுதை நன்முறையில் போக்கினர். இராசராச நாடகம்,[1] சாக்கைக் கூத்து[2] ஆகியவை நிகழ்த்தப் பெற்றன. மகளிர் கிளி வளர்ப்பதிலும் ஆடல் பாடல்களிலும் மனம் செலுத்தினர்.

இறந்தோரை அக்காலத்தில் சிலர் மண்ணில் புதைத்தனர்; சிலர் தீயிலிட்டெரித்தனர். இறந்த பின்பு சடங்குகள் செய்யப்பட்டன. எனவே, இவ்விரு பழக்கங்களும் அக்காலத்தில் இருந்தனை யறியலாம்.

[1] S. I. I. Vol. II-No. 67
[2] Ep. Rep. 8/28-29. Ep. Rep. 160/40-41

அக்கால மக்கள் வெற்றிலை போட்டுக்கொண்டனர். விழாக் காலங்களில் இறைவனுக்கு வெற்றிலை படைத்தனர் என்பதனைக் கல்வெட்டுச் செய்தியா லறியலாம். விருந்தினர்கட்கும் வெற்றிலை, பாக்கு அளிக்கப்பட்டன.

அக்காலத்தில் மக்கள் சோதிடத்தில் நம்பிக்கை கொண்டிருந்தனர். 'கனவு நனவாகும்' என்று நம்பினர். ஒரு காரியம் தொடங்கு முன்பும், மணை கோலும் போதும் நல்ல நேரத்தையும் நன்னாளையும் பார்த்துச் செய்தனர். காக்கை கரைதலும், பல்லி சொல்லலும் கேட்டுக் குறிப்பு உணர்ந்தனர். அவர்கள் பூதம், பேய் ஆகியவை உண்டென்று நம்பினர். தான் செய்த குற்றங்கட்குக் கழுவாயைச் செய்தனர்.

*மகளிர் நிலை*

அக்கால மகளிர்க்கு உரிய மதிப்பளிக்கப்பட்டது. பெண்கள் சிலர் கல்வி பயின்றனர்; திருமணம் செய்து கொண்ட கணவனுக்கு மதிப்பளித்தனர்; கீழ்ப்படிந்தனர்; உறுதுணையாயிருந்தனர். மனைவி வீட்டினைக் கவனித்து வந்தாள். பெண்கள் கற்புடன் வாழ்ந்தனர். அச்சம், மடம், நாணம், பயிர்ப்புப் போன்ற பண்பு நலன்கள் பெண்களிடையே நிலவிய போதிலும் சுதந்திரமும் காணப்பட்டது. பெருங்குடியில் பிறந்த பெண்கட்குச் சொத்துரிமையும்[1] சொத்தினை விற்கும் உரிமையும் இருந்தன.

பெண்களில் சிலர் கோயில்களில் தேவரடியார்களாகப் பணி புரிந்தனர். சில பெண்கள் அடிமை வேலையும் செய்து வந்தனர். பஞ்ச காலங்களில் பெண்கள் சிலர் தம்மை விற்று அடிமையாக்கிக் கொண்டு கோயிற் பணியி லீடுபட்டனர்.[2] அடிமைகளுள் பல பிரிவுகள் இருந்தன.

உடன்கட்டை யேறும் வழக்கம் சோழர் காலத்தில் அரிதாகக் காணப்பட்டது. பொதுவாக அரசகுலப் பெண்களே உடன்கட்டை யேறினர். பொது மக்கள் உடன்கட்டை யேறும் வழக்கம் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் காணப்பட்டது. உடன்கட்டை யேறுதல் பொது மக்களால் பெரிதும் மதிப்பளிக்

[1] Ep. Rep. 418/18, 419/18. Ep. Rep. 401/15; Ep. Rep. 39/25, S. I. I. III. No 210. S.I.I. XI. No. 20

[2] Ep. Rep. 296/1911 Ep. Rep. 80/12

கப்பட்டது. தானுகவே உடன் கட்டை யேறுதல் போற்றப்பட்டது. இராசேந்திர சோழனின் தேவியான வீரமாதேவி உடன் கட்டை யேறினுள்[1] என்பது குறிப்பிடத் தக்க தாகும்.

கணவனை யிழந்த கைம்பெண்கள் மலர், குங்குமம், தாலி ஆகியவற்றை அணிந்துகொள்ளாமல் கைம்மை நோன்பினை மேற்கொண்டனர்; மொட்டை யடித்துக் கொண்டனர். கணவனை யிழந்த கைம்பெண் ஒருத்தி, தான் உயிர் வாழ்ந்தால் தன் சக்களத்தியருக்கு அடிமை வேலை செய்ய வேண்டியிருக்குமாதலால், தானே விருப்பப்பட்டு உடன்கட்டை யேறுவதாகவும், தன்னை ஊரார் தடுத்தல் கூடாதென்றும், எனவே, சுற்றியுள்ளோர் தன்னைக் கயிற்றுல் கட்டித் தீயில் தள்ளிவிடவேண்டுமென்றும் உடன்கட்டை யேறிய ஒருத்தி கேட்டுக் கொண்டதாகக் கல்வெட்டுச் செய்தி[2] யொன்று கூறுகிறது. பெண்கள் உடன்கட்டை யேற வேண்டுமென்ற கட்டாய மில்லை; விரும்பிய பெண்கள் உடன்கட்டையேறத் தடையேது மில்லை யென்பது அறியத் தக்கது.

பெண்கள் பலர் மன்னனது அரண்மனையில் பணியாற்றினர். அரண்மனை நீராட்டு அறையிலும், மடைப் பள்ளியிலும் (சமையலறை) அவர்கள் பணி புரிந்தனர். இவ்விதம் அரண்மனை ஊழியத்தி லீடுபட்டிருந்த பெண்கள் பொதுவாகப் 'பெண்டாட்டிகள்'[3] என அழைக்கப் பெற்றதாகக் கல்வெட்டுச் சான்று பகர்கிறது. எடுத்துக்காட்டாக, முதலாம் இராசேந்திரனின் சமையல்காரி ஒருத்தி, 'திருவமுதிடும் பெண்டாட்டி'[4] எனும் பெயரால் குறிப்பிடப் பட்டுள்ளமை கல்வெட்டுச் செய்தியால் அறியலாம். ஆனுல், இக்காலத்திலோ, 'பெண்டாட்டி' எனும் சொல் மனைவியைக் குறிக்கின்றது. அக்காலத்தில் மனைவியைக் குறிக்க 'அகமுடையாள்,'[5] 'மணவாட்டி'[6] எனும் சொற்கள் பயன்படுத்தப் பட்டனவாகவும், மன்னனின் மனைவி 'அரசியார்' 'தேவியார்' எனும் பெயர்களால் குறிக்கப் பெற்றதாகவும் கல்வெட்டுச் சான்று பகர்கின்றது.

[1] Ins 260 of 1915
[2] Ep. Rep. 156/1906
[3] S. I. I. III No. 110
[4] T. A. S. I. P. 161
[5] S. I. I IV No. 616
[6] S I I IV No. 507, 512

அக்காலத்தில் திருமணம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. மன்னரும் செல்வரும் பல மனைவியரை மணந்து கொள்ளும் வழக்கம் இருந்தது. பொதுவாகக் குடி மக்கள் ஒருவருக்கு மேற்பட்ட மனைவியரை மணந்து கொள்ள வில்லை. ஒருவன், ஒருத்தி என்ற நியதி பெரும்பாலான முறையில் பின்பற்றப்பட்டது. இருப்பினும் ஆடவர் சிலர் ஒருவருக்கு மேற்பட்ட மனைவியரைக் கொண்டிருந்தனர் என்பது கல்வெட்டுச் சான்றுகளால் புலனாகின்றது. இவ்வழக்கம் நம் தமிழ் நாட்டில் பண்டைக் காலந் தொட்டுப் பின்பற்றப்பட்டு வந்த தென்பதனை,

'பின்முறை யாக்கிய பெரும்பொருள் வதுவைத்
தொன்முறை மனைவி எதிர்ப்பா டாயினும்'[1]

என்ற தொல்காப்பியரின் சூத்திரத்தா லறியலாம். ஒருவன்,ஒருத்தியுடன் கூடி வாழும் இல்லற வாழ்வே அக்காலத்தில் சான்றோரால் மதிக்கப்பட்டது என்பதில் ஐய மில்லை.

பெண்கள் சுதந்திரமாக வாழ்ந்தனர். அரசியரும், பெண்களும் இறையன்பு மிக்கவர்களாக வாழ்ந்தனர். செம்பியன் மாதேவியார், குந்தவைப் பிராட்டியார் போன்ற அரசிகள் அறக் கட்டளைகள் புரிந்தனர்.

### சிறுசேமிப்பு

தற்காலத்தைப் போல் சோழர் காலத்திலும் சிறுசேமிப்புச் (Small Savings) செய்யும் வழக்கமிருந்தது. முதலாம் இராசராசன் காலத்தில் மகளிரும் குழந்தைகளும் சிறு சேமிப்புச் செய்ததாகக் கல்வெட்டுணர்த்துகின்றது.[2] இதற்கு மண் உண்டியல் பயன்படுத்தப்பட்டது. (உண்டியல்-கலயம்)

### வலங்கை இடங்கைப் பிரிவுகள்

சோழர் காலத்தில் குலப் பாகுபாடுகள் நிலவிய போதிலும் அனைவரும் அமைதியுடனும் ஒற்றுமை யுடனும், மதக் காழ்ப்பு இன்றியும் வாழ்ந்தனர். அக்காலை மேல் வகுப்பினர், கீழ் வகுப்பினர் என்ற பிரிவுகளும் இருந்தன என்பதில் ஐய மில்லை. சோழர் காலக் கல்வெட்டுகளைக் கொண்டு வலங்கை இடங்கை என இரு குலப் பிரிவுகள் அக்காலத்தில் இருந்தனவாக அறிகிறோம்.

[1] தொல்காப்பியம், பொருள், கற்பு, சூத்திரம்-31
[2] S. I. I. III. No. 212

வலங்கைப் பிரிவில் தொண்ணூற்றெட்டுக் குலங்களும் இடங்கைப் பிரிவில் தொண்ணூற்றெட்டுக் குலங்களும் இருந்தனவாக 'வலங்கை-இடங்கைப் புராணம்' என்னும் சுவடியால் அறிய முடிகின்றது. இக்குலங்களுள் பெரும்பான்மையானவை கலப்புக் குலங்களாகும். இச்செய்தியால், சோழர் காலத்தில் வலங்கை இடங்கைக் குலத்தினர் வாழ்ந்து வந்தனர் என்பது உறுதி ஆகிறது.

வலங்கையினர் வீரர்களாகத் திகழ்ந்து நாட்டைக் காக்கும் பணியில் ஈடுபட்டிருந்தனர் என்பதனை 'வலங்கைப் பழம் படைகளிலார்', 'பெருந்தனத்து வலங்கைப் படைகள்', 'அழகிய சோழத் தெறிந்த வலங்கை வேலைக்காரப் படைகள்' எனும் பெயருடைய படைகள் சோழ மன்னரிடம் இருந்தனவாகக் கல்வெட்டுச் செய்திகள்[1] உணர்த்துவதா லறியலாம்.

இடங்கையினர் பெரும்பாலும் வாணிகர்களாகவும் தொழிலாளர்களாகவும் வாழ்ந்து வந்திருக்க வேண்டு மென்பதனை ஊகிக்க இட முண்டு. இவர்களில் சிலர் படைகளிலும் பணியாற்றி யிருத்தல் கூடும். இவர்களைப்பற்றி நாம் தெளிவாக அறிந்து கொள்ளத் தக்க ஆதாரங்கள் கிடைக்க வில்லை.

வலங்கையினர், இடங்கையினர் ஆகிய இருவரிடையே சில சமயங்களில் பூசல்கள் நிகழ்ந்து வந்தன வென்பதனைக் கல்வெட்டுச் செய்தியா லறியலாம்.[2]

சில சமயங்களில் இவர்கள் தங்கள் பூசல்களை மறந்து, தமக்குள் ஒன்றுபட்டுப் பிராமணர்களையும் வேளாளர்களையும் எதிர்த்துப் போராடினர் என்பது புலனாகிறது. ஆடுதுறை வட்டத்தில் (தஞ்சை மாவட்டம்) காணியாட்சி கொண்டாடிய பார்ப்பனர், வேளாளர்க் கெதிராக வலங்கை இடக்கைப் பிரிவினர் தமக்குள் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டன ரென்ற செய்தியால்[3] இதனை நாமறியலாம்.

வலங்கை இடங்கைப் பிரிவினரைப் போன்று 'இரதகாரர்' என்ற ஒரு குலத்தினரும் அக்காலத்தில் வாழ்ந்து வந்தனர். இவர்கள் 'அனுலோமர்கள்' எனும் பெயரால் கல்வெட்டில் குறிக்கப் பெறுகின்றனர். உயர்ந்த குலத்தைச் சார்ந்த தந்தைக்கும் தாழ்ந்த குலத்தைச் சார்ந்த தாய்க்கும் பிறந்த குழந்தைகள் அனுலோமர் என அழைக்கப் பெறுவர்.

[1] S. I. I. II–Preface
[2] Ep. Rep. 31/37
[3] Ep. Rep. 34/13

### பறையர்

இக்குலத்தினர் ஏனைய குலத்தினரைப் போன்று முழுச் சொத்துரிமை பெற்று அக்காலத்தில் வாழ்ந்து வந்தனர். இவர்கள் தனித் தனிச் சேரிகளில் வாழ்ந்து வந்தனர். இவர்களுக்கென்று இடுகாடு[1] (சுடுகாடு) தனியாக ஒதுக்கப் பட்டிருந்தது.

சோழர் காலத்தில் பறையர்கள் தீண்டத் தகாதவர் என்றோ, இழி குலத்தவர் என்றோ, கருதப்பெற வில்லை. 'புல்லு பறிக்கிற பறையனும்'[2], 'ஆவுரித்துத் தின்னும் புலையனும்' தாழ்ந்தவர்களாகக் கருதப் பெற்றனர். பறையர்களுள் ஊர்ப் பறையர் என்ற ஒரு பிரிவு அக்காலத்தில் இருந்தது. அவர்கள் திருக்கோயில்கட்குத் தானங்கள் பல அளித்தனர் என்ற செய்தி, கல்வெட்டுகளால் தெரிய வருகின்றது.

முதலாம் இராச ராசன் காலத்தில், ஊர்ப் பறையன் மண்டை சோமநாதன் ஏழிசை மோகப் படைச்சன் என்பான் திருக்கோயிலில் சத்தி விளக்கு ஒன்று ஏற்றத் தானம் அளித்துள்ளதாலும்,[3] பறையடியான் என்பான் திருக்கழுக்குன்றம் கோயிலில் விளக்கொன்று எரிக்கத் தானம் செய்துள்ளதாலும்[4] அறியலாம். இதனைப் போன்று இவர்கள் திருக்கோயில்கட்குத் தானங்கள் அளித்த செய்திகள் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன.[5] எனவே, இவர்கள் இறைபற்றுக் கொண்டு இறைவர்க்குத் தானஞ் செய்துள்ளன ரென்பது புலனாகின்றது.

சோழர் காலத்தில் பல்வேறுபட்ட குலங்களும், இனங்களும் ஒன்றோடொன்று கலந்ததனால் எண்ணற்ற குலங்கள் தோன்றலாயின.

### சமயம்

சமயம் மக்களின் வாழ்விற்கு இன்றியமையாத தென்று பண்டு மக்கள் கருதினர். சமயம் மக்களின் ஆன்மீக வாழ்வினைச் செம்மைப் படுத்தியது. இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் சைவ சமயம் தழைத் தோங்கியது. அரசாங்க ஆதரவினைப் பெற்ற சைவம் பெருமளவில் பரவியது. நாடெங்கும் சிவாலயங்

[1] S. I. I. VII. No. 63. S. I. I. IV 529
[2] S. I. I. VII. 18
[3] S. I. I. No. 794
[4] S. I. I VII. Nos. 31, 32 & 33
[5] S. I. I. 203/40-41

கள் கட்டப்பெற்றன. வழிபாடுகள் செவ்வனே முறையாக நடத்தப் பெற்றன. சைவ சமயம் தழைத் தோங்கிய அதே சமயத்தில் வைணவமும் வலிமை பெற்றது. சத்தான கருத்துடைய புத்த சமயமும், கொல்லாமையின் எல்லையினைக் கண்ட சமண சமயமும் தடையின்றி வளர்ந்தன. நாட்டு மக்கள் அனை வருக்கும் வழிபாட்டுரிமை வழங்கப் பெற்றது. இராசேந்திரன் சமயப் பொறையினைப் பின்பற்றியதால் புறச் சமயங்களும் வளர்ச்சி பெறும் நல்வாய்ப்பினைப் பெற்றன. சைவத்தின் அறு வகைப் பிரிவினுள் ஒன்றான காளாமுகச் சைவமும் வேர்விட்டுத் துளிர்த்தது. சமயமும் வாழ்க்கையுடன் பிரித்தறிய முடியாத அளவில் பின்னிப் பிணைந்தும், இணைந்தும், குழைந்தும் காணப் பட்டது.

*திருக்கோயில்*

இராசேந்திரனது காலத்தில் கோயில்கள் பல கட்டப்பெற் றன. 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' என்ற முதுமொழியி னைப் பொன்னெனப் போற்றிய நம் முன்னோர் திருக்கோயில் களுக்குச் சென்று, வழிபட்டு மன அமைதியும் மகிழ்ச்சியும் பெற்றனர். அக்காலக் கோயில் ஒரு சமுதாய மன்றமாகக் காணப் பட்டது. கலை மன்றங்கள் பலவும் இணையும் இடமாகவும் திருக் கோயில் விளங்கிற்று.

கோயிலில் தளிச்சேரிப் பெண்டுகள் என்போர் நடனக் கலையை வளர்த்து வந்தனர். மன்னன் இவர்கட்கு வீடும் நில மும் அளித்து, ஆதரித்து வந்தான். கோயிலில் திருப்பணிகளும் நாள் வழிபாடுகளும் செவ்வனே நிகழ்வுறும் பொருட்டு வேதியர் கள், ஓதுவார்கள், வாத்தியக்காரர்கள், திருமெழுகிடுவார், மெய்க்காவலர் ஆகியோர் நியமிக்கப்பெற்றனர். இவர்களைக் கண்காணிக்க 'ஸ்ரீகாரியம் பார்ப்பார்' என்னும் அதிகாரி நியமிக் கப்பட்டார். இராசேந்திரனது காலத்தில் 'தேவார நாயகம்' என் பார் நியமிக்கப்பட்டு ஓதுவார்கள் கண்காணிக்கப்பட்டனர்.

கோயிலில் இசை, நடனம், நாடகம் ஆகியவை நிகழ்த்தப் பெற்றன; மேலும், வேதம், கல்வி, ஆகியவை பயிற்றுவிக்கப் படும் இடமாகவும் கோவில் விளங்கியது. இவ்விதமாகக் கோயில் மக்கள் வாழ்வில் பெரும்பங்கு வகித்தது; மக்கள் வாழ்வின் நடு நாயகமாகவும் விளங்கியது.

திருக்கோயில்களுக்கு மன்னரும், அரசியாரும், வணிகரும், பிறரும் அறக்கொடைகள் அளித்தனர். இதனால், கோயில் என்

றென்றும் தனது பணியினைத் தடையேது மின்றிச் செய்து வந்தது; சோழர் காலச் சமுதாயத்தின் உயிர் நாடியாய்த் திகழ்ந்தது.

அக்காலத்தில் கோயில் பல்கலைக் கழகமாகவே திகழ்ந்தது; இங்கு மார்கழித் திங்கள் தோறும் திருவெம்பாவை ஓதப்பட்டது.[1] இதனைப் போன்று திருப்பள்ளி யெழுச்சி, திருவாய்மொழி போன்ற வைணவத் திருப்பாடல்களும் முறையாகப் பாராயணம் செய்யப்பட்டன.[2] தேவாரத் திருப்பதிகங்கள் தொடர்ந்து ஓதப் படுதல் வேண்டு மென்பதற்காக மன்னன் பல நிவந்தங்கள் அளித்திருந்தான்.[3] தேவாரத் திருப்பதிகங்களை ஓதும் ஓதுவார்கள், 'திருப்பாட்டு ஓதும் மகேசுரர்'[4] எனச் சிறப்பிக்கப் பெற்றனர். சில திருக்கோயில்களில் ஓதுவார்களும் பிராமணர்களும் சேர்ந்து தேவாரம் ஓதினர் என்பதனைக் கல்வெட்டுச் செய்தி உணர்த்துகின்றது.[5]

தேவரடியார்களும், நட்டுவனுர்களும் மன்னனால் தானங்கள் வழங்கப்பெற்றனர்.[6] 'பாணர்கள்' என்போர் திருக்கோயில்களில் பாடி. இசை மணம் கமழச் செய்தனர்.[7] திருவிழாக் காலங்களில், சில கோயில்களில் தேவரடியார்கள் நாடகங்கள் நடத்தினர்.[8] சில கோயில்களில் திருவாதிரையின்போது திருவெம்பாவை ஓதப்பட்டு வந்தது.[9]

கோயில்களிலும் மடங்களிலும் கூத்துகள் நிகழ்ந்தன;[10] அவற்றுக்கான அரங்கங்கள் (நாடக சாலைகள்) ஆங்கு அமைக்கப் பெற்றிருந்தன.[11] இக்கூத்துகள் சிலவற்றுள் ஆணும் பெண்ணும் இணைந்து கூத்து நடித்தனர். இவர்கள் கூத்தாடிப் பிழைத்தலின் கூத்தப் பெருமக்கள் என அழைக்கப் பெற்றனர்.[12] தில்லை நடராசனும் கூத்தாடிக் கொண்டிருத்தலின், 'கூத்தபிரான்.'

1 Ep. Rep. 421/12 Ep. Rep. 285/27
2 Ep. Rep. S I. I. IV. 508
3 Ep. Rep. 104/28-29
4 Ep. Rep. S. I. I. VII 109
5 Ep. Rep. 99/28-29
6 Ep. Rep. 361/29
7 S. I. I. V. No. 705
8 Ep. Rep 57/16; Ep. Rep. 446/29-30
9 Ep. Rep. 128/12; Ep. Rep. 228/12
10 Ep. Rep. 94/31-32
11 Ep. Rep. 252/24; S. I. I. III. No. 124
12 Ep. Rep. 55/30–32

'கூத்தரசன்', 'தில்லைக் கூத்தன்' என அழைக்கப் பெறுதலை ஈண்டு நாம் நினைவிற் கொள்ளலாம். அக்காலத்து மக்கள் கூத்துக் கண்டு மகிழ்வதில் பேரார்வம் கொண்டிருந்தனர்.

சோழர் காலத்தில் தெருக்கூத்து, சாக்கைக்கூத்து, சாந்திக் கூத்து,[1] ஆரியக் கூத்து,[2] தமிழக்கூத்து[3] போன்ற கூத்தின் வகைகள் பல நிகழ்த்தப்பெற்றன. இவற்றுள் 'தெருக்கூத்துத்' தற்காலத்திலும் கிராமங்களில் நிகழ்த்தப் பெறுகின்றன. இக்கூத்துகள் நிகழுங்கால் பக்க வாத்தியங்களும் இசைக்கப்பெறும்.

இவைபோன்ற கூத்துகளை நிகழ்த்தி, இசையையும் வளர்த்து, நாட்டின் கலை வளர்ச்சிக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்ட தேவரடியார்கள் சமுதாயத்தில் உயர்ந்த இடத்தைப் பெற்றிருந்தனர். மன்னரும், கோயில் நிருவாகத்தினரும் அவர்களது பணி குறித்துப் பாராட்டி ஊக்குவித்தனர். இறைபற்றும், கலைப்பற்றும் கொண்டிருந்த இவர்கள் செல்வச் சீமாட்டிகளாகவும் வாழ்ந்தனர்.

### மடங்கள்

மடங்களும் சோழர் காலத்து மக்களுக்கு நற்பணி புரிந்து வந்தன. பெரும்பற்றப்புலியூர், கீழையூர், திருவானைக்கா, திருவிடை மருதூர், திருவாவடுதுறை போன்ற பல மடங்கள் சோணாட்டில் ஆங்காங்கு நிறுவப் பெற்றிருந்தன. மன்னரும் இவற்றின் வளர்ச்சிக்குப் பேருதவி புரிந்தனர்.

இம்மடங்கள் சமயப் பணியுடன், மக்களுக்கு உணவிடுதல், வழிப்போக்கருக்கு உப்பு, விளக்கெண்ணெய், தண்ணீர் ஆகியன வழங்குவதுடன் மருத்துவப் பணியும், கல்விப் பணியும் ஆற்றி வந்தன. மேலை நாட்டுக் கிறித்தவ மடங்களைப் போன்று இவைகள் சமயப் பணியை நன்காற்றின.

### கடவுள்

தமிழகத்தின்கண் 'மும்மூர்த்திகள்' என அழைக்கப்பெறும் சிவன், திருமால், பிரமன் ஆகியோர் வணங்கப் பெற்றனர். இருப்பினும் சிவன் முழுமுதற் கடவுளாகவும் ஆக்கல், அளித்தல், (காத்தல்), அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் மேற்கொண்டிருப்பவனாகவும் கருதப்பட்டான்.

[1] Ep. Rep. 254/14
[2] Ep. Rep. 104/25
[3] Ep. Rep. 9J/31-32

சிவனே நடம் புரியும் இடம் தில்லை யாகும். தில்லைக் கூத்தன் சோழமன்னரின் குல தெய்வ மாகும். நடராசப் பெருமான் ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து வகைப்பட்ட தொழில்களை ஆற்றி வருவதாகக் கருதப்படுகிறது. சோழப் பெருமன்னர்கள் ஏராளமான நடராசர் படிமங்களைச் சமைத்தனர்; வழிபட்டனர். இவற்றுள் திருவாலங்காட்டு நடராசரும், தில்லை நடராசரும் குறிப்பிடத் தக்கவராவர். இராசேந்திரன் தனது கங்கை வெற்றியின் நினைவாகக் கூத்தபிரானது முடியில் கங்கையைச் சூட்டினான் என்பர் அறிஞர்.

முருகன், விநாயகர், காளி, பிடாரி, துருக்கை, சப்த மாதர்கள், கலைமகள், திருமகள், புத்தர், அருகன் ஆகிய கடவுளர்களும் சோணாட்டினரால் வணங்கப்பட்டனர். சூரியனுக்குத் தனிக் கோயில்கள் எழுப்பப்பட்டு மக்களால் வணங்கப்பட்டன. சோணாடெங்கும் நவக்கிரக வழிபாடு மேற்கொள்ளப்பட்டது. பைரவன், பைரவியும் வணங்கப்பட்டனர்.

சோணாட்டின்கண் சைவ சமயம் தழைத் தோங்கியமையின் சைவ நாயன்மார் நால்வரின் படிமங்கள் வைக்கப்பட்டு மரியாதை செய்யப்பட்டன.

***விழாக்கள்***

தமிழகத்தின்கண் விழாவிற்குக் குறைவே யில்லை. மாதம் தவறினாலும் விழா தவறுவ தில்லை. சோணாட்டின்கண் திருக்கோயில்கள் அதிக அளவில் கட்டப்பட்டிருத்தலின் விழாக்களும் பல்கிப் பெருகின.

சோழப் பெருமன்னர்கள் பிறந்த நட்சத்திரங்களில் சிறப்பான விழாக்கள் எடுக்கப்பட்டன. முதலாம் இராசராசன் பிறந்த சதய நாளில் திங்கள் தோறும் விழா நடைபெற நிவந்தங்கள் பல விடப்பட்டன. எனவேதான், 'சதய நாள் விழா உதியர் மண்டலந் தன்னில் வைத்தவன்'[1] என்று கலிங்கத்துப் பரணி புகழ்கின்றது. முதல் இராசேந்திரன் பிறந்த திருவாதிரை நாளிலும் சிறப்பான விழாக்கள் கொண்டாடப்பட்டன.

சிவன் கோயில்களில் சிவராத்திரி, சித்திரை விஷு, தைப்பூசம், உத்தராயணம், ஐப்பசி விஷு, சங்கராந்தி, கார்த்திகைத் திருநாள் ஆகிய நாள்களில்[2] திருவிழாச் சிறப்பாக நடை

[1] *கலிங்கத்துப் பரணி-8. தா. 24*

[2] S. I. I. V. No. 578

பெற்றது. மாசி மகம் சோணாட்டில் கொண்டாடப்பட்ட பெரு விழா வாகும். முதலாம் பராந்தகன் காலத்தில் திருக்காளத்தியில் இந்திரவிழாச் சிறப்பான முறையில் எடுக்கப்பட்டது.[1] சிதம்பரத்தில் நடைபெறும் ஆனித் திருமஞ்சனவிழா நாளில் சட்டிச் சோறு ஆயிரம் அளிக்க ஏற்பாடுகள் செய்ய, முதலாம் இராசேந்திரன் தான மளித்துள்ளதால்,[2] இவ்விழாவின் சிறப்பை நாமறியலாம். தில்லையில் நடராசர்க்கு விழாக்கள் சிறப்பாக நிகழ்ந்தன.

வைணவக் கோயில்களில் உரியடி விழாவும், ஆடித் திருப்பூர நோன்பும், சங்கராந்தியும் எடுக்கப்பட்டன.[3]

மன்னரின் போர் வெற்றி குறித்தும், பட்டம் சூட்டப் பெறுவது குறித்தும் ஆடம்பரமான விழாக்கள் எடுக்கப்பட்டன.

### கல்வி

சோழர் காலத்தில் நாடெங்கிலும் கல்விச் சாலைகள் நிறுவப்பட்டு, முறையான கல்வி பயிற்றுவிக்கப்பட்டது. தமிழ்மொழியேயன்றி, வடமொழியும், மறைநூலும், வியாகரணமும், சாத்திரங்களும், மீமாம்சையும் கல்லூரியில் பயிற்றுவிக்கப்பட்டன.

இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் மறைநூல் விடுதிக் கல்லூரிகள் திரிபுவனி, எண்ணாயிரம், திருவொற்றியூர், வேப்பத்தூர், ஆகிய இடங்களில் நற்பணியாற்றின. மாணவர்கள் தகுதி அடிப்படையிலேயே சேர்த்துக் கொள்ளப்பட்டனர். இவர்கட்கு உணவும், உறையுளும் இலவசமாகக் கிடைத்தன. இவர்கள் பல கலைகளிலும் தேர்ச்சி பெற்றனர். இவற்றுக்கான செலவும், பேராசிரியர்கட்கு ஊதியமும் வேந்தனளித்த நிலத்திலிருந்து வழங்கப் பெற்றன. சோணாட்டின் கல்வி நிலை, உன்னதமான நிலையில் இருந்த தென்பதை இராசேந்திரனது கல்வெட்டுச் சான்றால் அறியலாம். இராசேந்திரனது காலத்தில் மக்களிடையே வடமொழி யார்வம் பெருகியது. கல்வெட்டுகள் எழுதப்படும் இடமாகவும் கோயில் அமைந்திருந்தது. 'கல்வி'பற்றிய விரிவான செய்திகளை 'அரசியல்' பகுதியில் காண்க.

### நீதி

இராசேந்திரன் அறமுறை பிறழாது நாட்டை ஆண்டமையின் நீதி நிலைநாட்டப்பட்டது. குற்றம் புரிந்தோர் நீதி மன்றங்

[1] S. I. I. VII. No. 529
[2] S. I. I. IV. No. 223
[3] S. I. I. V. No. 277

களால் விசாரிக்கப்பட்டுத் தண்டனை யளிக்கப்பெற்றனர். எதிர் பாராத விதமாகவும், தற்செயலாகவும் விளைந்த குற்றங்களுக்குக் கடுமையான தண்டனைகள் விதிக்கப்படாமல், நந்தா விளக்கிடு தல் போன்ற எளிமையான தண்டனையே யளிக்கப்பட்டது. சில குற்றங்கள் புரிந்தோரை அவர்களது குற்றத்திற் கேற்ற முறையில் கழுதை மீதேற்றல், நாடு கடத்தல், தொழுவிடல், உரிமைப் பொருள்களைக் கவர்தல், கழுவாய் செய்து சேர்த்தல் போன்ற தண்டனைகள் அளிக்கப்பட்டு நிறைவேற்றப்பட்டன. ஊராட்சி மன்ற உறுப்பினரே நீதி விசாரணைகளையும் நடத்தினர். இவர்கள் சம்வத்சரவாரியர் என அழைக்கப்பெற்றனர். நீதித் துறையில் மன்னனது தீர்ப்பே இறுதியானது.

குற்றம் புரிந்தோரின் பெயர்கள் குற்றப் புத்தகத்தில் பதிவு செய்யப்பெறும். இவர்கள் ஊராட்சித் தேர்தலுக்குப் போட்டியிட அனுமதிக்கப்பட மாட்டார்கள்.

குடவோலை முறையில் தேர்ந்தெடுக்கப் பெற்ற ஊராட்சி உறுப்பினர், ஊர்நிருவாகத்தினைக் கவனிப்பர். இவர்கள் பல வாரியங்களாகப் பிரிந்து வெவ்வேறு துறையினைக் கவனிப்பர். சபையின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்படுவோர் சில குறிப் பிட்ட தகுதிகள் படைத்தவராய் இருத்தல் வேண்டு மென்பதும், எந்தக் காரிய நிறைவேற்றுக் கழகத்திலாவது உறுப்பினராக இருந்து கணக்குக்காட்டாதிருந்தோரும், எத்தகைய கையூட்டுப் (லஞ்சம்) பெற்றோரும் தகுதியற்றவராகக் கருதப்பட்டனர் என் பதும் மிகவும் குறிப்பிடத் தக்க அம்சங்களாகும். சோழப் பெரு மன்னர்கள் தம் குடிமக்களுக்கும் ஆட்சித் துறையில் பயிற்சி யளித் தனர் என்பதனால் தற்காலத்தில் உள்ள தல சுய ஆட்சிக்கு இது முன்னோடியாய் அமைந்தது எனலாம்.

சோழர் காலத்தில் நிலவரி, கண்ணாலக் காணம், நீர்க்கூலி, தரகு, ஓடக்கூலி, தறியிறை, இடைப்பாட்டம், உல்கு, நாடு காவல் போன்ற பல வரிகளை மக்கள் செலுத்தினர். நிலவரியினைத் தானியமாகவோ, காசாகவோ செலுத்த மக்கள் அனுமதிக்கப் பட்டனர். நிலவரி கொடாதார் நிலங்கள் ஊர்ச்சபையாரால் பறிமுதல் செய்யப்பட்டன.

***மருத்துவ சாலை, ஆதுல சாலை***

தமிழகத்தின்கண் பண்டைக் காலந்தொட்டே மருத்துவக் கலை சிறப்புப் பெற்றிருந்தது. ஆய கலைகள் அறுபத்து நான்கனுள்

மருத்துவக் கலையும் ஒன்றும். மனிதனது நல் வாழ்விற்கு மருத்துவம் இன்றியமையாதது என்பது யாவரு மறிந்த உண்மை.

தமிழ் நாட்டு இலக்கியங்களிலும் கல்வெட்டுகளிலும் மருத்துவர்களைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. மருத்துவர்[1], அறவோன்,[2] எனவும் 'மருத்தன்' எனவும் 'வைத்தியன்' எனவும் 'சல்லியைக் கிரியை செய்வான்'[3] எனவும் அழைக்கப் பெறுகின்றனர். நற்றிணை என்னும் நூல் மருத்துவனை 'அறவோன்' எனக் குறிப்பிடுவது ஈண்டுக் குறிப்பிடத் தக்க தாகும்.

சங்க காலத்திலேயே மருத்துவர்கள் பலர் சிறந்து விளங்கினர் என்பதனை 'மருத்துவர் தாமோதரனார்', 'மருத்துவர் நல்லச்சுதனார்' ஆகிய சான்றோர்கள் சங்க காலத்தில் வாழ்ந்ததால் அறிகிறோம்.

சோழர் காலத்தில் மருத்துவ மனைகள் இருந்ததாகக் கல்வெட்டுகளாலும் இலக்கியங்களாலும் அறியலாம். இம்மருத்துவ மனைகளில் இருவகையான மருத்துவர்கள் பணியாற்றினர். இவருள் கை நாடி பார்த்துப் பொதுப்பிணி நீக்கும் மருத்துவர் ஒரு சாரார் (**Physician**); மற்றவர் அறுவைச் சிகிச்சை நடத்தும் மருத்துவர் (Surgeon) ஆவர். இவர்களைச் 'சல்லியக் கிரியை பண்ணுவான் (Surgeon)' எனக் கல்வெட்டுகள் குறிக்கின்றன. இவர்கட்குப் பணி மகளிர் (Nurses) துணை புரிந்தனர்.

சோழர் காலக் கல்வெட்டுகள், 'சவர்ணன் அரையன் சந்திர சேகரன்', 'கோதண்டராம அசுவத்தாம பட்டன்', 'மங்களாதி ராசன் சீராளன்' போன்ற மருத்துவர்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. அக்காலத்தில் மருத்துவக் கல்லூரிகள்[4] நடைபெற்றனவாகவும் கல்வெட்டுச் சான்று பகர்கிறது.

இராசேந்திரனது ஆட்சிக் காலத்திலும் நாடெங்கும் மருத்துவ மனைகள் நிறுவப் பெற்றிருந்தன என்பதனைக் கல்வெட்டுச் சான்றுகளா லறியலாம்.[5]

இராசேந்திரனது மூன்று மாண்டுப் பண்டார வாடைக் கல்வெட்டொன்று, இவனது காலத்தில் பராந்தகன் குந்தவையால்

[1] *கலித்தொகை* 17, 20-21; *புறம்*-173-11
[2] *நற்றிணை-126*
[3] Ep. Ind. Vol. XXI
[4] 159 of 1925
[5] 248 of 1923

நிறுவப்பட்ட மருத்துவசாலை ஒன்று தஞ்சையில் இருந்ததாகக் குறிப்பிடுகின்றது. இம் மருத்துவ மனையின் நிருவாகத்திற்காக இராச நாராயணச் சதுர்வேதி மங்கலப் பெருங்குறிச் சபையினர் ஒன்பது மா நிலத்தினை எழுபது காசுகளுக்கு விற்று, இறையிலிட்டுத் தந்தனர். இம்மருத்துவமனையின்கண், 'சரவணன் அரையன் மதுராந்தகன், என்பான் மருத்துவனாகப் பணி புரிந்தான் என்ற செய்தியும் ஈண்டுக் குறிக்கப் பெற்றுள்ளது.[1]

கோயில் வருமானத்தின் ஒருபகுதி மருத்துவசாலை பராமரிப்பிற்காகச் செலவிடப்பட்ட தென்பது[2] கல்வெட்டா லறியப்படுகிறது.

பண்டார வாடையில் காணப்படும் இராசேந்திரன் காலத்திய (28 ஆம் ஆண்டுக்) கல்வெட்டொன்று, தஞ்சையில் சுந்தர சோழ விண்ணகர் ஆதுல சாலை (மருத்துவசாலை) மக்களின் பிணியைத் தீர்த்த தாகவும் சவர்ணன் அரையன் மதுராந்த கனுக்கு வைத்திய போகமாக நிலமளிக்கப் பட்டதாகவும் குறிக்கின்றது.[3]

திருவாமாத்தூரின்கண்ணுள்ள இராசேந்திரனின் பதினெட்டாமாண்டு, தொண்ணூற்று மூன்ரும் நாளின் கல்வெட்டொன்று அவ்வூரின் மருத்துவத் துறையார்க்கு நிலத்தான மளிக்கப்பட்ட செய்தியினைக் கூறுகின்றது.[4]

ஊர் மருத்துவர்களும் நிலத்தானம் பெற்றதாகக் கல்வெட்டுச் சான்றுகள் குறிப்பிடுவதனால் சோழர் காலத்தில் ஊர்கள்தோறும் மருத்துவர்கள் நற்பணி புரிந்து, மக்களின் பிணி யகற்றி நலமுடன் வாழ, வழி வகுத்தனர் என்பது புலனாகும்.

மன்னன், மருத்துவமனையின் பராமரிப்புக்கும் மருத்துவர்களுக்கும் பொருளுதவி யளித்து, மருத்துவக் கலையைப் பேணிப் புரந்தான். போரில் காயம் பட்ட வீரர்களும், பிணியாளர்களும் மருத்துவ உதவி பெற்றனர்.

சவரத் தொழிலை மேற்கொண்டிருந்த அம்பட்டர் மருத்துவத் தொழிலையும் தமது குலத் தொழிலாகக் கொண்டு மக்களுக்கு நற்

[1] The Historical Sketches of Ancient Deccan, Page-336
[2] 249 of 1923
[3] 18 of 1922

பணி புரிந்தனர். எனவே, பண்டைக்கால முதல் இன்று வரை இவர்கள் 'மருத்துவர்' என்றே அழைக்கப் பெறுகின்றனர். இவர்கள் கத்தியைக் கையாளுவதில் தேர்ச்சி மிகப் பெற்றிருந்த மையின் சிறு அறுவைச் சிகிச்சை செய்வதில் வல்லுநராயிருந் தனர்.

அம்பட்டரில் ஆண்கள் மட்டுமன்றிப் பெண்களும் மருத்து வத் துறையில் தேர்ச்சி பெற்றிருந்தனர். இவர்கள் பிள்ளைப் பேற் றுத் துறையில் சிறந்து விளங்கினர்; இன்றும் கிராமங்களில் இவர் கள் மருத்துவச்சியாக இருந்து பிள்ளைப் பேற்றினைக் கவனித்து வருகின்றனர். எனவேதான், பண்டாரகர் மா. இராச மாணிக்கர் அவர்களும் பிள்ளைப்பேற்றுத் துறையில் இவர்கள் ஈடுபட்டிருந் ததைத் தமது நூலில் குறித்துள்ளார்.[1] இவர்கள் பரம்பரையாக இத்தொழிலில் ஈடுபட்டிருந்தனர்.

அக்காலத்தில் பெரும்பான்மையாகப் பச்சிலை, மூலிகைகள், பூக்கள், மரப்பட்டைகள், வேர்கள், கொட்டைகள், கடைச் சரக்குகள் போன்றவை மருந்துக்குப் பயன்படுத்தப்பட்டன. இவைகளைப் பாதுகாப்பாக வைத்திருக்கத் தனியறையும் மருத் துவ மனையிலிருந்தது.

எனவே, அக்கால மக்களுக்கு மருத்துவ வசதிகள் அளிக்கப் பட்டன என்பது புலனாகும்.

இதுகாறும் கூறியவற்றால், இராசேந்திரனது காலத்தில் மக் கள் நிலை சங்க காலத்தைப் போன்று நன்னிலையிலிருந்த தென் பது உறுதி. பார்ப்பனர், வணிகர், அதிகாரிகள், அமைச்சர் ஆகியோர் உயர்நிலை பெற்றன ரென்பதும், வேளாண்மைத் தொழில் தலையாயதாகப் போற்றப்பட்ட போதிலும் மற்றப் பல் வகைத் தொழில்களும் முன்னேறின வென்பதும், வாணிகம், உழவு சிறந்திருந்தமையின் மக்கள் எல்லா வசதிகளும் பெற்று வாழ்ந்ததுடன் கலையார்வம் கொண்டிருந்தனர் என்பதும் புலனா கும். மன்னன் மக்களைக் காத்தோம்பினான். நாட்டில் முடியாட்சி நிலவிய போதிலும் ஊர்ச்சபைகள் உள்ளூர்ப் பெருமக்களா லேயே நிருவகிக்கப்பெற்று அரசாங்க அதிகாரிகளாலும், மன் னனாலும் மேற்பார்வை செய்யப்பட்டன வென்பதை யறியலாம். மக்களிடையே பொருளாதார அடிப்படையிலும், சமூக அடிப் படையிலும் ஏற்றத் தாழ்வு காணப்பட்டன என்பதும், தமிழ்

[1] தமிழகக் கலைகள், பக்கம்-121

மொழியுடன் வடமொழியும் மன்னனால் ஆதரிக்கப்பட்டதென்பதும், கோயில் சமுதாயத்தின் மன்றமாகப், பொழுது போக்கிற்கிடமாக, முக்கியமான இடத்தைப் பெற்றதோடு கோயிலைச் சுற்றியே சமுதாயம் சுழன்றதென்பதும் ஈண்டுக் குறிப்பிடத் தக்கதாகும். எனவேதான், நம் முன்னோர், 'கோயிலில்லாத ஊரில் குடியிருக்க வேண்டா' என்று மிகப் பொருத்தமாகக் கூறிப் போந்தனர்.

இராசேந்திரனது கரந்தைச் செப்பேடு இக்கோமானது ஆட்சிக் காலத்தில் மக்கள் நிலையினைக் கீழ்க்கண்டவாறு படம் பிடித்துக் காட்டுகிறது. '(மதுராந்தகன்) அரசன் பூமியை ஆளும் போது மக்கள் அறவழியில் கருத்துள்ளவர்களாகவும், தம் கடமைகளில் ஊன்றியவர்களாகவும், துன்பங் களைந்தவர்களாகவும், நிலைத்த செல்வம், விழா இவைகள் நிறைந்தவர்களாகவும், மிக்க மகிழ்ச்சி யுள்ளவர்களாகவும், உண்மையைப் பற்றுபவர்களாகவும், நல்வாழ்க்கை யுடையவர்களாகவும் இருந்தனர். காலத்தில் மழை பொழிந்தது. ஆறுகள் நன்னீரோடு பெருகின. எல்லாப் பக்கங்களிலும் நாடு (பூமி) பல்வேறு பயிர் வகைகளால் அழகு செய்யப் பெற்றிருந்தது.'

கரந்தைச் செப்பேடு செப்பும் மக்கள் வாழ்க்கை நிலையினைச் சான்றாகக் கொள்ளுதல் சாலப் பொருத்த முடைத்து. இத்துணைச் சிறப்புடைய சமுதாயம் உயர்ந்தோங்கி நன்னிலை பெற்றிருந்தது என்பது உறுதி. எனவே, இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் மக்கள் எல்லா நலமும் வளமும் பெற்றுக் குறைவின்றி வாழ்ந்தனர் என்பதும் சமுதாய நிலை மேம்பட்டிருந்தது என்பதும் போதரும்.

## 16. நாட்டுச் செய்திகளும், வழக்குகளும், பிறவும்

**கரந்தைச் செப்பேடு**

நம் சோழர் பெருமானது ஆட்சிக் காலத்தில் வெளியிடப் பெற்ற கரந்தைச் செப்பேடு வரலாற்று முக்கியத்துவம் பெற்ற ஒன்றாகும். தமிழகத்தின்கண் இதுவரை கிடைக்கப்பெற்ற செப் பேடுகளுள் இது அதிக வரிகளையும் அதிக தகடுகளையும் கொண்ட தாகும். ஐம்பது தகடுகளையும் இரண்டாயிரத்து ஐந்நூறு வரிகளை யும் கொண்ட இச்செப்பேட்டின் மூலம் நம் இராசேந்திரன் ஆயிரத்து எழுபத்து மூன்று பேருக்குக் கொடையளித்ததாக அறி கிறோம். இவற்றை நாம் உற்று நோக்குங்கால் 'மன்னன் வழங் கிய கொடையினைச் செப்பேட்டில் எழுதி யெழுதி நாட்டில் செம்புத் தட்டுப்பாடு ஏற்பட்டு விட்டது' எனக் கவிஞர்கள் நம் சோழ வேந்தனைப் போற்றி யிருத்தல் உயர்வு நவிற்சியே யாயி னும், இதில் ஓரளவு உண்மை உண்டு என்பதனை யாரும் மறுக்க முடியாது.

நாட்டில் செம்புத் தட்டுப்பாடு ஏற்பட்டமையின் முன்பு எழுதப் பெற்ற செப்பேடுகள் உருக்கப்பெற்று மறுமுறை பயன்படுத்தப் பட்டது. சில சமயங்களில் முன்பு எழுதப்பெற்ற செப்பேடுகள் சுத்தியால் தட்டப் பெற்றுச் சீர் செய்யப் பெற்று, மீண்டும் எழுதுதற்கெனப் பயன்படுத்தப் பட்டது. கரந்தைச் செப்பேடு சமஸ்கிருதத்தில் ஒரு பகுதியும், தமிழில் ஒரு பகுதியுமாக எழுதப் பெற்றுள்ளது.

இச்செப்பேடுகள், ஐந்து அடி, ஒன்றரை அங்குலம் நீள முடைய வளையத்தில் கோக்கப் பெற்றுள்ளன. இவ்வளையம் தாரா என்னும் கலப்பு உலோகத்தால் வார்க்கப்பெற்றது. இவ்வளையத் தின் முகப்பில் ஓர் அழகிய இலச்சினை பொறிக்கப்பட்டுள்ளது. இதில் சோழரின் இலச்சினையான புலி வலப்புறப் பார்வையோடு

பெருமிதமாக நடுவண் அமர்ந்துள்ளது. அதன் முன்புறம் பாண்டியரின் இலச்சினையாகிய இரட்டை மீன் புலிக்குச் சம நிலையில் வைக்கப்பட்டுள்ளது.

இவைகட் கருகில் வில் வடிவம், முழவு, அரச விருக்கை, பன்றி, சுவத்திகம், ஐந்து இதழ் கொண்ட மலர் போன்றவையும் இடம் பெற்றுள்ளன. இவற்றைச் சுற்றிலும் கீழ்க் கண்ட கிரந்த எழுத்துகளாலான சுலோகம் காணப்படுகின்றது.

'ஏதத் ராஜன்ய மகுட ஸிரேனி ரத்னேஷீ ஸாஸநம்
ஏதத் ராஜேந்திர சோளஸ்ய பரகேசரி வர்ம்மண'

இதன் பொருள், 'பரகேசரி வருமனுன இராசேந்திர சோழனுடைய இச்சாசனம், மன்னர்களுடைய முடிவரிசைகளிலுள்ள இரத்தினங்களில் செலுத்தப்பட்டது' என்பதாகும்.

இவ்விலச்சினை நம் வேந்தனது எட்டாம் ஆட்சி யாண்டளவில் வெளியிடப் பெற்றதென்பதனை இவனது அறச் செயல்கள் பற்றிக் கூறும் செப்பேட்டுத் (தமிழ்) தொகுதியின் தொடக்கத்தில், 'நமக்கு யாண்டு எட்டாவது, நாள் நூற்றேழில்' எனும் தொடரா லறியலாம். இராசேந்திர சோழப் பிரமாதி ராசன் எனும் பெயருடைய மண்டபம் ஒன்று தில்லையில் இருந்ததாக இச்செப்பேடு குறிக்கின்றது.

*இராசகேசரி, பரகேசரி*

சோழர் குடியில் இராசகேசரி, பரகேசரி என்னும் பெயருடைய இருவர் தோன்றி ஆட்சி புரிந்தனர் என்பதனை நம் வேந்தனது கரந்தைச் செப்பேடு கீழ்க் கண்டவாறு குறிப்பிடுகின்றது.

'பகைவர்களாகிற யானைகட்கு அரியேற்றினை ஒத்த இராசகேசரி என்ற வேந்தன் அவனுக்குப் (சோழனுக்கு) புதல்வனுகத் தோன்றினுன். அவனுக்குப் பின், பகைப் படையை முறியடிப்பதிலேயே நோக்கங் கொண்டவனும், வலி படைத்தவனுமாகிய பரகேசரி என்னும் வேந்தன் தோன்றினுன்'.

இச்செய்தியினைப் புலவர் செயங் கொண்டார் தமது 'கலிங்கத்துப் பரணியில்' கீழ்க் கண்டவாறு குறிப்பிட்டுள்ளார்.

'சுராதி ராசன் முதலாகவரு சோழன் முனநாள்
சோழ மண்டல மமைத்தபிற கேழுலகையும்
இராச கேசரி புரந்து பரகே சரிகளாம்
இருவ ராணை புலியாணையென நின்றவிதுவும்'

**செயலில் கால தாமதம்**

முதலாம் இராசேந்திரன் பழையனூர் எனும் கிராமத்தினைத் தேவதானமாக அளிக்கத் தனது ஆருவது ஆட்சி யாண்டின் எண்பத்தெட்டாவது நாளில் ஆணை பிறப்பிக்க, ஆரும் ஆட்சி யாண்டின் தொண்ணூருவது நாளில் பதிவு செய்யப்பட்டு, ஏழாம் ஆட்சி யாண்டின் நூற்று ஐம்பத் தைந்தாவது நாளில்தான் செயல் படுத்தப்பட்டது என்பதனை இராசேந்திரனது திருவாலங் காட்டுச் செப்பேட்டால் அறியலாகும்.

இச்செய்தி சூடாமணி விகாரத்திற்கு முதலாம் இராசராசன் ஆனை மங்கலம் எனும் கிராமத்தினைப் பள்ளிச் சந்தமாக அளிக்கத் தனது இருபத்தொன்ரும் ஆட்சி யாண்டின் தொண்ணூற்று இரண்டாம் நாளில் ஆணையிட்டு, அதே ஆட்சி யாண்டின் தொண்ணூற்று ஆரும் நாளில் பதிவு செய்யப்பட்டு, இருபத்து மூன்ரும் ஆட்சி யாண்டின் நூற்றுப்பதின்மூன்ரும் நாள் செயல் படுத்தப் பட்டது என்பதுடன் ஒப்பிட்டு மகிழத் தக்க தாகும்.

**திருமேனி, பிரதிமம்**

திருக்கோயில்களில் எழுந்தருளுவித்த கடவுள் படிமம் திருமேனி யெனவும், மக்கள் படிவம் பிரதிமம் எனவும் வழங்கப் பெறுகின்றன. இவற்றினை 'எழுந்தருளுவித்த பிச்சத் தேவர் திருமேனி ஒன்று', 'நம்பி ஆரூரனூர் பிரதிமம் ஒன்று' எனக் குறிக்கப் பெற்றிருத்தலின் நன்கு அறியலாம். இவ்விதம் எழுந்தருளுவித்த (பிரதிட்டை செய்வித்துள்ள) திருமேனிகளுக்காக விளை நிலங்கள், திருப்பரிகலங்கள், திருச்சின்னங்கள், திருவாபரணங்கள், உப்பு முதல் கற்பூரம் வரைக்கும் வழிபாட்டிற்கு வேண்டிய எல்லாப் பண்டங்களும் அறக்கொடை செய்வோரால் அளிக்கப்படுமென்ற செய்தியினைக் கல்வெட்டுகள் வாயிலாக அறிகிரேம்.

நம் இராசேந்திரன் தன்னைச் சீராட்டிப் பாராட்டிப் பேரன்புடன் வளர்த்து, நன்னெறியில் ஈடுபடுத்திய தவமணியும், சிவஞானச் செல்வியுமான செம்பியம்மாள் தேவிக்குத் தனது எட்டாம் ஆட்சி யாண்டில் படிமம் ஒன்று எடுத்து, அதனைச் செம்பியன் மாதேவி என்னும் ஊரின்கண்ணுள்ள திருக்கோயிலில் எழுந்தருளுவித்து, அதன் நாள் வழிபாட்டிற்குத் தேவையான நிவந்தங்கள் அளித்துள்ளமையை ஈண்டு எடுத்துக் காட்டாகக் காட்டலாம். இவன் தன் பெற்ரேர்களுக்கும் படிமம் எடுத்து நிவந்தங்கள் அளித்துள்ளான்.

**அஃறிணைப் பெயர்களை உயர்திணைப் பெயரால் வழங்குதல்**

சோழர் காலத்தில் சில அஃறிணைப் பொருளை உயர்திணைப் பெயரிட்டு அழைத்தல் வழக்கமா யிருந்தது. புனிதமாகக் கருதப் படும் பொருள்களுக்கே இவ்விதம் உயர்திணைப் பெயரிடல் என் பது கல்வெட்டுகளால் புலனாகின்றது. எடுத்துக்காட்டாகத் தஞ் சைப் பெருவுடையார் கோயிலின் திருவாசல்களைக் கேரளாந் தகன், இராசராசன், அணுக்கன் எனும் பெயர்களாலும், பெரும் பண்டாரத்தைத் தஞ்சை விடங்கன் எனவும், மரக்காலை ஆட வல்லான் உலகளந்தான் எனவும், நிறைகல்லைத் தக்கணமேடு விடங்கன் எனவும், திருவாரூரிலுள்ள ஆயிரங்கால் மண்டபத் தைத் 'தேவாசிரியன்' எனும் 'திருக்காவணம்' எனவும், கங்கை கொண்ட சோழபுரத்துக் கோயிலிலுள்ள மாளிகை ஒன்று 'முடி கொண்ட சோழன் திரு மாளிகை' எனவும், தில்லையம் பதியில் உள்ள மண்டபம் ஒன்று 'இராசேந்திர சோழப் பிரமாதி ராசன் மண்டபம்' எனவும் உயர்திணைப் பெயரால் அழைக்கப் பெற்றமை யைக் கூறலாம். பெரும்பாலும் இறைவனது பெயரையும் வேந்த னது பெயரையும் அஃறிணைப் பொருள்களுக் கிடுதல் பண்டு வழக்கா யிருந்த தென்பதையும் இதனு லறியலாகும்.

**அணிகலன்கள்**

சோழர் காலத்தில் கண்ட நாண், புல்லிகைக் கண்ட நாண், பாசமாலை, பதக்கம், அரதன வளையல், அரதனக் கடகம், பவழக் கடகம், திருக்கைக் காறை, திருப்பட்டிகை, வாகுவலயம், மாணிக்கத்தின் தாலி, மாணிக்கத்தின் உழுத்து, வயிர உழுத்து, நவரத்தின மோதிரம், அரதன மோதிரம், சோனகச் சிடுக்கின் கூடு, பிருஷ்ட கண்டிகை, ஸ்ரீசந்தம் போன்ற மணி பதித்த அணி கலன்கள் முதலியன பெருஞ்செல்வர்களால் பெரிதும் விரும்பி யணியப் பெற்றன.

திருமுடி, வீரபட்டம், உதரபந்தனம், இராசாவர்த்தம் வயிரசாயலம், மூன்றுக அடுத்து விளக்கின கண்டத்துடர், புறத் துடர், ஏகாவல்லி, திரிசரம், பஞ்சசரி, சப்தசரி, திரள் மணி வடம், தாலி மணிவடம், பொன்னுணிற் கோத்த மாணிக்கத் தின் திரு, பொன்னின் பட்டைக் காறை, திருக்களாவம், திரு மகரம், திருக்குதம்பை, தோடு, வடுகவாலி, கொப்பு, பட்டை மேற் குண்டு வைத்து விளக்கின வளையல், கைக்கடகம், திருக் கால்வடம், திருவடிக்காறை, திருக்கால் மோதிரம் போன்ற பல்வகைப்பட்ட பொன் னணிகலன்களும் மக்களால் அணியப் பட்டன.

பொன்னுலான அணிகலனே யன்றி, முத்தின் சூடகம், முத்தின் சிடுக்கு, முத்து மாத்திரை போன்ற முத்தாலான அணிகலன்களும் பலப்பல இருந்தமை கல்வெட்டுச் சான்றுகளாலறியலாம்.

தோடு, மூக்குத்தி, சிலம்பு, கொளுசு போன்ற அணிகலன்களுக்குப் பயன்படும் 'சுரை'க்கு 'நிலையாணி' எனவும், 'திருகாணிக்கு' 'ஓடாணி' எனவும் அக்காலத்தில் பெயர்கள் வழங்கின.

### சோனகச் சிடுக்கு

அக்கால மக்கள் மேற்கூறிய அரதனக் கலங்களில் ஒன்றுன 'சோனகச் சிடுக்கின் கூடு' என்பதனை அணிந்திருந்ததாக இராசராசேச்சரத்துள்ள சாசனங்களா லறியலாம். இவண் 'சோனக' எனக் குறிக்கப் பெற்றிருத்தலைக் கொண்டு, இது கிரேக்கர் அல்லது அராபியரைக் குறிக்கின்றது என்பதனை அறியலாகும். சோழர் காலத்தில் அராபியரையும், கிரேக்கரையும் 'சோனகர்' எனும் பொதுப் பெயரால் அழைத்தனர் என்பதற்கு எண்ணிறந்த சான்றுகள் வரலாற்றில் காணப் பெறுகின்றன. எனவே, சோனகச் சிடுக்கினைக் கொண்டு தென்னிந்தியாவில் பதினேராம் நூற்றுண்டளவில் சோனகர் செல்வாக்குப் பெற்றிருந்தனர் என்பது உய்த்துணரப் படுகின்றது.

### பிற ஊரார் கடைத் தெருவில் பண்டம் விற்றற்கு அங்காடிக் கூலி

வெளி ஊர்க்காரர் தம்மூர்க் கடைத் தெருவில் பண்டங்கள் விற்றுல் அங்காடிக் கூலி செலுத்தல் வேண்டும். இக்கூலியினை நிருணயம் செய்து வசூலிப்போர் பெருமக்களாவர். இச்செய்தியினைச் 'சோற்றூர்க் கூற்றத்துப் பிரமதேயம் நாலூர் பட்டப் பெருமக்க ளுள்ளிட்ட பெருங்குறிப் பெருமக்களேம் எங்களூர் திருமயானத்து ஸ்ரீமூலஸ்தானத்துத் தேவர்க்கு நாங்கள் விற்றுக் கொடுத்த எங்களூர்க் கடைத் தெருவில் அங்காடிக் கூலியாவது பிறவூர் நின்று நெல்லும் அரிசியும் மற்றும் கிடந்து விற்பனகுவாலால் நாழி கொள்ளப் பெறுவதாகவும், நிறுப்பன நிறையால் ஒரு பலம் கொள்ளப் பெறுவதாகவும் வெற்றிலைக் கூடையால் ஒரே பற்றும், பாக்குக் கூடையால் இரண்டு பாக்கும் கொள்ளப் பெறுவதாகவும்' என்பனவற்றுல் அறிய லாகும்.

**குறித்த இடத்தில் குறித்த பொருள் விற்க ஏற்பாடு**

இன்னின்ன பொருள் இன்னின்ன இடத்தில்தான் விற்கப் பெறுதல் வேண்டுமென்பதும், அந்தப் பொருள் அதற்குக் குறித்த இடத்தில் விற்கப் பெருமல் வேறு இடத்தில் விற்கப் பெற்ருல் தண்டம் செலுத்த வேண்டுமென்பதும் சோழர் காலத்தில் வழக்கமாக இருந்தன. இத்தண்டம் மகா சபையாரால் விதிக்கப்பட்டதென்பதும் அறியப்படுகின்றது. இதனை 'ஸ்ரீவிக்கிரமாபரணச் சதுர்வேதி மங்கலத்து இவ்வாட்டை தன்ம வாரியப் பெருமக்கள் உள்ளிட்ட மகாசபையோம் ... பணித்த எழுத்து ... இவ்வூரில் வெற்றிலை விற்பார் பிடாரி கோவிலன்றி விற்ருரை ஏரி வாரியப் பெருமக்களே ஏரிக்கு முதலாகக் கழஞ்சு பொன் தண்டறு கொள்ளப் பெறுவாராகவும் இப்பரிசு பணித்தோம் மகாசபையோம்' என்ற சாசனப் பகுதியால் அறிய லாகும்.

**காணிக் கடன் செலுத்தல்**

சோழர்களின் காலத்து விளையும் நெல்லில் ஆறில் ஒரு பகுதியினைக் காணிக் கடனுகச் செலுத்துவ துண்டு. வேந்தர் சில காலத்துக் காணிக் கடன் செலுத்தப்பட வேண்டிய அளவு மாறுபடுவது முண்டு. இராச ராசன், இராசேந்திரன் ஆட்சிக் காலங்களில் $\frac{1}{6}$ பங்கு காணிக் கடனுகை நிருணயிக்கப் பட்டதாக அறிகிரேம். இக்காணிக் கடன் நெல்லாகவோ (தானியமாகவோ), பொன்னுகவோ, காசாகவோ செலுத்தப் படலாம் என்ற செய்தியினைக் கல்வெட்டுச் சான்ருலறியலாம். இதனை 'இறை கட்டின நிலத்தால் காணிக் கடன் ராசகேசரியோ டொக்கும் ஆடவல்லான் என்னும் மரக்காலால் அளக்கக் கடவ நெல்லும் இடக் கடவ பொன்னுங் காசும் பேசிக் கல்லில் வெட்டின' என்று சாசனப் பகுதி குறிக்கின்றது.

**காணிக்கடன் செலுத்தாதோர் நிலத்தைப் பறிமுதல் செய்தல்**

ஈராண்டு கழிந்து மூன்ருமாண்டு தொடங்கியும் இறை செலுத்தாதார் நிலங்கள் பறிமுதல் செய்யப்பட்டு ஊர்ப்பொதுவாகக் கொண்டு விற்கப்பட்டது. இவ்வழக்கம் சோழர் காலத்தில் வழக்கிலிருந்ததனைக் கீழ்க்காணும் இராச ராசனின் இருபத்து நான்காம் ஆண்டு திருவாய் மலர்ந்தருளின ஆணையாலறிய லாகும்.

ஈராண்டு நிரம்பி மூவாண்டு தத்தங் காணியான நிலங்களுக்கு அவ்வவ்வூர்களிலாரோடும் ஊரிடு பரிப்பாடு இறை இருது போனர் காணி, உடையாரைத் தவிர, ஊர் நிலமாய் அவ்வவ்வூர்களிலாரே விற்றுக் கொள்ளப் பெறுவார்களாகவும்'

**இறை கொடாதாரைத் தொழுவிலிடல்**

இறை கொடுக்கத் தவறினோரை மரத் தொழுவிலிட்டும், நீரினும் வெயிலினும் நிறுத்தியும் துன்புறுத்தல் சோழர் காலத்தில் வழக்கமா யிருந்தது. இவ்விதம் கடுமையான தண்டனைகள் விதிக்கப் பட்டதால் மக்கள் அச்சமுற்று இறை செலுத்தினர். இறை கொடாதார்க்கு வழங்கப்பட்ட தண்டனையைத் 'தூதரோடும் காவலோடும் அதிகாரம் செய்வாரிடைக்கேய்செல்லக் காட்ட நாங்களும் அதிகாரஞ் செய்வார் மரத்தொழுவிலே இருக்கச் சொல்ல' எனவும்

'இக்காணி விற்றுக் காசு வைக்க வென்று இப்படையிலாரும் எங்களை நீரிலும், வெயிலிலும் இட்டுப் பல வேதனைக்கு மாற்றுது' எனவும்

குறிக்கப் பெற்றுள்ள சாசனப் பகுதியா லறியலாம்.

**அரச ஆணை பிறந்த காலமும் இடமும் குறித்தல்**

அரச ஆணைகளைக் கல்லில் வெட்டுங்கால் இன்னின்ன ஆணை இன்னின்ன இடத்தில் இன்னின்ன சமயத்தில், இன்னின்ன அதிகாரிகளின் முன்னிலையில் பிறப்பிக்கப் பட்ட தென்பதனைத் தெளிவாகக் கூறுதல் அக்கால வழக்க மாகும். அறக்கட்டளையா யிருக்கும் இத்தானம், இன்னின்னார்க்கு வழங்கப்படுகிற தென்பதும் குறிக்கப்படும். இதனை நம் இராசேந்திரனின் பன்னிரண்டாம் ஆட்சி யாண்டில் வெளியிடப்பெற்ற கங்கை கொண்ட சோழிச்சரர் கோயில் கல்வெட்டால் இனிதறிய லாகும்.

'நாம் முடிகொண்ட சோழ புரத்து நம் வீட்டின் உள்ளால் நீராடுமிடத்து நாம் தானஞ் செய்யா விருந்து.'

சயங் கொண்ட சோழ மண்டலத்துப் புலிவல நாட்டு நாட்டார்க்கும் பிரமதேயக் கிழவர்க்கும் தேவஸ்தானப் பள்ளியைச் சந்த, கணிமுற்றூட்டு, வெட்டப்பெற்றுப் பழவரச் சாலாபோகம் உள்ளிட்ட ஊர்களிலார்க்கும் நகரங்களில் லார்க்கும் தெரியப் படுத்த வேண்டு மென்றும்' மன்னன் அறிவிக்கிறான்.

இவ்வாணை பிறப்பிக்கப்பட்ட ஞான்று கீழ்க்கண்ட அதிகாரிகள் உடனிருந்தனர் என்பதும் தெளிவாகக் குறிக்கப் பெற்றுள்ளது.

ஓலை எழுதும் மகிபால குலகாலன்.

**ஓலை நாயகன்**

1. உத்தம சோழப் பல்லவ ராயன்
2. முடிகொண்ட சோழ விழுப்பரையன்
3. விக்கிரம சோழச் சோழிய வரையன்
4. இராச ராச பிரம்ம ராயன்

ஒப்பிட்டுப் புகுந்த அதிகாரி சனநாதனுன இராசேந்திர சோழப் பிரமாதி ராசன்.

உடன் கூட்டத்துக் கருமம் ஆராய்பவர்கள்

1. உதய திவாகரன் தியான ராசராச மூவேந்த வேளான்
2. சூற்றியான சோழ வேளான்

**நடுவிருக்கம்**

1. சதாசிவப் பட்ட சோமயாசி
2. பரமசேசுவர பட்டர்

கருமர் ஆராய்பவர் மாணிக்கன் எடுத்த பாதமான சோழ மூவேந்த வேளான்.

**புரவு வரித்திணைக் களத்துக் கண்காணி**

1. பெரும்பேற்கிழான் பட்டன் வாசுதேவன்
2. சீகண்டன் சேந்தன்

**புரவு வரித்திணைக் களம்**

1. பொன்னன் கொண்டயன்
2. சிறுகுடையாந் அடிகள் திருமணி
3. ஆலங்குளவன் ஆதித்தன்
4. சூலபாணி அருமொழி

வரிப்பொத்தகம் கிழான் அரங்கன் வீதிவிடங்கன்

**முகவெட்டி**

1. சங்கர நந்தி பட்டன்
2. ஐயாறன் தேவர்கண்டன்
3. நெற்குன்றங்கிழான் காமன் சந்திர சேகரன்
4. வேளான் பெருமான்

**வரிப்பொத்தக் கணக்குச் சானகிராமன் கேசவன்**

**வரியிலி**

1. சூரன் ஐயாறன்
2. சூற்றி பட்டாலகன்

**கீழ்முகவெட்டி**

1. பட்டன் மாசறுசோதி
2. நாராயண பட்டன்

கண்காணி பொற்காடன் மதுராந்தகனுன ராசராச மார்த் தாண்ட மூவேந்த வேளான்.

**அரசனது ஆணை பதிவு செய்யப்படுதல்**

நம் இராசேந்திரனது கரந்தைச் செப்பேடு, மன்னனது ஆணை எவ்விதம் எழுதப் பெறுகின்ற தென்பதையும், அதில் ஈடு படும் அதிகாரிகள் யாவர்? என்பதையும் தெளிவுபடக் கூறுகின் றது. கீழ்க்கண்ட கரந்தைச் செப்பேட்டுப் பகுதியினை இங்கு நாம் எடுத்துக் காட்டலாம்.

'இப்படி வரியிலிட்டுக் கொள்க வென்று நாம் சொல்ல நம் ஓலை எழுதும் சயங்கொண்ட சோழ மண்டலத்து ஊற்றுக்காட்டுக் கோட்டத்துப் பாலையூர் நாட்டுப் பாலையூர் கிழவன் அரையன் முடிகொண்ட சோழன் எழுத்தினாலும் நம் ஓலை நாயகன் உய்யக் கொண்டார் வளநாட்டு வெண்ணாட்டுக் கேரளாந்தகச் சதுர் வேதி மங்கலத்து நராக்கன் கிருட்டிணன் இராமனுன இராசேந் திர சோழப் பிரம்ம ராயனும் உய்யக் கொண்டார் வளநாட்டுத் திரைமூர் நாட்டுப் பாம்புணிக் கூற்றத்து அரை சூருடையான் ஈராயிரவன் பல்லவயனுன உத்தம சோழப் பல்லவரையனும், அருமொழி தேவ வளநாட்டு நென்மலி நாட்டு உத்தம சோழ நல்லூருடையான், பாளூர் அம்பலத்தாடியான முடிகொண்ட சோழ விழுப்பரையனும், ஒப்பினாலும் புக்க நம் தீட்டின் படியே வரியிலிட்டுக் கொள்க வென்று நம் கரும மாராயும் உய்யக் கொண்டார் வள நாட்டு வெண்ணாட்டுக் கேரளாந்தக சதுர்வேதி மங்கலத்து நராக்கண் மாராயன் சன நாதபனுன இராசேந்திர சோழ பிரமாதி ராசனும், உய்யக் கொண்டார் வளநாட்டுப் பேராவூர் நாட்டுக் காஞ்சி வாயில் உடையான் உதைய திவா கரன் தில்லை யாளியான ராச ராச மூவேந்த வேளானும், அரு மொழி தேவ வளநாட்டு இங்கணாட்டு இளையான் குடியான் ராசா தித்தன் கூத்தாடியான விழுப்பரையனும் நடுவிருக்கும்'

## அக்காலத்து வழக்கில் இல்லாதவை

### சாம்பிராணி

இக்காலை திருக்கோயில்களிலும், இல்லங்களிலும் நறும்புகை யிடப் பயன்படுவது சாம்பிராணி யாகும். இக்காலத்துப் பெரு வழக்கிலிருக்கும் சாம்பிராணி நம் இராசேந்திரன் காலத்தில் பயன்படுத்தப் பட்டதாக அறிவதற்குப் போதிய சான்றுகள் இன்றளவும் கிடைக்கப் பெருமையின், அக்காலை சாம்பிராணி பயன்படுத்தப் பெறவில்லை யென்பது உறுதியாகிறது. பின்னை அக்காலை நறும்புகையிட எதனைப் பயன்படுத்தினரெனின், குங் கிலியமெனும் பொருளைப் பயன்படுத்தினரெனக் கொள்க. இரா சேந்திரனது காலத்தில் சாம்பிராணிக்குப் பதிலாகக் குங்கிலியம் பயன்படுத்தப்பட்ட தென்பதனைத் தஞ்சை மாவட்டத்துக் கண்டியூரிலுள்ள இராசேந்திரன் சாசனத்தா லறியலாம்.

கண்டியூருக் கண்மையிலுள்ள திருவையாற்றில் ஆட்கொண் டார் திருமுன்னர் குங்கிலியக்குழி இன்றும் காணப்படுதலின், பண்டைக் காலத்தில் திருக்கோயில்களில் திருப்புகையிடக் குங் கிலியமே பயன்படுத்தப்பட்ட தென்பதனை நாம் உறுதியாகக் கூறலாம். அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவரான குங் கிலியக் கலையர் சிவபெருமானைக் குங்கிலியத்தால் வழிபட்டமை யின் அப்பெயர் பெற்ருர் என்பதனை உணர்க.

> 'வெந்த குங்கிலியப் புகைவிம்மவே
> கந்த நாறுங் கழிப்பாலையார்'

என்ற தேவாரப் பாடலாலும்

> 'கங்கைநீர் கலிக்குஞ் சென்னிக் கண்ணுத லெம்பி ராற்குப்
> பொங்குகுங் குலியத் தூபம் பொலிவுறப் போற்றிச் செல்ல'

என்ற பெரிய புராணச் செய்யுளாலும்,

> 'ஆலய மெங்கும் காதியகுங் கிலியப்புகை'

என்ற சேக்கிழார் நாயனுர் புராணத்தும் திருக்கோயில்களில் குங் கிலியப் புகையிடப் பட்டமை அறியப்படுவதனுலும் மேற்கூறிய செய்தி உறுதி பெறுகின்றது.

### சீதாரி

திருக்கோயிலில் திருவமுது செய்விக்குங்கால் திருப்புகை யோடு கற்பூரம் காட்டப்பட்ட செய்தி சாசனங்களால் அறியப்

படுகின்றது. அக்காலை புகைக்குக் குங்கிலியத்தைப் பயன்படுத்தாது சீதாரியைப் பயன்படுத்தினர் என்பது சாசனங்களால் அறியப்படுகின்றது.

'பாதாதி கேசம் பழிப்பில்லாள் பாங்கமைந்த
சீதாரி கொண்டுதன் மெய்புகைத்தாள்'

என்று ஞானவுலாவில் கூறப்பட்டுள்ளமையின் இது நன்கு விளங்குகின்றது. இவண் சீதாரியெனக் குறிக்கப் பெறுவது மணங்கமழ் சந்தனமே யாகும். இதனை முதலாம் இராசராசனின் முதற் பெருந்தேவியார் எடுப்பித்த ஒலோகமா தேவீச்சரத்துள்ள, 'திருமெய்ப் பூச்சுக்கும் சீதாரிக்குமாக நிசதம் சந்தனம் முப்பலம்' என்னும் சாசனப் பகுதியால் அறியலாம். அக்காலத்து மக்கள் நீராடிய பின்பு இப்புகை காட்டும் வழக்கு இருந்தது. சீதாரி என்பது சீதம் எனப்படுகின்ற குளிர்ச்சிக்குப் பகையாதலின் (அரி) இப்பெயர் பெற்றது.

*மிளகாய்*

பண்டைக் காலத்தில் நம் நாட்டில் மிளகாய் வழக்கில் இல்லை. இது நம் நாட்டில் அக்காலத்துப் பயிர் செய்யப்படுவதுமில்லை. மிளகாய் சிலி நாட்டினின்றும் நம் நாட்டிற்குப் பன்னூறு ஆண்டுகட்கு முன் கொண்டு வரப்பட்டது என்பது யாவரும் அறிந்த உண்மை. பண்டுதொட்டு நம் நாட்டில் மிளகு மிகுதியாகப் பயிர் செய்யப்பட்டு வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது. மிளகு-காய் என்பதே பிற்காலத்தில் மிளகாய் என மரீஇ வழங்குவதாயிற்று. தஞ்சை இராசராசேச்சுரத்து ஆலயத்திற்கு அளிக்கப் பெற்ற நிவந்தத்தைக் குறிக்கும் சாசனப் பகுதியில் மிளகாய் குறிக்கப்பெற வில்லை யாதலின், இஃது அக்கால வழக்கில்லை என்பதனை யறியலாம். மிளகாய் தேவர்களின் உணவாகு மென்று புராணங்கள் கூறும்.

*தேங்காய்*

இன்று இந்துமதக் கோயில்களில் வழிபாடு புரிவோர் தேங்காய் உடைத்து வழிபாடு செய்தல் வழக்கமாக உள்ளது. ஆனல், பத்து, பதினோராம் நூற்றாண்டுகளில் நம் தமிழகத்தில் இவ்வழக்கம் பின்பற்றப் பட்டதாகக் கல்வெட்டுச் சான்றுகள் கிடைத்தில. எனவே, அக்காலை இறைவனுக்குத் தேங்காயுடைத்துப் படைத்ததாகத் தெரிய வில்லை. இதனல், அக்காலத்தில் தமிழகத்தில் தேங்காய் கிடைக்கப் பெறவில்லை என நாம் எண்ணலாகாது.

இராசராசேச்சுரத்து வட சுவரில் காணப்பெறும் சாசனத்தில் 'தெங்குமரம் நின்ற நந்தவனம்' என்று குறிக்கப் பெற்றிருத்தலினாலும்,

ஆனைமங்கலச் செப்பேட்டில் 'இவ்வூரரிட்ட தெங்கும் பனையும் ஈழவர் ஏறப்பெறுத தாகவும்', என்றும் 'காவு தெங்கிடப் பெறுவதாகவும்' என்றும் குறிக்கப் பெற்றிருத்தலின் அக்காலத்துத் தேங்காய் இருந்தமை புலப்படும். ஆனால், தேங்காய் கடவுள் வழிபாட்டிற்குப் பயன்படுத்தப் பட்டதாகக் கல்வெட்டில் குறிக்கப் பெறவில்லை யாதலின், இறைவனுக்குத் தேங்காய் உடைத்துப் படைத்தல் இல்லை யென்று நாம் எண்ண இடமுண்டு.

### திருக்கோயிலில் வழங்கப்பெற்ற பரிபாடைச் சொற்கள்

அக்காலத் திருக்கோயில்களில் வழங்கிய சம்பிரதாயச் சொற்கள் சில நமக்கு மகிழ்ச்சியினையும் வியப்பினையும் ஊட்டுகின்றன. அவை திருவமுது, திருமஞ்சனம், திருப்பாவாடை, திருப்பள்ளித்தாமம், திருப்பரிகலம், திருப்பரிச்சட்டம், திருவொற்றாடை போன்றன வாகும்.

### திருவமுது

இறைவனுக்குப் படைக்கும் பொருள்கள் அமுதென அழைக்கப்பெறும். பழவரிசியாற் சமைத்த போனகம், கறியமுது, பருப்பமுது, நெய்யமுது, தயிரமுது, அடைக்காயமுது (வெற்றிலையமுது) ஆகியவை கொண்டு நாடோறும் மூன்று போதினும் திருவமுது செய்விக்கப்பட்டது.

### திருவிழா நாளில் திருவமுது

திங்கள் தோறும் நடைபெறும் திருவிழாவின் பொழுது எழுந்தருளும் திருமேனிகட்குப் பழவரிசியால் அட்ட போனகமும், பருப்பு, பழவரிசி, மிளகு, சீரகம், சர்க்கரை, கடுகு, நெய் போன்றவற்றால் செய்யப்பட்ட அப்பக் காய்க் கறியமுதும், மிளகு, சீரகம், சர்க்கரை, கொள்ளு, வாழைப்பழம், புளி, தயிர், நெய், கடுகு போன்றவற்றால் தயாரிக்கப்பட்ட அட்ட புளிக்கறியமுதும், புளியிட்டுங் கறியமுதும், காய்க் கறியமுதும், பொரிக் கறியமுதும் பிறவும் அமுது செய்வித்தல் வழக்க மாகும்.

### திருமஞ்சனம்

இறைவனது திருமேனிகளைத் தூய நீரால் நீராட்டுதல் திருமஞ்சன மெனப்படும். இராசராசன் காலத்தில் பெருஞ்சண்பக

மொட்டு, ஏலரிசி, இலாமச்சம் ஆகியவற்றைத் தண்ணீரில் ஊற வைத்து, அந்நீரால் திருமஞ்சனம் ஆட்டுதல் வழக்கமென் பதனை இராசராசேச்சுரத்தின்கண்ணுள்ள கீழ்க்கண்ட சாசனப் பகுதியா லறியலாம்.

'ஸ்ரீராஜராஜீச்வர முடையார் ஆடியருந் திருமஞ்சன நீரிலும் தண்ணீர் மீதிலுமிடப் பெருஞ்சண்பக மொட்டுக்கும் ஏலவரிசிக் கும் இலாமச்சத்துக்கும்'

***திருப்பரிச்சட்டம்***

சட்டம் என்பது ஆடை யாகும். திருப்பரிச்சட்டம் என்பது இறைவனுக்கு அணிவிக்கப்படும் ஆடை யாகும். இந்நாளில் இது திருப்பரிவட்டம் என அழைக்கப்பெறுகிறது.

***திருவொற்ருடை***

இறைவனுக்குத் திருமஞ்சனம் செய்வித்த பின்னர் இறை வன் திருமேனியிலுள்ள நீரை ஒற்றி எடுக்கப் பயன்படும் ஆடை திருவொற்ருடை எனப்படும். ஒற்றுதலின் ஒற்ருடை எனப் பெயர் பெற்றது.

***திருப்பாவாடை***

திருமுன் அமுது செய்விக்கச் சோற்றினைப் பரப்பும் பொருட் டுத் தரையில் விரிக்கப்படும் ஆடை திருப்பாவாடை என அழைக் கப்பட்டது. இக்காலத்தும் இவ்வழக்கம் பின்பற்றப்படுகின்றது.

***திருப்பள்ளித்தாமம்***

தாமம் என்பது மாலையெனப் பொருள்படும். இவண் தாமம் என்பது இறைவனது பூசெய்க்குப் பயன்படும் மலரைக் குறிக் கின்றது. பூசெய் என்ற தூய தமிழ்ச்சொல் பூவினுல் செய்யப் படும் வழிப்பாடு என பொருள்படும். 'திருப்பள்ளித் தாமம் பறித் துக் கொடுப்பார் இருவர்' என்று திருவையாறு, திருவேதிகுடி சாசனப் பகுதிகளாலும், 'சாத்தலாகுந் திருப்பள்ளித் தாமம் பல வும் தாங்கொய்து' எனவும், 'வண்டு மருவும் திருப்பள்ளித் தாமங் கொண்டுவரன் முறையே' எனவும், 'கொய்த தூநறும் பள்ளித் தாமம் குஞ்சிமேற் றுதையக் கொண்டார்' எனவும், 'சடைமே லணியத் திருப்பள்ளித் தாமம் பறித்துச் சாத்துவார்' எனவும், 'சிவகாமி யாண்டார் கொய்து - பன்னகா பரணர் சாத்தக் கொடுவரும் பள்ளித் தாமம்' எனவும் திருத்தொண்டர் புராணத்துப் பல்வேறிடங்களில் பரந்து பேசப்படுவதனுலும், இதனை நாம் நன்கறிய லாகும்.

**பெண்கள் அடிமையாதல்**

பண்டைக் காலத்தில் இயற்கையின் ஊறுபாட்டால் கொடிய வறுமை வந்துற்ற காலங்களில் பெண்கள் தம்மை விற்றுக் கொண்டு அடிமையாகித் திருக்கோயில்களில் பணிபுரிவர். சிலர் மடங்களில் பணிபுரிவர். இவ்விதம் அடிமை புகுந்த பெண்களனை வரும் பெரும்பாலும் கோயிலுக்கோ, மடத்துக்கோ, விற்கப்பட் டிருத்தலின் தெய்வ கைங்கரியங்களுக்கே இவர்கள் பெரும் பாலும் அடிமை புகுந்தனர் என்பதனை அறியலாம். நம் இரா சேந்திரனது காலத்தும் சிலர் இவ்விதம் அடிமை புகுந்தனர்.

**தேவதாசிகள் மணம் புரிந்து கொள்ளுதல்**

ஆலயத் தொண்டு புரியுந் தேவரடியாராகிய பெண்கள், பொதுமகளிர் என வழங்கப் பெற்றனர். இருப்பினும் இவர்களுள் சிலர் நம் இராசேந்திரனது காலத்தில் திருமணம் செய்து கொண்டு நல்வாழ்வு நடாத்தியதாகவும் கல்வெட்டுச் செய்தியா லறியலாம்.

**ஆண் மக்களின் நிருத்தம்**

தேவரடியரான பெண்கள் திருக்கோயில்களிலும், விழாக் காலங்களில் பொது இடங்களிலும் கூத்து நிகழ்த்தி வந்தனர். இவர்களுக்கு மன்னனால் மானியங்கள் வழங்கப் பெற்றன. தேவ ரடியார்களைப் போலவே ஆண்களும் சிலர் நாட்டியக்கலை (ஆடற் கலை)யில் நல்ல தேர்ச்சி பெற்றுத் தெய்வ சந்நிதிகளிலும் மன்ன னது அவையிலும் தங்களது கலைத்திறனைக் காட்டினர். இவ் விதம் ஆடலில் வல்ல கூத்தர்கள் நிருத்தப் பேரரையர், நிறுத்த மாராயன் போன்ற சிறப்புப் பெயர்களையும், நட்டுவநிலை, நட்டு வக் கணி என்ற உரிமை நிலங்களையும் மன்னனிடமிருந்து பெற்றனர். எனவே, அக்காலைப் பெண்களைப் போலவே ஆண் களும் ஆடற்கலையில் வல்லுநராகத் திகழ்ந்தனர் என்பது போத ரும். ஆடல் வல்லானாகிய சிவபெருமானும் நிருத்தகாரி எனப் பட்டான்.

இக்கூத்தர்களுள் சாக்கையர் என்பார் குறிப்பிடத் தக்க திறமை பெற்ற பிரிவினராவர். இவர்கள் சங்க கால முதற் கொண்டே ஆடற் கலையில் பேரும் புகழும் பெற்றவர் என்பது நெஞ்சையள்ளும் செஞ்சொற் காவியமாம் சிலப்பதிகாரத்தினா லும், சாசனங்களாலும் அறியப்படுகின்றது. இவர்களனைவரும் வடமொழி, தென்மொழிகளில் நல்ல அறிவும், அலங்கார நூல்

பயிற்சியும் பெற்றிருந்தனர். இக்கூத்தருள் ஒருவரே தமிழ்த் தண்டியாசிரியர் என்பதனை,

> 'மறைத்து நாடக நவிற்றும்
> வடநூ லுணர்ந்த தமிழ்நூற் புலவன்......தண்டி'

என்ற அவரது பாயிரத்தால் நன்கு அறியலாம்.

### முன்னோரான மன்னர், தேவியரை நாட்டார் வழங்கிய முறை

இறந்துபட்ட தன் தந்தை, பாட்டன், முன்னோன்-ஆகியவர்களைப்'பெரியதேவர்' என்றழைப்பது அக்கால வழக்கு. நாட்டார் தம் மன்னனைத் 'தேவர்', 'பெருமாள்', 'நாயனார்' எனவும் மன்னன் தேவியை நம்பிராட்டியார் எனவும் பெரும்பாலும் வழங்குவர். அத்தேவியாரும், அரசகுலப் பெண்களும், ஆழ்வார், நாச்சியார் என்றும் வழங்கப் பெறுவர். இராசேந்திரன் மகளான அம்மங்கை தேவி, 'அம்மங்கை ஆழ்வார்' என அழைக்கப்பட்டதனை ஈண்டு நாம் எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

### இராசேந்திரன் திருவாதிரை நாளில் பிறந்த செய்தி

நம் வேந்தன் மார்கழித் திங்கள் திருவாதிரை நாளிற் பிறந்தவன் என்பதைக் கீழ்க்கண்ட திருவொற்றியூரிலுள்ள கல்வெட்டாலறியலாம்.[1] 'திருவொற்றியூருடைய மகாதேவர்க்கு உடையார் ஸ்ரீ இராசேந்திர சோழ தேவர் திருநாள் மார்கழித் திருவாதிரை ஞான்று நெய்யாடியருள வேண்டு(ம்) மிசத்துக்குத் திருவொற்றியூர் திருமயானமும் மடமுடைய சதுரானன பண்டிதன் தேவர் பண்டாரத்து வைத்த காசு நூற்றைம்பது.

### திங்கள் விழா

நம் இராசேந்திரன் பிறந்த திருவாதிரை நாளில் திங்கள் தோறும் விழா நடத்துவதற்கு நிலம் அளிக்கப்பட்டது. இச்செய்தியினைத் தென்னார்க்காடு மாவட்டம் விருத்தாசலத்திலுள்ள கல்வெட்டா லறியலாம்.[2] நம் வேந்தன் நலங்கருதித் திருமுதுகுன்ற முடையார் கோயிலில் இவ்விழாத் திங்கள் தோறும் சிறப்பான முறையில் நடத்தப்பட்டது. இராசராசனது பிறந்த நாளாகிய திருச்சதயத் திருவிழாவும் திங்கள் தோறும் நடத்தப்பட்டதை ஈண்டு நாம் நினைவிற் கொள்வது நலம்.

[1] S. I. I. Vol. V-No. 1354
[2] Ins. 54 of 1918

**முறையிடல்**

மன்னனிடம் குறையோ, முறையோ, உரிமைகளோ பெற விழைபவர் தங்களது வேண்டுகோளினை மன்னனது அதிகாரிகளுள் ஒருவரிடம் அறிவிக்க வேண்டும். அறிவித்தவற்றை விசாரித்து, மன்னனது ஆணை பெறுவது இன்றியமையாததாயின், அவ்வதிகாரியே மன்னனிடம் நேரில் விண்ணப்பஞ் செய்வர். அதனைச் செவிமடுத்த மன்னன் காரியத்திற் கேற்பத் தனியாகவோ, உடன் கூட்டத்தினருடன் கலந்தோ, முடிவு செய்து, தனது ஆணையினை வரிக்குக் கூறு செய்வார் போன்ற அதிகாரிகளுக்கு வாய் மொழியால் அருளிச் செய்வான். இவ்விதம் அருளிச் செய்தவை திருமந்திர வோலை யதிகாரியால் பட்டோலை கொள்ளப்பட்டு, உடன் கூட்டத்து அதிகாரிகளின் கையொப்பத்துடன் உரிய கீழதிகாரிக்கு அனுப்பி வைக்கப்பெறும்.

இவ்விதமே யன்றி மன்னனுக்கு வேண்டியவர்கள் மன்னனிடமே நேரில் தங்களது குறை, முறைகளை விண்ணப்பித்து அவற்றிற்குரிய ஆணையைப் பெறுவதும், சொந்தக் காரியமானவற்றை மன்னனே தனித்துச் சிந்தித்து (பிறரோடு ஆலோசனை செய்யாமல்) ஆணை பிறப்பிப்பதும் உண்டு.

**கல்வெட்டு**

கல்வெட்டு மங்கல வாசகம், சாசனம் எழுதப்பட்ட காலம் சாசனச் செய்தி, கையெழுத்துகள், ஓம்படைக்கிளவி ஆகிய ஐந்து பகுதிகளைத் தன்னகத்தே கொண்டிருக்கும்.

மங்கல வாசகம் கல்வெட்டின் தொடக்கத்தில் பொறிக்கப் பட்டிருக்கும். பெரும்பான்மையான கல்வெட்டுகள் 'ஸ்வஸ்தி ஸ்ரீ' எனும் சொல்லினைத் தொடக்கத்தில் கொண்டுள்ளன. மங்கள முண்டாகட்டும் என்பது இதன் பொருளாகும்.

முதலாம் இராசராசனின் ஆட்சிக் காலத்திலிருந்து சோழர் கல்வெட்டுகளில் மன்னனின் பெயரையும், ஆண்டையும் குறிக்கு முன்னர் மெய்க்கீர்த்தி இடம் பெற்றுள்ளது. நம் இராசேந்திரனின் மெய்க்கீர்த்தி, 'திருமன்னி வளர இருநில மடந்தையும்' என்னும் தொடக்கத்தினையோ, 'பூர்வ தேசமும் கங்கையும் கடாரமும் கொண்ட' என்னும் தொடக்கத்தினையோ கொண்டுள்ளது.

கொடை அளித்தவனின் கையொப்பமும், அதைக் கொடையளித்தவன் சொல்லக் கேட்டெழுதிய ஊர்க்கணக்கன் கை

யொப்பமும், சில கல்வெட்டுகளில் அதனைக் கல்லில் பொறித்த தச்சனின் கையொப்பமும், சாட்சிகளின் கையொப்பங்களும் காணப்படுகின்றன.

### வடமொழிக் கல்வெட்டு

தமிழகத்தில் தமிழ்க் கல்வெட்டுகளுக்கு அடுத்து அதிகம் காணப்படுபவை வடமொழிக் கல்வெட்டுகளாகும். வடமொழிக் கல்வெட்டுகள் இராசகீயம், 'சானபதம்' என இருவகைப் படு மென நீதிநூல்கள் குறிக்கின்றன. இராசகீயம் அரசினுடையது; சானபாதம் என்பது மக்களுடையது.

மன்னனோ, அமைச்சனோ, அதிகாரிகளோ வழங்கும் ஆணைகள் இராசகீயம் என்றும், மக்கள் தமக்குள் செய்துகொள்ளும் உடன்பாடுகள், 'சானபதம்' என்றும் அழைக்கப்படும். இராசகீயம் சாசனம், செயபத்திரம், ஆக்ஞாபத்திரம், பிரக்ஞாபனம் என்னும் நான்கு உட்பிரிவுகள் கொண்டதாகும்.

நம் இராசேந்திரனது கல்வெட்டும் ஒரு வடமொழிச் செய்யுளுடன் தொடங்குகிறது.

ராசத் ராசன்ய மகுடஸ்ரேணி
ரத்னே ஷ் சாசனம்!
ஏதத் ராசேந்தித்ர சோளஸ்ய
பரகேசரி வர்மண!

இராசராசனுடைய கல்வெட்டுகளுள் பல கீழ்வரும் வடமொழிச் செய்யுளுடன் தொடங்கப் பெறுகின்றது.

ஏதத் விஸ்வ நிருப சிரேணீ
மௌலி மாலோப லாலிதம்!
சாசனம் ராச ராசஸ்ய
ராசகேசரி வர்மண!

### தேவதானம்

தேவதானமாக அளிக்கப்பட்ட பழையனூர் கிராமத்திலிருந்து ஆண்டுதோறும் ஒரு நிலையான அளவு (Permanent assessment) பணம் மகாதேவ ஆலயத்திற்குச் செலுத்தப்பட வேண்டுமென்று இராசேந்திரன் ஆணை பிறப்பித்ததாகத் திருவாலங்காட்டுச் செப்பேடு செப்புகின்றது.

**வரி**

இராசேந்திரனது நான்காம் ஆட்சியாண்டுக் கல்வெட்டின் மூலம் கீழ்க்கண்ட பொது வரிகள் திருவல்லம் கிராமத்தின்கண் குடியிருந்த மக்களிடம் வசூலிக்கப் பட்டனவாக அறிய லாகும். அவை கிணறு, குளம் ஆகியவற்றிலிருந்து எடுக்கப்படும் தண்ணீருக்குரிய வரி, ஆடம்பர வாசிகளின் தங்கத்திற்குரிய வரி, தங்கத்திற்குரிய உகப்பார் பொன் (Ugappar Pon) எனப்பட்ட வரி, திருமண நாள் போன்ற மங்கலமான நாட்களின்போது வசூலிக்கப்பட்ட சொற்பமான வரி முதலியன வாகும்.

**கடனும் வட்டியும்**

கி.பி. 1021 ஆம் ஆண்டில் வேம்பற்றூர் சபை, ஸ்ரீகுடித்திட்டை சிவன் கோயிலிடமிருந்து அறுபத்தைந்து காசுகள் கடனாகப் பெற்றுக்கொண்டது. இதன் வட்டிக்காகக் கீழ்க்கண்ட வரிகள் கோயில் நிலத்தினின்றும் வசூலித்தல் தவிர்க்கப்பட்டன. சித்தாய காசு, எண்ணெய், நெய்வரி, ஊரவை போட்ட வரிகள்.

**பகைவர் நாட்டைச் சூறையாடலும் எரியூட்டலும்**

போர்மேற் செல்லுங்கால், காழ்த்த பகைஞரெனின் அவரது நாட்டைச் சூறையாடலும், நகரை எரியூட்டிப் பாழ்படுத்தலும், குழந்தை முதல் யாவரையும் கொலை செய்தலும், திறை கொண்டு மன்னனைச் சிறையிடலும், மன்னனது முடியினைக் கவர்தலும், விலையுயர்ந்த பொருள்களைக் கவர்ந்து வருதலும், படிமங்களைக் கவர்ந்து வருதலும் வழக்க மாயிருந்தது என்பதனை நம் இராசேந்திரனது ஈழப் படையெழுச்சியினாலும், மேலைச் சாளுக்கியப் படையெழுச்சியாலும் அறியலாம். மான்யகேதம் நம் இராசேந்திரனது படையால் தீக்கிரையாக்கப் பட்டதனைக் கரந்தைச் செப்பேடு குறிக்கின்றது.

இலங்கை வரலாற்று நூலான 'மகாவமிசமும்' சோழ மன்னர் கல்வெட்டும் இராசேந்திரனது படை, ஈழத்தின் பல பகுதிகளிலிருந்த புத்த விகாரைகளை அழித்தது என்பதனைக் குறிக்கின்றது. மேலைச் சாளுக்கிய மன்னனான சத்யாசிரயனுடைய 'கோட்டூர் சாசனம்' இராசேந்திரனின் படை வீரர்கள் சாளுக்கிய நாட்டினை மிருகத்தனமான முறையில் சூறையாடினர் எனவும், பார்ப்பனரைத் துன்புறுத்தினர் எனவும், பெண்களை மானபங்கம் செய்தனர் எனவும் குறிப்பிடுகின்றது.

**கழுதை மீதேற்றல்**

தீமையான காரியங்கள் புரிந்தாரைக் கழுதை மீதேற்றி ஊர்வலம் விடுதல், இழிகுலத்தவரின் கூட்டுறவு காரணமாகச் சாதியினின்று விலக்குண்டாரைக் கழுவாய் செய்து சேர்த்துக் கொள்ளுதல் சோழர் கால மரபு. இவை நம் இராசேந்திரனது ஆட்சிக் காலத்திலும் வழக்கிலிருந்தது.

**தானம்**

ஒரு சில காசை ஒருவனிடம் கொடுத்துக் கொடுத்தவனின் நன்மைக்காகக் கொடை யளிக்கக் கூறும்போது, கொடுத்த 'முதல் கெடாது பொலி ஊட்டாகக் கொண்டு' வந்த பொலியில் கொடை அளிக்க வேண்டு மென்று கூறப்பெற்றிருக்கும். இவண் 'பொலி' என்பது வட்டி யாகும். அதனுடன் வட்டி விகிதமும் குறிக்கப் பெற்றிருக்கும். அவ்விதம் வழங்கப் பெற்ற கொடை சூரியன், சந்திரன் உள்ளளவும் நிலைபெற்றிருக்குமெனக் குறிக் கப் பெற்றிருக்கும்.

நம் இராசேந்திரனது ஆட்சிக் காலத்தும் பரிக்கால் பிச்சன் வடவாயில் என்பவனுக்காக வடவாயில் உலகன் என்பான் ஆடு களைத் தானஞ் செய்துள்ளான் என்பதனைச் சித்தூர் மாவட்டத் திருத்தணிப் பிரிவிலுள்ள நேமலி என்ற ஊரிலுள்ள கல்வெட்டுக் கூறுகின்றது.

**அறக்கொடை**

நம் இராசேந்திர சோழனது எட்டாம் ஆட்சி யாண்டின வாகத் துறையூரில் காணப்படும் இரு கல்வெட்டுகளில் 'திருக் கோயிலில் அதிகாலையில் வழிபாடு செய்விக்கவும், மற்ற நேரங் களில் மற்றவருக்கு வேதம் கற்பிக்கவும் ஒரு பார்ப்பனனுக்குப் பராமரிப்புச் செலவிற்காக நன்கொடை யளித்த செய்தி குறிக் கப் பெற்றுள்ளது.

நம் இராசேந்திரனது ஆட்சியின் ஆரம்ப காலத்தில் இராச ராசனின் துணைவியர்களான உடைய பிராட்டியார் திரிபுவன மாதேவியார் பஞ்சவன் மாதேவியார் ஆகியோர் திருவெண் காட்டுக் கோயிலுக்குக் கொடை யளித்துள்ளனர்.

நம் வேந்தன் அமலன் செய்யாவயர் (Amalan of Sayya-vayar) என்பானுக்கு நிலம் அளித்துள்ளான். இந்நிலத்தினை அம லன் திருவெண்காட்டுப் பிட்சாதன மூர்த்திக்கு நன்கொடை யாக அளித்துள்ளதாக இராசாதி ராசனின் முப்பதாவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டுக் குறிப்பிடுகின்றது.

**படியெடுத்தல்**

தன் முன்னேரான மன்னரும் பிறரும் செய்த அறக் கொடைகளைக் கோயில் முதலிய பொது விடங்களில் யாவரும் அறியக் கற்களில் பொறித்தல் வழக்க மாகும். திருப்பணி புரிதற் பொருட்டு அக்கற்கள் பிரிக்கப் படுங்கால், அக்கல்வெட்டு களைப் படியெடுத்துக் (பிரதி) கொண்டு, திருப்பணி முற்றுப் பெற்றகாலை உரிய இடங்களில் அவற்றை வரைந்து விடுதல் பண்டை வழக்க மாகும். இது 'கற்படி மாற்று' அல்லது 'படி யெடுத்தல்' எனப் பொருள்படும். நம் வேந்தன் தனது பதினுன் காவது ஆட்சி யாண்டின் (கி.பி. 1026) எழுபதாம் நாளில், திரு மழபாடி வைத்தியனுத சாமிகள் ஆலயத் திருப்பணி முற்றுப் பெற்றபோது, பழைய கல்வெட்டுகளைப் படியெடுத்து வைத் திருந்து மீண்டும் எழுதச் செய்தான்.

**சண்டேசுரர்**

சிவன் கோயிலுக்கு நிலம் விற்கப்பட்ட போதெல்லாம் சண் டேசுரர் பெயராலேயே விற்கப்படுவது வழக்கம்.

**இராச குரு**

முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன் முதலிய சோழ வேந்தர்க்கு இராச குருக்களாய் விளங்கியவர்கள் இலா டம், காசி, காசுமீரம் முதலிய வடநாடுகளிலிருந்து அவரால் வர வழைக்கப்பட்டனர். இவர்கள் கோளகி மடம், இலட்சாதயா மடம், பிட்சா மடம் முதலிய சைவ ஆதீனங்களின் தலைவர் களாய் விளங்கியதுடன், அரசாங்கத்தில் மிக்க செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்தனர். நம் இராசேந்திரன், கங்கைக் கரையிலி ருந்து பல சைவர்களை அழைத்து வந்து காஞ்சியிலும், சோழ நாட்டின் பிற பகுதிகளிலும் குடியேற்றினுன்.

**தானம் அறிவித்தல்**

மன்னன் தானஞ் செய்யுங்கால் அச்செய்தியினை நாட்டார்க் கும், நகரங்களிலுள்ளார்க்கும், பிரமதேயக் கிழவர்க்கும் மற்றும் பிறர்க்கும் தெரிவித்தல் வழக்க மாகும்.

நம் இராசேந்திரனின் பன்னிரண்டாம் ஆட்சி யாண்டின தாகக் கூழம்பந்தல் கங்கை கொண்ட சோளேச்சுரர் கோயிலில் காணப்படுகின்ற கல்வெட்டில், நம் வேந்தன் தானம் அளித்த செய்தி, 'சயங்கொண்ட சோழ மண்டலத்துப் புலிவல நாட்டு நாட்டார்க்கும், பிரமதேயக் கிழவர்க்கும், தேவத்தான, பள்ளிச்

சந்த, கணி முற்றூட்டு, வெட்டப்பெற்றுப் பழவரச்சாலா போகம் உள்ளிட்ட ஊர்க ளில்லார்க்கும், நகரங்களில்லார்க்கும் தெரியப் படுத்த வேண்டும் என்பதனையும் மன்னன் கூறியுள் ளான் என்பதனைத் தெரிவிக்கின்றது.

#### பள்ளிப் படை

அரசனோ, இளவரசனோ இறந்துபட்டகாலை அவன் அடக்கம் செய்யப்பட்ட இடத்தின்மீது கோயில் கட்டுதல் அக்கால வழக்க மாகும். இதனைப் பள்ளிப்படை என்று முன்னோர் வழங் கினர். இது போன்ற பள்ளிப்படைகள் பிற்காலச் சோழர் காலத் திலும் அமைக்கப்பெற்றனவாகக் கல்வெட்டுகள் உணர்த்து கின்றன. இவ்வழக்கம் நம் இராசேந்திரனது ஆட்சிக் காலத்தி லும் பின்பற்றப்பட்ட தென்பதனை இவன் இராமனுதன் கோயி லில் பஞ்சவன் மாதேவீஸ்வரம் எழுப்பியதா லறியலாம்.

#### இராசேந்திரனது படிமம்

காலஹஸ்திக் கோயிலில் இராசேந்திரனது படிமமும், சோழ மாதேவியின் படிமமும் வைக்கப்பட்டுள்ளன. இதனைப் போன்றே இராசராசனது படிமமும் உலோக மகாதேவியார் படிமமும் தஞ்சையில் காணப்படுகின்றன. எனவே, கோயிலில் அக்காலத் தில் மன்னர் உயிருடன் இருக்கும்போது மட்டுமன்றி, இறந்த பின்பும் மக்களால் பெரிதும் மதிக்கப்பட்டு வழிபாடு செய்யப்பட் டன ரென்பதை யறியலாம்.

#### சிறப்புரிமை

சில வேந்தர்கள் காலத்துக் குறிப்பிட்ட சில பிரிவினருக்கு மட் டும் சில சிறப்புரிமைகள் அளிக்கப்படுதல் வழக்க மாகும். இரா சேந்திரனது ஆட்சிக் காலத்தில் காஞ்சி மா நகரின்கண் வாழ்ந்து வந்த ஒவிகுலா சிற்பிகளுக்கு மட்டும் இராசேந்திரனது முக்கிய மான செப்பேடுகளை வரையும் சிறப்புரிமை வழங்கப் பெற்றிருந்த செய்தி கல்வெட்டுச் சான்றுகளால் அறிய லாகும்.

#### இராசேந்திரன் காலத்துக் கூலி

கி.பி. 1018 ஆம் ஆண்டு செங்கற்பட்டு மாவட்டத்தின்கண் ணுள்ள நட்டம் என்னும் ஊரில் விறகு வெட்டி ஒருவன் ஒருநாள் கூலியாக நான்கு நாழி நெல் பெற்றான். செங்கற்பட்டு மாவட்டம் திருமுக்கூடலில் பல்லக்குச் சுமப்பவனுக்கு நான்கு நாழி நெல் நாள் கூலியாக அளிக்கப்பட்டதாகவும், அதே நாளில் அதே ஊரில் தோட்ட வேலை செய்பவனுக்குப் பத்து நாழி நெல் அளிக் கப்பட்டதாகவும் கல்வெட்டு இயம்புகின்றது.

**இராசேந்திரன் காலத்தில் விலைவாசி**

நெல்விலை இடத்திற்கிடம் மாறுபட்டிருந்தது. செழிப்பான பகுதிகளில் நெல்விலை குறைவாகவும், செழிப்பற்ற பகுதிகளில் விலை அதிகமாகவும் இருந்தது. கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டுள்ள விலை சராசரி விலை யாகும். கி.பி. 1012 இல் ஒரு பொன்னுக்கு ஏழு கலம் நெல் கொடுக்கப்பட்டது. இங்குப் பொன் என்பது கழஞ்சாகும். கி.பி. 1018 இல் செங்கற்பட்டு மாவட்டம், நட்டம் கிராமத்தில் ஒரு பொன்னுக்குப் பன்னிரண்டு கலம் நெல் கொடுக்கப்பட்டது. கி.பி. 1014 இல் வட ஆர்க்காடு மாவட்டத்தின்கண் உள்ள செங்குன்றம் என்னும் ஊரில் ஒரு பொற்காசுக்கு ஒன்பது ஆடுகள் கொடுக்கப்பட்டன.

காளகஸ்தியில் கி.பி. 1012 ஆம் ஆண்டு விற்கப்பட்ட நெய் விலை இன்றைய விலையில் $\frac{1}{6}$ பாகம் அல்லது $\frac{1}{7}$ பாக மாகும். அன்று ஒரு நாழி நெல்லுக்கு $1\frac{1}{2}$ நாழி தயிர் கொடுக்கப் பட்டது. ஒரு பொற் கழஞ்சுக்கு ஏழு கலம் நெல் வாங்கப்பட்டது. செங்கற்பட்டு மாவட்டத்தின்கண் உள்ள நட்டம் என்னும் கிராமத்தில் மூன்று நாழி நெல்லுக்கு நாற்பத்தெட்டு வெற்றிலையும், பன்னிரண்டு பாக்கும் கொடுக்கப்பட்டன (கி.பி. 1018).

கி.பி. 1018 ஆம் ஆண்டில் திருச்சி மாவட்டம் திருப்பைஞ்ஞீலியில் ஒரு நாழி நல்ல தரமான பருப்பும் ஐந்து நாழி நெல்லும் சம மதிப்புடையனவாக விருந்தன. ஒரு பலம் நல்ல வெல்லம் இரண்டு நாழி நெல்லுக்குச் சமமாகும்.

கி.பி. 1016 இல் திருமுக்கூடலில் ஒரு நாழி எண்ணெய் நான்கு நாழி நெல்லுக்கு வாங்கப்பட்டது. ஒரு நாழி நெய் $\frac{1}{3}$ கல நெல்லுக்கு வாங்கப்பட்டது. இரண்டு படி நெல்லுக்கு ஒரு படி தயிர் வழங்கப்பெற்றது. ஒரு படி பால் இரண்டு படி நெல்லுக்குக் கொடுக்கப் பட்டது. ஒரு குறுணி நெல்லுக்கு ஒரு நாழி கிழங்கு மாவு (Turmeric) வழங்கப்பட்டது.

**மதுராந்தகன் மாடையின் மதிப்பு**

இராசேந்திரனது பதின்மூன்றுவது ஆட்சி யாண்டில் திருவொற்றியூரில் ஒரு மதுராந்தகன் மாடை, இருநூற்றைம்பது கூலியாட்களைப் பெற்றது. ஒரு மதுராந்தகன் மாடை $\frac{1}{8}$ வேலி நிலத்தினை வாங்கும் சக்தி யுடையது.

*மாணவர்க்கு உணவு*

தென்னர்க்காடு மாவட்டத்தில் உள்ள மறைநூல் விடுதிக் கல்லூரியில் ஒரு மாணவனுக்கு $\frac{5}{6}$ குறுணி நெல் உணவுக்காகச் செலவிடப்பட்டது.

இளநிலை மாணவனுக்கு (Junior Student) $\frac{3}{4}$ குறுணி நெல்லும், முதுநிலை மாணவனுக்கு (Senior Student) $1\frac{1}{4}$ குறுணி நெல்லும் உணவிற்காகச் செலவிடப்பட்டன.

திரிபுவனி வடமொழிக் கல்லூரியில் இளநிலை மாணவனுக்கு $\frac{3}{4}$ குறுணி நெல்லும், முதுநிலை மாணவனுக்கு ஒரு குறுணி நெல்லும் வழங்கப்பட்டன.

இதனைக் கொண்டு எண்ணாயிரம் கல்லூரி முதுநிலை மாணக்கர் அதிக உணவுண்டனர் என்பது புலனாகும். எண்ணாயிரம் கல்லூரியில் கல்வி பயின்று தேர்ச்சி பெற்ற மாணவர்கட்குப் பொற்பூ வழங்கப்பட்ட தென்பதனைக் கல்வெட்டுச் செய்தியா லறியலாம்.

*நீர்ப்பாசனம்*

இராசேந்திரனின் கரந்தைச் செப்பேட்டினைக் கொண்டு சிங்களாந்தகன் வாய்க்கால், மயிமாலய வாய்க்கால், புள்வேளூர் வாய்க்கால், செய்யாநல்லூர் வாய்க்கால், சுந்தர சோழ வாய்க்கால், கெஞ்ஞாப்பூர் வாய்க்கால், காமபதாகை வாய்க்கால், வெண்ணில் நீரோடுகால், இராசேந்திரன் வாய்க்கால், துளார் பாயும் வாய்க்கால், வெண்ணியாறு, திரிபுவன மாதேவிப் பேரேரி, கருணைக்காலான மும்முடிச் சோழப் பேராறு, சோழகங்கம் போன்ற வாய்க்கால்களும், ஏரிகளும் இன்னும் பல வாய்க்கால்களும் பாய்ந்து சோழ நாட்டைச் செழிப்பாக்கியதை யறியலாம்.

*மான்யகேத வெற்றி*

மேலைச் சாளுக்கியரின் தலைநகரான மான்யகேதத்தை வென்று தன்னடிப்படுத்த முதலாம் இராசராசன் கங்கணம் கட்டியிருந்தான். ஆனல், மான்யகேதத்தை வெல்லும்முன் இறந்துபட்டான். 'மான்யகேடத்தை நான் பிடிக்காத் வரையில் கிரிகர விகாரம் (மலை போன்றுயர்ந்த அடுக்கு மாளிகை) செய்வதில்லை' என்ற தன் தந்தையின் சூளுரையினை இராசேந்திரன் நிறைவேற்றியதைக் கீழ்க்கண்ட கரந்தைச் செப்பேட்டுப் பகுதியா லறியலாம்.[1]

[1] கரந்தைச் செப்பேடு-வ. செ. 55

'மான்ய கேதத்தை வீரஞன மதுராந்தக தேவன் தண்டத்திஞல் எரித்து, அவர்களுடைய அழுக்கற்ற புகழ்க் குவியல்களுடன், பல பொருள்களேயும் ஊர்திகளேயும், தனது தலைநகரில் இருந்துகொண்டே பறித்துக்கொண்டான்'.

### கங்கை வெற்றி

இராசேந்திரன் கங்கைகொண்ட நிகழ்ச்சியினைக் கரந்தைச் செப்பேடு, கீழ்க்கண்ட வரிகளால் விளக்குகின்றது.

'எல்லா அரசர்கட்கும் விளக்குப் போன்றவனும் நற்குணங்கள் நிறைந்தவனுமான அவன் (இராசேந்திரன்) கங்கையைக் கொண்டு வருவதற்காகத் தவம் பூண்டு உடல் மெலிந்த பகீரதனுடைய கதையைக் கேட்டுச் சிரித்துக்கொண்டே, அதன் கரையிலுள்ள அரசர்களாலேயே கங்கை நீரைத் தன் நாட்டுக்கு அழைத்து வந்து விட்டான்.'[1]

### கடார வெற்றி

இராசேந்திரன் மேலைச் சாளுக்கிய மன்னஞன தைலபனேயும், கடார நாட்டு வேந்தனேயும் வென்ற நிகழ்ச்சியினைக் கரந்தைச் செப்பேடு கீழ்க்கண்ட வரிகளால் வியந்து போற்றுகின்றது.

'இராசேந்திரனுடைய பராக்கிரமமான தீயானது தைலபனுடைய சந்ததியை எரித்துவிட்டது என்னும் செய்தி வியக்கத் தக்க தன்று. ஏனெனில், கடலைக் கடந்து கடாரத்தை நன்ருக எறிந்து விட்டான் என்கிற மற்ருெரு அற்புதத்தினுல்.'[2]

### வியப்பான செய்தி

கங்கை கொண்டான் அமைத்த கங்கைகொண்டசோளேச்சுரத்தில் பன்னிரண்டு முழுமையான கல்வெட்டுகளும் சில முற்றுப்பெருத கல்வெட்டுகளும் காணப்பெறுகின்றன. இவற்றுள் இராசேந்திரனது காலத்தது ஒன்றும் காணப்பட வில்லை என்பது வியப்பிற்குரியது; ஆய்வுக்குரியது. இதுபற்றிய காரணத்தை ஆய்வாளர் பணிக்கு விடுதலே நலம்.

### இராசேந்திர சோழன் அரசு கட்டிலேறிய ஆண்டு

'மதுராந்தகன் என்னும் இவ்வரசன்
தான் பட்டத்துக்கு வந்த ஆண்டில்,

[1] கரந்தைச் சேப்பேடு-செ. 64
[2] கரந்தைச் செப்பேடு-வ.செ. 62

ஆயிரத்துடன் எண்பதும் கூடின
எட்டாவது ஆண்டினை அடைந்தவனாய்
நாளும் விழாக்கள் நிறைந்த தனது
நாட்டில் நிலைத்த செல்வம் படைத்த
பல ஆசிரமங்களை அந்தணசிரேஷ்
டர்களுக்கு அன்புடன் கொடுத்தான்'

இராசேந்திரனது கரந்தைச் செப்பேட்டின் மன்னர் மரபு புகழ்ச்சியுரையின்[1] (பிரஸஸ்தி) கண் இவன் பிரமதேய தானம் செய்த நிகழ்ச்சியும், ஆண்டும் இவ்வாறு குறிக்கப் பெறுகின்றன.

இராசேந்திரனது ஆட்சியாண்டு ஆயிரத்து எண்பதில் தொடங்குவதாகவும், இவன் தனது எட்டாமாண்டு பிரமதேய தானம் செய்ததாகவும் (1080+8=1088) இச்செப்பேட்டினால் அறியலாம்.

இராசேந்திரன் கி.பி. 1012 இல் ஆட்சிக்கு வந்தான் என்பது வரலாற்றறிஞர்களின் ஆய்ந்த முடிபும், ஏன்? ஒருமித்த முடிபும் ஆகும்.

இச்செப்பேட்டில் குறிக்கப்பெறும் ஆண்டினை விக்கிரம ஆண்டுக்குக் கணக்கிடுவோமானால் இவன் கி.பி. 1024 இல் அரசு கட்டிலேறினானெனவும் கி.பி. 1032 இல் பிரம தேயத்தானம் செய்தான் எனவும் விளங்குகின்றன. தமிழகத்தின்கண் வழக்கிலிருந்த சாலிவாகன ஆண்டும், கலியுக ஆண்டும் இங்குப் பொருத்த முடையனவாக இல்லை.

இச்செப்பேட்டின் துணைகொண்டு இவன் ஆட்சிக்கு வந்த காலத்தினைக் கி.பி. 1024 என்று நிரணயிப்போமானால் விசயாலயன் கால முதற்கொண்டு வரும் பேராதிக்கச் சோழர்களின் காலம் முழுவதும் மாற்றப்பட வேண்டியதொரு சூழ்நிலை உருவாகிறது. இதுபற்றிய காலக் கணிப்பை ஆராய்ச்சியாளர்களின் ஆய்வுக்கு வைத்தலே நன்று.

### இராசேந்திரனின் ஆட்சியிலேற்பட்ட கலகம்

இராசேந்திரனின் ஆட்சிக் காலத்தில் மக்கள் எல்லா வளமும் பெற்று அமைதியாக வாழ்ந்த போதிலும் ஆங்காங்குச் சில

[1] கரந்தைச் செப்பேடு வ. செ. 68

கலகங்களும் தோன்றின. இதனை இவனது ஏழாமாண்டின் கீழையூர்க் (தஞ்சை மாவட்டம்) கல்வெட்டா லறியலாம்.[1]

இவனது ஆட்சிக் காலத்தில் இராசராச சதுர்வேதி மங்கலம் என்னும் ஊரில் ஒரு 'துரிதம்' (கலகம்) தோன்றியது. அக்கிராமத்தில் கொலை, கொள்ளை, குழப்பம், அமைதி யின்மை யேற்பட்டதால் அவ்வூர் மக்களனைவரும் வெளியூர் சென்று குடியேறினர். இதனால், சட்டமும், அமைதியும் கெட்டுக் குழப்பமும் கொந்தளிப்பும் அரசோச்சின.

**சம்சத்சர வாரியக் கூட்டம்**

நத்தம் கல்வெட்டினைக் கொண்டு[2] சம்சத்சர வாரியர் இராசேந்திர சோழன் கட்டுச் சாலையில் கூடினர் என்பதும், அக்கூட்டத்தில் கஞ்சாரன் ஐயன் சூரியன் என்னும் வகை செய்கின்ற கோட்டதிகாரியும் கலந்து கொண்டான் என்பதும் புலனாகின்றன.

**நடுகல்**

பண்டைத் தமிழகத்தின்கண் போர் வீரர்கள் போர்க் களத்தில் இறந்துபட்டால் அவர்களது நினைவாகக் கல் எடுத்து அதனை நட்டு வழிபடுதல் மரபாக இருந்தது. அதனை நடுகல் என்றும் வீரக்கல் என்றும் வழங்குவர்.

முதலாம் இராசேந்திரனது ஆட்சிக் காலத்திலும் போர்க் களத்தின்கண் மாண்டு விட்ட வீரர்களுக்கு நடுகல் அமைத்து வழிபட்டனர். இதனைக் கோவை மாவட்டம் கொடுமுடிக் கருகில் வடிவுள்ள மங்கலம் நெய்யாற்றங்கரைத் தோட்டத்தில் "ஊராளி வேட்டுவன் அழகன் காளி அவன் இதில் பட்டான்" எனும் சொற்கள் பொறிக்கப்பட்ட நடுகல் காணப்படுதலால் அறியலாம். இது போன்று இவனது காலத்திய நடுகற்கள் பல இன்று காணப்படுகின்றன.

இறந்துபட்ட வீரன் ஒரு கையில் வாளும், மறு கையில் கேடயமும் தாங்கிப் போர்க் களத்தில் வீராவேசத்துடன் போர் புரியும் காட்சியும், அவனருகில் விளக்கு, சிமிழ் போன்ற பொருள்கள் வைக்கப்பட்டுள்ளமையும் போன்று கல்லில் செதுக்கி, அதன் பக்கத்தில் இன்னவீரன் இன்ன போரில் இன்ன மன்னன் காலத்

[1] S. I. I. 92 of 1946-47
[2] 262 of 1912

தில் வீர மரணம் எய்தினன் என்ற குறிப்புகளும் செதுக்கப் பட்டிருக்கும். இதனைப் போன்ற நடுகற்கள் செங்கம் பகுதியிலும், தருமபுரிப் பகுதியிலும் ஏராளமாகக் கிடைக்கின்றன.

**இறைவனுக்குக் கள் படைத்தல்**

இராசேந்திரன் தனது கங்கை வெற்றியின் விளைவாகக் கோலாரில் 'யோகேஸ்வரா'வுக்கும் 'யோகினி'க்கும் கோயில் எடுப்பித்து மத்யமபானம் (கள்) படைக்கத் தக்க ஏற்பாடுகளைச் செய்திருந்தான்[1] என்பதனைக் கோலார் கோயில் கல்வெட்டா லறியலாம். கலிங்கத்துப் பரணியில் குறிக்கப் பெற்றுள்ள பைரவி வணக்கம் இதனைப் பின்பற்றியதா யிருத்தல் வேண்டும்.

**கோத்திரப் பிரிவுகள்**

சோழர் காலத்தில் பார்ப்பனருள் பல கோத்திரப் பிரிவுகள் இருந்தன. இதனை 'இவ்வூர் விஸ்வாமித்ரகோத்திரத்துத் திரு வஸ்தம்ப சித்திரத்துக் கொடுங்கை அதிராச்சரன் ஸ்ரீவத்ஸ கங்க பட்டன்'

'இந்நாட்டு முடிச் சோணாட்டு ஜநநாம சதுர்வேதி மங் கலத்து ஆத்ரேய ஹோத்திரத்து வைசானஸ ஸுத்திரத்துக் கேசவன் திருவரங்க பட்டன்'

'இவ்வூர் லோஹிதஹோத்திரத்துக் காத்யாயன ஸுத்திரத் துப் புலிப்புரத்து மஹாஸேனன் ஸ்ரீமாதவ கிரமவித்தன்'[2]

என்னும் கரந்தைச் செப்பேட்டுப் பகுதிகளா லறியலாம்.

[1] Gangai Konda Cholapuram-R. Nagasamy-Page. 60, 61
[2] கரந்தைச் செப்பேடு-வட. செ. தொடர் எண். 26-30

# 17. மதிப்பீடு

புகழ் படைத்த இந்தியப் பேரரசுகளுள் சோழப் பேரரசும் ஒன்ருகும். இப்பேரரசு தமிழகத்தின்கண் பன்னெடுங் காலம் நிலையான புகழுடன் விளங்கியதோடு, இந்தியா முழுமையிலும் தன் புலிக் கொடியினைப் பட்டொளி வீசிப் பறக்கச் செய்தது. சோழர்களின் ஏகாதிபத்தியப் பேரரசினை நிறுவித் தமிழகத்தில் மட்டும் அன்றித் தக்காணத்திலும், கடல் கடந்த நாடுகளிலும் தன் வீரத்தினையும் வெற்றியினையும் நிலைநிறுத்திப் புகழ்க்கொடி உயர்த்தியவன் முதலாம் இராசராச சோழனுவான். திறனும் திண்மையும் வாய்க்கப்பெற்ற இம்மாமன்னனின் மகனுகத் தோன்றிய இராசேந்திரனும் தந்தையினும் மேம்பட்ட பெருவீரனுகவும், ஆட்சியாளனுகவும், நாடு பிடிப்பாளனுகவும் திகழ்ந்து, தமிழக வரலாற்றில் மட்டுமன்றி இந்திய வரலாற்றிலும் சிறப்பான தொரு இடத்தினைப் பெறுகிருன்.

தன் தந்தையிடமிருந்து பரந்து பட்ட, புகழ் மிக்க தொரு பேரரசினைப் பெற்ற இராசேந்திரன், அதனைப் பேணிக் காத்த தோடு, மேலும் மேலும் பல வெற்றிகள் பெற்றுச் சோழப் பேரரசினை விரிவுபடுத்தும் பணியில் பெருவெற்றி பெற்ருன். இராசராசன் ஆட்சிக் காலத்திலேயே சோழப் பேரரசின் ஏகாதிபத்தியம் வெளி நாடுகளில் நிறுவப் பட்ட போதிலும், இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில்தான் சோழரது ஏகாதிபத்தியம் திக்கெட்டிலும் நிலைநாட்டப்பட்டது.

இராசராசனின் ஆட்சிக் காலத்திலேயே இராசேந்திரன் படைத் தலைமை யேற்று வெற்றிகள் பல படைத்தவனுதலின், தான் அரச பதவி யேற்கு முன்பே போர்ப் பயிற்சியில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தான் என்பதனை நாம் நினைவிற் கொள்ள வேண்டும். சோழப் பேரரசின் பகைஞர்களான சேர, பாண்டி

யரையும், மேலைச் சாளுக்கியரையும் வென்றடிமைப் படுத்திய இராசேந்திரன் மாபெரும் வீரன் என்பதில் சிறிதும் ஐய மில்லை.

மாபெரும் வீரனும் கரிகாலனது கால் வழியினனான இவனும், தனது ஆற்றல் மிகு முன்னோனைப் போன்று வடநாடு நோக்கிப் படை யெடுத்துப் பீகார்,வங்காள நாட்டு வேந்தர்களை வென்று, கங்கை நீரினைக் கொணர்ந்து, செயற்கரிய செயல் புரிந்ததால் இவனை வியத்தகு வெற்றி வீரன் என்று வரலாறு சிறப்பிக்கின்றது. தமிழக முழுவதிலும் தனிப்புகழ் கொண்டு தக்காணத்திலும் தனது வெற்றியினை நிலை நாட்டி, அதற்கப்பால் வடநாட்டிலும் தனது பெருவீரத்தினை நிலை நிறுத்திய இவன் தமிழகப் பெருவேந்தர்களுள் நிலையான தொரு தலையாய இடத்தைப் பெறுகிறான்.

தரைப் படை கொண்டு தன்னிகரற்ற வெற்றிகள் பல பெற்ற இராசேந்திரன்,தனது கப்பற் படையினைச் செப்பம் செய்து, ஈழ நாட்டின்மீது படையெடுத்து, ஈழநாடு முழுவதனையும் தன்னாட்சியுடன் இணைத்துக் கொண்ட நிகழ்ச்சி இவனது கடல் கடந்த வெற்றிக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

அலைகடல் நடுவுள் பலகலஞ் செலுத்திக் கடார நாட்டின்மீது இராணுவத் தாக்குதல் நடத்திப் பெருவெற்றி பெற்றுத் தனது கடல் கடந்த பேரரசினை விரிவுபடுத்த முனைந்த இராசேந்திரன், இந்திய வரலாற்றில் எவரும் செய்யாத சிறப்பான செயல் செய்த செயல் வீரனாகும் என்பது வரலாறு காட்டும் பேருண்மையாகும். இந்திய வரலாற்றிலேயே கடல் கடந்த பேரரசினை நிறுவுவதில் நாட்டம் கொண்டு, பெருவெற்றி பெற்றவன் இராசேந்திரனே யாவன் என்பது பெருமைக்குரிய தொன்றாகும். இதனால், இவன் தலைசிறந்த கடலாண்ட காவலன் என்பதும் அறியத் தக்க தாகும்.

காவிரி நாடனான இவன் கங்கை நாடனான மகிபாலனையும், சாளுக்கியச் சிங்கமாம் சய சிங்கனையும், சிங்கள வேந்தனும் ஐந்தாம் மகிந்தனையும், கடாரத்துக் காவலனும் விசயோத்துங்க வருமனையும் வென்றடக்கியமையின் வீரத்தின் இருப்பிடமாய், வெற்றியின் பிறப்பிடமாய்த் திகழ்ந்து, சோழ ஏகாதிபத்தியத்தைப் பாரெங்கும் பரப்பிய பெருமைக் குரியவனானவன் என்பது பெறப்படுகின்றது. வட இந்திய மன்னர்கள் தென்னாட்டில் வெற்றித் திருவுலா (திக்விசயம்)நிகழ்த்துவதே வழக்கம் என்ற மரபினை மாற்றித் தமிழ் நாட்டானும் வட நாட்டில் வெற்றித்திரு

வுலா நடத்த முடியுமென்ற பேருண்மையைச் செயல்படுத்திக் காட்டிய பெருவீரன் இராசேந்திரன், தமிழரின் மானங் காத்த மாவீரன் ஆவன் என்ப துறுதி.

மலாயா நாட்டைச் சுற்றிலும் சுமத்திரா நாட்டைச் சுற்றிலு முள்ள நாடுகளை வென்று, ஆங்குச் சோழர்தம் புலிக்கொடி யினைப் பட்டொளி வீசிப் பறக்க விட்டுத் தமிழர்தம் புகழினை நிலை நாட்டிவிட்டு வந்த இவன், தன் தந்தையினும் சிறந்த வெற்றி யாளன் என்பதும், ஏகாதிபத்தியவாதி என்பதும் நாடறிந்த உண்மையாகும். கடல் கடந்த வெற்றிகளின் மூலம் புகழ்க்கடலின் கரைகண்ட காவலனும் இராசேந்திரன் தனது வலிமையினால் இங்கிலாந்து நாட்டினைப் போன்று கடலாதிக்கத்தில் முதன்மை பெற்று விளங்கினான் என்பதும் குறிப்பிடத் தக்க தாகும்.

இவனது ஏகாதிபத்தியச் சிறப்பினைக் கேள்விப்பட்ட மாத் திரத்திலேயே, காம்போச நாட்டுக் காவலனும் சூரிய வருமன், இராசேந்திரனின் நட்பை நாடினான். இவன் சீன நாட்டிற்குத் தூதுக் குழுவினை அனுப்பிச் சீனாவுடன் நட்புறவு கொண்டிருந் தான். எனவே, இவன் வாளாண்மையினாலும் தோளாண்மையி னாலு மட்டு மன்றித் தனது அன்பினாலும் கடல் கடந்த நாடுகளு டன் நல்லுறவு கொண்டு, சோழப் பேரரசின் புகழினையும் பெருமையினையும், நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமு மாகப் பெருக்கினான் என்பது புலனாகும்.

மாபெரும் வீரனாகவும், அமைதியைப் பேணுபவனுமாகவும் திகழ்ந்த இராசேந்திரன், நாட்டு மக்கள் நலங்கருதி நாடாண்ட நல்லாட்சியாளனாகவும் தமிழக வரலாற்றில் சிறப்பிக்கப் படுகி றான். வாழையடி வாழையென வழிவழி நிலவி வந்த சோழர் ஆட்சி முறையினைப் பொன்னே போல் போற்றி, ஏற்ற மிக்க மாற்றங்களையும் செய்த நல்லாட்சி யாளனாகவும் இவன் திகழ் கிறான்.

வீரனாகவும், ஆட்சியாளனாகவும் சிறந்து விளங்கிய இவன், பல்கலைகளையும் பேணிக் காக்கும் கலைக் காவலனாகவும் புகழ் பெற்றுள்ளான். கங்கை கொண்ட சோழ புரத்தில் (திருச்சி மாவட்டம்) கம்பீரமாகத் தோற்ற மளிக்கும் கங்கை கொண்ட சோளேச்சரமும் அதனுள் காட்சி தரும் சிற்பங்களும் இவனது கலை யார்வத்தினைப் பறை சாற்றிக் கொண்டுள்ளன. இராசேந் திரனது ஆட்சிக் காலம் சிற்பக் கலையின் உச்ச நிலையைக் கண் ணுற்ற காலமெனக் கூறுதல் பொருத்தமே. கட்டடக்கலை,

உலோக வார்ப்புக்கலை, இசைக்கலை போன்ற கலைகளைப் பேணிக் காப்போனாகவும் இவன் அறிஞர்களால் போற்றப் பெறுகிறான்.

பொன்னிக் கரை கண்டு, வளம் பல கண்ட பூபதியாம் கரிகால் பெருவளத்தானின் கால்வழியினனான இவனும் நாட்டின் வளம் பெருக்க, உணவில்லாமையைப் போக்க, எண்ணிறந்த நீர்ப் பாசனத் திட்டங்களைத் தீட்டினான். கங்கை கொண்ட சோழ புரத்தில் நீல நெடுங்கடலோ! செய் கடலோ!! எனக் கண்டோர் வியக்கும் வண்ணம் அமைக்கப்பெற்ற 'சோழ கங்கம்' எனும் பேரேரி இவனது அற்புதப் படைப்பாகும். இந்தியாவிலேயே இதுவரை இதனைப் போன்ற பிரமாண்டமான ஏரி வெட்டப்பட வில்லை என்பதனால் இவன் மக்களின் நல்வாழ்வில் எத்துணை நாட்டம் கொண்டு, வறுமையையும், வெறுமையையும் நாட்டைவிட்டு ஓட்டும் பணியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டான் என்பது புலப்படும். இவனது காலத்தில் வளமையும் செழுமையும் சிறந்து பொங்கின.

கலையார்வம் கொண்டு கங்கை கொண்ட சோளேச்சரத்தையும், மதுரையம்பதியின்கண் எழில் மிக்க மாளிகையையும் எடுப்பித்த, கலைப்பித்தனும் இராசேந்திரன், இலக்கிய ஆர்வமும் கொண்டிருந்தான் என்பது போற்றுதற்குரிய தாகும். வடநாட்டுப் போச மன்னனைப் போன்றும், ஹர்ஷ மன்னனைப் போன்றும் கற்றறிந்த மேதைகளைப் போற்றுபவனாகவும், தானே இலக்கியத்தில் சிறந்த ஈடுபாடு கொண்டவனாகவும் சிறந்து விளங்கியவனாதலின் 'பண்டித சோழன்' எனவும் சிறப்பிக்கப்படுகிறான். உயர் நிலைக் கல்விக்கெனப் பல வடமொழி வேதக் கல்லூரிகளை நிறுவி மாணவர்கட்கு இலவச உணவும் கல்வியும் அளித்த இராசேந்திரன் பண்டைய மன்னர்களுள் தலை சிறந்த கல்வியாளனாகவும் விளங்குகிறான். இவனது ஆட்சிக் காலமும் வடமொழி வளர்ச்சியின் பொற் காலமாகத் திகழ்ந்தது எனக் கூறுதல் பொருத்தமுடையதே.

கல்வி வளர்ச்சிக்கும், பார்ப்பனர்களுக்கும், திருக்கோயில் கட்கும் வறியருக்கும் வரையாது வாரி வாரி வழங்கிய வள்ளலாகத் திகழும் இவன் சிறந்த கொடையாளன் எனவும் புகழ் பெற்றுள்ளான். ஏறத்தாழ இவன் ஆயிரத்து எழுபத்து மூன்று பேருக்குக் கொடை யளித்துள்ளான் என்று கரந்தைச் செப்பேடும் புகழ்வதால் இவன் பாரியைப் போன்ற கொடை வள்ளலாகவும் மதிக்கப் பெறுகிறான் என்பது போற்றுதற்குரிய தாகும். இம்மன்னன் நன்கொடை யளித்த செய்தியினைச் செப்பேட்டில்

எழுதி வைத்ததால் நாட்டில் செம்புத் தட்டுப்பாடு ஏற்பட்டு விட்டது என்று புலவர்கள் இவனைப் புகழ்ந்துள்ளதால் இவனது கொடைச் சிறப்பு நன்கு விளங்கும்.

மாபெரும் நாடு பிடிப்பாளனாகப் போற்றப் பெறும் இராசேந்திரன் ஆன்மீக வாழ்விலும் ஆர்வம் மிகக் கொண்டிருந்தான் என்பது குறிப்பிடத் தக்கதாகும். சிவநேயச் செல்வனாக விளங்கிய இவன், ஈசன் கழல் ஏத்தும் செல்வமே செல்வமென உணர்ந்து, சிவாலயங்கள் பல எழுப்பிச் சைவ சமய வளர்ச்சிக்குப் பெருந்தொண்டாற்றிச் சைவ சமய வரலாற்றிலும் அழியாப் புகழினைப் பெறுகிறான். வடநாட்டின் கங்கைப் பகுதியிலிருந்து சைவ சமய ஆச்சாரியார்களை அழைத்து வந்து, தமிழகத்தில் குடியேற்றிப் பல்வேறிடங்களில் நிலவி வந்த சைவ சமயத்தினை ஒன்றுபடுத்திய பெருமை இவனையே சாரும். இதன் விளைவாகவே 'சைவ சித்தாந்தம்' தமிழகத்தில் தோன்றியிருக்கக் கூடுமென அறிஞர் பலர் எண்ணுகின்றனர். இவ்விதம் ஒல்லும் வகையெல்லாம் சைவ சமயத்திற்குத் தொண்டு செய்து, சமய வாழ்வு நடாத்திய இராசேந்திரனைப் புத்தமதம் தழைத்தோங்க அருந்தொண்டாற்றிய மாமன்னன் அசோகனுடனும், கிறித்தவ சமயத்தின் வளர்ச்சிக்கு அயர்ச்சியின்றிப் பாடுபட்ட கான்ஸ்டன்டைனுடனும் ஒப்பிடுதல் மகிழ்ச்சிக்குரிய தொன்றாகும்.

இந்திய மண்ணில் பிறந்து இந்தியாவில் ஆட்சி புரிந்த மன்னர்கள் அனைவரும் பெரும்பாலும் சமயப் பொறை கொண்டவர்களாகவே காணப்படுகின்றனர். இதனை இந்திய மண்ணுக்குரிய பெருமையெனக் கூறுதலும் மிகையாகாது. இராசேந்திரனும் சிவநேயச் செல்வனாக விளங்கிய போதிலும் பிற சமயங்களையும் போற்றினான்; நல்லாதரவு தந்தான். சமரச மதக் கொள்கையென்னும் பரந்த கொள்கையைப் பின்பற்றிய இவன் மாமன்னன் அசோகனுக்கும், மொகலாயப் பெருமன்னன் அக்பருக்கும், பாரசீகப் பெருமன்னன் சைரசுக்கும் ஒப்பு நோக்கத் தக்கவனாக வரலாற்றில் புகழ் பெற்றுள்ளான். வைணவ ஆலயங்களுக்கும், புத்த விகாரைகளுக்கும் இவன் நல்லாதரவு நல்கினான் என்பதும் ஈண்டு நினைவிற் கொள்ளத் தக்கதாகும்.

தனது கங்கைப் படையெழுச்சியின் பயனாக வங்க மாநிலத்தில் தமிழர் நாகரிகத்தையும், கடாரப் படையெழுச்சியின் விளைவாகக் கடல் கடந்த நாடுகளில் தமிழர் பண்பாட்டினையும், மதத்தினையும், கலைகளையும் பரவச் செய்த இராசேந்திரன் தமிழ்நாட்

டிற்கும் பிற நாட்டிற்கு மிடையே பண்பாட்டுப் பாலம் அமைத்த பண்பாடு மிக்கவன் என்பது குறிப்பிடத் தக்கவனுவான். இதனுல், தமிழர் நாகரிகமும் பண்பாடும் கடல் கடந்த நாடுகளிலும் பரவ வாய்ப்பேற்பட்டது. பேராசிரியர் திரு. என். சுப்பிரமணியன் அவர்கள் 'இராசேந்திரனது கங்கைப் படையெழுச்சி இருவழிப் பண்பாட்டுப் போக்கில் முடிந்ததெனக் கூறலாம் என்றும், வங்கச் சைவ மரபு தமிழ் நாட்டில் புகுந்தது, இவற்றுள் ஒன்ருகுமென்றும், இதன் பயனுகத் தமிழ் நாட்டில் சைவ சித்தாந்தம் தோன்றி யிருக்கக் கூடு மென்றும், கருத்துத் தெரிவிக்கு மளவிற்கு இவன் பண்பாட்டுத் துறையின் வளர்ச்சிக்குப் பணி புரிந்தான் என்பது புலனுகும்.'[1]

ஏறத்தாழ நூற்று எழுபத்தைந் தாண்டு காலமாக (விசயாலய சோழன் கி.பி. 850-இராசேந்திரனது புதிய தலைநகர் நிறுவப்பட்டது கி.பி. 1024) விசயாலய சோழர் குடியின் தலைநகராய்த் திகழ்ந்த தஞ்சையினை விடுத்துத் தஞ்சையை விடப் பேரரசின் நடுப் பகுதியில் அமைந்துள்ள கங்கை கொண்ட சோழபுரத்திற்குத் தனது தலைநகரினை மாற்றிய இராசேந்திரன் நுண்ணிய அரசியல் திறன் மிக்கவன் என்பதில் யாருக்கும் கருத்து வேறுபாடு இல்லை. முகமது பின் துக்ளக் தனது தலைநகரினைத் தில்லியிலிருந்து தௌலதாபாத்திற்கு மாற்றித் தோல்வி கண்டான். ஆனுல், இக்காவல னமைத்த புதிய தலைநகரோ, ஏறத்தாழ இருநூற்று முப்பத்து மூன்ருண்டு காலம் (சோழப் பேரரசு அழியும் வரை) சோழப் பெருமன்னர்களின் தலைநகராகத் தொடர்ந்து புகழ் பெற்றிருந்தது, இராசேந்திரனுக்குக் கிடைத்த பெருவெற்றி யாகும். இதனுல், இவனது உய்த்துணரும் திறனை நாம் நன்கறியலாம்.

இவன் தன் மைந்தனுகிய இராசாதிராசனைத் தனது ஆட்சியின் தொடக்கக் காலத்திலேயே (கி.பி. 1018) இளங்கோவாக்கி[2] ஆட்சிப்பொறுப்பில் ஈடுபடுத் தித்தனக்குதவியாக வைத்துக் கொண்டமை, இவன் அரசியலில் நுண்மாண் நுழைபுலம் மிக்கோன் என்பதனைத் தெளிவாகக் காட்டுகின்றது. பாண்டிய நாட்டினை வெற்றி கொண்டு ஆங்குத் தன் மகனை அரசப் பிரதிநிதியாக (Viceroy) நியமித்து,[3] அவனுக்குச் சாடவருமன் சுந்தர சோழ பாண்டியன் எனப் பெயரிட்டுச் சேரநாட்டு ஆட்சிப் பொறுப்பினையும் அவனிடம் ஒப்படைத்துச் சோழர் வரலாற்றில்

[1] History of Tamil Nad–Dr. N. Subramanian
[2] Ep. Ind. Vol IX P. 218
[3] Ins. 363 of 1917

புதுமையான புதுநெறி காட்டிய புகழ் மிக்கோனுகவும் இக்கோமான் விளங்குகின்ருன். இச்செயலால் இவன் தன் பின்னேருக்கு வழிகாட்டியாகவும், கலங்கரை விளக்கமாகவும் அமைந்துள்ளான்.

திருக் கோயில்கட்குத் திருப்பணிகள் பல செய்த இவன், திருக்கோயிலமைப்பு வரலாற்றிலும், பிரதான கோயிலுக் கருகில் அம்மனுக்குத் தனிக்கோயில் அமைக்கும் புதுமையைப் புகுத்தித் தனக்கென ஒரு தனியிடத்தைப் பெறுகிருன். கங்கை கொண்ட சோளேச்சரத்திலுள்ள திருக்காமக்கோட்டம் ஈண்டு நினைவிற் கொள்ளத் தக்க தாகும்.

கலைத்துறையில் புதுமையைக் கூட்டிய இவனது புதுமைக் கொள்கையும் பிற்காலத்தில் தொடர்ந்து பின்பற்றப்பட்டது. இவன் சீன நாட்டுடனும், காம்போச நாட்டுடனும் கொண்ட நல்லுறவு இவனது பின்னேர்களாலும் பின்பற்றப்பட்டதால், இவன் சோழர் வரலாற்றில் தனது கூர்ந்த மதியால் பல புதுமையைப் புகுத்திய புரட்சியாளன் என்பதையும் அறியலாம்.

வலிமை மிக்க மேலைச் சாளுக்கியரை வெல்லும் பொருட்டுத் தன் மகளாகிய அம்மங்கா தேவியைக் கீழைச்சாளுக்கிய இராசராச நரேந்திரனுக்கு மணஞ் செய்வித்துத் தன் துணை வலியைப் பெருக்கித் தன் தந்தையின் அடிச்சுவட்டில் பீடுநடை போட்டவனும் நம் இராசேந்திரனே யாவான்.

ஒரு சிறந்த மன்னனுக்குத் தேவையான அத்துணை உயர் பண்புகளும் வாய்க்கப்பெற்றுச் சோழர் குல மாமணியாய்த் திகழ்ந்த இராசேந்திரன், சோழப் பெருமன்னனும் தன் தந்தையுமான முதல் இராசராச சோழனுக்கு இணையான, ஏன்? மேம்பட்ட புகழினையும் பெற்றுத் தமிழகத்தின் தலைசிறந்த மன்னனுய்த் திகழ்கிருன் என்பது குறிப்பிடத் தக்க தாகும். மன்னன் என்ற முறையிலே தன் தந்தையின் அடிச்சுவட்டைப் பின்பற்றிப் புகழ்பெற்ற இவன், தன் தந்தைக்குப் பெருமை தேடித்தரத் தக்க வகையில் ஈடு இணையற்ற சாதனைகள் பல புரிந்துள்ளான்.

தந்தை போற்றும் தனயனுக விளங்கிய இவன் தன் மனைவிகளுக் கேற்ற அன்பு மணாளனுகவும், தன் மக்களை நல் வழிப்படுத்தி, நல்லாட்சியாளர்களாகவும், பெருவீரர்களாகவும் உருவாக்கிவிட்ட ஒப்பற்ற தந்தையாகவும் சிறப்பிக்கப்படுகிருன். எனவே, இவன் மகன் என்ற முறையிலும், மணாளன் என்ற முறையிலும், தந்தை என்ற முறையிலும், வீரன் என்ற

முறையிலும், மன்னன் என்ற முறையிலும், ஆட்சியாளன் என்ற முறையிலும், பக்தன் என்ற முறையிலும் தன் கடமைகளைக் குறைவறச் செய்து முடித்தவன் என்பதனை அறியலாம்.

செங்கோல் முறையினைச் செம்மையாகச் செலுத்திய இம் மாமன்னன் பல வேந்தர்களுடன் ஒப்புமை கூறத் தக்க சிறப்புகளைத் தன்னகத்தே கொண்டவனுவான். ஒவ்வொரு மன்னனும் தனக்கெனச் சில தனித் தன்மைகளைப் பெற்றிருந்த போதிலும், பல அமிசங்களில் வேறு சில மன்னர்களுடன் ஒப்புமை கூறத் தக்க தகுதி படைத்தவர்களாகக் காணப்படுகின்றனர். இதனைப் போன்றே இராசேந்திரனும் சில தனித்த ஒப்புயர்வற்ற பண்புகளைப் பெற்றிருந்தான்; பிறருடன் ஒப்புமை கூறத் தக்க சிறப்பான பண்புகளையும் கொண்டு விளங்கினுன். எனவே, இவனை ஈண்டு வேறு சில மன்னருடன் ஒப்பு நோக்கிச் சீர்தூக்கிப் பார்ப்போம்.

ஹர்ஷன்

வடநாட்டு மாவீரனும், பெருவேந்தனுமான ஹர்ஷனும், தென்னுட்டு மாவீரனும், மாமன்னனுமான இராசேந்திரனும் சில அம்சங்களில் வேறுபாடு கொண்டுள்ள போதிலும் சில அம்சங்களில் ஒற்றுமை கொண்டுள்ளனர். இவ்விருவரிடையே காணப்பெறும் ஒப்புமையான பண்புகள் பற்றி ஈண்டுச் சிறிதாய்வோம்.

கி.மு. 606 முதல் கி.மு. 647 முடிய வடநாட்டின் பெருவேந்தனுக மிக்க புகழுடன் ஆட்சி புரிந்தவன் ஹர்ஷன். இவன் வடநாடு முழுமையும் வென்று, வடநாட்டில் தனக்கு நிகர் ஒருவருமில்லை யென வெற்றிக் கொடி நாட்டிய மாவீரனுவான். இவன் சிறந்த வெற்றியாளனுகவும் திகழ்ந்தவன்; இடைவிடாது போர் நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டவன். இராசேந்திர சோழனும் தென்னிந்தியாவில் வெற்றிக் கொடி நாட்டி, வட இந்தியாவிலும் வெற்றிக் கொடியேற்றிய மாவீரனுவான். சென்ற விடமெல்லாம் வெற்றி ஒன்றனையே கண்ட மாபெரும் வெற்றியாளனுவான். எனவே, வீரத்திலும் வெற்றியிலும் (ஹர்ஷன் இரண்டாம் புலிகேசியிடம் தோல்வி பெற்ற போதிலும்) இருபெரு மன்னர்களும் புகழ்பெற்று விளங்கினர்.

ஹர்ஷன் புத்த சமயத்தினை ஆதரித்து அதன் வளர்ச்சிக்குப் பெரிதும் பாடுபட்டான்; இரண்டாம் அசோகன் எனவும் அழைக்கப்பட்டான்; புத்தமத வரலாற்றிலும் ~~சிறப்பிடம்~~ சிறப்பான

இடத்தினைப் பெறுகிருன். இராசேந்திரனும் சிவஞானச் செல்வ ஞக விளங்கியதுடன் சைவ சமய வளர்ச்சிக்குப் பெரும்பணி யாற்றி யுள்ளான். வங்க நாட்டினின்றும் சைவ சமயாச்சாரியார் களை யழைத்து வந்து சைவ சமயம் தழைக்கத் தக்க பணி புரிந் துள்ளான். எனவே, இருவரும் சீரிய முறையில் சமயத் தொண்டு புரிந்தனர் என்பது தெளிவு.

ஹர்ஷன் தனது ஆட்சிக் காலத்தில் சமயப் பணி யாற்றிய தோடு கலைப் பணியும் ஆற்றி யுள்ளான். அவனது காலத்தில் அழ கிய, கலைச் சிறப்பு மிக்க புத்தர் படிமங்கள் வார்க்கப் பெற்றன. புத்த விகாரைகள் அமைக்கவும் ஆதரவு நல்கினுன். இராசேந் திரனும் சமயப் பணியுடன் கலைப் பணியும் புரிந்தான். நுண்ணிய வேலைப்பாடு மிக்க நடராசர் படிமங்கள் பல வார்க்கப்பெற்றன. திருக்கோயில்கள் கட்டப்பட்டன. எனவே, இருவரும் கலை யார் வம் கொண்டு கலைப்பணி யாற்றினர் என்பது உள்ளங்கை நெல் லிக் கனி ஆகும்.

ஹர்ஷன் சிறந்த கொடையாளனுகவும் வரலாற்றில் சிறப் பிக்கப்படுகிருன். புத்த மாநாடு கூட்டிப் புத்தமத சந்நியாசிகளுக் கும், பார்ப்பனர்களுக்கும், சமணத் துறவிகளுக்கும் பொருளை அள்ளி யள்ளிக் கொடுத்தான்; வரையாது வழங்கும் வள்ளல் எனவும் போற்றப்படுகிருன். இவன் கொடை பெரும்பாலும் சம யம் தழுவிய கொடையாகு மென்பதை யாவரு மறிவர். இராசேந் திரனும் கொடை யளிப்பதில் வல்லவனுக விளங்கினுன். கல்விப் பணிகளுக்கும், திருப்பணிகளுக்கும், பார்ப்பனர்களுக்கும் வாரி வாரி வழங்கி, வள்ளலெனப் பெயர் பெற்ருன். இவன் ஆயிரத் திற்கும் மேற்பட்டவர்களுக்குக் கொடை யளித்ததாக இவனது கரந்தைச் செப்பேடு செப்புகிறது. எனவே, இவ்விரு வேந்தர் களும் கொடை வள்ளல்களாகத் திகழ்ந்தனர் என அறியலாம்.

புத்த மதத்தினைப் போற்றி வளர்த்து, அதன் வளர்ச்சிக்குப் பெருந்துணை புரிந்த ஹர்ஷன், புறச் சமயத்தார் அனைவருக்கும் வழிபாட்டுரிமை யளித்துச் சமயப் பொறை கொண்டு சிறப்புற் ருன். இராசேந்திரனும் சிவமணியாகத் திகழ்ந்த போதிலும், சைவ சமயத்தின் வளர்ச்சிக்கு அருந்தொண்டாற்றிய போதிலும் பல் வகை சமயத்தாரையும் ஆதரித்து அவர்கள் சமயங்களுக் கும் ஆக்கம் தந்து, சமயத் துறையில் சமரசக் கொள்கையைப் பின்பற்றினுன். 'எம்மதமும் சம்மதம்' எனும் பொன்னுன கொள் கையினைக் கண்ணுகக் கருதிய இவ்விருவரும் சமயக் காழ்ப்பில்லா தவராவர் என்பது போற்றத் தக்க தாகும்.

பகைஞர்களைப் போர்க் களத்தில் வென்று, நல்லாட்சி புரிந்து அமைதிப் பணியும் மேற்கொண்ட ஹர்ஷன் அன்னிய நாட்டினருடன் நல்லுறவு கொள்ளவும் நாட்டம் கொண்டான். எனவே, சீன நாட்டினுக்குத் தூதுக் குழு வொன்றனை அனுப்பி வைத்துச் சீனப் பேரரசரிடம் நட்புறவு வைத்துக் கொண்டான் பண்பு மிக்க ஹர்ஷன். சோழர் குல விளக்கான இராசேந்திர னும் அண்டை நாட்டுடன் நட்புக் கொண்டதோடு நில்லாது, சீன நாட்டுடன் நட்புக் கொள்ளும் தணியா வேட்கைகொண்டு சீனப் பெருமன்னனுக்குத் தூதுக் குழுவினை அனுப்பி வைத் தான். இதனால், சீன-சோழ நல்லுறவு நீடித்தது. இன்று நாம் சீனாவுடன் நட்புறவு கொள்ள வில்லையென்றாலும், அன்றே ஹர் ஷனும் இராசேந்திரனும் சீன நாட்டுடன் நல்லுறவு கொண்டி ருந்தனர் என்பது பெருமைக்குரிய தொன்றாகும்.

மாமன்னனாகிய ஹர்ஷன், கல்வி கேள்விகளிற் சிறந்த அறி ஞர் பெருமக்களை நன்கு ஆதரித்துப் போற்றிப் பாதுகாத்தான். இதனால், வடமொழி இலக்கியம் பெரிதும் வளர்ச்சி பெற்றது. அறி ஞர்களைப் பேணிக் காத்த ஹர்ஷன் தானே வட மொழியில் சிறந்த புலமையும் பெற்றிருந்தான் என்பது பொன் மலர் நாற்றம் பெற்றது போன்ற தாகும். கன்னித் தமிழனாகிய இராசேந்திர னும் ஆன்றவிந் தடங்கிய சான்றோரையும், அறிஞர் பெருமக்களை யும் பேணிப் பாதுகாத்தான். அதனுடன் நில்லாது தானும் தமிழ் மொழியிலும், வட மொழியிலும் பெரும்புலமை பெற்றுத் திகழ்ந் தான்; ‘பண்டித சோழன்’ எனும் சிறப்புப் பெயராலும் சிறப் பிக்கப்படுகிறான். நாடாண்ட காவலர்களான இவர்கள் அறிஞர் களாகவும் கல்விமான்களாகவும், கற்றோரைப் போற்றும் பெற்றி யுடையோராகவும் வரலாற்றில் புகழ் பெற்றுள்ளமை எண்ணி யெண்ணி மகிழத் தக்க தாகும். இராசேந்திரனது காலத்தில் வடமொழி இலக்கியங்கள் வளர்ச்சி பெற்று வடமொழி சிறப்பிடம் பெற்றமையும் ஈண்டு அறியத் தக்க தாகும்.

மாபெரும் வீரனாகவும், வெற்றியாளனாகவும் திகழ்ந்த ஹர்ஷ மாமன்னன் போற்றுதற்குரிய ஆட்சியாளனாகவும் (Administra-tor) விளங்கினான்; நாட்டு மக்களின் நலனே தன்னலனெனக் கொண்டு நல்லாட்சி முறையினை நிறுவி நற்புகழ் பெற்றான்; நாட்டின் பல பகுதிகளுக்கும் நேரில் சென்று மக்கள் நிலையினைப் பார்வையிட்டான்; அவர்களின் குறைகளைக் களைந்தான். வீர மும் வெற்றியும் தன்னிரு கண்களாகக் கொண்ட இராசேந்திர னும் சிறந்த ஆட்சியாளனாக விளங்கினான்; நாட்டில் நல்லாட்சி முறையினை நிறுவி, நாட்டை வலம் வந்து, நலிவினைப் போக்கி

ஞன். மக்கள் நலன் கருதி ஓயா துழைத்து நல்லாட்சியாளன் என்னும் புகழினை இவனும் கொண்டான். இவ்விருவரும் நல்லாட்சியாளர்கள் என்பதில் சிறிதும் ஐய மில்லை.

தென்னாட்டு மாமன்னனும் இராசேந்திரனும், வடநாட்டுப் பெருமன்னனும் ஹர்ஷனும் தமக்குள் பல அம்சங்களில் ஒப்புமையான நற்பண்புகளைப் பெற்றிருத்தலின் இருவரையும் ஒப்புமை படுத்திக் கூறுதல் பொருத்தமே. பல செயல்களில் இராசேந்திர சோழன் வடநாட்டு ஹர்ஷனை ஒத்திருப்பதால் இவனைத் 'தென்னாட்டின் ஹர்ஷன்' எனக் கூறுதல் சாலப் பொருத்த மாகும். இவர்கட் கிடையே சில தனித் திறமைகளும் வேறுபாடுகளும் உள்ளன என்பதனையும் நாம் இங்கு உணர வேண்டும்.

உலக வரலாற்றின் பொன்னேடுகளை ~~நாம்~~ புரட்டிப் பார்க்கின்ற காலை இராசேந்திரனை யொத்த வீரமும், வெற்றியும், ஏகாதிபத்தியக் கொள்கையும், ஆட்சித் திறனும் கொண்ட மன்னர்கள் பலர் இருப்பதை யாவரும் உணர்வர். இவ்வியக்கத் தகு வேந்தர்களுள் பாரசீகப் பெருமன்னனும் சைரஸ் ஒருவனாகும். பாரசீக வரலாற்றின் அணியெனத் திகழும் மகாசைரசும் இராசேந்திரசோழனும் ஒப்புமை நோக்கத் தக்க சிறப்பினைப் பெற்றவ ராவர்.

மகாசைரசு பாரசீக நாட்டின் அகமேனிய வமிசத்தின் புகழ் பூத்த மன்னராவார். இவர் வியக்கத் தக்க வீரமும், பெறற்கரிய வெற்றிகளும், நல்லாட்சித் திறனும், சமயப் பொறையுணர்வும் மிக்கவராவர். சோழப் பெருமன்னனும் இராசேந்திரனும் மகாசைரசைப் போன்று வீரமும், வெற்றியும், நல்லாட்சித் திறனும், சமயப்பொறை யுணர்வும் கொண்ட ஆற்றல் மறவர் ஆதலின், இராசேந்திரனை இந்தியாவின் மகா சைரஸ் எனக் கூறலாம். வீர வாழ்வு வாழ்ந்த இவ்விரு மன்னர்களும் செயற்கரிய செயல் செய்த வீரராவர் என்பதனை வரலாறு என்றென்றும் உணர்த்திக் கொண்டே யிருக்கு மென்பதில் எள்ளளவும் சந்தேக மில்லை.

கடல் கடந்த வெற்றிகளிலும் மகா சைரஸ் மன்னனும் இராசேந்திர சோழனும் சிறந்து விளங்கினர் என்பது ஈண்டு உணரத் தக்க தாகும்.

சோழப் பெருநாட்டின் சீர்மிகு மன்னனாகத் திகழ்ந்து, நாற்றிசையும் புகழ் பரப்பிய முதலாம் இராசராசனின் வளமான ஆட்சிக்குப்பின் ஏற்பட்ட அவன் மகனான முதலாம் இராசேந்

திர சோழனின் ஆட்சிச் சிறப்பினை, மகேந்திர வருமப் பல்லவ னின் ஆட்சிக்குப்பின் ஏற்பட்ட அவனது கீர்த்திமிகு மைந்த னும் முதலாம் நரசிம்ம வருமப் பல்லவனின் சீர்மிகு ஆட்சியுட னும், முதலாம் சந்திர குப்தரின் ஆட்சிக்குப் பின்னர் ஏற்பட்ட சமுத்திர குப்தரின் மேன்மை மிக்க ஆட்சியுடனும், கிரேக்க நாட்டு பிளிப்பு (Philip) மன்னனின் ஆட்சிக்குப் பின்பு ஏற்பட்ட மாவீரன் அலெக்சாந்தரின் சீரிய ஆட்சியுடனும் ஒப்பிட்டு மகிழ லாம்.

நரசிம்ம வருமனும், சமுத்திர குப்தனும், அலெக்சாந்தரும் தம் தந்தையினும் மேம்பட்ட வெற்றி யாளர்களாகவும், புகழ் பூத்த மன்னர்களாகவும் விளங்கியதைப் போன்று, இராசேந்திர னும் தன் தந்தையினும் மேம்பட்ட வீரனுகவும் மன்னனுகவும் விளங்கினுன் என்பது குறிப்பிடத் தக்க தாகும். இவனது காலத் தில்தான் சோழப் பேரரசின் புகழும், பரப்பளவும் உச்ச நிலையில் இருந்தன என்பது வரலாறு கூறும் உண்மை யாகும்.

இவனது ஆட்சிக் காலத்தில் சோழப் பெருநாட்டின் ஆட்சி, சென்னை மாநிலம், மைசூர் மாநிலம், ஒரிசா மாநிலத்தின் தென் பகுதி, நைசாம் அரசின் பெரும்பகுதி, இலங்கை, மலேயா, சுமத்திரா ஆகிய நாடுகளில் பரவியதோடு இவனது மேலாண்மை கிழக்கிந்தியத் தீவுகளிலும் நிலை நாட்டப் பெற்றிருந்தது.

தமிழக வரலாற்றில் மட்டுமன்றி இந்தியத் துணைக் கண்ட வரலாற்றிலும், ஏன்? உலக வரலாற்றிலும்கூட இராசேந்திர சோழனைப் போன்று கடல் கடந்த வெற்றிகள் பெற்ற மன்னன் ஒருவனும் இல்லை என்பது வரலாறு காட்டும் உண்மை யாகும். இராசேந்திரனைப் பெற்றெடுத்ததால் புகழ் பெற்றது இவ்வுலகு.

இவ்வுலக மாவீரனைப் பற்றிய தெளிவான, விரிவான வர லாறு அறியப்படாமை வருந்துதற்குரிய தாகும். இச்சீர் மிகு வேந்தனைப் பற்றி மேலும் பல விவரங்கள் (செய்திகள்) கிடைக் கப் பெருமை பெருங்குறையே யாகும்.

பொதுவாகக் கூறுமிடத்து, இந்து மன்னர்களைப் பற்றிய தெளிவான வீர வரலாறுகள் கிடைக்கப்பெற வில்லை. இவர் களுள் சிவாஜி, கிருட்டினதேவராயர் போன்ற இந்து மன்னர் கள் காலத்தில், வருகை புரிந்த வெளிநாட்டுப் பயணிகளின் குறிப்புகளைக் கொண்டு ஓரளவு இவர்களது வரலாறு குறிக்கப் பெறுகிறது. ஆனல், அந்தோ! இராசராசன், இராசேந்திரன்

போன்ருேர் காலத்து எப்பயணியும் வருகை தந்து விரிவான குறிப்புகள் எழுத வில்லே.

இதுகாறும் கூறியவற்ருன் இராசேந்திரன் தன் தந்தையின் யடியொற்றி ஆற்றலும் ஆண்மையும் துணையெனக் கொண்டு, சாதனை பல புரிந்து, சோழப் பெருமன்னர்களுள் தலைசிறந்த வீரனுகத் திகழ்ந்து, இந்தியா முழுமையும் புகழ்க்கொடி நாட்டிக் கங்கை கொண்டான் எனச் சிறப்பிக்கப்பட்டுக் கடல் கடந்த நாடுகள் பலவற்றினை வென்று, 'கடாரம் கொண்டான்' எனும் சிறப்புப் பெயர் பெற்று, இந்தியாவின் ஈடு இணையற்ற கடலாண்ட காவலனுகப் போற்றப்பட்டுச் சிவஞானச் செல்வனுக விளங்கியதோடு, சமரச சமயச் செல்வனுகவும் போற்றப்பட்டு, அறிவில் மேம்பட்ட 'பண்டித சோழ'னுகத் திகழ்ந்து, கங்கை கொண்ட சோழ புரத்தினையும், கங்கை கொண்ட சோளேச்சுரத்தையும் அமைத்துக் கலைக்காவலனுய் விளங்கி, நல்லாட்சி புரிந்த சீர்மிகு ஆட்சியாளனுகவும், அரசியல் துறையில் புது நெறி காட்டிய கலங்கரை விளக்கமாகவும் விளங்கிச் சோழர் குடியின் பெருமையினையும் புலிக்கொடியினையும் இந்தியாவில் மட்டுமன்றிக் கடல் கடந்த நாடுகள் பலவற்றிலும் ஓங்கிப் பறக்க விட்ட மாமன்னன் முதலாம் இராசேந்திர சோழன், தனது ஆட்சியினுல் தமிழக வரலாற்றில் தங்க காலத்தினை நிறுவிப் புகழ்படைத்தான்—பெரும்புகழ் படைத்தான் என்பதனை வரலாறு என்றென்றும் சுட்டிக் காட்டிக்கொண்டே இருக்கும்; கடலலைகளும் இக்காவலனின் பெரும்புகழினை ஓயாது ஒழியாது முழங்கிக்கொண்டே இருக்கும். சோழர் குடிச் செம்மல் வாழ்க! இந்தியாவின் கடலாண்ட காவலன் வாழ்க!!

## பின்னிணைப்பு-1

### இராசேந்திரனின் மெய்க்கீர்த்தி

திருமன்னி வளர விருநில மடந்தையும்
போர்ச்சயப் பாவையுஞ் சீர்த்தனிச் செல்வியுந்
தன்பெருந் தேவிய ராகி யின்புற
நெடிதிய லூழியு ளிடைதுறை நாடும்
தொடர்வன வேலிப் படர்வன வாசியும்
சுள்ளிச் சூழ்மதிற் கொள்ளிப் பாக்கையும்
நண்ணற் கருமுரண் மண்ணைக் கடக்கமும்
பொருகட லீழத் தரசர்த முடியும்
முன்னவர் பக்கற் றென்னவர் வைத்த
சுந்தர முடியு மிந்திர னாரமும்
தெண்டிரை யீழ மண்டல முழுவதும்
எறிபடைக் கேரளன் முறைமையிற் சூடும்
குலதன மாகிய பலர்புகழ் முடியும்
செங்கதிர் மாலையும் சங்கதிர் வேலைத்
தொல்பெருங் காவற் பல்பழந் தீவும்
செருவிற் சினவி யிருபத் தொருகால்
அரசுகளை கட்ட பரசு ராமன்
மேவருஞ் சாந்திமத் தீவரண் கருதி
இருத்திய செம்பொற் றிருத்தகு முடியும்
பயங்கொடு பழிமிக முயங்கியில் முதுகிட்
டொளித்த சயசிங்க னளப்பரும் புகழொடு
பீடிய லிரட்ட பாடி யேழரை
யிலக்கமு நவநிதிக் குலப்பெரு மலைகளும்
விக்கிரம வீரர் சக்கரக் கோட்டமு
முதிர்பட வல்லை மதுரைமண் டலமும்
காமிடை வளைஇய நாமணைக் கோணமும்
வெஞ்சின வீரர் பஞ்சப் பள்ளியும்

பாசடைப் பழன மாசுணி தேசமும்
அயர்வில்வண் கீர்த்தி யாதிநக ரகவையிற்
சந்திரன் ரெல்குலத் திந்திர ரதனை
விளையமர்க் களத்துக் கிளையொடும் பிடித்துப்
பலதனத் தொடுநிறை குலதனக் குவையும்
கிட்டருஞ் செறிமிளை யொட்ட விஷயமும்
பூசுரர் சேருநற் கோசல நாடும்
தன்ம பாலனை வெம்முனை யழித்து
வண்டுறை சோலைத் தண்ட புத்தியும்
இரண சூரனை முரணறத் தாக்கித்
திக்கணை கீர்த்தித் தக்கண லாடமும்
கோவிந்த சந்தன் மாவிழிந் தோடத்
தங்காத சாரல் வங்காள தேசமும்
தொடுகழற் சங்குகொ டடல்மகி பாலனை
வெஞ்சமர் வளாகத் தஞ்சுவித் தருளி
ஒண்டிறல் யானையும் பெண்டிர்பண் டாரமும்
நித்தில நெடுங்கட லுத்தர லாடமும்
வெறிமலர்த் தீர்த்தத் தெறிபுனற் கங்கையும்
அலைகடல் நடுவுட் பலகலஞ் செலுத்திச்
சங்கிராம விசையோத் துங்க வர்ம
ஞகிய கடாரத் தரசனை வாகையும்
பொருகடல் கும்பக் கரியொடு மகப்படுத்
துரிமையிற் பிறக்கிய பருநிதிப் பிறக்கமும்
ஆர்த்தவ னகநகர்ப் போர்த்தொழில் வாசலில்
விச்சா திரத்தோ ரணமு மொய்த்தொளிர்
புனைமணிப் புதவமுங் கனமணிக் கதவமும்
நிறைசீர் விசயமுந் துறைநீர்ப் பண்ணையும்
வன்மலை யூரெயிற் றென்மலை யூரும்
ஆழ்கட லகழ்சூழ் மாயிரு டிங்கமும்
கலங்கா வல்வினை இலங்கா சோகமும்
காப்புறு நிறைபுனல் மாப்பப் பாளமும்
காவலம் புரிசை மேவிலிம் பங்கமும்
விளைப்பந் தூருடை வளைப்பந் தூரும்
கலைத்தக் கோர்புகழ் தலைத்தக் கோலமும்
தீதமர் பல்வினை மாதமா லிங்கமும்
கலாமுதிர் கடுந்திற லிலாமுரி தேசமும்
தேனக்க வார்பொழில் மானக்க வாரமும்
தொடுகடற் காவற் கடுமுரட் கடாரமும்
மாப்பொரு தண்டாற் கொண்ட கோப்பர கேசரி வன்மரான
உடையார் ஸ்ரீராசேந்திர சோழ தேவர்க்கு யாண்டு.

## பின்னிணைப்பு-2

### கங்கை கொண்ட சோழீச்சுரர் கோயில் கல்வெட்டு

வடார்க்காடு மாவட்டம், வந்தவாசி வட்டத்தில் கூழம்பந்தல் என்று ஒரு சிற்றூர் உள்ளது. இஃது இப்பொழுது காஞ்சியிலிருந்து இருபது கிலோ மீட்டர் தொலைவில், வந்தவாசிக்குச் செல்லும் நெடுஞ்சாலையில் அமைந்துள்ளது.

***திருக்கோயிலின் இடம்***

இவ்வூரின் வடகிழக்குப் பகுதியில் இன்று கம்பீரமாகக் காட்சியளித்துக் கொண்டிருப்பதுதான் கங்கைகொண்ட சோழீச்சுரம் என்று பெயர் பெற்ற திருக்கோயிலாகும். இக்கோயில், தமிழ் நாட்டு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையால் பழுது பார்க்கப் பட்டுப் பாதுகாத்து வரப்படுகிறது.

கூழம்பந்தலிலிருந்து வடக்கே எட்டுக் கிலோமீட்டர் தொலைவில் புகழ்பெற்ற மாமண்டூர் கல்வெட்டு உள்ளது.

முதலாம் இராசேந்திரனின் குருவான 'ஈசான பண்டிதர் காலியூர்க் கோட்டத்துப் பாகூர் நாட்டுக் கங்கை கொண்ட சோழபுரத்து எடுப்பித்த திருக்கற்றளி ஈசுவரமுடைய மகா தேவர்' என்று தெளிவாகக் கூறுகிறது.

***கொடை***

அவ்வாறு எடுப்பித்த அக்கோயிலுக்குச் செயங்கொண்ட சோழ மண்டலத்துக் காலியூர்க் கோட்டத்துப் புலிவல நாட்டு ஆதுவபாக்கத்தில் வெள்ளான் வகையாக விளங்கும்நிலங்களில் காணிக் கடமை மன்னனுக்குச் செலுத்தப்பட வேண்டிய நெல் இரண்டாயிரத்து இருநூற்றைம்பதின் கலத்தையும் பொன் அறு பத்தைங் கழஞ்சையும் வரியிலிட்டுக் கொடுத்தமையை இக்கல் வெட்டுத் தெரிவிக்கிறது.

### இராசேந்திரனின் கல்வெட்டு

முதலாம் இராசேந்திரனின் 22 ஆம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டுக் கங்கைகொண்ட சோழ ஈசுவர முடையாருக்கு ஆக்கூரார் நிலம் விற்றுக் கொடுத்ததைக் குறிக்கிறது.

### இராசாதிராசனின் கல்வெட்டு

முதலாம் இராசாதி ராசனின் முப்பத்து மூன்றும் ஆட்சி ஆண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு, கங்கைகொண்ட சோழ ஈசுவர முடையாருக்கு ஸ்ரீராசாதிராசதேவர் குருதேவர் அதிகாரிகள் பராசர்யந் வாசுதேவ நாராயணனுன உலகளந்த சோழப் பிரமராயன், திருநந்தா விளக்கு ஒன்று அமைத்து, அஃது எரிப்பதற்கு நெய் வழங்குவதற்காகச் சாவா மூப்பேராடு தொண்ணூறும், சுவாமிக்குத் திருவந்திக் காப்புக்காக ஐங்கழஞ்சு பொன்னும் அக்கோயில் சிவபிராமணர்கள் கையில் அளித்து முட்டாமல் அட்டிவரச் செய்ததைக் குறிக்கிறது.

முன்னரே கூறியது போன்று மற்றும் சில உடைந்த கல்வெட்டுகளும் காணப்படுகின்றன. அவைகளிலிருந்து யாதொரு செய்தியும் அறிந்துகொள்ள இயல வில்லை.

### ஊரின் பெயர்

கூழம்பந்தல் என்று இப்பொழுது வழங்கப்பெறும் இப்பெயர் எவ்வாறு எப்பொழுது ஏற்பட்டது? என்று அறிய முடிய வில்லை. முதலாம் இராசேந்திரனது பன்னிரண்டாம் ஆட்சி ஆண்டுக் காலத்துக் கல்வெட்டில் இவ்வூர் 'கங்கை கொண்ட சோழபுரம்' என்று அழைக்கப்படுகிறது. இம்மன்னனின் இருபத்திரண்டாம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டிலும், இவன் அருமை மைந்தன் முதலாம் இராசாதிராசனுடைய முப்பத்து மூன்றும் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டுகளிலும் 'விக்கிரம சோழபுரம்' என்று வழங்கப்படுகிறது. அதோடு இவ்வூர், வணிகர்கள் வாழ்ந்து வந்த இடம் என்பது 'நகரம்' என்ற சொல்லினல் சுட்டிக் காட்டப்படுகிறது. இவ்வூர், சயங்கொண்ட சோழ மண்டலத்துக் காலியூர்க் கோட்டத்துப் பாகூர் நாட்டில் அமைந்திருந்தது என்பதையும் கல்வெட்டுகள் மூலம் உணர முடிகிறது.

### வரிகள்

இக்கோயிலில் காணப்பெறும் கல்வெட்டுகள் மூலம் அக்காலத்தில் இப்பகுதியில் வழக்கில் இருந்த சில வரிகளின் பெயர்களையும் அளவு கோலையும் தெரிந்துகொள்ள முடிகிறது.

உழவிறை, எச்சோறு, கூற்று நெல், வெட்டி, அமஞ்சி ஆகிய வரிகளின் பெயர்கள் காணப்படுகின்றன. உழவுத் தொழிலின்மீது விதிக்கப்படும் வரிக்கு 'உழவிறை' என்றும், நிலங்களைக் கூறுசெய்யும் அதிகாரிகளுக்கு அளிக்கப்படும் சோற்றுக்கு 'எச்சோறு' என்றும், நிலங்களைக் கண்காணித்து வருவதற்காக வசூலிக்கப்படும் வரிக்கு 'வெட்டி' என்றும், நிலங்களுக்கு நீர்ப்பாய்ச்சுவதற்காக வசூலிக்கப்படும் வரிக்கு 'அமஞ்சி' என்றும் வழங்கப்பட்டு வந்துள்ளன. நிலங்கள் பதினாறுசாண் கோலால் அளந்து பிரிக்கப்பட்டன என்று தெரிகிறது.

*மன்னனின் ஆணை*

முதலாம் இராசேந்திரனின் பன்னிரண்டாம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு, அம்மன்னன் எங்கிருந்து கொண்டு ஆணை பிறப்பித்தான் என்பதையும் அவன் ஆணையிடுகையில் எந்தெந்த அதிகாரிகள் உடனிருந்தார்கள் என்பதையும் மிகத் தெளிவாகக் கூறுகிறது.

'நாம் முடிகொண்ட சோழபுரத்து நம் வீட்டின் உள்ளால் நீராடுமிடத்து நாம் தானஞ் செய்யா விருந்து'

என்ற தொடர் வருவதால் அரசன், இன்று பழையாறை என்று வழங்கப்படும் முடிகொண்ட சோழபுரத்தில் இருந்த தன் மாளிகைகளில் இருந்து ஆணை பிறப்பித்தான் என்பதை உணர முடிகிறது. தான் கொடுத்த தானம் 'சயங்கொண்ட சோழ மண்டலத்துப் புலிவல நாட்டு நாட்டார்க்கும் பிரமதேயக் கிழவர்க்கும் தேவத்தானப் பள்ளிச்சந்த, கணிமுற்றூட்டு, வெட்டப்பெற்றுப் பழவறச் சாலாபோகம் உள்ளிட்ட ஊர்களிலார்க்கும் நகரங்களிலார்க்கும்' தெரியப்படுத்த வேண்டும் என்பதையும் மன்னன் கூறியுள்ளான்.

*அதிகாரிகள்*

முதல் இராசேந்திரன் காலத்தில் இருந்த அதிகாரிகளில் சிலரை இங்குள்ள கல்வெட்டுக் குறிக்கிறது.

*ஓலை எழுதும்*

மகிபாலகுல காலன்

*ஓலை நாயகன்*

உத்தம சோழ பல்லவராயன்

முடிகொண்ட சோழ விழுப்பரையன்

விக்கிரம சோழச் சோழிய வரையன்
இராசராச பிரம்மாராயன்
ஒப்பிட்டுப் புகுந்த அதிகாரி
சனநாதனுன ராசேந்திர சோழ பிரமாதிராசன் உடன் கூட்டத்துக் கருமம் ஆராய்பவர்கள்
உதயதிவாகரன் தியான ராசராச மூவேந்த வேளான்
சூற்றியான சோழ வேளான்

**நடுவிலிருக்கும்**

சதாசிவபட்ட சோமயாசி
பரமேசுவர பட்டர்

**கருமர் ஆராய்பவர்**

மாணிக்கன் எடுத்த பாதமான சோழ மூவேந்த வேளான்

**புரவுவரித் திணைக்களத்துக் கண்காணி**

பெரும்பேற்கிழான் பட்டன் வாசுதேவன்
சீகண்டன் சேந்தன்

**புரவுவரித் திணைக்களம்**

பொன்னன் கொண்டையன்
சிறுகுடையாந் அடிகள் திருமணி
ஆலங்குளவன் ஆதித்தன்
சூலபாணி அருமொழி

**வரிப் பொத்தகம்**

கிழான் அரங்கன் வீதி விடங்கன்

**முகவெட்டி**

சங்கர நந்திபட்டன்
ஐயாறன் தேவன் கண்டன்
நெற்குன்றங்கிழான் காமன் சந்திரசேகரன்
வேளான் பெருமான்

**வரிப்பொத்தக் கணக்கு**

சானகிராமன் கேசவன்

**வரியிலி**

பட்டன் மாசறுசோதி

**வரியிலி**

சூரன் ஐயாறன்
சூற்றிப் பட்டாலகன்

**கீழ்முகவெட்டி**

பட்டன் மாசறுசோதி
நாராயணபட்டன்

**கண்காணி**

பொற்காடன் மதுராந்தகனுன ராசராச மார்த்தாண்டன் மூவேந்த வேளான்

குறிப்பு : இக்கல்வெட்டும் விளக்கமும் திரு. நடன காசிநாதன் அவர்களால் 'காலச் சுவடுகள்' எனும் நூலில் இடம் பெற்றுள்ளன.

# மரபு பட்டியல்-1

## சோழர் குடிவழிப் பட்டியல்

பேராதிக்கச் சோழர் (விசயாலயன்-முதலாம் இராசேந்திரன்)
(கி.பி. 850-கி.பி. 1044)

பரகேசரி விசயாலயன் (கி.பி. 850-871)
|
இராசகேசரி முதலாம் ஆதித்தன் (கி.பி. 871-907)
|
பரகேசரி முதலாம் பராந்தகன் (கி.பி. 907-955)

- இராசாதித்தன் (இராசகேசரி) (பட்டத்திளவரசன்)
- அரிகுலகேசரி
- இராசகேசரி கண்டராதித்தன் (கி.பி. 949-950-957)
  - பரகேசரி மதுராந்தக உத்தம சோழன் (கி.பி. 973-985)
    - மதுராந்தகக் கண்டராதித்தன்
- பரகேசரி அரிஞ்சயன் (கி.பி. 956-957)
  - இராசகேசரி சுந்தர சோழன் இரண்டாம் பராந்தகன் (கி.பி. 956-973)
    - பரகேசரி இரண்டாம் ஆதித்த கரிகாலன் (பட்டத்திளவரசன்) (கி.பி. 956-969)
    - குந்தவை
    - இராசகேசரி முதலாம் இராசராசன் (அருண்மொழி) (கி.பி. 985-1014)
      - பரகேசரி முதலாம் இராசேந்திரன் (கி.பி. 1012-1044)

## மரபு பட்டியல்-2

(கி.பி. 985—1071)



## மரபு பட்டியல்-3



முதலாம் இராசேந்திர சோழன் (பரகேசரி) கி.பி. 1012-1044
இராசகேசரி
முதலாம் இராசாதிராசன்
(கி.பி. 1018-1054)
கொப்பப் போரில்
மாண்டான்
பரகேசரி
இரண்டாம் இராசேந்திரன்
(கி.பி. 1052-1064)
கொப்பத்தில் முடி
புனைந்தான்
இராசகேசரி
வீர ராசேந்திரன்
(கி.பி. 1063-1070)
அம்மங்கா தேவி
(மகள்)

## மேற்கோள் நூற் பட்டியல்

## BIBLIOGRAPHY


| Author | Title |
| --- | --- |
| K. A. Nilakanta Sastri | — Cholas |
| ,, | — Foreign Notices of South India |
| ,, | — Development of Religion in South India |
| ,, | — History of South India |
| ,, | — South Indian Influence in the Far East |
| ,, | — The Pandyan Kingdom |
| ,, | — Studies in Chola History and Administration |
| S. Krishnaswamy Iyengar | — The Beginnings of South Indian History |
| ,, | — South India and her Mohammadan Invaders |
| ,, | — Some Contributions of South India to Indian Culture |
| P. T. Srinivasa Iyengar | — The History of the Tamils |
| N. Subramanian | — History of the Tamil Nad |
| ,, | — Sangam Polity |
| ,, | — An Introduction to the Cultural History of India |
| ,, | — The Hindu Tripod |
| ,, | — Caste in the Tamil Country |
| ,, | — The Political Philosophy of the Ancient Tamils |
| ,, | — Some Early Coins of Tamilaham |

Majumdar R. C. — Corporate Life in Ancient India

C. V. Narayana Iyer — Origin and Ealry History of Saivism in South India

V. A. Smith — History of Fine Arts in India and Ceylon

M. Srinivasa Iyengar — Tamil Studies of Essays on the History of the Tamil People, Language, Religion and Literature

S. Vaiyapuri Pillai — History of Tamil Language and Literature

M. S. Poornalingam Pillai — History of Tamil Literature

N. Venkataramanayya — The Early Muslim Expansion in South India

" — The Eastern Chalukyas of Vengi

V. Kanagasabai Pillai — The Tamils 1800 years Ago

T. A. Gopinatha Rao — Elements of Hindu I conography

Jouveau-Dubreuil — Ancient History of the Deccan I conography of South India

V. R. R. Dikshitar — Studies in Tamil Literature and History

Percy Brown — Indian Architecture

Rawlinson — Inter-course between India and the Western World

S. R. Balasubramanian — Early Chola Temples

" — The Four Chola Temples

" — Early Chola Art

K. N. Sivaraja Pillai — Chronology of the Ancient Tamils

C. Sivaram moorthy — Chola Temples

J. C. Harle — Temple Gateways in South India

V. Rangacharya — Inscriptions of the Madras Presidency

Stella Kramtisch — The Hindu Temple

K. T. Thathachari — Gangaikondacholapuram

R. Nagasamy — Gangaikondacholapuram

Bilhana — Vikramankadeva Charita

R. Sathianathaier — A Political and Cultural History of India— Volume-I

A. L. Basham — The Wonder that was India

H. W. Codrington — A Short History of Ceylon

F. J. Manohan — The Early History of Bengal

R. K. Mookerji — Hindu Civilization

E. B. Havel — A Short History of India

R. C. Majumdar, H. C. Roy, Chaudhuri and Kalikindar Datta } An Advanced History of India

Gilbert Slater — The Dravidian Element in Indian Culture

K. A. Nilakanta Sastri — History of Srivijaya

P. C. Bagchi — India and China

R. G. Bhandarkar — Saivism and Minor Religious Systems

D. C. Ganguly — The Eastern Chalukyas

" History of the Paramara Dynasty

S. J. Gunasekaran — Early Tamil Cultural influence in South East Asia

T. N. Subramanian — South Indian Temple Inscriptions

Cambridge History of India, Volume-I

Inscriptions of the Pudukkottai State

South Indian Inscriptions

Annual Reports on Archaeology, Madras

Archaeological Reports, Burma

Annual Reports on Epigraphy. Madras

Archaeological Survey of Southern India

Epigraphia Indica

Epigraphia Carnatica

Historical Inscriptions of Southern India, Sewell

Travancore Archaelogical Reports

Travancore Archaelogical Series

Hyderabad Archaelogical Series

Indian Antiquary

Journal of Indian History

Journal of the Madras University

Mysore Archaeological Reports
Kielhorn: List of Inscriptions, Southern
Indian Museum Catalogue of Coins, Volume-I

டி. வி. சதாசிவ பண்டாரத்தார் — முதற் குலோத்துங்க சோழன்
,, — பாண்டியர் வரலாறு
,, — பிற்காலச் சோழர் சரித்திரம்.
,, — பிற்காலச் சோழர் வரலாறு மூன்றும் பகுதி
ந.மு.வேங்கடசாமி நாட்டார் — சோழர் சரித்திரம் -
வீ. ரா. இராமச்சந்திர தீக்ஷதர் — மூன்ரும் குலோத்துங்க சோழன்
லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் — சோழ வேந்தர் மூவர்
புலவர். நாகசண்முகம் — இராசேந்திர சோழன் கதை
பண்டாரகர் — தமிழக வரலாறு
மா. இராசமாணிக்கர் — பல்லவர் வரலாறு
,, — சோழர் வரலாறு
தொ. மு. பாஸ்கரத் — இந்திய கலைச்செல்வம்
தொண்டைமான் — தமிழ்க் கோயில்கள்
,, — தமிழர் பண்பாடு
செல்வி பதிப்பகம் — தமிழர் நாகரிகம்
கா. அப்பாத்துரை — குமரிக்கண்டம் அல்லது கடல் கொண்ட தென்னுடு
ஞா. தேவநேயப்பாவாணர் — பழந்தமிழாட்சி
கலாநிதி. க. கைலாசபதி — பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்
பண்டாரகர் சி. இலக்குவர் — தமிழர் வாழ்வியல்
அ. மு. பரமசிவானந்தம் — கவிதையும் வாழ்க்கையும்
என். சுப்புரெட்டியார் — காலமும் கவிஞர்களும்
இரா. நாகசாமி — கல்வெட்டுக் கருத்தரங்கு
இரா. நாகசாமி, கு. தாமோதரன், ச. அரியரன், நடன. காசிநாதன் — கல்வெட்டியல்
ச. சாமிமுத்து — தமிழ் இலக்கிய வரலாறு–
எல். உலகநாதபிள்ளை — இராசராச சோழன்
பண்டாரகர். கே. கே. பிள்ளை — தென்னிந்திய வரலாறு- பாகம்-I
,, — தென்னிந்திய வரலாறு பாகம்-II

,, — தமிழக வரலாறு – மக்களும் பண்பாடும்
பண்டாரகர் ஆரோக்கியசாமி -- நாமிருக்கும் நாடு
சி. கோவிந்தராசன் — சோழ மன்னர் வரலாறு
ரா. பி. சேதுப்பிள்ளை — ஊரும் பேரும்
,, — தமிழர் வீரம்
அ. கோபிநாத ராவ் — சோழ வமிச சரித்திரம்
வ. பொன்னுசாமிப் பிள்ளை — குலோத்துங்கர் மூவர்
செயங்கொண்டார் — கலிங்கத்துப் பரணி
கருவூர்த் தேவர் (திருப் பனந்தாள் மடவெளியீடு, — திருவிசைப்பா
ஒட்டக்கூத்தர் — மூவருலா
சேக்கிழார் — பெரிய புராணம்
மு. இராகவையங்கார் — ஆராய்ச்சித் தொகுதி
,, — சாசனத் தமிழ்க்கவி சரிதம்
,, — தமிழ் நாவலர் சரிதை
மயிலை சீனி. வேங்கடசாமி — தமிழர் வளர்த்த அழகு கலைகள்
அ. இராகவன் — தமிழக சாவகக் கலைத் தொடர்புகள்
செந்தமிழ் (திங்களிதழ்) — மதுரைத் தமிழ்ச் சங்கம்
தமிழ்ப்பொழில் (திங்களிதழ்)— கரந்தைத் தமிழ்ச் சங்கம்
தென்மொழி (திங்களிதழ்) — கடலூர்—1
மறைமலை அடிகள் — தமிழர் மதம்
கா. ம. வேங்கட ராமையா — சோழர் கால அரசியல் தலைவர்கள்
எஸ்.ஆர்.பாலசுப்பிரமணியன்— சோழர் கலைப்பணி
நடன. காசிநாதன் — காலச் சுவடுகள்
க. ப. அறவாணன் — ஆராய்ச்சிப் பேரவையின் ஆய்வுக்கொத்து

## கலைச் சொற்கள்

### A

Advanced Subjects — மேம்பட்ட பாடங்கள்
Ancestors — முன்னோர்கள்

### B

Bank — பொருளகம்
Bimetallism — இரட்டை நாணயத் திட்டம்
Bribe — கையூட்டு

### C

Cavalry — குதிரைப்படை
Chatras — வேதாந்தங்கள்
Coat of Mail — மெய்யுறை
Chamberlain — மாளிகை நாயகம்
Copy — படி, நகல்
Conquest — நாடு பிடித்தல்
Consolidation — ஒன்று சேர்த்தல்

### D

Direct Tax — நேர்முக வரி
Daily Allowance — தினப்படி

### E

Executive — கருமம் ஆற்றுவோர், செயலாற்றுவோர்
Economic Imperialism — பொருளாதாரஏகாதிபத்தியம்

## F.

Forgery — போலிக் கையெழுத்திடல்

## G

Grammar — இலக்கணம்
Gazetted Officer — அரசிதழ் பதிவு பெற்ற அதிகாரி
Guild — குழு

## H

Highways Department — நெடும் பாட்டைத் துறை, நெடுஞ்சாலைத் துறை
History of Education — கல்வி வரலாறு
Herald — கட்டியங்காரன், கட்டியர், தூதர்
Heridity — மரபு வழி

## I

Indirect Tax — மறைமுக வரி
Imperialism — ஏகாதிபத்தியம், பேரரசு கோட்பாடு

## J

Jagir System — ஜாகிரி முறை
Joint-Rule — இணைந்த ஆட்சி
Jehad — புனிதப் போர், மதப்போர்

## K

Kalabra Interreqnum — களப்பிரர் இடையீடு; களப்பிரர் இடையாட்சிக் காலம்

## L

Legislature — சட்ட மன்றம், சட்டப் பேரவை
Legal — சட்டப் பூர்வமான, சட்டஞ் சார்ந்த
Later Cholas — பிற்காலச் சோழர்
Local Self Government — தலசுய ஆட்சி

## M

Main Temple — முதன்மைக் கோயில், மூலக் கோயில், பிரதான கோயில்
Monarchy — முடியாட்சி
Military — நிலப்படை, தரைப்படை
Might is Right — வலிமையே உரிமை
Municipal Administration — நகராட்சி நிருவாகம்

## N

National Language — நாட்டுமொழி, தேசிய மொழி
Navy — கடற்படை

## O

Organ — உறுப்பு
Organisation — அமைப்பு

## P

Permanent Assessment — நிரந்தர நில அளவை
Prince — இளங்கோ, இளவரசன்
Participate — பங்குகொள்

## R

Revenue Administration — வருவாய்த்துறை நிருவாகம்
Religion — சமயம், மதம்
Reading, Writing and Arithmatic — படித்தல், எழுதுதல், கணக்குச் செய்தல்
Registration Office — ஆவணக்களரி, பதிவேட்டு அலுவலகம்
Religious Toleration — சமயப் பொறை

## S

Sathi — உடன் கட்டை ஏறுதல்
Sources — ஆதாரங்கள், சான்றுகள், மூலங்கள்
Social Condition — சமூக நிலை, குமுகாய நிலை
Special Privilege — சிறப்புரிமை, தனிச் சலுகை
Suzerainty — மேலாட்சி நிலை

Senior Students — முது நிலையாளர், முது நிலை மாணவர்
Secretarial Staff — செயலக அலுவலர், செயலாண்மைத்துறை அலுவலர்
Sunk Capital — முழுகிய முதல்
Standard — நிலையான
Subsidiary Coins — சில்லரை நாணயங்கள்

## T

Treasury — கருவூலம், பொருளகம்,
Treasurer — பொருளாளர்; கருவூலக் காப்பாளர்
Trimetallism — முக்கை நாணயத் திட்டம்
Tutorial Scheme — தனிப் பயிற்றுத்திட்ட முறை
Transport — போக்கு வரத்து
Trade — வாணிபம்

## U

Ugappar Pon — உகப்பார் பொன்

## V

Village Administration — சிற்றூர் ஆட்சி முறை
Velams — வேளங்கள், அரண்மனைப் பணியாளர்
Vedas — மறை நூல்கள்

## W

Ward — குடும்பு, நகரப் பிரிவு
War of Coreya — கோரியப் போர்